# இந்தியாவின் சிறப்பு வரலாறு

(மூன்றும் பகுதி)

(An Advanced History of India — Part III)

ஆசிரியர்கள் :

R. C. மஜும்தார்,

H. C. ராய்சௌதுரி,

K. தத்தா,

தமிழாக்கம் :

A. பாண்டுரங்கன்

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் - க. வெ. வரிசை எண்—105

# இந்தியாவின் சிறப்பு வரலாறு

(மூன்றும் பகுதி)

(An Advanced History of India — Part III)

ஆசிரியர்கள் :

R. C. மஜும்தார், M.A. Ph.D.
துணை வேந்தர், டாக்கா பல்கலைக் கழகம்

H. C. ராய்சௌதுரி, M.A., Ph.D.
கார்மைக்கேல் பேராசிரியர், இந்திய வரலாற்றுத் துறை,
கல்கத்தா பல்கலைக் கழகம்

K. தத்தா, M.A., Ph.D.
வரலாற்றுப் பேராசிரிய
பாட்னு கல்லூரி, பாட்னு

தமிழாக்கம் :
A. பாண்டுரங்கன், M.A., LL.B.
முதல்வர், ஸ்ரீ வாசவி கல்லூரி,
ஈரோடு

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—March 1966
Second Edition—May, 1971

T.N.T.B.S —C.P. No. 105



# AN ADVANCED HISTORY OF INDIA-III

R. C. Majumdar,
H. C. Raychaudhuri and
K. Datta

*Translation* :
A. Pandurangan

**Net Price Rs.**
(No discount)

This translation of 'An Advanced History of India' by R. C. Majumdar, H.C. Raychaudhuri and K. Datta, 1961 edition is published by arrangements with Messrs. Macmillan & Company Limited of St. Martin's Street, London, W. C. 2.

Printed by
Avvai Achukkoodam,
96, P. V. Koil Street,
Madras-13.

# அணிந்துரை

**திரு. இரா. நெடுஞ்செழியன்**
(தமிழகக் கல்வி—உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. யூ. சி., பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், தத்துவம், கணிதம், பெளதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் ஆகிய பல துறைகளில்தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான '**இந்தியாவின் சிறப்பு வரலாறு—III**' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான 105 ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்ட மாணவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகி விட்டன. ஆதலின், இப்பொழுது இந்நூல் மீண்டும் வெளிவருகின்றது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனங்கலந்த நன்றி உரித்தாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

அதிகாரம் | பக்கம்

## முதற் புத்தகம்
## பிரிட்டிஷ் ஆட்சியின் எழுச்சியும் வளர்ச்சியும்



## இரண்டாம் புத்தகம்
## புதிய கால இந்தியா



## பிற்சேர்க்கை



MEDIÆVAL INDIA AND THE WEST
Equatorial Scale
0 100 200 300 400 500 Miles
Ottoman Empire
Portuguese possessions
Vasco da Gama's voyage to India
Trade routes closed by Turkish & Portuguese wars
Meridian 0° of Greenwich
Longitude 60° East
PORTUGAL
Lisbon
SPAIN
Vienna
Venice
Genoa
BLACK SEA
Constantinople
Trebizond
Angora
CASPIAN SEA
Tabriz
Aleppo
Baghdad
Damascus
PERSIA
Basra
Alexandria
Suez
Cairo
EGYPT
ARABIA
Jeddah
Mecca
Muscat
Ormuz (Port.)
Aden
Zeila
Socotra (Port.)
ABYSSINIA
AFRICA
Mombasa (Port.)
Malindi (Port.)
Mozambique (Port.)
MADAGASCAR
St. Helena (Port.)
Cape of Good Hope
Tristan da Cunha (Port.)
8.7.1497
Vasco da Gama
17.5.1498
TRANS OXIANA
Jaxartes (Syr Darya)
Oxus (Amu Darya)
Samarkand
Kashgar
Balkh
Kunduz
Bamian
Kabul
KASHMIR K.
KINGDOM OF DELHI
Delhi
RAJPUTANA
SIND K.
JAUNPUR K.
GUJARAT K.
MALWA K.
BENGAL K.
Cambay
Hughli (Port.)
Diu (Port.)
Surat
Daman (Port.)
ORISSA K.
Calcutta
Chittagong
Bombay
BAHMANI K.
Goa (Port.)
VIJAYANAGAR K.
Madras
Pondicherry
Calicut
Cochin (Port.)
Colombo (Port.)
CEYLON
CHINA
Canton
Macao (Port.)
SIAM
PHILIPPINE ISLANDS
Malacca (Port.)
SUMATRA
BORNEO
CELEBES
JAVA
AUSTRALIA

# 1. ஐரோப்பியர்களின் வருகை

அயல் நாட்டினர் முக்கியமாக இரண்டு வழிகளின் மூலம் இந்தியாவினுள் நுழைய இயலும். ஒன்று, மிகப் பிரபலமான வடமேற்கு எல்லையிலுள்ள தரைவழி; மற்றொன்று, கடல் வழி. கஜினி, கோர், சாமர்கண்டு, காபூல் ஆகிய இடங்களிலிருந்த முஸ்லீம்கள் தரைவழியாகவே இந்தியாவின்மீது படையெடுத்தார்கள். முகலாயப் பேரரசு தன் அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்காக நிலையான ஒரு பெரும் படையை (Standing army) வைத்திருந்தது. கடற்கரையைப் பாதுகாப்பதற்கு வலிமை மிக்க கடற்படை அவசியம் என்பதை இக்கால அரசுகளுள் ஒன்றான மராத்திய அரசு உணர்ந்ததைப்போல, முகலாயர்கள் உணரவில்லை. அதனால், கடலைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர, முகலாயர்கள் விரும்பவில்லை. ஆனால், வாணிகத்தில் நாட்டங்கொண்ட ஐரோப்பிய அரசுகள் கடல் கடந்து இங்கு வந்து, இந்நாட்டு வரலாற்றில் ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கின.

பண்டைக்கால முதற்கொண்டே, இந்தியா மேற்கு நாடுகளுடன் வாணிக உறவு கொண்டிருந்தது. ஆனால், கி.பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்து இந்தியக் கடல் வாணிகம் இந்துமகா சமுத்திரம், செங்கடல் ஆகியவற்றில் ஆதிக்கம் செலுத்திய அராபியர்களின் கைக்கு மாறியது. வெனிஸ், ஜெனீவா என்னும் நகரங்களிலிருந்த துணிச்சலுள்ள வணிகர்கள், அராபியர்களிடமிருந்து இந்தியப் பொருள்களை வாங்கினார்கள். 15ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட புவி இயற்கைக் கண்டுபிடிப்புகள் (Geographical discoveries) பன்னாட்டு வாணிக உறவை மிகப் பாதித்ததுமல்லாமல், அந்நாடுகளின் வரலாறுகளில் பல முக்கிய விளைவுகளையும் உண்டாக்கின. 1487-ல் **பர்த்தலோமியோ டயஸ்** என்பவர், 'நன்னம்பிக்கை முனை' அல்லது அவர் கூறியபடி 'புயற்காற்று முனை' என்ற முனையைக் கடந்தார்.

இந்தியாவிற்கு வருவதற்கு ஒரு புதிய வழியை **வாஸ்கோ-டி-காமா** கண்டு பிடித்து, 1498ஆம் ஆண்டு, மே மாதம், 27ஆம் தேதியன்று, பிரசித்தி பெற்ற கள்ளிக்கோட்டைத் துறை முகத்தை அடைந்தார். இடைக்காலத்தில் ஏற்பட்ட மற்ற எல்லா நிகழ்ச்சிகளையும்விடக் கடல் வழியாக இந்தியாவை அடைவதற்கான செயலே நாகரிக உலகத்தில் வலிமை மிக்க பின் விளைவுகளை ஏற்படுத்தியது.

## போர்த்துக்கீசியர்கள்

கள்ளிக்கோட்டையில், **ஜாமொரின்** என்ற பரம்பரைப் பட்டத்தையுடைய இந்து அரசரிடமிருந்து நல்லுபசாரம் பெற்ற வாஸ்கோ-டி-காமாவின் கண்டுபிடிப்புகள், கிழக்கு நாடுகளின் வாணிகத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்த போர்த்துகீசிய வியாபாரிகளைக் கடல் வழியாக இந்தியாவுடன் நேரடியான தொடர்பு கொள்ளச் செய்தன; அதனுடன் வாணிக உறவுகளை வைத்துக்கொள்ள உதவின. 1500ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 9ஆம் தேதி **பெட்ரோ ஆல்வாரீஸ் கப்ரால்** என்பவர், பதின்மூன்று கப்பல்களைக் கொண்ட ஒரு கடற்படைத் தலைவராக லிஸ்பனிலிருந்து இந்தியாவிற்குப் பிரயாணமானார். ஆனால், போர்த்துகீசியர் சட்டமுறைக்குட்பட்ட வாணிக வரம்புக்குள் இருப்பதற்குப் பதிலாகப் பேராசை மிகுதியுமுடையராய்க் கிழக்குக் கடல்களின்மீது ஆதிக்கம் செலுத்தும் தவறான நோக்கங் கொண்டனர்; இந்நாட்டுடன் வாணிகம் செய்த அயல்நாட்டு வணிகர்களைப் பலவந்தமாக வாணிக நன்மைகளை அடைய விடாமல் செய்தனர்; அதனோடு அவர்களுக்குத் தீங்கிழைக்கவும் ஆரம்பித்தனர். கள்ளிக் கோட்டையின் வளம், பெரும்பாலும் அராபிய வணிகர்களின் தயவில் இருந்தது. இதனால் போர்த்துகீசியர்களின் இச் செய்கை வேறு வழியின்றி அவர்களைக் கள்ளிக்கோட்டை அரசருடன் போரிடும்படி செய்தது. போர்த்துகீசியர் தீபகற்ப இந்தியாவிலுள்ள இராச்சிய அரசியல் சூழ்ச்சிகளில் தலையிட ஆரம்பித்தனர்; கள்ளிக்கோட்டை அரசரின் பகைவர்களுடன்—முக்கியமாக அவருக்குப் பரம விரோதியான கொச்சி அரசருடன்—ஒரு நேச உடன்படிக்கையைச் செய்து கொண்டனர்.

இந்தியாவில் போர்த்துகீசிய அரசாட்சி ஏற்படுவதற்கு உண்மையான அடிப்படை அமைத்தவர் **அல்பான்சோ-டி-அல்புகர்க்கு** என்பவரே. 1503ஆம் ஆண்டிலேதான் அவர்

முதன் முறை இந்தியாவிற்கு வந்தார். கடற்படை சம்பந்த மாக அவர் தம் செயல்களை அவருடைய குறிப்பேடுகள் காட்டியதால், 1509-ல் இந்தியாவில் போர்த்துகீசிய விவகாரங் களுக்குக் கவர்னராய் நியமிக்கப்பட்டார். 1510ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், பீஜப்பூர்ச் சுல்தானுக்குச் சொந்தமான வள மிக்க கோவாத் துறைமுகத்தை அவர் கைப்பற்றி, அந்நகரின் கோட்டைகளைப் பலப்படுத்தினர். மேலும், அதன் வாணிப முக்கியத்துவத்தை அதிகரிக்கவும் அரும்பாடு பட்டார். நிலை யான போர்த்துகீசிய மக்கள் தொகையை உண்டாக்கும் எண்ணத்துடன் தம்முடனிருக்கும் தம் நாட்டு ஆடவரை இந்தியப் பெண்களை மணம் செய்துகொள்ள ஊக்குவித்தார். ஆனல், அவர் கொள்கையிலிருந்த குறைபாடு என்னவெனில், முகமதியர்களை வெறுப்புடன் கொடுமைப்படுத்தியதுதான். போர்த்துகீசியரின் நலன்களை அவர் நம்பிக்கையோடு பாது காத்தார். 1515ஆம் ஆண்டு அவர் இறந்தபோது, மேற்குக் கடற்கரையைத் தம் ஆதிக்கத்தில் கொண்டு, இந்தியாவிலேயே வலிமை மிக்க கடல் வல்லரசராகப் போர்த்துகீசியரை விட்டுச் சென்ருர்.

அல்புகர்க்கிற்குப் பின்னவர்கள் கடலுக்கருகில் பல முக்கியப் போர்த்துகீசியக் குடியேற்றங்களைப் படிப்படியாக ஏற்படுத்தினர்கள். அவை டையு, டாமன், சால்செட்டு, பாசீன், சவுல், பம்பாய், சென்னைக்கு அருகிலுள்ள சாந்தோம் வங்காளத்திலுள்ள ஹூக்ளி என்பனவாம். அவர்களது அதி காரம் இலங்கையின் பெரும் பாகத்தில் பரவியிருந்தது. ஆனல், சிறிது காலத்திற்குப் பிறகு கோவா, டையு, டாமன் தவிர, மற்றெல்லா இடங்களையும் போர்த்துகீசியர் இழந்தனர். ஷாஜஹான் ஆட்சியின்போது காஸிம் கான் ஹூக்ளியைப் பிடித்ததும், கி.பி. 1739-ல் மராத்தியர் சால்செட்டு, பாசீன் ஆகிய நகரங்களைக் கைப்பற்றியதும் குறித்து முன்பே நாம் குறிப்பிட்டிருக்கிறேம்.

முதன் முதல், அழையாமலே கிழக்கு நாடுகளில் நுழைந்த போர்த்துகீசியர், பதினெட்டாம் நூற்றுண்டில் இந்திய வியாபார மண்டலத்திலிருந்த செல்வாக்கை அடியோடு இழந் தனர். அவர்களுள் பெரும்பான்மையோர் திருடராயும், கடற் கொள்ளையராயும் மாறிய போதிலும், ஒரு சிலர் மேன்மை யான தொழிலைக் கைக்கொண்டனர். பல செயல்கள் அவர் தம் வீழ்ச்சிக்குக் காரணமாயின. முதலாவதாக, பிற மதங்களை மதித்து நடக்கக்கூடிய சகிப்புத் தன்மை இல்லாத

தால், இந்திய அரசுகள் அவர்களை வெறுத்து ஒதுக்கின. வலிமை மிக்க அவ்வரசுகளை வெற்றி கொள்ளவும் அவர்களால் இயலவில்லை. இரண்டாவதாக, வாணிகத்தில் அவர்கள் பின் பற்றிய கள்ளத்தனமான கொள்கையே இறுதியில் அவர்களுக்கு எதிராகத் திரும்பியது. மூன்றாவதாக, பிரேசில் நாட்டின் கண்டுபிடிப்பு, போர்ச்சுகலின் காலனி ஏற்படுத்தும் நடவடிக்கைகளை மேற்குப் பக்கம் திருப்பியது. கடைசியாக, அவர்களுக்குப் பின் ஏற்பட்ட மற்ற ஐரோப்பியக் கம்பெனிகளுடன் வெற்றிகரமாகப் போட்டியிட அவர்களால் இயலவில்லை. கிழக்கு நாடுகளுடன் வாணிகம் செய்ததனால் செழுமையுற்ற போர்ச்சுகலைக் கண்டு இவை பொறாமை கொண்டன. கைப்பற்றுதலில் முந்திய தன்மை, போப்பின் ஆணை ஆகியவற்றின் மூலம் போர்ச்சுகலின் தனித்து வாழும் கொள்கை, ஒவ்வாத உரிமை ஆகியவற்றைப் பெற்றிருந்த போதிலும், அக்கொள்கைகளை அவை ஒப்புக்கொள்ளவில்லை.

கி.பி. 1600-ல் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி ஓர் அரச சாசனத்தைப் பெற்றது. கீழ்த்திசைக் கடலில் வாணிகம் நடத்துவதற்குத் தனி உரிமையை அச்சாசனம் அவர்களுக்கு வழங்கியது. டச்சுப் பாராளுமன்றம், 1602ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 20ஆம் தேதியன்று, டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கிழக்கில் வாணிகம் நடத்துவதற்கு ஒரு சாசனத்தை அளித்தது. அச்சாசனமும், போரிடுதல், சமாதானம் செய்தல், நாடுகளைப் பிடித்தல், கோட்டைகளைக் கட்டுதல் ஆகியவற்றைச் செய்வதற்குக் கம்பெனிக்கு அதிகாரம் அளித்தது. இவ்விதமாக அச்சாசனம், போரிடுவதற்கும் சமாதானம் செய்வதற்கும் உரிய ஒரு பெரிய சாதனமாக உபயோகப்பட்டது. கி.பி. 1616-ல் டச்சுக்காரர்கள் வந்தார்கள். பிரான்ஸ் தேச ராஜ தந்திரியான கோல்பெர்ட்டினால் (Colbert) அரசாங்க ஆதரவுடன் பிரெஞ்சு கிழக்கிந்தியக் கம்பெனியொன்று கி.பி. 1664-ல் தோற்றுவிக்கப்பட்டது. கிழக்கில் முக்கிய வளர்ச்சியையும் வெற்றியையும் அடையும் வாய்ப்பு அக்கம்பெனிக்கு இருந்தது. பிளாண்டர்ஸ் (Flanders) எனும் நாட்டிலிருந்து கி.பி. 1772-ல் ஆரம்பிக்கப்பட்ட ஆஸ்டெண்டு (Ostend) கம்பெனி, இந்தியாவில் சிறிது காலமே இருந்தது. கி.பி. 1731-ல் ஏற்பட்ட ஸ்வீடிஷ் (Swedish) கிழக்கிந்தியக் கம்பெனி முக்கியமாகச் சீனாவுடன் வாணிபம் செய்தது. அக்கம்பெனிகள் கொண்ட பேரவாவின் குறிக்கோள் ஒன்றாய் இருந்ததால், அவற்றுக்கிடையே எழுந்த கடும்போட்டியைத் தடுக்க இயலாமல் போயிற்று. நாட்டை விரிவுபடுத்த

வேண்டும் என்கிற அவர்களது நோக்கம், அவர்களுடைய வாணிகப் போட்டியைக் கடுமையாக்கியது. பதினேழாம் நூற்றாண்டின் முற்பாதியில், போர்த்துகீசியர்களுக்கும் டச்சுக்காரர்களுக்கும், போர்த்துகீசியர்களுக்கும் ஆங்கிலேயருக்கும், டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயருக்கும் இடையில் மும்முனைப் போட்டி ஏற்பட்டது. ஆங்கில ஆதிக்கம் உண்டாகாமல் இருப்பதற்காக டச்சுக்காரர்கள் எழுப்பிய எதிர்ப்பு, இறுதியில் கி.பி. 1759-ல் பெடாரா அல்லது பிடாரா (Bedara or Bidara) என்னும் இடத்தில் ஏற்பட்ட தோல்வியினால் அழிந்தது. ஆனால், இதற்கிடையில் எழுந்த ஆங்கிலேய-பிரெஞ்சுப் பகைமை, பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் கொழுந்து விட்டெரிந்தது.

## டச்சுக்காரர்கள்

கி.பி. 1605-ல் போர்த்துகீசியரிடமிருந்து அம்பாய்னா (Amboyna) என்னும் இடத்தை டச்சுக்காரர் கைப்பற்றினர்; அது முதற் கொண்டு படிப்படியாக வாசனைப்பொருள் தீவுகளில் (Spice Islands) போர்த்துகீசியர்களின் ஆதிக்கத்தை ஒழித்து, தமது ஆதிக்கத்தை ஏற்படுத்தினர். ஜாகர்தா என்னும் இடத்தை 1639-ல் கைப்பற்றி, அவ்விடத்தில் பட்டேவியா (Batavia) என்னும் புதிய நகரை நிருமாணித்தனர்; 1641-ல் மலாக்காவைப் (Malacca) பிடித்தனர்; 1658-ல் இலங்கையிலிருந்த போர்த்துகீசியர்களின் பிரதேசங்களைக் கைப்பற்றினர். அதிக ஆதாயத்தைத் தரக்குடிய மிளகு, வாசனைத் திரவிய வாணிகத்தால் கவரப்பட்டு, இவை மிகுதியாக விளையும் சுமத்திரா, ஜாவா, மொலுக்கஸ் ஆகிய தீவுகளுக்கு டச்சுக்காரர்கள் வந்தார்கள். ஆதலால், இத்தீவுகளின் கூட்டம் படைத்திறச் சூழ்ச்சி, ஆட்சி ஆகியவைகளுக்கு மையமாய் விளங்கியதுடன் அவர்களது பொருளாதாரத்தின் மையமாயும் இருந்தது.

வாணிக நலங்கள், டச்சுக்காரர்களை இந்தியாவிற்கு வரும்படி செய்தன. கூர்ஜரம், சோழமண்டலக்கரை, வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய இடங்களிலும் கீழ்க்கங்கைச் சமவெளியில் நெடுந்தூரத்திலும் சென்று, தங்களுடைய பண்டகசாலைகளை அவர்கள் ஏற்படுத்தினார்கள். மிக முக்கியமான பண்டகசாலைகள் இந்தியாவிலிருந்த புலிகாட் (1610), சிஞ்சுரா (1653), காஸிம்பஜார், பாராநாகூர், பாட்னா, பாலசூர் (Balasore),

நாகப்பட்டினம் (1659), கொச்சி (1663) ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்பட்டன. கிழக்கில் போர்த்துகீசியர்களுக்குச் சொந்தமான இடங்களை டச்சுக்காரர்கள் கைப்பற்றியதால் வாசனைத் திரவியங்களின் வாணிகத்தில் நடை முறையிலே அவர்கள் தனி உரிமையைப் பதினேழாம் நூற்றுண்டு முழுவதிலும் பெற்றிருந்தார்கள். அதுவுமன்றி, அவர்கள் இந்தியாவுக்கும் தூரக்கிழக்கு நாடுகளுக்குமிடையே நடக்கும் வாணிகப் பொருள்களை ஏற்றிச் செல்பவர்களாயும் இருந்தார் கள். இதனுல், அவர்கள், விஜயநகரப் பேரரசு செழிப்பாய் இருந்த காலத்திலே இத்தீவுகளுடன் கொண்டிருந்த பழைய உறவுகளை மறுபடியும் ஏற்படுத்தும் சீரிய பணியைச் செய் தார்கள். மத்திய இந்தியா, யமுனைச் சமவெளி, வங்காளம். பீஹார், கூர்ஜரம், சோழ மண்டலக்கரை ஆகிய இடங்களில் உற்பத்தி செய்யப்பட்ட கருநீலம், அதிக அளவில் சூரத்தில் டச்சுக்காரர்களுக்குக் கிடைத்தது. கச்சாப்பட்டு, துணிகள், வெடியுப்பு, அரிசி, கங்கைச் சமவெளியின் கஞ்சா முதலிய வற்றை அவர்கள் ஏற்றுமதி செய்தார்கள்.

ஸ்பானிய நாடும், போர்த்துகீசிய நாடும் கி.பி. 1580முதல் 1640வரை ஒன்ருய் இணைந்திருந்தன. இங்கிலாந்து கி.பி. 1604-ல் ஒரு சமாதான உடன்படிக்கையை ஸ்பெயினுடன் செய்துகொண்டது. ஆனுல், கிழக்கு வாணிகம் சம்பந்தமாக, ஆங்கிலேயரும் போர்த்துகீசியரும் பகைவராயினர். ஆங்கி லேயர்கள் பாரசீக மன்னருடன் சேர்ந்து, பாரசீக வளை குடாவில் இருந்த ஆர்மூஜ் (Ormuz) என்னுமிடத்தைப் போர்த்துகீசியரிடமிருந்து கி.பி. 1622-ல் கைப்பற்றினர்; கோம்ப்ரூன் (Gombroon) என்னுமிடத்தில் குடியேற்றம் செய் வதற்கும் சுங்கவரியில் பாதியை எடுத்துக்கொள்வதற்கும் அவர்கள் அனுமதி பெற்ருர்கள், இதன் பிறகு போர்த்து கீசியரது எதிர்ப்பு மிகக் குறைந்தது, 1630-ல் ஏற்பட்ட மாட்ரிட் (Madrid) உடன்படிக்கை கிழக்கில் ஆங்கிலேயருக்கும் போர்த்துகீசியர்களுக்குமிடையே வாணிகத்தால் ஏற்பட்ட பகைமையை நீக்குவதற்கு உதவியது. 1634-ல் சூரத்துப் பண்டகசாலையின் தலைவரான மெதால்டு (Methold) என்ப வரும், கோவாவிலிருந்த போர்த்துகீசிய அரசப்பிரதிநிதியும் ஓர் உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். இந்தியாவில் இருந்த இரு நாட்டவருக்கும், ஒருவரோடு ஒருவர் வாணிகம் செய்யும் உரிமையை உண்மையில் அவ்வுடன்படிக்கை வழங் கியது. ஆங்கிலேயருக்கும் போர்த்துகீசியருக்கும் இடையில் ஏற்பட்ட இந்த உறவு, ஆங்கிலேயரது பழைய விரோதியான

ஸ்பெயின் நாட்டின் கட்டுப்பாட்டிலிருந்து விலகி, சுதந்தரத்தைத் திரும்பப் பெறுவதற்குப் போர்ச்சுகலுக்கு உதவியது. 1654ஆம் ஆண்டு ஜூலையில் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி கிழக்கு வாணிகத்தில் ஆங்கிலேயருக்குள்ள உரிமையைப் போர்ச்சுகல் நாடு ஒப்புக்கொண்டது. பிரகான்சா என்னும் இடத்தின் இளவரசியான காதரின் (Catharine of Braganza) என்பவளை இரண்டாம் சார்லஸ் மணந்தபோது, பம்பாயைச் சீதனமாகப் பெற்றார். கி.பி. 1661-ல் செய்த ஒப்பந்தப்படி இந்தியாவில் டச்சுக்காரர்களுக்கெதிராக, ஆங்கிலேயரின் உதவி கிடைக்கும் என்கிற உறுதி மொழியை இரண்டாம் சார்லஸிடமிருந்து போர்த்துகீசியர்கள் பெற்றார்கள். கட்டுப்பாடான ஒரு கொள்கையைப் பின் பற்ற இயலாத நிலையில் போர்த்துகீசியர்கள் இருந்ததால், அவர்கள் ஆங்கிலேயருக்கு வெறுப்பைத் தரக்கூடிய வாணிக விரோதிகளாய் இல்லை. இவ்விதம் இருந்த போதிலும், பதினெட்டாம் நூற்றாண்டில் போர்த்துகீசிய வியாபாரிகளுள் சிலர், சில சமயங்களிலே அவர்களுடைய பண்டகசாலைகளில் இருந்த ஆங்கிலேயர்களின் முதலீட்டுத் திரட்டுதலைத் தடுத்தனர்.

பதினேழாம் நூற்றாண்டில் ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட டச்சுக்காரர்களின் போட்டி, போர்த்துகீசியர்களின் போட்டியைவிட மிகக் கடுமையாய் இருந்தது. கிழக்கில் டச்சுக்காரர்களின் கொள்கை, இரு முக்கிய நோக்கங்களைக் கொண்டிருந்தது. ஒன்று, அவர்களுடைய சுதந்தரத்திற்குப் பகையாய் இருந்த கத்தோலிக்க ஸ்பெயினையும் அதற்கு நட்பான போர்ச்சுகலையும் பழிக்குப்பழி வாங்குவது. மற்றொன்று, கிழக்கிந்தியத் தீவுகளில் வாணிகத்தின் முழு உரிமையையும் பெறும்பொருட்டு அங்குக் குடியேற்றங்களை அமைப்பது. நாம் முன்பு கூறியபடி போர்த்துகீசியரது ஆதிக்கம் படிப்படியாய்க் குறைந்ததால், அவர்களது முதல் நோக்கம் ஈடேறியது. இரண்டாவது நோக்கம் நிறைவேறும் சமயம், அவர்கள் ஆங்கிலேயரின் பரமவிரோதிகளாய் மாறினார்கள். வாணிகப்போட்டி, பிரான்ஸுடன் நட்பு, ஸ்டூவர்ட்டு அரசர்களின் ஸ்பெயினை ஆதரிக்கும் கொள்கை ஆகிய காரணங்களினால், ஐரோப்பாவிலுங்கூட ஸ்டூவர்ட்டு அரசர்கள் காலத்திலும், கிராம்வெல் காலத்திலும், இங்கிலாந்திற்கும் ஹாலந்திற்கும் இடையே பகைமை உணர்ச்சி இருந்தது. டச்சுக் கடற்படையின் தலைமை நிலையும், இருபத்தோராண்டுகளுக்குச் சமாதான முறையில் இருப்பதற்கு ஸ்பெயினும் ஹாலந்தும் 1609-ல் செய்து கொண்ட ஏற்பாடும், அந்த ஏற்பாடு காரண

மாக ஐரோப்பாவில் போர் ஏற்படாமல் இருந்ததும், வாசனைப் பொருள் தீவுகளிலிருந்த சில கட்டுத்திட்டங்கள் தளர்த்தப் பட்டதும், கிழக்கிந்திய வாணிகத்தை நடத்தும் ஆங்கிலேயரை முன்னைவிட அதிக வலிமையுடன் எதிர்ப்பதற்கு டச்சுக்காரர் களுக்கு ஊக்கமளித்தன. இந்தக் காலத்தில் டச்சுக்காரர்கள், ஜாவாவுடனும், தீவுக்குழுவுடனும் (Archipelago) தங்கள் வியாபாரத்தை நிறுத்திக்கொண்டார்கள். இப்படியிருந்த போதிலும், இந்தியச் சோழமண்டலக் கரையில் தங்கி, 1610-ல் 'புலிகாட்' (Pulicat) என்னுமிடத்தில் இருந்த பண்டகசாலையைச் சுற்றிக் கோட்டையைக் கட்டித் தீவுக்குழுவுக்கு வேண்டிய நூல் துணிகளுக்கு ஏற்பாடுகள் செய்தார்கள். லண்டனிலும், ஹேகிலும் (Hague) நடந்த மாநாடுகளில் (கி.பி. 1611, 1613–1615) ஆங்கிலேயரும் டச்சுக்காரர்களும் ஒப்புக் கொள்ளக்கூடிய ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. 1619-ல் அவர்கள் ஓர் உடன்பாட்டிற்கு வந்தாலும், இரண்டு ஆண்டு களுக்குப் பிறகு, மறுபடியும் பகைமை உணர்ச்சி வளர்ந்தது. ஆங்கிலேயர் பதின்மரும் ஜப்பானியர் ஒன்பதின்மரும், அம்பாய்னு (Amboyna) என்னுமிடத்தில் 1623-ல் படுகொலை செய்யப்பட்ட நிகழ்ச்சி, கிழக்கே இருந்த ஆங்கிலேயர்கள், டச்சுக்காரர்களை வெறுக்கும் கட்டத்தின் உச்ச நிலையைக் காட்டியது. டச்சுக்காரர்கள் மலேயாத் தீவுக்குழுவோடும், ஆங்கிலேயர்கள் இந்தியாவோடும் நின்றுவிட்ட போதிலும், முன்னவர்கள் பின்னவர்களுடைய இந்திய வாணிகத்தில் போட்டியிட்டார்கள். 1672–1674 ஆம் ஆண்டுகளுக்கிடையே சூரத்திற்கும் பம்பாயில் ஆங்கிலேயர்கள் புதியதாக ஏற் படுத்திய குடியேற்றத்திற்கும் இடையே நடந்து வந்த போக்கு வரத்துகளை டச்சுக்காரர்கள் அடிக்கடி தடை செய்து, வங்காளக் குடாக்கடலில் ஆங்கிலேயருக்குச் சொந்தமான மூன்று கப்பல்களைப் பிடித்தார்கள். அஜீம்-உஸ்-ஷான் (Azim-us-Shan) என்ற இளவரசன் பர்துவானுக்கு (Burdwan) வந்தபோது, சின்சுராவிலிருந்த டச்சுக்காரர்களின் தலைவர், தமது கம்பெனி நூற்றுக்கு $3\frac{1}{2}$ சதவிகிதம் தீர்வையைத் தமது வாணிகத்தால் கட்டுவதாகவும், ஆனால் ஆங்கிலேயர்கள் ஆண்டுதோறும் ரூ. 3000 மட்டும் கட்டுவதாகவும் முறையிட்டு, ஆங்கிலேயர்களைப் போலவே தங்களுக்கும் சலுகையளிக்கு மாறு கேட்டுக்கொண்டார். டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலே யருக்கும் இடையில் ஏற்பட்ட வாணிகப் போட்டி கி.பி. 1759 வரை கடுமையாகவே இருந்தது.

## ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி

1588-ல் டிரேக்கு (Drake) என்பவர் வெற்றிகரமாக உலகப் பிரயாணத்தை முடித்த நிகழ்ச்சியும், பலமுள்ள ஸ்பானியக் கப்பற் படையை (Spanish Armada) ஆங்கிலேயர்கள் வென்ற நிகழ்ச்சியும், அவர்களுக்கு எல்லாத் துறையிலும் ஊக்கத்தையும் துணிவையும் விளைவித்தன. அதனால், கப்பல் தலைவர் சிலர் துணிகரமாகக் கிழக்குக் கடல்களில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தனர். 1591–1593 ஆண்டுகளுக்கு இடையில் ஜேம்ஸ் லங்காஸ்டர் (James Lancaster) என்பவர், கன்னியாகுமரியையும் பினங்கையும் (Penang) அடைந்தார். 1596-ல் பெஞ்சமின் வுட் (Benjamin Wood) என்பவரின் தலைமையின் கீழ்ப் புறப்பட்ட ஒரு கப்பற்படை கிழக்கே சென்றது. 1599-ல் ஜான் மில்டன் ஹால் (John Milton Hall) என்கிற துணிவுள்ள லண்டன் வணிகர் ஒருவர், தரை வழியாக இந்தியாவிற்கு வந்து, கிழக்கு நாடுகளில் ஏழு வருடங்கள் இருந்தார். 1600ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 31ஆம் தேதியன்றுதான் இங்கிலாந்தின் வாணிகம் செழிப்படைவதற்கான முயற்சிகள் செய்யப்பட்டன. மறக்க முடியாத அந்த நன்னாளிலேதான் பதினைந்து ஆண்டுகளுக்குக் கிழக்கிலே வாணிகம் செய்யும் தனி உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு எலிசபெத்து அரசி ஒரு பட்டயத்தின் மூலம் வழங்கினாள். முதலில் அக்கம்பெனி தனித்தனியான பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்தது. ஒவ்வொன்றும் சந்தாக்கொடுக்கும் குழுவினால் அனுப்பப்பட்டு, அதனால் வரும் ஆதாயத்தை அக்குழுவிலிருப்பவர்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள். இவ்வித ஏற்பாடு பலவித இடையூறுகளை விளைத்தது. "அது இந்துமகா சமுத்திரத்தையும் அதன் கடற்கரையையும் துருவி ஆராய்ந்து விளக்கப்படம் வரைய வேண்டும்; மிக்க கவனத்துடன் வாணிகக் கொள்கையை உருவாக்க வேண்டும்; பண்டங்களையும் வாணிகச் சரக்குகளையும் பரிசோதனை செய்யவேண்டும்; பணியாளர்களைக் கொண்ட குழுவுக்குப் பயிற்சியளித்து ஒழுங்குபடுத்த வேண்டும்; இங்கிலாந்தின் பரம்பரையான கத்தோலிக்க விரோதியுடனும், புதிதாக ஏற்பட்ட புராட்டெஸ்டன்டு பகைவனுடனும் எதிர்த்து நிற்பதோ, அன்றிச் சமாதானம் செய்வதோ அதனுடைய வேலைதான். தவிர, தாய்நாட்டிலுங் கூடத் தனக்கென ஒரு நிலைமையை உண்டாக்கிக்கொள்ள வேண்டியிருந்தது. கிழக்கில் ஏற்பட்ட இங்கிலாந்தின் இந்த முதல் முயற்சிக்கு அரசாங்க ஆதரவு கிடைக்கவில்லை. கிழக்கிந்தியக் கம்பெனி, குளிர்ந்த, ஆனால் ஊக்கமூட்டும் தனியார்

சுவாதீனக் கொள்கை (individualism) என்னும் வாயு மண்டலத் தொட்டிலில் இடப்பட்டது. தங்கக் கட்டிகளை ஏற்றுமதி செய்வது தவறு என்கிற இடைக்காலத் தப்பெண்ணம் அக் காலத்தில் நீடித்திருந்ததையும் அயல் நாட்டு வாணிகத்தைப் பற்றிய தவருன கொள்கையையும் எதிர்த்துச் சமாளிக்க வேண்டியிருந்தது."

ஆங்கிலக் கம்பெனியின் ஆரம்பக் கடற்பிரயாணங்கள், வாசனைப் பொருள் வாணிகத்தில் ஒரு பங்கைப் பெறும் பொருட்டுச் சுமத்திரா, ஜாவா, மொலுக்கஸ் ஆகிய இடங் களுக்கு மட்டுமே செய்யப்பட்டன. 1608-ல் தான் இந்தியாவில் பண்டகசாலைகளை ஏற்படுத்துவதற்கான முதல் முயற்சி செய்யப்பட்டது. கேப்டன் ஹாக்கின்ஸ் (Hawkins) என்ப வரைக் கம்பெனி இந்தியாவிற்கு அனுப்பியது. 1609-ல் அவர் ஜஹாங்கீரின் சபைக்கு வந்து சேர்ந்தார். அவர் முகலாயப் பேரரசரால் முதலில் நன்கு வரவேற்கப்பட்டார். ஜஹாங்கீர், ஹாக்கின்ஸ் கோரியபடி சூரத்தில் ஆங்கிலேயர்கள் குடி யேற்றம் செய்வதற்கு அனுமதி கொடுப்பதாகவும் கூறினர். ஆனல், போர்த்துகீசியரது பகைமையான செயல்களும் சூரத்து வணிகர்களுடைய எதிர்ப்பும் சேர்ந்து ஹாக்கின்ஸின் வேண்டுகோளை நிராகரிக்கும்படி செய்தன. ஹாக்கின்ஸ் 1611-ல் ஆக்ராவை விட்டுச் சென்று, சூரத்தில் சர் ஹென்றி மிடில்டன் (Sir Henry Middleton) என்பவரின்கீழ் இருந்த மூன்று கப்பல்களைச் சந்தித்தார். செங்கடல் வாணிகம் சம்பந்தமாக அதைச்செய்த சூரத்து வியாபாரிகளிடம் பழி வாங்கும் கொள்கையை மிடில்டன் பின்பற்றினர். அதைக் கண்டு அச்சமடைந்த அவ்வணிகர்கள் 1612-ல் கேப்டன் பெஸ்ட் (Best) என்பவர் கொண்டு வந்த இரண்டு ஆங்கிலக் கப்பல்களைச் சூரத்துத் துறைமுகத்தில் நுழைவதற்கு அனு மதித்தனர். பெஸ்ட், போர்த்துகீசியர்கள் அனுப்பிய படையைத் தோற்கடித்தார். சூரத்தில் ஒரு நிலையான பண்டக சாலையை அமைத்துக்கொள்வதற்காக 1613 ஆம் ஆண்டு ஆரம்பத்தில ஜஹாங்கீர் ஒரு கட்டளை பிறப்பித்தார். முதலாம் ஜேம்ஸ் (James I) என்ற இங்கிலாந்து அரசரின் உரிமை பெற்ற தூதுவரை முகலாயப் பேரரசருடன் வாணிக உடன்படிக்கையைச் செய்துகொள்ளும் எண்ணத்துடன், பேரரசரின் சபைக்கு ஆங்கிலக் கம்பெனி அனுப்பியது. தூது வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் சர் தாமஸ் ரோ (Sir Thomas Roe) என்பவர். அவர் 'கருத்து நிறைந்த சொற்களை எளிதில் புரிந்துகொள்பவர்; மற்றவர்களால் நன்ருகப் பேசப்படுபவர்;

நன்கு கற்றவர்; சுறுசுறுப்பாய் உள்ளவர்; எடுப்பான தோற்ற முடையவர்.' 1615 ஆம் ஆண்டின் இறுதியிலிருந்து, 1618 ஆம் ஆண்டின் இறுதி வரை, அவர் ஜஹாங்கீர் சபையில் தொடர்ந்து இருந்தார். பல காரணங்களால், முகலாயப் பேரரசுடன் எவ்விதக் குறிப்பிட்ட உடன்படிக்கையும் செய்துகொள்ள இயலாவிட்டாலும், பேரரசின் சில பாகங்களில் பண்டகசாலை களை ஏற்படுத்துவதற்குப் பல சலுகைகளைக் கம்பெனிக்காகப் பெறுவதில் அவர் வெற்றி பெற்ருர். 1619 பிப்பிரவரியில் 'ரோ' என்பவர் இந்தியாவை விட்டுச் செல்வதற்கு முன்பே, சூரத்து, ஆக்ரா, அஹமதாபாது, புரோச்சு என்னும் இடங் களில் ஆங்கிலேயர்கள் பண்டகசாலைகளை அமைத்துக் கொண்டார்கள். சூரத்துப் பண்டகசாலையின் தலைவருடையதும் மன்றத்தினுடையதுமான கட்டுப்பாட்டின் கீழ் இப்பண்டக சாலைகள் இருந்தன. இத்தலைவரும் மன்றத்தாரும் செங்கடல் துறைமுகங்கள், பாரசீகம் ஆகியவற்றுடன் செய்யப்பட்ட கம்பெனியின் வாணிகத்தைக் கட்டுப்பாடு செய்யும் அதி காரத்தையும் பெற்றிருந்தனர். புரோச்சு, பரோடா என்னும் இடங்களில் தயாராகும் துணி வகைகளை உற்பத்தி செய்வோரிடமிருந்து நேரடியாக வாங்கும் நோக்கத்துடன், அவ்விடங்களில் பண்டகசாலைகள் ஏற்படுத்தப்பட்டன. அகல மான துணிகளை அரசாங்க அதிகாரிகளுக்கு விற்பதற்கும் உயர்ந்த ரகக் கருநீலத்தை வாங்கவும் ஆக்ராவில் மற்ருெரு பண்டகசாலை ஏற்படுத்தப்பட்டது. இரண்டாம் சார்லஸ் என்பவர் பிரகான்சா இளவரசியான காதரைன் (Catharine of Braganza) என்கிற மனைவியின் மூலம் போர்த்துகீசியரிட மிருந்து சீதனமாகப் பெற்ற பம்பாயை, ஆண்டிற்குப் பத்துப் பவுன் வாடகைக்குக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கொடுத் தார். படிப்படியாக வளர்ச்சியடைந்த பம்பாய், சூரத் பெற் றிருந்த முக்கிய இடத்தைப் பெற்று, மேற்குக் கடற்கரையி லேயே ஆங்கிலேயரது முதன்மையான குடியேற்றமாய்த் திகழ்ந்தது.

தென்கிழக்குக் கடற்கரையில், கோல்கொண்டா (Golkonda) அரசின் முக்கியத் துறைமுகமான மசூலிப் பட்டினத்தில் நெய்யப்படும் துணி வகைகளைக் கொள்முதல் செய்வதற்காக, அவ்விடத்தில் ஒருபண்டகசாலையை ஆங்கி லேயர் 1611-ல் கட்டினர். இவ்வாறு, உள்ளூரில் கொள்முதல் செய்யப்பட்டவைகளை அவர்கள் பாரசீகம், பான்டம் (Bantam) என்னும் இடங்களுக்கு ஏற்றுமதி செய்தார்கள். ஆனல், டச்சுக்காரர்களின் எதிர்ப்பு உள்ளூர் அதிகாரிகளின் தொல்லை

கள் ஆகியவை காரணமாக, புலிகாட் (Pulicat) என்னும் டச்சுக் குடியேற்றத்தின் வடக்கே ஒரு மைலில், ஆர்மகான் (Armagaon) என்ற இடத்தில், மற்றொரு பண்டகசாலையை ஏற்படுத்தினர். இவ்விடத்திலுங்கூட அவர்கள் பல வித இன்னல்களுக்கு ஆளானார்கள்; அதனால், மறுபடியும் மசூலிப் பட்டினத்தின் மீதே தங்கள் கவனத்தைச் செலுத்தினார்கள். அவர்களுக்கு அனுகூலம் செய்யும் வகையில் ஆண்டிற்கு 500 பகோடா (ஒரு தென்னிந்திய நாணயம்) மதிப்புள்ள வரியைக் கட்டி, கோல்கொண்டா அரசுக்குச் சொந்தமான துறைமுகங் களில் இலவசமாக வாணிகம் செய்யும் உரிமையை வழங்கும், 'பொன் நிறமுடைய அரசுக் கட்டளையை' 1632-ல் கோல் கொண்டா அரசர் பிறப்பித்தார். 1634-ல் செய்யப்பட்ட மற்றோர் அரசுக்கட்டளையிலும் அந்த நிபந்தனைகள் மறுபடி யும் உறுதிப்படுத்தப்பட்டன. ஆனால், இதுவும் உள்ளூர் அதி காரிகள் விதித்த வரியிலிருந்து ஆங்கிலேயரை விடுவிக்க வில்லை. அதனால் அவர்கள் அதிக அனுகூலமுள்ள இடத்தை நோக்கித் தங்கள் கவனத்தைச் செலுத்தினார்கள். விஜய நகரப் பேரரசின் பிரதிநிதியான சந்திரகிரி அரசரிடமிருந்து கி.பி. 1639-ல் பிரான்சிஸ் டே (Francis Day) என்பவர், சென்னையைக் குத்தகைக்கு எடுத்து, பின்னர், செயின்ட் ஜார்ஜ் கோட்டையென வழங்கப்படும் கோட்டையைத் தங்கள் பண்டகசாலையைச் சுற்றிக் கட்டினார்கள். வெகு விரைவிலேயே கிழக்குக் கடற்கரையில் இருந்த ஆங்கிலேயரின் தலைமை இடம் மசூலிப்பட்டினத்திலிருந்து செயின்ட் ஜார்ஜ் கோட் டைக்கு மாறியது.

வடகிழக்கில் விரிவடைவதுதான் ஆங்கில ஆதிக்க வளர்ச்சி யின் அடுத்த கட்டம். மஹாநதியின் கழிமுகத்திலிருந்த ஹரி ஹர்பூரிலும் (Hariharpur) பாலசூரிலும் (Balasore) கி.பி. 1633-ல் பண்டகசாலைகள் ஆரம்பிக்கப்பட்டன. 1651-ல் பிரிட்ஜ்மேன் (Bridgeman) என்பவரால் ஹூக்ளி என்னுமிடத்தில் ஒரு பண்டகசாலை ஏற்படுத்தப்பட்டது. அதன் பிறகு பாட்னாவிலும் காசிம் பஜாரிலும் பண்டகசாலைகள் உண்டாயின. வங்காளத் தில் ஆங்கிலேயர்கள் செய்த வாணிகத்தில் பட்டு, பருத்தித் துணி வகைகள், வெடியுப்பு, சர்க்கரை ஆகியவை முக்கியப் பொருள்களாய் விளங்கின. ஆனால், பண்டகசாலையின் ஒழுங் கற்ற தனி மனிதர்கள் வாணிகத்தால் அக்கம்பெனிக்குச் சிறிது காலம் வரை அனுகூலம் இல்லாமல் போய்விட்டது.

1658-ல் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா, கிழக்குக் கடற்கரை ஆகிய இடங்களிலிருந்த குடியேற்றங்கள், செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் அதிகாரத்தின்கீழ் வந்தன.

சென்னையிலும் சூரத்திலுமிருந்த கம்பெனி வாணிகத்தின் எதிர்கால வாய்ப்பு (Prospects) 17ஆம் நூற்றுண்டின் முற்பாதி வரையில் பல காரணங்களால் சிறப்பாக இல்லை. உள் நாட்டு அரசாங்கத்தின் (Home Govt.) கொள்கை மாறியதால், அக் கம்பெனியின் இடையூறுகள் (Misfortunes) அந் நூற்றுண்டின் பிற்பாதியில் மறைந்தொழிந்தன. 1657-ல் கிராம்வெல் (Cromwell) என்பவரால் கொடுக்கப்பட்ட சாசனம் அதற்குப் புதிய வாய்ப்புகளைக் (Opportunities) கொடுத்தது. 1660-ல் ஏற்பட்ட முடியரசின் மீட்சிக்குப்பின் (Restoration) தொடர்ந்த 30 ஆண்டுகள் வளர்ச்சியும் செழுமையும் கொண்ட காலமாகும். இரண்டாம் சார்லஸும் இரண்டாம் ஜேம்ஸும் கம்பெனியின் பழைய உரிமைகளை மறுபடியும் உறுதிப்படுத்தி அதனுடைய அதிகாரங்களை விரிவாக்கினர். அதே சமயம் நிலையான கூட்டுப்பங்கு (Joint-Stock) பாங்குத்தொழில் (Banking), கம்பெனியின் நிதி சம்பந்தமான கடந்த கால இடுக்கண்களிலிருந்து கம்பெனியை விடுவித்தது.

இக்காலத்தில் இந்தியாவில் கம்பெனி கடைப்பிடித்த கொள்கையும் மாறியது. அமைதியில் நாட்டங்கொண்ட ஒரு வாணிகக்குழு, முக்கியமாக இந்நாட்டில் ஏற்பட்ட அரசியல் குழப்பம் காரணமாக நாட்டைப்பிடித்து, தனக்கென ஒரு மதிப்பை உண்டாக்கிக்கொள்ள விரும்பும் ஓர் அரசாக மாற்றப்பட்டுவிட்டது. பேரரசுப்படைகளுக்கும் மராத்தியர் படைகளுக்கும் நேர்ந்த போர்கள் ஒரு புறம்; மறுபுறத்தில் தக்காண அரசுக்கு மத்தியில் எழுந்த நீண்ட போர்கள், 1664-லும் 1670-லும் சூரத்தின்மீது மராத்தியர்கள் செய்த கொள்ளை, உள்நாட்டு அயல் நாட்டு அபாயங்களினுல் சூழப்பட்ட வங்கத்திலிருந்த முகலாய இராஜப் பிரதிநிதிகளின் (Viceroys) வலிவற்ற அரசாங்கம், மலபாரின் கடற்கொள்ளைக் கூட்டத்தினுல் ஏற்பட்ட குழப்பம், அதைத் தொடர்ந்து பாதுகாப்புச் செய்வதற்கான அவசியம் ஆகிய சூழ்நிலைகளினுல் கொள்கையை மாற்றிக்கொள்ளும்படி ஏற்பட்டது. சர் ஜார்ஜ் ஆக்ஸெண்டன் (Sir George Oxenden) என்பவருக்குப் பின் சூரத்து நகரத்தின் தலைவராகவும் 1669 முதல் பம்பாயின் கவர்னராகவும் நியமிக்கப்பட்ட கெரால்ட் ஆங்கியர் (Gerald Aungier) என்பவர், 'கையில் வாளுடன் வாணிகத்தை நடத்த,

இக்காலம் கூறுகிறது,' என்று நெறியாளர் (Director) சபைக்கு எழுதினர். சில ஆண்டுகளுக்குப் பிறகு, கம்பெனியின் கொள்கையில் இம்மாற்றத்தை நெறியாளர் ஆமோதித்தனர்; சிவில் (Civil), படைத்துறைக்குகந்த (Military) ஆட்சி அமைப்பு (Politic) ஏற்படுத்தவும், இரண்டையும் பெறுவதற்காகப் பெரும்பான்மையான வருவாய்களைக் கொடுக்கக் கூடியவற்றை ஏற்படுத்திப் பாதுகாக்கவும், எதிர்காலத்திலெல்லாம் பரந்த நன்கு நிறுவப்பட்ட பாதுகாப்பான ஆங்கில டொமினியனுக்கு (Dominion) இந்தியாவில் அடிப்படை அமைக்குமாறும் சென்னையிலுள்ள தலைமை அதிகாரிக்கு 1687 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் எழுதினர். ஸ்டுவர்ட்டு (Stuarts) வமிசத்தின் பின் பகுதியில் வந்தவர்கள் காலத்தில், கம்பெனியின் செயல்களுக்கு மிக்க பொறுப்பாய் இருந்த சர் ஜோசையா சைல்டு ((Sir Josiah Child) என்பவர் இப்புதிய கொள்கைக்குப் பெரும்பாலும் பொறுப்புள்ளவராய் இருந்தாலும், இக்கொள்கை அவரால் தொடங்கப்படவில்லை. அதைப் பின் தொடர்ந்து அவருக்குச் சகோதரரான சர் ஜான் சைல்டு (Sir John Child) என்பவர் 1688 டிசம்பரில், பம்பாயையும் மேற்குக் கடற்கரையிலிருந்த முகலாயர்களின் துறைமுகங்களையும் முற்றுகையிட்டு, முகலாயர்களுக்குச் சொந்தமான பல கப்பல்களைக் கைப்பற்றி, மெக்காவிற்கு யாத்திரையாகச் (Pilgrimage) செல்லும் போக்குவரத்தை (Traffic) நிறுத்துவதற்காகத் தம் கப்பல் தலைவனைச் செங்கடலுக்கும், பாரசீக வளைகுடாவிற்கும் அனுப்பினர். ஆனல், உறுதியானவையும் பயன் விளையத்தக்க விதத்தில் உபயோகப்படுத்தக்கூடியவையுமான முகலாயப் பேரரசின் படைகளை ஆங்கிலேயர் குறைவாக மதிப்பிட்டுவிட்டனர். சர் ஜான் சைல்டு கடைசியில் அவுரங்கசீபுவிடம் தம்மை மன்னிக்குமாறு முறையிட்டுக்கொண்டார். அவரும் அப்படியே மன்னித்து (1690 பிப்பிரவரி), ஆங்கிலேயர்கள் வாணிகம் செய்வதற்கான அனுமதியும் அளித்தார். ஆங்கிலேயரும் தாம் கைப்பற்றிய முகலாயக் கப்பல்களை எல்லாம் திருப்பித்தரவும் ஒன்றரை இலட்ச ரூபாயை நஷ்ட ஈடாகக் கொடுக்கவும் ஒப்புக் கொண்டனர்.

வங்காளக்கடற்கரையின் அருகில் வாணிகத்தின் முக்கியப் பொருள்களை (Staples) வாங்க இயலாமல், அம்மாகாணத்திலுள்ள நதி வழிகள் வழியாக அதிக தூரத்திலிருந்த இடங்களிலிருந்து வாங்க வேண்டியிருந்ததால், பலவிதச் சுங்க நிலையங்களுக்கு (Customs-Posts) அக்கம்பெனி சாலைச் சுங்கம் கொடுக்க

வேண்டிய அவசியம் இருந்தது. அதைத் தவிர, உள்ளூர் அதிகாரிகள் விதித்த தொகையையும் கொடுக்க வேண்டியிருந்தது. 1651-ல் ஷுஜா (Shuja) என்கிற சுல்தான் வாணிகம் செய்யும் உரிமையை அக்கம்பெனிக்கு ஓர் அரசசாசனம் மூலம் கொடுத்தார். அதற்குப் பதிலாக அக்கம்பெனியும் 3000 ரூபாயைத் தீர்மானிக்கப்பட்ட (fixed) வருடாந்தரத் தீர்வையாகச் செலுத்த ஒப்புக்கொண்டது. 1656-ல் கொடுக்கப்பட்ட மற்ளுெரு சாசனம், 'ஆங்கிலேயக் கம்பெனியின் பண்டகசாலை (factory) நீர் வழியாகவோ, நிலவழியாகவோ இறக்குமதி அல்லது ஏற்றுமதி செய்யும் சரக்குகளுக்குச் (goods) சுங்கங்கள் விதிக்கும் தொகையிலிருந்து விலக்களிக்கப்பட்டது. அவர்களுடைய சாமான்களைப் பரிசோதிப்பது, அவைகளை அரசுக்குச் சொந்தமான எந்த இடத்திலும் குறைந்த விலைக்குக் கட்டாயப்படுத்தி வாங்குவது ஆகியவை அச்சாசனத்தால் தடுக்கப்பட்டன. ஆனுல், அவர்கள் எவ்விதத் தடையுமின்றி அவைகளை வாங்கவும் விற்கவும் வேண்டும்.' ஆனுல், சுல்தான் ஷுஜாவின் வழி வந்தவர்கள் (Successors) அச்சுல்தானின் சாசனம் தம்மைக் கட்டுப்படுத்தவில்லை என நினைத்தாலும், ஆங்கிலேயரின் வாணிகம் பெருகியதாலும் மற்ற வாணிகர்கள் கொடுக்கும் தீர்வையைப் போலவே ஆங்கிலேயரும் கொடுக்க வேண்டுமென்று கேட்டனர். 1672-ல் ஷெயிஸ்டகானிடமிருந்து அக்கம்பெனி சுங்கத்தீர்வை செலுத்துவதிலிருந்து விலக்களிக்கும் சாசனத்தைப் பெற்றது; 1680-ல் அவுரங்கசீபு பேரரசர் மற்ளுெரு சாசனத்தையும் கொடுத்தார்; அதில் சுங்க வரிக்காகக் கம்பெனியின் ஆள்களைக் கொடுமைப்படுத்துவதும் அல்லது அவர்களின் வாணிகத்தைத் தடுப்பதும் விலக்கப்பட்டன. ஆங்கில மக்களிடமிருந்து வழக்கமாகச் சாமான்களின் மேல் வாங்கும் 2 சத விகிதச் சுங்கவரியைத் தவிர $1\frac{1}{2}$ மடங்கு ஜிஸியா (Jizia) அல்லது தலை வரி (Poll-money) மட்டும் வாங்கலாம் என்று அச்சாசனம் கூறியது. ஆனுல், இச்சாசனங்கள் இருந்த போதிலும் பம்பாய், சென்னை, வங்காளம் ஆகிய எல்லா இடங்களிலுமிருந்த கம்பெனிகளின் பிரதிநிதிகள் (Agents) உள்ளூர்ச் சுங்கவரி அதிகாரிகள் விதித்த வரியினின்றும் தப்பித்துக்கொள்ள முடியவில்லை. சில சமயங்களில் அவர்களுடைய சாமான்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

கடைசியில் படைகொண்டு தன்னைப் பாதுகாத்துக்கொள்ளக் கம்பெனி முடிவு செய்தது. அதற்காக ஹூக்ளியில் 'கோட்டையுடன் கூடிய குடியேற்றம் அவசியம்' எனக் கம்

பெனியார் நினைத்தனர். 1686 அக்டோபரில் ஆங்கிலேயர்கள் ஹூக்ளியைத் தாக்கியதால், முகலாயர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையில் போர் தொடங்கிற்று. ஹிஜிலியும் (Hijili) பாலசூரிலுள்ள முகலாயக் கோட்டையுங்கூட ஆங்கிலேயர்களால் தாக்கப்பட்டன. ஹூக்ளியிலிருந்த ஆங்கிலேயர் முறியடிக்கப்பட்டனர். அதனால், அவர்கள் அதைக் கைவிட்டு, ஆற்றின் கீழ்ப்பக்கமாகச் சென்று, அதன் முகத்துவாரத்திலுள்ள காய்ச்சல் உண்டாக்கும் ஒரு தீவிற்குப் போனார்கள். அப்பொழுதுதான் ஜாப் சர்னக்கு (Job Charnock) என்கிற அறிவுள்ள ஆங்கிலப் பிரதிநிதி 1687-ல் இலையுதிர் காலத்தில் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்தார். சுதானுதி (Sutanuthi) என்ற இடத்திற்கு ஆங்கிலேயர்கள் திரும்பிச் செல்வதற்கு அதனால் அனுமதி கிடைத்தது. ஆனால், சிட்டகாங்கைப் (Chittagong) பிடிக்கும் கட்டளையுடன், வில்லியம் ஹீத்து (William Heath) என்கிற கப்பற்படைத் தலைவரின் தலைமையின் கீழ், லண்டனிலிருந்து புதிய கடற்படை மறு ஆண்டில் வந்ததால், போராட்டம் மீண்டும் தொடங்கப்பட்டது. ஆனால், படைத் தலைவர் (Commander) அவருடைய குறிக்கோளில் தோல்வியுற்றுச் சென்னைக்குத் திரும்பினார்.

1690-ல் பம்பாயின் தலைவரும் மன்றமும் (Council) முகலாயப் பேரரசருடன் சமாதானம் செய்துகொண்டதும், துடுக்கான (Rash) அறிவற்ற ஆங்கிலேயச் செயல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. 1690-ல் வங்காளத்திற்குத் திரும்பிய ஜாப் சர்னக்கு, சுதானுதி என்ற இடத்தில், ஆங்கிலேயரின் பண்டகசாலையொன்றை அமைத்தார். இவ்விதம் 'எதிர்கால பிரிட்டிஷ் இந்தியாவின் தலைநகருக்கான அடிக்கல்' நாட்டப்பட்டது. அது 1687-ல் அரை உணர்வுடன் சொல்லப்பட்ட தீர்க்க தரிசனத்தை அடையும் பொருட்டுச் செய்யப்பட்ட முதல் நடவடிக்கையாகும். முகலாயப் பேரரசின் கட்டளையின்படி, வங்காள அரசாங்கத்தில், ஷேயிஸ்ட கானுக்குப் பின் வந்தவரான இபுராஹீம் கான் (Ibrahim Khan) ஆங்கிலேயர் ஆண்டுதோறும் கொடுக்கும் ரூ. 3,000க்குச் சமமாக அவர்கள் சுங்கவரி கொடுப்பதிலிருந்து விதி விலக்கு (exemption) அளிக்கும் சாசனமொன்றை 1691-ல் பிப்பிரவரி மாதத்திலே செய்தார். பர்துவான் (Burdwan) மாவட்டத்தில் (district) இருந்த சோபா சிங் (Sobha Singh) என்ற ஜமீந்தார் செய்த புரட்சியை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு ஆங்கிலேயர்கள் 1696-ல் தங்கள் பண்டகசாலையைச் சுற்றிக் கோட்டை கட்டினார்கள். 1698-ல் சுதானுதி, காளி கட்டம்,

கோவிந்தபூர் ஆகிய கிராமங்களில் வரி வாங்கும் ஜமீந்தாரி உரிமை அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், அவர்கள் முந்திய உரிமையாளர்களுக்கு ரூ. 1200 கொடுக்க வேண்டியிருந்தது. 1700-ல் வில்லியம்கோட்டை (Fort William) என்ற புதிய பெயரைக்கொண்ட கோட்டையால் சூழப்பட்ட புதிய குடியேற்றத்தின் தலைவருடையதும் மன்றத்தினுடையதுமாகிய தனி அதிகாரத்தின்கீழ் வங்காளத்திலுள்ள ஆங்கிலேயர்களின் பண்டகசாலைகள் இருந்தன. சர் சார்லஸ் அயர் (Sir Charles Eyre) என்பவர் அக்கோட்டையின் முதல் தலைவராக நியமிக்கப்பட்டார். வங்காளக் குடியேற்றத்திலிருந்த கம்பெனியின் நிலைமை மிக விசித்திரமாய் இருந்தது. ஆங்கில அரசருக்குப் பதிலாக, அது பம்பாயை நிருவகித்தது; ஆனால், பம்பாய் எந்த இந்திய அரசருக்கும் கீழ்ப்பட்டிருக்கவில்லை. இந்திய மன்னர்கள் கொடுத்த உரிமையின் பேரிலும், ஆங்கிலச் சாசனத்தின் பேரிலும், அது சென்னையில் அதிகாரத்தைச் செலுத்தியது. 'இரண்டு இடத்திலிருந்து பெறப்பட்ட கம்பெனியின் அதிகாரம், வங்காளத்தில் மிகத் தெளிவாகத் தெரிந்தது.' ஆங்கிலச் சட்டங்களையும் சாசனங்களையும் உபயோகித்து இந்நாட்டிலிருந்த ஆங்கில மக்களின்மேல் அது அதிகாரம் செலுத்தியது; ஆனால், ஜமீன் என்கிற உரிமையினால் இந்திய மக்களின் மேல் அதிகாரம் செலுத்தியது.

இரண்டாம் சார்லஸ் காலத்திலும், இரண்டாம் ஜேம்ஸ் காலத்திலும், கம்பெனியின் செழுமையான நிலை அதன் பகைவர்களிடத்தில் பொறாமையைத் தூண்டியது. 'விக்' (Whig) கட்சிக்கு அதிகாரத்தைக் கொடுத்த 1688ஆம் வருடப் புரட்சிக்குப் பின்பு கம்பெனிக்குக் கொடுக்கப்பட்ட முழு உரிமையுள்ள வாணிகத் தனிச்சலுகைகளை அவர்கள் வெறுத்தார்கள். 'விக்' கட்சியாரும், பழைய அரசுடன் நட்புறவு கொண்டிருந்த வணிகர்களின் குழுவை எதிர்த்தனர். காரணமின்றித் தலையிடுகிறவர்கள் (Interlopers) என்ற பெயர் பெற்ற தனிப்பட்ட வணிகர்களுக்கும் அவர்கள் உதவி செய்தார்கள். சட்டத்தினால் தடுக்கப்பட்டாலொழிய, மற்றபடி, இந்தியாவுடன் வியாபாரம் செய்ய, ஆங்கில நாட்டின் எல்லா மக்களுக்கும் சம உரிமை உண்டு என்ற தீர்மானத்தை 1684-ல் **காமன்ஸ் சபை** (House of Commons) நிறைவேற்றியது. 1698-ல் ஒழுங்கு முறை விதிகளுக்குட்பட்ட கம்பெனியாக ஒரு புதிய கம்பெனியை உண்டாக்க வேண்டிக் கொண்டுவந்த ஒரு மசோதா (Bill) சட்டமாக்கப்பட்டது. 'பொதுச்சங்கம்' (General Society) என்று கூறப்பட்ட இப்புதுக்குழுவுடன்,

இந்தியாவுடன் வாணிகம் செய்யும் உரிமையைப் பாதுகாத்துக்கொள்ளும் நோக்கத்துடன், பழைய கம்பெனி 1707 முதல் ஓர் உறுப்பாகச் சேர்ந்துவிட்டது. அதே சமயத்தில் ஏராளமான சந்தாதாரர்களைக் கொண்ட கூட்டுப் பங்குக் கம்பெனி (Joint Stock Company) 'ஆங்கில வணிகர்களின் கம்பெனி' (English Company of Merchants) என்ற பெயரில் உண்டாக்கப்பட்டது. நிதி பற்றிய (financial) தொல்லைகள் (embarrassments) இருந்த போதிலும், இப்புதிய கம்பெனி பழைய கம்பெனிக்குப் பெரிய போட்டியாய் விளங்கியது. இப்புதிய கம்பெனி வாணிகச் சலுகை பெறும்பொருட்டு சர் வில்லியம் நோரிஸ் (Sir William Norris) என்பவரை அவுரங்கசீபுவின் சபைக்குத் தூதுவராக அனுப்பியது. ஆனால் அவருடைய தூதின் நோக்கம் நிறைவேறவில்லை. அமைச்சகம் (Ministry) நெருக்கியதால், இரண்டு கம்பெனிகளும் ஒன்றாக இணைவதற்கு 1702-ல் முடிவுசெய்தன. அம்முடிவு 1708-ல் கொடால்பின் பிரபு (Earl of Godolphin) செய்த தீர்ப்பினால் செயற்படுத்தப்பட்டது. அவ்விரண்டு கம்பெனிகளும் ஒன்றாய் இணைந்து, 'கிழக்கிந்தியத் தீவுகளோடு வாணிகம் செய்யும் இங்கிலாந்து வணிகர்களின் ஐக்கியக் கம்பெனி' என்னும் பெயரைப் பெற்றது. அதிலிருந்து ஒன்றை ஒன்று அழிக்க நினைக்கும் (intercine) சச்சரவுகள் அடியோடு நின்றுவிட்டன. ஐக்கியக் கம்பெனியின் சட்டபூர்வமான தனியுரிமை கி.பி. 1773 வரை மாறாமல் இருந்தது.

பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் நாற்பது ஆண்டுகளில் அரசியல் குழப்பங்கள் இருந்த போதும் ஆங்கிலேயருடைய கிழக்கிந்தியக் கம்பெனியின் இந்திய வாணிகமும் செல்வாக்கும் அமைதியாகப் படிப்படியான முறையில் விரிவடைந்தன. இக்குழப்பங்கள் சிற்சில சமயங்களில் இடரில்லாத தடைகளை ஏற்படுத்தினாலும், சுலபமாக நீக்கப்பட்டன. முகலாய இந்தியா முழுவதிலும் உரிமைகள் பெறும் பொருட்டும், கல்கத்தாவைச் சுற்றிலுமுள்ள சில கிராமங்களைப் பெறும்பொருட்டும், முகலாயர்களின் சபைக்கு 1715-ல் அனுப்பப்பட்ட அதன் தூதுதான் (embassy) அக்கம்பெனியின் வரலாற்றிலேயே ஏற்பட்ட மிக முக்கியச்செயலாகும். கல்கத்தாவிலிருந்துகொண்டு எட்வர்டு ஸ்டீபன்சன் (Edward Stephenson) உதவியுடன், ஜான் சர்மன் (John Surman) என்பவரால் அப்பேச்சு வார்த்தை நடத்தப்பட்டது. அக்குழுவுடன் வில்லியம் ஹாமில்டன் (William Hamilton) என்பவர் அறுவை மருத்துவராகச் (Surgeon) சென்றார். அவருக்குக் குவாஜா

ஷெருட் (Khwaja Serhud) என்ற பெயருடைய ஆர்மீனிய நாட்டைச் சேர்ந்த ஒருவர் மொழி பெயர்ப்பாளராய் இருந்தார். பேரரசர் பருக்ஸியர் (Farrukhsiyar) கொண்டிருந்த ஒரு கொடிய நோயை ஹாமில்டன் தீர்த்து, அவரைக் குணப்படுத்தினர். அதனல் மகிழ்ச்சியுற்ற அம்மன்னர், ஆங்கிலேயருக்கு ஒரு சாசனத்தை வழங்கினர்; அவர்கள் வேண்டுகோளுக்கிணங்க மாகாணக் கவர்னர்கள் அச்சாசனத்திலுள்ளபடி நடக்க உத்தரவிட்டார். ஆண்டுதோறும் 3000 ரூபாயைச் செலுத்தி, எவ்விதச் சுங்கவரியுமில்லாமல் ஆங்கிலேயர்கள் வங்காளத்தில் செய்த வாணிக உரிமை அதில் உறுதி செய்யப்பட்டது. கல்கத்தாவைச் சுற்றிலுமுள்ள அதிகப்படியான நிலத்தை வாடகைக்குப் பெறவும், அவர்கள் அனுமதிக்கப்பட்டார்கள்; பழைய உரிமையின்படி ஹைதராபாது மாகாணம் முழுவதிலும் வரி விலக்குப் பெறும் உரிமை நீடிக்கப்பட்டது. ஆனல், அவர்கள் அப்பொழுதிருந்த வாடகையைச் சென்னைக்கு மட்டும் செலுத்துதல் போதுமானது; இதுவரையில் அவர்கள் சூரத்தில் செலுத்திவந்த தீர்வையையும், சுங்கவரியையும் செலுத்த வேண்டுவதில்லை என வரி விலக்கு அளிக்கப்பட்டனர். அதற்குப் பதிலாக, ஆண்டுதோறும் அவர்கள் 10,000 ரூபாய் செலுத்த வேண்டும். பம்பாய் நாணயச் சாலையில் செய்யப்பட்ட நாணயங்கள், முகலாய டொமினியன் முழுவதும் செல்லுபடியாகுமாறு செய்யப்பட்டன.

வங்காளத்திலிருந்த உறுதியும் திறமையும் கொண்ட முர்ஷித்குலி ஜாபர்கான் என்ற கவர்னர், ஆங்கிலேயருக்குக் கூடுதலான கிராமங்களைக் கொடுத்ததற்காகத் தம் எதிர்ப்பைத் தெரிவித்தார். ஆயினும், 1716–17ஆம் ஆண்டின் சாசனம் வழங்கிய மற்ற உரிமைகள் அவர்கள் நலத்தைப் பேணி வளர்த்தன. ‘கம்பெனியின் மகாசாசனம்’ என அது ஓர்ம் (Orme) என்பவரால் பொருத்தமாகக் கூறப்பட்டது. உள்ளூர் அதிகாரிகள் சிற்சில சமயங்களில் வரி விதித்துக் கொடுமை செய்து பணத்தை வாங்கிய போதிலும், வங்காளத்தில் நடந்த கம்பெனியின் வாணிகம் படிப்படியாகச் செழிப்புற்றது. கல்கத்தாவின் முக்கியத்துவம் வளர்ந்து, கி.பி. 1735-ல் அது 1,00,000 மக்களைக் கொண்டிருந்தது. 1715-ல் வந்த தூதுக்குப்பின் 10 ஆண்டுகளில் வருடத்திற்குப் பத்தாயிரம் டன்கள் எடையுள்ள கம்பெனியின் பண்டங்கள் அத்துறைமுகத்தில் கப்பலில் ஏற்றி அனுப்பப்பட்டன.

பருக்ஸியர் சாசனம்கொடுத்த ஆண்டிலிருந்து பதினெட்டு ஆண்டுகள் வரை, மராத்தியர்களுக்கும் போர்த்துகீசியர்களுக்கும் இடையில் ஏற்பட்ட சச்சரவுகளினாலும், மராத்தியக் கப்பல் தலைவர்களாலும், கேரியா (அல்லது விஜய துர்க்கம்) சுவர்ண துர்க்கம் ஆகிய அரண் செய்யப்பட்ட இடங்களிலிருந்து பம்பாய்க்கும் கோவாவிற்கும் இடையிலிருந்த கடற்கரையைத் தம் ஆதிக்கத்தில் வைத்திருந்த கனோஜி அங்கிரியா (Kanhoji Angria) என்பவராலும், ஆங்கிலக் கம்பெனியின் மேற்குக் கடற்கரை வாணிகம் நலிவுற்றது. 1715 முதல் 1722 வரை ஆதிக்கம் செலுத்திய சார்லஸ் பூன் (Charles Boone) காலத்தில் பம்பாயைச் சுற்றி ஒரு மதில் எழுப்பப்பட்டது; பகைவரின் கப்பல்களிடமிருந்து பண்டகசாலையையும் வாணிகத்தையும் பாதுகாத்துக்கொள்ளுவதற்காகக் கம்பெனியின் போர்க்கப்பல்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது. இப்பதினெட்டு ஆண்டுகளுக்குப் பிறகு பம்பாயில் நடந்த கம்பெனிகளின் வாணிகம் வளர்ச்சியடையத் தொடங்கியது. அதன் படைப்பலம் அதிகமாகியது; 1757-க்கு முன் மராத்தியக் கப்பல் தலைவர்கள் முற்றும் ஒடுக்கப்படவில்லை என்றாலும், பம்பாயின் மக்கள் தொகை, 1774-ல் 70,000. 1739-ல் ஆங்கிலேயர் மராத்தியர்களுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு பேஷ்வாவின் நட்புடன் அங்கிரியாவிற்கு எதிராகத் தாக்குதலைத் தொடங்கினர். ஜேம்ஸ் என்னும் கப்பல் தலைவரால் சுவர்ணதுர்க்கம் பிடிபட்டது. 1757-ல் கிளைவும் வாட்சனும் சேர்ந்து, அங்கிரியாவின் தலைநகரமாயிருந்த கேரியாவைப் பிடித்தனர். சென்னையிலுங்கூட ஆங்கிலேயர்கள், கருநாடக நவாபுவுடனும், அவருடைய தலைவரான தக்காணக் கவர்னருடனும் சிறந்த உறவுடன் இருந்ததால், அமைதியான வாணிகத்தை நடத்தினர். 1698 முதல் 1709 வரை கவர்னராயிருந்த தாமஸ் பிட்டு என்பவர், முதன் முதலாகக் கருநாடக நவாபுவிடமிருந்து 1708-ல் பெற்ற சென்னைக்கு அருகிலிருந்த ஐந்து பட்டணங்களை 1717-ல் அவர்கள் கைப்பற்றினார்கள். 1734-ல் வேப்பேரியுடன் நான்கு சிறிய கிராமங்களையும் அவர்கள் பெற்றார்கள்.

## பிரெஞ்சு கிழக்கிந்தியக் கம்பெனியும், பிரெஞ்சு குடியேற்றங்களும்

கிழக்கு நாடுகளுடன் வாணிகம் செய்யும் நோக்கம் பிரெஞ்சு மக்களிடையே முதன் முதல் காணப்பட்ட போதிலும்,

கிழக்கில் வாணிக இலாபத்திற்காக மற்ற ஐரோப்பியக் கம்பெனிகளுடன் போட்டியிட்ட கடைசி ஐரோப்பிய வல்லரசாகப் பிரான்சு தேசம் விளங்கியது. ஆயினும், சிறந்த பிரெஞ்சு மக்களான நான்காம் ஹென்றி, ரிச்செலு, கோல்பெர்ட்டு (Colbert) போன்றவர்கள், கிழக்கிந்திய வாணிகத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்தார்கள். கி.பி. 1664-ல், கோல்பெர்ட்டின் முயற்சியின் விளைவாகக் கிழக்கிந்தியக் கம்பெனி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அரசாங்கத்தினால் உண்டாக்கப்பட்டு முதல் அளித்து ஆதரிக்கப்பட்டாலும், பிரெஞ்சுக் கம்பெனியின் முதல் முயற்சிகள், 'சிறந்தனவாகவோ அன்றி நற்பேறுடையனவாகவோ இல்லை.' ஏனெனில், முன்பே பிரெஞ்சுக்காரர்களால் சென்று காணப்பட்ட மடகாஸ்கர் (Madagascar) என்னுமிடத்தில் குடியேற்றம் செய்யும் பலனற்ற முயற்சிகளில் அவர்கள் தங்கள் ஆற்றலை வீணாக்கினார்கள். ஆனால், 1667-ல் பிரான்சுவா கரோன் (Francois Caron) என்பவரின் தலைமையின் கீழ் ஒரு பிரயாணம் ஆரம்பமாயிற்று; அவருடன் இஸ்பகான் நாட்டு மர்க்காரா (Marcara) என்பவரும் சென்றார். பிரெஞ்சுக்காரரின் முதல் பண்டகசாலை, சூரத்து என்னுமிடத்தில் கி.பி. 1668-ல் பிரான்சுவா கரோன் என்பவரால் ஏற்படுத்தப்பட்டது; மர்க்காரா என்பவரும் கோல்கொண்டாச் சுல்தானிடமிருந்து அனுமதி பெற்று 1669-ல் மசூலிப்பட்டினத்தில் ஒரு பண்டகசாலையைக் கட்டினார். 1672-ல் பிரெஞ்சுக்காரர்கள், சென்னைக்கு அண்மையிலிருந்த சாந்தோம் (Santhome) என்ற இடத்தைக் கைப்பற்றினார்கள்; ஆனால், மறு வருடமே, அவர்களுடைய கப்பற்படைத் தலைவரான டே லா ஹேய் (De La Haye) என்பவர், கோல்கொண்டாச் சுல்தான், டச்சுக்காரர்கள் சேர்ந்த ஒரு கூட்டுப் படையால் தோற்கடிக்கப்பட்டு, சாந்தோமை டச்சுக்காரர்களுக்கு விட்டுக்கொடுக்கும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திடும்படி நேரிட்டது. இதற்கிடையில் 1673-ல் பிரான்சுவா மார்ட்டினும், கப்பற்படைத் தலைவரான, டே லா ஹேய் என்பவருடன் வந்த தொண்டரான பெலிங்கர் டி லெஸ்பினே என்பவரும், வாலிகொண்டபுரத்திலிருந்த முஸ்லீம் கவர்னரிடமிருந்து ஒரு சிறிய கிராமத்தைப் பெற்றனர். 'போர்களுக்கிடையிலும், நாடுகளின் வீழ்ச்சிக்கிடையிலும்' பிரான்சுவா மார்ட்டின் என்பவர் தம் துணிவாலும் விடாமுயற்சியாலும் நுண்திறத்தாலும் அதை ஒரு முக்கிய இடமாக வளரும்படி செய்தார். வங்காளத்தில்

ஷெயிஸ்ட கான் என்ற நவாபு, பிரெஞ்சுக்காரர்களுக்கு 1674-ல் ஓர் இடத்தை வழங்கினுர்; 1690-1692 ஆண்டுகளுக்கிடையே அவ்விடத்திலேதான் சந்திர நாகூரின் பிரசித்திபெற்ற பிரெஞ்சுப் பண்டகசாலையைக் கட்டினர்.

ஆங்கிலேயரின் உதவியைப் பெற்ற டச்சுக்காரர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையில் உண்டான ஐரோப்பியர்களின் போட்டி, இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் நலனைப் பெரிதும் பாதித்தது. பாண்டிச்சேரி, டச்சுக்காரர்களால் 1693-ல் கைப்பற்றப்பட்டு, 1697-ல் ஏற்பட்ட ரிஸ்விக் (Ryswick) ஒப்பந்தப்படி பிரெஞ்சுக்காரர்களிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டது; அக்குடியேற்றத்தின் ஆட்சிப்பொறுப்பை மறுபடியும் ஏற்றுக்கொண்ட மார்ட்டின் என்பவர் அதை மீண்டும் செழிப்பான நிலைக்குக் கொண்டுவந்தார்; 1706-ல் அவர் இறந்தபோது, கல்கத்தாவின் மக்கள் தொகை, 22,000 ஆய் இருக்கையில் பாண்டிச்சேரியின் மக்கள் தொகை, 40,000 ஆய் வளர்ந்தது. ஆனல், பிரெஞ்சுக்காரர்கள், மற்ற இடங்களிலிருந்த தங்கள் செல்வாக்கை இழந்து பதினெட்டாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில், அவர்கள் பான்டம் (Bantam), சூரத்து, மசூலிப்பட்டினம் ஆகியவற்றிலிருந்த பண்டகசாலைகளைக் கைவிட்டார்கள். அக்காலத்தில் பிரெஞ்சுக் கம்பெனியின் வள ஆதாரங்கள் அனைத்தும் குறைந்தன. 1720 வரை மற்றவர்களுக்குத் தங்கள் தனி உரிமையையே (Licence) விற்கும் அளவுக்கு அவர்கள் துன்பப்பட நேரிட்டது. 1707 முதல் 1720 வரை ஆட்சியிலிருந்த ஐந்து கவர்னர்கள், மார்ட்டின் கையாண்ட உறுதி, கூரறிவுள்ள கொள்கை ஆகியவைகளைக் கடைப்பிடிக்கவில்லை. ஆனல், 1720 ஜூனில் 'கீழ் நாட்டின் நிலைத்த கம்பெனியர்க' மாற்றியமைக்கப்பட்ட கம்பெனி, 1720-க்கும் 1742-க்கும் இடையில் லெனுவா (Lenoir), துய்மா (Dumas) ஆகியவர்களின் நல்லாட்சியில், செழிப்புற்று விளங்கியது. 1721-ல் **மொரிஷஸ்** என்னுமிடத்தையும், 1725-ல் மலபாரிலுள்ள மாஹி என்னுமிடத்தையும், 1739-ல் காரைக்காலையும், பிரெஞ்சுக்காரர் கைப்பற்றினர். இக்காலத்தில் பிரெஞ்சுக்காரர்களின் நோக்கம் முழுவதும் வாணிகத்திலேயே இருந்தது. லெனுவா, துய்மா ஆகியவர்களின் நடத்தைகளிலிருந்து கம்பெனிக்கு அரசியல் நோக்கம், அல்லது நாடு பிடிக்கும் எண்ணம் இருக்கவில்லை என்று சொல்லலாம்; அவர்களின் பண்டகசாலைகளைச் சுற்றிக் கோட்டைகள் கட்டப்பட்டு, ஆங்கிலேயர்கள், டச்சுக்காரர்கள் ஆகியவர்களிடமிருந்து அவை பாதுகாக்கப்பட்டன. படை

யில் சிப்பாய்களைச் சேர்த்தாலும், அவர்களது தற்காப்பிற் காக மட்டும் அவர்கள் உபயோகிக்கப்பட்டார்கள். 1742ஆம் ஆண்டிற்குப் பிறகு வாணிக ஆதாயத்தின்மீதிருந்த விருப்பங் கள் அரசியல் நோக்கங்களால் மறைக்கப்பட்டன ; இந்தியா வில் பிரெஞ்சுப் பேரரசை உண்டாக்கும் பேரவாவை டியூப்ளே என்பவர் கொண்டிருந்தார். இதை ஆங்கிலேயர்கள் எதிர்க்க நேர்ந்தது. அதனால், இந்திய வரலாற்றில் ஒரு புதிய அதி காரத்தை இது ஏற்படுத்தியது.

# 2. பிரிட்டிஷ் ஆட்சியின் எழுச்சி (1740-1765)

## ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் முதல் கருநாடகப் போர்

ஏறக்குறைய இருபது ஆண்டுகள் வரை, கருநாடகம் (கிழக்குக் கடற்கரைக்கும் அதனைச் சேர்ந்த பின்னிலத்திற்கும் (Hinter land) ஐரோப்பியர்கள் வழங்கிய பெயர்) ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையில் நெடுங்காலமாய் இருந்து வரும் போட்டிக்கு ஒரு களமாய் மாறி, இறுதியில் இந்தியாவிலிருந்த பிரெஞ்சு ஆதிக்கத்தின் தோல்வியில் முடிந்தது. அதன் விளைவுகளால் வங்காளத்தில் எதிர்பாராத முக்கியத்துவம் வாய்ந்த முடிவுகள் ஏற்பட்டன. இந்தியாவில் ஆட்சி செலுத்த, பிரெஞ்சுக்காரர்களைவிட ஆங்கிலேயர்களே தகுதியுடையவர்கள் என்பதை இப்போரே இறுதியாக முடிவு செய்தது என்பதைப் பின்னர் ஏற்பட்ட நிகழ்ச்சியிலிருந்து நாம் நியாயமாகக் கூறலாம். இக்காரணங்களால் கருநாடகப் போர், வரலாற்றிலே புகழ் வாய்ந்த ஒரு போராய் விளங்கியது. ஆனால், சம்பந்தப்பட்ட உடனடியான பிரச்சினைகள் அல்லது போரின் நிகழ்ச்சிகள் ஆகியவைகளால் இப்புகழ் ஏற்படவில்லை.

போரின் தன்மை முழுவதையும் அறிய வேண்டுமானால், இந்தியாவிலிருந்த ஆங்கிலேய, பிரெஞ்சுக் கம்பெனிகளின் நிலைமை, ஐரோப்பாவில் அவ்விரு நாடுகளுக்கும் இருந்த உறவு ஆகியவற்றையும், தக்காணத்தில் அப்பொழுதிருந்த அரசியல் நிலைமையையும், ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் மற்ற இந்திய அரசுகளுக்கும் இடையே நிலவி வந்த நிச்சயமற்ற உறவையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். முக்கியக் காரணக் கூறுகளான இவை அனைத்தும்,

வாணிகச் சலுகைகள் பெறும்பொருட்டுச் சிறிய போராய்த் தோன்றி, முகலாயர்களின் பேரரசைக் கைப்பற்றும் அள வுக்குத் துணிவுள்ள செயலாக மாறி, நிகழ்ச்சிகளின் போக்கை உருவாக்கியது.

முன்பு குறித்தவாறு சென்னையும் பாண்டிச்சேரியும் கிழக்குக் கடற்கரையில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர் களுக்கும் முக்கிய வாணிகத் தலமாய் விளங்கின. இவற்றுள் ஒவ்வொன்றும், கோட்டையால் பாதுகாக்கப்பட்டு, ஏறக் குறைய 500 ஐரோப்பியர்களையும், 25,000 இந்தியர்களையும் கொண்டதாய் இருந்தது. இதனுடன், பாண்டிச்சேரிக்குச் சிறிது தெற்கில் இருந்த செயின்ட் டேவிடு கோட்டையையும், ஆங்கிலேயர் பெற்றிருந்தனர். இம்மூன்று நகரங்களும் கிழக்குக் கடற்கரையில் அமைத்து, பாதுகாப்பு படைப்பல உதவி ஆகியவற்றிற்குக் கடலாதிக்கத்தின் மூலம் தாய் நாட்டை எதிர்பார்த்தன. முதலில் இக்கூறுகள் நன்கு உணரப் படாவிட்டாலும், இவற்றின் முக்கியத்துவம் படிப்படியாகத் தெரிய வந்தது. கடற்படை இல்லாத உள்ளூர் அரசர்கள் சம்பந்தப்பட்ட வரையில் இவர்கள் அனுகூலமான நிலை யிலேயே இருந்தார்கள். கடைசியில் இரண்டு ஐரோப்பியக் கம்பெனிகளுக்குமிடையில் ஏற்பட்ட போரின் வெற்றியும் கடலாதிக்கப் பாதுகாப்பும் ஒவ்வொன்றின் ஆற்றலைச் சார்ந் திருந்தன.

உள்ளூர் இந்திய அரசர்களிடம் கப்பற்படை இல்லை. மிகு விரைவிலேயே அவர்கள் தரைமீதும் முக்கிய இராணுவ அரசாய் விளங்க முடியாத நிலை ஏற்பட்டது. அரசியல் சம்பந் தப்பட்டவரையில் கருநாடகம் குழப்பமான நிலையிலேயே இருந்தது. அது ஆர்க்காட்டைத் தலைநகராகக் கொண்டு தக்காணச் சுபேதாரின் கீழ் ஒரு மாகாணமாக நவாபு என்னும் பட்டத்தையுடைய கவர்னரால் ஆளப்பட்டது. தக்காணச் சுபேதாரான நைஜாம் உல்முல்கு எல்லாவிதத்திலும் சுதந்தர மாய் இருந்ததைப்போல, கருநாடக நவாபுவும் தாம் சுதந்தர அரசர் எனப் பாவித்து நடக்கலானார். பெயரளவில் அவர்தம் அதிகாரியான நைஜாம், மராத்தியர்களுடனும் வடவிந்திய விவகாரங்களிலும் முழுக்க ஈடுபட்டிருந்தார். அதனால், அவர் கருநாடக விவகாரங்களில் பெரும்பாலும் பயனுள்ள அதிகா ரத்தைச் செலுத்த இயலாத நிலையில் இருந்தார். சில சந்தர்ப் பங்களிலேதான் தென்மாகாணத்தைப் பார்வையிட அவருக் குச் சிறிது அவகாசம் கிட்டும்.

1743-ல் அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பம் கிட்டியது. மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, மராத்தியர்கள் கருநாடகத்தில் புகுந்து கொள்ளையடித்து, தோஸ்து அலி (Dost Ali) என்கிற அதன் கவர்னரைக் கொன்று, அவருக்கு மருமகனுரான சந்தா சாகிபுவைச் (Chanda Sahib) சிறை பிடித்து, 'சத்ரா' என்னும் இடத்திற்குக் கொண்டு சென்றுர்கள். தோஸ்து அலியின் மகனுரான சப்தர் அலி (Safdar Ali), மராத்தியர்களுக்கு ஒரு கோடி ரூபாய் கொடுப்பதாக வாக்களித்து, தம் உயிரையும் அரசையும் மராத்தியர்களிடமிருந்து காப்பாற்றிக்கொண்டார். ஆனல், மிகு விரைவிலேயே அவர் கொலையுண்டார். அவர் தம் மைந்தர் நவாபு என அறிவிக்கப்பட்டார். இந்நிகழ்ச்சிகளெல்லாம் கருநாடகத்தில் அச்சத்தையும் நிச்சயமற்ற தன்மையையும் ஏற்படுத்தியதால், அமைதியை ஏற்படுத்துவதற்கு நைஜாம் அங்குச் செல்ல வேண்டியிருந்தது. குழப்பத்திற்குள்ளான இப்பிரதேச (Region) விவகாரங்களைத் தீர்த்து வைப்பது அவர் ஆற்றலுக்கு மிஞ்சிய ஒரு காரியமாகத் தென்பட்டது. சிறந்த அதிகாரியான அன்வார் உத்தீன் (Anwar-ud-din) என்பவர் நவாபுவாக நியமிக்கப்பட்டாலும், முன் ஆண்டுகளில் நடந்தபடியே காரியங்கள் நடந்து வரலாயின. புதிய நவாபுவின் நியமனம் அப்பொழுதிருந்த நிலைமையை மேலும் மோசமாக்கியது. ஏனெனில், பல கோட்டைகளையும் ஏராளமான ஜாகீர்களையும் தங்கள் வசத்தில் வைத்திருந்த தோஸ்து அலியின் உறவினர்கள், புதிய நவாபுவைத் தங்களுக்கு எதிரியாகவும் உரிமையின்றித் தங்கள் நாட்டில் நுழைந்தவராகவும் கருத நேரிட்டது.

இப்படிக் கருநாடகம் முழுவதும் அரசியல் நிகழ்ச்சிகளினல் கொந்தளித்துக்கொண்டிருந்தபோது, ஆங்கிலப் பிரெஞ்சுக் குடியேற்றங்கள் போரிடுபவர்களிடமிருந்து எவ்விதத் தடையுமின்றித் தங்கள் வாணிகத்தைச் சமாதானமாக நடத்தி வந்தன. தங்கள் வாணிக நலன்கள் பாதிக்கப்பட்டாலன்றி, மற்றப்படி பிரெஞ்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும் இந்திய அரசியலில் அதுவரையில் எவ்வித உற்சாகமான ஈடுபாடும் கொள்ளவில்லை. உள்ளூர் அதிகாரிகளும் அவர்களைப் பொறுப்புடன் கவனிக்க வேண்டிய முதன்மை வாய்ந்தவர்களாக நினைக்கவில்லை. அப்படி அவர்கள் கவனிக்கப்படாமலே இருந்துவிட்டால், தங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதைக் கவனிக்காமல், தங்களுடைய வழக்கமான காரியங்களை இடையூறு ஏதுமின்றி நடத்திக்கொண்டிருந்திருப்பார்கள்.

ஆனால்; இப்படி நடப்பதாக இல்லை. 1740-ல் இங்கிலாந்து ஐரோப்பாவில் நடந்த ஆஸ்திரிய வாரிசு உரிமைப் (Austrian War of Succession) போரில் சிக்கும்படி நேரிட்டது. அப்போரின் ஆரம்பத்தையோ, அல்லது அதன் வளர்ச்சியையோ ஈண்டு விவரித்துச் சொல்ல வேண்டுவதில்லை. ஆனால், அப்போரில் இங்கிலாந்தும் பிரான்ஸும் பகையாகி, எட்டு ஆண்டுக் காலம் நெதர்லாந்தில் போரிட நேரிட்டது. இங்கிலாந்துக்கும் பிரான் ஸுக்கும் இடையில் ஆரம்பித்த போர், இந்தியாவிலிருந்த இரண்டு கம்பெனிகளையும் சட்டப்படி (technically) போர் நிலையில் வைத்தது. ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் இருந்த பிரெஞ்சு அதிகாரிகள் இந்நாட்டில் நடுவுநிலைமை வகிப்பதற்கு முதலில் மிக முயன்றார்கள். இவ்விதம் செய்யும் வழக்கம் இதற்கு முன் இருந்ததால், பாண்டிச்சேரியின் கவர்னரான டியூப்ளே, இது சம்பந்தமாக இந்தியாவிலிருந்த ஆங்கிலேயப் பிரதிநிதிகள் பகைமையுணர்ச்சியைத் தடுக்க விரும்பினாலும், இங்கிலாந்திலிருந்த மேலதிகாரிகள் இதை ஒப்புக்கொள்ள வில்லை. மேலும், கடலில் செல்லும் இங்கிலாந்து அரசருடைய கப்பல்கள்மீது மேலதிகாரம் இல்லாத இவர்கள் நடுவு நிலைமைக் கொள்கையைச் செயற்படுத்த இயலாதவர்களாயும் இருந்தார்கள்.

உண்மையில் பார்னெட்டு (Barnett) என்பவரின் கீழிருந்த ஆங்கிலக் கப்பற்படை பிரெஞ்சுக் கப்பல்களைக் கைப்பற்றிய தால், போர் தொடங்கியது. இந்தியக்கடலில் பிரெஞ்சுக் கப்பல்கள் இல்லாததால், டியூப்ளே என்பவர் மொரீஷ் கவர்ன ரான லா பொர்தொனேவுக்குத் (La Bourdonnais) தங்கள் உதவிக்கு வரும்படி, ஓர் அவசரக் கோரிக்கையை விடுத்தார். மிகுந்த இடர்ப்பாட்டிற்குப் பிறகு அவர் எட்டுக் கப்பல் களுடன் இந்தியக் கடலுக்கு விரைந்தார்.

லா பொர்தொனேவின் வருகை போரின் போக்கையே மாற்றிற்று. ஆங்கிலக் கப்பல்களின் தலைவர், பிரெஞ்சுக் கப்பல்களுடன் கடினமாகப் போரிட முடியாததாலோ, அல்லது விருப்பமில்லாத காரணத்தாலோ, சென்னைக் கடற் கரை முழுவதையும் பிரெஞ்சுக்காரர்களின் தயவில் விட்டு விட்டு, ஹூக்ளிக்குப் பயணமானார். பிரெஞ்சுக்காரர்கள் தரை வழியாகவும், சென்னையைச் சூழ்ந்துகொண்டு தாக்கினார்கள். ஒரு வாரத்திற்குள் அறுவரைப் பலி கொடுத்து, சென்னை சரணடைந்தது. இது வரையிலும் ஆங்கிலேயர் நிலத்திலும்

கடலிலும் பிரெஞ்சுக்காரர்களை எதிர்க்கும் ஆற்றலின்மையை வெளிப்படுத்தினர். இதன் பிறகு அதிருஷ்ட தேவதை டியூப்ளே பக்கம் இருப்பதாகத் தென்பட்டது.

ஆனல், போரின் பெரிய புதிர், அதுவரை வெளியாகாமலே இருந்தது. கருநாடகத்தின் புதிய நவாபுவாக நியமிக்கப்பட்ட அன்வாருதீன் தம் நாட்டில் நடக்கும் போரை அமைதியாகப் பார்த்துக்கொண்டிருக்க விரும்பவில்லை; அந்நாட்டில் ஆட்சி செலுத்துபவர் என்ற முறையில், ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் பெயரளவிலாவது பாதுகாப்பு அளிக்கக் கடமைப்பட்டவராய் இருந்தார்; தவிர, இவை இரண்டும் அவசியம் ஏற்பட்டபோது இப்படிப்பட்ட நிலைமையை வெளிப்படையாகவே ஏற்றுக்கொண்டன. அதனால், போரின் ஆரம்பத்தில், ஆங்கிலேயர் கடலின்மீது பலமுள்ளவர்களாய் இருந்தனர். தங்கள் கப்பல்களைப் பாதுகாக்குமாறு டியூப்ளே என்பவர் நவாபுவை வேண்டினர். ஆனல், ஆங்கிலேயர் நவாபுவின் அதிகாரத்திற்கு அடங்காமலும், அவர் விடுத்த கண்டனங்களையும் குற்றச்சாட்டுகளையும் மதிக்காமலும் இருந்தனர். ஆனல், சென்னை பிரெஞ்சுக்காரர்களால் சூழப்பட்ட போது, ஆங்கிலேயர் தம்மைப் பாதுகாக்குமாறு நவாபுவை வேண்டினர். அன்வாருதீன் பிறரைப் பாதுகாக்கும் பொறுப்புள்ளவர் என்ற முறையில் சென்னையைத் தாக்க வேண்டுமென டியூப்ளேயைக் கேட்டுக்கொண்டார். ஆனல், பிரெஞ்சுக்காரர்களும் ஆங்கிலேயரைப் போல, தங்களுக்கு வேண்டும்போது நவாபுவின் அதிகாரத்தை மீறுவதற்கே விரும்பினர்கள். ஆனல், ஒரே ஒரு முக்கிய வித்தியாசம் இருந்தது. கப்பற்படை இல்லாத காரணத்தால், கடற்பிரச்சினைகளில் உற்சாகத்துடன் தலையிட நவாபுவால் இயலவில்லை. ஆனல், நிலத்தில் நடக்கும் போரில் அவர் நிலைமை வேறு மாதிரியாய் இருந்தது. அதில் அவருடைய கட்டளைகளைப் படையின் உதவியுடன் நிறைவேற்றுவிக்கும் வாய்ப்பும் எண்ணமும் இருந்தன. டியூப்ளேவுக்கு இது நன்ருகத் தெரியுமாதலால், அவரைத் தம் அரசியல் தந்திர (Diplomacy) முறைகளால் சமாதானப்படுத்த முயன்ருர். நவாபுவிடம் ஒப்படைப்பதற்காகவே தாம் சென்னையைக் கைப்பற்றுவதாக அவர் கூறினர். ஆனல், நவாபு இதை நம்பவில்லை. பல முறை எச்சரித்தும் கேளாததால், சென்னையை முற்றுகையிடும் பிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராக ஒரு படையை அவர் அனுப்பினர்.

சென்னையிலிருந்து ஆங்கிலேயர்கள் சிறிது காலம் எதிர்த்திருந்தால், பிரெஞ்சுக்காரர்கள் இரு பகைவர்களிடம் சிக்கியிருப்பார்கள். நவாபுவின் படை வீரர்கள் பிரெஞ்சுக்காரர்கள் கையில் சென்னை இருப்பதை உணர்ந்து, அதை முற்றுகையிட்டார்கள் (Blockaded). ஆனால், ஒரு சிறிய பிரெஞ்சுப்படை எளிதில் கையாள முடியாத நவாபுவின் படையைத் திடீரெனத் தாக்கிச் சிதறடித்தது. சென்னையிலிருந்த பிரெஞ்சுப் படைக்கு ஆதரவாய் வந்த மற்றொரு பிரெஞ்சுப் படைப்பகுதி, செயின் தோமுக்குப் பின் வாங்கிய நவாபுவின் படையைத் தோற்கடித்தது. நவாபுவின் தோல்வி ஆற்றலுள்ள மாபெரு விளைவுகளை உண்டாக்கியதைப் பற்றி உரிய இடத்தில் நாம் கூறுவோம். அச்சமயத்தில் பிரெஞ்சுக்காரரின் வெற்றி முழு வெற்றியென்பது தெரிந்தது. அவர்களின் ஆதாயமும் புகழும் அவர்கள் எதிர்பார்த்த அளவுக்குமேல் இருந்ததாகத் தோன்றின.

ஆனால், அவர்களின் மாபெருவெற்றி வெறுப்பையும் ஒற்றுமையின்மையையும் அவர்களுக்குள்ளேயே ஏற்படுத்தியது. குறிப்பிட்ட விடுதலைப் பணத்தைக் கொடுத்தால் சென்னையை மீண்டும் ஆங்கிலேயரிடமே ஒப்படைப்பதாக லா பொர்தொனே வாக்குறுதி செய்திருந்தார். ஆனால், இக்கொள்கையை டியூப்ளே கடுமையாக எதிர்த்தார். பலநாள்கள் நீடித்த இவ்விவாதத்திற்குப் பிறகு அவர் சொல்லுக்கு டியூப்ளே செவி சாய்ப்பதாகத் தோன்றியபோது, ஒரு பெரிய சூறாவளி ஏற்பட்டு, பிரெஞ்சுக் கப்பற்படைக்குப் பெரிய சேதத்தை விளைவித்ததால், லா பொர்தொனேவுக்கு இந்தியக் கடலிலிருந்து தம் கப்பல்களுடன் திரும்பிச் செல்ல நேர்ந்தது. சென்னை மன்றத்தோடு லா பொர்தொனே செய்துகொண்ட ஒப்பந்தத்தை டியூப்ளே குறை கூறி, சென்னை முழுவதையும் கொள்ளை அடித்தார்.

ஆனால், அவருடைய கொள்ளையின் வெற்றியானது மிக்க சிரமத்துடன் பெறப்பட்டது. லா பொர்தொனே சென்ற பிறகு, கடலாதிக்கத்தை ஆங்கிலேயர் திரும்பவும் பெற்றனர். பதினெட்டு மாதங்கள் விடாமல் முற்றுகையிட்டும், செயின்ட் டேவிடு கோட்டையை டியூப்ளேவால் பிடிக்க இயலாமற்போனதுதான் இம்மாற்றத்தின் முதல் பலன். சென்னையைக் கைப்பற்றியதற்குப் பழிவாங்க 1748 ஜூனில் பெரிய கப்பற்படைத்தலைவரான பாஸ்காவென் (Boscawen) தலைமையின்கீழ் ஒரு பெரிய கப்பற்படை இங்கிலாந்திலிருந்து

அனுப்பப்பட்டது. ஆங்கிலேயர் இப்பொழுது பாண்டிச்சேரி யைத் தரை வழியாகவும் கடல் வழியாகவும் முற்றுகையிட்ட னர். மீண்டும் அதிருஷ்ட தேவதையின் ஆதரவு டியூப்ளேவுக்குக் கிட்டியது. முற்றுகையிட்ட படையிலும் போர்த் திறமை இல்லாததால், பாண்டிச்சேரி காப்பாற்றப்பட்டது. மழைக் காலம் ஆரம்பமானதும் பாஸ்காவென் முற்றுகையை ஆரம் பிக்க வேண்டியிருந்தது. மறுபடியும் அவர் முற்றுகையை ஆரம்பிக்குமுன், 1748-ல் ஐ லா ஷப்பேல் (Aix-la-Chapelle) உடன்படிக்கையால், ஆஸ்திரிய வாரிசு உரிமைப்போர் முடி வுற்றது. அவ்வுடன்படிக்கைப்படி சென்னை ஆங்கிலேயருக்குத் திருப்பித் தரப்பட்டது; பாஸ்காவென் ஐரோப்பாவிற்குத் திரும்பினர். இப்படி ஆங்கில பிரெஞ்சுப் போரின் முதல் நிலை எவருக்கும் வெற்றியின்றி முடிந்தது.

## இரண்டாவது கருநாடகப் போர்

உடன்படிக்கைப்படி இரு சாராரும் போருக்கு முன் னிருந்த நிலைமையிலேயே வெளிப்படையாக விடப்பட்டாலும், அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் நிலைமை பெரிதும் மாறிவிட்டதை உணர்த்தின. எதனையும் எளிதில் உணரும் தன்மைவாய்ந்த டியூப்ளே, அண்மைக் காலத்தில் நிகழ்ந்த போரின் விளைவாக ஏற்பட்ட சில உண்மைகளை அறிந்து கொண்டார். கடல் வல்லரசின் முக்கியத்துவத்தை இப்போர் நன்கு வெளிப் படுத்தியது. அவருடைய துணிகரமான கொள்கைகள் இறுதி யில் இந்திய வரலாற்றையே மாற்றி அமைத்தன. கடலில் தாங்கள் ஆதிக்கம் செலுத்தாத வரை, ஆங்கிலேயராவது பிரெஞ்சுக்காரராவது முடிவானதும் நிலையானதுமான வெற்றியைப்பெற இயலாதென்பதைச் சந்தேகத்திற்கிட மில்லாமல் அது தெளிவாகக் காட்டியது. ஒப்புக்கொள்ளப் பட்ட ஆங்கிலேயரின் மேலாதிக்கத்தால் பிரெஞ்சுக்காரர் களின் எதிர்கால நம்பிக்கை மிகவும் இருளடைந்ததாய்த் தோன்றியது. அதுவுமன்றி, பிரெஞ்சு அதிகாரம் கரு நாடகத்தில் மட்டும் இருக்கையில் ஆங்கிலேயர்களுக்குப் பம்பாயிலும் வங்காளத்திலும் முக்கியக் குடியேற்றங்கள் இருந்தன. ஆகையால், மேலாதிக்கத்திற்காக நடக்கும் எந்தப் போரிலும், பிரெஞ்சுக்காரர் தாய் நாட்டிலிருந்து வரும் வழங்குபொருள், இந்தியாவிலேயே வள ஆதிக்கம் பெறுவது ஆகியவை சம்பந்தப்பட்ட வரையில் பிரதிகூலமான நிலை யிலேயே இருந்தனர். ஆகையால், ஆங்கிலேயருக்கெதிராக,

பிரெஞ்சுக்காரர்கள் இறுதியான வெற்றி பெறும் சாத்தியக் கூறுகள் உண்மையில் மிகக் குறைவாகவே இருந்தன.

மங்கலாயிருந்த எதிர்கால நம்பிக்கையைக் கண்டு மற்றையோர் மருண்டு கிலி கொண்டிருப்பர். ஆனால், டியூப்ளேவின் ஒப்பற்ற திறமையோ, பிரகாசமடைந்து, துன்பத்திலிருந்து மீளுவதற்குள்ள வழியைக் கண்டது. சென்னையின் அருகே அன்வாருதீனைத் தோல்வியுறச் செய்த நிகழ்ச்சி அவர் மனத்தில் ஆழமான முத்திரையைப் பதித்து, புதிய வழியில் ஏராளமான வெற்றிபெறும் வாய்ப்புகளை எடுத்துக் காட்டியது. அன்வாருதீனுடைய பெரும்படை தரைப் போரில் ஒரு சிறிய பிரெஞ்சுப் படையால் முறியடிக் கப்பட்ட நிகழ்ச்சி, திரளான மனிதர்களைவிட, மேலான கட்டுப்பாடும் தற்கால ஆயுதங்களும் போருக்கு மிக முக்கிய மானவை என்பதை எடுத்துக்காட்டியது. அதைப்போலவே, ஆசியப் பெரும் படைகள் ஐரோப்பிய வீரர் ஒரு சிலருக்கு ஈடாகா என்பதையும் அப்போர் உணர்த்தியது. சிறியதான—ஆனால் வீரமும் கட்டுப்பாடும் பொருந்திய—அவரது படை, இந்திய அரசர்களின் போரில் வெற்றியைக் கொடுக்கக் கூடிய ஒரு கருவியாய்த் திகழ்ந்தது. அரசியற்குழப்பம் நிறைந்த அந்நாளில் வெற்றி பெறும் பொருட்டு டியூப்ளேவுக் காக எவ்வளவு தொகையையும் கொடுப்பதற்கு எத்தனையோ இந்திய அரசர் தயாராய் இருந்தனர். இப்படிப்பட்ட புகழும் இந்திய அரசுகளின் வள ஆதரவும் தம் பக்கம் இருந்ததால், பிரெஞ்சுக்காரர் ஆங்கிலேயர்களைவிட மிகவும் ஆற்றலுள்ளவ ராய் இருந்தனர்.

இவ்விதம் நிகழ்ச்சிகள் காட்டியபடி டியூப்ளே நியாயமாக நினைக்கத் தொடங்கினர். அதிருஷ்டம் அவர் பக்கத்தில் இருந்தது. அது அவர்முன் ஓர் அரிய சந்தர்ப்பத்தை யமைத்து, அவரது கொள்கையைச் செயலிற்காட்டும்படி செய்தது. அன்வாருதீன் கருநாடக நவாபுவாக நியமிக்கப் பட்டதால், தோஸ்து அலியின் நண்பரும் உறவினரும் மனக் கசப்படைந்தனரென்பதை நாம் முன்பே பார்த்தோம். முன்பு கூறியபடி, 1741-ல் மராத்தியர்களால் கைதியாக்கப் பட்ட தோஸ்து அலியின் மருமகரான சந்தாசாகிபு ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு விடுதலை செய்யப்பட்டுக் கருநாடகத் திற்கு வந்தபோது, இந்த மனக்கசப்பு வளர்ந்து பெருகியது. அவர் இப்பொழுது தம் மாமனரின் சிங்காதனத்தைத் திரும்பப்பெறும் நோக்கத்துடன் சதி செய்யலானர். அதைப்

போன்ற ஒரு போட்டி, தக்காணச் சிங்காதனத்திற்கும் ஏற்பட்டிருந்தது. ஆட்சியை ஏற்படுத்திய ஆசப்ஜா நிஜாம் உல்முல்கு என்பவர் 1748-ல் இறந்ததால், அவர் மகனுரான நாசர் ஜங் என்பவர் அரசரானுர். ஆனல், ஆசப்ஜாவின் பேரரான முசபர் ஜங் என்பவர், முகலாயப் பேரரசர் தம்மைத் தக்காணத்தின் சுபேதாராக நியமித்தார் என்ற உரிமையின் பேரில் இம்மாகாணத்திற்கு உரிமை கொண்டாடினர்.

இதைப் போன்ற நிலைமை வரும் வரையில் டியூப்ளே விருப்பத்துடன் காத்திருந்தார்; சந்தா சாகிபுவையும் முசபர் ஜங்கையும் முறையே கருநாடக, தக்காணச் சிங்காதனங் களில் அமர்த்துவதாக வாக்களித்து, இரகசியமாக அவர்க ளுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். 1749, ஆகஸ்டு 3-ல் இம் மூன்று நேச நாடுகளும் சேர்ந்து, வேலூ ருக்குத் தென்கிழக்கிலிருந்த ஆம்பூர் என்னுமிடத்தில் நடந்த போரில், அன்வாருதீன் என்பவரைத் தோற்கடித்துக் கொன் றன. அன்வாருதீனின் மகனுரான முகமது அலி திருச்சிராப் பள்ளிக்குத் தப்பியோடினுர். ஒரு பிரெஞ்சுப்படை அப்பட்ட ணத்தைத் தாக்குவதற்காக அனுப்பப்பட்டது.

ஆங்கிலேயரைப் பயமுறுத்திய பேராபத்தை அவர்கள் உணர்ந்தாலும், டியூப்ளேவின் ஆற்றல் அவர்களிடம் இல்லை. கருநாடகத்திற்கு வந்து தங்கள் பகைவர்களை அடக்க வேண்டுமென, நாசர் ஜங்கிற்கு ஓர் அவசர அழைப்பை அவர்கள் அனுப்பினுர்கள்; திருச்சிராப்பள்ளியிலிருந்த முகம்மதலிக்கும் சிறிது உதவியை அனுப்பினுர்கள். டியூப்ளே தலைமையின் கீழிருப்பதைப் போன்ற பலமுள்ள ஒரு கூட் டரசை ஆங்கிலேயர்களால் உண்டாக்க இயலவில்லை. அதனல், கருநாடகத்தில் நாசர் ஜங் பின்னர்க் (1750, டிசம்பர்) கொல்லப்பட்டார். கைதியாக்கப்பட்டிருந்த முசபர் ஜங் விடுதலை செய்யப்பட்டு, தக்காணத்தின் சுபேதாராக அறிவிக்கப்பட்டார். நன்றியுள்ள அச்சுபேதார், பிரெஞ்சு நண்பர்களின் உதவிக்குத் தக்கபடி சன்மானம் வழங்கினுர்; கிருஷ்ணு நதிக்குத் தென்புறமிருந்த முகலாயப் பிரதேசத் திற்கு டியூப்ளேவைக் கவர்னராக நியமித்தார்; பாண்டிச் சேரிக்கு அருகிலுள்ள இடங்களையும், பிரபல சந்தைப் பட்டின மான மசூலிப்பட்டினம் உட்பட ஒரிஸ்ஸாக் கடற்கரையில் இருந்த இடங்களையும் அவருக்கு வழங்கினுர். அதற்குப் பதிலாக, முசபர் ஜங் கேட்டுக்கொண்டபடி, சிறந்த அதிகாரி

யான புஸ்ஸி (Bussy) என்பவரையும், ஒரு பிரெஞ்சுப் படையையும், அவருடைய ஆதிக்கத்தில் டியூப்ளே விட்டு வைத்தார். அச்செய்கை நைசாம் அரச மன்றத்தில் பிரெஞ்சுக்காரர் செல்வாக்கு ஏற்படுவதற்கு வசதியாய் அமைந்தது.

இதுவரையில் பிரெஞ்சுக்காரர்களுக்கு நன்மையாகவே எல்லாம் நடந்து வந்தன. டியூப்ளேவின் கொள்கை, அவர் எதிர்பார்த்ததற்கும் மேலாக வெற்றியைக் கொடுத்தது. அவர் ஆதரவிலிருப்பவர்களான முசபர்ஜங்கும், சந்தா சாகிபுவும் முறையே ஹைதராபாது ஆர்க்காட்டுச் சிங்காதனங்களில் வீற்றிருந்தனர். இரண்டு ஆண்டுக்கும் குறைவான குறுகிய காலத்தில், ஒரு சாதாரண அயல்நாட்டு வாணிகக் குழு, தக்காண கருநாடக அரசியல் உச்ச அதிகாரத்தைப் பெறும் அளவுக்கு உயர்த்தப்பட்டுவிட்டது. டியூப்ளேவின் நண்பர்களுக்கும் இது ஓர் அற்புதச்செயலாகவே (Miracle) தென்பட்டது.

அவரது வெற்றியை இறுதியானதாகச்செய்ய வேண்டுமானால், உறுதியான திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் தஞ்சம் புகுந்த முகம்மதலியுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொள்வது டியூப்ளேவுக்கு அவசியமாய் இருந்தது. அந்நகரத்தைத் தாக்குவதற்காக அனுப்பப்பட்ட ஒரு பிரெஞ்சுப் படை, பயனற்ற முயற்சியான தஞ்சாவூரைத் தாக்குவதில் தன் ஆற்றலைச் செலவிட்டது. அதனால், அரச தந்திரம் பயன் பெறுமா என முயற்சி செய்வதற்கு டியூப்ளே முடிவு செய்தார். அவர் அதில் வெற்றியடைந்திருக்கக்கூடும். ஆனால், ஆங்கிலேயர்களின் தலையீட்டால், அவர்களின் உதவியையும் ஊக்கத்தையும் கொண்டு முகம்மதலி தம்முடைய எதிர்ப்பை அதிகப்படுத்தினார்.

டியூப்ளேவின் திட்டம் நிறைவேறும்படி விட்டுவிட்டால் சென்னையில் இருந்த பிரிட்டிஷ்காரர்களின் நிலைமை மிக மோசமாகிவிடும் என்பது, அறிவுக் கூர்மையற்றவர்களுக்கும் விளங்கும். அதிருஷ்டவசமாக ஆங்கிலேயருக்குக் கிட்டிய சாண்டர்ஸ் (Saunders) என்கிற புதிய கவர்னர், 1750ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் பதவி ஏற்றார். அவர் முன்பிருந்தவரைவிட அதிக ஊக்கமுள்ளவராய் இருந்தார். அவரது தலைமையின்கீழ், ஆங்கிலேயர் தமது முழுப்பலத்தையும் போரில் ஈடுபடுத்தினர். தாய் நாட்டு அதிகாரிகளும், ஆபத்தான நிலைமையைப் புரிந்துகொண்டு, தங்களிடமிருந்த எல்லாச்

சாதனங்களுடனும் அவருக்கு உதவி செய்ய முடிவு செய்தார்கள். முறையான அறிவிப்பு மூலம் ஏற்படும் போரோ, அல்லது உறுதியாகக் கூறக்கூடிய பகைமையோ ஐரோப்பாவிலிருந்த ஆங்கில நாட்டிற்கும் பிரெஞ்சு நாட்டுக்குமிடையே இல்லை. எனினும், அவர்கள் இந்தியாவில் சுதேச மன்னர்களின் உதவிப்படையாக, வாழ்வு அல்லது மரணத்திற்காகப் போரிடும் கொள்கையின்மீது, நேரிடையாகவே போரில் ஈடுபட்டார்கள். முகம்மதலியின் உதவிக்கு ஆங்கிலேயர்கள் வருமுன்னரே, டியூப்ளே அவரை அடித்து நொறுக்கியிருந்தால், டியூப்ளேவின் பகைவர்கள் செய்த காலங்கடந்த முயற்சியைப் பயனற்றதாகச் செய்திருக்கலாம். ஆனால், அவர் தம் பகைவர்களின் அரச தந்திரத்தினால் வெல்லப்பட்டார். ஆங்கிலேயர்களின் ஆலோசனையினால் டியூப்ளே ஆரம்பித்த பேச்சுவார்த்தைகளை முகம்மதலி விடாது நடத்திவந்தார். அவருக்கு ஆங்கிலேயர்கள் போதுமான உதவி அனுப்புகிற நிலை ஏற்படும் வரையில் காலத்தைக் கடத்துவதுதான் அதன் முக்கிய நோக்கம். 1751 மே மாதத்தில் திருச்சிராப்பள்ளியை நோக்கி ஒரு பிரிட்டிஷ் படைப்பகுதி செல்லும் வரையில், தாம் ஏமாற்றப்பட்டார் என்பது டியூப்ளேவுக்குத் தெரியவில்லை. அதனால், அந்த இடத்தைப் பிடிப்பதற்காக, லா (Law) என்பவரின்கீழ் ஒரு பிரெஞ்சுப்படையை அவர் அனுப்பினார். ஆனால், லா என்பவர் அவ்வேலைக்குத் தகுதியற்றவராய் விளங்கினார். திருச்சிராப்பள்ளியின் முற்றுகை முடிவில்லாமல் நீடித்தது. ஆண்டு முடிவில், மைசூர், தஞ்சாவூர் மன்னர்களும், மராத்தியத் தலைவரான முராரி ராவும், முகம்மதலியுடனும் ஆங்கிலேயருடனும் சேர்ந்துகொண்டனர்.

இதற்கிடையில், வடக்கில் நிகழ்ச்சிகள் வெகு துரிதமாக நடைபெறலாயின. சென்னையில் சிவில் பணியாளராய் இருந்த ராபர்ட்டுக் கிளைவ் (Robert Clive) என்பவர் இராணுவத்தில் சேர்ந்தார். முன்பே முகம்மதலி குறிப்பிட்டபடி, ஆர்க்காட்டிற்கு ஒரு படையை அனுப்பும் யோசனையை அவர் தெரிவித்தார். திருச்சிராப்பள்ளி எதிரிகள் கையில் விழுவதைத் தடுப்பதற்கு இது நல்ல சாதனம் என்று நினைத்து ஆங்கிலேயக் கவர்னர் இதை அங்கீகரித்தார். ஏனெனில், இவ்விதம் நடந்தால், தலை நகரைக் காப்பாற்றுவதற்காகத் தம் படையின் பெரும்பகுதியைச் சந்தா சாகிபு ஆர்க்காட்டுக்கு அனுப்புவார். இந்த யோசனை அங்கீகரிக்கப்பட்டு இதனைச் செயற்படுத்தும் பணியைக் கிளைவுக்குக் கொடுத்தார்கள். அவர் இருநூறு ஐரோப்பியர்களுடனும், முந்நூறு இந்தியச்

சிப்பாய்களுடனும் சென்று, அதிக எதிர்ப்பில்லாமலிருந்த ஆர்க்காட்டைச் சுலபமாகக் கைப்பற்றினர். அவர் எதிர் பார்த்தபடி, தலை நகரை மீண்டும் பிடிப்பதற்காகத் திருச்சிராப்பள்ளியிலிருந்து ஒரு படையைச் சந்தா சாகிபு அனுப்பினர். ஐம்பத்து மூன்று நாள்கள் வரை, கிளைவ் வீரத்துடன் போராடி, முற்றுகையிட்ட படைகள் பின் வாங்கும் வரையில் (1751 செப்டெம்பர்) அந்நகரத்தைப் பாதுகாத்தார்.

ஆர்க்காட்டைக் கைப்பற்றியதுதான் அப்போரில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஒரு பெரிய சாதனை. போரிடுவதில் ஆங்கிலேயர்கள் மிகச்சிறந்தவர்கள் என்பதை இத்துணிகரமான வீரச்செயல் புலப்படுத்தி, ஆங்கிலேயர்களின் மதிப்பை உயர்த்தி, பிரெஞ்சுக்காரர்களின் மதிப்பைத் தாழ்த்தியது. திருச்சிராப்பள்ளியின் முற்றுகைக்குப் பொறுப்பாளராயிருந்த லா என்னும் பிரெஞ்சு இராணுவ அதிகாரி, கிளைவின் வெற்றியைக் கண்டு ஊக்கமிழந்து ஸ்ரீரங்கம் என்னும் தீவில் அடைக்கலம் புகுந்தார். ராபர்ட்டு கிளைவின் உத்தரவினல், ஆங்கிலேயர்கள் அத்தீவை முற்றுகையிட்டார்கள். டியூப்ளே உதவிப் படைகளை அனுப்பிய போதிலும். 1752, ஜூன் 9-ல், அவை ஆங்கிலேயரிடம் சரணடைந்தன. மூன்று நாள்களுக்குப் பிறகு, லாவும் அவருடைய படை வீரர்களும், ஆங்கிலேயர்களால் கைதுசெய்யப்பட்டார்கள். பிரெஞ்சுக்காரர்களின் கடுந்துன்பத்தைப் பூரணமாக்கும் வகையில், சந்தா சாகிபுவும் சரணடைந்து, தஞ்சாவூர்ச் சேனைத் தலைவரால் கொல்லப்பட்டார்.

டியூப்ளே எதிர் பார்த்தவைகள் எல்லாம் நிறைவேருமல் போய்விட்டன. அவருடைய படைத்தலைவர்களின் தகுதியின்மை காரணமாகவும், நம்ப முடியாத மடத்தனம் காரணமாகவும், ஏறக்குறையத் தம் கைப்பிடியில் சிக்கிய பரிசை அவர் இழக்க நேரிட்டது. அண்மையில் ஏற்பட்ட தோல்வியைக்கண்டு அஞ்சாது அவர் உழைத்தார்; முராரி ராவையும் மைசூர் மன்னரையும் தம் பக்கம் இழுப்பதில் வெற்றி பெற்றுத் தஞ்சாவூர் மன்னரையும் நடுவு நிலைமைக் கொள்கையைப் பின்பற்றும்படி செய்தார்; அதன் பிறகு (1752, டிசம்பர், 31-ல்) திருச்சிராப்பள்ளி முற்றுகையைமீண்டும் ஆரம்பிக்கும் முழு முயற்சியில் ஈடுபட்டார். 1753 முழுவதும், சிறு மோதல்கள் ஏற்பட்டு, இரண்டு பக்கத்திற்கும் வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வந்தன. கடைசி வரையில், திருச்சிராப்பள்ளியைப் பிடிக்கும் எண்ணத்தை டியூப்ளே விடவேயில்லை.

ஆனால், தாய் நாட்டிலிருந்த பிரெஞ்சு அதிகாரிகள் டியூப்ளே மீது வெறுப்படைந்து, அவரை மீண்டும் அழைப்ப தென்று முடிவு செய்தனர். திறமையுள்ள அந்தக் கவர்னரின் மிகச்சிறந்த கொள்கையின் கருத்தை அவர்களால் உணர இயலவில்லை. பிரெஞ்சுத் துருப்புகளின் தோல்வியும், அவரது கொள்கையினால் ஏற்பட்ட பெரும் பொருளிழப்பும், அவர்களை ஆழ்ந்த வருத்தத்திற்குள்ளாக்கின. நிலைமையை ஆராய்ந்து இழந்த புகழை மீண்டும் பெறுவதற்குத் தகுந்த நடவடிக்கை களை எடுப்பதற்காக அவர்கள் கோடயு (Godeheu) என்பவரை அனுப்பினார்கள். 1754-ல், ஆகஸ்டு, 7 வந்திறங்கிய கோடயு டியூப்ளேவுக்குப் பதிலாகப் பதவி ஏற்று, அவரது கொள்கையை மாற்றினார். அவர் ஆங்கிலேயர்களுடன் பேச்சு வார்த்தை ஆரம்பித்து, ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார். ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் சுதேச மன்னர்களின் போரில் தலையிடுவதில்லை என்றும், உடன் படிக்கை ஏற்பட்டபோது அவரவர்களிடம் இருந்த இடத்தை அப்படியே வைத்துக்கொள்வதென்றும் ஒப்புக் கொண்டனர்.

இப்படி டியூப்ளே பிரெஞ்சுக்காரர்களுக்காகப் பெற்ற எல்லா ஆதாயங்களையும் அவர்கள் இழக்க நேரிட்டது. தக்காணத்தில் மாத்திரம், டியூப்ளேவின் கொள்கை சிறிது பலனளித்தது. பிரெஞ்சுக்காரர்களை வெறுத்து, அவர்களைத் தக்காணத்திலிருந்து விரட்ட விரும்பிய பெருங்குடி மக்களின் (nobility) ஏகோபித்த எதிர்ப்பிருந்தும், தம் அசாதாரணமான திறமையாலும் ஆற்றலாலும் புஸ்ஸி என்பார் பிரெஞ்சுச் செல்வாக்கைப் பாதுகாத்தார். கருநாடகத்திற்குத் திரும்பு வதற்கு புஸ்ஸி நினைத்தாலும், தலைநகரில் பயனுள்ள அதி காரத்தைப் பாதுகாக்கும் கொள்கையை நிலையாகக் கையாண்ட டியூப்ளேவினால் அவர் தடுக்கப்பட்டார். மிகுந்த திறமை வாய்ந்த ஒரு கொள்கையின்படி, தம்முடைய படை களுக்குச் செலுத்தவேண்டிய பணத்திற்காக, வடசர்க்காரைத் தமக்குக் கொடுத்துவிடும்படி நைஜாமை புஸ்ஸி தூண்டினார். ஆண்டுக்கு முப்பது இலட்சத்திற்கு மேல் நிலவரி கொடுக்கக் கூடிய முஸ்தாபா நகரம், ஏலூரு, ராஜமகேந்திரம், சிக்கா கோல் ஆகிய நான்கு மாவட்டங்களை அது தன்னகத்தே கொண்டிருந்தது. ஆனால், புஸ்ஸி இவ்வித உறுதியான உரிமையைப் பெற்றிருந்தாலும், கருநாடகத்தில் ஏற்பட்ட ஆபத்து மிக்க சூழ்நிலையில், பிரெஞ்சுக்காரர்களுக்குப் பேருதவியைச் செய்ய அவரால் இயலாமல் போயிற்று.

தக்காணத்திலும் கருநாடகத்திலும் நிகழ்ந்த பிரெஞ்சுக் காரர்களின் பின் வரலாறு சமயம் நேரும்போது விளக்கப் படும். இப்பொருளை விட்டுச்செல்லுமுன், டியூப்ளே தோல்வி யடைந்ததற்குரிய காரணங்களைச் சிறிது கவனிப்போம். அக் காலத்திலிருந்தவர்களும், அதற்குப் பின் வந்த வரலாற்று ஆசிரியர்களும் கொண்டிருந்த மாறுபட்ட எண்ணங்களை விவாதிப்பதென்பது, இந்நூலுக்கு அப்பாற்பட்ட தொன்று கும். இப்பிரச்சினையைப் பற்றிய விருப்பும் வெறுப்பும், சம்பந்தப்பட்ட செய்திகளைப் பற்றிப் போதுமான அளவு இல்லாத தகவல்களும் நம்மை ஒரு முடிவுக்கு வர இயலாதபடி செய்கின்றன. அதனால், முழு நிலைமையையும், பரந்த நோக்குடன் மிக விரிவாகப் போகாமல், பொதுப்படையாகவே ஆராய்வதற்கு நம்மை நாம் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்.

தாய் நாட்டு அதிகாரிகள், டியூப்ளேயின் கொள்கையி லுள்ள திறமையைப் பாராட்டாமலும், உதவிக்கு வேண்டியவைகளை அனுப்பாமலும் இருந்ததே, டியூப்ளேவின் தோல்விக்குரிய உடனடியான முக்கிய காரணம் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். இதற்கு டியூப்ளேதான் காரணமென்று குறிப்பிடலாம். ஏனெனில், அவர் தம் மேலதி காரிகளை நம்பிக்கைக்குரியவர்களாக வைக்காமலும், காலங் கடந்து செல்வதற்கு முன்னால் அவற்றின் விவரங்களை எடுத்து கூறாமலும் இருந்ததே முக்கிய காரணமாகும். இந்தியக் கொள்கைகளுக்கு வேண்டிய அளவு பிரெஞ்சு அரசாங்கம் கவனம் செலுத்த இயலாமை, அல்லது விருப்பமில்லாமை தவிர, அதன் பொதுக்கொள்கையில், இது ஒரு சிறிய அல்லது முக்கியமல்லாத பாகம் என்கிற கருத்தும் இருந்தது என டியூப்ளே நம்பினது உண்மையானால், இது அவரிடம் இயற்கை யிலேயே அமைந்திருந்த திடநம்பிக்கையையே காட்டுகிறது. ஏனெனில், பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள், இவற்றை மெய் யெனக் காட்டின. ஏனெனில் இந்தியாவிலிருந்த ஆங்கிலப் பண்டக சாலைகளின் முக்கியத்துவத்தையே குறிக்கோளாகக் கொண்டிருந்ததாகிய இங்கிலாந்திலிருந்த கிழக்கிந்தியக் கம் பெனியைப் போல, ஒரு தனிக்குழுவாய் இல்லாமல், பரந்த அரசியற் கொள்கையின்மீது எழுப்பப்பட்டு, அரசாங்கக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுப் பிரெஞ்சு வாணிகக் குழு இருந்தது. உண்மையில் இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரோடு

ஓர் உடன்படிக்கையைச் செய்யத் தூண்டியதற்கு அமெரிக்காவில் சிக்கல்கள் ஏற்படுமோ என்கிற பயமே ஒரு காரணம் என்று சொல்லலாம்.

இரண்டாவதாக, டியூப்ளே அதிக ஆசைப்பட்டு தம் படையைத் தக்காணத்திலும் கருநாடகத்திலும் பிரித்து வைத்ததுதான் அவர் தோல்விக்கு உண்மையான காரணம் என்று சொல்லப்படுகிறது. இது முழுவதும் உண்மையென்று ஒப்புக்கொள்வதற்கில்லை. 1754ஆம் ஆண்டின் முன் பகுதியில் இந்நிகழ்ச்சியை ஒரு முடிந்த தீர்மானத்திற்குக்கொண்டு வருவதற்குத் தேவையான அளவு டியூப்ளேயிடம் படைப் பலம் இருந்தது. முகம்மதலியின் உதவிக்கு ஆங்கிலேயர்கள் விரைந்த பிறகுங்கூட, பிரெஞ்சுக்காரர்களைவிட அவர்கள் அதிக அளவில் இருந்தார்கள் என்றோ, அல்லது போர்த் திறமையில் சிறந்து விளங்கினார்கள் என்றோ நியாயமாகக் கருதுவதற்கில்லை.

சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளைக்கொண்டு கருத்தூன்றி ஆராயும்போது, இரண்டு காரணங்களாலேதான் டியூப்ளே தோல்வியுற்றார் என்பது தெரியும். அவர் தம் விளையாடிய விளையாட்டில் இருவர் விளையாட முடியும் என்பதையும் இழந்த தம் செல்வாக்கைப் பெற ஆங்கிலேயர்கள் டியூப்ளேயின் கொள்கையைப் பின்பற்றக்கூடும் என்பதையும் அறியவில்லை. அப்படி அறிந்திருந்தால், ஆங்கிலேயர்கள் முகம்மதலிக்கு வேண்டிய உதவியை அனுப்புவதற்கு முன்னரே, முகம்மதலி விரும்பும் ஒரு வித ஏற்பாட்டை டியூப்ளே ஏற்றிருக்க வேண்டும்.

இரண்டாவதாக, பிரெஞ்சுப் படைத் தலைவர்களின் தகுதியின்மை காரணமாக ஆரம்பத்தில் அவர் செய்த தவற்றைத் திருத்த முடியாமல் போய்விட்டது. கருநாடக நிகழ்ச்சிகள், சூழ்நிலையால் மாத்திரமன்றி, பெரும்பாலும் பண்புகளாலேயும் வெற்றியடைந்தன என்ற உண்மையை மறுப்பது தவறு. கிளைவின் புகழ் பெற்ற தனித்திறமை, துணிவுள்ள தாக்குதல் ஆகியவை ஒரு பக்கமும், உறுதியின்மை, ஊக்கமின்மை ஆகியவைகளைக் கொண்டலாவும் அவர் தம் சகாக்களும் மற்றொரு பக்கமும் சேர்ந்து அப்பிரச்சினைகளை முடிவு செய்தனர். ஒப்பற்ற இராணுவத்திறமையைப் பெற்றிருந்த கிளைவைப் போன்ற ஒருவரை டியூப்ளே பெற்றிருந்தால், பிரெஞ்சுக்காரர்களின் இந்தியவரலாறு வேறு விதமாய்

இருந்திருக்கும். 1751ஆம் ஆண்டின் ஆரம்பத்திலாவது, அல்லது இறுதியிலாவது டியூப்ளே வெற்றிகரமாகப் போரை முடித்திருந்தால், இந்தியாவில் பிரெஞ்சுப் பேரரசை உண்டாக்கியவர் எனப் பிரெஞ்சு அரசாங்கம் அவரைப் போற்றிப் புகழ்ந்து, அவருக்கு வேண்டிய பணத்தையும் மனிதர்களையும் அனுப்பியிருக்கும். இதைச் செய்யத் தவறியதால், அவருக்கு அவமானமும் பழிச்சொல்லும் வந்து சேர்ந்தன. அவர் மேற்கொண்ட காரியம் இன்னல் நிறைந்தது. அதில் வெற்றியடைந்தால், உலகம் ஒரு மனிதனை மாவீரன் என்கிற அளவுக்கு உயர்த்திப் புகழும்; ஆனால், தோல்வியடைந்தாலோ, அவனைப் பிடிவாதக்காரன் என்றும், தவறான வழியில் செல்கின்ற துணிச்சலுடையவன் என்றும் தூற்றும்.

## வங்காளத்தில் ஆங்கிலேயரின் வெற்றி

ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையில் நிலவிய சமாதானமானது, ஐரோப்பாவில் ஏழு வருடப்போர் (Seven Years War) ஆரம்பமாகும் வரையில், அமைதியான முறையில் நீடித்தது. 1756ஆம் ஆண்டின் இறுதியில் இப்போரின் செய்தி இந்தியாவுக்கு எட்டியது. ஆஸ்திரிய வாரிசுப் போரில் நடந்தது போலவே, இந்த ஐரோப்பியப் போரிலும் இங்கிலாந்தும் பிரான்சும் பகைமை கொண்டதால் இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் விருப்ப மில்லாமல் போரில் ஈடுபட நேர்ந்தது.

இவ்விரண்டு போர்களுக்கும் மத்தியிலிருந்த இடைக் காலத்தில், ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள் ஆகியவர்களின் நிலைமை முதலாவதாக, முன்பு கூறியபடி, கருநாடகத்தில் நடந்த போரினாலும், இரண்டாவதாக, இனி நாம் பார்க்கிறபடி, வங்காளத்தில் நடந்த நிகழ்ச்சிகளாலும் மிகவும் மாறிவிட்டது.

தக்காணத்தைப்போல வங்காளமும், டில்லியிலிருந்த முகலாயப் பேரரசின் மேலதிகாரத்தைப் பெயரளவில் ஒப்புக் கொள்ளும் ஒரு சுபேதாரின் கீழ் இருந்தாலும், நடை முறையில் அவர் ஒரு சுதந்தர அரசராய் இருந்தார். தவிர தக்காணத்தைப்போலவே, வங்காளமும் உறுதியான அல்லது நிலையான அரசியலைப் பெற்றிருக்கவில்லை. சதிகளும் புரட்சிகளும் ஒவ்வொரு நாளும் ஏற்பட்டன ; இலஞ்சமும் திறமையின்மையும் சேர்ந்து ஆட்சியைப் பலவீனப்படுத்திவிட்டன.

தமக்கு எசமானரான நவாபு சர்பராஸ் கானுக்கு (Nawab Sararaz kham) எதிராய் நடந்த புரட்சியில் வெற்றி பெற்று, 1740-ல் சிங்காதனமேறிய அலிவர்தி கான் என்னும் வங்காள நவாபுவும், தாம் ஒரு சிறந்த உறுதியுள்ள அரசர் என்பதை நிரூபித்தார். அடிக்கடி அத்து மீறி வந்து, வங்காள மக்களுக்குச் சொல்லொணுத் துன்பங்களிழைத்த மராட்டியக் கொள்ளைக்காரர்களுடன் போரிடுவதிலேயே அவர் ஆட்சியின் ஆற்றல் செலவழிக்கப்பட்டது. இறுதியில் ஒரிஸ்ஸாவின் ஒரு பாகத்திலிருந்து வரும் வருமானத்தையும் சொத்து வரிக்காக, ஆண்டுக்குப் பன்னிரண்டு இலட்ச ரூபாயையும் (1751 மே அல்லது ஜுன்) மராத்தியர்களுக்கு விலையாகக் கொடுத்து, சமாதானத்தை அவர் பெற வேண்டியதாயிற்று. அவருடைய கடைசி ஐந்தாண்டு ஆட்சியில், அமைதி ஒழுங்கான ஓர் அரசமைப்பு ஆகியவற்றை உண்டாக்கப் பாடுபட்டு, அதில் தோல்வியுற்ருர்.

அத்தோல்விக்கு நவாபுவின் உடல்நலமின்மை காரணமாய் இருந்தாலும், அவருக்குப் பின் வரும் வாரிசு சம்பந்தமாய் இருந்த தெளிவில்லாத நிலைமையே அதற்கு முக்கிய காரணமாகும். அலிவர்தி கானுக்கு மைந்தர்கள் இல்லை. அவர் தம் புதல்வியர் மூவரும் அவர் தம் சகோதரரின் குமாரர் மூவருக்கு மணமுடித்து வைக்கப்பட்டனர். அவர் தம் இளைய மகளின் மகனுரான சிராஜ் உத்தௌலா என்பவர் வாரிசாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இத்திட்டம், தக்காணத்திலும், பூர்ணியாவிலும் கவர்னர்களாய் இருந்த அவர்தம் மற்ற மருமக்கள் இருவருக்கும் பிடிக்கவில்லை. அதனுல், சூழ்ச்சிக்காரர்களின் சதித்திட்டங்களுக்கு அவர்கள் ஒரு கருவியாக மாற்றப்படுவதைத் தடுக்க இயலாமற்போய்விட்டது. ஆட்சியிறுதியில் அவ்விருவரும் இறந்தொழிந்தாலும், கசிதி பீகம் (Ghasiti Begam) என்கிற முன்னவரின் விதவையும், சௌகத் ஜங் (Shaukat Jang) என்கிற பின்னவரின் மகனும், அவர்கள் கொள்கையைக் கடைசி வரையில் பின்பற்றினர். அரசகுமாரியின் பெயரில் உண்மையில் நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்த ராஜவல்லபர் (Rajballabh) என்கிற திவான், கசிதியை ஆதரித்தார்.

இவ்வளவு இடர்ப்பாடுகளுக்கிடையில், 1756ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 9ஆம் தேதியன்று, அலிவர்தி கான் இறந்தார். எவ்விதச் சிரமமுமின்றிச் சிராஜ் உத்தௌலா சிங்காதனம் ஏறினர். எதிர்ப்பில்லாமல் அவர் வழி உரிமையைப்

பெற்றாலும், அவருடைய துன்பங்கள் அதிகமாயின. ராஜ வல்லபர், சௌகத் ஜங் என்பவர்களின் விரோத நடவடிக்கைகளுடனும் ஆங்கிலேயருடனும் அவர் ஒரு கடுஞ் சச்சரவில் ஈடுபட நேரிட்டது.

அலிவர்தி கான் நோயுற்று, சிராஜ் உத்தௌலா ஆட்சியை நடத்தியபோதும், நவாபுவிற்கும் ஆங்கிலேயருக்கு மிடையே இருந்த உறவு சுமுகமாய் இல்லை. பிரெஞ்சுக் காரருக்கு எதிரான ஒரு முன்னேற்பாடாக, ஆங்கிலேயர்கள் அண்மையில் கல்கத்தாவைச்சுற்றி எழுப்பிய அதிகப்படியான கோட்டைகளே, அப்பூசலுக்கு முக்கிய காரணமாய் இருந்தன. அப்படிப்பட்ட செய்கைகளுக்கெதிராக நவாபு கொண்டிருந்த ஐயத்தைத் தூண்டுவதற்காகவே அண்மையில் கரு நாடகத்தில் நடந்த நிகழ்ச்சிகள் திட்டமிட்டுச் செய்யப்பட்டன. அவை செய்யப்பட்ட விதம் நவாபுவின் கோபத்தை அதிகப் படுத்தியது. ஆங்கிலேயர், பழைய கோட்டைகளின்மீது பீரங்கிகளை ஏற்றியது மல்லாமல், நவாபுவின் உத்திரவில்லா மலும், அவரைக் கலவாமலும் புதிய கோட்டைகளைக் கட்ட ஆரம்பித்தனர். உண்மை யாதெனில், மற்றவர்களைப்போலச் சிராஜ் உத்தௌலாவிற்கும் சிங்காதன மேறும் வாய்ப்புக் கிடைக்குமென நினைத்தும், எதிர்ப்புக் கட்சியின் தலைவரான ராஜவல்லபர் என்பவருக்கு நிச்சயமாக வெற்றி பெறும் வாய்ப்பு உள்ளதென நினைத்தும், அவர் தயவை நாடுவதில் ஆங்கிலேயர் ஊக்கங் காட்டினர். கல்கத்தாவிலிருந்த தம் சுற்றத்துடனும் பணத்துடனும் தப்பி ஓடிய ராஜவல்லபரின் குமாரரான கிருஷ்ணதாஸ் என்பவருக்குக் காசிம்பஜாரி லிருந்த வாட்ஸ் (Watts) என்னும் அவர்கள் பிரதிநிதி கேட்டுக் கொண்டபடி, அடைக்கலம் அளிக்க ஆங்கிலேயர்கள் ஒப்புக் கொண்டதன் காரணத்தை இது விளக்குகிறது. ஆங்கி லேயருக்கெதிராகச் சிராஜ் உத்தௌலாவின் கோபத்தைக் கிளறுவதற்காகவே அது செய்யப்பட்டது என்பது அவர் களுக்குத் தெரியும். சிராஜ் உத்தௌலாவிற்கு எதிராக ராஜ வல்லபர் செய்யும் சூழ்ச்சியில் ஆங்கிலேயருக்கும் பங்குண்டு என்பதை அவர் தெரிந்துகொண்டார் என்பதில் ஐயமில்லை.

அக்காலத்தில் வாழ்ந்த ஓர்ம் (Orme) என்னும் வரலாற்று ஆசிரியர் பின் வருமாறு எழுதுகிறார்: 'அலிவர்தி கான் நோயிலிருந்து மீளுவார் என்ற நம்பிக்கை இல்லை. அதனால், நவாஜிஸ் (Nawajis) என்பவரின் விதவை (அஜீத் பீகம்), முக்ஸாதாபாதை (மூர்ஷிதாபாது என்னும் தலைநகரம்) விடுத்து, நகரத்திற்குத் தெற்கில் இரண்டு மைலில் இருந்த

மோட்டாகில் (மோதிஜில்) என்கிற ஒரு தோட்டத்தில் 10,000 மனிதர்களுடன் தங்கியிருந்தாள்; அவள் சுரோஜோ தௌலாவை (சிராஜ் உத்தௌலா) எதிர்த்து வெற்றி பெறுவாள் எனப் பெரும்பான்மையினர் நினைத்துக் கூறினர். அதனால், வாட்ஸ் (Mr. Watts) என்பவர், அவளுடைய மந்திரிக்கு உதவி செய்யத் தயாராயிருந்தார்; அவர் (மந்திரி) கோரியவைகளைக் கொடுக்கும்படி கல்கத்தா மாகாணத்திற்கு ஆலோசனை கூறினார்.'

ஆங்கிலேயர்கள் கஜிதி பீகத்தின் கொள்கையை ஆதரித்தார்கள் என்ற வதந்தி மூர்ஷிதாபாதில் பரவியது. காசிம் பஜார் பண்டகசாலையிலிருந்த டாக்டர் போர்த்து (Dr. Forth) என்பவர், அலிவர்தி கான் இறப்பதற்கு ஏறக்குறையச் சுமார் பதினைந்து நாள்கள் இருக்கும்போது அவரைச் சந்தித்தார். அவர் நவாபுவுடன் பேசிக்கொண்டிருந்தபோது, சிராஜ் உத்தௌலா அவ்விடம் வந்து, கஜிதிபீகத்திற்கு உதவி செய்ய ஆங்கிலேயர்கள் ஒப்புக்கொண்டுள்ளார்கள் என்ற செய்தி அவருக்குக் கிடைத்திருப்பதாகத் தெரிவித்தார். இறக்கும் நிலையிலிருந்த நவாபு, இதைப்பற்றி போர்த்தை விசாரித்தார். போர்த்து இதை மறுத்ததுமன்றி, இந்திய அரசியலில் தலையிடும் நோக்கம் எதுவும் இல்லை என்று தம் நாட்டின் சார்பாக உறுதியும் கூறினார்.

கோட்டை கட்டினது காரணமாக, முன்பே ஆங்கிலேயரிடம் வெறுப்படைந்திருந்த சிராஜ் உத்தௌலாவின் மனத்தில், இவ்வித மறுப்பு ஒரு மாறுதலும் செய்யவில்லை. அவர் சிங்காதனம் ஏறியதும், காசிம் பஜாரில் இருந்த ஆங்கிலத் தலைவர் வாட்சுக்கு மிகவும் விளக்கமாகத் தம் நோக்கங்களைத் தெரிவித்தார். ஆங்கிலேயர்களை ஒரு வாணிகக்குழு எனத் தாம் நம்புவதாகவும், அப்படியிருந்தால் அதை வரவேற்பதாகவும் நவாபு குறிப்பிட்டு, ஆனால் அண்மையில் அவர்கள் கட்டிய கோட்டை கொத்தளங்களைத் தாம் ஆதரிக்கவில்லை என்றும், அவைகளை உடனடியாக இடித்துத் தள்ளிவிட வேண்டும் என்றும் வற்புறுத்தினர். இதைப்போன்ற கட்டளையுடன், ராஜவல்லபர் குடும்பத்தினரை ஒப்படைக்கும்படியும் கேட்டுக் கல்கத்தாவிற்கு இரண்டு தூதுவர்களை நவாபு அனுப்பினார். ஆனால், அவர்கள் ஆங்கிலக் கவர்னரால் மரியாதையின்றித் திருப்பி அனுப்பப்பட்டார்கள். கடைசியில் சிராஜ் உத்தௌலாவிற்கெதிராக ராஜவல்லபர் வெற்றி பெறுவார் என்று திடமாக நம்பியதுதான் இவ்வியப்பூட்டும் செய்கைக்குக் காரணம் என்று சொல்லலாம்.

பதவியில் அமர்ந்தவுடன், சிராஜ் உத்தௌலாவின் பாது காப்பைப் பயமுறுத்திய உள் நாட்டு ஆபத்தைப் போக்கு வதுதான் அவருடைய முதல் பிரச்சினையாய் இருந்தது. வரலாற்றில் சரிவர ஒப்புக்கொள்ளப்படாத, திறமை மிக்க ஒரு திட்டத்தின் மூலம், இரத்தம் சிந்தாமல், கஜிதி பீகத்தைத் தம் அரண்மனைக்குக் கொண்டு செல்லும் முயற்சியில் வெற்றி பெற்றார். ஆங்கிலேயர்கள் தங்கள் தவற்றை உணரத் தொடங்கினார்கள்; தங்களுடைய தவறான நடத்தைக்குப் பல காரணங்களைக் கூறி மன்னிக்குமாறு வேண்டினார்கள். ஆனால், பொருளற்ற வெற்று உறுதி மொழியினால் சிராஜ் உத்தௌலா திருப்தியடையவில்லை. புதியனவாகக் கட்டப்பட்ட கோட்டை களைத் தகர்த்தெறிய வேண்டும் என மறு முறையும் கட்டளை யிட்டுக் கல்கத்தாவின் கவர்னரான டிரேக்கு (Drake) என்பவ ருக்குக் கடிதம் எழுதினார். அச்சமயத்தில் அவரால் அதை விட அதிகமாக எதையும் செய்ய இயலவில்லை. ஏனெனில், கஜிதி பீகம் அடக்கப்பட்டாலும், அவருக்கு எதிராக நடத்தப் படும் புரட்சிச் சதித் திட்டங்களுக்குப் பூர்ணியாவின் கவர்ன ரான சௌகத் ஜங் நடுநாயகமாய் விளங்கினார். ஆங்கிலேய ருக்கெதிரான உறுதி வாய்ந்த ஒரு கொள்கையைப் பின் பற்றுவதற்கு முன்பு, இந்த அபாயத்தை நீக்க வேண்டும் என்கிற சரியான முடிவுக்கு நவாபு வந்தார். அதைத் தொடர்ந்து அவர் பூர்ணியாவை நோக்கிப் புறப்பட்டார். ராஜ் மஹாலை (Rajmahal) அடைந்ததும், கவர்னர் டிரேக்கின் பதில் அவருக்குக் கிடைத்தது. அடக்கமான மொழியில் எழுதப் பட்டிருந்தாலும், நவாபு விருப்பப்படி நடப்பார் எனக் கூறு வதற்குரிய சான்றுகள் அதில் இல்லை. உரிய சமயத்தில் ஆங்கிலேயருக்கு எதிரான போரைத் தொடங்கும் எண்ணத் துடன் தம் எண்ணத்தை மாற்றி நவாபு மூர்ஷிதாபாதிற்குத் திரும்பினார். சௌகத் ஜங்கின் விரோதத்தைக் காட்டிலும் நெடுநாளைய பகைவர்களான ஆங்கிலேயருக்குத்தான் அதிக மாகப் பயப்பட வேண்டும் என்பதை டிரேக்கின் கடிதம் அவருக்கு உணர்த்தியது.

இவ்வித முடிவைச் செய்தவுடன், சிராஜ் உத்தௌலா என்றுமில்லாத ஆற்றலுடன் செயலில் இறங்கினார். ராஜ் மஹாலிலிருந்து திரும்பி வரும் பயணம் மே மாதம் 20ஆம் தேதி தொடங்கியது. ஜூன் 1ஆம் தேதி அவர் மூர்ஷிதா பாதை அடைந்து, காஸிம் பஜாரிலிருந்த ஆங்கிலேயரின் பண்டகசாலையை ஜூன் 4ஆம் தேதி கைப்பற்றினார்; கல்கத் தாவை நோக்கி ஜூன் 5ஆம் தேதியன்று அதை அடைந்தார்.

மூன்று நாள்களுக்குப் பிறகு, கவர்னர் டிரேக்கும், படைத் தளபதியும், மற்றும் முக்கிய ஆங்கிலேயர் பலரும் அக் கோட்டையைக் கைவிட்டு, கப்பலில் ஏறி, தம்மைப் பாதுகாத் துக்கொண்டனர். மறுநாள், அதாவது ஜூன் 20-ல், வில்லியம் கோட்டையும், சிறிது எதிர்ப்புக்குப் பின், சிராஜ் உத்தெள லாவினிடம் சரணடைந்தது.

ஹால்வெல்லின் (Holwell) கூற்றில் பெரும்பாகத்தை வகித்த இருட்டறைத் துயரச் சம்பவத்தால் (Black Hole episode) கல்கத்தாவைக் கைப்பற்றிய நிகழ்ச்சியானது வரலாற்றில் என்றும் மறக்க இயலாததாய் இருக்கும். அவர் கூற்றின்படி இருட்டறை என்று சொல்லப்பட்ட 18 அடி நீளமும், 14 அடி 10 அங்குலம் அகலமும் உள்ள ஒரு சிறு அறையில் 146 ஆங்கிலக் கைதிகளும் இரவு முழுவதும் அடைக்கப்பட்டார்கள். 123 பேர் மூச்சுத்திணறலினால் இறந் தனர். அத்துன்பம் நிறைந்த கோடைக்கால இரவின் கதை யைச் சொல்வதற்குப் பரிதாபத்திற்குரிய இருபத்து மூவர் மாத்திரம் உயிரோடிருந்தனர்.

இக்கதை உண்மையன்றென்பது தகுந்த ஆதாரங்களின் மீது நம்பப்படுகிறது. இருட்டறையில் கைதிகளுள் சிலர் அடைக்கப்பட்டனர் என்பதையும், அவர்களுள் சிலரும், போரில் காயப்பட்டவர்களும் அங்கே இறந்தார்கள் என்பதை யும் நாம் உண்மை என்று நம்பலாம். கைதிகளின் எண்ணை மிகைப்படுத்திக்காட்ட வேண்டும் என்ற திட்டத்திற்குத் தகுந்தவாறு செய்யப்பட்ட வருந்தத்தக்க விவரங்கள், ஹால் வெல்லின் திறமை மிகுந்த கற்பனையில் உதித்தவை என நிச்சயமாகக் கூறலாம். ஏனெனில், அக்கதைக்கு அவரே முக்கிய ஆதாரமாயிருந்தார். எப்படியிருந்தபோதிலும், அச் சம்பவத்திற்குச் சிராஜ் உத்தெளலா எவ்வழியிலும் காரண மல்லர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர்.

மாணிக்சந்து என்கிற படைத்தலைவரிடம் கல்கத்தாவை ஒப்படைத்து, மூர்ஷிதாபாதிற்குச் சிராஜ் உத்தெளலா திரும் பினார். இதற்கிடையில் டில்லியில் பெயரளவில் முகலாயப் பேரரசராய் இருந்தவரிடமிருந்து தம்மை வங்காளத்தின் சுபேதாராகச் செய்யும் ஒரு முறையான அரசக் கட்டளை யைப்பெற்று, ராஜப் பிரதிநிதியாய் இருப்பதற்கான முயற்சி களைச் செளகத் ஜங் பகிரங்கமாகவே செய்தார். வெறுப்புற்ற

வங்காளத் தலைவர்களான ஜகத்சேத்து என்னும் பாங்கர், மீர்ஜாபர் என்கிற படைத்தலைவர் ஆகியவர்களின் உதவியில் அவர் அதிக நம்பிக்கை கொண்டிருந்தார். ஒரு பொதுத் திட்டத்தை எல்லோரும் ஒப்புக்கொள்ளுமுன்னர், சிராஜ் உத்தௌலா, சௌகத் ஜங்கின்மேல் படையெடுத்து அவரைத் தோற்கடித்துக் கொன்றார்.

வயதில் சிறியவராயும் அனுபவமற்றவராயும் இருந்த நவாபு, தாம் சிங்காதனமேறிய ஒரு சில மாதங்களுக்குள் ஆற்றல் வாய்ந்த பகைவர் மூவரை ஒழித்தார் என்றால், அது ஒரு பெரிய காரியந்தான். நன்கு சிந்திக்காதவர்கள், எதிர் காலத்தைப்பற்றி மிகுந்த திருப்தியுடன் இருப்பார்கள். அதைப்போலவே நவாபுவும், தம் பாதுகாப்பிற்கு ஆபத்தில்லை எனத் தவறாக நினைக்கலானார். ஆனால், உண்மையில் அவர் ஒரு ராஜதந்திரியாய் இருந்தால், வரப்போகிற தொல்லைகளையும் அபாயங்களையும் அவர் அறிந்திருக்க வேண்டும்.

உதாரணமாக, முதல் தோல்வி ஏற்பட்ட உடனே இழந்ததைப் பெறுவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யாமல் ஆங்கிலேயர்கள், வங்காளத்தை விட்டுச் சென்று விடுவார்கள் என எதிர் பார்ப்பது மிகவும் முட்டாள்தனமானது. எப்படியென்றால், எண்ணிக்கையில் குறைவாய் இருந்தாலும், கடலில் இருப்பது நாவாபுவுடன் நடக்கும் எந்தப் போரிலும் மிகுந்த அனுகூலத்தைக் கொடுத்தது; ஆங்கிலேயர்கள் வலுவாகத் தாக்கப்பட்டபோது, பின் வாங்கிச் செல்ல அது உதவியாய் இருந்தது; அதுவுமன்றி, தாய் நாட்டிலிருந்தாவது அல்லது இந்தியாவிலிருந்த மற்றக் குடியேற்றங்களிலிருந்தாவது புதிய சாதனங்களைப் பெறுவதற்கும் அது உதவியாய் இருந்தது. இந்த உண்மை முழுவதையும் நவாபு அறிந்திருந்தால், ஆங்கிலேயரை எப்பொழுதும் அடக்கி வைத்திருப்பதற்காகக் கல்கத்தாவின் மீதிருந்த பிடியை அவர் விடாமலிருந்திருப்பார்.

அவர் நாட்டில் அமைதியிருந்தால், சிலசமயம், நவாபு இந்தப் பிரச்சினையைக் கவனத்துடன் சிந்தித்து, தகுந்த நடவடிக்கைகளை எடுத்திருப்பார். ஆனால், அவர் நாடு, கொள்ளை நோயின் இருப்பிடமாய்த் திகழ்ந்தது. மற்ற மாகாண அரசுகளைப் போலவே, வங்காளமும், நாட்டை உறுதி பெறச் செய்வதற்கும் நிலைபெறச் செய்வதற்கும் வேண்டியவற்றைப்

பெற முடியாமலிருந்தது. அண்மையிலேதான், அது பாதிச் சுதந்தரம் அடைந்த நாடாய் விளங்கியது; அரசரை விரும்பக் கூடிய சிறந்த வழக்கமும் அன்பும் மக்களிடம் இல்லை. டில்லிப் பேரரசருக்குப் பெயரளவில் இருந்த (theoritical powers) அதிகாரங்கள், அதுவரையில் நிலைத்திருந்தன; சௌகத் ஜங்கின் நிகழ்ச்சி, அதை எப்படி நடைமுறைக்கு உபயோகப் படுத்தலாம் என்பதைக் காட்டிற்று. பாமர மக்களும், புரட்சி களைக் கண்டு வெறுப்புற்றதால், அரசாங்க மாற்றத்தில் அதிக கவனம் கொள்ளவில்லை; செல்வாக்குள்ள தலைவர்கள், தங்கள் சொந்த நலனைக் கருதிக் கொள்கைகளை அமைத்துக் கொண்டார்கள். தேசீய இனவுணர்ச்சியையோ, தேசபக்தி யையோ அவர்கள் உணர்ந்ததில்லை. தனிப்பட்ட முறையில் அரசருக்கு விசுவாசமாக இருப்பதுதான், அக்கால ஆட்சியின் அடிப்படையாய் இருந்தது. அது சிராஜ் உத்தௌலாவிற்கு இல்லை. அவர் புரிந்த கொடுமைகளைப் பற்றியும், களியாட்டங் களைப்பற்றியும், அவர் பகைவர்கள் கட்டிவிட்ட கதைகள் உண்மையல்லாவிட்டாலும், அவர் இன்பத்தை விரும்புகின்ற, கவலையற்ற, முரட்டுக் குணமுள்ள இளைஞர் என்றும், அவர் காலத்தின் சிறந்த படைப்பு என்றும் நாம் அவரைக் கூறலாம். பதினைந்து வயது இளைஞராய் இருந்தபோது, அலிவர்தி கானை வேண்டுமென்றே எதிர்த்தது, மோதிஜில்லில் நடந்த குடிப் போட்டி, பட்டப்பகலில் பொதுத் தெருவில் ஹுசேன் குலிகான் என்பவரைக் கொலை செய்தது ஆகியவைகளைப் போன்ற அவர் வாழ்க்கை நிகழ்ச்சிகளே இதை நிரூபிக்கப் போதுமானவை. அவைகளை நாம் மன்னித்து விட்டுவிட் டாலும், இளைய நவாபுவிடம் அன்பு அல்லது நம்பிக்கை ஏற்படுத்துவதற்கு அவை உதவியாய் இரா. நெடுங்காலமாய் இருக்கும் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்தவராக, அல்லது பல ஆண்டுகளாக நிலைபெற்ற ஓர் அரசாங்கத்தை ஆள்பவ ராக இருந்தாலாவது, அவருடைய தவறுகள் அவருக்கு அழிவை' உண்டாக்கியிரா. அவர் காலத்தின் சூழ்நிலைகள், அவரது இளமை, அனுபவமில்லாமை ஆகியவை, வெறுப் புக்கும் சதிக்கும் ஊக்கமளித்தன; அவருடைய குணமாவது, அல்லது ஆளுமையாவது, அவற்றைப் போக்க உதவவில்லை.

தோல்வியுற்ற ஆங்கிலத் தலைவர்கள், வங்காளத்திலிருந்த நிலைமையையும் நவாபுவின் சேனை வலிமையையும் நன்கு உணர்ந்தவர்களாதலால், உள்ளூரிலிருந்த நிலையைத் தங் களுக்குச் சாதகமாகக் கொண்டு, தாங்கள் இழந்த நிலையை மீண்டும் பெற முயற்சி செய்தார்கள். கல்கத்தா வீழ்ச்சிக்

குப்பின், அவர்கள் பல்ட்டா (Fulta) என்ற இடத்தில் தஞ்சமடைந்தார்கள். அவ்விடத்திலிருந்து நவாபுவின் முக்கிய விரோதிகளுடன் அவர்கள் சதி செய்ய ஆரம்பித்தார்கள். சிங்காதனத்தைப் பெறச் சௌகத் ஜங் செய்த முயற்சிகள் அவர்களுக்குப் புதிய ஊக்கத்தைக் கொடுத்தன. அவர் சிராஜ் உத்தௌலாவைத் தோற்கடிப்பார் என்கிற நினைப்புடன் ஆங்கிலேயர்கள் அவருக்கு ஒரு கடிதம் வரைந்து, அதனுடன் வெகுமதியையும் அனுப்பினார்கள். அவர்களின் நம்பிக்கை எதிர்பாராத விதமாகத் தோல்வியடைந்தவுடன் கல்கத்தாவின் அதிகாரிகளான மாணிக் சந்து (Manikchand) என்பவரையும், அமிசந்து (Omichand) என்கிற ஒரு பெரிய நகர வணிகரையும், ஜகத் சேத்து (Jagat Seth) என்கிற பாங்கரையும், மற்றும் நவாபுவின் மன்றத்திலிருந்த பெரிய தலைவர் பலரையும், தங்கள் கொள்கைகளை ஒப்புக்கொள்ளும் படி செய்தார்கள். அதே சமயம், கல்கத்தாவில் தங்களுக்கிருந்த வாணிகச் சலுகைகளைத் திரும்பத் தருமாறும், நவாபுவை வேண்டிக்கொண்டார்கள். இவ்வேண்டுகோளை நவாபுவின் ஆலோசகரும் ஆதரித்தனர். ஆங்கிலேயருடன் ஒத்துப்போவதற்கு நவாபு சம்மதம் தெரிவித்தார்.

இதற்கிடையில் போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் சென்னை மன்றம் செய்யத் தொடங்கியது. கல்கத்தா பிடிக்கப்பட்டது என்ற செய்தி அவர்களுக்கு எட்டியவுடன் அவர்கள் ஒரு பெரிய போர்ப் படையை அனுப்ப முடிவு செய்தார்கள். அதிருஷ்டவசமாக, பிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராகத் திரட்டப்பட்ட தகுந்த ஆயுதங்களுடன் கூடிய ஒரு கப்பற்படையும் சேனையும் அவர்களுக்கு உடனே கிடைத்தன. சிறிய விவாதத்திற்குப் பிறகு, கிளைவ் கப்பற்படைத் தலைவர் வாட்சன் தலைமையின்கீழ் அப்படையை அனுப்புவதென்பது தீர்மானிக்கப்பட்டது. அப்படை அக்டோபர் 16-ல் புறப்பட்டு, டிசம்பர் 14-ல் வங்காளத்தை அடைந்தது. நவாபு இதைத் தெரிந்துகொள்ளவில்லை. தப்பி ஓடி, பல்ட்டாவில் தஞ்சம் புகுந்த ஆங்கிலேயர்கள் தங்கள் வேண்டுகோளின் மூலம் நவாபுவுக்குச் சந்தேகம் உண்டாகாதவாறு செய்துகொண்டும், அவருடைய நம்பிக்கைத் துரோகிகளான அதிகாரிகளும் ஆலோசகர்களும் கெடுதியுற்ற வணிகர்களின் கொள்கையை ஆதரிக்குமாறு வேண்டிக்கொண்டும் இருந்த போது கிளைவும் வாட்சனும் சென்னையிலிருந்து கொண்டுவந்த படையுடன் பல்ட்டாவிற்கு வந்தனர். பல்ட்டாவிலிருந்த ஆங்கிலேயருக்கும் சென்னையிலிருந்து வந்த உதவியைப்

பற்றி எதுவும் தெரியாது என நம்புவதற்கு இடமிருக்கிறது. அவர்களும் நவாபுவுக்கு எதிராகப் போரிடுவதற்கான செயல்களை விட்டுவிடுமாறு தங்களால் இயலும்வரையில் தூண்டினார்கள். நவாபுவும், அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருந்தார். ஆனால், கிளைவும் வாட்சனும் பல்ட்டாவிலிருந்து தங்கள் நாட்டவர்களின் கோரிக்கைகளைக் கவனிக்கவில்லை. டிசம்பர் 17ஆம் தேதி வாட்சன் என்பவர் நவாபுவிற்கு எழுதிய கடிதத்தில், தங்கள் கம்பெனிக்குக் கொடுக்கப்பட்ட பழைய உரிமைகளையும் வரி விலக்குகளையும் திரும்பக் கொடுப்பதோடல்லாமல், அவர்கள் அடைந்த துன்பத்திற்கும் நஷ்டத்திற்கும் ஈடாக ஒரு தகுந்த தொகையைத் தருமாறும் கேட்டார். நவாபுவும் சமாதானமாக ஒரு கடிதம் எழுதினார். ஆனால், அது வாட்சனுக்குப்போய்ச் சேரவில்லை என நம்பலாம். கிளைவ் கல்கத்தாவை நோக்கிப் புறப்பட்டார். போரிடுவதாகப் பாவனை செய்து, கடைசியில் மூர்ஷிதாபாதிற்கு மாணிக்சந்து ஓடிவிட்டார். 1757ஆம் ஆண்டு, ஜனவரி, 2-ல் அதிகப் போரின்றி, கிளைவ் கல்கத்தாவைக் கைப்பற்றினார். அதன் பிறகு ஆங்கிலேயர்கள் ஹூக்ளி என்னும் நகரத்தைக் கொள்ளையடித்து, மிகச் சிறந்த கட்டடங்கள் பலவற்றை அழித்தார்கள்.

கோபமூட்டும் இவ்விதச் செயல்களுக்குப் பிறகும், சிராஜ் உத்தௌலா கல்கத்தாவிற்கு வந்து, ஆலிநகர் (Alinagar) உடன்படிக்கையை (1757, பிப்பிரவரி, 9ஆம் தேதி) செய்து கொண்டு, ஆங்கிலேயர்கள் கேட்டவற்றில் பெரும்பாம்மையானவற்றைக் கொடுத்துவிட்டார். முன்னுக்குப் பின் மாறியிருந்த சிராஜ் உத்தௌலாவின் இச் சமாதானக் கொள்கையை விவரிப்பது கடினம்தான். கிளைவ் நடத்திய இரவுத் தாக்குதலே அவரைப் பயமுறுத்தி, சமாதானத்திற்கு வரும்படி செய்தது என்று சொல்லப்படுகிறது. ஆனால், கிளைவின் படைவீரர்களே, அவரைக் கடிந்துகொள்ளும் அளவுக்கு அத்தாக்குதல் தோல்வி அடைந்தது என ஓர்ம் என்பவர் சொல்கிறார். தவிர, அவர் கல்கத்தாவை அடைவதற்கு முன் அவர் எழுதிய கடிதங்களில் பின்னர் ஒப்புக்கொள்ளப்பட்டவைகளைப் போன்றசமாதானத்தை ஏற்படுத்தி அவர் குறிப்பிட்டிருந்தார். நம்பிக்கை துரோகிகளான அவருடைய அதிகாரிகளின் சூழ்ச்சிகளும், வடமேற்கிலிருந்து படையெடுப்பு ஏற்படுமோ என்ற அச்சமும், ஆங்கிலேயருடன் எப்படியாவது சமாதானமாகப் போகவேண்டும் என்று அவரைத் தூண்டின என்பது உண்மையாய் இருக்கலாம்.

உண்மையான காரணம் எதுவாயினும், இது முதற் கொண்டே சிராஜ் உத்தௌலா, ஒவ்வொரு கட்டத்திலும், திறனில்லாமலும் உறுதி இல்லாமலும் இருந்தார் என்பது நன்ருகத் தெரிகிறது. ஏழுவருடப் போரின் தொடக்க மானது, இந்நிலைமையில் ஒரு புதிய பிரச்சினையைப் புகுத்தியது. ஆங்கிலேயர்கள், சந்திரநாகூரிலுள்ள பிரெஞ்சுக்காரர்களின் இடங்களைப் பிடிக்க விரும்பினார்கள். தமக்குக் கீழிருக்கும் ஒரு பகுதி மக்களைத் தாக்குவதற்கு அனுமதிக்க இயலாது எனச் சிராஜ் உத்தௌலா நியாயத்துடன் வாதாடினர். சந்திரநாகூருக்கு ஒரு போர்ப்படையை அனுப்புவதற்கு ஆங்கிலேயர்கள் ஆயுத்தம் செய்தபோது, ஆலிநகர் உடன்படிக்கையை ஆங்கிலேயர்கள் மீறுவதாகவும், பிரெஞ்சுக்காரர்களைப் பலிகொடுக்கத் தாம் சம்மதிக்க முடியாது எனவும் உறுதியாகத் தெரிவித்தார். ஆயினும், பிரெஞ்சுக்காரர்களைப் பாதுகாக்க அவர் ஒன்றும் செய்யாததால் கிளைவும் வாட்சனும் சேர்ந்து, சுலபமாகச் சந்திரநாகூரை 1757, மார்ச்சில் கைப்பற்றினர். ஹூக்ளியின் தலைவராய் இருந்த நந்தகுமாரின் தலைமையின் கீழ், சந்திரநாகூருக்கு ஒரு பெரும் படையை வைத்திருந்த நவாபு, அதை அப்புறப் படுத்தியிராவிட்டால், அப்படை பிரெஞ்சு நகரத்தைச் சுலபமாகக் கைப்பற்றியிருக்கும் என ஆங்கிலேயரே ஒப்புக் கொள்கின்றனர். நந்தகுமாருக்கு லஞ்சம் கொடுக்கப்பட்டாலும், ஆங்கிலேயரை எதிர்க்கும்படி நந்தகுமாருக்கு நவாபு கட்டளையிடவில்லை என்பது நன்கு தெரிகிறது.

மிகுந்த தைரியத்துடன், பிரெஞ்சு அகதிகளுக்கு நவாபு தம் சபையில் அடைக்கலம் அளித்தார். முகலாயப் பேரரசுக்கு உரிமை கொண்டாடிய ஒருவரின் படையெடுப்பு வங்காளத்தின்மீது ஏற்படும் என்ற நிலைமையில், ஆங்கிலேயர்கள் நவாபுவுக்கு இராணுவ உதவி அளிப்பதற்கு முன்வந்த போதிலும், அதற்கீடாகப் பிரெஞ்சு அகதிகளை வெளியே அனுப்ப மறுத்தார். ஆங்கிலேயருக்கெதிரான எப்போரிலும், பிரெஞ்சுக்காரர்களின் உதவி மிகமிக அவசியமாகும் என்பதனுல், தயாள குணமும் முன் யோசனையும் தோன்றி நவாபுவின் கொள்கைகளை உருவாக்கின. அப்போதைய நிலைமையின் அபாயத்தை ஆங்கிலேயர் நன்கு உணர்ந்திருந்தனர். பிரெஞ்சுக்காரர்களுடன் போர் நடந்துகொண்டிருக்கையில் பிரெஞ்சுக்காரர்களை ஆதரிக்கிற ஒரு நவாபு, வங்காளத்திலிருப்பது ஆபத்தானதுதான். பாண்டிச்சேரியிலிருந்து ஒரு பிரெஞ்சுப்படை நவாபுவுடன் சேர்ந்து சரியான

சூழ்நிலையில் கருநாடகத்திலிருந்த ஆங்கிலேயரை வெளியேற்ற வெகு சாதுரியமாக டியூப்ளே முயற்சி செய்ததைப் போல, வங்காளத்திலிருந்து வெளியேற்றுவதற்கு மறுபடியும் முயற்சி செய்யக் கூடும்.

அதனால், சிராஜ் உத்தௌலாவிற்குப் பதிலாக, தமக்குச் சாதகமான ஒரு நவாபுவை ஏற்படுத்த ஆங்கிலேயர் முயற்சி செய்தனர். நவாபுவிடம் வெறுப்புற்ற தலைவர் சிலரது உதவியுடன் ஒரு சதித்திட்டம் உருவாக்கி, வங்காளத்தின் சிங்காசனத்தில் மீர்ஜாபர் (MirJafar) என்பவரை வீற்றிருக்கச் செய்வது என்பது முடிவாகியது. மீர்ஜாபர், ராய் துர்லப் (Rai Durlabh) ஆகிய நவாபுவின் சேனைத் தலைவர்களும், ஜகத் சேத்து என்கிற செல்வமிக்க பாங்கரும், இச்சதியில் ஈடுபட்டனர். ஒரு முறையான ஒப்பந்தமும் (ஜூன் 10-ல்) ஏற்பட்டது. அவ்வுடன்படிக்கை, மற்றவைகளுடன் கூட, கம்பெனிக்கும் கல்கத்தாவிலிருந்த அதன் பெரிய பணியாளர்களுக்கும் அவர்களின் இராணுவ உதவிக்காகக் கொடுக்கப்படவேண்டிய சன்மானத்தையும் குறிப்பிட்டது. கடைசி நேரத்தில் ஒரு தடங்கல் ஏற்பட்டது. மத்தியஸ்தம் செய்பவராய் நடித்த அமீசந்து, கொள்ளையில் ஒரு பெரும்பங்கைக் கேட்டார். அமீசந்து விரும்பிய தொகையைக் கொடுப்பதாக ஓர் உடன்படிக்கை செய்து, கள்ளக் கையெழுத்துடனிருந்த அவ்வுடன்படிக்கையின் ஒரு பிரதி மூலமாக அவரைச் சமாதானப்படுத்தினர் வாட்சன். வாட்சன் அவ்வுடன்படிக்கையில் கையெழுத்திட மறுத்ததால், கிளைவின் ஏற்பாட்டின்படி வாட்சனின் கள்ளக் கையெழுத்து இடப்பட்டது.

இப்படிப்பட்ட ஆபத்தான காலத்தில், பரிதாபப்படத்தக்க உறுதியின்மையையும் திறமையின்மையையும் நவாபு வெளிப்படுத்தினர். பிரெஞ்சு அகதிகளை ஆதரித்ததன் மூலம் ஆங்கிலேயரின் கோபத்தையும் விரோதத்தையும் சம்பாதித்த பிறகு, துரோக எண்ணங்கொண்ட தம் அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில், அவ்வகதிகளை அனுப்ப ஒப்புக்கொண்டார். நவாபுவைத் தவிர, மற்றவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்த அச்சதித் திட்டத்தைப்பற்றி, பிரெஞ்சுக்காரர்கள் புறப்படும்போது அவருக்கு எச்சரிக்கை செய்தார்கள். அந்த இரகசிய உடன்படிக்கை பகிரங்கமாகத் தெரியும்வரையில் அவர் அதைத் தெரிந்துகொள்ளவில்லை. அப்பொழுதுங்கூட, அவர் துணிவுடன் காரியங்களைச் செய்யவில்லை. உடனே மீர் ஜாபரை நவாபு சிறைப்படுத்தியிருந்

தால், சதியிலீடுபட்ட மற்றவர்கள் அதைக் கண்டு பயந்து, அதனுல் அச்சதியே முறிந்திருக்கக் கூடும். ஆனுல், நவாபு தைரியமில்லாதிருந்தார். திறன்மிக்க செயலுக்குப் பதிலாக, அவர் (ஜூன் 15-ல்) மீர் ஜாபரை அடைந்து, அல்வர்திகான் பெயரில் பரிதாபமாக முறையிட்டார். மீர் ஜாபர் அவரை ஆதரிப்பதாக மிக்க பயபக்தியுடன் உறுதிமொழிகளை வழங்கினுர். அதைக்கண்டு நவாபு திருப்தியுற்ருர்; மீர் ஜாபரைத் தம் சேனைத் தலைவராகச் செய்து போருக்கு வேண்டியவைகளை மிக விரைவாகச் செய்யத் தொடங்கினுர்.

இந்தச் சந்திப்பிற்கு மூன்று நாள்களுக்கு முன்னரே, நவாபுவைத் தாக்கும் எண்ணத்துடன், ஆங்கிலப்படைகள் கல்கத்தாவிற்குச் சென்றன. நம்பிக்கைத் துரோகம் நவாபுவின் சேனை முழுவதும் பரவியிருந்ததால், ஹூக்ளி அல்லது காட்வா (Katwah) ஆகியவற்றில் இருந்த நவாபுவின் சேனையும், ஆங்கிலேயரை எதிர்க்கவில்லை. பாகீரதி நதிக்கரையில், தம் படைகளுடன் முன்பே வந்து தங்கியிருந்து மாமரங்கள் சூழ்ந்த பிளாஸி (Plassey) என்கிற இடத்திற்கு ஜூன் 22ஆம் தேதி இரவு கிளைவ் வந்தார்.

ஜூன் 23ஆம் தேதிக் காலையில் அப்போர் தொடங்கியது. மீர்ஜாபர், ராய் துர்லப் (Rai Durlabh) ஆகியவர்களின் தலைமையின் கீழிருந்த நவாபுவின் பெரிய இராணுவப்படை போரிடாமலிருந்த போது மோகன் லால், மீர் மதன் என்பவர்களின் கீழிருந்த ஒரு சிறிய படை, பிரெஞ்சு அதிகாரி ஒருவரின் உதவியுடன் போரில் ஈடுபட்டது. மீர் ஜாபர், நவாபுவிற்காக விசுவாசத்துடன் போரிட்டிருந்தால், ஆங்கிலப்படையைச் சுலபமாக வென்றிருக்கலாம். முன்னேறிச் சென்ற சிறிய படையே, ஆங்கிலேயரை மிக ஆபத்தான நிலைமையில் வைத்தது. அரை மணி நேரப் போருக்குப் பிறகு, மரங்களுக்குப் பின்னுல் கிளைவ் தம் படைகளுடன் பின்வாங்கினுர்; பதினெரு மணிக்குத் தம் படைத்தலைவர்களுடன் ஆலோசனை நடத்தினுர். பகல் முழுவதும் பீரங்கியால் சுட்டுக் கொண்டிருந்தது. நடு இரவில், நவாபுவின் கூடாரங்களைத் தாக்குவதென்று முடிவு செய்யப்பட்டது. துரதிருஷ்ட வசமாகச் சிதறி வந்த ஒரு குண்டினுல் மீர் மதன் கொல்லப்பட்டார். இதனுல் பீதியுற்ற நவாபு, மீர் ஜாபரை வரவழைத்து, அவரது துரோக ஆலோசனையை நம்பி, அவருடன் போரிட்ட ஒரு சிறிய படையையும் திரும்ப அழைப்பதற்கு ஒப்புக் கொண்டார். பிறகு என்ன நடந்தது என்பதை அக்காலத்தி

லிருந்த வரலாற்று ஆசிரியரும், **சியார்-உல்-முதாகரின்** (Siyar-ul-muthakherin) என்னும் ஆசிரியருமான குலாம் ஹுசேன் (Ghulam Husain) என்பவர் கூறியவற்றைக் கொண்டு விளக்கலாம்:

'இச்சமயம், மீர் மதனுடன் முன்னேறிச் சென்ற மோகன் லால், பகைவர்களுடன் மிக நெருங்கிப் போரிட்டார்; அவருடைய பீரங்கிகள் ஆற்றலுள்ள முறையில் இயங்கின. மறைவிடத்தையும் மற்ற இடங்களையும் பெற்ற அவர் காலாட் படை, பகைவர்களிடையே குண்டு மாரியைப் பொழிந்து கொண்டிருந்தது; இச்சமயத்திலேதான் பின் வாங்குமாறு நவாபு கட்டளையிட்டார். பின் வாங்குவதற்கு இது தகுந்த சமயமன்றென்றும், என்ன நேர்ந்தாலும், இதுவரையில் முன்னேறியது போல இனியும் முன்னேறலாம் என்றும், கூடாரத்திற்குத் திரும்பிவந்தால், அவர் வீரர்கள் சிதறி, பிறகு வெளிப்படையாகப் போரிட முடியாமல் ஓடிப்போக நேரும் என்றும் அவர் பதில் அளித்தார். இதனால், நவாபு, மீர் ஜாபரைக் கலந்து ஆலோசித்தார். ஆனால், மீர் ஜாபரோ, தாம் முன் கூறிய ஆலோசனையே மிகச் சிறந்தது என்றும், பிறகு மேன்மைக்குரிய நவாபுவுக்கு உகந்தவாறு முடிவு செய்யலாம் என்றும், உற்சாகமில்லாமல் கூறினார். உற்சாக மற்ற தம் சேனைத்தலைவனுடைய பயமுறுத்தலாலும் தமது அச்சம் காரணமாகவும் தம் இயற்கை அறிவை நம்பாமல், மீர் ஜாபர் கூறியதற்கு இணங்கினார்; உடனே கீழ்ப்படிவதற்கு வேண்டிய கட்டளைகளை அடிக்கடி அனுப்பியதால், மோகன் லாலும் தாம் முன்னேறிய இடத்திலிருந்து பின் வாங்கினார்.'

இவ்விதம் மோகன் லால் பின் வாங்கிய நிகழ்ச்சி அவருடைய துருப்புகளின் மனத்தில் ஒரு மாறுதலை ஏற்படுத்தியது. அவர்கள் தலைவர் பின் வாங்குவதைக்கண்டு, அவர்களிடமிருந்த வீரம் குறைந்தது; அச்சமயம் சிலர் ஓடுவதை இரகசியமாகப் பார்க்க நேர்ந்த பிறகு (ஏனெனில் அவர்கள் சதியில் சம்பந்தப்பட்டவர்கள்) அவர்களும், அவ்விதமே ஒருவரை ஒருவர் பார்த்துக் கலந்து ஓடத் தலைப்பட்டார்கள்; அவ்விதம் ஓடியதால் ஏற்பட்ட அவமானம் மறைந்ததால், யாரும் துரத்தாவிட்டாலும், எல்லோரும் ஓடிவிட்டனர்; சிறிது நேரத்திற்குப் பிறகு, கூடாரங்கள், ஆள்களின்றிக் காலியாயிருந்தன. இதைக் கேள்வியுற்ற சிராஜ் உத்தௌலா மிக்க திகைப்படைந்தார்; தம் முன்னிருந்த ஆங்கிலேயருக்குப் பயந்ததோடு அல்லாமல், தம்முடன்




From V. A. Smith: 'The Oxford History of India.'

இருந்த உட்பகைவர்களுக்கும் பயந்து மனவுறுதியை இழந்தார். எல்லோரும் கைவிட்டதைத் தொடர்ந்து, அவரும் மற்றவர்களுடன் சேர்ந்து ஓடத் தொடங்கினர்; இரவு முழுவதும் நடந்து, மறு நாட்காலை எட்டு மணிக்கு நகரத்திலிருந்த தம் அரண்மனையை அடைந்தார்.

24ஆம் தேதி காலை சிராஜ் உத்தௌலா மூர்ஷிதாபாதை வந்தடைந்தார். அவரது தோல்வியானது, அந்நகரத்தில் பீதியையும் குழப்பத்தையும் உண்டாக்கியது. தம் படைகளை ஒன்று சேர்ப்பதற்காக அவர் முயற்சி செய்தாலும், அவருடைய படை வீரர்களும் அதிகாரிகளும் மூலைக்கொருவராக, மிக்க குழப்பத்துடன் ஓடினர்கள். தம்மை ஆதரிக்குமாறு ஏராளமான பொருள்களை அவர்களுக்கு அவர் வாரி வழங்கியுங்கூட அவர்கள் வாராததால், லூதப்-உன்னிசா (Lutf-un-nisa) என்கிற அவர் மனைவியுடனும், நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பணியாளனுடனும் அவர் ஊரை விட்டு ஓடினர்.

25ஆம் தேதியன்று, மீர் ஜாபர் மூர்ஷிதாபாதை அடைந்தார். சில நாள்களுக்குப் பிறகு, கிளைவும் அவரைப் பின் தொடர்ந்தார். வங்காளத்தின் சுபேதாராக மீர் ஜாபர் பிரகடனப்படுத்தப்பட்டார். சிராஜ் உத்தௌலா பிடிக்கப்பட்ட செய்தி சில நாள்களுக்குள் கிடைத்தது. அவர் தலைநகருக்குக் கொண்டு வரப்பட்டு, மீர் ஜாபரின் மகனான மீரான் (Miran) என்பவரால் உடனே கொல்லப்பட்டார். இவ்விதம் மீர் ஜாபரது துரோகத்தனமான சதி நிகழ்ச்சி, வெற்றியில் முடிந்தது. ஏராளமான பணமும், இருபத்து நாலு பர்காணுக்களில் வரி வசூலிக்கும் உரிமையும் கம்பெனிக்கு வழங்கப்பட்டன. அவற்றைத் தவிர, கிளைவும் அவருடைய சக ஊழியர்களும், ஏராளமான வெகுமதிகளைப் பெற்றனர்கள்.

பிளாசிப் போர் ஒரு சிறிய போர் ஆயினும், அதன் விளைவு உலகத்தில் உண்டான மாபெரும் போர்களின் விளைவுகளைக் காட்டிலும் அதிகமாய் இருந்தது. ஆங்கிலேயர்கள் முதலில் வங்காளத்தையும், இறுதியில் இந்தியா முழுவதையும் கைப்பற்றுவதற்கு அது அடிகோலியது. அதனால், அதனைச்சார்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம் பெரியனவாக்கிக் காட்டப்பட்டன. கிளைவின் சிறிய தவறுகள் எல்லாம் அவரது வீரம் என்றும் தீரம் என்றும் மிகைப்படுத்திக் கூறப்பட்டன. அமிசந்திடம் கொடுக்கப்பட்ட கள்ளக் கையெழுத்திடப்பட்ட பத்திரம், அவரது குணத்தைக் களங்கப்படுத்தியது என்றாலும், அவ

ரிருந்த சூழ்நிலை, அவர் காலத்தின் ஒழுக்கநிலை ஆகியவை களைத் தகுந்த முறையில் நோக்கவேண்டும். அதே சமயம் புகழ் பெற்ற இராணுவப் படைத்திறமையோ, ராஜ தந்திரமோ, அவரிடம் இருந்ததாகச் செல்ல இயலாது. பிரெஞ்சுக்காரர்களிடம் உள்ள உறவை முரித்துக்கொள்வதை அவர் எதிர்த்தார். அதுவே, சிராஜ் உத்தௌலாவிடம் ஏற் பட்ட போருக்குக் காரணமாகும். அதற்கும், வாட்சனின் விடாப்பிடியான குணந்தான் அவரைச் சம்மதமில்லாமல் ஈடு படச் செய்தது. போர் தொடங்கிய போதும், அவர் தயங்கி ஞர். பிளாசிப் போருக்கு இரண்டு நாள்களுக்கு முன் காட்வா வில் நடத்தப்பட்ட போர்க் குழுவின் கூட்டத்தில், பின் வாங்கு வதை அவர் ஆதரித்தார். பிளாசியிலுங்கூட, துருப்புகளை முன்னேறுவதற்கு உத்தரவிட்ட மேஜர் கில்பத்திரிக்கு (Major Kilpatrick) என்பவரைக் கடிந்து கொண்டார். அதனுல்; பிளாசிப் போரில் தவறுதல் செய்துங்கூட அதில் கிளைவ் வெற்றிபெற்ருர் என்பது மிகைப்படக் கூறுவதன்று. ஆனுல், இக்காரணங்களினுல், தலைவனுக்குரிய தகுதிகள், துணிச்ச லுடன் தாக்குகிற மனப்பான்மை ஆகியவைகளைக் கிளைவிட மிருந்து பிரித்துவிட இயலாது.

கிளைவிற்குப் பகைவரான சிராஜ் உத்தௌலாவைச் சிலர் 'தியாகி' என்றும், 'அநீதியின் அரக்கன்' என்றும் சொல்லு கின்றனர். இவ்விதக் கூற்றுகளில் உண்மை இருப்பதாகச் சொல்ல இயலாது. அவர் காலத்திலிருந்த அரசர்களைவிட அவர் மோசமானவர் என்று சொல்ல இயலாது; ஆனுல், மீர் ஜாபர், நவாஜிஸ் முகம்மது அல்லது சாகுத்ஜங் ஆகியவர்களை விட உண்மையில் மேலானவர். அவர் அரசை ஏற்றுக் கொண்ட பின்னர், ஒரு சில மாதங்களில், தமது ஆற்றலையும் திறமையையும் உறுதியான முறையில் காட்டினுர். ஆனுல், ஆற்றலின்மையும் உறுதியின்மையுமே, அவர் வீழ்ச்சிக்கு முக்கிய காரணங்களாயிருந்தன. அவர் உயிரும் பதவியும் போவதற்குக் காரணமாயிருந்த சதித்திட்டம், ஒரு வகையில், அவருடைய ஆளுமையாலும் குணத்தாலும் உருவானது என்பதில் உண்மை இருக்கிறது.

கடைசியாக மீர் ஜாபரின் சதித்திட்டம் அந்நாட்டிற்குச் செய்யப்பட்ட 'பெரிய துரோகம்' என அந்நாட்டுத் தேசபத்தி யற்றவர்களால் கருதப்படுகிறது. ஆனுல், அது அப்படிப்பட்ட தன்று. அப்படிப்பட்ட சதிகள் அக்காலத்தில் வழக்கமாக நடைபெற்றவைகளே. அலிவர்திகானும், சிங்காதனத்தைப்

பெற இவ்வழியையே கையாண்டார். சிராஜ் உத்தௌலாவை நாட்டிற்காகப் போராடுபவர் என்றும், மீர் ஜாபரை அந்நாட்டைக் காட்டிக்கொடுத்தவர் என்றும் நினைப்பது தவருகும். இருவரும் சொந்த நலனைக் கருதியே செயலில் ஈடுபட்டனரேயன்றி, நாட்டின் நலத்தை நினைத்துப் பார்த்ததாகத் தெரியவில்லை. உண்மையில், மீர் ஜாபரும் அவருடைய ஆள்களும் சேர்ந்து செய்த சதித்திட்டம், ஆங்கிலேயரை வங்காள ஆட்சியில் அமர்த்தும் என எவரும் நினைக்கவில்லை; அப்படி நினைப்பதற்குத் தகுந்த ஆதாரமும் இல்லை. அப்படியிருக்க, தக்காணத்திலிருந்த புஸ்ஸியைவிட மேலான நம்பிக்கையைப் பிளாசிப்போர் கிளைவிற்குக் கொடுக்கவில்லை. வங்காளத்தில் வேறு விதமாக நடந்ததற்கு மீர் ஜாபரின் குணமும், சபையிலிருந்த பிரபுகளும், வங்காளத்தின் சூழ்நிலையுமே முக்கிய காரணமாகும். ஆனல், ஒரு விதத்தில், விதி அல்லது ஊழ்வினை எனக் கூறப்படும் தெரியாத-தெரிந்துகொள்ள முடியாத காரணக்கூறுதான் இதற்குக் காரணமாகும்; சில சமயத்தில், மனிதனுடைய பிரச்சினைகளில் அது தலையிட்டுப் பெரும் பங்கைப் பெறுகிறது.

## மூன்ருவது கருநாடகப் போர்

கருநாடகத்தில், கொடயூவின் ஒப்பந்தத்தினல் உண்டான அமைதி, ஏழாண்டுப் போரினல் குலைக்கப்பட்டது. முதல் கருநாடகப் போரில் நடந்தது போலவே, ஐரோப்பாவில் நடந்த ஒரு போரினல், இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் விருப்பமின்றியே போரில் ஈடுபட நேர்ந்தது. போர் தொடங்கிய செய்தி, 1756ஆம் ஆண்டு, நவம்பர் மாதம் இந்தியாவிற்கு எட்டியது. வங்காளத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான சந்திரநாகூரை, முன்பு கூறியுள்ளபடி, கிளைவும் வாட்சனும் கைப்பற்றியதுதான் இதன் உடனடியான விளைவு.

சென்னையில் போரை உடனே ஆரம்பிப்பதற்கு வேண்டிய வசதிகள் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இல்லை. தவிர, கடற்படைகளின் பெரும்பாகம் கல்கத்தாவைக் கைப்பற்றுவதற்காக, கிளைவ், வாட்சனின் தலைமையின் கீழ் அனுப்பப்பட்டது. அவ்வெண்ணம் நிறைவேறிய பிறகுங்கூடச் சில பெரிய அரசியல் திட்டங்களைக் கருத்தில் கொண்டு சென்னைக்குத் திரும்பி வருவதில் கிளைவ் கால தாமதம் செய்

தார்; இது கடைசியில் பிளாசிப் போரில் முடிந்தது. ஹைதராபாதிலிருந்த புஸ்ஸிக்கு வேண்டிய உதவிகளைப் பாண்டிச்சேரிக் கவர்னர் செய்யவேண்டியிருந்ததால், பிரெஞ்சுக்காரர்களின் வசதிக் கூறுகளும் குறைந்தன.

ஆகையால், 1758ஆம் ஆண்டிற்குப் பின்புதான் போர் நடவடிக்கை பெரிய அளவில் ஆரம்பமாயிற்று. 1757-ல் வாட்சன் இறந்த பிறகு, அவரது பதவிக்கு வந்த போகாக்கு (Pocock) என்பவரின் கீழ், ஒரு கடற்படை வங்காளத்திலிருந்து திரும்பியது. பிரெஞ்சுக்காரர்களுக்கும் தாய் நாட்டிலிருந்து புதிய உதவிகள் வந்தன. கவுண்ட்-டி-லாலி (Count-de-Lally) என்பவர் போரை நடத்துவதற்காக அனுப்பப்பட்டார். சிவில், இராணுவ சம்பந்தமான எல்லா அதிகாரங்களும் அவரிடம் கொடுக்கப்பட்டாலும், தாஷ் (d'Ache) தலைமையின் கீழிருந்த கப்பற்படையின்மீது எவ்வித அதிகாரமும் அவருக்குக் கொடுக்கப்படவில்லை. மேலதிகாரத்தை இவ்விதம் பிரித்ததால், ஒற்றுமையும் பிணக்கும் உண்டாகி, நாம் இனிப் பார்க்கப்போகிறபடி பிரெஞ்சுக்காரர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து, அவர்கள் எண்ணம் ஈடேருதபடி செய்தன.

லாலி வெகு பிரமாதமாகத்தான் போரை ஆரம்பித்தார். அவர் மே மாதம், 1ஆம் தேதி செயின்ட் டேவிடு கோட்டையை முற்றுகையிட்டு, ஜூன் 2ஆம் தேதி அதைப் பிடித்தார். சென்னையைத்தாக்கி, கருநாடகத்திலிருந்த பிரிட்டிஷ் அதிகாரத்தின் அடிப்படையையே அழிக்கக்கூடிய ஒரு சிறந்த முடிவுக்கு அவர் வந்தார். முன்பே, ஏப்பிரல் 28ஆம் தேதியன்று ஆங்கிலேயரால் முரியடிக்கப்பட்ட தாஷ் என்பவர், அவருடன் செல்ல மறுத்துவிட்டார். கடற்படையில்லாமல், சென்னைக்கு எதிராக எவ்விதப்போரிலும் ஈடுபடமுடியாது; அதனால் தஞ்சாவூர் அரசர் பிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுக்க வேண்டிய ரூ. 70 லட்சத்தையும், அவ்வரசரிடமிருந்து பெற்று, தம் பணமுடையைத் தீர்த்துக்கொள்ள லாலி விரும்பினர். தஞ்சாவூரை (ஜூலை 18) தாக்கினலும், வெடிமருந்து இல்லாததனல், தொடர்ந்து முற்றுகையை நடத்த முடியவில்லை. லாலிக்கும் அவர் ஆள்களுக்கும் இடையில், நம்பிக்கையும் ஒற்றுமையும் இல்லை என்பதுதான் உண்மை. முரட்டுத்தனமும் அகம்பாவமும் கொண்ட தமது நடத்தையின் மூலம், தம் ஆள்களை லாலி துன்புறுத்தியதால், அவர்கள் அவரை வெறுத்தார்கள். உயர்ந்த இராணுவத்திறமையை அவர் உண்மையில் பெற்றிருந்தாலும், போர் இயந்திரத்தின் பல

பாகங்களையும் இணைத்து நடத்துவதற்கு வேண்டிய நிதானமும் நல்ல குணமும் அவரிடம் இல்லை. அவர் தஞ்சாவூரில் பயனின்றி அதிக காலத்தைச் செலவிட்டார். இதற்கிடையில் ஆங்கிலக் கடற்கரை, தரைப்படையைத் தாக்கி, மிக்க சேதத்தை உண்டு பண்ணியது. (ஆகஸ்டு 3ஆம் தேதி) இச் செய்தி லாலிக்கு எட்டியவுடன் தஞ்சாவூர் முற்றுகையை நீக்கி (ஆகஸ்டு 10ஆம் தேதி) அதன் மூலம் தம் புகழையும், பிரெஞ்சுப்படையினரின் மதிப்பையும் பெரிதும் குறைத்து விட்டார்.

பிரெஞ்சுக் கப்பற்படை இந்திய சமுத்திரத்தை விட்டகன்றது. பருவகால ஆரம்பத்தில், துறைமுகமற்ற சென்னைக்கடற்கரையை விட்டு ஆங்கிலக்கப்பற்படை போகும் வரை, லாலி காத்திருக்க வேண்டியிருந்தது. இடைக்காலத்தில் சிறிய ஆங்கிலப் புறக்காவல் நிலையங்களை (Out-Posts) கைப் பற்றுவதில் ஈடுபட்டு, கடைசியில் ஆங்கிலேயருக்குக் கருநாடகத்தில் சென்னை, திருச்சிராப்பள்ளி, செங்கற்பட்டு ஆகியவை மட்டுமே எஞ்சியிருக்கும்படி செய்தார். ஆங்கிலக் கப்பல்கள் சென்னையை விட்டு நீங்கியவுடனே, டிசம்பர் 14ஆம் தேதி அவர் அதை முற்றுகையிட்டார். ஆனால், தஞ்சாவூரை முற்றுகையிட்டபோது செய்த தவறுகளே சென்னை முற்றுகையின்போதும் செய்யப்பட்டன. 1759ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 16ஆம் தேதிவரை இம்முற்றுகை நீடித்து வந்தது. அப்பொழுது அங்கே வந்த ஒரு பிரிட்டிஷ் கடற்படையைக் கண்டு, உடனே முற்றுகையை லாலி நீக்கினார். இந்த அவமானத்துக்குரிய தோல்வியே இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் விதியை மாற்ற முடியாதபடி நிர்ணயித்தது.

பன்னிரண்டு மாதங்களில் அவ்வீழ்ச்சி முற்றுப்பெற்றது. தகுதியற்ற படைத்தலைவரின் கீழ்ப் பிரெஞ்சுப் படையை விடுத்து, ஹைதராபாதிலிருந்து புஸ்ஸியை வரவழைத்ததனால் லாலி பெருந்தவற்றைச் செய்தார். இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்தி, வங்காளத்திலிருந்து ஒரு படையைக் கர்னல் போர்டு (Forde) என்பவரின்கீழ், வடசர்க்காரில் இருந்த பிரெஞ்சுப் படைக்கு எதிராகக் கிளைவ் அனுப்பி, பிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடித்தார். ராஜமகேந்திரம் (டிசம்பர் 7ஆம் தேதி), மசூலிப்பட்டினம் (மார்ச்சு 6ஆம் தேதி) ஆகியவற்றைப் பிடித்து, நைஜாம் சலபத் ஜங்கிடம் விசேஷச் சலுகையுடன் கூடிய ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார்.

கருநாடகத்திலுங்கூட, ஆங்கிலேயர்கள் தங்களுடைய ஆக்கிரமிப்பைத் தொடங்கினர்கள். முதலில் காஞ்சீபுரத் தருகில் அவர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். சம்பளம் கொடாததால், துருப்புகளுக்கிடையே ஏற்பட்ட மனக்கசப்புக் காரணமாக, இவ்வெற்றியைத் தொடர்ந்து ஆங்கிலேயரைத் தாக்க முடியவில்லை. மனக்கசப்பானது, கடைசியில் வெளிப் படையான கலகமாய் மாறியது. செப்டம்பரில் மறுபடியும் வந்த தாஷின் பிரெஞ்சுக் கடற்படையை எதிர்த்து, போகாக்கு (Pocock) என்பவர் வெற்றி பெற்றது, ஆங்கிலே யரின் தோல்வியை மறைத்துவிட்டது. போகாக்கிடம் மூன்றும் முறையாகத் தோல்வியுற்ற பிறகு, கடலின்மீது எதிர்ப்பற்ற தலைவர்களாக ஆங்கிலேயரைச் செய்து, தாஷ் என்பவர் இந்தியாவை விட்டகன்றார்.

அக்டோபர் மாத இறுதியில் ஆற்றல் மிகுந்த தளபதி யான கூட்டு (Coote) என்பவர் தம் படைகளுடன் சென்னைக்கு வந்து, தாக்குதலைத் தொடங்கினர். பல சிறிய போர் களுக்குப் பின் (1760, ஜனவரி, 22-ல்) லாலி முற்றுகையிட்ட வந்தவாசிக் கோட்டையின் அருகே; ஒரு முடிவான போர் ஏற்பட்டது. பிரெஞ்சுப் படை நிர்மூலமாக்கப்பட்டு, அவர்கள் விதியும் கடைசியாக முடிவுசெய்யப்பட்டது.

கருநாடகத்திலிருந்த சிறிய பிரெஞ்சுப் பகுதிகளைக் கூட்டுக் கைப்பற்றி, வெற்றிகளைத் தொடர்ந்து பெற்றார். செஞ்சியையும் பாண்டிச்சேரியையும் தவிர, கருநாடகத்தில் இருந்த எல்லாவற்றையும் பிரெஞ்சுக்காரர் இழந்தனர். பிறகு ஆங்கிலேயர் பாண்டிச்சேரியை (1760, மே) முற்றுகை யிட்டனர்.

நம்பிக்கையற்ற இறுதியான முடிவுக்கு உள்ளாக்கப் பட்ட லாலி, பிரெஞ்சுக்காரர்களின் நிலையை உயர்த்த நினைத்து, மைசூரின் அரசியலில் தலைமையிடம் பெற்ற ஹைதர் அலியுடன் (Hyder Ali) ஒரு நட்புடன்படிக்கையைச் செய்துகொண்டார். சிறந்த குறிக்கோளுடன் அது செய்யப் பட்டாலும், அதனால் நடைமுறையில் ஒருவிதப் பயனுமில்லை. பிரெஞ்சுக்காரர்களுக்கு உதவியாக ஒரு சிறிய படையை ஹைதர் அனுப்பியபோதிலும், ஆங்கிலேயருக்கு எதிராக வெற்றி பெறும் வாய்ப்புள்ள எந்த இராணுவத் திட்டத்தை யும் இக்கூட்டாளிகளால் உண்டாக்க இயலவில்லை. அதன் பிறகு 'விதியின்படி நடக்கட்டும்' என லாலியைக் கைவிட்டு, ஹைதரின் படை மைசூருக்குத் திரும்பியது.

தரை வழியாகவும் கடல் வழியாகவும், பாண்டிச்சேரி முற்றுகையிடப்பட்டது. படையை பராமரிப்பதற்குரிய பணம், லாலியிடம் இல்லை. இவ்வித இடுக்கண் நேர்ந்தபோதுங்கூட அவர் தம் அதிகாரிகளிடத்திலும் பணியாளர்களிடத்திலும் இணக்கமாக வேலை செய்யவில்லை. கடைசியாகத் தடுக்க முடியாதது ஏற்பட்டு, 1761ஆம் ஆண்டு, ஜனவரி, 16-ல் பாண்டிச்சேரி, நிபந்தனையில்லாமல் சரண் அடைந்தது. வெற்றி பெற்றவர்கள் கொடூரமாகக் கோட்டைகளை அழித்ததோடல்லாமல், நகரத்தையும் அழித்தார்கள். 'ஒரு காலத்தில் அழகும் செழுமையும் கொண்டு விளங்கிய இந்நகரம், ஒரு சில மாதங்களுக்குள் ஒரு கூரையைக்கூடப் பார்க்க இயலாத அளவுக்கு அழிக்கப்பட்டது,' என ஓர்ம் என்பவர் வருத்தத்துடன் கூறினர்.

பாண்டிச்சேரியின் சரணகதியைத் தொடர்ந்து, செஞ்சியும் மலபார்க் கடற்கரையிலிருந்த மாஹி எனும் பிரெஞ்சுக் குடியேற்றமும் சரணடைந்தன. இவ்விதம், இந்தியாவில் சொந்தமானவைகள் எல்லாவற்றையும் பிரெஞ்சுக்காரர் இழந்தனர்.

லாலியின் தோல்விக்குரிய காரணங்களைக் கண்டுபிடிப்பது சிரமமன்று; அவற்றுள் சிலவற்றை, டியூப்ளேயின் தோல்விக்குரிய காரணங்களைக் குறிப்பிட்டபோது பார்த்தோம். இருவரும் தாய்நாட்டிலிருந்து போதுமான அளவு சாதனங்கள் வராததால் இடர்ப்பாடுற்றனர்; அரசாங்கத்தின் முக்கிய மற்ற ஓர் அங்கமாய் இருந்த கம்பெனியின் குறைபாடுள்ள நிறுவனமும், அரசியல் அதிகாரத்தை இந்தியாவில் கைப்பற்றுவதன் முக்கியத்துவத்தைத் தாய் நாட்டு அதிகாரிகள் உணரத் தவறியதுமே இதற்குரிய முக்கிய காரணங்களாகும். பிரெஞ்சுக்காரர்களுக்குக் கடலின்மீது வலுவின்மையும், நிலத்தின்மீதும் கடலின்மீதும் இருக்கப் பிரெஞ்சு தளபதிகளின் ஒற்றுமையின்மையும், இருவருக்கும் பாதகமாயிருந்தன. ஆனல், இவை மூன்ருவது கருநாடகப் போரில் பிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராக மிக்க ஆற்றலுடன் இருந்தன.

இதைத்தவிர, வங்காளத்தில் இராணுவ, நிதி வசதிகள், ஆங்கிலேயருக்கு மிக அனுகூலமாய் இருந்தன. இவை லாலிக்குக் கிடைக்கவில்லை; இவ்வுறுதி வாய்ந்த தளத்திலிருந்து, அவர்கள் மனிதர்களையும் பணத்தையும் தொடர்ந்து சென்னைக்கு அனுப்பி, வடசர்க்காரிலிருந்து பிரெஞ்சுக்காரர்

களைத் தாக்கி, தமக்குச் சாதகமான ஒரு நிலையை உண்டாக்க இயலும். அச்சமயம் இது முழுவதும் உணரப்படாவிட்டாலும், வங்காளத்தில் இருந்த ஆங்கிலேயரின் நிலை, மூன்றும் கருநாடகப்போரின் ஆரம்பத்திலிருந்து பிரெஞ்சுக்காரர்களின் போரை நம்பிக்கையற்றதாகச் செய்துவிட்டது. பிளாசிப் போரே உண்மையில் இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் தலைவிதியை நிருணயித்தது எனக் கூறலாம். லாலியின் குணமும் நடத்தையும் இவ்வித அழிவுக்குரிய நிலைமைக்குப் பெரும்பாலும் காரணமாயிருந்தன. இராணுவத்திறமையோடு, தம் துணிச்சலையும் ஆற்றலையும் காட்டினாலும், ஒரு தலைவருக்குரிய நுட்பமான திறமும், ராஜ தந்திரிக்குரிய அறிவும் அவருக்கில்லை. உண்மையில் அவர் முடிவு சோகமானதுதான். அவர் இங்கிலாந்தில் இரண்டு ஆண்டு போர்க் கைதியாய் இருந்து, ஏழு ஆண்டுப்போரின் இறுதியில் 1763-ல் பிரான்சுக்குத் திரும்பிச் செல்ல அனுமதிக்கப்பட்டார். ஆனால், அவருக்கு இதைவிட மோசமான விதி அவ்விடத்தில் காத்திருந்தது. அவர் பாஸ்தில் (Bastille) என்கிற கொடுஞ் சிறையில் இரண்டு ஆண்டு அடைக்கப்பட்டு, அதன் பின் இழிவுக்கும் அவமதிப்புக்கும் ஆளாக்கப்பட்டு, கொலை செய்யப்பட்டார்.

தோல்விகளும் தவறுகளும் லாலிக்கு ஏற்பட்ட போதிலும் அவருக்கு நேர்ந்த இடர்பாடுகள், உண்மையில் வெல்லுதற்கரியவைகளே என்பதை நினைவு கூர்தல் வேண்டும்; மிகச் சிறந்த தலைவர்களைப் பெற்றிருந்தாலும், ஆங்கிலேயரை வெற்றி கொள்ளும் வாய்ப்பு உண்மையில் பிரெஞ்சுக்காரர்களுக்கு இல்லை. ‘வங்காளத்தைப் பெற்றுக் கடலாதிக்கம் செலுத்தும் ஓர் அரசுடன் பாண்டிச்சேரியைத் தளமாகக் கொண்டு இந்தியப் பேரரசை ஏற்படுத்துவதற்கு, மஹா அலெக்ஸாண்டர், நெப்போலியன் ஆகியவர்களாலும் இயலாது,’ என்றுரைத்த வரலாற்று ஆசிரியர் ஒருவரின் கூற்றில் பேருண்மை பொதிந்திருக்கிறது.

## வங்காளத்தில் பிரிட்டிஷ் ஆட்சியின் எழுச்சி

1757-ல் நடந்த புரட்சியானது, வங்காளத்தில் ஆங்கிலேயரின் இராணுவத் தலைமையை ஐயத்திற்கிடமில்லாமல் ஏற்படுத்தியது. அவர்கள் வெறுத்த பகைவர்களான பிரெஞ்சுக்காரர்கள், வெளியேற்றப்பட்டார்கள்; தகுந்த ஆயுதங்களுடன் கூடிய ஓர் இராணுவப் படையைப் பாதுகாப்

பதற்காகச் சில இடங்களையும் மானியமாகப் பெற்றார்கள். எளிதில் வெல்லவியலாத நவாபுவின் பெருஞ்சேனையை வென்றதன் மூலம் அவர்களுக்குக் கிடைத்த புகழ் அதைவிட மிகச் சிறப்பானது.

அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையில் பெரிய மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. கல்கத்தாவின் மீதுள்ள ஆங்கிலேயரின் ஆதிபத்திய உரிமை ஒப்புக்கொள்ளப்பட்டு, நவாபுவின் சபையில் ஆங்கிலப்பிரதிநிதி ஒருவரை வைத்துக் கொள்ளும் உரிமையும் அவர்கள் பெற்றார்கள். இவ்விதச் சிறுமாற்றங்களைத் தவிர, சிராஜ் உத்தௌலாவின் நிலைமைக்கும், மீர் ஜாபரின் நிலைமைக்கும் கொள்கையில் அதிக வேறுபாடில்லை. புதிதாகப் பெற்ற பதவியைப் பாதுகாக்க, கிளைவின் உதவி நவாபுவிற்குத் தேவைப்பட்டதால், நடைமுறையில் நாட்டின் மேலதிகாரம் கிளைவின் கையிலேயே இருந்தது.

வங்காளத்திலிருந்த கிளைவின் நிலை மிக்க குழப்பத்தில் இருந்தது. அவர் பிளாசி வெற்றியின்போது சென்னைக் கவர்னருக்கும் மன்றத்திற்கும் உட்பட்ட ஒரு சாதாரணப் பணியாளராகவே இருந்தார். ஆனால், 1758ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் கல்கத்தாவிலிருந்த மன்றம் தனது சொந்த முயற்சியின் மூலம், அவரை வங்காளத்தின் கவர்னராகத் தேர்ந்தெடுத்தது. அவ்வாண்டின் இறுதியில் கம்பெனியின் கட்டளையால், அச்செய்கை சட்டபூர்வமாக ஒப்புக்கொள்ளப் பட்டது.

நவாபு சம்பந்தப்பட்ட வரையில், கிளைவின் குழப்பநிலை அப்படியே நீடித்தது. முறையான உரிமைகள் அல்லது சிறப்புரிமை ஆகிய எவ்வுரிமையுமில்லாமல், மீர் ஜாபரின் நடவடிக்கைகளின் மீது மிகுந்த அதிகாரத்தை அவர் செலுத்தினார்; முக்கியமாக; ராய் துர்லப் என்னும் திவான், ராம் நாராயண் என்கிற பீகாரின் கவர்னர் போன்ற குறிப்பிடத் தகுந்த இந்து அதிகாரிகளுக்குக் கேடு உண்டாகாதபடி அவர்களை நவாபுவிடமிருந்து அவர் காப்பாற்றினார். கிளைவின் தலையீட்டை மீர் ஜாபர் வெறுத்தாலும், ஆங்கிலேயரின் இராணுவ உதவியை உதறித்தள்ள இயலவில்லை. 1759-ல் ஆலி கௌகார்—பின்னர் இரண்டாம் ஷா ஆலம் எனப்பட்டவர்— வங்காளத்தையும், பீஹாரையும் பிடிப்பதற்குத் திட்டமிட்டு, பாட்னாவை முற்றுகையிட்டபோது, இது மிக வெளிப்படை

யாகத் தெரிந்தது. கிளைவின் உதவியுடன் மீர் ஜாபர் இந்த ஆபத்தைத் தடுப்பதில் வெற்றி பெற்ருர். ஆங்கிலேயர்களை எவ்வளவுதான் வெறுத்தாலும், மீர் ஜாபர் அரியாசனத்தில் இருக்க வேண்டுமானுல், அவர்களுடைய உதவி மிக இன்றி யமையாதது என்பதை இச்சம்பவம் அவருக்கு அடிக்கடி கொடூரமாக ஞாபகபடுத்தியது.

கடைசியாக, ஒரு தலைவரை மாற்றி மற்ருெரு தலைவரைப் பெறுகிற நம்பிக்கையற்ற வழியைக் கையாண்டு சின்சுராவி லிருந்து (Chinsura) டச்சுக்காரர்களுடன் ஒரு சதித்திட்டத்தில் மீர் ஜாபர் ஈடுபட்டார். அவர்களும், ஆங்கிலேயரது ஆதிக் கத்தை ஒழித்துத் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டப் பேரவாக் கொண்டிருந்தார்கள். இதற்காக ஜாவாவிலிருந்த அவர்கள் குடியேற்றங்களிலிருந்து புதிய இராணுவப் படைகளைக் கொண்டு வருவதற்கு முயற்சி செய்தார்கள். ஆனுல், கிளைவ் விழிப்பாயிருந்து, அவர்களது திட்டத்தை முறியடித்தார். 1759ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், பெடாரா (Bedara) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டு அடக்கப்பட்டதால், அவர்கள் சமாதானத்தை நாடினுர்கள்.

தம் ஆளுமையாலும் குணத்தாலும் மூன்று ஆண்டு காலம் ஆங்கிலேயரின் தலைமையிடத்தை வங்காளத்தில் கிளைவ் பாதுகாத்தார். 1760, பிப்பிரவரி, 25ஆம் தேதியன்று, அவர் புறப்பட்டதைத் தொடர்ந்து, ஒரு சிறிது காலத்திற்குள் நவாபுவின் மகனுரான மீரான் இறந்ததால், வாரிசு பற்றிய பிரச்சினை உடனே எழுந்தது. நவாபுவின் துரோக எண்ணம், தகுதியின்மை, கம்பெனிக்குச் செலுத்த வேண்டிய பணத்தைக் கொடாமலிருந்தமை ஆகியவைகளால், அவரையும் அவர் குடும்பத்தையும் ஆங்கிலேயர்கள் வெறுத்தார்கள். தாற் காலிகக் கவர்னராய் இருந்த ஹால்வெல் என்பவர், அந் நாட்டின் நிருவாகத்தை ஏற்றுக்கொள்ளும் துணிகர யோசனை கூறினுர். ஆனுல், மன்றத்தின் மற்ற அங்கத்தினர்கள் இத் திட்டத்தை ஆதரிக்கவில்லை. பிறகு நவாபுவின் மருமகரான மீர் காசிம் என்பவரை ஆதரித்தார். பிறகு கவர்னரான வான்சிட்டார்ட்டு (Vansittart) என்பவர் இந்த யோசனையை அங்கீகரித்தார். அதனுல், 1760ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 27ஆம் தேதியன்று, ஓர் இரகசிய உடன்படிக்கையை மீர் காசிம் என்பவருடன் செய்துகொண்டனர். கம்பெனிக்குக் கொடுக்கப்பட வேண்டிய தொகைகளைக் கொடுப்பதாகவும், பர்துவான், மிதுனபூர், சிட்டகாங் ஆகிய மாவட்டங்களைக்

கொடுக்கவும், மீர் காசிம் ஒப்புக் கொண்டார். இதற்குப் பதிலாக, அவரைத் துணைச் சுபேதாராக்கவும் சிங்காதன வாரிசு உரிமையை அவருக்குப் பெற்றுத்தரவும், ஆங்கிலேயர்கள் உறுதியளித்தார்கள்.

அதன் பிறகு, வான்சிட்டார்ட்டும், கைல்லாடு (Caillaud) என்ற கம்பெனிப்படைகளின் தளபதியும், மூர்ஷிதாபாதிற்குச் சென்றார்கள். ஆனால், மீர் ஜாபர், மீர் காசிமைத் துணைச் சுபேதாராக்குவதற்கு மறுத்தார். பயனற்ற ஐந்து நாள் விவாதத்திற்குப் பிறகு, நவாபுவின் அரண்மனையைக் கைப்பற்றுமாறு கைல்லாட்டு உத்தரவிடப்பட்டார். உதவி பெறாத நவாபு ஆங்கிலேயர்கள் கேட்பதைக் கொடுப்பதைவிட, அரசு துறப்பதே மேல் என்ற முடிவுக்கு வந்தார். பிறகு மீர் காசிம், நவாபு எனப் பிரகடனப்படுத்தப்பட்டார். அதனால், கி.பி. 1760ஆம் ஆண்டின் புரட்சி, இரத்தஞ் சிந்தாமல் நடத்தப்பட்டது.

புதிய நவாபுவாவது, ஆங்கிலேயராவது இவ்வுடன்படிக்கையைச் சாதகமாகக் கொண்டு தங்களுக்குள்ளிருந்த உறவை உறுதிப்படுத்திக்கொள்ள நினைக்காதது வியப்பான செயல்தான். தாம் சுதந்தர அரசர் என்று நவாபு உரிமை கொண்டாடிய போது, அதற்கு மாறான வழியில், வங்காளத்திலிருந்த ஆங்கில அதிகாரிகள் நடந்துகொண்டார்கள் என்பது, படிப்படியாக வெளிப்பட்டது. சீக்கிரத்தில் அல்லது சிறிய காலத்திற்குப்பின்னர் அது ஒரு முடிவுக்கு வந்தே தீர வேண்டும் என்பது வெளிப்படை. அந்த நெருக்கடி எதிர்பார்த்ததைவிடச் சீக்கிரத்தில் ஏற்பட்டது.

நவாபுவைப் பலப்படுத்தும் கொள்கையை வான்சிட்டார்ட்டு இறுதிவரைக் கடைப்பிடித்தார். பீஹாரின் துணைக் கவர்னரான ராம் நாராயண் என்பவருக்குக் கிளைவ் பாதுகாப்பு அளித்த போது வான்சிட்டார்ட்டு அவரை மீர் காசிம் கையில் ஒப்படைத்தார். மீர் காசிம், அவரிடமிருந்ததைக் கைப்பற்றி, அவரையும் கொன்றார். இவ்விதம் தம் உள்நாட்டு சுதந்தரத்தை உறுதிப்படுத்திய மீர் காசிம், உள்நாட்டு வாணிகம் சம்பந்தமாக, ஆங்கிலேயருடன் தகராற்றில் ஈடுபடுவதற்குத் தகுந்த வலிமை தம்மிடம் இருப்பதாக உணர்ந்தார்.

பேரரசரின் கட்டளையின்படி, வங்காள முழுவதிலும் கட்டணமோ சுங்கவரியோ செலுத்தாமல் வாணிகம் செய்யும் உரிமையை ஆங்கிலேயர்கள் பெற்றிருந்தார்கள். ஆனால்,

தாங்கள் சொந்தமாகச் செய்த வியாபாரத்திற்கும் அச்சலுகை உண்டு என்று கம்பெனியின் பணியாளர்களும் உரிமை கொண்டாடினுர்கள். தவருகப் பயன்படுத்தப்படும் உரிமையை நவாபு எப்பொழுதும் எதிர்த்திருக்கிருர். ஆனல், மற்ற அங்கத்தினர்கள் பணத்திற்காக ஆசைப்பட்டது, ஆங்கிலேயருக்கும் மீர் காசிமுக்கும் இடையில் பலத்த வாதத்திற்குட்பட்ட ஒரு பிரச்சினையாகும்வரையில், இப்பழக்கம் வளர்ந்தது. கடைசியில், 1762-ன் இறுதியில், நவாபுவின் மாங்கீர் என்கிற புதிய தலைநகரில், வான்சிட்டார்ட்டு அவரைச் சந்தித்து, அப்பிரச்சினையில் ஒரு முடிவான ஒப்பந்தத்தைச் செய்துகொண்டார். கல்கத்தாவிலிருந்த மன்றம் இதை அங்கீகரிக்க மறுத்துவிட்டது. அதனல், அவ்வரிகளை ஒழித்துக் கட்ட நவாபு முடிவு செய்தார்; இதை எதிர்த்து ஆங்கிலேயர் கூக்குரலிட்டு, மற்ற வணிகர்களுக்கில்லாத இச்சலுகையை மாற்றக் கூடாதென்று வற்புறுத்தினர். பாட்னுவிலிருந்த ஆங்கிலப் பண்டசாலையின் தலைவர் எல்லிஸ் (Ellis) என்பவர் அதை ஆங்கிலேயரின் உரிமை எனவும் சலுகை எனவும் நினைத்து, முரட்டுத்தனமாக அதைச் செயலிற் காட்டும் முயற்சியில் ஈடுபட்டு, பாட்னு நகரத்தைக் கைப்பற்றும் முயற்சியைச் செய்தார். இம்முயற்சி தோல்வியுற்று அவருடைய கோட்டையிலிருந்த படை அழிக்கப்பட்டது. ஆனல், ஆங்கிலேயருக்கும் மீர்காசிமுக்கும் இடையில் (1763) போர் ஏற்பட இந்நிகழ்ச்சிகள் காரணமாயிருந்தன.

ஜூன் 10-ல் மேஜர் ஆடம்ஸ் என்பவர், 1,100 ஐரோப்பியர்களுடனும், 4000 சிப்பாய்களுடனும் மீர் காசிமிடம் போரில் ஈடுபட்டார். ஐரோப்பியரைப் பின்பற்றித் தரப்பட்ட பயிற்சிகள் ஒழுங்கு ஆகியவைகளைப் பெற்ற சிப்பாய்களும், நவாபு கொண்டுவந்த 15,000 வீரர்களுள் இருந்தனர். எண்ணிக்கையில் ஏற்றத் தாழ்வு மிகுதியாய் இருந்த போதிலுங்கூட, காட்வா, மூர்ஷிதாபாது, கிரியா, சூட்டி, உதய்நலா, மாங்கீர் ஆகிய இடங்களில் ஆங்கிலேயர்கள் தொடர்ந்து வெற்றி பெற்ருர்கள். மீர் காசிம் பாட்னுவை யடைந்து அவரிடமிருந்த ஆங்கிலக் கைதிகளையும், அவர்களுடைய பெரிய அதிகாரிகளுள் பலரையும் கொன்றுவிட்டு, அயோத்திக்குப் போய்விட்டார். வங்காளத்தை ஆங்கிலேயரிடமிருந்து திரும்பப் பெறும் எண்ணத்துடன், அவர் நவாபு, சுஜா உத்தௌலா (Shuja-ud-daulah), பேரரசர் இரண்டாம் ஷா ஆலம் (Emperor Shah Alam II) ஆகியவர்களுடன் சேர்ந்து ஒரு கூட்டரசை ஏற்படுத்தினுர். ஆனல், அக்கூட்டரசின் படை, 1764,

அக்டோபர் 22ஆம் தேதி பக்ஸார் (Buxar) என்னுமிடத்தில் மேஜர் ஹெக்டர் மன்ரோ (Major Hector Munroe) என்னும் ஆங்கிலத் தளபதியால் தோற்கடிக்கப்பட்டது. உடனே ஷா ஆலம் ஆங்கிலேயருடன் சேர்ந்து சில நாள்களுக்குப் பிறகு சமாதானம் செய்துகொண்டார். மீர் காசிம், தப்பியோடி, நாடோடியாய் வாழ்ந்து, இறுதியில் டில்லிக்கருகே கி.பி. 1777-ல் இறந்தார்.

மீர் காசிமிற்கு எதிராக நடைபெற்ற—சிறிய ஆனால் முடிவான—போர் நடவடிக்கை, சாதாரணமாகப் புறக்கணிக்கப்பட்டாலும், மிக முக்கியத்துவம் வாய்ந்தது. பிளாசிப் போர் ஆங்கிலேயரின் மேலான படைக்கலங்களின் பலத்தை விடத் துரோகத்தினாலேதான் வெற்றி பெற்றது. வங்காளத்திலிருந்த ஆங்கிலேயரின் உரிமை, அப்போரினாலேதான் ஏற்பட்டதென்றால், வங்காள நாட்டை வென்றது நியாயமான முறையில் நடத்தப்பட்ட போரைவிட, அரசியல் சூழ்ச்சியினாலேதான் ஏற்பட்டது என நேர்மையாகக் கூறலாம். சிராஜ்-உத்தௌலாவின் வீழ்ச்சிக்கு எதிர்பாராத துரோகத்தைக் காரணமாகக் கூறலாம். அதைப் போன்ற ஒரு காரணத்தை மீர் காசிம் தோல்விக்குக் கூற இயலாது. தலைமைப்பதவியைப் பெறும்பொருட்டு இரு போட்டியாளர்களுக்கிடையே ஏற்பட்ட நேரிடைப் போரென அப்போரைக் கருதலாம். அப்போரில் வெற்றி பெற்றால் என்ன நிகழும் என்பதும், தோல்வியுற்றால் எவ்விதப் பாதக விளைவுகள் ஏற்படும் என்பதும் அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் நன்றாகத் தெரியும். அவர் பின்பற்றிய கொள்கையின் விளைவாக, ஆங்கிலேயருடன் ஒரு போர் ஏற்பட்டே தீரும் என்பதை நன்றாக உணர்ந்த மீர் காசிம், தம் படைகளைப் பலப்படுத்தி, மூலசாதனங்களை மிக நல்ல முறையில் சேகரித்து வந்தார். அந்நாளில் இருந்த சராசரி இந்திய அரசருக்கு அவர் எவ்விதத்திலும் திறமையில் குறைந்தவரல்லர். தொடர்ச்சியானதும் முடிவானதுமாக ஏற்பட்ட அவருடைய தோல்வி இராணுவத்திலும் வங்காள ஆட்சி இயந்திரத்திலும் இயற்கையாக அமைந்த குறைபாட்டையே காட்டுகிறது. ஆங்கிலேயருக்கெதிராக அவர் அமைத்த கூட்டரசு, அவர் காலத்திற்கும் மிஞ்சிய திறமையான ஓர் இராஜ தந்திரத்தையே காட்டுகிறது. இந்திய இராணுவம், ஆட்சி அமைப்பு ஆகியவற்றிலிருந்த இயற்கையான குறைபாடுகளே மறுபடியும் அதன் தோல்விக்குக் காரணங்கள். வங்காளத்தை வென்றவர்கள் என்ற ஆங்கிலேயரது உரிமையை, பிளாசிப்போரைவிட, மீர் காசிமுடன் நடத்தப்

பட்ட போரே மிக உண்மையில் உறுதிப்படுத்தியது. எதிர்பாராத நிகழ்ச்சி அல்லது நல்வாய்ப்புகளின் விளைவாகவே, வங்காளத்தில் பிரிட்டிஷ் ஆட்சி' ஏற்பட்டது என்பதையே அவை காட்டுகின்றன. வங்காளத்தில் ஆங்கிலேயர்கள் நன்ருக நிலைபெறுவதற்குப் பிளாசிப் போர் உதவியது என்பது உண்மையில் சரியானதுதான். மீர் காசிமுடன் நடந்த இறுதிப் போரில் இந்நிலைமையை அவர்கள் பூரணமாக உபயோகப்படுத்திக் கொண்டார்கள். இதை ஒப்புக்கொண்டாலும், இறுதியானதும் முடிவானதுமான போராட்டத்தில் இராணுவ அரசியல் அனுகூலங்கள் நவாபுவின் பக்கம் சந்தேகமில்லாமல் இருந்தபோதும், அவருடைய அவமதிப்பான தோல்விகள், வங்காள அரசியலில் இயற்கையாகவும் முக்கியமாகவும் இருந்த குறைபாட்டையே காட்டுகின்றன என நாம் கொள்ளலாம். அம்மாளிகை சரியுமா என்பது கேள்வியன்று; ஆனல், எப்பொழுது சரியும் என்பதே கேள்வி.

## வங்காளத்தில் ஆட்சி புரியும் ஆங்கிலேய வல்லரசு

மீர் காசிமுடன் போர் ஏற்பட்ட உடனே ஆங்கிலேயர், மறுபடியும் மீர் ஜாபரை நவாபுவாகச் செய்து, அவரிடமிருந்து முக்கியச் சலுகைகளைப் பெற்றனர்; 1765ஆம் ஆண்டு ஆரம்பத்தில் அவர் இறந்ததைப் பயன்படுத்தி, மேற்கொண்டு தமது மேலாட்சியை உறுதியான அடிப்படையில் அமைத்துக் கொண்டனர். 1765ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 20ஆம் தேதி ஏற்பட்ட ஒப்பந்தத்திலிருந்த வெளிப்படையான நிபந்தனைகளை ஒப்புக்கொண்ட பிறகுதான், மீர் ஜாபரின் மகனுரான நிஜாம் உத்தௌலா (Najam-ud-daulah) தம் தகப்பனுரின் வாரிசாக்கப்பட்டார். ஆட்சி செலுத்தும் முழு அதிகாரமும் துணைச்சுபேதார் என்கிற மந்திரியின் கையில் விடப்படவேண்டும் என்றும், அம்மந்திரியை ஆங்கிலேயர்களே நியமிப்பார்கள் என்றும், அவர்களுடைய அனுமதியின்றி அம்மந்திரியை நீக்க முடியாதென்றும் அதில் குறிக்கப்பட்டிருந்தன. இப்படி ஆட்சியின் மேலதிகாரம் ஆங்கிலேயர் கைக்கு மாறி, நவாபுவைப் பெயரளவுக்கு அரசராகச் செய்தது.

கிளைவ் வங்காளத்தின் கவர்னராக இரண்டாம் முறை (1765 மே) வந்தபோது, இந்நிலைமைதான் இருந்தது. சில

முக்கிய, சிக்கலான பிரச்சினைகளை அவர் எதிர்நோக்க வேண்டியிருந்தது. முதலில் பேரரசர் இரண்டாம் ஷா ஆலத்துடனும், மீர் காசிமை ஆதரித்து பக்சாரில் தோற்கடிக்கப் பட்ட அயோத்தி நவாபுவுடனும் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அவருடைய பெயரையும் நிலையையும் தமக்குச் சாதகமாக உபயோகப்படுத்துவதற்குப் பேரரசரின் அதிகாரத்தை அவருக்குத் திரும்பவும் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம், ஆங்கிலப் பணியாளர்களிடையே பரவி யிருந்தது. இக்கொள்கையைப் பின்பற்றிய வான்சிட்டார்ட்டு அயோத்தியைத் தருவதாகப் பேரரசருக்கு உறுதியளித்திருந் தார். ஆனால், கிளைவ் இக்கொள்கையைக் கைவிட்டு அலகா பாது உடன்படிக்கையைச் செய்தார். இதன்படி நவாபு கொடுத்த ரூபாய் ஐம்பது லட்சத்திற்குப் பதிலாக அவருக்கு அயோத்தியைத் திரும்பக் கொடுத்தார். அலகாபாதும் அதைச் சுற்றியிருந்த இடமும், அயோத்தியிலிருந்து பிரிக்கப் பட்டு, பேரரசர் ஷா ஆலத்திற்குக் கொடுக்கப்பட்டன. இச் சலுகைகளுக்கீடாக, பேரரசர் ஓர் அரசக் கட்டளையின்படி கிழக்கிந்தியக் கம்பெனிக்கு வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாகாணங்களில் வரி வசூலிக்கும் 'திவானி' உரிமையை 1765, ஆகஸ்டு, 12ஆம் தேதி வழங்கினர்.

கிளைவ் பின் பற்றிய கொள்கையிலிருந்து விவேகம் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இரண்டாம் ஷா ஆலத்தின் உரிமையை ஆதரிப்பதால், தடுக்க முடியாதபடி உண்டாகும் முடிவில்லாத போர்களைக் கம்பெனிக்குக் கொடுப்பதற்குப் பதிலாக அயோத்தி என்கிற இடைப்படுநாட்டை (Buffer State) கிளைவ் ஏற்படுத்தினர்; பண ஆதாயத்தாலும் நன்றி உணர்ச்சி யாலும் உந்தப்பட்டு, அவ்வரசர், ஆங்கிலேயருடன் நட்புடன் இருந்தார். அதே சமயத்தில், வங்காளத்திலிருந்த ஆங்கி லேயரின் அதிகாரத்திற்குச் சட்ட பூர்வமான அங்கீகாரத்தை யும் அவர் பெற்றுத் தந்தார். குழப்பம் மிகுந்த அக்காலத்தி லுங்கூட, இவ்வங்கீகாரம் மிகுந்த பயனை அளித்தது.

அதன் பிறகு, கிளைவ் கம்பெனியைச் சீர்திருத்த முயன் ருர். கம்பெனியின் பணியாளர்கள் ஒழுக்கங்கெட்டிருந்தார் கள். இலஞ்சமும், ஊழலும் தலை விரித்தாடின. ஒவ்வொரு நவாபுவும் பதவிக்கு வரும் சமயத்தை, நிஜாம் உத்தௌலா வின் வாரிசு போன்ற இயற்கையான வாரிசு உரிமையைப் பெறும் பொழுதும், ஏராள வெகுமதிகளைப் பெற்று உள் நாட்டு வாணிகத்திலிருந்த தனிப்பட்ட உரிமைகள் யாவும்

எல்லா வழிகளிலும் தவருகப் பயன்படுத்த ஆங்கிலேயர் உபயோகித்தனர். மிகுந்த எதிர்ப்புக்கிடையில் பரிசு பெறும் வழக்கத்தை கிளைவ் ஒழித்தார்; தனிப்பட்ட வாணிகத்தில் நடந்த தவறுகளை அவர் தடுத்தாலும், உப்பு வியாபாரத்தின் லாபத்தைக் கம்பெனியின் சிவில், இராணுவப் பணியாளர்களுக்குக் கொடுக்கும் எண்ணத்துடன் அதை மட்டும் அங்கீகரித்தார். ஆனல், டைரக்டர்கள் இதை ஏற்க மறுத்தார்கள். உப்பு வாணிகத்தில் தனிச்சலுகை உண்டாக்கும் திட்டம் கைவிடப்பட்டது.



கிளைவுக்கு வங்காளத் திவானி வழங்கப்படுதல்

இராணுவ அதிகாரிகள் சட்டவிரோதமான வழியில் பல ஆண்டுகளாக வாங்கி வந்த படியைக் (பேட்டா) கிளைவ் நிறுத்திவிட்டார். இதிலும், அவருக்குப் பெருத்த எதிர்ப்பு ஏற்பட்டு, அதிகாரிகள் எல்லோரும் ராஜிநாமா செய்வதாகப் பயமுறுத்தினர். ஆனல், படிப்படியாக எதிர்ப்புக் குறைந்தது. ஒரு தெளிவான திட்டத்தின் மூலம் பேட்டா அல்லது படியைக் கொடுக்கும் முறையைக் கிளைவ் ஒழுங்குபடுத்தினர்.

நன்மைக்காக 1767ஆம் ஆண்டில், கிளைவ் இந்தியாவிலிருந்து சென்றார்; இரண்டு ஆண்டுக்கும் குறைந்த காலத்தில், கம்பெனியின் உள்நாட்டு ஆட்சியைச் சீர்படுத்தி, வங்காள அரசாங்கத்துடன் இருந்த உறவைத் தெளிவான, சட்ட

பூர்வமான அடிப்படையில் ஏற்படுத்தினர். பிளாசியில் பெற்ற வெற்றியின் மூலமாகவும், அதன் பின் செய்த சீர்திருத்தங்கள் மூலமாகவும், பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை வங்காளத்தில் அமைப்பதற்கான அடிப்படையை அவர் அமைத்தார். போரிலும் சமாதானத்திலும் புகழ் பெற்று, தாய் நாட்டிற்காக ஒரு மாபெரும்பேரரசை உண்டாக்கிய பிரிட்டிஷ் படைத் தலைவர்களின் வரிசையிலும் சிறந்த ஆட்சியாளர்கள் வரிசையிலும் அவர் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறார். அவருடைய திறமை, விடாமுயற்சி, சுறுசுறுப்பு, முன்னோக்கு ஆகியவைகள் மிக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. மனத்திற்கொண்ட குறிக்கோளை எப்பொழுதும் நிதானமாகவும் தெளிவாகவும் உணர்ந்து செயலாற்றுவார். உயர்ந்த கற்பனைத் தத்துவமும், அனுபவ சாத்தியமான சிறந்த பொது அறிவும் அருமையாக ஒன்று சேர்ந்திருப்பதை நாம் அவரிடத்தில் காண்கிறோம்.

கிளைவுக்குப் பிறகு வான்சிட்டார்ட்டு என்பவர் பதவி ஏற்றார். வான்சிட்டார்ட்டுக்குப் பிறகு கார்டியே (Cartier) என்பவர் பதவிக்கு வந்தார். இவருடைய வலிவற்ற ஆட்சியின் போதுதான், கிளைவ் ஏற்படுத்திய இரட்டை ஆட்சியின் (இதிலேதான், உண்மையில் அதிகாரத்தை ஆங்கிலேயரும் பெய்ருக்கு நவாபுவும் பெற்றிருந்தனர்.) குறைபாடுகள் தெளிவாகத் தெரிந்தன. கொடுமை, ஊழல், தொல்லை ஆகியவற்றால் நாடு துன்பப்படும்பொழுது, 1770ஆம் ஆண்டில் ஒரு கொடிய பஞ்சம் ஏற்பட்டு, இத்துன்பங்களை அதிகப்படுத்தியது. 1769, மே, 24ஆம் தேதி ரிச்சர்டு பீச்சர் (Richard Becher) என்கிற கம்பெனிப் பணியாளர், டைரக்டர்களின் மன்றத்தின் இரகசியக் குழுவுக்குப் பின் வருமாறு எழுதினர்:

"கம்பெனி திவானி உரிமை பெற்ற பிறகு மக்கள் நிலை, முன்பிருந்ததைவிட மோசமான நிலையில்தான் இருக்கிறது என்பதைத் தகுந்த காரணங்களைக்கொண்டு நினைக்கும் பொழுது ஆங்கிலேயனுக்கு அது வருத்தத்தையே தருகிறது; ஆயினும், இவ்வுண்மை ஐயமற்றது; நியாயமற்ற கொடுங்கோன்மை ஆட்சியின்கீழும் செழிப்புடன் இருந்த இந்நாடு அழிவுப்பாதையை நோக்கிச் செல்கிறது."

முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது எதுவும் இக்காலத்தில் நிகழவில்லை. அடுத்து வந்த கவர்னர், வாரன் ஹேஸ்டிங்ஸ் (Warren Hastings, 1772) காலத்திலேதான், வரலாற்றின் ஒரு புதிய கட்டத்திற்கு நாம் செல்கிறோம். இவைகளைப் பற்றி மற்ற அத்தியாயங்களில் விவரிக்கப்படும்.

# 3. பிரிட்டிஷ் ஆட்சியின் வளர்ச்சி (1765–1798)

## (1) ஆங்கில-மராட்டியரின் உறவுகள்

### அ. முதல் ஆங்கில-மராட்டியப் போர்

பானிப்பட்டுத் தோல்வியினால் இழந்த பலத்தை மீண்டும் பெற்ற மராட்டியர்கள், கி.பி. 1770-ல் மறுபடியும் வடக்கில் தோன்றி, பரிதாப நிலையிலிருந்த டில்லியின் பேரரசரான இரண்டாம் ஷா ஆலத்தை ஒரு சில சலுகைகளுக்காகத் தலை நகருக்குப் பாதுகாப்புடன் அழைத்துச் செல்வதாகக் கூறி, அவரைத் தம் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வந்தனர். வடக்கில் மராட்டியர்கள் மீண்டும் எழுப்பிய உரிமைகளைத் தடுக்கும் நோக்கத்துடன், 1773 செப்டெம்பரில் வாரன் ஹேஸ்டிங்ஸ், வாரணாசி உடன்படிக்கையைச் செய்துகொண்டார். இதற்கிடையில் மராட்டியர்கள், எதிர்பாராத மிகக் கொடுமையான துயரால் வருந்த நேரிட்டது. கி.பி. 1772-ல் இளைஞரான முதலாம் மாதவராவ் என்ற பேஷ்வா இறந்தார். இறந்த பேஷ்வாவின் சிற்றப்பரான ரகுநாதராவ் அல்லது ரகோபாவின் மிதமிஞ்சிய பேராசை காரணமாகவும், மாதவராவின் சகோதரரும் வாரிசுமான நாராயணராவின் வலிமையற்ற தன்மையினாலும், மராட்டியர்களுக்குள் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. தம் சிற்றப்பரின் சூழ்ச்சியைத் தடுத்து, அவரைச் சமரசம் செய்யும் முயற்சியில் முதலாம் மாதவராவ் வெற்றி பெற்றார். ஆனால், அவருக்கு வாரிசாய் வந்தவர், அற்பச் செயல்களில் விருப்பமுடைய அனுபவமற்ற இளைஞர், ரகோபாவிடம் நல்ல உறவுடன் இருக்க முடியாததால் அவரைச் சிறையில் அடைத்தார். இதனால், வெறுப்புற்ற காலாட்படையின் உதவியுடன், ரகோபா, ஒரு சதித்திட்டத்தில்

ஈடுபட்டு, 1773, ஆகஸ்டு, 30ஆம் தேதி தம் சிற்றப்பரின் கண் முன்னேயே நாராயணராவ் படுகொலை செய்யப்பட்டார்.

இப்பொழுது ரகுநாதராவ் பேஷ்வாவாக ஒப்புக்கொள்ளப் பட்டாலும், ஒரு சில மாதங்கள் வரையிலுமே எதிர்ப்பில்லா மல் அவர் அதிகாரம் நடத்த முடிந்தது. அதிருஷ்டவசமாகப் பானிப்பட்டுப் போரில் தப்பிப் பிழைத்த அந்தண இளைஞரான நானா பட்னவிஸ் (Nana Fadnavis) தலைமையின் கீழ், பூனாவில் பலம் பொருந்திய ஒரு கட்சி இவரை எதிர்க்க ஆரம்பித்தது. பேஷ்வா இறந்த பிறகு அவர் மனைவியான கங்காபாய்க்கு மறு வருடத்தில் ஒரு குழந்தை பிறந்தது. இது மராட்டியக் கூட்டரசின் தலைவர்களுக்கு ஒரு நல்ல சந்தர்ப்பத்தைக் கொடுத்தது. அவர்கள் உடனே அக்குழந்தையைப் பேஷ்வா என அங்கீகரித்தார்கள்; அவன் பெயரில் அரசப் பிரதிநிதி ஆட்சி சபை ஒன்றை உண்டாக்கினார்கள். தமது முயற்சியில் தோல்வியுற்றுத் தம் மாகாணங்களை விட்டு வெளியேற்றப்பட்ட ரகுநாதராவ், பம்பாயிலிருந்த ஆங்கி லேயரின் உதவியை நாடினார். இப்படிக் கருநாடகத்திலும் இந்தியாவின் மற்றப் பாகங்களிலும் இந்திய அரசர் களுக்குள்ளும் தலைவர்களுக்குள்ளும் நடந்த உள் நாட்டுப் பூசல் களில் தலையிட ஆங்கிலேயருக்கு ஒரு சந்தர்ப்பத்தை அளித் தனர்.

பம்பாயிலிருந்த ஆங்கிலேயர்கள் பூனாவிலிருந்த மராட்டிய ஆட்சியுடன் சமாதான முறையில் இருந்தாலும், பம்பாயைச் சார்ந்துள்ள சில கடற்கரைப் பிரதேசங்களைப் பெற்றுத் தம் நிலையை உறுதிப்படுத்திக்கொள்ளும் எண்ணமே ரகுநாத ராவை ஆதரிக்குமாறு அவர்களைத் தூண்டியது. ரகுநாதராவ் கோரியவாறு 1775, மார்ச்சு, 7-ல் ஆங்கிலேயர் சூரத்து உடன் படிக்கையை அவருடன் செய்துகொண்டனர். இதன்படி 2,500 பேருடன் ரகுநாதராவை ஆதரிக்க ஒப்புக்கொண்டனர். அப்படைக்குச் செலவாகும் தொகையைக் கொடுப்பதற்கும் ஆங்கிலேயருக்கு சால்செட்டு (Salsette) பாஸ்ஸீன் (Bassein) என்கிற இடங்களையும், புரோச்சு, சூரத்து மாவட்டங்களின் வரியில் ஒரு பகுதியையும் கொடுக்க ஒப்புக்கொண்டார்; அதுவுமன்றி, கம்பெனியின் பகைவர்களிடத்தில் எவ்வித உறவும் கொள்வதில்லை எனவும், பூனா ஆட்சியுடன் செய்யும் எவ்வித உடன்பாட்டிலும் ஆங்கிலேயரைச் சேர்த்துக் கொள்வ தாகவும் உறுதியளித்தார். கர்னல் கீட்டிங் (Colonel Keating) தலைமையின் கீழ்ப் புறப்பட்ட பிரிட்டிஷ் படையின் ஒரு பகுதி,

1775, பிப்பிரவரி, 27-ல் சூரத்தை அடைந்தது. கர்னல் கீட்டிங் ரகுநாதராவ் ஆகியோர்களின் கூட்டு இராணுவம், பூனுவின் துருப்புகளை ஆனந்த நகரத்திற்கும், மஹி நதிக்கும் இடையிலிருந்த அர்ராஸ் சமவெளியில் மே, 18-ல் சந்தித்துத் தோற்கடித்தன.

ஆனால், கல்கத்தாவிலிருந்த தலைமை மன்றத்தின் உத்தரவில்லாமல் பம்பாயிலிருந்த அரசாங்கம் சூரத்து உடன்படிக்கையைச் செய்துகொண்டு போரையும் ஆரம்பித்துவிட்டது. சூரத்து உடன்படிக்கையை அங்கீகரிக்க வாரன் ஹேஸ்டிங்ஸ் விரும்பினாலும், மன்றத்தில் பெரும்பான்மையாய் இருந்த அவர் எதிரிகள் இதையும் எதிர்த்தார்கள். அதனால், கல்கத்தாவிலிருந்த மன்றம், பம்பாய் மன்றத்தின் 'தகுதியற்ற, அபாயகரமான, சட்ட விரோதமான, நியாயமற்ற செய்கையைக் கண்டித்து, கம்பெனியின் துருப்புகளைப் பின் வாங்கும்படி மே, 31-ல் உத்தரவிட்டது; அவ்விதம் 'உடனடியாகப் பின்வாங்கும்போது அவர்கள் பாதுகாப்பிற்கு அபாயம் நேரிடாதபடி' பார்த்துக்கொள்ளவும் கடிதம் எழுதியது. பூனு அரசப் பிரதிநிதி ஆட்சியுடன் ஓர் உடன்பாடு காணச் சில மாதங்களுக்குப் பிறகு கர்னல் உப்டன் (Colonel Upton) என்பவரைப் பூனுவிற்கு அனுப்பியது. அதன்படி கர்னல் உப்டன் என்பவர் பூனு அதிகாரிகளுடன் புரந்தர் உடன்படிக்கையைக் கி.பி. 1776ஆம் ஆண்டு, மார்ச்சு, முதலாம் நாளில் செய்துகொண்டார். இதன்படி சூரத்து உடன்படிக்கை அழிக்கப்பட்டது; ஆங்கிலேயர்கள் பெற்ற சால்செட்டும், புரோச்சிலிருந்து பெற்ற வரியும் உறுதி செய்யப்பட்டன. பூனுவிலிருந்த அரசப் பிரதிநிதியின் ஆட்சி, ஆங்கிலேயருக்கு அவர்கள் தங்கள் பக்கம் போரிடுவதற்காகப் பன்னிரண்டு லட்சம் ரூபாய் கொடுக்கவும் ஒப்புக்கொண்டது. ரகோபாவை ஆதரிப்பதில்லை என்றும், பேஷ்வா அரசாங்கத்திடமிருந்து மாதந்தோறும் ரூபாய் 25,000 பெற்று குஜராத்திலுள்ள கொபர்கான் (Kopargaon) என்னும் இடத்தில் அவர் வாழ வேண்டும் என்றும் ஆங்கிலேயர்கள் உறுதி மொழி அளித்தார்கள்.

இவ்வுடன்படிக்கை நிறைவேறவில்லை. பம்பாய் அரசாங்கம் இவ்வுடன்படிக்கையின் நிபந்தனைகளை விரும்பாமல், உடன்படிக்கைக்கு விரோதமான வகையில் உப்டனது எதிர்ப்பு இருந்துங்கூட ரகோபாவிற்கு அடைக்கலம் அளித்தனர். பூனுவிலிருந்த தலைவர்களும் அதிலிருந்த நிபந்தனை

களைப் பூர்த்தி செய்யவில்லை. 1777-ல் துணிகரச்செயல் புரியும் சவாலியே தே சென் லுபின் (Chavalier de St. Lubin) என்ற பிரெஞ்சுக்காரரை நானு பட்னுவிஸ் நன்கு வரவேற்று, மேற்கிந்தியாவில் ஒரு துறைமுகத்தைத் தருவதாகவும் வாக்களித்தார். இச்செய்கை தென்னிந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் சூழ்ச்சியைப் பற்றிப் பம்பாயிலிருந்த மன்ற அங்கத்தினர்கள் சந்தேகம் கொள்ள உதவியது. டைரக்டர்களின் மன்றம் பல கடிதங்களின் மூலம் பம்பாய் அரசாங்கத்தினர்கள் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் ஆதரித்தது. அதனுல், பம்பாய் அரசாங்கம் மறுபடியும் போரைத் தொடங்கி, 600 ஐரோப்பியர்களும் 3,300 சிப்பாய்களும் கொண்ட ஒரு படையைக் கர்னல் இகெர்ட்டன் (Colonel Egerton) என்பவர் தலைமையில் பூனுவை நோக்கி, 1778 நவம்பரில் அனுப்பியது. உடல் நலமின்மை காரணமாக, இகெர்ட்டன் என்பவர் கர்னல் காக்பர்ன் (Colonel Cockburn) என்பவருக்கு 1779ஆம் ஆண்டு ஜனவரியில், படைத் தலைமையை மாற்றிக்கொடுத்தார். ஜனவரி 9ஆம் தேதி பிரிட்டிஷ் துருப்புகள் மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்த டெலிகான் (Telegaon) என்ற இடத்தில் ஒரு பெரிய மராத்தியப் படையைச் சந்தித்துத் தோல்வி யடைந்ததனுல், வாட்கான் (Wadgaon), என்னும் அவமானமான உடன்படிக்கையில் கையெழுத்திட நேரிட்டது. அதன்படி 1773ஆம் ஆண்டில் பம்பாய் அரசாங்கம் கைப்பற்றிய எல்லா இடங்களையும் மீண்டும் தரவேண்டும் என்பதும், வங்காளத்திலிருந்து வரும் படையை வாப்பஸ் பெறுவதென்பதும், புரோச்சு வரியில் ஒரு பகுதியைச் சிந்தியா பெறுவதென்பதும் ஒப்புக்கொள்ளப் பட்டன.

கவர்னர்-ஜெனரல் இப்படிப்பட்ட அவமான உடன்படிக்கையை ஏற்க மறுத்துப் பின்வருமாறு எழுதினுர்: 'நாங்கள் முன்பே, வாட்கான் உடன்படிக்கையை ஏற்க மறுத்து விட்டோம்; நம் நாட்டின் புகழுக்கு ஏற்பட்ட அவமானத்தை விரும்பும் வகையில், சுலபமாக நீக்குவோம்.' அவர் தம்முடனிருந்தவர்களின் வெறுக்கத் தகுந்த எதிர்ப்பிலிருந்து விடுபட்டவுடனே, கம்பெனியின் புகழை மீண்டும் பெறுவதற்கான செயல்களில் ஈடுபட்டார். கர்னல் கொட்டார்டு (Colonel Goddard) தலைமையின்கீழ் வங்காளத்திலிருந்து அனுப்பப்பட்ட வலிமை மிக்க ஒரு படை மத்திய இந்தியாவின் இடையே புகுந்து, பிப்பிரவரி 15-ல் அஹமதாபாதைக் கைப்பற்றி, 1780 டிசம்பர், 11ஆம் தேதி பாஸ்ஸீன்

என்ற நகரைப் பிடித்தது. 1781, ஏப்பிரல் மாதத்தில் பூனு விற்கு முன்னேறிச் செல்ல நேரிட்டது. இதற்கிடையில் வங்காளத்திலிருந்து ஹேஸ்டிங்ஸினுல், சிந்தியாவின் பழைய பகைவரான கோஹாடு (Gohad) ராணுவிற்கு உதவியாக அனுப்பப்பட்ட கேப்டன் பாப்ஹாம் (Captain Popham) என்பவர் ஆகஸ்டு 3ஆம் தேதியன்று, மதில் சுவர்களில் ஏணியில் ஏறிக் குவாலியரைப் பிடித்தார். ஜெனரல் காமக்குங் கூடச் (General Camac) சிந்தியாவை 'சிப்ரி' (இக்கால சிவ்பூர்) என்ற இடத்தில் 1781, பிப்பிரவரி, 16ஆம் தேதி தோற் கடித்தார்.

இவ்வெற்றிகளினுல் ஆங்கிலேயரது புகழ் அதிகரித்தது. மராத்தியக் கூட்டரசின் தலைமைப் பதவியைப் பெறுவதற்கு நெடுங்காலமாக முயன்று வந்த மஹதாஜி சிந்தியா என்பவர் வடவிந்தியாவில் கட்டுப்பாடற்ற நிலைமையை விரும்பித் தம் கருத்தை மாற்றிக்கொண்டு ஆங்கிலேயருடன் சேர்ந்து கொள்ள விரும்பினுர். அதனுல், பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி, தாம் ஆங்கிலேயருக்கும் பூனு அரசாங்கத்திற்கும் இடையே ஓர் உடன்படிக்கையைச் செய்து தருவதாக 1781ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 13ஆம் தேதி உறுதியளித் தார். 1782, மே 17ஆம் தேதி சால்பை உடன்படிக்கை ஏற்பட் டாலும், 1783, பிப்பிரவரி, 26ஆம் தேதி வரையில் அது நானு பட்னவிஸால் அங்கீகரிக்கப்படவில்லை. இதன்படி ஆங்கிலேய ருக்குக் கொடுக்கப்பட்ட சால்செட்டு உறுதிப்படுத்தப் பட்டது; ஆங்கிலேயரும் மாதவராவ் நாராயண் என்பவரை உரிமையுள்ள பேஷ்வா என ஒப்புக்கொண்டனர். ரகோபா விற்குப் பென்ஷன் (ஓய்வு ஊதியம்) கொடுக்கப்பட்டது. ஜம்னுவிற்கு மேற்கேயிருந்த எல்லா இடங்களையும் சிந்தியா மறுபடியும் பெற்ருர்; இவ்வுடன்படிக்கையில் சேராத ஹைதர் அலி, ஆற்காட்டின் நவாபுவிடமிருந்து வென்ற எல்லா இடங்களையும் கொடுத்துவிட வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது; இப்படி இந்த உடன்படிக்கை, போருக்கு முன்னிருந்த நிலைமையையே ஏற்படுத்தியது. ஆங்கிலேயர்கள் மிகுந்த பணமுடைக்கு ஆளாக்கப்பட்டு, அதனுல் ஹேஸ்டிங்ஸ் நிதி சம்பந்தமான தவருன வழிகளைக் கையாண்டாலும், இந்த உடன்படிக்கையால் ஆங்கிலேய ருக்குக் கிடைத்த முக்கியமான ஆதாயங்கள் மிகவும் பெரு மைப்படத்தக்கனவாய்' இல்லை. ஆயினும், பிரிட்டிஷ் இந்தியா வில் தலைமை பெற்ற வரலாற்றில் இது ஒரு திருப்புக் கட்டத் தையே குறிக்கிறது. இது 'இருபது ஆண்டுகளுக்கு மராத்தி

யர்களுடன் சமாதானத்தைக் கொடுத்து, திப்பு, பிரெஞ்சுக் காரர்கள் போன்ற பகைவர்களைத் தடைகள் இல்லாமல் எதிர்த்துப் போரிடுவதற்கும், நைஜாமையும் அயோத்தி நவாபுவையும் தம் அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவரவும் உதவியது. இந்திய அரசியலைக் கட்டுப்பாடு செய்யக்கூடிய சத்திவாய்ந்த அரசாக, சந்தேகத்திற்கு இடமில்லாதபடி, ஆங்கிலேயரை ஏற்படுத்தியதற்கும், 1818க்குப் பிறகு அவர்கள் தலைமை அரசாக மாறியதற்கும், சால்பை உடன் படிக்கையின் மூலம் எழுந்த நிலைமையே காரணம் என்று நாம் சொல்வோமானல், அது அவ்வுடன்படிக்கையின் முக்கி யத்துவத்தை மிகைப்படுத்துவதாகும்.

உண்மையாக, இந்தியாவில் மிக நெருக்கடியான நிலை மையிலிருந்த ஆங்கிலேயரின் நிலைமையை ஹேஸ்டிங்ஸ் பாது காத்தார் என்ருலும், அது முழுப்பாதுகாப்புடன் இருக்கிறது என்று சொல்ல இயலாது. மராத்தியர்கள், திப்பு ஆகிய வர்களின் பகைமையையும் பொருமையையும் கம்பெனி எதிர் நோக்க வேண்டியிருந்தது; பஞ்சாபிலும், நேப்பாளத்திலும், பர்மாவிலும் எழுந்த வல்லரசுகளின் நடவடிக்கைகளிலிருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டியிருந்தது. காரன் வாலிஸ் பிரபு வரும் வரையில் ஒன்றரை ஆண்டு கவர்னர் ஜெனரலாக, தற்காலிகமாகப் பதவி வகித்த, மக்பர்சன் (பின்பு சர் ஜான்) என்ற மன்றத்தின் மூத்த அங்கத்தின ருக்கு, அவருக்கு முன்னிருந்தவர்கள் பின்பற்றிய கொள்கை யைத் திறமையுடன் கடைப்பிடிக்கும் ஆற்றலோ நேர்மையோ இல்லை. அதைத் தவிர, 1784-ல் உண்டான பிட்டு இந்தியச் சட்டத்தின் 34ஆம் விதி, இந்திய அரசியலில் தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிக்கும்படி கம்பெனிக்குக் கட்டளை யிட்டது. இந்தியாவில் கம்பெனிக்குப் பாதுகாப்பற்ற நிலைமை இருந்ததால், இக்கொள்கையை அப்படியே பின்பற்றக் காரன்வாலிஸ் (Cornwallis), ஷோர் (Shore) என்பவர்களாலும் இயலவில்லை. ஆனால், ஹேஸ்டிங்ஸ் இந்தியாவை விட்டுப் போனதிலிருந்து வெல்லெஸ்லி பிரபுவின் ஆட்சி ஆரம்பிக்கும் வரையில் இருந்த காலத்தில், இந்தியாவிலிருந்த ஆங்கிலே யர்கள் அரசியல் நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை.

## ஆ. சால்பைக்குப் பின் மராத்தியர்கள்

உறுதியற்ற விசுவாசத்தைக் கொண்ட அங்கத்தினர் களின் 'பரஸ்பர அவநம்பிக்கையினுலும், தன்னலமற்ற சூழ்ச்சியினுலும்' அச்சமயத்தில் மராத்தியக் கூட்டரசு

உண்மையில் மிகவும் வலிமையற்று இருந்தது. ஆனால், மராத்தியர்களிடையே அஹல்யா பாய், மஹாதாஜி சிந்தியா, நானா பட்னவிஸ் போன்ற ஆற்றல் நிறைந்த சிலர் தோன்றினர். மராத்திய நிலைமைகளை நேரில் விசாரித்தறிந்தவரான சர் ஜான் மால்காம் (Sir John Malcolm) என்பவர் கூறியபடி, 'அஹல்யா பாயின் உள்நாட்டு ஆட்சியில் ஏற்பட்ட வெற்றி, மிகவும் அதிசயிக்கத் தக்கது.[1] அவருடைய நடத்தையைப் பற்றிக்கொள்ளக்கூடிய நிதானமான கருத்தில், அங்கீகரிக்கப்பட்ட அவரது இடத்தில், எப்பொழுதும் தோன்றவியலாத, தூய்மையான, பின்பற்றத்தக்க அரசிகளுள் ஒருவராய் உண்மையில் அவர் காணப்படுகிறார்.' 1795-ல் அஹல்யா பாய் இறந்தவுடனே சிறந்த போர்வீரரும், ஆனால் அரசியல் திறமையற்றவருமான துகோஜி ஹோல்கார் (Tukoji Holkar) என்பவர் கைக்கு இந்தூர் அரசாங்கம் மாறியது. 1797-ல் துகோஜி இறந்த பிறகு இந்தூர் நாடு குழப்பத்தில் மூழ்கியது.

அக்காலத்து மராத்தியத் தலைவர்களுள் மிகச் சிறந்து விளங்கியவர் மஹாதாஜி சிந்தியா என்பவரே. சால்பை உடன்பாடு, அவரை 'பிரிட்டிஷ் அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையில் சுதந்தர அரசராக, ஒப்புக்கொண்டது. ஆனால், அதே சமயத்தில் பூனா அரசாங்கத்துடன் அவர் கொண்டிருந்த தொடர்பைக் குறிக்கும் மற்ற எல்லாவிதச் செய்திக் குறிப்பிலும் நிலைநாட்டப்பட்டுவிட்ட முறையை மிக்க கவனத்துடன் நோக்கினார்.' வடவிந்தியாவில் தம் அதிகாரத்தை விரிவு படுத்துவதற்கும், வலுப்பெறச் செய்வதற்கும் புதிய நிலைமையை உபயோகப்படுத்திக்கொண்டார். போரிடுவதில் மராத்தியர்கள் பின்பற்றிய பழைய முறையை வெகு சீக்கிரத்தில் நீக்கித் தம் படையில் ராஜபுத்திரர்களையும் முகம்மதியர்களையும் சேர்த்தார்; சவாயிலிருந்த பிரெஞ்சு இராணுவ வல்லுநரான பெனிவா டி புவாயின் என்பவரையும் மற்றும் பல இனங்களையும் வகுப்புகளையும் சேர்ந்த துணிகரச் செயல்களைச் செய்யும் ஐரோப்பியர் பலரையும் தம் படையில்

1. ஹோல்காரின் பழைய தலைநகரான மகேஷ்வரி என்னுமிடத்தில் முதன் முதல் வைக்கப்பட்டிருந்த சில பத்திரங்கள் அண்மையில் சர்தார் ராவ் பஹாதூர் கிபே, எம். ஏ., என்னும் இந்தூர் நாட்டின் துணை முதலமைச்சரால் வெளியே கொண்டுவரப்பட்டவைகள், (நடவடிக்கைகள், இந்திய வரலாற்றுப் பதிவுக் கட்டுகளின் குழு, 1930 டிசம்பர்) 'இம்மாசற்ற மங்கையான அஹல்யா பாய், தம் காலத்தின் நிகழ்ச்சிகளைத் தூண்ட எவ்விதம் முயன்றார் என்பதைக் காட்டுகின்றன.'

அமர்த்தி, விஞ்ஞான முறையில் ஐரோப்பியர்களின் முறையைப் பின்பற்றித் தமது படையை அமைத்தார். வடக்கில் தமது பேரவாவைச் செயலிற் கொண்டுவரும் நோக்கத்துடன், டில்லிக்குச் சென்று, முதலிலேயே கொடுமை, கலகம், குழப்பம் ஆகியவற்றில் அகப்பட்டு, உதவியற்ற வகையில், பெயருக்கு மட்டும் பேரரசராயிருந்து, இரண்டாம் ஷா ஆலத்தைத் தம் கைப்பொம்மையாக்கி, அவருடைய ஆதிபத்தியம் என்கிற உண்மையற்றதை உபயோகித்து, ஹிந்துஸ்தானத்தில் அதிவிரைவாக மராத்தியத் தலைமையிடத்தை ஏற்படுத்த முற்பட்டார். வக்கீல்-இ-முட்லுக்கு (Wakil-i-mutluq) என்ற பதவியைப் பெயருக்கு அவருடைய அதிபராய் இருந்த பேஷ்வாவிற்குப் பேரரசரிடமிருந்து பெற்றுத் தந்து, தாமும் பேஷ்வாவின் பேரரசுப் படையைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும் பெற்றார். உண்மையில் அவர் வடவிந்தியாவில், 'பெயருக்கு அடிமையாயும், ஆனால் உண்மையில் பரிதாபமான ஷா ஆலம் என்கிற டில்லியின் பேரரசருக்குக் கடுமையான தலைவராயும்' விளங்கினர். 1792-ல் மஹதாஜி, ராஜ புத்திரர்களின் மீதும் ஜாட்டுகள் என்பவர்களின் மீதும், தம் தலைமையை ஏற்படுத்தினர்; வடஇந்தியாவில் அவருடைய ஆட்சி 'புகழின் உச்சக் கட்டத்தை' அடைந்திருந்தது. நானா பட்னவிஸ் என்ற நுண்ணறிவுள்ள அரசியல் வாதி, அதிகாரத்தில் இருந்த பூனவில், தமது செல்வாக்கை ஏற்படுத்துவது அவசியம் என நினைத்தார். இளைய பேஷ்வா மாதவராவ் என்பவருக்கு வெளிப்படையாக மரியாதை தெரிவிக்கும் முறையில் 1792ஆம் ஆண்டு, ஜூனில், தெற்கே சென்றார். வடக்கில் மஹதாஜி சிந்தியா இல்லாதபோது அவருக்கு அண்மையிலிருந்த துகோஜி ஹோல்கார், அவரது அதிகாரத்தை எதிர்த்து டிபுவாயின் என்பவரின் கீழிருந்த சிந்தியாவின் பயிற்சி பெற்ற துருப்புகளால் ஆஜ்மீருக்கு அருகில் இருந்த லக்கேரி (Lakheri) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டார். அவர் ஆவலுடன் எதிர் பார்த்த குறிக்கோளைப் பெறுமுன்னரே, 1794ஆம் ஆண்டு, பிப்பிரவரி, 12-ல் பூனவில் தமது அறுபத்தேழாம் வயதில், காய்ச்சலால் பீடிக்கப்பட்டு இறந்தார். அவருடைய ஏராளமான உடைமைகளையும் இராணுவ ஆதாரங்களையும், அவருடைய பதின்மூன்று வயதுள்ள மருமகரும் தத்துப்பிள்ளையுமான தவுலத்ராவ் சிந்தியா (Daulat Rao Sindhia) என்பவர் வாரிசு மூலமாகப் பெற்றார். 'கிரான்ட் டப்' (Grant Duff) என்பவர், 'பெரிய ராஜதந்திரியும், ஆற்றல் வாய்ந்த இராணுவ அதிகாரியுமான மஹதாஜி சிந்தியா இறந்ததை மராத்தியப் பேரரசையும் இந்தியாவின்

மற்ற நாடுகளையும் பாதித்த மிகப்பெரிய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி' என நியாயமாகக் கருதினார். தங்கள் ஆட்சியை நிறுவுதற்குத் தடையில்லாமல் ஆங்கிலேயருக்கு விடப்பட்ட வடக்கு, மராத்தியத் தலைமையின் விதியை உறுதியாக முடிவு செய்தது. வடக்கில் மஹதாஜிக்கு ஏற்பட்ட வெற்றியை ஆங்கிலேயர்கள் தங்கள் அரசியல் நலனுக்கு விரோதமாகக் கருதினார்கள். ஏனென்றால், 'தாம் ஆக்கிரமிப்புச் செய்வதற்காகத் தீட்டப்பட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்காக விடாது முயற்சி செய்ததைப் பார்க்கும் போது அவர் சில ஆண்டுகள் உயிரோடு இருந்தால் நிச்சயமாக அவர் இங்கிலாந்தின் உரிமைகளுக்குத் தடுக்கவியலாத விரோதியாய் மாறியிருப்பார். ஏனெனில், இங்கிலாந்தின் அரசர்களால் சுறுசுறுப்பாய் இருந்த அவரது மனநிலையைத் தணிக்க இயலாத பேரவாவிற்கோ அவர்கள் பழக்கமில்லாதவர்கள். உண்மையில் ஆங்கிலேயரின் பல பட்டயங்களில் மஹதாஜியின் நடவடிக்கைகளைப் பொறுமையுடன் கண்காணித்ததற்குப் பலவித ஆதாரங்களைப்' பார்க்கிறோம்.

மத்தியிலிருந்த மராத்திய விவகாரங்கள் இப்பொழுது நானாபட்னவிஸின் அதிகாரத்தின்கீழ் வந்தன. நானாவின் குறிக்கோள்களுள் ஒன்று, நருமதைக்குத் தெற்கில் மராத்தியர்கள் இழந்த பிரதேசத்தை மீண்டும் பெறுவதாகும். இப்படிச் செய்வது திப்புச் சுல்தானுடன் மோதுவதில் சென்று முடியும். அதனால், 1784, ஜூலையில் மராத்தியர்கள் நைஜாமுடன் ஒரு நட்புறவு உடன்படிக்கையைச் செய்துகொண்டார்கள். 1785, டிசம்பர், 1ஆம் தேதி ஹரி பந்த் பட்கே (Hari Pant Phadke) என்பவரின் தலைமையின்கீழ், ஒரு மராத்தியப் படை பூனாவிலிருந்து புறப்பட்டது. ஆக்கிரமிப்பாளர்களை எதிர்ப்பதற்காக ஹைதர், வலுவற்ற சில முயற்சிகளைச் செய்தார். ஆனால், ஆங்கிலேயருக்கும் மராத்தியர்களுக்கும் நட்புறவு ஏற்படுமோ எனப் பயந்து சமாதானம் செய்வதற்குப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி, 1787 ஏப்ரலில் அதை முடித்தார். நாற்பத்தைந்து லட்ச ரூபாயையும் பாதாமி, கிட்டூர், நார்குண்ட் முதலிய மாவட்டங்களையும் மராத்தியர்களுக்குக் கொடுப்பதற்கு ஒப்புக்கொண்டு, பின்னவர் கைப்பற்றிய இடங்களை மீண்டும் பெற்றார். திப்புவிற்கும் ஆங்கிலேயருக்கும் போர் ஏற்பட்டபோது (1789–1792) மராத்தியர்களும் நைஜாமும் சேர்ந்த ஓர் அனாக்கிரமிப்புப் பாதுகாப்பு நட்புறவை, மைசூர் சுல்தானுக்கெதிராக, காரன்வாலிஸ் என்பவருடன் செய்து

கொண்டதனல் மராத்தியர்களுக்கும் திப்புவிற்குமிடையே ஏற்பட்ட இந்த உடன்படிக்கை நெடுநாளைக்கு நீடிக்கவில்லை. இந்த முக்கூட்டு நட்புடன்படிக்கை, பிட்டு இந்தியச் சட்டத்தின் 34ஆம் விதிக்கு எதிராய் இருந்தபோதிலும், சில நாள்களுக்கு இந்திய அரசியலில் இது ஒரு நிச்சயமான காரணங்கூருய் இருந்தது.

இது உறுதியற்ற அமைப்பின்மீது எழுப்பப்பட்டதால் அதிகநாள் நீடிக்கவில்லை. ஏனெனில், திப்புவின் ஆக்கிரமிப்பிற்கு எதிராகத் தங்களுடைய நலன்களைப் பாதுகாப்பதற்கே நட்பு நாடுகள் ஒன்ருகச் சேர்ந்தனவேயன்றி, அவை ஒன்றின்மேல் ஒன்று வைத்திருந்த பாசத்தினுல் சேரவில்லை. நைஜாம் மராத்தியர்களின் பழைய எதிரி. ஆதலால், திப்புவின் அபாயம் சிறிது குறைந்தவுடனே, எல்லா மராத்திய தலைவர்களும் பேஷ்வா, தவுலத்ராவ் சிந்தியா, துகோஜி ஹோல்கார், பீராரின் ராஜா ஆகிய அனைவரும் அவருக்கெதிரிகளாய் ஒன்று சேர்ந்தார்கள். சவுத்து, சர்தேஷ்முகி என்கிற வரியை நைஜாம் கொடுக்க வேண்டும் என்ற உரிமையை உடனடியான காரணமாகக் கொண்டு போர் தொடங்கப்பட்டது. நைஜாமின் துருப்புகளுக்கு, ரேமாண்டு (Raymond) என்கிற பிரெஞ்சுக்காரரால் பயிற்சி அளிக்கப்பட்டது. பேச்சு வார்த்தைகள் தோல்வியுற்றதால், இருவரும் தமக்குள் இருந்த வித்தியாசங்களை வாளால் முடிவு செய்ய முனைந்தனர். உதவி செய்யும்படி ஆங்கிலேயரை நைஜாம் வேண்டினுர். அவ்வுதவி கிட்டவில்லை. மராத்தியர்களால் அவர், கர்தா அல்லது குர்தலா (Karda or Kurdala. அஹமத் நகருக்குத் தென்கிழக்கில் ஐம்பத்தாறு மைல்) என்னுமிடத்தில் 1795 மார்ச்சில் தோற்கடிக்கப்பட்டு, ஓர் அவமான உடன்படிக்கையைச் செய்துகொள்ள நேரிட்டது. அதன்படி அவர் ஏராளமான பணத்தையும், பெருநிலப் பகுதிகளையும் கொடுக்க ஒப்புக்கொண்டார். ஷோர் தலையிட்டிருந்தால், போரின் விளைவே வேறுவிதமா யிருந்திருக்கும். அவரைக் குறை கூறுபவர்கள் 1768, பிப்பிரவரி உடன்படிக்கை மூலம் ஆங்கிலேயரின் பாதுகாப்பில் நைஜாம் வைக்கப்பட்டதால் அவ்வுடன்படிக்கையின்படி நைஜாமிற்கு ஆங்கிலேயரது உதவியைப் பெற உரிமை உண்டு என்கின்றனர். பிட்டின் இந்தியச் சட்டத்தின் 34ஆம் விதியின்படி அவ்விதம் தலையிடுவதிலிருந்து அவர் தடுக்கப்பட்டார் என ஷோரை ஆதரித்தவர்கள் விவாதிக்கலாம். அதுவுமன்றி மராத்தியர்கள் ஆங்கிலேயருடன் சமாதானமாய் இருந்தார்கள். ஆங்கிலேயரும்

தம்முடன் சமாதானமாக உள்ள அரசுக்கு எதிராக நைஜாமிற்கு உதவி செய்ய, எவ்வித உடன்படிக்கையும் அவருடன் செய்து கொள்ளவில்லை.[1]

## (2) ஆங்கிலேய-மைசூர் உறவுகள்

### அ. முதல் ஆங்கிலேய-மைசூர்ப்போர்

ஹைதர், திப்பு ஆகியவர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த மைசூர், இந்தியாவிலிருந்த ஆங்கில அரசுக்குப் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பேராபத்தாய்த் தோன்றியது. கருநாடகம் போரில் ஈடுபட்டிருந்தபோதும், வங்காளம் அரசியற் புரட்சியில் சிக்கிக்கொண்டிருந்தபோதும், மைசூரில் ஹைதர் உறுதியுடன் பதவியைக் கைப்பற்றினார். ஆரம்பத்தில் துணிச்சல் வீரராய் (adventurer) இருந்து, மைசூரின் தளவாயாய் அல்லது முதலமைச்சராய் இருந்த நஞ்சராஜ் என்பவரின் கீழ்ப் பணிபுரிந்தார். நஞ்சராஜ் அந்நாட்டில் பெயருக்கு இந்து அரசராய் இருந்தவர் நடைமுறையில் சர்வாதிகாரியாய் மாறிவிட்டார்.

படிப்பற்றவராய் இருந்தபோதிலும், ஹைதர், உறுதியான தீர்மானமும், புகழத்தக்க வீரமும், கூர்மையான அறிவும், ஊகமுள்ள பகுத்தறிவும் கொண்டிருந்தார்; தெற்கில் இருந்த குழப்பமான நிலைமையைப் பயன்படுத்தி, தம் அதிகாரத்தை அதிகரிக்கச் செய்து, தம்மை ஆதரித்தவரின் இடத்தையே பிடித்துக்கொண்டார்; பெட்னூர், சுந்தா, செரா, கனரா, குத்தி போன்றவைகளை வென்றும், தென்னிந்தியாவிலிருந்த பாளையக்காரர்களை அடக்கியும் தம் நாட்டை விரிவுபடுத்தினர்.[2] மிகக் குறுகிய காலத்தில் பதவிக்கு வந்த ஹைதரின் நிலைமையைக்கண்டு மராத்தியர்களும், நைஜாமும்,

1. நைஜாம் 'இரண்டு பெண்சிப்பாய் படைகளை வைத்திருந்தார். அவர்களும் போரிலீடுபட்டு, படையிலிருந்த மற்றவர்களைப் போலவே ஒழுங்கினமாய் நடந்து கொண்டார்கள்'—வங்காளம்-முன்பும் இப்பொழுதும்-1933.

2. பதினெட்டாம் நூற்றாண்டின் இந்திய வரலாறு, பெரும்பான்மையாகப் பதவிக்கு வந்த துணிச்சல் வீரர்களால் ஏற்பட்டது. வங்காளத்தில் அலிவர்திகானும்; அயோத்தியில் சாதத்ஜங்கும், சப்தர் ஜங்கும்; பஞ்சாபில் சயீப்-உத் தௌலாவும் தென்னிந்தியாவில்; நைஜாம்-உல்-முல்கும் ஹைதரும் திப்புவும்.

ஆங்கிலேயர்களும் பொறுமை கொண்டார்கள். மராத்தியர்கள் அவர் நாட்டின்மீது கி.பி. 1765-ல் படையெடுத்தார்கள். குத்தி, சவனூர் ஆகிய இடங்களை விட்டுத்தரவும், முப்பத்திரண்டு லட்ச ரூபாயை நஷ்ட ஈடாகக் கொடுக்கவும் ஹைதர் ஒப்புக்கொள்ள நேரிட்டது. 1766, நவம்பரில் நைஜாம் கொடுத்த வடசர்க்காருக்கு ஈடாக, ஹைதருக்கு எதிராக அவருக்கு உதவி அளிப்பதாக ஆங்கிலேயர் வாக்களித்தனர். சுருங்கக்கூறின், மராத்தியர்களும், நைஜாமும், ஆங்கிலேயர்களும் ஹைதருக்கெதிராக ஒரு முக்கூட்டு ஒப்பந்தத்தில் சேர்ந்தார்கள். ஆனால், மைசூரை முதலில் தாக்கிய மராத்தியர்கள், மைசூரின் தலைவரால் பணம் கொடுத்து விலக்கப்பட்டார்கள். ஜெனரல் ஜோசப் ஸ்மித்து (General Joseph Smith) என்பவரின் தலைமையின்கீழ் இருந்த ஒரு பிரிட்டிஷ் படைப்பகுதியுடன், 1767, ஏப்பிரலில் மைசூரின்மீது நைஜாம் படையெடுத்தார். ஆங்கிலேயரை ஆதரித்த கருநாடகத்தின் நவாபு முகம்மது அலியின் சகோதரரும் விரோதியுமான மாபுஸ்கான் (Mahfuz Khan) என்பவரால் வயமாக்கப்பட்டு, உடனே ஆங்கிலேயரை விட்டுப் பகைவருடன் சேர்ந்துகொண்டார். நிலைமையைத் துணிவுடன் சமாளிப்பதற்குச் சென்னை அரசாங்கம் ஏதும் செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், 1767, செப்டெம்பரில், ஸ்மித்து என்பவர் புதிய பகைவர்களைச் செங்கம் கணவாயிலும், திருவண்ணமலையிலும் தோற்கடித்தார். வெகு சீக்கிரத்தில் உறுதியற்ற நண்பரான நைஜாம், ஹைதரைவிட்டு விலகினர். நைஜாமுடன் சென்னை அரசாங்கம் திறமையற்ற விதமாய்த் தவருன உடன்படிக்கையை 1768, பிப்பிரவரி, 23ஆம் தேதி செய்துகொண்டது. இதன்படி, பழைய உடன்படிக்கையை எவ்வளவு பொறுப்பற்ற முறையில் மீறி நடந்தாரோ, அவ்வளவு பொறுப்பற்ற முறையில் பழைய உடன்படிக்கையின் நிபந்தனைகளையும் உறுதி செய்தார்; 'புரட்சிக்காரன், உரிமையின்றிக் கைப்பற்றியவன்' என்று ஹைதரைக் குறைகூறி, அவரைத் தண்டிப்பதற்காக ஆங்கிலேயருக்கும் கருநாடக நவாபுவிற்கும் உதவியளிப்பதாக ஒப்புக்கொண்டார். நிலையற்ற கொள்கையுடைய நைஜாமுடன் செய்யப்பட்ட இந்த உடன்படிக்கையினல், ஆங்கிலேயருக்குப் பயன் ஏதும் இல்லை என்ருலும், அவசியமில்லாமல் ஹைதரின் கோபத்தைக் கிளறுவதற்கு இது உதவியது. 'மிகுந்த சிக்கல்களை உடைய தொல்லைகளுக்கு எங்களை ஆளாக்கினீர்கள். அவற்றிலிருந்து எப்படி மீளுவதென்பது எங்களுக்குத் தெரியவில்லை,' என்று டைரக்டர்கள் மன்றம் தெரிவித்தது. அவர்கள் இந்தியாவில் பிரிட்டிஷ்

பிரதேசத்தை மேலும் விரிவுபடுத்த விரும்பாமல், தாங்கள் முன்பே பெற்ற பகுதியைப் பாதுகாக்கும் எண்ணத்துடன் பின் வருமாறு எழுதினர்கள்: 'இந்துஸ்தானத்தில் இருந்த பேரரசில் தலையிடுவதில் கம்பெனிக்கு விருப்பமில்லை. நீங்கள் செய்த விவேகமற்ற செயல்கள் நடைபெருதிருந்தால், நாட்டிலிருந்த சுதேச அரசுகளுக்குள் ஒரு சமநிலை ஏற்பட்டிருக்கும். நம்முடைய தலையீடு இல்லாமல் இந்திய அரசுகள் ஒன்றுக்கொன்று தடையாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறோம்.'

நைஜாம் கைவிட்டுச் சென்றாலும், ஹைதர் மிக்க உறுதியுடன் போரிட்டார். பம்பாய்த் துருப்புகளைத் தோற்கடித்து, மங்களூரைக் கைப்பற்றினர்; 1769, மார்ச்சில் சென்னைக்கு அருகே ஐந்து மைலில் தோன்றி, 1769, ஏப்பிரல், 4ஆம் தேதி, ஆங்கிலேயர்கள் தம்முடைய நிபந்தனைகளை ஏற்கும்படி செய்தார். அதன்படி ஒவ்வொருவரும் தாம் தாம் கைப்பற்றிய இடங்களையும் கைதிகளையும் மீண்டும் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. அது ஒரு பாதுகாப்பு நட்புடன்படிக்கையாயும் இருந்தது. ஏனெனில், ஹைதரை எந்த அரசு தாக்கினாலும் உதவி அளிப்பதாக ஆங்கிலேயர் உறுதிமொழி அளித்தனர்.

## ஆ. இரண்டாம் ஆங்கிலேய-மைசூர்ப்போர்

1769ஆம் ஆண்டில் ஏற்பட்ட உடன்படிக்கையின் நிபந்தனைகளைச் சென்னை அரசாங்கம் நிறைவேற்றவில்லை. 1771-ல் மராத்தியர்கள் ஹைதரின் நாட்டைத் தாக்கியபொழுது, ஆங்கிலேயர்கள் அவருடைய உதவிக்கு வரவில்லை. இச்செயல், இயற்கையாகவே மைசூர் அரசருக்குக் கோபத்தை உண்டாக்கியது. அதனால், திரும்பித் தாக்குவதற்காகச் சரியான சமயத்தை அவர் எதிர்பார்த்திருந்தார்; 1779-ல் ஆங்கிலேயருக்கெதிராக ஏற்பட்ட ஒரு பெரிய கூட்டு ஏற்பாட்டில் சேர்ந்தார். அதிருப்தியடைந்த நைஜாமினல் அக்கூட்டு உண்டாக்கப்பட்டது. பம்பாய் அரசாங்கத்துடன் போரிடும் மராத்தியர்களும் அக்கூட்டில் இருந்தார்கள். ஹைதரின் ஆட்சிக்குட்பட்டுப் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான மாஹி என்ற இடத்தை பிரிட்டிஷார்கள் பிடித்ததை ஹைதர் வெறுக்கத் தொடங்கினர். இதனல், தமது நாட்டின் நடுவு நிலைமைக்குப் பாதகமேற்பட்டது எனக்கூறி, அவர் போர் தொடுத்தார். 'இந்துஸ்தானத்தில் இருக்கும்

எல்லா அரசுகளுடனும், எல்லா இடங்களிலும் போர் நடக்கிறது அல்லது நடக்கப்போகிறது,' என ஹேஸ்டிங்ஸ் கூறியபடி போர் நடந்தது. இந்தியாவிற்கு வெளியில், பிரான்ஸ், ஸ்பெயின், ஹாலந்து, புரட்சி செய்த அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் ஆகிய அனைத்தும் இங்கிலாந்திற்கெதிராக ஒன்று சேர்ந்தன. இந்தியாவில் இழந்த நிலையை மீண்டும் பெறுவதற்கு இச்சமயத்தை உபயோகப்படுத்தப் பிரான்ஸ் நினைத்தது.

1780, ஜூலையில் 80,000 வீரர்களுடனும் 100 பீரங்கிகளுடனும் 'அழிவைக் கொண்டு வரும் பெரிய பனி மலையைப் போல'க் கருநாடகச் சமவெளியில் ஹைதர் நுழைந்தார்; கர்னல் பெயிலி (Colonel Bailey) என்பவரின் கீழிருந்த ஓர் ஆங்கிலப் படைப் பகுதியைத் தோற்கடித்து, 1780, அக்டோபரில் ஆர்க்காட்டைக் கைப்பற்றினர். உண்மையில் கம்பெனிக்கு இந்நிலை மிகவும் ஆபத்தானதுதான். சர் ஆல்பிரட் லையால் (Sir Alfred Lyall) கூறியபடி, 'இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரின் நல்வாய்ப்புகள் மிக மோசமான நிலையில் இருந்தன. ஆனல், சீக்கிரத்திலேயே வந்தவாசியின் வெற்றி வீரரும், அப்பொழுது இந்தியாவில் படை முதல்வரும் தலைமை மன்றத்தின் அங்கத்தினருமான சர் ஐயர் கூட்டு என்பவரை பிரிட்டிஷ் படையின் உரிமை புகழ் ஆகியவற்றைக் காப்பாற்றுவதற்காக உறுதியுடன் நின்று வெற்றிகரமாகப் போர் புரிவதற்காக வாரன் ஹேஸ்டிங்ஸ், தெற்குத் திசைக்கு அனுப்பினர்; மேலும், பீரார் அரசரையும், மஹதாஜி சிந்தியாவையும், நைஜாமையும் ஹைதரிடமிருந்து பிரித்துவிட்டார். இவற்றுக்கெல்லாம் மனம் கலங்காமல், தமக்கு இயற்கையாய் அமைந்துள்ள மனவுறுதி, ஆண்மை ஆகியவற்றுடன் ஹைதர் போரைத் தொடர்ந்து நடத்தினர். ஆனல், 1781-ல் பரங்கிப்பேட்டையில் சர் ஐயர்கூட்டு என்பவரால் அவர் தோற்கடிக்கப்பட்டார். 1781, நவம்பரில் நாகப்பட்டினத்தையும், இலங்கையில் மிகச் சிறந்த துறைமுகமான திரிகோணமலையையும் டச்சுக்காரர்களிடமிருந்து ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டனர். கர்னல் பிரெயித்வெயிட்டு (Colonel Braithwait) என்பவரின் கீழிருந்த ஆங்கிலப் படையை மைசூர்த் துருப்புகள் தோற்கடித்தன. 1782 ஆரம்பத்தில் அட்மிரல் சப்ரென் (Admiral Suffren) என்பவரின்கீழ் ஒரு பிரெஞ்சுக் கடற்கரை இந்தியக் கடலுக்கு வந்தது. பிப்பிரவரியில் துய் ஷெமீன் (Du Chemin) என்பவர், 2000 வீரர்களுடன் வந்தார். பிரெஞ்சுக்காரர்களுடனும் மைசூர்த் துருப்புகளுடனும் ஆங்கி

லேயர் முடிவற்ற போரில் ஈடுபட்டு, மழைக்காலம் வந்தவுடன் போரை நிறுத்தினர். மேலும் போரிடுவதற்கு ஹைதரை விதி விட்டுவைக்கவில்லை. அவர் புற்று நோயின் கொடிய விளைவு களால் 1782, டிசம்பர், 7ஆம் தேதி, முதிர்ந்த வயதில் இவ் வுலகை விட்டு நீங்கினர். ஆங்கிலேயரிடத்தில் இருந்த கூட்டு என்பவர், உடல் நலமின்மை காரணத்தால் கம்பெனியின் துருப்புகளுக்கு ஜெனரல் ஸ்டுவர்ட்டு (Stuart) என்பவரை அதிகாரியாக்கி, ஓய்வு பெற்றார். 1783, ஏப்பிரலில் அவர் சென்னையில் இறந்தார்.

இந்திய வரலாற்றில் திறமையுள்ள தனிப்பட்ட பண்புடை யவராய் ஹைதர் திகழ்ந்தார். பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட குழப்பத்தில் அறியப்படாத நிலையிலிருந்து அரசைப் பெறும் அளவுக்கு அவர் நிலை உயர்ந்தது. முற்றிலும் சொந்த முயற்சியாலேயே முன்னுக்கு வந்தவரான அவர், உறுதியுள்ள தீர்மானம், புகழத்தக்க ஆண்மை, கூர்த்த அறிவு ஆகியவை களைப் பெற்றிருந்ததால், அவருடைய படிக்க முடியாத நிலையை ஒருவாறு ஈடு செய்ய முடிந்தது. சிறந்த ஞாபக சக்தியை அவர் பெற்றிருந்தார். அமைதி, எளிதில் உணரும் ஆற்றல், போர்க்களத்தில் அஞ்சாமை ஆகியவைகளைப் பெற்ற வரான அவர், ஆட்சி சம்பந்தப்பட்டவைகளில் குறிப்பிடத் தக்க ஆற்றலையும் உறுதியையும் காட்டினர். அரசாங்க வேலை களை முறையாகவும் துரிதமாகவும் தன் முன்னிலையிலேயே செய்தார். எல்லோரும் சுலபமாக அவரைக் காணலாம். ஒரே சமயத்தில் குழப்பமில்லாமல் பல பொருள்களைப்பற்றி விவாதிக்கும் அதிசயிக்கத்தக்க திறமையை அவர் பெற்றிருந் தார். டாக்டர் ஸ்மித்து (Dr. Smith) கூறியபடி, 'முற்றும் பழிக்கு அஞ்சாதவரான' அவருக்குச் 'சமயமில்லை; ஒழுக்க மில்லை; மனித உணர்ச்சியில்லை' எனக் கூறுவது நியாயமற்றது. சமயத்தின் வெளிக்கோட்பாடுகளை அவர் சரிவரப் பின்பற்ற விட்டாலும், நேர்மையான சமய அறிவைப் பெற்றிருந்தார். வில்க்ஸ் (Wilks) விவரித்தபடி எல்லா முகம்மதிய அரசர் களையும்விட அவர் மிகுந்த சகிப்புத்தன்மை கொண்டவர். பௌரிங் (Bowring) என்பவர் பின் வரும் சொற்களால் அவரைப் பொருத்தமாக மதிப்பிடுகிறார்: 'அவர் துணிவும், தனித்திறமையும், முயற்சியும் நிறைந்த படைத்தலைவர். போர்த்திறன், சமயோசித அறிவு, மிகுந்த ஆற்றல், தோல்வியைக் கண்டு அஞ்சாத நெஞ்சுறுதி ஆகியவைகளை அவர் பெற்றிருந்தார்; வியக்கத்தக்க வகையில் தம் வேலையை விசுவாசத்துடன் செய்தார்; ஆங்கிலேயருக்கெதிராகப் பின்

பற்றப்பட்ட கொள்கையில் வெளிப்படையாகவே இருந்தார். உள்நாட்டின் ஆட்சி கொடுமையையும், பேரச்சத்தையும் விளை வித்தாலும், மைசூரில் எப்பொழுதும் அவரைப்பற்றிப் புக ழோடு பேசப்படாவிட்டாலும், மரியாதையுடன் பேசப்படு கிறது. சில சமயங்களில் அவர் செய்த கொடுமைகள் மறக்கப் படுகின்றன; ஆனால், அவருடைய போரிடும் ஆற்றலும் வெற்றியும் மக்களின் எண்ணத்தில் என்றும் நிலைத்திருக்கும்.'

தகப்பனாரைப் போன்ற துணிச்சலும் போர்க்குணமும் கொண்ட திப்பு, ஆங்கிலேயருக்கெதிராகப் போரைத் தொடர்ந்து நடத்தினர். பம்பாய் அரசாங்கத்தினால் படைத் தலைமைப் பதவியில் அமர்த்தப்பட்ட பிரிகேடியர் மாத்யூஸ் (Brigadier Mathews) என்பவரும் அவருடைய ஆள்களும், 1783-ல் திப்புவால் பிடிக்கப்பட்டார்கள். அதே வருடம், ஜூன், 23-ல் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் சமா தானம் ஏற்பட்ட செய்தி இந்தியாவுக்குக் கிடைத்தது. 1783-ல் கர்னல் புல்லர்டன் (Colonel Fullarton) என்பவர் கோயம்புத் தூரைப் பிடித்தார்; ஸ்ரீரங்கப்பட்டினத்தைத் தாக்க எண்ணி னர்; ஆனால், சென்னையிலிருந்த அதிகாரிகளால் மீண்டும் அழைக்கப்பட்டார். மக்கார்ட்டினி பிரபு (Lord Macartney) என்பவர் சென்னையில் கவர்னரானதும் திப்புவுடன் சமா தானம் செய்ய ஆவல் கொண்டு அவருடைய கூடாரத்திற்குத் தம் தூதுவர்களை அனுப்பினர். இப்படி 1784, மார்ச்சில், மங்களூர் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி ஒவ்வொரு வரும் தாம் தாம் கைப்பற்றிய இடங்களையும் கைதிகளையும் திருப்பித் தருவதென்று ஒப்புக்கொண்டனர். வாரன் ஹேஸ் டிங்ஸ் இவ்வுடன்படிக்கையின் நிபந்தனைகளைச் சிறிதும் விரும் பாது, பின்வருமாறு மொழிந்தார்: 'மக்கார்ட்டினி பிரபு என்பவர் என்ன மனிதர்! சமாதானம் செய்தபோதிலும், கருநாடகத்தை அவர் இழப்பார் என்று இன்னும் நம்புகிறேன்.'

## இ. மூன்றும் ஆங்கிலேய-மைசூர்ப்போர்

காரன்வாலிஸ் பிரபு (Lord Cornwallis, 1786-1793) என் பவர் தற்காப்பு வகையிலன்றி, போர் செய்து நாடுகளைப் பிடிக்கும் கொள்கையைப் பின்பற்றுதபடி, பிட்டு இந்தியச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு, இந்தியாவிற்கு வந்தார். மேற் குறிப்பிட்ட சட்டத்தின் நிபந்தனைகளை உறுதியாகக் கடைப்

பிடிப்பது இயலாத காரியம் என, அவர் சீக்கிரத்திலேயே உணரத் தொடங்கினர். அச்சட்டமானது அவர் கூறியபடி, 'தடுக்க இயலாத அசௌகரியங்களை நம் (கம்பெனியின்) நலங்களுக்கு விளைத்ததுடன், திறமையுள்ள நண்பர்களின் உதவிகளைப் பெறுவதற்கு முன்பே போரை ஆரம்பித்து, அவைகளை எப்பொழுதும் பாதுகாக்க வேண்டிய அவசியத்தை அது உண்டாக்கியது.'[1] சர்வ தேசீய அரசியலை நோக்கும்போது, ஐரோப்பாவில் ஏற்பட்ட ஆங்கில-பிரெஞ்சுப் போரின் விளைவு இந்தியாவிற்கும் எட்டும்; அதனல், பிரெஞ்சுக்காரர்களுடன் திப்புவும் சேர்ந்து ஆங்கிலேயர்களை மறுபடியும் நிச்சயம் தாக்குவார் என அவர் நியாயமாகக் கருதினர். 1788, மார்ச்சில், பூனவில் ரெஸிடென்டாய் இருந்த மலெட்டு (Malet) என்பவருக்குப் பின்வருமாறு எழுதினர்: 'பிரான்சுடன் ஏற்படும் போரின் விளைவாக, திப்புவுடன் ஒரு பிளவு நிச்சயமாக உடனே ஏற்படுமென நான் நினைக்கிறேன். அப்படி ஏற்பட்டால், மராத்தியர்களின் ஆற்றல் மிக்க கூட்டுறவு, இந்நாட்டிலுள்ள நம் நலன்களுக்கு மிகமிக முக்கியமானதாகும்.'

உண்மையில், மங்களூர் உடன்படிக்கையானது, 'வெறுந் தாற்காலிகப் போர் நிறுத்தந்தான்.' ஆங்கிலேயருடன் மறுபடியும் போரிடுவதைத் தடுக்க இயலாது என்பது திப்புவுக்கும் தெரியும். ஏனெனில், அவ்விருவரும் தக்காணத்தில் அரசியல் தலைமையைப் பெற விரும்பினர். திப்புவைப் போன்ற அரசர் ஒருவர், 1784ஆம் ஆண்டின் ஏற்பாட்டைப்பற்றித் திருப்தியாய் இருக்க இயலாது. பிரான்ஸ், கான்ஸ்டான்டிநோப்பிள் (Constantinople) ஆகிய அரசுகளின் உதவியைப் பெற முயன்று, அதற்காக, 1787-ல் அவ்விடங்களுக்குத் தம் தூதுவர்களை அவர் அனுப்பினர். ஆனல், அவர் பெற்றது 'எதிர்கால உதவியைப்பற்றிய உறுதிமொழியே தவிர, நிகழ்காலத்தில் எவ்வித உதவியும் பெறவில்லை.'

சில காரணங்களால் சீக்கிரத்திலேயே மூன்ருவது ஆங்கிலேய-மைசூர்ப் போர் ஆரம்பித்தது. 1788-ல் கார்ன்வாலிஸ் பிரபு வட சர்க்காரிலிருந்த குண்டூரை நைஜாமிடமிருந்து பெற்றதற்கு ஈடாகவும், 1768-ல் ஏற்பட்ட மசூலிப்பட்டினம்

[1] Letter to Malet, 28th February, 1790, Forest, State Papers about Cornwallis, V-II. p. 10.

உடன்படிக்கைப்படியும் ஆங்கிலேயரது உதவி வேண்டுமென நைஜாம் கேட்டார்; சட்டப்படி அல்லாவிட்டாலும், கொள்கை அளவில் 1784ஆம் ஆண்டின் சட்டத்தை மீறும்படியான செயலைச் செய்தார். 1789, ஜூலை, 7ஆம் தேதி, அவர் நைஜாமுக்கு 'நிலையான ஆற்றலுள்ள கூட்டுறவுக்கு அடிக்கல்' அமைக்கும் எண்ணத்துடன் ஒரு கடிதம் எழுதினார். அவர் திப்புவின் பெயரை வேண்டுமென்றே அக்கடிதத்தில் எழுதாமல் விட்டுவிட்டார்; வழக்கமாகச் செய்யப்படும் உடன்படிக்கை எவ்வளவு கட்டுப்பாடுள்ளதோ, அவ்வளவு கட்டுப்பாடும் அக்கடிதத்திற்கு உள்ளது என அறிவித்தார். தென்னிந்திய வரலாற்று ஆசிரியரான வில்க்ஸ் என்பவர் அக்காலத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: 'மிதமான, அமைதிக்குரிய தன்மைக்கு, நியாயமாகப் புகழப்பட்ட இராசதந்திரி ஒருவர், இவ்வித நல்ல குணங்களை வற்புறுத்துவதற்காகச் செய்யப்பட்ட சட்டத்தைத் தாக்கி ஆக்கிரமிப்பு விவேகத்துடன் நட்புறவைச் செய்து, மறைமுகமாக மீறுவதைக் காண மிக்க வருத்தமாய் இருக்கிறது!' சர் ஜான் மால்காம் என்பவர் கூறுகிறார்: 'தாராளமான வாக்கிய அமைப்பைக் கொண்ட பார்லிமென்டு சட்டத்தின் கட்டுப்பாடு இச்சமயத்தில் கவர்னர்-ஜெனரலை, ஒரு வழியைப் பின்பற்றும்படி செய்தது. விசுவாசம் சம்பந்தப்பட்ட வரையில் அவ்வழி ஐயத்திற்கிடமானதுமட்டுமன்றி, வெளிப்படையாகவும், சட்டப்படியாகவும், அவருடைய மிதமிஞ்சிய பேரவாவைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் செய்யப்பட்ட ஒப்பந்தமாகும். அது தற்காப்புப் போருக்காகச் செய்யப்பட்ட ஒப்பந்தம் என்று ஏற்றுக்கொள்வதைவிட, திப்பு சுல்தானுக்கு அதிக அருவருப்பைக் கொடுப்பதற்கும் பிரான்சுடன் போரை ஏற்படுத்துவதற்கும் செய்யப்பட்ட உடன்படிக்கை எனச் சொல்லலாம்.'

இச்செயல் திப்புவிற்குக் கோபத்தை விளைத்தது. ஆனால், திப்புவும் கார்ன்வாலிஸ் பிரபுவும் எதிர்பார்த்தபடி போர் உண்டாவதற்கு உடனடியான காரணம், முன்னவர், 1789, டிசம்பர், 29ஆம் தேதியன்று, திருவாங்கூரைத் தாக்கியதுதான். மங்களூர் உடன்படிக்கையின் மூலம், திருவாங்கூர் அரசர் கம்பெனிக்கு நண்பரானார்; அதனால், ஆங்கிலேயரின் பாதுகாப்பைப் பெற அவருக்கு உரிமையுண்டு. ஹாலண்டு (Holland) என்கிற சென்னைக் கவர்னருக்கு உதவியைக்கோரி, அவர் விண்ணப்பம் செய்தார். ஆனால், சென்னை அரசாங்கம் அதைக் கவனிக்கவில்லை. திப்பு திருங்வாங்கூரைத் தாக்கி

யதைப் போர் நடவடிக்கை எனக் கருதி, சென்னை அரசாங்கத்தின் நடத்தையைக் கார்ன்வாலிஸ் கண்டித்தார். திப்புவின் வளர்ச்சி தங்கள் நலன்களுக்குப் பாதகம் எனப் பயந்து, அதனால் அவரை விரும்பாத நைஜாமும் மராத்தியர்களும் ஆங்கிலேயருடன் சேர்ந்து, 1790, ஜூன் 1ஆம் தேதியிலும், ஜூலை 4ஆம் தேதியிலும் முக்கூட்டு நட்புறவில் கையெழுத்திட்டனர். கார்ன்வாலிஸ் பிரபு ஒப்புக்கொண்டபடி மராத்தியத் துருப்புகளும், நைஜாமின் துருப்புகளும் போரில் ஆங்கிலேயருக்கு உபயோகமான உதவியைச் செய்தன.

மூன்றாம் ஆங்கில-மைசூர்ப்போர், மூன்று போர்களாக இரண்டு ஆண்டு காலம் நடைபெற்றது. மேஜர்-ஜெனரல் மெடோஸ் (Major General Medows) என்பவரின்கீழ் நடந்த முதலாவது போர், எவ்வித முடிவான பயனையும் அளிக்கவில்லை. ஏனெனில், திப்பு, போர்த் திறத்தில் மெடோவைவிட மேலான ஆற்றலைக் காட்டினார். கட்டுப்பாடு செய்யும் கழகத்தின் அங்கத்தினரான ஹென்றி டண்டாஸ் (Henry Dundas) என்பவருக்குக் கார்ன்வாலிஸ் பின்வருமாறு எழுதினார்: 'நாங்கள் காலந்தாழ்த்திச் சென்றோம்; எங்கள் எதிரி புகழைப் பெற்றான்; இவை இரண்டும் போருக்கு இன்றியமையாதவை.' 1790, டிசம்பரில் அவர் பிரிட்டிஷ் துருப்புகளின் தலைமையைத் தாமே ஏற்றுக்கொண்டார்; அதே சமயம் திப்புவைப் பட்டத்திலிருந்து இறக்கி, மைசூரை ஆண்ட பழைய இந்து வமிசத்தின் வாரிசுக்குப் பட்டத்தைத் தரவும் முடிவு செய்தார். 1791, மார்ச்சு 21-ல் பிடிக்கப்பட்ட பெங்களூருக்கு, வேலூர், ஆம்பூர் வழியாகச் சென்று, திப்புவின் தலைநகரான ஸ்ரீரங்கப்பட்டினத்திற்கு எண்பது மைலில் இருந்த அரிகேரா என்னும் இடத்தை மே 13ஆம் தேதி அடைந்தார். இச்சமயத்திற்கூடத் திப்பு கூர்ந்த அறிவுள்ள தம் போர்த்திறமையை வெளிப்படுத்தினார். மழைக்காலம் ஆரம்பித்தவுடனே தளவாடங்களும் உணவுப் பொருள்களும் படைக்குக் கிடைக்காததால் மங்களூருக்குப் பின்வாங்க வேண்டியிருந்தது. 1791 கோடையில் மறுபடியும் போரைத் தொடங்கி, நவம்பர் 3-ல், கோயம்புத்தூரைத் திப்பு பிடித்தார். பம்பாயிலிருந்து அனுப்பப்பட்ட படையின் உதவியுடன் கார்ன்வாலிஸ் ஸ்ரீரங்கப்பட்டினத்திற்குச் செல்லும் வழியிலிருந்த மலைக்கோட்டைகளைப் பிடித்து, 1792, பிப்பிரவரி, 5-ல் அதன் அருகில் தோன்றி, அதன் புறஅரணைத் (Outworks)

தாக்கினர். இராணுவ ராஜதந்திரத் திறமையினல் தமக்கு ஏற்படவிருந்த முழுத்தோல்வியைத் திப்பு தடுத்தார். ஆனல், மேலும் எதிர்த்து நிற்பது முடியாத காரியம் என்பதை அவர் உணர்ந்தார்.

ஆரம்பப் பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு, 1792ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஸ்ரீரங்கப்பட்டினம் உடன்படிக்கை ஏற்பட்டது. திப்பு, தம் நாட்டிற் பாதியை இழக்க வேண்டி ஏற்பட்டது; கிருஷ்ணு நதியிலிருந்து பெண்ணை ஆற்றுக்கு அப்பாலும் பரவியிருக்கிற ஒரு பெரிய நிலப் பகுதி, அதி லிருந்து பிரிக்கப்பட்டு, நைஜாமுக்குக் கொடுக்கப்பட்டது. மராத்தியர்களுக்குக் கொடுக்கப்பட்ட மற்ருெரு பகுதி, அவர் களுடைய நாட்டைத் துங்கபத்திரா நதி வரையில் விரிவு படுத்தியது. மலபார், திப்புவால் சுதந்தரம் கொடுக்கப்பட்ட குடகு நாட்டின் அரசரின்மீது ஆதிபத்திய உரிமை, திண்டுக்கல், தெற்கில் அதைச் சார்ந்த மாவட்டங்கள், கிழக்கில் பாரா மஹால் ஆகியவைகள் ஆங்கிலேயருக்குக் கிடைத்தன. கம்பெனிப் பிரதேசங்களின் உறுதி, ஒன்று சேர்த்து இருத்தல் ஆகியவைகளை அதிகப்படுத்துவதற்கு, விட்டுக் கொடுக்கப் பட்ட இம்முக்கிய இடங்கள் உதவியாய் இருந்தன. திப்பு 3,000,000 பவுன்களை நஷ்ட ஈடாகத் தர வேண்டியிருந்தது. அதற்காக அவர் மைந்தர் இருவரைக் காரன்வாலிஸ் பிரபு கூடாரத்திற்குப் பணயமாக அனுப்பவும் சம்மதித்தார். சுலபமாக அழித்து விடக்கூடிய மைசூர் சுல்தானை அழிக் காமல்விட்டு, அவருடன் சமாதான உடன்படிக்கையைச் செய்துகொண்ட காரன்வாலிஸ் பிரபுவை வரலாற்று ஆசிரியர் சிலர் குறை கூறுகின்றனர். மன்ரோ பின் வருமாறு எழுதினர்: 'மிதமாகவும், சமரசமாகவும் எல்லாச் செயலும் இப்பொழுது நடைபெறுகின்றன. இப்படிப் போனல் இன்னும் இருபது ஆண்டுகளில் நாம் குவேக்கர்களாக மாறிவிடலாம். தார்ன்டன் (Thornton) என்பவர் திப்புவுக்கு இவ்வளவு அனுசரணையான நிபந்தனைகளைக் கொடுத்திருக்கக் கூடாது,' என வருத்தப் பட்டார். ஆனல், சில நடைமுறைக் காரணங்களுக்காகக் காரன்வாலிஸ் பிரபு இப்படிச் செய்யலானர் என்பது குறிப்பிடத்தக்கது. துருப்புகளிடையே நோய் பரவிக் கொண்டிருந்தது; பிரான்சுடன் போரும், அது காரணமாகத் திப்புவுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே ஏற்பட்ட நட்புறவும், மிகவும் அச்சந்தரத்தக்கவை. டைரக்டர்களின் மன்றம் சமாதானத்தை வற்புறுத்தியது. இக்காரணங் களாலேதான் காரன்வாலிஸ் பிரபு சமாதான உடன்

படிக்கையைச் செய்து கொண்டார். மேலும், மைசூர் நாடு முழுவதையும் கைப்பற்றிக்கொள்ளக் காரன்வாலிஸ் பிரபு விரும்பவில்லை. ஏனெனில், அப்படிச் செய்தால் நட்புறவு நாடுகளுடன் அனுகூலமான ஓர் உடன்படிக்கை செய்து கொள்வது மிகக் கடினமாய் இருந்திருக்கும் என அவர் எண்ணினார்.

## (3) ஹைதராபாது, கருநாடகத்துடன் ஆங்கிலேயரின் உறவுகள்

### அ. ஹைதராபாது நைஜாம்

மற்ற மாகாணங்களின் கவர்னர்களைப் போல நைஜாம் உல்முல்கு ஆஸப் ஜாவும், கொள்கைப்படி தக்காணத்தில் டில்லிப் பேரரசரின் பிரதிநிதியாய் இருந்தாலும், முகம்மது ஷா ஆட்சி செய்த காலத்தில் உண்மையிலேயே டில்லிக் குட்படாத சுதந்தர அரசராய் இருந்தார். ஆனால், அவர்தம் மகனான நைஜாம் அலியின் அதிகாரத்தை மராட்டியர்களும் மைசூர்ச் சுல்தான்களும், பேரவாக்கொண்டு, ஆபத்து விளை விக்க முற்பட்டதால், அவர் ஆங்கிலேயரின் உதவியை நாடும் படி ஏற்பட்டது. 1766, நவம்பர், 12-ல் அவர் சென்னை மன்றத் திடம் அனுக்கிரமிப்புப் பாதுகாப்பு நட்புறவைச் செய்து கொண்டார். முதலாவது ஆங்கில-மைசூர்ப் போரில் ஹைதரின் பிரதிநிதியால் இந்த நட்புறவை விட்டுத் தற்காலிக மாக நீங்கும்படி செய்தாலும், பின்னர் 1768, பிப்பிரவரி 23ஆம் தேதி மசூலிப்பட்டினம் உடன்படிக்கையைச் செய்து கொண்டார். 1766 உடன்படிக்கையின்படியும், 1768-ல் திருத்தப்பட்ட தன்படியும், நைஜாம் தரும் வடசர்க்காருக்குப் பதிலாக ஆண்டுதோறும் ஒன்பது லட்ச ரூபாயைக் கப்ப மாகச் செலுத்துவதாகக் கம்பெனி ஒப்புக்கொண்டது. பசலத் ஜங் (Basalat Jang) என்னும் நைஜாமின் சகோதாருக்கு ஆயுள் உள்ள வரையிலும் குண்டூர் சர்க்கார் கொடுக்கப்பட்ட தால் கப்பத்தின் தொகை ஏழு லட்சமாகக் குறைக்கப்பட்டது. 1779-ல் ரம்போல்டு (Rumbold) என்ற திறமையற்ற சென்னைக் கவர்னர் பசலத் ஜங்கினிடமிருந்து குண்டூர்ச் சர்க்காரை நேரடியாகப் பெற்று, தமது படையில் பிரெஞ்சுக்காரர்களைச் சேர்த்துக்கொண்டு, 1768ஆம் ஆண்டு உடன்படிக்கையை மீறிய நைஜாமுக்குக் கட்டவேண்டிய கப்பத்தைக் கட்டாம லிருப்பதற்கு முயன்றார். இதைக் கவர்னர்-ஜெனரலான

வாரன் ஹேஸ்டிங்ஸ் அங்கீகரிக்கவில்லை என்றாலும், ரகோபாவுடன் ஆங்கிலேயர்கள் நட்புடன்படிக்கை செய்ததைக் கண்டு வெறுப்புற்ற நைஜாமை, மிக ஆபத்தான சமயத்தில், இது ஆங்கிலேயரின் நட்பை முரிக்கும்படி செய்தது: மராட்டியர்களையும் ஹைதரையும் கொண்டு ஆங்கிலேயருக்கு விரோதமாக உண்டாக்கப்பட்ட கூட்டரசில் அவர் சேர்ந்தார். இரண்டாம் மைசூர்ப் போர் ஆரம்பித்து, ஆங்கிலேயருக்குப் பிரதிகூலமான நிலையேற்பட்டவுடன், குண்டூரை பசலத் ஜங்கிற்குத் திரும்பக் கொடுத்து, கூட்டரசிலிருந்து நைஜாமை பிரிப்பதில் ஹேஸ்டிங்ஸ் வெற்றி பெற்றார்.

ஆனால், பசலத்ஜங் 1782-ல் இறந்த பிறகு, 1768ஆம் ஆண்டு உடன்படிக்கைப்படி குண்டூரை நைஜாம் தர வேண்டுமென்று ஆங்கிலேயர் கேட்டனர். நைஜாமுக்கும் ஆங்கிலேயருக்கும் முக்கியமான நிலையைக் குண்டூர் பெற்றிருந்தது. அது முன்னவருக்குக் கடலுக்குள் செல்வதற்கு ஒரு வழியாய் அமைந்தது; பின்னவருக்கு, வடக்கிலும் தெற்கிலும் இருந்த அவர்தம் நாட்டை இணைப்பதற்கு மிக அவசியமானது. சிறிது தயக்கத்திற்குப் பிறகு 1788-ல் குண்டூரை ஆங்கிலேயருக்கு விட்டுக்கொடுத்தார்; அதற்குப் பதிலாக, 1768ஆம் ஆண்டு உடன்படிக்கைப்படி, திப்புக் கைப்பற்றிய நைஜாமின் இடங்களைத் திரும்பப் பிடிப்பதற்காக ஆங்கிலேயரின் உதவியை நாடினார். அப்பொழுது கவர்னர்-ஜெனரலாயிருந்த காரன் வாலிஸ் பிரபு தாம் இக்கட்டான நிலையில் இருப்பதை உணர்ந்தார். ஏனெனில், அந்த இடங்கள் மைசூர்ச் சுல்தான்களுக்கே உரியது என ஹைதருடனும் திப்புவுடனும் முறையே 1769-லும், 1785-லும் ஆங்கிலேயர் தனித்தனியாக உடன்படிக்கை செய்திருந்தனர்; அதுவுமன்றி, பிட்டு இந்தியச்சட்டத்தின் 34ஆம் பிரிவுப்படி தம்மைத் தாக்கினாலன்றி, இந்திய அரசுகளின்மீது போர் தொடுப்பது அல்லது போர் தொடுக்கும் குறிக்கோளுடன் உடன்படிக்கை செய்வது ஆகியவற்றிலிருந்தும் அவர் தடுக்கப்பட்டார்; ஆனால், அதே சமயத்தில் திப்புவுடன் ஏற்பட்ட சில போர்கள் காரணமாக, நண்பர் சிலரைப் பெற விரும்பினார். 1789, ஜூலை, 7ஆம் தேதி, அவர் நைஜாமுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் 1768ஆம் ஆண்டு உடன்படிக்கையைத் தமது குறிக்கோளுக்கு ஏற்ப விளக்கி, பிரிட்டன் துருப்புகளை அவருக்கு உதவியாக அனுப்புவதாகவும், ஆனால் அத்துருப்புகளை ஆங்கிலேயரின் நண்பர்களுக்கு எதிராக உபயோகப்படுத்தக் கூடாதென்றும் கூறி, ஆங்கிலேயரின் நண்பர்களின் பட்டியலையும் அதனுடன் சேர்த்திருந்தார். ஆனால்,

அப்பட்டியலில் திப்புவின் பெயர் வேண்டுமென்றே விலக்கப் பட்டிருந்தது. இவ்விதம் 1790-ல் நைஜாம், முக்கூட்டு நட்புற வில் சேர்ந்து, மூன்றும் ஆங்கில-மைசூர்ப் போரில் ஆங்கி லேயருக்காகப் போரிட்டார்.

நாம் முன்பு குறித்தவாறு, சர் ஜான் ஷோர் என்பவர், பிட்டு இந்தியச் சட்டத்தில் கண்டுள்ள நடுவு நிலைமைக் கொள்கைப்படி, மராட்டியர்களுக்கெதிராக நைஜாமுக்கு உதவி அளிக்கவில்லை. அதனால், மராட்டியர்கள் 1795 மார்ச்சில் கர்டா (Kharda) என்னுமிடத்தில் நைஜாமைத் தோற்கடித்தார்கள்.

## ஆ. கருநாடகம்

பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியில் ஏற்பட்ட ஆங்கில-பிரெஞ்சுப் போர்களின் விளைவாகக் கருநாடகம் குழப்ப முற்று, அதன் பிறகு சீர்கேடுற்ற ஆட்சியின் தீங்குகளால் மிகத் தொல்லையுற்றது. இத்தொல்லைகள் முகம்மது அலியின் இழிவான நடத்தையாலும், சென்னை அரசின் நிலையற்ற தன் னலங்கருதும் கொள்கையாலும் ஏற்பட்டன. தார்ன்டன் (Thornton) பின் வருமாறு கூறுகிறார்: ‘இச்சமயத்தில் சென்னை யின் ஒழுக்க நிலை, தொத்துநோயாகிவிட்டதெனத் தெரிகிறது. கட்டுப்பாடின்றி ஊழல் தலை விரித்தாடியது. மஹமட் அலி (முகமது அலி) பணம் அல்லது உறுதி மொழிகளைக் கொடுத்து, தம் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளும் போது அதை அடக்கிய ஆட்சி உண்மையில் மிகவும் வலு வுடையதாய் இருக்கவேண்டும்.’ ஆர்க்காட்டில் வசிக்க விருப்ப மில்லாமல், சென்னையின் அருகேயிருந்த மீன் பிடிக்கும் கிராமமான சேப்பாக்கம் என்னுமிடத்தில் ஆடம்பரமாகவும் உல்லாசமாகவும் இருப்பதற்காகக் கட்டப்பட்ட அலங்கார மான அரண்மனையில் அவர் தம் நாள்களைக் கழித்தார்; இதனால் ஏற்பட்ட அளவு கடந்த செலவுகளுக்காக வேண்டிய பணத்தைக் கம்பெனியின் பணியாளர்களிடமிருந்து அள வுக்கு அதிகமான வட்டிக்கு—சில சமயம் நூற்றுக்கு வருடத் திற்கு 36 வட்டி விகிதத்திற்கு—தாராளமாகக் கடன் வாங் கினர். அக்கடனுக்குப் பதிலாகக் கருநாடக மாவட்டத்தி லிருந்துவரும் நிலவரியை அவர்களுக்கு உரிமை ஆக்கினர். அவரைப்பற்றி பர்க்கு (Burke) என்பவர் பின் வருமாறு கூறு கிறார்: ‘அவர் உண்மையான அரசர் அல்லர்; ஆனால், அவர்

ஒரு நிழல்; ஒரு கன்வு; ஒரு கொடுங்கோன்மைப் பேய். ஆர்க்காட்டு நவாபுவின் கடன்களின் மூலம் சென்னை மன்றத் தின் அங்கத்தினர்கள் உட்பட, கடன் கொடுத்த ஐரோப்பி யர்கள், அந்நாட்டின் நலங்கருதாமல், ஏராளமான பணத் தைச் சேகரித்தார்கள். மோசமான நிருவாக ஊழல்களை இச்செய்கைகள் உண்டாக்கின. அதனால், பிரிட்டிஷ் பாராளு மன்றம் இதைப் போக்க விரும்பியது. ஆனால், டைரக்டர்களின் போர்டு இதில் தலையிட்டு, நவாபுவின் கடன்கள், கருநாட கத்தின் நில வரியிலிருந்து கொடுக்கப்பட வேண்டுமென்று கட்டளையிட்டது. பர்க்கினாலும் மற்றவர்களாலும் கண்டிக்கப் பட்ட மந்திரி சபை செய்த இம்முடிவு, கிழக்கில் இருந்த நல்ல ஆட்சியின் கொள்கைக்குப் பலத்த அடியைக் கொடுத்தது. 1781, டிசம்பர், 2-ல் ஏற்பட்ட ஓர் ஏற்பாட்டின்படி, கருநாட கத்தின் வருமானம் முழுவதும் பிரிட்டிஷ் அதிகாரத்திற்குக் கொடுக்கப்பட்டு, தம் வாழ்க்கைக்காக அதில் ஒரு பகுதியை நவாபு ஆங்கிலேயரிடமிருந்து பெற்றார். ஆனால், இப்பொழுது நவாபுவுக்குக் கடன் கொடுத்தவர்கள் பணம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்ததால், கட்டுப்பாடு செய்யும் கழகம், நவாபு வுக்கு மறுபடியும் அவ்வருமானத்தைக் கொடுக்கும்படி செய்தது. அதனால், நவாபு மறுபடியும் ஏராளமான கடனை வாங்க ஆரம்பித்தார்.

காரன்வாலிஸ் பிரபு இந்தியாவிற்கு முதன்முறை கவர்னர்-ஜெனரலாக வந்தபோது முகம்மது அலிக்கும் கம்பெனிக்குமிடையில் இருந்த உறவு இவ்விதம் சிக்கலாய் இருந்தது. 1777, பிப்பிரவரி, 24-ல் நவாபுவுடன் ஆங்கிலேயர் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். அதன்படி நவாபு பண உதவியாகக் கொடுக்கும் 15 லட்சம் பகோடாவிற்கு (சாதாரண மாற்று விகிதப்படி மூன்றரை ரூபாய்க்குச் சமமாகத் தென்னிந்தியாவில் புழங்கிய ஒரு நாணயம்) பதிலாக, அவருடைய நாட்டைப் பாதுகாப்பதற்கு ஒப்புக் கொண்டனர். மால்காம் கூறியபடி, 'நவாபுவின் அதிகாரி களின் தாறுமாறான நிருவாகத்தின் விளைவாக ஆபத்து ஏற்பட்டிருக்கிறதெனக் கம்பெனியால் நினைக்கப்பட்டு, அதி லிருந்து அந்த இரண்டு நாடுகளையும் (கருநாடகமும் சென்னை யும்) காப்பதற்காக, திப்புவுடன் போர் நடந்தபோது (1790–1792) கருநாடகத்தின் முழு அதிகாரத்தையும் கம்பெனி ஏற்றுக்கொண்டது. 1792, ஜூலை, 12-ல் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி கருநாடகம் மீண்டும் நவாபுவுக்கு

ஒப்படைக்கப்பட்டது. அதே சமயம், அவர் செலுத்த வேண்டிய பண உதவி, பதினைந்து லட்சம் பகோடாவிலிருந்து ஒன்பது லட்சமாகக் குறைக்கப்பட்டது.

1795, அக்டோபர், 13-ல் முகம்மது அலி இறந்ததால், அவருக்குக் குமாரரும் வாரிசுமான ஓம்தத்-உல்-உமாரா (Omdut-Ul-Umara) என்பவர் பதவிக்கு வந்தார். 1794, செப்டெம்பரிலிருந்து சென்னையின் கவர்னராய் இருந்த ஹோபார்ட்டுப் பிரபு (Lord Hobart) என்பவரால் தவணையாகக் கொடுக்க வேண்டிய பணத்திற்கு ஈடாக, அடைமானம் செய்யப்பட்ட இடங்களைக் கம்பெனி பெறுவதற்காக 1792ஆம் ஆண்டு உடன்படிக்கையைத் திருத்தித்தரும் அளவுக்கு நவாபுவை இணங்க வைக்க இயலவில்லை. கடன்காரர்களால் 'திகைக்கச் செய்யப்பட்டு, தொல்லைகள் கொடுக்கப்பட்டு, அச்சுறுத்தப்பட்ட' புதிய நவாபு, இக்கோரிக்கைகளுக்கு இணங்க மறுத்தார். திருநெல்வேலியைக் கம்பெனியுடன் சேர்த்துக்கொள்ளும் அளவுக்குச் சென்ற சென்னைக் கவர்னரின் விருப்பத்தை, சர் ஜான் ஷோர் என்ற கவர்னர்-ஜெனரல் ஆதரிக்கவில்லை. மில் (Mill) என்பார் பொருத்தமாகக் கூறியவாறு, 'தலைமை அரசு, கொடுங்கோலாட்சியின் மூலம் ஆதாயம் பெற நினைத்த சில பெரும் புள்ளிகளின் எதிர்ப்புக் காரணமாக'க் கருநாடக ஆட்சியின் ஊழல்கள் குறையாமல், மேலும் அதிகரித்தன.

## (4) அயோத்தி, வாரணசி, ரூகெல்கண்டுடன் ஆங்கில உறவுகள்

### அ. வாரன் ஹேஸ்டிங்ஸின் அயோத்திக் கொள்கையும், ரூகேலாப்போரும்

மராட்டியர்கள், ஆப்கானியர்கள் ஆகியவர்களின் படையெடுப்பிற்கெதிராக அயோத்தியை ஒரு தடைச்சுவராக உபயோகித்துக்கொள்ளும் எண்ணத்துடன், 1765-ல் ஆங்கில அயோத்தி உடன்படிக்கை ஏற்பட்டதிலிருந்து அயோத்தியுடன் நட்புறவை வளர்க்க வேண்டுமெனக் கம்பெனி நிச்சயமாக முடிவு செய்தது. 1770–1771-ல் ஷா ஆலம் என்கிற டில்லிப் பேரரசர், மராட்டியர் பாதுகாப்பில் இருந்தபோது, வாரன் ஹேஸ்டிங்ஸ், கோரா, அலகாபாது என்கிற இரண்டு மாவட்டங்களையும் அவரிடமிருந்து பிரித்து அயோத்தி நவாபு

வுக்குக் கொடுத்து, அதற்கு ஈடாக ஐம்பது லட்ச ரூபாயைப் பெற்றார்; அதைத் தவிர, நவாபுவின் பாதுகாப்பிற்காக அனுப்பப்பட்ட கம்பெனியின் துருப்புகளைப் பாதுகாப்பிற் காக வருடாவருடம் கொடுக்கும் பண உதவியையும் பெற்றார். 1773, செப்டெம்பரில் ஹேஸ்டிங்ஸ் நவாபுவைச் சந்தித்தபோது இந்த ஏற்பாடு வாரணுசி உடன்படிக்கை மூலம் உறுதிப் படுத்தப்பட்டது.

ஆனால், கம்பெனியின் இக்கொள்கை ரூகேலாவுடன் போரில் ஈடுபட வைத்தது. இமய மலையின் அடிவாரத்தில் அயோத்திக்கு வடமேற்கே இருந்த ரூகெல்கண்டு, செழிப் பான நாடு. இந்துக்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட அந்நாட்டின் மக்கள் தொகை 6,000,000. ஹபீஸ் ரஹெமத் கான் (Hafiz Rahamat Khan) என்பவர் தலைமையின்கீழ், ரூகேலாத் தலைவர்களின் கூட்டாட்சி மூலம் அந்நாடு ஆளப் பட்டு வந்தது. 1771 முதற்கொண்டு அந்நாடு மராட்டியர் களால் அச்சுறுத்தப்பட்டு வந்தது. அயோத்தியின் நவாபு அந்நாட்டைக் கைப்பற்ற ஆசை கொண்டார். அந்நாட்டிற்கும் அயோத்திக்கும் நல்ல உறவுகள் இல்லை. ரோஹில் கண்டுக்கும், கஜா-உத்-தௌலாவுக்கும் பொதுவான மராட்டி யர்களின் அபாயம், சர் ராபர்ட்டு பார்க்கர் (Sir Rabert Barker) என்பவர் முன்னிலையில், 1772, ஜூன் 17ஆம் தேதி அவர்களை ஓர் உடன்படிக்கையில் கையெழுத்திடும்படி செய்தது. அதன் படி மராத்தியர்கள் ரூகெல்கண்டின்மீது படையெடுத்தால், அயோத்தி நவாபு அவர்களை வெளியேற்றுவார்: 1773ஆம் ஆண்டு இளவேனிற் காலத்திலும் மராத்தியர்கள் ரூகெல் கண்டின்மீது படையெடுத்தார்கள். ஆனால், அவர்கள் ஆங்கில-அயோத்திப் படைகளினால் துரத்தப்பட்டார்கள். அதன் பிறகு முதலாம் மாதவராவ் என்கிற பேஷ்வா இறந்த தனால் பூனாவில் ஏற்பட்ட குழப்பங்கள் காரணமாக மறு படியும் படையெடுப்பதைப்பற்றி அவர்கள் சிந்திக்க இயல வில்லை. அயோத்தி நவாபு உடன்படிக்கையில் ஒப்புக் கொண்டவாறு நாற்பது லட்ச ரூபாயைக் கொடுக்கும்படி ரூகேலாத் தலைவரைக் கேட்டார். ஆனால், பின்னவர் அதைக் கொடாமல் மழுப்பிக்கொண்டுவந்தார். 1774, பிப்ரவரி ஆரம்பத்தில் வாரணுசி உடன்படிக்கைப்படி (1773, செப்டெம் பர்) ஹபீஸ் ரஹமத்கானை வற்புறுத்துவதற்காகத் தமக்கு உதவி அளிக்கும்படி கம்பெனியைச் சுஜா-உத்தௌலா கேட்டுக்கொண்டார். கர்னல் சேம்பியன் (Colonel Champion) தலைமையில் பிரிட்டிஷ் படை ஒன்று உடனே அனுப்பப்பட்டது.

1774, ஏப்பிரல், 17ஆம் தேதி ஆங்கிலேயரும் அயோத்தித் துருப்புகளும் சேர்ந்த படையானது ரூகெல்கண்டுக்குள் பிரவேசித்தது. ஆறுநாள்களுக்குப் பிறகு மிர்னபூர் கட்ரா (Mirnapur Katra) என்னுமிடத்தில் முடிவான போர் ஏற்பட்டது. பிரிட்டிஷ் அதிகாரி கூறியபடி, 'மிகுந்த ஆற்றலையும், உறுதியையும்' ரூகேலர்கள் காட்டினுலும், அவர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். ஹபீஸ் ரஹமத்கான், வீரத்துடன் போர் செய்கையில் கொல்லப்பட்டார். 20,000 ரூகேலர்கள் கங்கைக்கு அப்பால் துரத்தப்பட்டார்கள்; அவர்களது மாகாணம் அயோத்தியுடன் சேர்க்கப்பட்டது. ராம்புராவைக் (Rampura) கொண்ட ஒரு சிறு பாகம் மட்டும் ரூகேலா அரசை உண்டாக்கிய அலி முகமது ருகேயின் மகனுன பைசுல்லா கான் (Faizullah Khan) என்பவருக்குக் கொடுக்கப்பட்டது.

ரூகேலாப் போரில் ஹேஸ்டிங்ஸ் கையாண்ட கொள்கையின் சிறப்பையும் குறைபாட்டையும் சாதக பாதகங்களையும் குறித்து, மிகுந்த கருத்து வேறுபாடுகள் உள்ளன. 1786-ல் பாராளுமன்றத்தில் ஹேஸ்டிங்ஸ் குற்றஞ் சாட்டப்பட்டதற்கு அது ஒரு முக்கிய காரணமாய் இருந்தது. பர்க்கு, மெக்காலே போன்றவர்கள் மட்டுமன்றி, பழைய கொள்கைகளைக் கொண்ட வரலாற்று ஆசிரியர்களான மில்லும் மற்றவர்களுங் கூடக் கடுமையான சொற்களால் இதைக் கண்டித்தார்கள். அவர்கள் கூறியபடி ஹேஸ்டிங்ஸ் சுதந்தரமாயிருந்த மக்களின் உயிரையும் உரிமைகளையும் வேண்டுமென்றே விற்று, அயோத்தி நவாபுவின் சேனைகள் செய்த கொடுரங்களை மறந்துவிட்டார். ஆனுல், சர் ஜான் ஸ்ட்ராச்சி (Sir John Strachey) போன்ற இக்கால எழுத்தாளர்கள் அவரது கொள்கையை ஆதரித்தார்கள். 'ஹேஸ்டிங்ஸூம் ரோஹில்லாப் போரும்' என்னும் நூலில் அவர் ஹேஸ்டிங்ஸின் கொள்கை முழுவதும் நியாயமெனக் கூறுவதற்கு முயன்ருர். பர்க், மெக்காலே, மில் என்பவர்களின் கூற்றுகள் நியாயமற்றவை எனக் கருதப்பட்டாலும், சில கோணங்களிலிருந்து பார்க்கும்போது ஹேஸ்டிங்ஸின் கொள்கை குறை கூறும்படிதான் இருக்கிறது. அவர் செய்த செயல் நியாயமா என்பதைப்பற்றிய சந்தேகம் அவருக்கும் அவருடைய மன்றத்துக்கும் இருந்தது என்பது நோக்கத் தக்கது. அதனுலேதான் ஆரம்பத்தில் அதில் உறுதியற்றவர்களாய் இருந்தார்கள். வாரணுசி உடன்படிக்கை செய்தபோது அயோத்தி நவாபுவுக்கு உதவக் கூடிய நிலை வரும் என்று ஹேஸ்டிங்ஸ் நினைத்திருக்க மாட்டார். ஆனுல், ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்பு, பின்னர் என்ன

விளைவுகள் விளையும் என்பதைச் சிந்திக்காமற் செய்வது பி. இ. ராபெர்ட்ஸ் (P. E. Roberts) கூறியபடி 'மகிழ்ச்சி யானதோ அல்லது திறமை வாய்ந்த அரசியல் செய்கையோ அன்று.' அயோத்தி நவாபுவுக்கு உதவி செய்ய, ஹேஸ்டிங்ஸ் கட்டுப்பட்டவர். ஏனெனில், முன்னவருக்கும் ரூகேலர் களுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கை, ஆங்கிலேயரின் உத்தர வாதத்துடன் ஏற்பட்டது என்ற கொள்கையையும் புரிந்து கொள்வது கடினந்தான். சர் ராபர்ட்டு பார்க்கர் என்பவர் இரு தரப்பாரும் கையெழுத்திடுவதைப் பார்த்துக்கொண் டிருந்தாரேயொழிய, வேறொன்றும் செய்யவில்லை.

தவிர, ரோஹில்லர்கள் இந்து மக்களின்மீது இருபத் தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே தங்கள் ஆட்சியை ஏற்படுத் தினார்கள். அதனால், அவர்கள் விரட்டப்பட வேண்டும் என்று சர் ஜான் ஸ்ட்ராச்சி வாதிப்பது போல வாதிப்பதும் தவறு தான். முகலாய சாம்ராஜ்யம் அழிந்ததனால் ஏற்பட்ட பல இந்திய அரசுகளுக்கு எவ்வளவு உரிமைகள் உண்டோ, அவ்வளவு உரிமைகளும் அக்காலத்திலிருந்த ரோஹில்லர் களுக்கும் உண்டு என்பது வெளிப்படை. ரோஹில்கண்டில் இருந்த இந்துக்கள் நன்கு ஆளப்பட்டார்கள். ரோஹில்லர்கள் ஆட்சியின்கீழ்ச் செழிப்புற்றிருந்தார்கள் என்பதற்குத் தகுந்த அக்காலத்து ஆதாரங்கள் உண்டு. இவைகளை சர் ஜான் ஸ்ட்ராச்சியும் மறுக்க இயலாது. ஆனால், புதிதாக ஏற்பட்ட அயோத்தியின் ஆட்சிதான் அவர்களுக்குத் தொல்லையாய் இருந்தது. சர் ஜான் ஸ்ட்ராச்சிகூட ஹேஸ்டிங்ஸின் கொள்கை 'சிறிது குற்றம் கண்டுபிடிக்கக் கூடியதாய் இருக்கிறது' என ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. கடைசியாக ஆங்கிலே யர்களுக்குக் கோபம் உண்டாகும்படி ரோஹில்லர்கள் நடந்து கொண்டார்கள் என்றும் அவர்களைச் சொல்ல இயலாது. சர் ஆல்பிரட் லையால் என்பவர், நேர்மையாகப் பின் வருமாறு கூறுகிறார்: 'ரோஹில்லர்களுக்கு எதிராக நடத்தப்பட்ட போர், கொள்கை சம்பந்தப்பட்டவரையில், தவறானதுதான். ஏனெனில், கோபமூட்டும்படியான செயலை அவர்கள் நமக்குச் செய்யவில்லை. வசீருக்கு அனுகூலமானவைகளைத் தவறாகப் பயன்படுத்துவதற்கே அவரை நம்பலாம்.' நடவடிக்கைகள் யாவும் முக்கியமாகப் பணத்தைப் பெறுவதற்காகச் சுயநலக் குறிக்கோளுடன் செய்யப்பட்டு, ஐயமில்லாமல் ஒரு தவறான பழக்கத்தை ஏற்படுத்தின. அதன் தன்மை, ஹேஸ்டிங்ஸ் பின்வருமாறு சொன்னபடி தெளிவாகத் தெரிகிறது: 'மராட்டி யர்கள் அவ்விடம் இல்லாத நிலைமையும், ரோஹில்லர்களின்

வலுவற்ற நிலைமையும், சுலபமாக வெற்றி பெறலாம் என்ற உறுதியைக் கொடுத்தன. கம்பெனிக்குத் தாய் நாட்டில் தொல்லைகளும், வெளி நாட்டில் தேவைகளும் இருப்பதாக எனக்குத் தெரிந்ததால், துருப்புகளின் சம்பளத்தையும் செலவையும் குறைப்பதற்காக எந்தச் சயமத்திலும் அவைகளை உபயோகப்படுத்த நான் விரும்பினேன்.'

## ஆ. செயித்சிங்கின் விவகாரம்

பாதுகாத்துக்கொள்ள இயலாத மற்றுமிரண்டு செய்கைகளைப் பொருளீட்டும் எண்ணத்துடன் ஹேஸ்டிங்ஸ் செய்தார்; ஒரு சந்தர்ப்பத்தில் வாரணாசியின் அரசரான செயித்சிங் என்பவரிடமிருந்து அளவுக்கு மீறிய தொகைகளைக் கேட்டார். முதலில் அயோத்தி நவாபுவின் ஆட்சிக்குட்பட்டிருந்த செயித்சிங், 1775, ஜூலை உடன்படிக்கையின்படி, கம்பெனியின் அதிகாரத்தின்கீழ் வந்தார். அதன்படி ஆண்டுதோறும் 22½ லட்சம் ரூபாயை அவர் தலைவர்களுக்குக் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டார். 1778-ல் ஆங்கில-பிரெஞ்சுப் போர் ஏற்பட்டபோது அந்த அரசரிடமிருந்து, போருக்காக ஐந்து லட்ச ரூபாயை அதிகமாக ஹேஸ்டிங்ஸ் கேட்டுப் பெற்றார். இவ்விதக் கோரிக்கை பல தடவைகளில் கோரப்பட்டது. அவ்வரசரும் அவகாசம் கொடுக்கும்படியும், குறைக்கும் சலுகை கொடுக்கும்படியும் கேட்டுவிட்டு, ஒவ்வொரு தடவையும் கொடுத்து வந்தார். இது ஹேஸ்டிங்ஸுக்குப் பிடிக்கவில்லை. 1780-ல், 2000 குதிரைகளைக் கொடுக்கும்படி அவ்வரசருக்குக் கட்டளையிட்டு, பிறகு அவ்வரசர் கேட்டுக்கொண்டதற்கிணங்க அதை 1000 ஆகக் குறைத்தார். அதற்குப் பதிலாக, 800 குதிரைகளையும், 300 காலாட்படையினரையும் சேர்த்து அவை கம்பெனிக்கு உதவத் தயாராய் இருப்பதாக ஹேஸ்டிங்ஸுக்குச் சொல்லியனுப்பினர். ஆனல், அவருக்கு ஒரு பதிலும் வரவில்லை. அவ்வரசருக்கு ஐம்பது லட்ச ரூபாய் தண்டம் விதிப்பதற்கு ஹேஸ்டிங்ஸ் முன்னதாகவே முடிவு செய்துவிட்டார். அவர் பின் வருமாறு சொன்னர்: 'அவர் புரிந்த குற்றத்தைக் காரணமாகக்கொண்டு, கம்பெனியின் தொல்லைகளைப் போக்குவதற்கு, நான் முடிவு செய்துவிட்டேன். சுருங்கச் சொல்வதானல், அவரை மன்னிப்பதற்காக, ஏராளமான பணத்தை அவர் கொடுக்கும்படி செய்வதற்கும் அல்லது அவர் முன்பு கடமையில் தவறியதற்காகக் கடுமையான வழியில் பழிக்குப்பழி வாங்குவதற்கும் நான் முடிவு செய்துவிட்டேன்.' தமது திட்டத்தை நிறைவேற்ற எண்ணி,

ஹேஸ்டிங்ஸ் வாரணாசிக்குச் சென்று, அவ்வரசரைச் சிறைப் படுத்தினார். அந்த அரசரும் அதைப் பணிவுடன் ஏற்றுக் கொண்டார். ஆனால், அவருக்கு இழைக்கப்பட்ட இந்த அவமானமானது, அவருடைய வீரர்களுக்குச் சினத்தை விளைத்தது. அதனால், அவர்களுடைய தலைவரைக் கேளாமலும் அவரால் தூண்டப்படாமலும் உடனே கலகஞ்செய்து ஆங்கிலச் சிப்பாய்கள் பலரையும் மூன்று அதிகாரிகளையும் கொன்றனர். உயிருக்கும் பயந்து ஹேஸ்டிங்ஸ் சுனாருக்குப் பின் வாங்கினார்; ஆனால், சீக்கிரமே துருப்புகளுடன் வந்து அக்கலகத்தை அடக்கினார்: அக்கொலைகளுக்குத் தாம் உடந்தையாய் இல்லை என்று செயித்சிங்கு வாதாடியும் அது பயனில்லாமல் போயிற்று: அவர் நாடு கடத்தப்பட்டு, குவாலியரில் தஞ்சம் அடைந்தார். அவரது அரசாங்கம் அவர் மருமானுக்குக் கொடுக்கப்பட்டு, அவர் கம்பெனிக்கு $22\frac{1}{2}$ லட்சத்திற்குப் பதிலாக 40 லட்சம் தர வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

ஹேஸ்டிங்ஸை இக்காலத்தில் ஆதரிப்பவர்கள் என்ன கூறியபோதிலும், செயித்சிங்கு விவகாரத்தில் அவரது நடத்தை, அவரது துரோகக்குற்ற விசாரணையின்போது பாராளுமன்றத்தில் பிட்டுக் கூறியபடி 'இரக்கமற்றதாயும் நியாயமற்றதாயும் கொடுமையுள்ளதாயும்' இருந்தது. ஹேஸ்டிங்ஸை ஆதரித்தவர்கள், செயித்சிங்கு ஆட்சி செய்யும் அரசரல்லர் என்றும், ஒரு ஜமீந்தார் என்றும் தவறாகக் கூறினார்கள். அவர் ஒரு ஜமீந்தார் என்பதை நிரூபித்தாலும் மற்ற எல்லா ஜமீந்தார்களின்மீதும் பொதுவான வரி விதிக்கப்படாமல் அவரை மட்டும் தொல்லைக்குள்ளாக்கியது நியாயமன்று. 1775ஆம் ஆண்டு, ஜூலை, 5ஆம் தேதி செய்யப் பட்ட உடன்படிக்கை அவ்வரசருக்கும் கம்பெனிக்கும் உறவை ஏற்படுத்தியது. அது நிச்சயமாகப் பின் வருமாறு நிபந் தனையை விதித்தது: 'மேன்மை பொருந்திய கம்பெனி, அவரிடமிருந்து எவ்விதமான பணத்தையும் எக்காரணத்தைக் கொண்டும் கேளாது. அவர் அதிகாரத்தில் தலையிடவோ அன்றி நாட்டின் அமைதியைக் குலைக்கவோ எவரும் அனு மதிக்கப்பட மாட்டார்.' அதனால், சட்டப்படி அவ்வரசர் அதிகமாக எதையும் கொடுக்க வேண்டுவதில்லை. அவ் வரசரின், நடத்தை, 'கீழ்ப்படியாத முரட்டுத்தனமாய் இருந்த தால், தண்டனைக்குத் தகுதியானவர்' என 'பாரஸ்ட்' (Forrest) என்பார் சொன்னது, உண்மையைத் திரித்துக் கூறியதாகும். உண்மையில் செயித்சிங்கு எப்பொழுதும் கீழ்ப்படிந்தே

யிருந்தார். அவரது தூண்டுதலின்றியே, அவர் ஆள்கள் கலகம் செய்தார்கள். அதுவும் அவர்களுடைய தலைவரை அவமானப்படுத்திய பிறகுதான் நடுவு நிலையான ஆசிரியர்கள் சர் ஆல்பிரடு லையாலின் நியாயமான தீர்ப்பை ஒப்புக் கொள்வர். அவர் ‘வாரணாசியின் கலகத்துக்கு ஹேஸ்டிங்ஸே பொறுப்பாளராவார் என்கிறார். செயித் சிங்கிற்கெதிராக நடவடிக்கைகளில் நேர்மையற்ற கொடுமையும் அவசரமும் இருந்தன. அவை குறிப்பிட்ட அளவுக்குப் பழிவாங்கும் இயல்பினாலும், அரசருக்கெதிரான தனிப்பட்ட கோபத்தினாலும் உண்டானவைகள். நேர்மையை நோக்கும்போது முழு நடவடிக்கையும் மிகக் கொடுமையானவையே என்பது வெளிப் படையாகத் தெரிகிறது. மற்றும் அது பொருத்தமற்றது. டாக்டர் ஸ்மித்து (Dr. Smith) என்பவர் அக்காலத்தின் குழப்ப மான அரசியல் நிலைமையால் ஏற்பட்ட ‘முக்கியத் தேவையை’ அனுசரித்து ஹேஸ்டிங்ஸின் அளவுக்கு மீறிய கோரிக்கையை, ஆதரிக்க முயன்றார். ஆனால், கவர்னர்-ஜெனரல் பணம் எதுவும் பெற இயலவில்லை. ஏனெனில், பொருளின் பெரும் பாகத்தை அரசர் தம்முடன் எடுத்துச் சென்று விட்டார். மீதியிருந்த இருபத்து மூன்று லட்ச ரூபாயும், துருப்புகளால் சூறையாடப்பட்டு, அவர்களால் எடுத்துக்கொள்ளப்பட்டது. அதற்கு எதிரிடையாக, அப்போரினால் ஏற்பட்ட செலவைக் கம்பெனியே ஏற்றுக்கொள்ளும்படி ஆயிற்று. அதனால், கம் பெனியின் டைரக்டர்கள் ஹேஸ்டிங்ஸின் கொள்கையை ‘முறை கேடானது, தவறானது’ எனக் கண்டித்தார்கள். தவிர அக்கம்பெனி அந்நாட்டின் நன்மையைப் பலி கொடுத்தே, புதிய நவாபுவிடமிருந்து அதிகமாக்கப்பட்ட கப்பமான நாற்பது லட்சத்தைப் பெற முடிந்தது. கம்பெனியை ஆதரித்த நவாபுவின் காலத்தில் ஆட்சி மிக மோசமடைந்தது.

## இ. அயோத்தி பீகங்களின் நிகழ்ச்சி

ஊகமுள்ள, உற்சாகமான, திறமையான ஆட்சியாளர் சுராஜ் உத்தௌலா 1775, ஜனவரி, 26ஆம் தேதி இறந்தார். அவருக்குப் பின் அவர் புதல்வரும் வாரிசுமாகிய ஆசப் உத்தௌலா (Asaf-ud-daulah) கம்பெனியுடன் திறமையற்ற விதமாய் பைஸாபாது (Faiza-bad) உடன்படிக்கை என்ற புதிய உடன்படிக்கையைச் செய்து, கம்பெனிக்குக் கொடுக்க வேண்டிய கடனை அதிகப்படுத்துவதற்கு ஒப்புதல் அளித்தார்; முக்கியமாக, பிரிட்டிஷ் துருப்புகளைப் பாதுகாப்பதற்குப் பெரும்பண உதவி செய்வதாக ஒப்புக்கொண்டார். அயோத்தி

யின் புதிய நவாபுவின் ஆட்சியில் ஊழல்கள் அதிகமானதால், கம்பெனிக்குக் கொடுக்கவேண்டிய பணத்தைக் கொடுக்க இயலவில்லை. ஆட்சி செய்யும் அரசரின் தாயும் பாட்டியும் 'அயோத்தியின் பீகங்கள்' என வழங்கப்பட்டனர். இறந்த நவாபுவிடமிருந்து அவர்கள் பல ஜாகீர்களையும் ஏராளமான பணத்தையும் வழியுரிமை மூலமாகப் பெற்றார்கள். கம்பெனிக்குக் கொடுக்க முடியாமல், பண நெருக்கடிக்கு ஆளான ஆசப் உத்தௌலா நியாயமற்ற முறையில் அப்பெரும் பொருளைப் பெறுவதினின்றும் தடுக்கப்பட்டதாகக் கூறி, அதை அபகரிக்கவும் முற்பட்டார். 1775-ல் அயோத்தியிலிருந்த பிரிட்டிஷ் ரெசிடென்டான மிடில்டன் (Middleton) என்பார் தலையீட்டின் பேரில் சிராஜ் உத்தௌலாவின் விதவை, தன் மகனுக்கு முன்பு கொடுத்த 2,50,000 பவுனுக்கும் அதிகமாக 3,00,000 பவுன்கள் கொடுத்தாள். இதற்கீடாக, பிரிட்டிஷ் ரெசிடெண்டும், கல்கத்தா மன்றமும் எதிர்காலத்தில் அவளிடமிருந்து எதுவும் கேட்கப்படமாட்டாது என உறுதியளித்தனர். அச்சமயத்தில் தமது மன்றத்தால் எதிர்க்கப்பட்ட ஹேஸ்டிங்ஸ், மிகுதிமொழியால் வெல்லப்பட்டார். 1781-ல் பிரிட்டிஷ் ரெசிடென்டால் வற்புறுத்தப்பட்டு, கம்பெனிக்குக் கொடுக்கவேண்டிய கடனைத் தீர்ப்பதற்காக, தாம் பீகங்களுடைய பொருளையும் சொத்தையும் கைப்பற்ற அனுமதி தரும்படி நவாபு கேட்டபோது, ஹேஸ்டிங்ஸ் அதற்கு ஒப்புதல் அளித்து, அவர்களுக்குக் கொடுத்திருந்த பாதுகாப்பையும் அகற்றிவிட்டார். ரெசிடெண்டு கூறியபடி பெண் உறவினர்களுக்கு என்றுமில்லாதபடி உண்டான மூர்க்கத்தனமான கோபத்தைக் கண்டு நவாபு நிலை தடுமாறிப் பயந்துவிட்டார். ஆனால், ஹேஸ்டிங்ஸ் அவருக்குத் தைரியமுண்டாக்கினார். 'எவ்விதப் பேச்சுவார்த்தைகளையாவது அல்லது சினமடக்கத்தையாவது ஏற்படும்படி விடக்கூடாது. ஆனால், நவாபுவிற்கு பீகங்கள் பணியும்வரை அவர்களைக் கொடுமைப்படுத்தவேண்டும்.' பீகங்கள் வசித்த பைசாபாதிற்கு பிரிட்டிஷ் துருப்புகள் அனுப்பப்பட்டன. அவர்களின் பேடிகள், சவுக்கால் அடித்துத் துன்புறுத்தப்படாவிட்டாலும் சிறைப்படுத்தப்பட்டுப் பட்டினி போடப்பட்டு அச்சுறுத்தப்பட்டார்கள். அதன் பின் அவர்களிடமிருந்த பொருள்களை, 1782 டிசம்பரில் நவாபு பெற்றார்.

ஹேஸ்டிங்ஸ் இச்சமயத்தில் நேர்மையற்ற முறையிலும் நியாயமற்ற முறையிலும் நடந்துகொண்டார். சர் ஆல்பிரடு லையால், நியாயமாகப் பின்வருமாறு கூறினார்: 'பெண்களிட

மிருந்தும் பேடிகளிடமிருந்தும் பணத்தைப் பறிப்பதற்காக பிரிட்டிஷ் அதிகாரிகளின் தலைமையில் புரியப்பட்ட கொடுமைகள் மிகவும் இழிவானவை. உத்தரவாதத்தை ஒழித்துக் கட்டுப்பாட்டை மீறிய அரசிகளிடமிருந்து பணத்தைப் பெறுவதற்கு நவாபுவை அனுமதித்தது நியாயம் எனலாம். ஆனால், அவரைத் தூண்டி, பெண்களையும் பேடிகளையும் பயமுறுத்துவதற்கு ஆதரவாக உதவி செய்த நடத்தை மிகவும் இழிவானது.' இந்த நடவடிக்கை முழுவதிலும், ஹேஸ்டிங்ஸ்ும் 'முக்கியமானவராய்' இருந்தார். செயித்சிங்கு விவகாரத்தில் அவருக்குத் துணையாய் இருந்ததால், பீகங்கள் ஆங்கிலேயருடைய பாதுகாப்பை இழந்துவிட்டார்கள் என்று ஹேஸ்டிங்ஸ் வாதிட்டதை அவருடைய ஆதரவாளர்களும் ஒப்புக்கொண்டார்கள். இவ்வாதத்தை ஏற்றுக்கொள்ள இயலாது. இதைப்பற்றிய சாட்சி முன்னுக்குப் பின் முரணாயிருக்கிறது. முழுநடவடிக்கையும் நியாயம் எனக் கூறுவதற்காகப் புரட்சி செய்தார் என்ற குற்றம், முற்றும் முடிந்த பிறகு அவர்மீது சாட்டப்பட்டது.

தமது ஆட்சிக் காலத்தின் இறுதியில் ஹேஸ்டிங்ஸ் அயோத்தியின் ஆட்சியையும் நிதியையும் மாற்றி அமைக்க முயற்சி செய்தார். டைரக்டர்கள் மன்றக் கட்டளையின்படி ஒரு சில ஜாகீர்களை அவர் பீகங்களுக்குக் கொடுத்தார். மற்றும் பிரிட்டிஷ் ரெசிடென்சியை அவர் நீக்கினாலும் அந்த இடத்தில் கவர்னர் ஜெனரலின் ஏஜென்சியை ஏற்படுத்தினார். இச்செய்கைகள் நாட்டின் ஆதாரத்தை மிகப் பாதித்தன.

## ஈ. அயோத்தி சம்பந்தமாகக் காரன்வாலிஸ் ஷோரின் கொள்கைகள்

உண்மையில் ஒழுங்கற்ற நிருவாகத்தின் தீங்குகளாலும், கம்பெனியின் பணக்கோரிக்கையினாலும் அயோத்தி மிக அல்லலுற்றது. காரன்வாலிஸ் பிரபுவின் காலத்தில் நவாபு கான்பூரிலும் பட்டேகாரிலுமுள்ள கம்பெனியின் துருப்புகளை மீண்டும் பெற்று, கொடுமையுள்ள பணச் சுமையிலிருந்து தம்மை விடுவிக்குமாறு கோரினார். நவாபுவின் அமைச்சரான 'ஹைதர் பேக்' (Hyder Beg) என்பவருடன் ஆலோசனை செய்து, பண உதவியை எழுபத்து நான்கு லட்சத்திலிருந்து ஐம்பது லட்சமாகக் குறைப்பதற்குக் கவர்னர்-ஜெனரல் ஒப்புக்கொண்டார்; ஆனால், படைகளை மீண்டும் பெறுவதற்கு மறுத்தார்.

ஹைதர் பேக் உண்மையில் ஆற்றல் வாய்ந்த ஆட்சியாளர். அவர் ஆட்சியைச் சீர்திருத்த விரும்பினார். ஆனால், 1794-ல் அவர் இறந்ததும் சீர்திருத்தத்தைப் பற்றிய நம்பிக்கை போய்விட்டது. 1797-ல் ஆசப் உத்தௌலா இறந்ததும் அவரால் வாரிசு எனக் கருதப்பட்டு வாசீர் அலிக்கும் (Wazir Ali) இறந்த நவாபுவின் மூத்த சகோதரரான சாதத் அலி (Saadat Ali) என்பவருக்கும் வாரிசு உரிமை சம்பந்தமாகத் தகராறு எழுந்தபோது சர் ஜான் ஷோர் அதில் தலையிட்டார்.

அவர் பின்னவரைச் சிங்காதனத்தில் ஏற்றி, அவருடன் 1798, ஜனவரி, 21ஆம் தேதி ஓர் ஒப்பந்தமும் செய்து கொண்டார். இதன்படி நவாபு ஆண்டுதோறும் கொடுக்க வேண்டிய பண உதவி எழுபத்தாறு லட்சத்திற்கு உயர்த்தப் பட்டது. அம்மாகாண 'இராணுவத்தின் திறவுகோல்' என மார்ஷ்மேன் (Marshman) என்பவரால் புகழப்பட்ட அலஹாபாது கோட்டை கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டது. மற்ற ஐரோப்பியர்களுடன் செய்திப் போக்குவரத்து வைத்துக் கொள்வதில்லை என்றும், அவர்களைத் தம் நாட்டிற்குள் விடுவதில்லை என்றும் நவாபு உறுதியளித்தார். ஆண்டுதோறும் ஒன்றரை லட்ச ரூபாய் ஓய்வு ஊதியம் பெற்று, வாரணசியில் வாழ வாசீர் அலி அனுமதிக்கப்பட்டார். உண்மையில் இத் திட்டம் கம்பெனியின் செல்வாக்கை உயர்த்தினாலும், அயோத்தியின் உள் நாட்டு ஆட்சியில் இருந்த ஊழல்களைப் போக்க இயலவில்லை. மாகாணம் முழுவதிலும் 'எல்லாவற்றிலும் குழப்பமும் அமைதியின்மையும் இருந்தன. ஆங்கிலேயருக்குக் கொடுக்கவேண்டிய பண உதவி நிலுவையில் இருந்தது. வரி வசூலிப்பதில் மிகக் கொடுமையான முறைகள் கையாளப்பட்டன. மக்களுக்கு நியாயம் வழங்கப்படவில்லை. அச்சேனை கட்டுப்பாடு இல்லாமல் இருந்தது. அதை அடக்குவதற்கு அதனுடைய அதிகாரிகளாலேதான் இயலும். மக்கள் பெருக்கத்தின் தீங்கு, துணிகரச் செயல்களைச் செய்யும் ஏராளமான ஐரோப்பியர்களின் வருகையால் அதிகமாயிற்று. அவர்களுக்குப் பொருளும் இல்லை; அதைப் போன்றே ஒழுக்கமும் நேர்மையும் இல்லை.

# 4. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஏற்படுத்துதல்

## ஆங்கில-மராட்டிய உறவுகளும், மராட்டியர்களின் வீழ்ச்சியும்

### (அ) கர்டாவிற்குப் பிறகு மராட்டியர்களும், இரண்டாம் ஆங்கில மராட்டியப் போரும்

கர்டாவில் (Kharda) மராட்டியர்களுக்குக் கிடைத்த வெற்றி, அவர்களது புகழையும், பூனுவிலிருந்த நான பட்னவிஸின் செல்வாக்கையும் உயர்த்தியது. ஆனால், அதைக் கொண்டு எவ்வித நிலையான அனுகூலத்தையும் அடைவதற்கு அவர்களால் இயலவில்லை. கர்டாவிலேதான் மராட்டியத் தலைவர்கள், கடைசி முறையாகப் பேஷ்வாவின் அதிகாரத்தின் கீழ் ஒருங்கு திரண்டார்கள்; வெற்றிபெறக் கூடிய வாய்ப்புகளை உள்நாட்டுப் போரில் ஈடுபட்டுப் பாழ்படுத்திவிட்டார்கள். மாதவராவ் நாராயண் என்கிற இளம் பேஷ்வா, நான பட்னவிஸின் சர்வாதிகாரத்தைக் கண்டு வெறுப்புற்று, நம்பிக்கையிழந்த நிலையில், 1795, அக்டோபர், 25-ல் தற்கொலை செய்துகொண்டார். இரகோபாவின் மகனான இரண்டாம் பாஜிராவே அவருக்கு அடுத்த வாரிசு. அவர் நான பட்னவிஸுக்கு எதிரியாய் இருந்ததால், அவர் அப்பதவிக்கு வருவதை அவ்வமைச்சர் எதிர்த்தார். இது பலவிதச் சதிகளுக்கும், அச்சதிகளுக்கெதிரான சதிகளுக்கும் வழி வகுத்தது. கடைசியில் இரண்டாம் பாஜிராவ் பேஷ்வா என்னும் நான பட்னவிஸ் அவருடைய முதல் அமைச்சர் என்பது 1796, டிசம்பர், 14-ல் ஒப்புக்கொள்ளப்பட்டது. மராட்டியர்களுக்குள்ளே ஏற்பட்ட இக்குழப்பத்தை உபயோகப்படுத்திக்கொண்டு, அண்மையில் கர்டாவில் ஏற்பட்ட தோல்வியினால், இழந்த இடங்களையெல்லாம் நைஜாம் மறுபடியும் கைப்பற்றிக்கொண்டார். இராணுவத் திறன் இல்லாது, சதி செய்வதில் மிகுந்த விருப்பம் கொண்ட இரண்டாம் பாஜிராவ், அக்காலத்திலிருந்த மராட்டியத் தலைவர்களை ஒருவரோடொருவர் மோதவிட்டு அவர்களுடைய போட்டியை அதிகப்படுத்தினர். துரதிருஷ்ட

வசமாக, மராட்டியர்களின் மாபெருந் தலைவர்களான மஹாதாஜி சிந்தியா, மல்ஹர்ராவ் ஹோல்கார், துக்கோஜி ஹோல்கார் போன்றவர்கள் இவ்வுலகத்தை விட்டு மறைந்தார்கள். அவர்களுக்குச் சந்ததிகளான மஹாதாஜி சிந்தியாவின் மருமானும், தத்துப் புத்திரனுமான தவுலத் ராவ் சிந்தியா, துக்கோஜியின் புதல்வரான ஜஸ்வந்த ராவ் ஹோல்கார் என்பவர்களைப் போன்றவர்கள், அறிவில்லாமல் நாட்டின் நலன்களுக்குக் கேடு செய்யும் வகையில், தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டார்கள். 1768, ஏப்பிரல், 26-ல் கவர்னர் ஜெனரலாக, மார்னிங்டன் பிரபு (பிறகு மார்க்குவிஸ் வெல்லெஸ்லி) இந்தியாவுக்கு வந்த உடனே, கம்பெனி தன் நடுவு நிலைமைக் கொள்கையைக் கைவிட்டு ஆக்கிரமிப்புச் செய்யும் ஏகாதிபத்தியமாக மாறிய போதுதான், மராட்டியர்களும் தங்களுக்குள் போரிட்டுக்கொண்டார்கள்.

ஏகாதிபத்திய வாதியான வெல்லெஸ்லி கட்டுப்பாடு செய்யும் கழகத்தின் ஆணையாளராய் (commissioner) இருந்த போது, இந்திய விவகாரங்களைப்பற்றிய பேரனுபவத்தைப் பெற்றிருந்தார். அவர் கூறியபடி இந்நாட்டின் அரசியல் நிலைமை 'மிக நெருக்கடியாய்' இருந்த சமயத்தில், கம்பெனியை நடத்துவதற்கு இங்கு வந்தார். ஷோரின் நடுவு நிலைமைக் கொள்கையின் விளைவாக, கம்பெனி கொடிய அபாயத்திற்கு ஆளாயிருந்தது. 'கம்பெனியின் பழைய விரோதியான' திப்பு, தம் வளத்தைப் பெருக்கி, பகை உணர்ச்சியைக் குறைக்காமல் இருந்தார்; நிஜாம் 'புகழிலும் ஆற்றலிலும் குன்றியிருந்தார்.' அவர் 1795-ல் ஆங்கிலேயர் கடைப்பிடித்த நடுவுநிலைமைக் கொள்கையைக் கண்டு வெறுப்படைந்து, பிரெஞ்சுக்காரர்களின் உதவியை நாடினர்; தவுலத் ராவ் சிந்தியாவின் ஆற்றல் 'அச்ச மடையக்கூடிய அளவிற்குப் பெருகியது.' மலபார் மண்டலத்திலிருந்த அரசர்கள்—குடகு அரசர் நீங்கலாக—விரோதிகளாயிருந்தார்கள்; காபூல் அரசரான ஜாமன் ஷா (Zaman Shah) இந்தியச் சமவெளியின் மீது படையெடுப்பார் என்ற பயமும் அடிக்கடி இருந்து வந்தது; கம்பெனியின் நிதி நிலைமை, திருப்தியற்ற வகையில் இருந்தது. ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சிப் போரும், நெப்போலியனுடைய போர்களும் நிலைமையைப் பின்னும் மோசமாக்கின. திப்புவுடன் பிரெஞ்சுக்காரர்களும் சேர்ந்துகொண்டார்கள். இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் ஆட்சியை அச்சுறுத்தும் எண்ணத்துடன், நெப்போலியன் தம் படைகளுடன் எகிப்தில் நுழைந்தார்.

பேராபத்திலிருந்த கம்பெனியின் நிலைமையைப் பாதுகாக்கவும், பிரிட்டிஷ் பேரரசின் நலன்களைப் பாதுகாத்து அதிகரிக்கச் செய்யவும் 'பாதுகாப்பு முறை நேச உடன்பாடு' (Subsidiary alliances) என்கிற கொள்கையை, இந்திய அரசுகளுடன் வெல்லெஸ்லி பின்பற்றினார், உண்மையில் இங்கிலாந்தின் பேரரசைப் பாதுகாப்பதுதான் அக்கொள்கையின் முக்கிய நோக்கம். அவரது பாதுகாப்பு முறை நேச உடன்பாட்டுக் கொள்கையானது—இந்திய அரசுகள் 'பிரிட்டிஷ் ஆட்சியைக் கலந்தாலோசிக்காமலும், ஒப்புதல் இல்லாமலும், வேறு எந்த நாட்டுடனும் போரிடவோ, அன்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்தவோ கூடாது; பெரிய அரசுகளுள் ஒவ்வொன்றும், சமாதானத்தை நிலை நிறுத்துவதற்காக, பிரிட்டிஷ் அதிகாரிகளின் கீழ், ஒரு சுதேசப் படையை வைத்துக் கொள்ள வேண்டும்; இப்படைகளுக்கு ஆண்டுதோறும் ஆகும் செலவுகளுக்காக, ஒவ்வொன்றும் சில பிரதேசங்களை முழு உரிமையுடன் கம்பெனிக்கு விட்டுக்கொடுக்க வேண்டும்; சிறிய நாடுகள், தலையாய ஆட்சிக்குக் கப்பஞ் செலுத்த வேண்டும். இதற்குப் பதிலாக, பிரிட்டிஷ் ஆட்சி, அந்நாடுகளை அவற்றின் வெளிப் பகைவர்களிடமிருந்து பாதுகாக்கும்' என்ற கருத்துகள் வெளிப்படையாகச் சொல்லப்படாமல், குறிப்பாகச் சொல்லப்பட்டன. இவ்வித ஏற்பாட்டை வலுவற்ற அரசுதான் ஒப்புக்கொள்ளும். இந்திய அரசர்களுள் மிகவும் வலுவற்றவரான நைஜாம், அதை உடனே ஏற்றுக்கொண்டார். மற்றும் சில இந்திய அரசுகளும், வெல்லெஸ்லியின் தலையீட்டினால் இக்கொள்கையை ஏற்றுக்கொண்டன.

வெல்லெஸ்லி பதவிக்கு வந்த பிறகு, மராட்டியர்கள் ஆங்கிலேயருடன் நெருங்கிப் பழகவில்லை. தமது 'பாதுகாப்பு நட்புறவிலும், இருதரத்தாருக்கும் பொதுவான பாதுகாப்பை அளிக்கும்' ஏற்பாட்டிலும் சேரும்படி அவர் பலமுறை அவர்களை அழைத்தார். அதை யாரும் ஏற்கவில்லை. 1800-ல் வெல்லெஸ்லி, 'பாஜி ராவின் நிலையற்ற மனநிலையினாலோ, அல்லது அயல்நாட்டு உறவுகளைப்பற்றி அந்நாடு கொண்டிருந்த குறிப்பிடத் தக்க பொருமையினாலோ, எனது குறிக்கோளும் நோக்கமும் பயனற்றுப் போயின,' என எழுதினார். ஆனால், ஆங்கிலேயர்கள் தலையிடும்படியான நிகழ்ச்சிகள், மகாராஷ்டிரத்திலுங் கூடத் திடீரென்று ஏற்பட்டன. மராட்டியக் கூட்டரசின் கட்டுப்பாட்டை எப்படியோ ஒருவிதமாகப் பாதுகாத்தவரும், மராட்டிய விவகாரத்தில் ஆங்கிலேயரின் தலையீட்டை எதிர்த்தவரும், ஊகமுள்ள மராட்டிய ராஜ

தந்திரியுமான நானு பட்னவிஸ், 1800, மார்ச்சு, 12-ல் பூனுவில் இறந்தார். பூனுவில் பிரிட்டிஷ் ரெசிடென்டாய் இருந்த கர்னல் பாமர் (Colonel Palmer) என்பவர் தீர்க்கதரிசனத்துடன் கூறியபடி, 'மராட்டிய அரசாங்கத்தின் பகுத்தறிவும் மிதமான தன்மையும் 'அவருடன் சென்றுவிட்டன.' அரசியல் ஆதிக்கத்தை உண்டாக்க நானு பட்னுவிஸ் செய்த முயற்சிகளும், வடக்கை ஒதுக்கியதும் அவர் கொள்கையில் இருந்த குறைபாடுகள் என இக்கால மராட்டிய ஆசிரியர் ஒருவரால் கருதப்பட்டாலும், கிராண்ட் டப் (Grant Duff) என்பவரின் கருத்துப்படி, 'அவர் உண்மையிலேயே ஒரு பெரிய ராஜதந்திரி. நாட்டுப் பற்றுக்கொண்ட ஒருவரின் உணர்ச்சியையும் விசுவாசத்தையும் கொண்டு நடந்ததற்காக அவர் போற்றப்பட வேண்டும்,' என்பதை நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும். மராட்டிய விவகாரங்களில் ஆங்கிலேயர் தலையீட்டினுல் ஏற்படும் அபாயத்தை அவர் உணர்ந்ததால் அவர்களுடன் எவ்விதமான நட்புறவையும் அவர் வைத்துக்கொள்ளவில்லை. அவர் ஆங்கிலேயர்களுக்கு மதிப்புத் தந்தார்; அவர்களது விசுவாசத்தைப் புகழ்ந்தார்; ஆனுல், அரசியல் பகைவர்களான ஆங்கிலேயர்களை, அவரே அதிக பொறுமையுடனும், அச்சத்துடனும் நோக்கினுர். அவர் பிளவு உண்டாக்கும் மராட்டியத் தலைவர்களின் செய்கைகளுக்குப் பெரும்பாலும் தடையாய் இருந்தார். அவரது இறப்பு இத்தடையை நீக்கியது. தவுலத்ராவ் சிந்தியாவும் ஜஸ்வந்த் ராவ்ஹோல்காரும், பூனுவில் ஆதிக்கம் பெறும்பொருட்டுத் தங்களுக்குள் கடுமையாகப் போரிட்டுக் கொண்டார்கள். ஆற்றலற்ற பேஷ்வா, அடிக்கடி சதி செய்து, நிலைமையை மோசமாக்கினுர். சிந்தியா, முதலில் ஆரம்பித்து, மால்வாவில் ஹோல்காருடைய துருப்புகளுடன் போரிட்டுக் கொண்டிருந்தபோது, ஜஸ்வந்த ராவ் ஹோல்காரின் சகோதரரான விதுஜி ஹோல்கார் என்பவரைக் கொன்றுவிட்டார். அண்மையில் தமது அதிகாரத்தையும் நிலையையும் வலிவுபடுத்திக் கொண்ட ஜஸ்வந்த்ராவ் ஹோல்காருக்கு இது மிக்க ஆத்திரத்தை உண்டுபண்ணியது. அவர் அக்டோபர் 23-ல் பூனுவில் சிந்தியா பேஷ்வா ஆகியவர்களின் கூட்டுப்படையைத் தோற்கடித்து, அந்நகரத்தையும் கைப்பற்றினுர். பல இடங்களுக்கும் ஓடிச்சென்று, கடைசியில் பாசீன் நகரத்தில் தஞ்சம் அடைந்தார். இரகோபாவின் தத்துப் புத்திரரான அமிர்தராவ், அவர்தம் மகனுரான விநாயகராவ் என்பவரை, ஜஸ்வந்த்ராவ் ஹோல்கார் பேஷ்வாவாகச் செய்தார்.

பல ஆண்டுகளாகப் பாதுகாப்பு முறை நேச உடன்பாட்டில் பேஷ்வா சேராமலிருந்தார்; ஆனால், அப்பொழுதிருந்த உதவியற்ற நிலைமையில் பாதுகாப்பைக் கோரி வெல்லெஸ்லியிடம் மனுச்செய்தார். வெல்லெஸ்லியும் இதையே எதிர்பார்த்திருந்தார். ஏனெனில், மராட்டியர்களின்மேல் ஆதிக்கம் செலுத்துவதற்கு இத்திட்டம் உதவியாய் இருக்கும். இரண்டாம் பாஜிராவ், பாதுகாப்பு முறை நேச உடன்பாட்டை ஒப்புக்கொண்டு, 1802, டிசம்பர், 31-ல் பாசீன் உடன்படிக்கையில் (Treaty of Bassein) கையெழுத்திட்டார். இதன்படி, 6000-க்குக் குறையாத காலாட்படையும், அதற்குரிய பீரங்கிகளும், ஐரோப்பிய பீரங்கிப் படையினரும் கொண்ட ஒரு பாதுகாப்புப்படை, பேஷ்வாவின் நாட்டில் நிலையாகத் தங்கியிருக்கும்; அதன் செலவுக்காக இருபத்தாறு லட்ச ரூபாய் வருமானம் தரத்தக்க இடங்களைக் கொடுப்பதற்கும் பேஷ்வா ஒப்புக்கொண்டார். ஆங்கிலேயருக்குப் பகைவர்களான ஐரோப்பியர்களையும் வைத்துக் கொள்வதில்லை என்றும், அவர்களது உத்தரவு இல்லாமல் மற்ற இந்திய அரசுகளின் உறவு வைத்துக் கொள்வதில்லை என்றும், இரண்டாம் பாஜிராவ் ஒப்புக்கொண்டார். இப்படிப் 'பாதுகாப்பைப் பெறும்பொருட்டுத் தமது சுதந்தரத்தை அவர் பலி கொடுத்தார்.' ஆர்தர் வெல்லெஸ்லியின் (Arthur Wellesley) தலைமையின்கீழ்ப் புறப்பட்ட ஒரு பிரிட்டிஷ் படை, பேஷ்வாவை அவரது தலைநகரத்திற்கு அழைத்துச் சென்று, 1803, மே. 13-ல் பழையபடி பதவியில் அமர்த்தியது.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்க வரலாற்றில், பாசீன் உடன்படிக்கை ஒரு முக்கிய நிகழ்ச்சியாய் விளங்குகிறது. டீன் ஹட்டன் (Dean Hutton) கூறியபடி, 'மேற்கிந்தியாவில், நாம் கொண்டிருந்த நிலையை இந்நிகழ்ச்சி மாற்றியது என்றால் அதில் சந்தேகமில்லை.' ஒரே விநாடியில், அது ஆங்கிலேயரின் பொறுப்பை மும்மடங்காக்கியது. மராட்டியக் கூட்டரசின் பழைய தலைவருடன், நிச்சயமான உறவைக் கம்பெனி பெறுவதற்கு அது உதவியது. இதன் பிறகு அக்கம்பெனி மிகப் பெரிய இந்திய அரசின்மீது ஆதிக்கம் கொள்ள வேண்டும், அல்லது அதனுடன் போரிட வேண்டும். ஓவன் (Oven) கூறியபடி, அதன் முக்கியத்துவத்தை அதிகப்படுத்திச் சொல்வதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. ஓவன் பின் வருமாறு கூறுகிறார்: 'இந்தியப் பேரரசைக் கம்பெனி பெறுவதற்கு இவ்வுடன்படிக்கை நேரிடையாகவும் மறைமுகமாகவும் உதவியது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்படுமென்பது, 1803-ல்

உறுதியாக முடிவு செய்யப்படவில்லை. அதை உறுதியாக ஏற்படுத்துவதற்கு முன், மிகச் சிரமப்பட வேண்டியிருந்தது. கட்டுப்பாடு செய்யும் குழுவிற்குத் தலைவராக டண்டாஸ் (Dundas) என்பவருக்குப் பின், 1801ஆம் ஆண்டு மே மாதம் பதவி ஏற்ற கேசல்ரீ பிரபு (Lord Castlereagh) என்பவரால், பாசின் உடன்படிக்கை சம்பந்தமான சில குறிப்புகள் என்று இங்கிலாந்தில் வெளியிடப்பட்ட கட்டுரையில், அந்த உடன் படிக்கைகளைப்பற்றிக் குறை கூறி எழுதப்பட்டது. 'ஆற்ற லும் நல்லெண்ணமும் இல்லாத பேஷ்வாவின் மூலமாக, மராட்டியப் பேரரசை ஆளமுயல்வது பயனற்ற செயலெனத் தெரிகிறது,' என அவர் குறித்தது மிகவும உண்மையானது. மற்ற அரசுகளுடன் ஏற்படும் தகராறுகளில் ஆங்கிலேயர்கள் மத்தியஸ்தம் செய்து வைப்பதைப் பேஷ்வா உடன்படிக்கையி லிருந்த ஒரு விதியின் மூலம் ஒப்புக்கொண்டார். அவ் விதியையே அவர் கண்டித்தார். 'கொந்தளிப்பான (மராட்டிய) பேரரசின், முடிவில்லாச் சிக்கல் நிறைந்த குழப்பத்தில் ஆங்கிலேயரை இவ்வுடன்படிக்கை இழுத்துச் சென்றுவிடுமோ!' என அவர் பயந்தார்; இவ்வுடன் படிக்கைக்குப் பிறகு, மராட்டியத் தலைவர்களுடன் போர் ஏற்படுமோ என்று அச்சங்கொள்வதற்கு நியாயமில்லை என்று சொன்னார். இது தவறான கருத்தாகும். ஆனால், போர் ஏற் பட்டாலும் இவ்வுடன்படிக்கையினால் கிடைத்த அனுகூலங்களை வைத்துக் கொண்டு பகைவர்களை வெற்றிகரமாக எதிர்க்க முடியும் என்பதையும் அவர் அதே சமயத்தில் உணர்ந்தார். சீக்கிரத்திலேய போரும் ஏற்பட்டது. கவர்னர் ஜெனரலின் சகோதரரான ஆர்தர் வெல்லெஸ்லி பாசீன் உடன் படிக்கையைப்பற்றி, 'ஒரு பூஜ்யத்துடன் (பேஷ்வா) செய்யப் பட்ட ஓர் உடன்படிக்கை,' என்று சரியாகக் கூறினார். இது மற்ற மராட்டியத் தலைவர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தி யது. அவர்கள் இதில் தங்களுடைய தேசீய சுதந்திரம் பறி போனதைக் கண்டு, அச்சமயத்தில் தங்களுக்குள் இருந்த பொறாமைகளை மறந்து, ஆங்கிலேயருக்கு எதிராக ஒன்று சேர முயன்றார்கள். தமது செய்கைக்காக வருந்திய பேஷ்வா வும், அவர்களை ஊக்குவிப்பதற்காக ஓர் இரகசியச் செய்தியை யும் அனுப்பினார். தவுலத்ராவ் சிந்தியாவும், பீராரின் ரகுஜி பான்ஸ்லேயும் உடனே ஒன்று சேர்ந்து, ஜஸ்வந்த்ராவ் ஹோல்காரையும் தம்முடன் சேர்ப்பதற்கு முயன்றனர். தமது நாட்டிற்குப் பேரழிவு ஏற்படவிருந்த அத்தருணத்திலும், மராட்டியத் தலைவர்கள் ஒன்று சேர இயலவில்லை. சிந்தியா வும், இரண்டாம் ரகோஜி பான்ஸ்லேயும் தங்கள் துருப்பு

களைத் திரட்டியபோது ஹோல்கார் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கொண்டு, திட்டத்தை மாற்றிக்கொள்ள நினைக்கும் எண்ணத்துடன் மால்வாவிற்குச் சென்றுவிட்டார்; பிறகு காலங் கடந்து போரில் ஈடுபட்டார். கெய்க்குவார், நடுவு நிலைமை வகித்தார்.

1803ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாத ஆரம்பத்தில் போர் தொடங்கியது. மராட்டியர்களின் சேனைகளில் 2,50,000 துருப்புகளும் பிரெஞ்சுக்காரர்கள் பயிற்சி அளிக்கப்பட்ட 40,000 துருப்புகளும் இருந்தன. இந்தியாவின் பல பாகங்களில் இருந்த பிரிட்டிஷ் துருப்புகளின் எண்ணிக்கை 55,000. ஆனால், வெல்லெஸ்லி இப்போருக்காகத் தயாராகிக்கொண்டு வந்தார்.

மைசூரிலும் சூரத்திலும் அவர் எடுத்த நடவடிக்கைகளுக்கும் கெய்க்வாருடனும் அயோத்தியுடனும் அவர் செய்து கொண்ட ஒப்பந்தங்களுக்கும் மேலாக, பாசீன் உடன்படிக்கை, கூட்டரசை வெற்றிகரமாக எதிர்ப்பதற்கு மிகவும் உதவியது. ஆங்கிலேயர்கள், எதிரிகளை எல்லாவிடங்களிலும் தாக்க முடிவு செய்தார்கள். இரண்டு முக்கிய இடங்களிலும், ஆர்தர் வெல்லெஸ்லியின் கீழ்த் தக்காணத்திலும், ஜெனரல் லேக்கின் தலைமையின் கீழ் இந்துஸ்தானத்திலும், அதே சமயத்தில் குஜராத்து, பண்டல்கண்ட், ஒரிஸ்ஸா ஆகிய முக்கியமற்ற மூன்று இடங்களிலும் போர் நடைபெற்றது. பிரெஞ்சுக்காரர்களால் பயிற்சியளிக்கப்பட்ட துருப்புகள், உபயோகப்படவில்லை; சிந்தியாவின் படையிலிருந்த ஐரோப்பிய அதிகாரிகளுட் பெரும்பாலார், அவரைக் கைவிட்டனர். அடிக்கடி தாக்கித் தொல்லை கொடுக்கும் முன்னோர்களின் தந்திரத்தைக் கைவிட்டதிலும், மேல் நாட்டவர்களை நம்பி, அவர்களுடைய போர்முறைகளை ஆதரித்ததிலும், மராட்டியர்கள் பெரிய தவற்றை இழைத்துவிட்டார்கள். அச்செய்கை தோல்வியில் முடிந்தது.

தக்காணத்தில், நைஜாம் எல்லையிலிருந்த அஹமது நகரை 1803, ஆகஸ்டு, 12-ல் ஆர்தர் வெல்லெஸ்லி கைப்பற்றினார்; செப்டெம்பர், 23-ல், சிந்தியா பான்ஸ்லே ஆகியவர்களின் கூட்டுப்படையை அவுரங்காபாதிலிருந்து வடக்கே நாற்பத்தைந்து மைலில் இருந்த அசாயி என்னுமிடத்தில் தோற்கடித்து வெற்றி பெற்றார். கிரான்ட் டப் என்பார், இப்போரைப் பற்றித் 'தக்காண வரலாற்றிலே குறிப்பிடத்தக்க

வெற்றிகளில் இவ்வெற்றி மிகச் சிறப்புடையது,' என்று கூறுகிறர். பர்ஹாம்பூரும், அசீர்காரும் ஆங்கிலேயர்களால் முறையே அக்டோபர் 15-லும், 21-லும் பிடிக்கப்பட்டன. பான்ஸ்லே அரசரின் துருப்புகள், பர்ஹாம்பூருக்குக் கிழக்கே ஐம்பது மைலில் இருந்த ஆரகான் என்னுமிடத்தில் அக்டோபர் 29-ல் தோற்கடிக்கப்பட்டன. 1803, செப்டெம்பர், 15-ல் காவில்கார் (Gawilgarh) என்னும் பலமான கோட்டை பிடிபட்டது. இந்துஸ்தானத்திலுங்கூட, ஆங்கிலேயருக்கு வெற்றி கிடைத்தது. லேக்கு (Lake) என்பவர், டில்லியையும் ஆக்கிராவையும் பிடித்தார். வடக்கிலிருந்த சிந்தியாவின் படை செப்டெம்பரில் நடந்த டில்லிப்போரில் முதுகு காட்டும்படி செய்யப்பட்டது; அதைப்போன்றே ஆள்வார் நாட்டிலிருந்த லாஸ்வாரி (Laswari) என்னுமிடத்திலும் நவம்பர் மாதத்தில் தோற்கடிக்கப்பட்டது. குஜராத்து, பண்டல்கண்ட், ஒரிஸ்ஸா ஆகிய இடங்களிலும் ஆங்கிலேயர் மேலும் பல வெற்றிகளைப் பெற்றனர். இவ்விதம் ஐந்து மாதங்களில், சிந்தியாவும் பான்ஸ்லேவும் தோல்வியுற்று, ஆங்கிலேயருடன் தனித் தனியாக உடன்படிக்கைகள் செய்துகொண்டனர். 1803, டிசம்பர், 17-ல் செய்யப்பட்ட தியோகான் (Deogaon) உடன்படிக்கைப்படி, பீராரின் அரசரான பான்ஸ்லே, பாலசூரைச் சேர்ந்த கட்டாக்கு மாகாணத்தையும், வார்தா நதியின் மேற்கில் அவருக்குரிய எல்லா இடங்களையும் ஆங்கிலேயருக்குக் கொடுத்துவிட்டார். இனி நைஜாமுடனாவது, அல்லது பேஷ்வாவுடனாவது ஏற்படும் தகராற்றில், ஆங்கிலேயர் மத்தியஸ்தராய் இருப்பர். ஆங்கிலேயருடனே, அன்றி எந்தப் பிரிட்டிஷ் பிரஜையுடனே, போரிடும் ஐரோப்பியர்கள், அமெரிக்கர்கள் அல்லது வேறு எந்த நாட்டவராய் இருந்தாலும், அவர்களை ஆங்கில ஆட்சியின் சம்மதமின்றி வைத்துக் கொள்வதில்லை என்றும் உறுதியளித்தார். ஒரு பிரிட்டிஷ் ரெசிடென்டை, நாகபுரியில் வைத்துக்கொள்ள விரும்பியதால், மேன்மை பொருந்திய எல்பின்ஸ்டன் (Elphinstone) என்பவர் அவ்விடத்திற்கு அனுப்பப்பட்டார். சிந்தியா, டிசம்பர், 30-ல் சுர்ஜி அர்ஜன்கான் (Surji Arjangaon) உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அதன்படி, கங்கைக்கும் யமுனைக்கும் இடையில் இருந்த அவருடைய இடங்களையும் கோட்டைகளையும் இராஜபுத்திர நாடுகளான ஜெய்ப்பூர், ஜோத்பூர் கோகாட் ஆகியவைகளின் வடக்கில் இருந்த அவருடைய இடங்களையும், வெற்றி பெற்றவர்களுக்கு அவர் கொடுத்தார். மேற்கில், அஹமது நகரம், புரோச்சு, அஜந்தா மலைகளுக்கு

மேற்கே இருந்த தமக்குரிய எல்லா இடங்களையும் அவர் விட்டுக்கொடுத்தார். முகலாயப் பேரரசர், பேஷ்வா, நைஜாம், பிரிட்டிஷ் அரசு ஆகியவர்களின் மேலிருந்த தம் உரிமைகளை அவர் கைவிட்டார்; பகை நாட்டிலிருந்த




ஐரோப்பியர்களையும், ஆங்கிலேயரது சம்மதம் பெறாத பிரிட்டிஷ் பிரஜைகளையும் தம் படையில் சேர்ப்பதில்லை என்றும் ஒப்புக் கொண்டார். சர் ஜான் மால்காம் (Sir John Malcolm) என்பவர் ரெசிடென்டாக நியமிக்கப்பட்டார். 1804, பிப்ரவரியில் செய்யப்பட்ட மற்றோர் உடன்படிக்கைப்படி, அவர்

பாதுகாப்பு முறை நேச உடன்பாட்டில் சேர்ந்தார். அதன்படி, 6000 காலாட்படையினரைக் கொண்ட பாதுகாப்புப்படை, சிந்தியாவின் நாட்டு எல்லையில் நிறுத்தப்படும். ஆங்கிலேயருடன் விசுவாசமாய் இருந்ததற்கு வெகுமதியாக பீரார் அரசரின் பழைய இடங்களிலிருந்து நாருனல்லா (Narunalla) காவில்கார் (Gawilgarh) ஆகியவற்றுக்குத் தெற்கில் இருந்த எல்லா இடங்களையும், வார்தா நதிக்கு மேற்கே இருந்த இடங்களையும், சிந்தியாவின் நாட்டில் அஜந்தா மலைகளுக்குத் தெற்கில் இருந்த ஜலனாபூர் (Jalanapur) கொண்டாபூர் (Gondapur) போன்ற மாவட்டங்களையும் நைஜாம் பெற்றார்.

இரண்டாம் ஆங்கில மராட்டியப் போரில் ஆங்கிலேயர் முக்கியச் சலுகைகளைப் பல்வேறு முறையில் பெற்றனர். வெல்லெஸ்லி, 'இவ்வளவு சீக்கிரமாகவும் உறுதியாகவும் என் திட்டங்கள் நிறைவேறுமென்று நான் எதிர்பார்க்கவில்லை,' என்று சொன்னார். சென்னையிலும் வங்காளத்திலுமிருந்த ஆங்கிலேயரின் உடைமைகளுங்கூட மற்ற வழிகளில் விரிவாக்கப்பட்டன. பெயரளவில் மட்டும் முகலாயப் பேரரசராய் இருந்த இரண்டாம் ஷா ஆலம், அவர்களது பாதுகாப்பின் கீழ் வந்தார். ஜோத்பூர், ஜெய்பூர், மாசேரி (Mucheri) புந்தி (Bundi) பரத்பூரின் ஜாட் அரசு ஆகியவற்றுடன் நட்புடன் படிக்கைகள் செய்யப்பட்டன. பிரெஞ்சுக்காரர்களால் பயிற்சியளிக்கப்பட்ட படை கலைக்கப்பட்டது. நைஜாமும் பேஷ்வாவும் முன்பிருந்ததைவிட அதிகமாக அவர்களின் ஆதிக்கத்தின்கீழ் வந்தார்கள். மன்றோ என்ற நூல் ஆசிரியர், 'இப்பொழுது நாம் இந்தியாவை அடக்கி ஆள்பவர்களாய் இருக்கிறோம். அதை உறுதிப்படுத்துவதற்குத் தகுந்த நடவடிக்கைகளை நாம் எடுத்துக்கொண்டால், நம்முடைய ஆட்சியை அசைக்க எவராலும் முடியாது,' என்று கூறுகிறார். 'சிறப்பும் முக்கியத்துவமும் வாய்ந்த இவ்வுடைமைகளில் நிலையான செழுமையும் அமைதியும் ஏற்படுவதற்கு இவ்வுடன்படிக்கைகளே பாதுகாப்பு அளிக்கின்றன,' என்று வெல்லெஸ்லி 'வேண்டுமென்றே செய்யும்' தவறான முடிவுக்கு வந்தார். அப்பொழுது நடந்த கடிதப் போக்குவரத்தில் கேசல்ரீ பிரபு வெளிப்படையாகத் தெரிவித்தது போல, இங்கிலாந்திலிருந்த அமைச்சரவை, வேறு விதமாகவே நினைத்தது. ஆர்தர் வெல்லெஸ்லி, இந்தியாவின் நிலைமையை நன்குணர்ந்தார். அவர் சகோதரரான கவர்னர் ஜெனரல் 'சமாதான உடன்படிக்கைகளைப்பற்றிச் சரியல்லாத விளக்கத்தைக் கொடுத்தார்,' என்று சொன்னார். 1804, மே 13-ல் அவர் பின் காணுமாறு

எழுதினர்: 'நம் பகைவர் மிகவும் வெறுப்படைந்திருக்கின்றனர்; நமது நடத்தையைப்பற்றியும், விசுவாசமற்ற தன்மையைப்பற்றியும் குறை கூறுகின்றனர்; நாம் அமைதியைப் பெறவில்லை என்று நான் உண்மையாக நினைக்கிறேன்.'

## (ஆ) ஹோல்காருடன் போர்

நெடுங்காலமாகப் போரில் ஈடுபடாமலே இருந்த ஹோல்காருக்கும் ஆங்கிலேயருக்கும் இடையில் போர் தொடங்கிய உடனே, அமைதியும் குலைந்தது. தவருன முடிவு செய்து, ராஜபுதனச் சமவெளியில் நெடுந்தூரம் முன்னேறிய கர்னல் மான்சன் (Colonel Monsen) என்பவரை, கோட்டா (Kotah) என்னும் நகருக்கு முப்பது மைல் தெற்கே இருந்த முகுந்தராக் கணவாயில், ஹோல்கார் என்பவர், மராட்டியர்களின் பழைய போர் முறைகளைக் கையாண்டு, தோற்கடித்தார். அதனுல், அவர் ஆகஸ்டு மாத முடிவில், ஆக்கிராவை நோக்கிப் பின் வாங்க நேர்ந்தது. இவ்வெற்றியால் கர்வங் கொண்ட ஹோல்கார், வடக்கே சென்று, அக்டோபர் 8 முதல் 14ஆம் தேதி வரை டில்லியை முற்றுகையிட்டார். ஆனுல், அந்நகரம், அவ்விடத்திருந்த பிரிட்டிஷ் ரெசிடென்டான லெப்டினென்ட் கர்னல் ஆக்டர்லோனி (Lt. Colonel Octerlony) என்பவரால் வெற்றிகரமாகப் பாதுகாக்கப்பட்டது. ஹோல்காரின் துருப்புகளைக் கொண்ட ஒரு படை, 'டிக்' (Dig) என்னுமிடத்தில் நவம்பர் 13-ல் தோற்கடிக்கப்பட்டது. ஹோல்காரைத் தலைவராகக் கொண்ட மற்றொரு படையும், ஜெனரல் லேக்கு என்பவரால், நவம்பர் 17-ல் தோற்கடிக்கப்பட்டது. ஆனுல், பரத்பூர்க் கோட்டையைப் பிடிப்பதில் தோல்வியுற்றதால், 1805 ஆரம்பத்தில் ஆங்கிலேயர் ஒரு பெரிய தோல்வியை அடைந்தனர். 1805, ஏப்பிரல், 18-ல் பரத்பூர் அரசர், ஆங்கிலேயருடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். ஹோல்காரின் நிலை மோசமாக மாறுவதற்கான சூழ்நிலை இருந்தது. ஆனுல், அதற்குள் திடீரென்று வெல்லெஸ்லி மீண்டும் அழைக்கப்பட்டார்.

வெல்லெஸ்லியின் ஆக்கிரமிப்புக் கொள்கையைக் கண்டு சிறிது காலமாக இங்கிலாந்திலிருந்த அதிகாரிகள் அதிருப்தியுடன் இருந்தனர். அவரது வெற்றி சிறந்ததாகவும் விளைவுகளை உண்டாக்கக் கூடியதாகவும் இருந்தபோதிலும், 'ஆதாயத்துடன் நிருவாகத்தை நடத்துவதற்கு இயலவில்லை,' எனப்

பலரால் நம்பப்பட்டது. 1797-ல் பதினேழு மில்லியன்களாய் இருந்த கம்பெனியின் கடன், இதனால், 1806-ல் முப்பத்தொரு மில்லியன்களாய் அதிகரித்தது. மேலும், வெல்லெஸ்லி, அகம்பாவத்துடனும் இறுமாப்புடனும் நடந்துகொண்டார். தாய் நாட்டு அதிகாரிகளுடன் அதிகாரத் தோரணையில் நடந்தார். அவர்களுடைய கட்டளைகளையும் உணர்த்தியவைகளையும் மதிக்காமலும், அவர் என்ன நடவடிக்கைகள் எடுத்தார் என்பதைப்பற்றிக் கூருமலும் இருந்தார். வெல்லெஸ்லியின் கொள்கை வெற்றிகரமாக நடந்தவரையில், தாய் நாட்டு அதிகாரிகள் தலையிடாமல் இருந்தார்கள். ஆனால், மான்சன் பின் வாங்கிய செய்தியும், பரத்பூரில் லேக்கு என்பவருக்கு ஏற்பட்ட தோல்வியின் செய்தியும் இங்கிலாந்தை எட்டிய உடனே, அவருடைய போர் விருப்பக் கொள்கை'யைப் பொது மக்கள் பலமாகக் கண்டித்தார்கள். பிட்டு என்பவர் பின் வருமாறு சொல்லியதாகத் தெரிகிறது: 'வெல்லெஸ்லி விவேகமில்லாமலும், சட்ட விரோதமாகவும் நடந்துகொண்டதால், ஆட்சியில் தொடர்ந்து இருப்பதற்கு அவர் அனுமதிக்கப்பட மாட்டார்.' வெல்லெஸ்லி பிரபு தம் பதவியை ராஜிநாமாச் செய்து, இங்கிலாந்திற்குப் பயணமானர்.

தமது அறுபத்தேழாம் வயதில், மறுமுறையும் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்ட காரன்வாலிஸ் பிரபு, 1805, ஜுலை, 30-ல் கல்கத்தாவை அடைந்தார். ஆக்கிரமிப்பை நிறுத்தி, சட்டசபை தனது 1784, 1793 சட்டங்களின் மூலம் கட்டளையிட்டபடி, பழைய நிலைக்குத் திரும்புவதற்குக் கேசல்ரீ, அவருக்குக் கட்டளையிட்டிருந்தார். ஆனால், பாதுகாப்புப்படை நட்புடன்படிக்கையை அடியோடு மாற்றுவதற்கு முன்பே, 1805, அக்டோபர், 5-ல் காஜியாபாதில் காரன்வாலிஸ் இறந்தார். அதனால், மன்றத்தின் மூத்த அங்கத்தினரான சர் ஜார்ஜ் பார்லோ (Sir George Barlow) என்பவர் தாற்காலிகக் கவர்னர்-ஜெனரலானர். முன்னவரின் கொள்கையை அவர் பின்பற்றினர். கடைசியாக, 1805, நவம்பர் 23-ல் சிந்தியாவுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி, குவாலியரும் கோகுடும் (Gohud) அவருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டன; சம்பால் நிதிக்கு வடக்கே இருப்பதைச் சிந்தியாவும், தெற்கே இருப்பதை ஆங்கிலேயரும் கேட்கக் கூடாதென முடிவு செய்யப்பட்டது. ராஜபுதன அரசர்களுடன், கம்பெனி, எவ்வித உடன்படிக்கையும் செய்யாது என, உறுதிமொழி அளிக்கப்பட்டது. இதற்கிடையில், லேக்குப் பிரபு என்பவர் ஹோல்காரை

அமிர்தசரசு வரையில் துரத்திச் சென்ருர். அவ்விடத்தில் ஹோல்கார் சீக்கியர்களைத் தமக்கு உதவி அளிக்க வேண்டினர். ஆனல், அவர்கள் உதவி செய்யவில்லை. அதனல் லேக்குப் பிரபுவுடன் சமாதானத்திற்கான பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி, 1806, ஜனவரி, 7-ல், உடன்பாட்டில் கையெழுத்திட்டார். 'டோங்க்' (Tonk), ராமபுரா, புந்தி (Bundhi), 'கூச்' (Kooch), பண்டல்கண்டு (Bundelkhand), சம்பால் நதிக்கு வடக்கே இருந்த இடங்கள் ஆகியவைகளின் மீது அவருக்கிருந்த உரிமைகளை ஹோல்கார் விட்டுக் கொடுத்தார். ஆனல், அவர் இழந்த இடங்களில் பெரும் பகுதிகளைத் திரும்பப் பெற்ருர். லேக்குப் பிரபு எதிர்த்தபோதும், சர் ஜார்ஜ் பார்லோ என்பவர் உறுதிமொழிகள் அடங்கிய அறிக்கையை வெளியிட்டார். அதன்படி, டோங்கும், ராமபுராவும் ஹோல்காருக்குக் கொடுக்கப்பட்டன. மற்ற ராஜபுதன நாடுகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் பாதுகாப்பு நிறுத்தப்பட்டது. இப்படி ராஜபுதனத்தில், மராட்டியர்கள் புகுந்து குழப்பம் செய்யக்கூடிய நிலையில் ராஜபுதன நாடுகள் விடப்பட்டன. ஜெய்பூர் அரசரின் தூதுவர் ஒருவர் கூறியபடி, 'அனுகூலம் பெறுவதற்காகத் தான் அளித்த வாக்குறுதியைக் கம்பெனி காற்றில் விட்டது.'

## (இ) மூன்ருவது ஆங்கில-மராட்டியப் போரும் மராட்டியர்களின் வீழ்ச்சியும்

பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியில், வல்லரசுக்குரிய இன்றியமையாத தகுதிகளை மராட்டியர் ஒவ்வொன்ருக இழக்க ஆரம்பித்தனர். அதனல் பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் ஆங்கிலேயர் கடைப்பிடித்த நடுவு நிலைமைக் கொள்கையால், அவர்கள் பயனடைய இயலாமல் போயிற்று. மராட்டிய நாடுகளின் அரசியலும் ஆட்சி நிலைமையும் குழப்பமாகவும், நம்பிக்கை இல்லாமலும், பொருளாதார நிலை திருப்தியற்ற முறையிலும் இருந்தன. ஜஸ்வந்த்ராவ் ஹோல்கார், தம் சகோதரரான காசிராவையும், மருமானுரான கண்டேராவையும் (Khande Rao) படுகொலை செய்துவிட்டார். இச்செயல்கள் அவரது மனத்தை மிகவும் வாட்டி வதைத்ததால், அவர் உன்மத்தராகி, 1811, அக்டோபர், 20-ல் இறந்தார். இறந்த அரசரின் சிறந்த மனைவியான துளசிபாய்தான் அதன் பிறகு உண்மையான அரசி. அவள் அறிவும் ஆற்றலும் மிகுந்தவள். அவளுக்கு ஜஸ்வந்த் ராவின் அமைச்சரான

பலராம் சேத்தின் உதவியும், மத்திய இந்தியாவில் இருந்த பட்டாணியர்களின் தலைவரான அமீர்கான் என்பவரின் உதவியும் இருந்தன. தகுதியற்ற இத்தலைவர்களால், நாட்டை நன்றாக ஆட்சி செய்ய முடியவில்லை.

தௌலத் ராவ் சிந்தியா சம்பந்தப்பட்ட வரையில், அவரது படைக்காக ஏற்படும் செலவை ஈடு செய்யும் வகையில்; அவரது பொருளாதார நிலைமை அமையாததால், அவர் தம் போர் வீரர்கள் மாவட்டங்களிலிருந்து தங்கள் சொந்தப் பொறுப்பில் பணத்தை வசூலிப்பதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். அதனால், படையின் மனவுறுதி தகர்ந்தது. தம் படைத் தலைவர்களை அடக்கி ஆள்வதற்குச் சிந்தியாவால் இயலவில்லை.

பிண்டாரியர்களும் பட்டாணியர்களும் தாக்கியதால், இரகுஜி பான்ஸ்லேயின் நாடு குழப்பத்தில் ஆழ்ந்தது. அதனால், மராட்டியத்தலைவர் மூவருள் ஒருவராவது, ஆங்கிலேயரை வெளிப்படையாக எதிர்க்கக்கூடிய நிலைமையில் இல்லை. 1805, ஏப்பிரல், 21-ல் செய்யபட்ட பாதுகாப்புப் படை நட்புடன்படிக்கையை மீறுவதற்குப் பரோடாவின் அரசரான கெய்க்வார் விரும்பவில்லை. மராட்டிய அரசர்களைக் குறித்துப் பிரின்செப் (Prinsep) என்பவர் பின் வருமாறு நினைத்தார்: 'ஒவ்வொருவர் சம்பந்தப்பட்ட வரையிலும், 1805–1806 உடன்படிக்கையின் குறிக்கோள்களைப் பெற்றனர் எனலாம். அவர்களுள் எவரும் தனியாகப் போரில் ஈடுபட முடியாதபடி ஆற்றலற்று இருந்தனர். அதே சமயம், அவர்களுக்குள் ஏற்படுத்தப்பட்ட சமநிலை மாறாமல் இருந்தது. இரண்டாம் முறையாகக் கூட்டுச் சேர்வதற்கு இயலாதபடி அவர்களுக்குள் இருந்த பொறாமை தடுத்தது.

இப்படி இருந்த போதிலும், மராட்டியர்கள் இறுதியாகத் தோல்வியடையும் முன்னரே, ஆங்கிலேயருக்கும் மராட்டியர்களுக்கும் இடையில் பலப் பரீட்சை நடந்தது. ஆங்கிலேயரால் பதவியில் அமர்த்தப்பட்ட பேஷ்வா உட்பட மராட்டியத் தலைவர் அனைவரும் நண்பர்களைப் போலத் தம்மை வெளிக்குக் காட்டிக்கொண்டாலும், தம் மனத்துக்குள்ளே ஆங்கிலேயருக்கெதிரான பகை உணர்ச்சியும் பொறாமையும் கொண்டிருந்தனர். தமது நாட்டில் இருந்த குழப்பமான நிலைமை காரணமாக, அவ்வுணர்ச்சிகளை அவர்கள் வெளியே காட்டா

விட்டாலும், சரியான சமயம் நேரும்போது, அவை பீரிட்டுக் கொண்டு வெளியேவரும். திரிம்பக்ஜி டாங்கிலியா (Trimbakji Danglia) என்ற பழிக்கஞ்சாத நண்பரின் தூண்டுதலால், இரண்டாம் பாஜிராவ் மறுபடியும் ஆங்கிலேயருக்கெதிராக ஒரு மராட்டியக் கூட்டரசை அமைக்கும் நோக்கத்துடன் சதி வேலைகளில் ஈடுபட்டார். பேஷ்வாவிற்கும் கெய்க்வாருக்கும் இடையில் ஏற்பட்ட ஒரு தகராற்றைத் தீர்ப்பதற்காக, ஆங்கிலேயரோடு நட்பாய் இருந்த கங்காதர் சாஸ்திரி (Gangadhar Shastri) என்னும் தம் அமைச்சரைப் பின்னவர் 1814-ல் பூனவிற்கு அனுப்பினர். சாஸ்திரி நாசிக்கு என்னுமிடத்திற்குப் பேஷ்வாவினுல் கொண்டு செல்லப்பட்டு, திரிம்பக்ஜி தூண்டுதலின் பேரில் கொலை செய்யப்பட்டார். பெருந் தயக்கத்திற்குப் பிறகு, இரண்டாம் பாஜிராவ் திரிம்பக் என்பவரை, 1811ஆம் ஆண்டு முதல் பூனவில் பிரிட்டிஷ் ரெசிடென்டாய் இருந்த மவுன்ட்ஸ்டுவர்ட்டு எல்பின்ஸ்டன் (Mountstuart Elphinstone) என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டு, தான (Thana) விலிருந்த ஒரு கோட்டையில் சிறை வைக்கப்பட்டார். ஓர் ஆண்டுக்குப் பிறகு அவர் தப்பியோடிவிட்டார். தப்பி ஓடுவதற்குப் பேஷ்வா உதவி செய்தார் என்பதற்குரிய சான்றுகள் இல்லாவிட்டாலும், அவரைப் பலர் சந்தேகித்தனர். 1817ஆம் ஆண்டில், நிலைமை மிக அபாயகரமாய் இருந்தது. மராட்டியத் தலைவர்களைக் கொண்டு ஒரு கூட்டரசை ஏற்படுத்துவதற்கு மிகவும் முயன்று, அவர்களுடனும், அமீர்கான் என்கிற பட்டாணியத் தலைவருடனும், பிண்டாரிகளுடனும், பேஷ்வா பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினர்; தம் படையின் வலிமையையும் திறமையையும் அதிகரிக்கச் செய்வதற்கும் முயன்ருர்.

ஆங்கிலேயரும், பேஷ்வாவின் சதித்திட்டங்களை முறியடிப்பதற்குத் தகுந்தவாறு நடவடிக்கைகளை எடுத்தனர். மோய்ராப் பிரபு, (Earl of Moira) மார்க்குவிஸ் ஆப் ஹேஸ்டிங்ஸ் (Marquess of Hastings) என்று பலருக்கும் தெரிந்தவர், இந்தியாவுக்கு வந்ததும், ஆங்கிலேயர்கள் பின்பற்றிய நடுவு நிலைமைக் கொள்கை கைவிடப்பட்டது. ‘வெளிப்படையாக இல்லாவிட்டாலும், பிரிட்டிஷ் ஆட்சியை உண்மையில்தலையானதாகச் செய்வதற்கும், மற்ற இந்திய நாடுகளைச் சட்டத்தின்படி இல்லாவிட்டாலும் நடைமுறையில் தமக்குட்பட்ட சிற்றரசுகளாக வைப்பதற்கும்’ புதிய கவர்னர் ஜெனரல் முடிவு செய்தார். பூன மன்றம் பல ஆண்டுகளாகப் பின்பற்றிவரும் கொள்கையினுல் ஏற்படும் தவறுகளைத் தடுப்பதற்

காகப் பேஷ்வாவின் அதிகாரத்தைக் கட்டுப்பாட்டில் வைக்குமாறு மவுன்ட் ஸ்டுவர்ட்டு எல்பின்ஸ்டனுக்கு 1817, மே, 10-ல், கவர்னர்-ஜெனரல் கட்டளை பிறப்பித்தார்; இரண்டாம் பாஜீ ராவ் என்பவரை வற்புறுத்திப் பூனு உடன்படிக்கையை 1817, ஜூன், 13-ல் ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். அதன்படி மராட்டியக் கூட்டரசுத் தலைமையைப் பேஷ்வா கைவிட்டார். கெய்க்வார்மீது இருந்த உரிமையை, நாலு லட்ச ரூபாய் பெற்றுக்கொண்டு கைவிட்டார்; மறுபடியும் அவரைப் பணம் கேட்பதில்லை என்றும் உறுதி கூறினர். கொங்கணத்தையும், மற்றும் சில முக்கிய இடங்களையும் ஆங்கிலேயருக்குக் கொடுத்த தௌலத்ராவ் சிந்தியாவும் 1817, நவம்பர், 5-ல் குவாலியரில் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டார். அதன்படி பிண்டாரிகளை ஒழிக்கும் திட்டத்தில் ஆங்கிலேயருக்கு உதவியளிப்பதாகக்கூறி, சம்பால் நதிக்கு அப்பால் உள்ள நாடுகளுடன் ஒப்பந்தம் செய்வதற்கு ஆங்கிலேயருக்கு அனுமதியையும் சிந்தியா கொடுத்தார். மராட்டியர்களின் தாக்குதலுக்குள்ளான ரஜபுத்திர நாடுகளுடன் பல உடன்படிக்கைகளைச் செய்துகொள்ள, இது ஆங்கிலேயருக்கு உதவியது. இதற்கிடையில், நாகப்பூர் அரசின் வாரிசு உரிமையைக் குறித்துத் தகராறு ஏற்பட்டதால், ஆங்கிலேயர்கள் அதில் தலையிட்டு, அதைத் தமது ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்தார்கள். இரண்டாம் இரகுஜி பான்ஸ்லே, 1816, மார்ச்சு, 22-ல் இறந்தார். அவருக்குப் பின், அவர் தம் அறிவிலியான மகன், பர்சோஜி (Parsoji) பதவிக்கு வந்தான். ஆற்றலும் பேரவாவும் கொண்ட அப்பாசாகிபு (Appa Sahib) என்ற உறவினர் ஒருவர் இருந்தார். அவர் ஆட்சிக்கு ஆசைப்பட்டு, அதற்கு முதற்படியாக, ரீஜன்டாய் இருக்க விரும்பினர். 1816, மே, 27-ல் அவர் பாதுகாப்புப் படை - நட்புறவு உடன்படிக்கையில் கையெழுத்திட்டவுடன், அவர் ரீஜன்டாக இருப்பதை ஆங்கிலேயர் ஒப்புக்கொண்டனர். பூனு, குவாலியர், நாகப்பூர் ஆகிய இடங்களில் செய்யப்பட்ட உடன்படிக்கைகள், மராட்டியர்களுக்கெதிராக ஆங்கிலேயரின் செல்வாக்கை அதிகரிக்கச் செய்தன. முதலாவது, பேஷ்வாவின் அதிகாரத்தையும் புகழையும் மிகவும் குறைப்பதற்கு உதவியது; இரண்டாவது, ஆங்கிலேயர்களின் அதிகாரத்தின் கீழ் வந்த ரஜபுத்திர நாடுகளின்மீது சிந்தியா உரிமை கொண்டாடியதை ஒழித்தது; மூன்றுவது, நாகப்பூர் நாட்டின் சுதந்திரத்தையே அழித்தது; ‘ஆங்கிலேய ஆட்சியால் பல ஆண்டுகளாக விரும்பப்பட்டதும்’ இரகுஜி பான்ஸ்லே என்பவரால் தந்திரமாக விலக்கப்பட்டதுமான பாதுகாப்புப்படை-

நட்பு உடன்படிக்கையை நாகப்பூர் ஒப்புக்கொள்ளும்படி செய்தது. ஆங்கிலேயரின் 'பாதுகாப்புச் சாதனங்கள்' மிகவும் உறுதி பெற்றன. மால்காம் (Malcolm), 'அப்பொழுது இந்தியா இருந்த நிலைமையில், நாகப்பூருடன் செய்துகொண்ட பாதுகாப்புப்படை-நட்பு உடன்படிக்கையைவிட, வேறு எந்த நிகழ்ச்சியும் அனுகூலமாக இருக்க முடியாது,' எனக் கூறுகிருர்.

மராட்டியத் தலைவர் எல்லோரும், தமது சுதந்தரம் பறிபோனதைக் கண்டு ஆத்திரமுற்றிருந்ததால், ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுபடமுயலும் பேஷ்வாவிடம் அனுதாபம் கொண்டிருந்தனர். சிந்தியா பாதுகாப்புப்படை ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டபோது, பூனுவிலிருந்த ஆங்கில ரெஸிடென்டின் இடத்தைப் பேஷ்வா தாக்கி, அதற்குத் தீ வைத்தார்; பிறகு 27,000 துருப்புகளுடன், கிர்க்கி என்னுமிடத்தில் கர்னல் புர் (Colonel Burr) என்பவரின் கீழிருந்த 2800 ஆங்கிலேயர்களைத் தாக்கினுர்; ஆனுல், தோற்கடிக்கப்பட்டார். நாகப்பூரின் அப்பா சாகிபுவும், ஜஸ்வந்த்ராவ் ஹோல்காரின் மகனுரான இரண்டாம் மல்கார் ராவ் ஹோல்காரும் ஆங்கிலேயருக்கெதிராகப் போரிட்டனர். நாகப்பூரின் துருப்புகள் 1817, நவம்பர், 17-ல் சீத்தாபல்தி (Sitabaldi) என்ற இடத்தில் ஹோல்காரின் துருப்புகள் மஹித்பூர் (Mahidpur) என்ற இடத்தில் 1817, டிசம்பர், 21-ல், ஹிஸ்லோப் (Hislop) என்பவராலும் தோற்கடிக்கப்பட்டன. அப்பா சாகிபு, பஞ்சாபிற்கும் அதன் பிறகு ஜோத்பூருக்கும் ஓடி, கி.பி. 1840-ல் இறந்தார். நருமதைக்கு வடக்கே இருந்த மாவட்டங்கள், ஆங்கில நாட்டுடன் இணைக்கப்பட்டு, ரகுஜி பான்ஸ்லேயின் பேரனுன சிறுவன் அந்நாட்டில் எஞ்சியிருந்த ஒரு சிறிய பகுதிக்கு அரசனுக்கப்பட்டான். மண்டசோர் (Mandasor) உடன்படிக்கையைச் செய்துகொள்ளும்படி, ஹோல்கார் 1818 ஜனவரியில் வற்புறுத்தப்பட்டார். அதன்படி, ராஜபுத்திரர்களின் மீது இருந்த எல்லா உரிமையையும் அவர் கைவிட்டார்; நருமதைக்குத் தெற்கே இருந்த எல்லா இடங்களையும் ஆங்கிலேயருக்குக் கொடுத்துவிட்டார்; தம் நாட்டில் ஒரு பாதுகாப்புப் படையை வைத்துக்கொள்ளவும் உடன்பட்டார்; அயல் நாட்டு உறவை ஆங்கிலேயர்களிடம் விட்டுவிட்டார். அமீர்கான் என்கிற கூலிப்பட்டாளத்தின் தலைவனை, டோங்க் (Donk) என்னும் பகுதிக்கு நவாபுவாக்கவும் சம்மதித்தார். இதற்குப் பிறகு, நிலையான பிரிட்டிஷ் ரெசிடென்ட் ஒருவர் இந்தூரில் இருக்கலானுர்.

கிர்க்கியில் தோல்வியுற்ற பிறகு, இரண்டு போர்களை, 1818, ஜனவரி, 1-ல் கொர்கான் (Koregaon) என்னுமிடத்திலும், 1818, பிப்பிரவரி, 20-ல் ஆஷ்டி (Ashti) என்னுமிடத்திலும், பேஷ்வா நடத்தினர். இரண்டிலும் அவர் தோல்வியடைந்தார். இரண்டாம் போரில், ஆற்றல் மிக்க அவர்தம் தளபதி கோகலே (Gokhale) கொல்லப்பட்டார். கடைசியாக, 1818, ஜூன், 3-ல், இரண்டாம் பாஜிராவ் சர் ஜான் மால்காம் (Sir John Malcolm) என்பவரிடம் சரணடைந்தார். மிகப் பெரிய நெருக்கடியான காலத்திலுங்கூட பேஷ்வாப் பதவி மராட்டியர்களின் தேசிய ஒற்றுமையின் சின்னமாய் விளங்கியது. இப்பொழுது அது ஒழிக்கப்பட்டது. கான்பூருக்கு அருகிலுள்ள பித்தூர் (Bithur) என்னும் இடத்தில், ஆண்டுக்கு எட்டு லட்ச ரூபாய் ஒய்வு ஊதியம் பெற்றுத் தம் வாழ்நாளைக் கழிக்க, இரண்டாம் பாஜிராவ் அனுமதிக்கப்பட்டார். அவரது நாடு, பிரிட்டிஷ் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டது. பிரிட்டிஷ் செல்வாக்கும் அதிகாரமும் இந்நாட்டில் 'செப்படி வித்தையின் விரைவுடன்' பரவியது. திரிம்பக்ஜி என்பவர், இறக்கும் வரையிலும் சுனர்க்கோட்டையில் வைக்கப்பட்டார். பேஷ்வாவின் நாட்டிலிருந்து பிரிக்கப்பட்ட சிறிய நாடான சதாரா, சிவாஜியின் வழி வந்தவரும், முன்பிருந்த மராட்டியப் பேரரசின் தலைவருமான பிரதாப சிம்மன் (Pratap Simmah) என்பவருக்குக் கொடுக்கப்பட்டது. தார்ன்டன் (Thornton) பயந்தபடி, சதாரா நாடு, பகையான மராட்டியக் கூட்டரசுக்கு நடுநாயகமாய் விளங்கவில்லை. ராபர்ட்ஸ் (Raberts) குறிப்பிட்டபடி, உண்மையில் புதிய வமிசத்தின் ஆட்சி, தவறுனதாயும் தகுதியற்றதாயும் இருந்தது. டல்ஹௌசியினால் (Dalhousie) பல நாடுகளில் புகுத்தப்பட்ட 'நாடு இழக்கும் கொள்கை' (Doctrine of Lapse) சதாராவிலும் பிறகு புகுத்தப்பட்டது.

## (ஈ) மராட்டியரின் வீழ்ச்சிக்குரிய காரணங்கள்

இவ்விதம் முகலாயப் பேரரசின் அழிவின்மீது இந்தியாவில் அரசியல் தலைமை நிலையைப் பெறுவதற்கு மராட்டியர் செய்த கடைசி முயற்சியும் தோல்வியுற்றது. சிவாஜியின் அறிவு, இராணுவத் திறமை ஆகியவைகளால் உண்டாக்கப்பட்டதும், சிறிது காலச் சரிவுக்குப்பின் முதலாம் பாஜி ராவ் என்பவரால் மறுபடியும் வலுப்படுத்தப்பட்டு நாற்பது ஆண்டு காலம் ஆங்கிலேயருடன் தலைமை நிலையைப் பெறும் பொருட்டுப் போட்டியிட்டதுமான மராட்டியப் பேரரசு

என்கிற கட்டடம், மிகவும் அவமானகரமான முறையில் இடிந்துவிட்டது. மராட்டிய நாட்டில், குறிப்பாகப் பதினெட்டாம் நூற்றுண்டில் இருந்த சில இயற்கையான குறைபாடுகளே இதற்கு முக்கிய காரணமென்றுலும், இதன் அழிவை அதிகரிப்பதற்கு வேறு பல காரணங்களும் இருந்தன. மராட்டிய நாட்டில், சர். ஜே. என். சர்க்கார் (Sir J. N. Sarkar) கூறியபடி, 'சிறப்பும் ஒழுங்கும் வாய்ந்த சமுதாய வளர்ச்சி, கல்வியைப் பரப்புதல் அல்லது மக்களை ஒன்றுபடுத்துதல் ஆகியவைகளுக்கான எவ்வித முயற்சியும் சிவாஜி காலத்திலாவது, அல்லது பேஷ்வாக்களின் காலத்திலாவது செய்யப்படவில்லை. மராட்டிய மக்கள் ஒன்றுபட்டு இருந்ததற்கு இயற்கை காரணமன்று. அவ்வொற்றுமை செயற்கை முறையில், எதிர்பாராதவகையில் இருந்ததால், உறுதியில்லாமல் இருந்தது.' சிறந்த பொருளாதாரக் கொள்கையும் திருப்திகரமான நிதி ஏற்பாடுகளும் இல்லாதது மற்றொரு குறைபாடு. இவை இல்லாமல் ஒரு நாடு அரசியலில் வளர்ச்சியடைய இயலாது. வளமற்ற (பலன் தாராத) மராட்டிய நிலம், செழிப்பான வேளாண்மை, வாணிகம் அல்லது தொழில்கள் ஏற்படுவதற்கான சிறந்த நம்பிக்கையை உண்டாக்கவில்லை. மராட்டிய நாடு 'சௌத்து'ப் போன்ற நிச்சயமற்றதும் உறுதியற்றதுமான வருமானங்களை நம்பி யிருந்தது. 'சௌத்து' என்கிற வரி மற்ற இந்திய அரசுகளுடன் உண்மையான உறவு கொள்ள முடியாதபடி செய்துவிட்டது. சிவாஜி இறந்ததற்குப் பின், மறுபடியும் ஏற்படுத்தப்பட்ட ஜாகீர்த் திட்டமானது, நாட்டில் பிளவுச் சக்திகளை அதிகமாக்கியது; மராட்டிய ஜாகீர்தார்கள் தங்களுடைய நலன்களை மட்டும் கவனித்து, சதிகள் புரிவதிலும் சச்சரவுகள் செய்வதிலும் தங்கள் நாட்டை ஈடுபடுத்தி, தேசீய நலன்களையே பாழ்படுத்திவிட்டார்கள். சிவாஜி, முதலாம் பாஜி ராவ், மல்ஹர் ராவ் ஹோல்கார், மஹதாஜி சிந்தியா, நானு பட்னுவிஸ் ஆகியவர்களைத் தவிர்த்து, மற்ற மராட்டியத் தலைவர்கள்—குறிப்பாகப் பிற்காலத்தில் இருந்தவர்கள்-சிறந்த ராஜதந்திரிக்குரிய செயல்களைச் செய்யாமல், தந்திரங்கள் செய்வதிலும், சதிகளைச் செய்வதிலும் தங்கள் காலத்தைச் செலவிட்டார்கள். குறிப்பாக, பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும், ஆங்கிலேயரின் சிறந்த ராஜ தந்திரத்தை அவர்கள் எதிர்த்து நின்றபோது, அவர்கள் செய்கை நாட்டின் எதிர்காலத்தையே பாழ்படுத்தியது. கடைசியாக, பதினெட்டாம் நூற்றுண்டிலிருந்த மராட்டியர்கள், தங்களுடைய பழமை

யான போர் முறையைக் கைவிட்டார்கள். மஹதாஜி சிந்தியா அல்லது நாநு பட்னவிஸ் காலத்திலும், மேல் நாட்டினரைப் போன்று விஞ்ஞான ரீதியில் தங்கள் இராணுவத்தை அவர்கள் அமைத்துக்கொள்ளவில்லை. அவர்களுக்கெதிராக, ஆங்கிலேயர்கள், பல ஐரோப்பியப் போர்களின் அனுபவத்தோடு, இக்கால முறையிலும் அமைக்கப்பட்ட சிறந்த இராணுவநிறுவனத்தைப் பெற்றிருந்தனர். 'தற்காப்பு எனும் மிக முக்கிய நிலைமைக்கும்' மராட்டியர்கள் மேல் நாட்டுத் துணிச்சலான வீரர்களை நம்பியிருந்தது பரிதாபத்திற்குரியது தான். இதனால் இறுதியில், தங்கள் சுதந்தரத்தையே இழக்கும்படி நேரிட்டது.

## 2. ஆங்கிலேய—மைசூர் உறவுகள்

### (அ) நான்காம் ஆங்கில - மைசூர்ப் போர்

காரன்வாலிஸ் பிரபுவின் காலத்தில் திப்புவுடன் ஏற்பட்ட போரின் விளைவுகளைப்பற்றி, அவர் நம்பிக்கை மிகுந்த உற்சாகத்துடன் பின்வருமாறு மதிப்பிட்டார்: 'எங்கள் பகைவர்களை உறுதியாக நாங்கள் முடவர்களாக்கினாலும், அதே சமயம், எங்கள் நண்பர்களைப் பலமுள்ளவர்களாகச் செய்யவில்லை.'

நிலையான சமாதானம் ஏற்படும் என்ற நம்பிக்கை பொய்ப்பிக்கப்பட்டுவிட்டது. திப்புவைப் போன்ற மனிதன், ஆங்கிலேயரிடம் பட்ட அவமானத்தை நெடுநாள்வரை சகித்துக்கொண்டிருக்க இயலாது. அதனால், ஆங்கிலேயருக்கு எதிராக அவர் மிகுந்த மனக்கசப்புடன் இருந்தார். மால்காம் பின் வருமாறு எழுதுகிறார்:

'தமக்கு ஏற்பட்ட துன்பத்தைக் கண்டு மனம் தளராமல், போரில் அழிக்கப்பட்டவைகளைப் பழுது பார்ப்பதில் தம் சத்தியையெல்லாம் அவர் செலவிட்டார். தலை நகரின் கோட்டைகளை அதிகப்படுத்துவதற்கும், குதிரைப் படைகளை மீண்டும் பலப்படுத்துவதற்கும், புதிய காலாட்படைகளைச் சேகரித்துப் பயிற்சி அளிப்பதற்கும், அடங்காத சிற்றரசர்களுக்குத் தண்டனை விதிப்பதற்கும், நாட்டின் வேளாண்மையை அதிகப்படுத்துவதற்கும் அவர் முயற்சி செய்தார். இதனால், நாடு சீக்கிரத்தில் பழைய செழிப்பான நிலையை அடைந்தது.'

பிரான்ஸ், ஐரோப்பாவில் இங்கிலாந்துடன் கடுமையான போரில் ஈடுபட்டிருந்தது. நுண்ணிய அறிவுள்ள ராஜதந்திரியான திப்பு, இந்தியாவிலிருந்த ஆங்கிலேயருக்கெதிராக, பிரான்சின் நட்பைப்பெற முயற்சி செய்தார். ஜாகோபின் சங்கம் என்ற கட்சியில் அவர் உறுப்பினராய் சேர்ந்தார். தம் படையிலிருந்த ஒன்பது பிரெஞ்சுக்காரர்கள், பிரெஞ்சு கடற்



திப்புச் சுல்தான் இறந்த
சீரங்கப்பட்டினச் சல்லிக்கோட்டை வாயில் [E.N.A.]

படையில் அதிகாரியாய் இருந்த 'ரிபாட்' (Repaud) என்ற நகரவாசியைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பதற்கும், அண்மையில் அமைக்கப்பட்ட பிரெஞ்சு குடியரசின் கொடியைப் பறக்கவிடுவதற்கும். ஸ்ரீரங்கப்பட்டிணத்தில் சுதந்தர மரத்தை நடுவதற்கும் திப்பு அனுமதித்தார்; எதிர்பார்க்கும் போரில், தமக்கு நண்பர்களைப் பெறுவதற்காக, அரேபியா, மொரிஷியஸ் (Mauritius) ஆகிய இடங்களுக்குத் தூதுவர்களை அனுப்பினர். பிரான்ஸ் தீவின் கவர்னரான மோன்சியே மலர்டிக் (Monsieur Malartic) திப்புவின் தூதர்களையும் ஏற்பாட்டையும் நன்கு வரவேற்றார்; அதன்பின், இந்தியாவில் ஆங்கிலேயர்களை வெளியேற்றும் பொருட்டுத் திப்புவுக்கு உதவியளிக்க முன்வரும்படி தொண்டர்களை அழைக்கும் அதிகார அறிவிப்பை வெளியிட்டார். இதன் பயனாக, பிரெஞ்சுக்காரர் சிலர், 1798, ஏப்பிரலில் மங்களூரில் வந்து இறங்கினர்கள்.

1798, ஏப்பிரல், 26ஆம் தேதி, வெல்லெஸ்லி சென்னையில் வந்து இறங்கியவுடன், திப்புவின் பகைமையை உணர்ந்தார்; சென்னை மன்றம் கூறிய துணிச்சலற்ற முறைகளை ஒதுக்கித் தள்ளி, திப்புவின் மீது போர் தொடுப்பதற்கு முடிவு செய்தார். 1798, ஆகஸ்டு, 12-ல் அவர் எழுதிய குறிப்பில் பின் வருமாறு தெரிவிக்கிறார்: 'திப்புவால் அங்கீகரிக்கப்பட்ட அவர் தூது வர்களின் செய்கைகளும், அவற்றைத் தொடர்ந்து அவர் நாட்டில் ஒரு பிரெஞ்சுப்படை வந்திறங்கியதும், வெளிப்படை யாகவும் தகுதியற்ற முறையிலும் தெளிவாகவும் போருக் கான ஓர் அறிவிப்புதான். நாட்டை விரிவாக்குதல், சீர்படுத்து தல் அல்லது பாதுகாத்தல் ஆகிய குறிக்கோளுக்காக அல்லாமல், இந்தியாவில் இருக்கும் ஆங்கில அரசை அழிக்கும் எண்ணத்துடனே தான் இப்போர் செய்யப்படுகிறது என் பதைத் திப்பு ஒப்புக்கொள்ளுதல், நிலைமையை மேலும் மோச மாக்குகிறது. இப்படிப்பட்ட அவமானத்தையும் தீங்கையும் புரிந்துகொள்ளாமல் இருப்பது, ஆற்றலற்ற அல்லது அச்ச மான மனப்பான்மையையே காட்டுகிறது.' போருக்காக வேண்டிய மற்ற ஏற்பாடுகளைச் செய்ததுடன் 1790-ல் ஏற்பட்ட முக்கூட்டு நட்புறவையும் புதுப்பிக்க முயன்றார். உடனே நைஜாம் 1798, செப்டெம்பர், 1-ல், பாதுகாப்புப் படை-நட் புறவை ஆங்கிலேயருடன் செய்துகொண்டார். ஆனல், மராட்டியர்களோ, கவர்னர்-ஜெனரல் தொடங்கிய உடன் பாட்டுப் பேச்சிற்கு உறுதியான பதிலைத் தெரிவிக்கவில்லை. ஆயினும், முக்கூட்டு நட்புறவின் எல்லாச் செயல்களிலும் ஆங்கில ஆட்சிக்குச் சுயநலமில்லை என்பதை வெளிக்காட்டு வதற்குப் போரில் கைப்பற்றப்பட்ட இடங்களில் ஒரு பகுதியைப் பேஷ்வாவிற்குத் தருவதற்கு வெல்லெஸ்லி முன் வந்தார்.

திப்புவிற்கெதிரான போர் சிறிது காலமே நடந்தாலும், முடிவானதாகவே இருந்தது. அவர், 1799, மார்ச்சு, 5-ல் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்கு மேற்கே நாற்பத்தைந்து மைலில் இருந்த செதாசீர் (Sedaseer) என்ற இடத்தில் ஸ்டூவர்ட்டு என்பவராலும், அந்நகரின் கிழக்கே முப்பத்தைந்து மைலில் இருந்த மால்வெல்லி (Malvelly) என்னுமிடத்தில் மார்ச்சு 27-ல் ஜெனரல் ஹேரிஸ் என்பவராலும் தோற்கடிக்கப்பட்டார். பிறகு திப்பு, ஸ்ரீரங்கப்பட்டணத்திற்குப் பின் வாங்கினார். அந் நகரம், மே, 4-ல் ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டது. தலை நகரைப் பாதுகாக்கும் போரில் மைசூர்ச் சுல்தான் கொல்லப் பட்டார். அந்நகரம் ஆங்கிலப் படையால் சூறையாடப்

பட்டது. இப்படி ஆங்கிலேயர்கள் நெடுநாளாக அச்சங் கொண்ட இந்தியப்பகை அரசு வீழ்ந்தது. மைசூர், ஆங்கிலே யரின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தது. திப்புவின் குடும்பத்தினர் வேலூரில் சிறையிடப்பட்டனர்.

1806-ல் வேலூரில் சிப்பாய்களால் உண்டாக்கப்பட்டுத் தோல்வியுற்ற கலகத்தில், அக்குடும்பத்தினர் சம்பந்தப்பட்ட தாக ஆங்கிலேயர்கள் நினைத்து, அவர்களைக் கல்கத்தாவிற்கு அனுப்பினார்கள். ராஜதந்திர முறையைக் கையாண்டு, மைசூ ரின் வடமேற்கே இருந்த சூந்தா (Soonda) ஹர்போநெல்லி (Harponelly) என்னும் மாவட்டங்களை வெல்லெஸ்லி மாராட்டி யர்களுக்கு அளித்தார். ஆனால், அதை அவர்கள் ஏற்கவில்லை. நைஜாமிற்கு அவரது நாட்டின் வடகிழக்குப் பகுதியில் இருந்த இடங்கள் கொடுக்கப்பட்டன. அதாவது, குத்தி, குர்ரம் கொண்டா, சித்தலதுர்க்கம் மாவட்டத்தில் (அதன் கோட்டை யில்லாமல்) ஒரு பகுதி ஆகியவைகளை அவர் பெற்றார். மேற்கில் கன்னடம், தென்கிழக்கில் வயநாடு தாராபுரம் கோயம்புத்தூர் மாவட்டங்கள், கிழக்கில் இரண்டு பெருநிலப் பகுதிகள், ஸ்ரீரங்கப்பட்டண நகரமும் தீவும் ஆகிய இடங்களை ஆங்கிலேயர் எடுத்துக் கொண்டனர். அந்நாட்டில் எஞ்சி யிருந்த ஒரு பகுதிக்கு மைசூரை அரசாண்ட பழைய இந்து வமிசத்தைச் சேர்ந்த சிறுவன் அரசனாக்கப்பட்டான். இப் புதிய மைசூர் அரசு ஆங்கிலேயருக்குக் கட்டுப்பட்டே இருந் தது. ஒரு பாதுகாப்புப்படை - நட்புறவை அவ்விளைஞன் ஏற்றுக்கொண்டான். அதனால், அந்நாட்டின் பாதுகாப்புக்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு படையை அவ்வரசர் பாதுகாக்க வேண்டியிருந்தது. அவர் பண உதவியைச் செய்ய வேண்டும். போர் ஏற்படும்போது அதை அதிகரிக்கவும் ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு. மேலும், அவ்வரசு திருப்தியற்ற முறை யில் நடந்தால், முழு ஆட்சியையும் கவர்னர்-ஜெனரல் ஏற்றுக் கொள்வதற்கும் அவ்வுடன்படிக்கை வழி செய்தது. 'ராஜா நாட்டின் வளம் முழுவதையும் பயன்படுத்த இந்த ஏற்பாடு உதவிசெய்யும்,' என வெல்லெஸ்லி நம்பினார். தார்ன்டன் என்ப வர், 'கவர்னர்-ஜெனரல் மைசூரை ஆங்கிலேயரின் உடைமை யாக மாற்றாமல் இருந்தது, அவரது கூரிய அறிவையே காட்டு கிறது. நடைமுறையிலும் அவ்விதம் இருக்கும்படி செய்தது. மேலும் அவர் அறிவாற்றலைக் காட்டுகிறது,' எனக் கூறுகிறார். ஆட்சி தவறாக நடத்தப்பட்டதால், வில்லியம் பென்டிங்கு பிரபு (Lord William Bentinck) என்பவர், அவ்வரசைக் கம்பெனியின் அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவந்தார். 1881 வரையில் அவ்

வேற்பாடு நீடித்தது. அதன் பிறகு ரிப்பன் பிரபு (Ripon) என்பவர், அவ்வரச குடும்பத்தை மீண்டும் ஆட்சிப் பீடத்தில் ஏற்றினர்.




*From Roberts' "India under Wellesley" (G. Bell & Sons, Ltd.)*

மைசூரைப் பங்கிடுதல்

வெல்லெஸ்லி பிரபுவினல் செய்யப்பட்ட இம்மைசூர் ஒப்பந்தம், நிலப்பகுதி, பொருளாதாரம், வாணிகம், இராணுவம் ஆகிய அனுகூலங்களைக் கம்பெனிக்குக் கொடுத்தது. திப

கற்பத்தின் தென்பாகத்தில், கடலிலிருந்து மற்ெருரு கடல் வரை ஆங்கில நாட்டை விரிவுபடுத்தி, மைசூரை, வடபகுதியைத் தவிர மற்ற எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டது. 1800-ல் மைசூரிலிருந்து வென்ற பகுதிகளை நைஜாம் ஆங்கிலேயருக்குக் கொடுத்தபோது மைசூர் முழுவதும் ஆங்கில நாட்டால் சூழப்பட்டது. கவர்னர்-ஜெனரலின் இந்த அருஞ்செயல், இங்கிலாந்தில் இருந்த எல்லோராலும் ஆர்வத்துடன் புகழப்பட்டது. அயர்லாந்தின் பிரபுவாக 'மார்க்குவிஸ்' என்னும் பட்டத்துடன் அவர் உயர்த்தப்பட்டார். ஜெனரல் ஹாரிஸ் என்பவருக்கும் 'பெருமகனுர்' (baron) என்ற பட்டம் வழங்கப்பட்டது.

## (ஆ) திப்புவின் மதிப்பீடு

இந்திய வரலாற்றில் திப்புக் குறிப்பிடத்தக்க மனிதர். அக்கால அரசர்களிடமிருந்த தீய வழக்கங்கள் அவரிடம் இல்லை. அவர் கடவுளிடத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்; நன்ருகப் படித்தவர்; பாரசீகம், கன்னடம், உருது ஆகிய மொழிகளில் நன்கு பேசக்கூடியவர். அவர் மிகச்சிறந்த ஒரு நூலகத்தை வைத்திருந்தார். போர் வீரனுக்குரிய ஆற்றலும், தளபதிக்குரிய திறமையும்கொண்டு, திப்பு ஒரு பெரிய ராஜதந்திரியராய் விளங்கினுர். தமக்கு உண்மையான பகைவர்கள் ஆங்கிலேயர்களே என்பதும் இந்திய அரசுகள் அல்ல என்பதும் அவர் நன்ருக அறிந்ததும், அவருடைய அரசியல் அறிவும், குறிப்பாக ஐரோப்பாவில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இருந்த உறவுகளை அவர் அறிந்ததும், பிரான்சுக்கும் மற்ற இடங்களுக்கும் அவர் அனுப்பிய தூதும், காபூலின் அரசரான ஜாமன் ஷா (Zaman Shah) என்பவருடன் அவர் நடத்திய கடிதப்போக்குவரத்தும், அவர் ஒரு பெரிய ராஜதந்திரி என்பதை நிரூபிக்கின்றன. எல்லாவற்றிலும் மிகச் சிறந்தது சுதந்தரமே என எண்ணி, அதைப் பாதுகாப்பதற்காகவே தம் உயிரையும் அவர் அர்ப்பணித்தார். அக்காலத்து மற்ற இந்திய அரசர்களைப் போல அல்லாமல், அவர் ஆற்றலும் உற்சாகமும் கொண்ட அரசர். அவர் காலத்திலிருந்த எட்வர்டு மூர் (Edward Moore), மேஜர் டிரோம் (Major Dirom) போன்ற ஆங்கிலேயர்கள், அவர் ஆட்சியைப்பற்றிச் சிறப்பித்துக் கூறியுள்ளார்கள்; அவரை மக்கள் மிகவும் விரும்பினுர்கள் என்றும் கூறியுள்ளார்கள். சர் ஜான் ஷோர் என்பவரும்,

'அவர் நாட்டில் உழவர்கள் பாதுகாக்கப்பட்டு, அவர்களுடைய உழைப்பு உற்சாகப்படுத்தப்பட்டு, வெகுமதியும் அளிக்கப்பட்டது,' எனக் கூறுகின்றார். பழைய நூலாசிரியர்களும்[1] இக்கால நூலாசிரியர்களும்[2] திப்புவை, 'இரக்கமற்ற இரத்தவெறி கொண்ட கொடுங்கோலன்' என்றும், 'கொடுமை புரியும் எதேச்சாதிகாரி' என்றும், 'மூர்க்கத்தனமான மத வெறியன்' என்றும் தவருக எழுதினர்கள். திட்டமிட்டுக் கொடுமைகள் புரிந்தவராக அவரை நினைக்க முடியாது. மேஜர் டிரோம் குறிப்பிட்டவாறு, 'தம் பகைவர்கள் என்று அவர் நினைத்தவர்களையே, பொதுவாக அவர் கொடுமைப்படுத்தினர்.' முரட்டுத்தனமான மூட பக்தியைக் கொண்டவரென்றும் அவரைக் கூற முடியாது. திப்புவின் சிருங்கேரிக் கடிதங்களைப் (Shringheri Letters) படிக்கும்போது, 'இந்துக்களின் நம்பிக்கையை எப்படித் தகர்ப்பதென்பதைப்பற்றி' அவர் அறிந்திருந்தார் என்பதும், அவருடைய சமய சகிப்புத்தன்மையற்ற குணம் அவர் வீழ்ச்சிக்குக் காரணமன்று என்பதும் நன்கு தெரிகின்றன. அவர் வைதிக முஸ்லிமாய் இருந்தபோதிலும், வில்க்ஸ் என்பவர் தவருக எழுதியபடி ஏராளமான இந்து மக்களை அவர் சமயத்திற்கு மாற்றுவதற்கு முயற்சி செய்யவில்லை. ஆனல், கீழ்ப்படியாமல் இருக்கும் இந்துக்களின் விசுவாசத்தை நம்பாமல், அவர்களையே கட்டாயமாக அவர் மதத்திற்கு மாற்றினர். ஒன்றில் மட்டும் அவர் தம் தகப்பனரிடமிருந்து மாறுபட்டிருந்தார். அரசியல் சம்பந்தப்பட்ட வகையில், பின்னவரைவிட அவர் குறைவான ஆற்றலும் அனுபவமும் பெற்றிருந்தார்; அடிக்கடி சீர்திருத்தம் என்ற பெயரால், உபயோகமற்ற புதியவைகளைப் புகுத்தினர். தாமஸ் மன்ரோ எழுதியபடி, 'புதுமையைப் புகுத்த நினைக்கும் அமைதியற்ற மனப்பான்மையும், தம்மிடமிருந்தே எல்லாம் வெளிவர வேண்டும் என்ற நினைப்புமே அவருடைய குணத்தின் சிறப்பான அமிசம்'.

## (இ) பிரெஞ்சுக்காரர்களின் அபாயம் நீங்குதல்

பிரெஞ்சுக்காரர்களின் சதிகளைக்கண்டு கவலையுற்ற ஆங்கிலேயர்களுக்குத் திப்புவின் வீழ்ச்சி, மிக ஆறுதலாய் இருந்தது.

1. கிர்க்பாட்ரிக்கு (Kirkpatrick), வில்க்ஸ் (Wilks), ரென்னல் (Rennel) போன்றவர்கள்.

2. பௌரிங் (Bowring), ராபர்ட்ஸ் (Roberts), டீன் ஹட்டன் (Dean Hutton).

கவர்னர் ஜெனரலின் சகோதரரான வெல்லிங்டன் பிரபு கூறியவாறு, 'திப்பு இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களுக்கு உறுதியான நண்பராய் இருந்தார்.' உண்மையில், இந்தியாவில் பிரெஞ்சுக்காரர்கள் கொண்டிருந்த பேராவலை வந்தவாசிப் போர் அழிக்கவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டு கடைசிவரையிலும் பிரெஞ்சுக்காரர்களின் அச்சம் இருந்தது. நைஜாம், மைசூர்ச் சுல்தான், மராட்டியர்கள் ஆகிய இந்திய அரசுகளின் மன்றத்தில் தங்கள் செல்வாக்கைப் பரப்பி, தங்களுடைய எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ள, பிரெஞ்சுக்காரர்கள் முயற்சி செய்தார்கள். அவர்கள், மேற்குறிப்பிட்ட அரசர்களின் படையில் சேர்ந்து ஆங்கிலேயருக்கெதிராக, அவர்களைக் கிளப்பிவிட்டார்கள். அதனாலே தான் 1777-ல் செயின்ட் லூபின் (St. Lubin) என்பவர் நானா பட்னவிஸ் என்பவருடன் ஓர் உடன்படிக்கை செய்து, ஆங்கிலேயருக்கெதிராக மராட்டியர்களைத் தூண்டிவிட நினைத்தார். 'இந்தியாவில் இழந்த அதிகாரத்தை மறுபடியும் பெறவும், பகைவர்கள் அதை அடையாதபடி செய்யவும் ஹைதர் அலியின் நட்பு அவசியமானது எனப் பிரெஞ்சுக்காரர் நினைத்தனர். கர்டாப் போரில், ஆங்கிலேயர் கடைப்பிடித்த நடுவு நிலைமையைக் கண்டு வெறுப்புற்ற நைஜாம், பிரெஞ்சுக்காரர்களின் உதவியுடன் 14,000 வீரர்கள் கொண்ட படையை, பிரான்சுவா ரெமா (Francois Raymond) என்கிற பிரெஞ்சுத் தளபதியின்கீழ் அமைத்தார். அத்தளபதி, ஹைதராபாதில் ஆங்கிலேயருக்கெதிராக, பிரெஞ்சுக்காரர்களையும் திப்புவையும் ஆதரிக்கக்கூடிய ஒரு கட்சியை அமைத்தார். தௌலத்ராவ் சிந்தியாவும், தம் படையில், பெரான் (Perron) என்ற பிரெஞ்சுத் தளபதியால் பயிற்சியளிக்கப்பட்ட 40,000 துருப்புகளை வடபகுதியில் வைத்திருந்தார். அத்தளபதி, யமுனை நதிக்கரையில் பிரெஞ்சு தேசத்தை ஏற்படுத்தினார் என்று வெல்லெஸ்லி சொல்லும் அளவுக்கு, அத்தளபதி சிந்தியாவிடம் மிக்க செல்வாக்குடன் இருந்தார். பிரெஞ்சு-மைசூர் உறவுகளைப்பற்றி நாம் முன்பே குறிப்பிட்டிருந்தோம். அவை நிச்சயமாக, ஆங்கிலேயரின் நலன்களுக்குப் பகையாய் இருந்தன.

அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் நடந்த போர்களின் விளைவாக ஏற்பட்ட நல்ல சமயத்தை உபயோகித்து இந்தியாவில் தாங்கள் இழந்ததைத் திரும்பப் பெறுவதற்குப் பிரெஞ்சுக்காரர்கள் முயன்றார்கள். அமெரிக்கச் சுதந்தரப் போர் ஏற்பட்டவுடன், கிளர்ச்சி செய்த குடியேற்ற நாடுகளை ஆதரித்து, 1782-ல் புஸ்ஸி என்பவரின் கீழ் மூவாயிரம் வீரர்

களையும், அட்மிரல் சப்ரன் (Suffren) என்பவரின்கீழ் ஒரு கப்பற் படையையும், ஹைதர் அலிக்கு உதவியாக அவர்கள் அனுப்பினார்கள். ஆனால் புஸ்ஸி என்பவரின் படை பிரெஞ்சுக் காரர்களுக்கு அதிக உதவி செய்ய இயலவில்லை. மறுபடியும் இங்கிலாந்து புரட்சிகரமான பிரான்சிடம் ஒரு கடும்போரில் ஈடுபட்டிருந்தபோது, ஹைதரின் மைந்தர் பிரெஞ்சுக்காரரின் நட்பைப் பெற விரும்பினார். பிரெஞ்சுப் புரட்சிப் போர்கள் ஆரம்பித்த உடனே, இந்தியாவிலிருந்த பிரெஞ்சுப் பிரதேசங் கள் கைப்பற்றப்பட்டபோதிலும், நெப்போலியனின் எகிப் தியப் போர் நடவடிக்கையையும், எகிப்தில் பிரெஞ்சு செல் வாக்கை ஏற்படுத்துவதற்கும், அதன் பிறகு இந்தியாவிலிருந்த ஆங்கில ஆதிக்கத்தை ஒழிப்பதற்கும் தீட்டப்பட்ட திட்டங் களும் இந்தியாவிலிருந்த ஆங்கில அதிகாரிகளுக்கு மிக்க கவலையை விளைவித்தன.

ஊடுருவிப் பார்க்கும் கூர்மையான அறிவையும் தெளி வாகக் காணும் காட்சியையும் பெற்ற வெல்லெஸ்லிக்குப் பிரெஞ்சுப் பேரபாயத்தை உணர்வதற்கு அதிக காலமாக வில்லை. அவர் அதை அகற்றுவதற்காகச் செயல்களை உடனடியாகச் செய்தார். இந்திய அரசர்களின் சபைகளிலும் படையிலும் இருந்த பிரெஞ்சு செல்வாக்கை அழிக்கவும், ஐரோப்பியர்களால் பயிற்சியளிக்கப்பட்ட நைஜாமின் படை களைக் கலைக்கவும் அவர் வழி வகுத்து, பிரெஞ்சுத் தீவின்மீது படையெடுப்பதற்குத் திட்டம் தீட்டினார். புரட்சிப் போர்கள் ஆரம்பமானது முதல், தனிமையான பிரெஞ்சுக்காரர்கள் இந்துமகா சமுத்திரத்தில் செல்லும் ஆங்கிலக் கப்பல்களைத் தாக்குவதற்கு அத்தீவை ஒரு தளமாக உபயோகப்படுத்தினார் கள். ஆனால், அட்மிரல் ரெய்னியே (Admiral Rainier) என்கிற பிரிட்டிஷ் கப்பற்படைத் தலைவர் ஒத்துழைக்க மறுத்ததால், அப்படிச் செய்ய இயலவில்லை. டச்சுக்காரர்களின் கிழக் கிந்தியத் தீவுகளின் தலை நகரான பட்டேவியா (Batavia)வை யும் பிடிக்க அவர் நினைத்தார். தாய் நாட்டினர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, 1801-ல் சர் டேவிட் பேர்டு (Sir David Baird) என்பவரின் கீழ்ச் செங்கடலுக்கு ஒரு படையை அனுப் பினார். பேர்டின் படை கெய்ரோவை அடைவதற்கு முன்பே அலெக்ஸாண்டிரியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்கள் சரணடைந் தார்கள். தாற்காலிகமாகப் போர் நிறுத்தத்தைப் பதின் மூன்று மாதங்களுக்கு நிலவச்செய்த அமீன் உடன்படிக்கை

ஏற்பட்ட பிறகுங்கூட வெல்லெஸ்லி தாம் கைப்பற்றிய பிரெஞ்சிந்தியக் குடியேற்றங்களைப் பிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுக்கவில்லை.

ஆங்கிலேயருக்கெதிராகச் சதி செய்வதை இந்தியாவில் இருந்த பிரெஞ்சுக்காரர்கள் கைவிடவில்லை. பிரெஞ்சிந்தியப் பிரதேசங்களுக்குப் புதிய கேப்டன்-ஜெனரலாக நியமிக்கப்பட்ட தகேயன் (Dacaen) என்பவர், பயனற்ற முறையில் இந்திய நண்பர்களைப் பெற முயன்றார்; இந்திய சமுத்திரத்தில் இருந்த ஆங்கிலக் கப்பல்களைக் கைப்பற்றவும், பிரெஞ்சு தனியாள்களைத் தூண்டினார். 1814–1815ஆம் ஆண்டிலேதான் பிரெஞ்சு அபாயத்திலிருந்து ஆங்கிலேயர் கடைசியாக மீண்டனர். இந்தியாவில் பிரிட்டிஷ் தலைமைப் பதவியைப்பெற ஹேஸ்டிங்ஸ் முயற்சி செய்யும் காலத்திலேயே இதுவும் நடந்தது.

## (ஈ) ஹைதராபாது

கர்டாத் தோல்விக்குப் பிறகு, நைஜாம் வெறுப்படைந்து, பிரெஞ்சுக்காரர்களின் உதவியைப் பெற்று, அவர்களைத் தம் சபைக்கு வரவேற்று, படையில் சேருவதற்கும் அனுமதித்தார். இந்தியாவிற்கு வெல்லெஸ்லி பிரபு வந்தபோது, அவரே கூறியபடி, 'யாக்கோபின் கொள்கை'யுடைய பிரெஞ்சுக்காரர்கள், நைஜாமை அதிகாரம் செய்து வந்தார்கள்.

ஆனால் இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கையும் சதியையும் ஒழித்து இந்திய அரசுகளின்மீது பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நிறுவுவதற்கு வெல்லெஸ்லி முடிவு செய்தார். சூழ்நிலையும் அவருக்குச் சாதகமாய் அமைந்தது. 1797-ல் நைஜாமின் குமாரரான அலிஜா என்பவர் கிளர்ச்சி செய்தபோது, அவருக்கு பிரிட்டிஷ் உதவி அளிக்கப்பட்டது. அதனால், அவர் ஆங்கிலேயரை விரும்பினார். இதன் பிறகு, பிரெஞ்சு செல்வாக்கு அவர் சபையில் வளருவதைக்கண்டு அச்சங்கொண்டார். நைஜாமின் அமைச்சரும் ஆங்கிலேயரின் நண்பருமான மீர் ஆலம் (Mir Alam) என்பவர், ஆங்கிலேயருடன் ஓர் உடன்படிக்கைக்கு வருமாறு அவரை வற்புறுத்தி வந்தார். வெல்லெஸ்லியின் முதற்கொள்கை, நைஜாமைப் பாதுகாப்புப் படை-நட்புறவை 1798, செப்டெம்பர், 1ஆம் தேதி ஒப்புக்கொள்ளச் செய்வது. அதன்படி ஆறு படைப் பிரிவுகளை அவர் ஏற்று, அவற்றுக்கு ஆகும் செலவையும்

அவர் கொடுக்கவேண்டும்; அந்நிய உறவுகளை ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டின்கீழ் விடவேண்டும்; வேறு நாடுகளுக்குச் சொந்தமான ஐரோப்பியர்களைத் தம் நாட்டிலிருந்து அனுப்ப வேண்டும். பிரெஞ்சுக்காரர்களால் பயிற்சியளிக்கப்பட்ட நைஜாமின் துருப்புகள், மால்காம், கீல்பாட்ரிக்கு ஆகியவர் களால் கலைக்கப்பட்டது. திப்புவுக்கு எதிராய் நடந்த போரில் அவர் விசுவாசமுள்ள நண்பராய் இருந்தார். அதற்காக அவருக்கு முன்னர்க் கூறியபடி, மைசூர் அரசாங்கத்திற்குச் சொந்தமான சில இடங்கள் கொடுக்கப்பட்டன. 1798-ல் செய் யப்பட்ட உடன்படிக்கை தாற்காலிகமானதாய் இருந்தது. அதனால், 'நிலையானதும், பொதுவானதுமான ஒரு பாது காப்பு நட்புடன்படிக்கை' 1800, அக்டோபர், 12-ல் ஆங்கிலேய ருக்கும் நைஜாமுக்குமிடையே ஏற்பட்டது. அதன்படி பாது காப்புப் படையின் எண்ணிக்கை உயர்த்தப்பட்டது. இப் படையின் பாதுகாப்புக்காக நைஜாம் 1792-1798-ல் மைசூர்ப் போரின் விளைவாகப் பெற்ற பிரதேசங்களை ஆங்கிலேய ருக்குக் கொடுத்தார்; ஆங்கிலேயருடைய உத்தரவு இல்லா மல் மற்ற அரசுகளுடன் அரசியல் உறவு வைத்துக்கொள்வ தில்லை என்றும் வாக்களித்தார். நைஜாம் அலி 1803-இறந் தார். அவருக்கு வாரிசாய் வந்தவரான சிக்கந்தர் ஜா (Sikandhar Jah) ஆங்கிலேயருடன் முன்பு செய்துகொண்ட எல்லா உடன்படிக்கைகளையும் மறுபடியும் உறுதிபடுத்தினர். 1822, டிசம்பர், 12-ல் ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் காலத்தில் ஏற்பட்ட ஓர் உடன்படிக்கையின்படி, பிரதேசங்கள் மறுபடி யும் ஒழுங்குபடுத்தப்பட்டன. பேஷ்வாவிற்குக் கட்டாம லிருந்த கப்பத்தைக் கட்டாமலிருப்பதற்கும் ஆங்கிலேயர் அனுமதி அளித்தனர்.

பாதுகாப்புப் படை-நட்புறவு, வெளி ஆக்கிரமிப்பிலிருந்து ஹைதராபாது நாட்டைப் பாதுகாப்பதாக உறுதி மொழி அளித்தது; ஆனால், அது உள்நாட்டு ஆட்சியில் சில மோச மான விளைவுகளை ஏற்படுத்தியது. வேற்று அரசைச் சார்ந் திருந்ததால், ஹைதராபாது அரசர்களும், நல்ல திறமையான ஆட்சியை உண்டாக்க முடியவில்லை. வங்காளம், அயோத்தி, கருநாடகம் போன்ற மாகாணங்களில் இருந்தது போலவே, அவருடைய நாடும் பிரிவினைச் சக்திகளால் சீரழிக்கப்பட்டது. பாதுகாப்புப் படையைப் பெருத அரசரான திப்புவின் நாடு மட்டும் செழிப்பான நிலையில் இருந்தது. வெல்லிங்டன் பிரபு பின்வருமாறு கூறினர்: 'வேலையிலிருந்து நீக்கப்பட்டுக் கொள்ளையைத் தவிர வாழ்வதற்கு வேறு வழியில்லாத

இருபது அல்லது முப்பது குதிரைப்படையினரை எல்லாக் கிராமங்களிலும் பெற்றிருக்கும் ஒரு நாட்டை நினைத்துப் பாருங்கள்! இப்படிப்பட்ட நாட்டில், சட்டம் இல்லை; சிவில் அரசாங்கம் இல்லை; கிராமத்தைப் பாதுகாக்க ஆயுதம் தரித்த படை இல்லை எனில், விவசாயம் செய்து எவனும் அங்கு வாழ முடியாது; வாழவும் மாட்டான். சுருங்கச் சொல்லின், பேஷ்வா, நைஜாம் ஆகியவர்கள் ஆட்சி செய்யும் நாட்டில் இருக்கும் நிலைமை இதுவே எனலாம்.

## (உ) கருநாடகம்

வங்காளத்தில், இரட்டை ஆட்சி அதன் மக்களுக்கு விளைத்த அழிவையும் துன்பத்தையும் போலவே, கருநாடகத்தின் இரட்டை ஆட்சியும், அதன் மக்களுக்கு அழிவையும் துன்பத்தையும் விளைத்தது. உறுதியான முடிவையும் உணர்ச்சிகளையும் கொண்ட வெல்லெஸ்லி பிரபுவினால் கருநாடகத்தில் இருந்த இரட்டை ஆட்சியைச் சகித்துக்கொண்டிருக்க இயலவில்லை. 'சீழ் பிடித்த இப்புண்ணை' நீக்கி, கருநாடகத்தைக் கம்பெனியின் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வருவதே முக்கியத் தேவையென்பது அவருக்குத் தெரிந்தது. பின்பு அவரே விளக்கியபடி, அவருக்கு விருப்பமான கொள்கையைப் பரப்ப வேண்டுவதற்காகவே மேற்குறித்த விதமாக நினைத்தார். 'இந்தியாவில் கம்பெனிக்கு இருக்கும் பிரதேசங்களை நோக்கும் ஆதிபத்தியம் உள்ள அரசாங்கமாக நோக்கவேண்டும்' என்பதுதான் அவர் கொள்கை. ஆனால், 'அவரால் கையாளப்பட்ட முறை பலனற்றதாய் இருந்தது. போலித்தனமாக நடந்துகொண்டார் என்று பிறர் தூற்றுவதற்கும் அது காரணமாய் இருந்தது.' கவர்னர்-ஜெனரல் கூறியபடி, சீரங்கப் பட்டணத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சில பத்திரங்கள், முகமது அலியும், 1801, ஜூலை, 15ஆம் தேதி இறந்த ஓம்தத்-உல்-உமாரா (Omdut-ul-Umara) என்பவரும் இரகசியமாகவும், தேசத் துரோகமான முறையிலும் திப்புச் சுல்தானுடன் கடிதப் போக்குவரத்து வைத்திருந்தார்கள் என்பதை நிரூபிக்கின்றன. இவ்விதம் அவர்கள் 'பொதுப் பகைவர்கள் நிலைமையில் தங்களை வைத்துக்கொண்டதால் கருநாடகச் சிங்காதனத்திற்கு இருந்த உரிமையை அவர்கள் இழந்துவிட்டார்கள்,' என அவர் அறிவித்தார். இறந்த நவாபுவின் மைந்தரான அலி ஹுசேன் (Ali Hussain) என்பவர் கோரிய வாரிசு உரிமையை அவர் தள்ளி வைத்து, 1801,

ஜூலை, 25-ல் ஓம்தத்-உல்-உமாராவின் மருமானுரான அஜீம் உத்-தௌலா (Azim-ud-daula) என்பவருடன் ஓர் உடன் படிக்கை செய்து, பெயரளவில் மட்டும் கருநாடகத்தின் நவாபு வாக அவரை நியமித்தார். வரியினுல் வரும் பணத்திலிருந்து ஐந்தில் ஒரு பாகம் ஓய்வுகால ஊதியமாக அவருக்குக் கொடுக்கப்படும் என வாக்குறுதி அளிக்கப்பட்டது. அந் நாட்டின் சிவில் இராணுவ ஆட்சி முழுவதும் கம்பெனியால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வங்காளத் திவானியைப் பெற்ற தற்குப் பிறகு, கருநாடக ஆட்சியைக் கைப்பற்றியதுதான் மிக்க அனுகூலமும் உபயோகமுமான செய்கை என வெல்லெஸ்லி கூறினர். நூலாசிரியர்களான கார்ன்டன், ஓவன் போன்றவர்களும் மற்றும் சிலரும், எல்லா வழிக ளாலும் இக் கொள்கையை நியாயம் என உறுதிப்படுத்த முயன்றனர். ஆனல், இது மில் என்பவரது கடுமையான கண்டனத்திற் குள்ளாகியது. சம்பந்தப்பட்ட பத்திரங்கள், கருநாடக நவாபுகளின் துரோகத்தை நிரூபிக்கவில்லை. தமது குறிக்கோள் என்னவென்பதை வெல்லெஸ்லி வெளிப்படை யாய் அறிவித்து மிக நேர்மையான வழியில் அதை நிறைவேற்றியிருக்கலாம்.

## (ஊ) தஞ்சாவூரும் சூரத்தும்

தஞ்சாவூர், சூரத்து அரசர்களுங்கூட, தங்கள் ஆட்சியின் அதிகாரங்களைக் கம்பெனிக்குக் கொடுத்துவிட்டு, 'வெற்றுப் பட்டங்களையும்', 'உறுதி செய்யப்பட்ட ஓய்வுகால ஊதியத் தையும்' கொண்டு திருப்தியடையுமாறு, வல்லெஸ்லியினுல் செய்யப்பட்டார்கள். சிவாஜியின் தகப்பனுரான ஷாஜி யினுல் உண்டாக்கப்பட்ட மராட்டியச் சிற்றரசு, தஞ்சாவூர், வாரிசு உரிமையால் ஏற்பட்ட தகராறு காரணமாக வெல் லெஸ்லி அந்நாட்டில் தலையிடுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத் தது. அதனுல், அந்நாட்டு அரசர் பாதுகாப்புப் படை உடன் படிக்கையை 1799, அக்டோபர், 25-ல் செய்துகொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டார். இதன்படி, சிவில் இராணுவ அதி காரங்கள் யாவும் கம்பெனிக்கு மாற்றப்பட்டன. அவற்றிற் கீடாக அவ்வரசர் ஆண்டுதோறும் 40,000 பவுன்களை ஓய்வு ஊதியமாகப் பெற்றுர். சூரத்திலும் இப்படிப்பட்ட நிலைமை எழுந்தது. 1759 முதல், முகலாயப் பேரரசரின் சார்பாக அந் நாட்டின் பாதுகாப்பைக் கம்பெனி ஏற்றுக்கொண்டது. ஆனல், சிவில் நிருவாகத்தை நவாபு தம்மிடமே வைத்திருந்

தார். ஆனால், அங்கு வைக்கப்பட்ட கம்பெனியின் படைகளுக்கு ஆகும் செலவைச் சூரத்து நவாபுகளால் கொடுக்க இயலவில்லை. 1791, ஜனவரி, 8-ல் வயதான நவாபு இறந்த உடனே, வெல்லெஸ்லி பிரபு யதேச்சாதிகாரமான முறையில், வாரிசு உரிமையுள்ள நவாபுவின் சகோதரரைக் கொண்டு அப்பிரதேசங்களின் ஆட்சியை, 1800, மார்ச்சில், கம்பெனிக்கு ஒப்படைக்குமாறு செய்தார். மில் என்பவரின் கருத்துப்படி, ஆங்கிலேயர்கள் இதுவரையிலும் செய்தறியாத பதவி நீக்கம் என்கிற இழிவான செயலை, வெல்லெஸ்லி செய்தார்; ஏனெனில், அவர் கொள்கைக்குப் பலியானவர்கள், ஆற்றலின்றியும் சிறப்பில்லாமலும் இருந்தார்கள். பெவரிட்ஜ் (Beveridge) என்பவர், 'அவரது முழு நடவடிக்கையும் கொடுங்கோன்மை, அநீதி ஆகியவற்றைக் கொண்டிருந்தது,' எனக் கூறினார்.

## (எ) அயோத்தியின் முடிவு

நெடுங்காலமாய் இருந்துவரும் உள்நாட்டுக் கடனைத் தீர்க்க முடியாமல் இருந்ததற்காக அயோத்தி நாடு வெல்லெஸ்லியின் காலத்தில் தன் சுதந்தரத்தையே இழக்கவேண்டியிருந்தது. வடமேற்கு எல்லை நன்கு பாதுகாக்கப்படவேண்டுமானால், அயோத்தி ஆங்கிலேயரின் அதிகாரத்தின்கீழ் அவசியம் இருக்க வேண்டும் எனக் கவர்னர்-ஜெனரல் உணர்ந்தார். அயோத்தியில் கம்பெனியின் ரெசிடென்டாய் இருந்த ஜான் லம்ஸ்டன் (John Lumsden) என்பவருக்குத் தனிப்பட்ட முறையில் எழுதிய கடிதத்தில், கம்பெனியின் வடமேற்கு எல்லையை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், 'டோப் (Doab) என்னும் பகுதியைக் கைப்பற்றத் தாம் முடிவு செய்திருப்பதாக எழுதினார்; 'அவ்வப்போது விடுக்கப்படும் கம்பெனியின் காலாட்படை, குதிரைப்படை ஆகியவைகள் அதிக அளவில் நவாபுவின் துருப்புகளுக்குப் பதிலாக வைக்கப்படவேண்டும். அவற்றுக்கு மிக்க மேன்மை பொருந்தியவர் (நவாபு) பணம் செலுத்த வேண்டும்,' என்று எழுதினார்; அது தவிர, அயோத்தியிலிருந்து ஆங்கிலேயரைத் தவிர, மற்ற எல்லா ஐரோப்பியர்களையும் வெளியேற்ற வேண்டுமென்றும் அதில் குறித்திருந்தார். வாரணசியில் ஏற்பட்ட துரதிருஷ்ட நிகழ்ச்சியினால் இத்திட்டம் உடனே நிறைவேற்றப்படவில்லை. 1799, ஜனவரி, 14-ல் அவ்விடத்திலிருந்த வாசீர்அலி, தம் நிலைமையைக் கண்டு வெறுப்புற்று, செர்ரி (Cherry) என்ற பிரிட்டிஷ் ரெஸிடென்டு உட்பட, பல ஆங்கிலேயர்களைக் கொலை செய்தார். உண்மையில், கம்பெனிக்கெதிராக,

விரிவாக ஒரு சதியைச் செய்வதற்கு அவர் முயன்ருர். வங்காளத்திலும் பீஹாரிலும் அவர் நண்பர்களைப் பெற்றிருந்தார்; இந்துஸ்தானத்தின்மீது படையெடுப்பதாகப் பயமுறுத்திய காபூலின் ஜாமன் ஷா என்பவரின் உதவியைப் பெறவும் முயன்ருர். ஆனுல், அவர் ஒரு பிரிட்டிஷ் படையால் பிடிக்கப்பட்டு, வில்லியம் கோட்டைக்கு அனுப்பப்பட்டார். கி.பி. 1817-ல் இறக்கும் வரையிலும் அவர் சிறையில் அடைக்கப்பட்டார்.

கருநாடக அரசரைக் குற்றம் சாட்டியபடி கம்பெனியிடம் எப்பொழுதும் விசுவாசமாய் இருந்த அயோத்தி நவாபுவின் மீது துரோகம் அல்லது கீழ்ப்படியாமை ஆகிய குற்றங்களைச் சாட்டுவதற்கு வெல்லெஸ்லியினுல் இயலவில்லை. ஆனுல், ஜாமன் ஷாவின் இந்துஸ்தான் படையெடுப்பு என்பதில் அவருக்கு ஒரு தகுந்த பொய்க் காரணம் கிடைத்தது. அதை வைத்துக்கொண்டு, நவாபுவின் படைகளைக் கலைத்துவிடுமாறும் கம்பெனியின் படைகளை அதிகப்படுத்துமாறும் அவர் வற்புறுத்தினுர். சிறிது எதிர்ப்பிற்குப்பின், கர்னல் ஸ்காட்டு (Colonel Scott) என்ற பிரிட்டிஷ் ரெஸிடென்டு வற்புறுத்துதலால் பதவியைத் துறக்க எண்ணம் கொண்டிருப்பதாக அறிவித்தார். 'அயோத்தியிலும் அதைச் சார்ந்த இடங்களிலும் கம்பெனிக்கு மட்டுமுரிய தனிப்பட்ட அதிகாரத்தை ஏற்படுத்துவதற்கு இத்திட்டமே சரியான வழி,' என நினைத்து, டைரக்டர்களின் மன்றத்திற்கு எழுதினுர். அதில் 'முடிந்த அளவு அந்த நிகழ்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ள'த் தாம் கொண்டிருந்த எண்ணத்தை வெளியிட்டார். ஆனுல், அயோத்தியின் சிங்காதனத்திற்கு நவாபுவின் பிள்ளைகள் பெறும் உரிமையை வெல்லெஸ்லி தடுக்க முயன்றபோது, நவாபு முடி துறப்பதற்கு வெளியிட்ட அறிக்கையை வாபஸ் வாங்கினுர். இச்செய்கை கவர்னர்-ஜெனரலுக்குக் கடுங்கோபத்தை உண்டாக்கியது. அச்சமயம் நவாபுவின் நடத்தையிலிருந்த வஞ்சகத்தையும், விசுவாசமற்ற தன்மையையும் கண்டு தாம் மிகவும் வெறுப்புற்றதாக அவர் அறிவித்து, அவருக்கு ஓர் உடன்படிக்கையின் நகலைக் கொடுத்தார். இதன்படி, கம்பெனித் துருப்புகளின் எண்ணிக்கையும், அவர் கொடுத்து வந்த பண உதவித் தொகையும் அதிகமாக்கப்பட்டன. முன்பு செய்த உடன்படிக்கைகளைக் குறிப்பிட்டு, நியாயமான கண்டனங்களை நவாபு தெரிவித்தார். ஆனுல், இவைகளை வெல்லெஸ்லி ஏற்க மறுத்து, அவர் கேட்பவைகளை ஒப்புக்கொள்ளுமாறு வற்புறுத்தினுர். கவர்னர்-ஜென

ரலுக்கு அப்பொழுதும் திருப்தி ஏற்படவில்லை. 1801, நவம்பர், 10-ல் மறுபடியும் நவாபு ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளு மாறு வற்புறுத்தப்பட்டார். அதன்படி, வளமும் சிறப்பும் பொருந்திய ரோஹில்கண்டும், யமுனைக்கும் கங்கைக்கும் இடையில் இருந்த கீழ் டோப் எனும் இடங்களுமாகிய தம் நாட்டின் பாதிப் பகுதியை நவாபு ஆங்கிலேயருக்குக் கொடுக் கும்படி நேரிட்டது. அவ்வாறு வடக்கு எல்லையைத் தவிர மற்ற எல்லாப் பக்கங்களிலும் அயோத்தி ஆங்கிலேயரின் பிரதேசங்களால் சூழப்பட்டது. வடவிந்தியாவில் இருந்த சிந்தியாவின் முழு எல்லையையும் இப்பொழுது ஆங்கி லேயரின் பிரதேசங்கள் சந்தித்தன. உண்மையில் கம்பெனிக்கு இது மிக முக்கிய அனுகூலமாய் இருந்தது. ஓவன் சரியாகச் சொல்லியபடி, 'நம்முடைய இராணுவ எல்லையைச் சரிப்படுத் தியதும், நவாபுவின் நாட்டைத் தனிப்படுத்தியதும், பெரிய திட்டத்தின் பாகங்களாய் இருந்தாலும், குறிப்பாக இப்படிப் பட்ட நெருக்கடியில், அவைகளும் மிகவும் முக்கியமான நடவடிக்கைகளேயாகும்.'

வெல்லெஸ்லி நவாபுவை நடத்திய விதத்தை மில்லைப் போன்ற மற்ற வரலாற்று ஆசிரியர்களும் கண்டித்தார்கள். டாக்டர் வில்சன் (Dr. H. H. Wilson) போன்றவர்களும் நவாபு வுடன் நடத்தப்பட்ட பேச்சு வார்த்தைகள் கண்டிக்கத்தக்க முறையில் நடந்தன என்பதை ஒப்புக்கொள்கின்றார்கள். சில சமயங்களில் மட்டும் வெல்லெஸ்லியைக் குறைகூறுபவரான சர் ஆல்பிரடு லையால் என்பவர், அயோத்தியுடன் வெல் லெஸ்லி நடந்துகொண்டதில் 'பொறுமை, தன்னடக்கம், பரந்த மனம் ஆகியவை இன்றி, பிரிட்டிஷ் கொள்கையே பெரி தென நினைத்து, தம் நேய நாட்டின் உணர்ச்சிகளையும் நலன் களையும் மதிக்காமல் நடந்துகொண்டார்,' எனக் கருதுகிறார். டைரக்டர்கள் மன்றமும் இதைக் கண்டித்தது. ஆங்கிலேயரின் தலையீடு, இந்நாட்டிற்கு அமைதியையும், நல்ல ஆட்சியையும் உடனே கொடுக்கவில்லை. காப்புப் படை-நட்புறவை ஒப்புக் கொண்ட நாடுகளில் இருந்தது போலவே, இங்கும் ஆட்சியின் ஊழல்கள் அதிகமாயின. தவறான ஆட்சி என்று குற்றம் சாட்டி, கடைசியாக அந்நாடு ஆங்கில நாட்டுடன் சேர்த்துக் கொள்ளும் வரையில் ஊழல்கள் இருந்தன. பின்பு, டல்ஹௌசி சில இடங்களைக் கைப்பற்றுவதற்கான சூழ்நிலையை உண் டாக்குவதற்கு வெல்லெஸ்லியின் பாதுகாப்புப் படை ஒப் பந்தம், ஒரு விதத்தில் உபயோகப்பட்டது எனக் கூறலாம்.

## (ஏ) ஆங்கிலேய-கூர்க்க உறவுகளும், நேப்பாளப் போரும் (1814-1816)

நேப்பாளப் பள்ளத்தாக்கில் இருந்த பழைய அரசவமிசங்களுக்கிடையே ஏற்பட்ட உள் நாட்டுத் தகராறுகளை உபயோகப்படுத்தி, மேற்கு ஹிமாலயத்திலிருந்த கூர்க்கர் என்ற மலைச் சாதியினர், கி.பி. 1768-ல் அப்பள்ளத்தாக்கைக் கைப்பற்றினர். படிப்படியாக, அவர்கள் ஆற்றலுள்ள ஓர் ஆட்சியை ஏற்படுத்தி, மிகுந்த இராணுவப் பலத்துடன் விளங்கினர்கள்; அதனால், தங்கள் நாட்டை விரிவுபடுத்துவதற்குரிய வழியை இயற்கையாகவே எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்; வடக்கில் முன்னேற விரும்பியதைச் சீனப் பேரரசு தடுத்தமையால், தெற்கு நோக்கி முன்னேறினர்கள்; பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தங்கள் நாட்டைக் கிழக்கில் டிஸ்டா (Tista) நதிவரையிலும் மேற்கில் சட்லஜ் (Sutlej) நதி வரையிலும் விரிவுபடுத்தினர்கள். அதனல், 'இந்துஸ்தானத்தின் வடவெல்லை வரையிலும் இருந்த வலுவான பிரதேசங்கள் அனைத்தையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். 1801-ல் கம்பெனி கோரக்பூர் மாவட்டத்தைப் பெற்றதால், தராய் (Tarai) என்னுமிடத்திலிருந்த கூர்க்கர்களின் பிரதேசங்கள், நிச்சயமற்றதும் சரியாக வரையறுக்கப்படாததுமான பிரிட்டிஷ் நாட்டின் வடவெல்லைகளை அடுத்து இருந்தன. அதனல், எல்லையிலிருந்த மாவட்டங்களில் கூர்க்கர்கள் அடிக்கடி புகுந்து சூறையாட நேரிட்டது. சர் ஜார்ஜ் பார்லோ, பயனற்ற வகையில் தம் கண்டனத்தைத் தெரிவித்தார். மின்டோ பிரபுவின் காலத்தில் இப்பொழுது பஸ்தி மாவட்டம் என்னும் இடத்திற்கும், அதற்குக் கிழக்கே இருந்த ஷிவோராஜ் (Sheoraj) என்னும் இடத்திற்கும் வடக்கே இருந்த புட்வால் (Butwal) என்னும் இடத்தைக் கூர்க்கர்கள் கைப்பற்றினர்கள். ஆனல், இவைகள் வெளிப்படையான போர் இல்லாமலே மறுபடியும் கைப்பற்றப்பட்டன. ஆனல், ஒன்றுக்கொன்று எதிரான உரிமைகளைக் கூர்க்கர்களும் ஆங்கிலேயரும் கொண்டாடியதால், அவர்களுக்குள் போர் ஏற்படவிருந்தது.

திடீரென்று புட்வாலிலிருந்த மூன்று காவல் நிலையங்களை (Police Stations) 1814, மே மாதத்தில் கூர்க்கர்கள் தாக்கியதை தொடர்ந்து, அக்டோபரில் ஹேஸ்டிங்ஸ் பிரபு என்ற கவர்னர்-ஜெனரலால், அவர்களுக்கெதிராக ஒரு போர் தொடங்கப்பட்டது. ஹேஸ்டிங்ஸ் பிரபுவே அப்போரின் திட்டத்தை வகுத்தார். சட்லெஜ் நதியிலிருந்து கோசி நதி வரையில்

உள்ள முழு எல்லையில், நான்கு இடங்களில் ஒரே சமயத்தில் பகைவனைத் தாக்குவதற்காக அவர் முடிவுசெய்தார். இதைத் தவிர, 'நேப்பாள அரசாங்கத்தின் விசுவாசத்தைக் கெடுக்கவும்' அவர் முயன்றார். நேப்பாளப் போர்வீரர்களின் ஆச்சரியப்படத்தக்க சிறப்பான போர் முறையும், சிறப்பான ஆற்றலும், மலைப்பகுதிகளில் போர் செய்வதால் ஏற்படும் இடர்களை ஆங்கிலேயத் துருப்புகள் அறியாமை, ஆக்டர் லோனியைத் தவிர மற்ற பிரிட்டிஷ் படைத்தலைவர்களின் தகுதியின்மை ஆகியவைகளினால், ஆற்றலுள்ள நேப்பாளிகளை வெற்றி கொள்வதென்பது, சுலபமெனத் தோன்றவில்லை. அதனால், 1814–1815-ல் ஏற்பட்ட போர்கள் ஆங்கிலேயருக்குத் தோல்வியையே விளைத்தன. பாட்னாவிலிருந்தும், கோரக்பூரிலிருந்தும் நேப்பாளத் தலைநகரை நோக்கி முன்னேறுமாறு கட்டளையிடப்பட்ட மேஜர் ஜெனரல்களான மார்லே (Marley) என்பவரும் ஜான் சலிவன் வுட் (John Sullivan Wood) என்பவரும் தங்களுடைய முயற்சி தோல்வியுற்றதால், பின்வாங்க நேரிட்டது. ஜெனரல் ஜில்லெஸ்பி (Gillespie) கலங்கா (Kalanga) என்னும் மலைக்கோட்டையைத் தாக்கும்பொழுது காட்டிய 'அறிவற்ற துணிச்சல்' காரணமாகத் தமது உயிரை இழந்தார். மேஜர் ஜெனரல் மார்ட்டிண்டெல் (Martindell) என்பவர் 'ஜெய்டக்' (Jaitak) என்னும் பலம் பொருந்திய கோட்டையின் முன் தோற்கடிக்கப்பட்டார். ஆனால், இத் தோல்விகள் எல்லாம் மற்ற வெற்றிகளால் சரிப்படுத்தப் பட்டன. கர்னல் நிக்கோின் என்பவரும் கர்னல் கார்டினர் என்பவரும் குமாவானிலிருந்த அல்மோராவை 1815, ஏப்பிரல் மாதத்தில் கைப்பற்றினார்கள். 1815, மே, 15-ல் மாலான் (Malaon) என்கிற கோட்டையை ஆங்கிலேயருக்குக் கொடுக்குமாறு அமார் சிங் தாப்பா (Amar Singh Thapa) என்கிற வீரரான கூர்க்கத் தளபதி ஜெனரல் ஆக்டர்லோனியால் வற்புறுத்தப்பட்டார். மேலும் எதிர்ப்பது உபயோகமற்றது என்பதை அறிந்த கூர்க்கர்கள், 1815, நவம்பர், 28-ல் சகௌலி (Sagauli) என்னுமிடத்தில் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார்கள்.

நேப்பாளத்தில் போரை விரும்பும் ஒரு கட்சியின் செல்வாக்கினால் அதன் அரசு இந்த உடன்படிக்கையை அங்கீகரிக்க மறுத்துவிட்டது. அதனால், மறுபடியும் போர் ஆரம்பமாயிற்று. ஆங்கிலப்படைகளின் தலைமைத் தளபதியான ஆக்டர்லோனி, நேப்பாளத் தலைநகருக்கு ஐம்பது மைல் வரை முன்னேறி, 1818, பிப்பிரவரி, 28-ல் மக்வான்பூர் (Makwanpur)

என்னுமிடத்தில் நேப்பாளியரைத் தோற்கடித்தார். இதனல், மார்ச்சு ஆரம்பத்தில் நேப்பாள அரசாங்கம் அவ்வுடன் படிக்கையை அங்கீகரித்தது. இதன்படி, அந்நாட்டின் தெற்கு எல்லையிலிருந்த பள்ளத்தாக்குகளின்மீது இருந்த உரிமைகளை விட்டுக்கொடுத்தனர். நேப்பாளின் மேற்கே இருந்த கார்வால் (Garhwal) கூமான் (Kuman) ஆகிய மாவட்டங்களை ஆங்கிலேயருக்குக் கொடுக்கவும், மேலும் சிக்கிம் நிலப் பகுதியை விட்டு வெளியேறவும், காட்மாண்டுவில் ஒரு பிரிட்டிஷ் ரெசிடென்டை ஏற்றுக்கொள்ளவும் ஒப்புக்கொண்டனர். இவை உண்மையிலேயே ஆங்கிலேயருக்கு மிக்க உபயோகமாய் இருந்தன. அவர்களுடைய வடமேற்கு எல்லை இப்பொழுது மலைகள் வரையில் விரிந்தது. அவர்கள் சிம்லா, மூஸ்ஸூரி அல்மோரா, ராணிகட், லாண்டூர் (Landour), நைனிட்டால் போன்ற மலைவாசஸ்தலங்களையும், கோடைகாலத் தலைநகரையும் ஏற்படுத்துவதற்கான இடங்களைப் பெற்ருர்கள்; மத்திய ஆசியாவின் பகுதிகளுடன் போக்கு வரத்துச் செய்வதற்கான சிறந்த வசதியையும் பெற்ருர்கள். அதிலிருந்து நேப்பாள அரசாங்கமும், ஆங்கிலேயருடன் ஏற்பட்ட நட்பிற்கு விசுவாசமாய் இருந்தது. 1817, பிப்பிரவரி 6-ல் சிக்கிம் அரசருடன் செய்துகொண்ட ஓர் உடன்படிக்கைப் படி, நேப்பாளியர்களால் கொடுக்கப்பட்ட ஒரு நிலப்பகுதி, அவ்வரசருக்குக் கொடுக்கப்பட்டது. இது பூடான் (Bhutan) என்ற நாட்டுக்கும், நேப்பாளின் கிழக்கு எல்லைக்குமிடையே ஓர் அரணுய் விளங்கியது.

## (ஐ) பிண்டாரி, பட்டாணிய நாடோடிக் கூட்டங்களை அடக்குதலும், இராசபுதனம், மத்திய இந்தியா ஆகியவற்றின்மீது பிரிட்டிஷ் மேலாட்சியை ஏற்படுத்துதலும்

முக்கிய இந்திய அரசுகள், ஒன்றன் பின் ஒன்ருக பிரிட்டிஷ் ஆட்சியால் கைப்பற்றப்பட்டபோது, பிண்டாரிகள், பட்டாணியர்கள் என்கிற கொள்ளைக் கூட்டத்தார்கள் உண்டாக்கிய கலகங்களிஞலும், கொடிய செய்கைகளாலும், மத்திய இந்தியா, குழப்பத்தில் ஆழ்ந்தது. பல அரசுகளுக் கிடையே ஏற்பட்ட நிலமானியப் போட்டிகளாலும், பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் மராட்டியர்கள் அந் நாட்டிற்குள் புகுந்து கொள்ளையடித்ததாலும், ராஜபுதனத்தில், இக்குழப்பநிலை இருந்து வந்தது. இந்தியாவில் மேலாட்சியை

உண்டாக்குவதற்கு ஆங்கிலேயர்கள் முயற்சி செய்யும் பொழுது, இத்தகைய குழப்பங்கள் பல இடங்களில் நடைபெறுவதை அவர்கள் விரும்பவில்லை. நேப்பாளப் போர் முடிந்த பிறகு, ஹேஸ்டிங்ஸ் பிரபு அமைதியற்ற இப்பகுதிகளின்மீது தம் நோக்கைச் செலுத்தினர். ஏனெனில், குறிப்பாகப் பிண்டாரிகள், பிரிட்டிஷ் பிரதேசங்களின்மீதும் படையெடுத்தார்கள். அதைத் தவிர, அவர்களை ஆங்கிலேயர்களுக்குப் பகைவர்களான மராட்டியத் தலைவர்கள், தங்கள் படைகளில் ஊதியத்திற்கு உழைக்கிறவர்களாகச் சேர்த்துக் கொண்டார்கள்.

## (அ) பிண்டாரிப் போர்

பிண்டாரிகள்[1] என்பவர்கள் கொடுமை புரியும் ஒரு கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். மத்திய இந்தியாவிலிருந்த தங்களுக்குரிய தலைமையிடத்திலிருந்து, அண்மையிலிருக்கும் பகுதிகளையும் தூரத்தில் இருக்கும் சில இடங்களையும் கொள்ளையிட்டார்கள். தக்காணத்தில் பதினேழாம் நூற்ருண்டின் இறுதியில் முகலாய-மராட்டியப் போர் நடக்கும் போது, அவர்களைப்பற்றித் தெரியவந்தது. இரட்டையாட்சியின் தோல்வியும், அதனுல் வங்காளத்தில் ஏற்பட்ட குழப்பமும், பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பாதி முழுவதும், மிகப் பரந்த அளவில் வழிபறி கொள்ளைகள் ஏற்பட்டு நடந்துவந்தது போல,பதினெட்டாம் நூற்ருண்டின் அரசியற்குழப்பமும் அவர்களைத் திட்டமிட்டுக் கொள்ளை அடிப்பதையும் திருடுவதையும் ஒரு தொழிலாகக் கொள்ளும்படி செய்தது. மராட்டியர்கள், பிண்டாரிகளைத் தங்கள் துணைப்படைகளாகச் சேர்த்துக் கொண்டார்கள். சிந்தியா ஹோல்கார் போன்ற மராட்டியத் தலைவர்கள் அவர்களுக்குப் பாதுகாப்பையும் அளித்தார்கள். நருமதைக் கருகே இருந்த மால்வாவில் சிந்தியா அவர்களுக்குச் சில குடியேற்றங்களைக் கொடுத்தார். அப்பொழுதிருந்த ஆங்கில நூலாசிரியர்களிடமிருந்து அவர்களுடைய அமைப்பைப்பற்றி அறிகிருேம். அவர்களுள் ஒருவரான சர்

1. 'பிண்டாரி' என்னும் வார்த்தையின் சொல் இலக்கணத்தைப்பற்றிப் பலவிதமான அபிப்பிராயங்கள் உள்ளன. சுதேசிகளுக்கிடையே மிகப் பிரபலமாய் நிலவிய கருத்து இதுதான்: தீய வழக்கம் கொண்டு பிண்டா என்னும் மதுபானத்தைக் குடிப்பதற்காக அடிக்கடி அதை விற்கக் கடைகளுக்குச் செல்லுவதிலிருந்து அப்பெயரைப் பெற்றுர்கள். (Malcolm, Memoir of Central India, Vol. Page, 433.)

ஜான் மால்காம் என்பவர் பின்வருமாறு எழுதுகிறார்: 'மிருகத்தின் சீழால் உண்டாகும் மிகுந்த அழுகலைப் போல, வலுவுள்ள நாடுகளிலிருந்தும் அழிக்கப்பட்ட நாடுகளிலிருந்தும் கிளம்பியவர்களான பிண்டாரிகளிடத்தில், ஆபத்துக் காலத்தில் மனிதர்களை ஒன்றாக இணைக்கக் கூடிய கட்டுப்பாடான ஒற்றுமை, அதிருஷ்டவசமாக இல்லை. அவர்களிடம் சமய ஒற்றுமையாவது, தேசீய உணர்ச்சியாவது இல்லை. அவர்கள் எல்லா நாடுகளையும் எல்லாச் சமயங்களையும் சேர்ந்தவர்கள். நம்பிக்கை இழந்த நிலையைவிட, இந்தியா அன்றிருந்த நிலைமையில், சிறிது அபாயம் நிறைந்தது. ஆனால், அனுபவிக்கக் கூடிய கொள்ளைக்காரர்கள் வாழ்க்கையே அவர்களை ஒன்றாக்கிவிட்டது. தார்த்தாரிகளுடன் (Tartars) ஒப்பிடக் கூடியவர்களும், அவர்களைப் போலவே நடந்து கொண்டவர்களுமான பிண்டாரிகள், செழிப்பான நாட்டிற்கு வந்த உடனே, அங்குத் தங்கி இளைப்பாறுவதற்குரிய வசதியும் அவர்களுக்கு இல்லை; எண்ணமும் இல்லை. வெட்டுக்கிளிகளின் படையைப் போல, இயற்கை அறிவினால் தூண்டப்பட்டு, அவர்கள் போகும் மாகாணங்கள் எல்லாவற்றையும் அழித்துப் பாழாக்கினார்கள்.' பொதுவாக அவர்கள் நிலைத்து நின்று போரிடுவதை விரும்புவதில்லை. கொள்ளையடிப்பதுதான் அவர்களின் முக்கிய நோக்கம். அதற்காக அவர்கள் கைக்கு அகப்பட்டவர் எல்லோரையும் பயங்கரமான கொடுமைகளுக்குள்ளாக்கினார்கள. கேப்டன் சைடென்ஹாம் (Sydenham) என்பவர் 1809-ல் பிண்டாரிகளைப் பற்றிய ஒரு நினைவுக் குறிப்பில் பின்வருமாறு எழுதுகிறார்: 'போரிடுவதை அவர்கள் தவிர்க்கிறார்கள். ஏனெனில், அவர்கள் கொள்ளையடிப்பதற்கு வந்தார்களேயன்றி, போரிடுவதற்காக அன்று.' அவர்கள், ஹிரு (Hiru), புரன் (Buran), சித்து (Chitu), வாசில் முகம்மது, கரீம்கான் ஆகிய ஆற்றல் கொண்ட தலைவர்களின்கீழ், நீண்ட தூரம் வரையில் சென்று, கொள்ளை அடித்தார்கள். 1812-ல் ஆங்கிலேயரின் மாவட்டங்களான மிர்ஜாபூர், ஷாகாபாது (Shahabad) என்பவற்றையும் அவர்கள் தாக்கினார்கள். 1815–1816-ல் நைஜாமின் நாட்டைப் பாழ்படுத்தினார்கள். 1816-ன் ஆரம்பத்தில், வடசர்க்காரை வேண்டுமென்றே கொள்ளை அடித்தார்கள்.

இக்காலத்தில் அவர்களை ஒழிக்க வேண்டுமென்று ஹேஸ்டிங்ஸ் பிரபு உறுதியான முடிவிற்கு வந்தார். 1816, செப்டெம்பரில் அதற்கான அங்கீகாரத்தையும், டைரக்டர்களின் மன்றத்திலிருந்து அவர் பெற்றார். 1817ஆம் ஆண்டின் இறுதி

யில் அவர் பிண்டாரிகளை இறுதியாக ஒழித்துக்கட்டுவதற்கு முன்னே, சில முக்கிய இந்திய அரசுகளிடம் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளும் நுண்ணறிவைப் பெற்றிருந்தார். எல்லாப் பக்கங்களிலிருந்தும்-வங்காளத்திலிருந்து வடக்கிலும் கிழக்கிலும், குஜராத்திலிருந்து மேற்கிலும், தக்காணத்திலிருந்து தெற்கிலும், பிண்டாரிகளைச் சூழ்ந்துகொள்ளும் எண்ணத்துடன் அவர் மிகக் கவனமாகவும் தீவிரமாகவும் இராணுவ நடவடிக்கைகளை எடுத்தார். 1,13,000 வீரர்களையும், 300 பீரங்கிகளையும் ஓர் இடத்தில் சேர்த்து அக்குழுவை இரண்டாகப் பிரித்தார். நான்கு டிவிஷன்களைக் கொண்ட வடக்குப் படையைத் தமது தலைமையின்கீழ் வைத்துக் கொண்டு, ஐந்து டிவிஷன்களைக் கொண்ட தக்காணப் படையைச் சர் ஜான் மால்காம் (Sir John Malcolm) என்பவரைத் துணைவராகக் கொண்ட தாமஸ் ஹிஸ்லோப் (Thomas Hislop) என்பவரின்கீழ் விட்டார். 1817ஆம் ஆண்டின் இறுதியில் மால்வாவிலிருந்தும், சம்பாலுக்கு இடையிலிருந்தும், பிண்டாரிகள் துரத்தப்பட்டார்கள். 1818, ஜனவரி இறுதியில் அவர்கள் அடியோடு அழிக்கப்பட்டார்கள். அவர்களில் ஆற்றல் மிக்க தலைவர்களுள் ஒருவனான கரீம் கான் என்பவன் 1818, பிப்பிரவரி, 18-ல் சர் ஜான் மால்காமிடம் சரணடைந்தான். அதனால், அவனுக்கு ஐக்கிய மாகாணத்திலிருந்த காவ்ஷ்பூர் (Gawshpur) என்ற ஒரு சிறிய ஜமீன் கொடுக்கப்பட்டது. சிந்தியாவிடம் அடைக்கலம் புகுந்த வாசில் முகம்மது, மராட்டியத் தலைவர்களால் ஆங்கிலேயரிடம் ஒப்படைக்கப்பட்டான். கைதியாய் இருந்தபோது காவ்ஷ்பூரில் அவன் இறந்தான். சித்து என்பவன் ஒவ்வோர் இடத்திலுமிருந்து துரத்தப்பட்டுக் கடைசியில் அசீர்காருக்கு அருகில் காட்டிலிருந்த ஒரு புலி வாய்ப்பட்டு மாண்டான். ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு, மால்காம், 'பிண்டாரிகளின் பெயர் மறந்து போகும் அளவிற்கு அவர்கள் அடியோடு அழிக்கப்பட்டார்கள்,' என எழுதினர். அதில் பிழைத்தவர்கள் மக்களுடன் கலந்தார்கள். சிலர் விவசாயத்தை வளமடையச் செய்யும் வேலையில் உற்சாகத்துடன் ஈடுபட்டனர்.

## (ஆ) பட்டாணியர்களை அடக்குதல்

இக்காலத்தில் பல பட்டாணியர்கள், பிண்டாரிகளைப் போலக் கொள்ளைக் கூட்டத்தின் பழக்கங்களைப் பின்பற்றினார்கள். அப்பொழுதிருந்த நூலாசிரியரான பிரின்செப் (Prinsep) என்பவர், 'பிண்டாரித் தலைவர்களிடமிருந்து மாறு

பட்ட ஒரு படையை அவர்கள் வைத்திருந்தார்கள். உண்மையில் இரு வகுப்பாருக்கும் உள்ள வித்தியாசம் என்னவெனில், பட்டாணியர்கள், அரசுகளையும் வலுவான தலைவர்களையும் தாக்குவதற்காகவே ஒன்று சேர்ந்திருந்தார்கள். ஆனால், எல்லா இடங்களிலும் கொள்ளையடிப்பதுதான் பிண்டாரிகளின் குறிக்கோள். பட்டாணியர்கள் தங்கள் குறிக்கோளை அடைவதற்காகப் போருக்கும் முற்றுகையிடுவதற்கும் வேண்டிய பொருள்களுடன் சென்று, நிலையான இராணுவப் படையைப் போல அரசர்களிடம் அதிகாரத்திலிருப்பவர்களையும் பயமுறுத்தி, அவர்களிடமிருந்து நன்கொடை முதலிய ஆதாயங்களைப் பெற்றார்கள்,' எனக் குறிப்பிடுகிறார். முகமது ஷா கான், அமீர் கான் என்னும் தலைவர்களின் கீழ் அவர்கள் மிக்க ஆற்றலுடன் விளங்கிய அக்காலத்து ரஜபுத்திர, மராட்டியத் தலைவர்களின் கீழ் இராணுவத்தில் துணிகரச் செயல்களைச் செய்யும் வீரர்களாய்ப் பணியாற்றினார்கள். 1799 முதல் அமீர் கான் என்பவர், ஹோல்காரின் அரசாங்கத்தில் சேர்ந்து உழைத்தார். முகமது ஷா கான் 1814-ல் இறந்தவுடன், அவருடைய படைகள் அமீர் கானிடம் வந்த உடனே அவர் மிக்க ஆற்றல் உள்ளவராய் மாறினார். அதனால், நாசம் செய்தலும் கொள்ளை அடித்தலும் அதிகமாயின. கம்பெனியின் பணியாளர்கள் அந்த ஆற்றல் மிக்க பட்டாணியத் தலைவரை மற்றக் கொள்ளைக் கூட்டத்தினின்றும் பிரிப்பதற்கு முடிவு செய்தார்கள். சில பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு, 1817, நவம்பர், 9ஆம் தேதி ஒப்பந்தத்திற்கு அவர் உடன்பட்டார். ஆங்கிலேயரும், ஹோல்காரும் அவரை 'டோங்க்' (Donk) எனும் நாட்டிற்கு நவாபுவாக ஒப்புக்கொண்டனர். பிண்டாரிகளை ஒடுக்கி, அமீர் கானுடன் நட்புடன்படிக்கை செய்து கொண்டதால் அரசியற் சட்டம், பொது அமைதி, சமூக அமைதி ஆகியவைகளைக் குலைக்கும் கொடிய கொள்ளை நோயிலிருந்து இந்தியா காப்பாற்றப்பட்டது.

## (இ) இராசபுதனத்திலும் மத்திய இந்தியாவிலும் பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை ஏற்படுத்துதல்

ஹேஸ்டிங்ஸ் பிரபு கவர்னர்-ஜெனரலாய் இருந்தபோது ராஜபுதனத்திலும், மத்திய இந்தியாவிலிருந்த சில சிறிய நாடுகளின் மீதும், பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்படலாயிற்று. பதினெட்டாம் நூற்றாண்டின் ராஜபுதன வரலாறு மிகவும் துன்பமயமானது. பொதுவாகக் கூறுமிடத்து, ராஜபுதனத்தின்

தலைவர்கள், தங்கள் முன்னோர்களின் வீரத்தையும் துணிவையும் இழந்தார்கள். ஜெயப்பூருக்கும் ஜோத்பூருக்கும் இடையில் உள்ள அவர்களுடைய நாடு, அரச பரம்பரைத் தகராறுகளாலும் போலித் துணிச்சலாலும் கவரப்பட்டு, மராட்டியர்கள், பிண்டாரிகள், பட்டாணியர்கள் ஆகியவர்களின் தாக்குதலுக்கு உள்ளாகியது. இவர்களுடைய தாக்குதல்களில் குழப்பம், கொள்ளை, பொருளாதாரச் சீரழிவு, ஒழுக்கக்கேடு ஆகியவை உண்டாகி, இச்சிறந்த இனத்தை (ராஜபுத்திரர்கள்) தாழ்வு படுத்தி அழித்தது. பல இந்திய வல்லரசுகளை ஆங்கிலேயர்கள் வீழ்த்திய சமயத்தில், நொடிந்து போனதும், வரலாற்றுச் சிறப்புப் பெற்றதுமான ராஜபுதன நாடு வேறு வழியின்றி ஆங்கிலேயரின் மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்டது.

முகலாயர்களின் ஆட்சியை இந்தியாவில் நிலை நிறுத்துவதற்கு ராஜபுத்திரர்களின் நட்புறவு இன்றியமையாததாய் இருந்தது. மூன்றும் பேஷ்வாவின் கீழ் இருந்த மராட்டியர்கள், இந்தியாவில் மேலாதிக்கம் வகிப்பதற்கு அதை உபயோகப் படுத்தவில்லை. ராஜபுத்திரர்கள் 'போரில் உபயோகமற்ற இனமாய்' இருந்தாலும், ஹேஸ்டிங்ஸ் பிரபு அவர்களுடைய அவசியத்தை உணர்ந்தார். மத்திய இந்தியாவிலுள்ள கம்பெனியின் இராணுவ அரசியல் நிலைமைக்கு ராஜபுதன நாடுகளின் நட்புறவு பல முக்கிய அனுகூலங்களை விளைவிக்கும் என்றும், கம்பெனிக்கு உள்ளும் புறமுமுள்ள பகைவர்களை எதிர்ப்பதற்கும், அல்லது அவர்களிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கும், ராஜபுதனத்தின் வளத்தைக் கம்பெனி உபயோகித்துக்கொள்ள முடியும் என்றும் கவர்னர்-ஜெனரல் நம்பினர். தாய் நாட்டு அதிகாரிகளின் அனுமதியுடன், கீழ்க் காணும் ராஜபுதன நாடுகளுடன் ஒன்றன்பின் ஒன்ருகப் பேச்சு வார்த்தைகளை நடத்தித் 'தற்காப்பு ஒப்பந்தம், நிலையான நட்பு, பாதுகாப்பு, கீழ்நிலையில் கூட்டுறவு' ஆகியவைகளைக் கம்பெனியுடன் சேர்ந்ததனுல், அந்நாடுகள் பெற்றன: 1817, டிசம்பர், 26-ல், ஜலீம் சிங் (Zalim Singh) என்பவரின் கீழிருந்த கோட்டா (Kotah) அரசு, 1818, ஜனவரி, 16-ல் உதயபுரி, 1818, பிப்பிரவரி, 10-ல் புந்தி (Bundi), 1818, மார்ச்சில் ஆஜ்மீருக்கு அருகிலிருந்த கிருஷ்ணகாரும் (Krishnagarh) பிக்கானீரும், 1818, ஏப்பிரல், 2-ல் ஜெயப்பூர் உதயபூர் வமிசத்தைச் சேர்ந்ததும் குஜராத்தின் எல்லையில் இருந்ததுமான பிரதாப்கார், பன்ஸ்வாரா, துங்கர்பூர் ஆகியவைகள் முறையே 1818, அக்டோபர், 5-லும், டிசம்பர் 11-லும், 1818, டிசம்பர், 12-ல் ஜெய்சாலிமர், 1823-ல் சிரோகி (Sirohi),

ஹேஸ்டிங்ஸ் பிரபு கூறியபடி, கம்பெனியின் 'இயற்கை நட்பு நாடுகளான' ராஜபுதன நாடுகள், பாதுகாப்பை விரும்பி, இவ்விதம் சுதந்தரத்தைப் பலிகொடுத்து, பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை ஏற்றன. ராஜபுதனத்தில் 'நல்ல அரசையும் அமைதியையும் உண்டாக்கும் முக்கியக் குறிக்கோளுடனேதான் கம்பெனி, அதன் பிரச்சினைகளில் தலையிட்டது' என்று பிரின்செப் என்பவர் கூறிய வாதத்தை ஒப்புக்கொள்வது கடினந்தான். உண்மையில், அரசியல் தந்திரம், வாய்ப்பு, இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த அனுகூலங்கள் ஆகியவைகளே, ராஜபுதன நாடுகளுடன் ஹேஸ்டிங்ஸ் பிரபு கொண்ட உறவுக்கு முக்கிய நோக்கங்களாய் இருந்தன.

போபால் நவாபு 'பாதுகாப்பு, கீழ் நிலை நட்புறவு' உடன்படிக்கையைக் கம்பெனியுடன் செய்துகொண்டார். ஹோல்காருடன் செய்து கொண்ட மண்டசூர் உடன்படிக்கையின்படி, ஜாரா (Jaora) என்கிற நாடு, சுதந்தர நாடாக்கப்பட்டு, டோங்க் என்கிற நாட்டின் நவாபுவாகிய அமீர் கான் என்பவருடைய மருமானுரான கபூர் கான் என்பவர், ஸர் ஜான் மால்காமிற்குச் செய்த உதவிக்காக அவருக்குக் கொடுக்கப்பட்டது. சிறிய நாடுகளான மால்வா, பண்டல் கண்டு என்னும் நாடுகளும், பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்டன. பிரிட்டிஷ் அதிகாரிகள் அடங்கிய ஒரு குழு, இந்நாடுகளின் ஆட்சியை மாற்றி அமைக்கும் வேலையையும் ஆட்சியையும் நிலைபெறச் செய்ய உதவியது. அவ்வதிகாரிகள், மேற்குத் தக்காணத்தில் எல்பின்ஸ்டன், சென்னையில் மன்ரோ, மத்திய இந்தியாவில் மால்காம், ராஜபுதனத்தில் மெட்காப், டாட், ஆக்டர்லோனி என்பவர்கள். இந்திய வரலாற்றின் மாணவர்கள், அவர்களுட் பெரும்பான்மையோரிடம் மிக முக்கிய காரணங்களுக்காக, குறிப்பாக டாட் என்பவரின் ராஜஸ்தான் (Tod's Rajasthan), மால்காம் என்பவரின் மத்திய இந்தியாவின் குறிப்புகள் (Malcolm's Memoir of Central India) என்னும் நூல்களுக்காக நன்றியறிதல் உள்ளவர்களாய் இருப்பார்கள்.

முகலாயப் பேரரசு அழிந்ததனுல் உண்டான புதிய அரசுகள் அரசியல் மேலாதிக்கத்தைப் பெறவும் முயற்சி செய்து பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆரம்பத்திலும் வீழ்ச்சியுற்றன. பல அரசியல் இராணுவ உடன்படிக்கைகள் செய்ததனுல், பிரிட்டிஷ் ஆட்சி, இமயத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலும், சட்லெஜ் நதியிலிருந்து பிரமபுத்திரா நதி வரையிலும் வியாபித்து

இருக்கும் நாட்டிற்கு மேலாட்சியைப் பெற்ற அரசாங்கமாய் மாறியது. இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசு உண்டாவதற்காக, கிளைவ் விதை விதைத்தார்; வாரன் ஹேஸ்டிங்ஸ் அதைப் பகைவர்களிடமிருந்து பாதுகாத்தார்; வெல்லெஸ்லி பிரபு அதை வளர்த்தார்; ஹேஸ்டிங்ஸ் பிரபு அதன் பயனை அறுவடை செய்தார். வெல்லெஸ்லியின் காலத்தில் டில்லி, அயோத்தி, மைசூர், ஹைதராபாது, கருநாடகம், சூரத்து, தஞ்சாவூர் ஆகிய நாடுகள் நடைமுறையில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஹேஸ்டிங்ஸ் பிரபு மேலும் பரப்பினர். மராத்திய அரசு மறுபடியும் ஏற்படாதபடி அவர் அழித்தார்; பேஷ்வா பதவியை ஒழித்தார்; மத்திய இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஏற்படுத்தினர்; வலுவற்றனவும், தொல்லைக்குட்பட்டனவுமான ராஜபுதன நாடுகளைச் சுதந்தரத்தைக் கொடுத்துப் பாதுகாப்பைப் பெற்றுக் கொள்வதற்கு இணங்கும்படி செய்தார். முகலாய அரசு என்கிற கற்பனையைச் சட்டப்படி நீக்கியது அவர் செய்த காரியங்களில் குறிப்பிடத் தக்கது. உண்மையில் அரை நூற்றாண்டுக்கு முன்பே முகலாய அரசு நிலை பெற முடியாமல் ஒழிந்தது. அதை மறுபடியும் உண்டாக்க நினைத்த ஷா ஆலத்தின் முயற்சிகள் தோல்வியடைந்தன; பரிதாபப்படத் தக்க சூழ்நிலையில் அவர் தம் வாழ்நாளைக் கழிக்க வேண்டியிருந்தது. அவர் உதவியை நாடிச் சில சமயம் இங்கும் அங்கும் அலைபவராய், சில சமயம் பழைய பெருமையைக் காட்டும் பாழடைந்த டில்லியின் மத்தியில் அவர் இருந்தார். அவருடைய பெயரையும் ஆளுமையையும் மராட்டியர்களும், பிரெஞ்சுக்காரர்களும் தங்கள் குறிக்கோளை அடைவதற்காகப் பயன்படுத்தி, பேரரசர் மராட்டியரின் பாதுகாப்பில் இருந்தார் என்று காரணம் காட்டி, பேரரசருக்கு வங்காளம் தர வேண்டிய கப்பத்தை வாரன் ஹேஸ்டிங்ஸ் நிறுத்திவிட்டார். அவருக்குப் பின் வந்தவர்கள், முகலாயப் பேரரசர்களின் வழி வந்தவர்களுக்குக் கம்பெனி எவ்விதத்திலும் கட்டுப்பட்டிருக்கவில்லை எனத் தெரிவித்தார்கள். 1803-ல் டில்லி, பிரிட்டிஷ் அதிகாரத்தின் கீழ் வந்த பிறகு, இரண்டாம் ஷா ஆலம், 1806-ல் இறக்கும் வரையில், ஒய்வு ஊதியத்தைக் கம்பெனியிடமிருந்து பெறுபவராய் இருந்தார். அவருக்கு வாரிசான இரண்டாம் அக்பர், கம்பெனியின் நாட்டின்மீது மேலதிகாரத்தைத் தெரிவிக்கும் எல்லாச் சடங்குகளையும் விட்டுவிடுமாறு, ஹேஸ்டிங்ஸ் பிரபு என்பவரால் செய்யப்பட்டார். சிறிது காலத்திற்குப் பிறகு, முகலாயப் பேரரசுக்குப் பெயரளவில் இருந்த மதிப்பும் அழிந்தது.

# 5. பிரமபுத்திரா சட்லெஜ் நதிகளுக்கப்பாலும் பிரிட்டிஷ் டொமினியன் பரவுதல்

## 1. இக்கால அரசியல் வரலாற்றின் சில கூறுகள்

1823, ஜனவரி, முதல் தேதியன்று, இந்தியாவை விட்டுப் புறப்பட்ட ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் அருஞ்செயல்களைப் பற்றி, அவர் காலத்திலிருந்த நூலாசிரியரான பிரின்செப் என்பவர் பின் வருமாறு கூறுகிறார்: "எல்லா இடங்களிலும் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஏற்படுத்திய இப்போர், மிக முக்கியமானதும், கவனஞ் செலுத்துவதற் குரியதுமாய் இருக்கிறது; ஏனெனில், இந்தியாவில் இருக்கும் சுதேச அரசுகளுடன் நாம் தொடுத்த போரில் இறுதிப் போராய் இருக்கும் என்ற நம்பிக்கையை அது உண்டாக்குகிறது. ஆனால், நம்பிக்கை மிகுந்த இந்தத் தீர்க்க தரிசனம் முழுவதும் உண்மையானதாயில்லை. 1823ஆம் ஆண்டில், சட்லெஜ் நதியிலிருந்து பிரமபுத்திரா நதிவரையிலும் இமயத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலும் உள்ள இந்தியாவின் பெரும்பகுதியும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ் வந்தது என்பதைப்பற்றி ஐயமில்லை. ஆங்கிலேயரின் மேற்கு எல்லை, கிழக்கு எல்லை ஆகியவைகளுக்கு அப்பால், சில அரசுகள் இருந்தன. அவற்றின் நடவடிக்கைகள், முகலாயப் பேரரசுக்கு மிக்க அச்சத்தைத் தந்தன. வளரும் ஆங்கிலேயரின் அதிகாரம் அகில இந்தியப் பேரரசை, ஓர் உறுதியான, பாதுகாப்பான அடிப்படையில் அமைப்பதற்கு இவ்வரசுகளை வெற்றிகொள்வது மிக இன்றியமையாதது ஆகும். சுருங்கச் சொல்ல வேண்டுமானால், இந்நாட்டின் மேற்குக் கிழக்கு எல்லைகளை உறுதியுடன் கட்டுப்பாடு செய்யாத இந்தப் பேரரசு, ஒரு வெறுங்கனவேயாகும். சீக்கியர்கள், சிந்தியர்கள், பட்டாணியர்கள் வடமேற்கு எல்லையிலுள்ள பலூச்சிய மலைச்சாதியினர் ஆகியவர்களுடனும், கைபர்க் கணவாயை

அடுத்திருக்கும் ஆப்கானியர்களுடனும், பிரமபுத்திராவிற்குக் கிழக்கே இருந்த பர்மியர்களுடனும், அசாமியர்களுடனும், ஆங்கிலேயர்கள் போரிட நேர்ந்தபோது, இது நிரூபிக்கப் பட்டது. தவிர, புதிய அரசியல் அதிகாரத்தின் வளர்ச்சி பல விதப் பிரச்சினைகளை உண்டாக்கியது. அவர்களிடம் வெறுப்புக் கொண்டிருந்த சிலருடைய நலங்களுக்கு அவை பாதகமாய் இருந்தன. நாட்டை இணைத்துக்கொள்ளும் கம்பெனியின் கொள்கை, இதை அதிகமாக்கியது. இதனால், 1857–59-ல் ஒரு புரட்சி ஏற்படும் அளவுக்கு, ஒரு பலமான உணர்ச்சி வெடிப்பதில் அது முடிந்தது. அச்சமயத்தில், இந்தியாவில் பிரிட்டிஷ் மேலாட்சி கடுமையான சோதனைக்குள்ளாகியது. கம்பெனியின் நாட்டுக்கொள்கை, இக்காலத்தில் ஒரு புதிய மாறுதலைப் பெற்று ஒழுங்காக அமைக்கப்பட்டது.

சர் ஆல்பிரட் லையால் என்பவர் கூறுகிறார்: ‘நம் டொமினியனின் விரிவானது, நம்மை வெளியேயுள்ள ஆசியா நாடுகளுக்கு அருகில் கொண்டு வந்திருக்கிறது. இந்தியாவின் பூகோள எல்லைகளை நாம் வேகமாக அடைந்தது, நமக்குப் புதிய சிக்கல்களை உண்டாக்கியது. அதனால், நாம் புதிய இனங்களுடன் போரிடவேண்டிய நிலைமையில் இருக்கிறோம்.’ இது வரையில் கம்பெனி வெளிநாட்டுக் கொள்கை, சமீபக் கிழக்கு, மத்தியக் கிழக்கு, இந்தியா ஆகிய இடங்களில் உண்டான பிரெஞ்சு திட்டங்களையும், பேரவாவையும் தழுவியிருந்தது. நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பிறகு, பிரெஞ்சுத் தொல்லைகள் ஒழிந்தன. ஆனால், பிரான்சுக்குப் புதிய ரஷ்யா இப்பொழுது தொல்லை கொடுக்க ஆரம்பித்தது. வாட்டர்லூப் (Waterloo) போருக்குப் பிறகு, ஆசியாவில் ரஷ்யாவின் விரிவு, கிழக்கில் அதனுடைய பலவிதமான பெரிய திட்டங்கள் ஆகியவைகள், கம்பெனியின் வெளிநாட்டுக் கொள்கைகளை உண்டாக்குவதற்கு முக்கியக் கூறுகளாய் விளங்கின.

## 2. கிழக்கு எல்லையும் பர்மியப் போர்களும்

### (அ) முதலாவது ஆங்கில-பர்மியப் போர்

ஹேஸ்டிங்ஸ் பிரபு இந்தியாவை விட்டுச் சென்றபோது, மன்றத்தின் மூத்த அங்கத்தினரான ஜான் ஆடம் (John Adam) என்பவர் ஆமெர்ஸ்ட் பிரபு (Lord Amherst) வரும் வரையிலும் தற்காலிகக் கவர்னர்-ஜெனரலாக வேலை பார்த்தார். 1823, ஆகஸ்டில் ஆமெர்ஸ்ட் பிரபு இந்தியாவிற்கு வந்த உடனே

பதவியை ஏற்ருர். புதிய கவர்னர்-ஜெனரல் காலத்தில் ஏற்பட்ட முக்கிய நிகழ்ச்சி, முதலாவது ஆங்கில-பர்மியப் போர்தான்.

பதினேழாம் நூற்ருண்டு முதல், ஆங்கிலேயர்கள் பர்மாவுடன் வாணிக உறவைக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய இந்திய டொமினியனின் வளர்ச்சியும், அதே சமயத்தில், அரகான் (Arakan), பெகு (Pegu), சிட்டகாங்கிற்குத் தெற்கிலுள்ள டெனசரிம் (Tenasserim) ஆகிய இடங்களின்மீது திபெத்திய-சீன இனத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் ஆட்சியை ஏற்படுத்தியதும், பத்தொன்பதாம் நூற்ருண்டில் இவ்விரண்டு நாடுகளையும், அரசியல் உறவு கொள்ளுமாறு செய்தன. 1750-ல் அலோம்ப்ரா (Alompra) எனும் பர்மியத் தலைவர், ஐராவதியின் கழிமுகத்தில் இருக்கும் பெகு (Pegu) மாகாணத்தைத் தைலங்கரிடமிருந்து (Tailangas) வென்று, ஒரு வலிய ஆட்சியை உண்டாக்கிஞர். அவரது வழியுரிமை பெற்று 1779 முதல் 1819 வரை ஆட்சி செய்த போதாவ்பயாவும், அவருக்குப் பின்னர் ஆட்சி செய்த பாகீதா (Hpagyidoa) என்பவரும், எல்லாத் திசைகளிலும் தங்கள் நாட்டை விரிவுபடுத்திஞர்கள். 1766-ல் சயாமிடமிருந்து டெனசரிம் என்ற இடத்தைப் பர்மியர் கைப்பற்றினர்; அதுவரையில் சுதந்தரமாய் இருந்த அரகான் (Arakan) என்கிற நாட்டை 1784-ல் அடிமைப்படுத்திஞர்கள். 1813-ல் சுர்மா (Surma)ப் பள்ளத்தாக்கின் அருகே இருந்த மணிப்பூர் என்பதைக் கைப்பற்றிஞர்கள். 'சரியாக வரையறுக்கப்படாததும், அடிக்கடி மாறிக்கொண்டு வந்ததுமான கம்பெனி டொமினியனின் கிழக்கு எல்லையை நோக்கி, பர்மியர்கள் முன்னேறியது, ஆங்கில-பர்மியப் போரை உண்டாக்கியது. ஆஞல், கம்பெனி இந்தியாவின் மற்றப் பகுதிகளில் ஈடுபட்டிருந்ததால், கல்கத்தா அரசு முதலில் போர் நிகழாமல் தடுப்பதற்காக, பர்மாவிற்குப் பல தூதுவர்களை அனுப்பி வைத்தது. 1795லும் 1802லும் கேப்டன் சிம்ஸ் (Symes); 1797-ல் கேப்டன் காக்ஸ் (Cox); 1803, 1809, 1811 ஆகிய ஆண்டுகளில் கேப்டன் கானிங் (Canning) என்னும் இத்தூதுவர்கள் சரியாக நடத்தப்படவில்லை. அதஞல், அத்தூதுக் குழுக்களும் தோல்வியை அடைந்தன. பர்மாவிலிருந்து தப்பி ஓடியவர்களை அனுப்பும்படி பர்மா வேண்டிய போது, அக்கம்பெனியின் ஆட்சி மறுத்ததால், இவ்விரு நாட்டிற்கும் இடையே இருந்த உறவு மிக மோசமாகியது. பர்மியர்களால் கைப்பற்றப்பட்ட இடங்களிலிருந்து தப்பி ஓடியவர்கள், ஆங்கிலேயரின் எல்லையில் தஞ்சம் பெற்று,

இப்புதிய நிலைகளிலிருந்து பர்மியப் பிரதேசத்தைத் தாக்கினார்கள். பிண்டாரியர்களை ஆங்கிலேயர்கள் ஒடுக்கிக் கொண்டிருந்தபோது, அவாவின் (Ava) அரசர், ஹேஸ்டிங்ஸ் பிரபுவுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

இடைக்காலத்தில், அரகான் அரசருக்குக் கப்பம் செலுத்திய சிட்டகாங், டாக்கா, முர்ஷிதாபாத், காசிம் பஜார் என்னும் இடங்களைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு அதில் அவர் கேட்டிருந்தார். இக்கடிதத்தை ஹேஸ்டிங்ஸ் பெறுவதற்கு முன்பே, பிண்டாரியர்களின் தொல்லைகள் ஒழிக்கப் பட்டுவிட்டன. ஒருவேளை அது கள்ளக் கையெழுத்தாய் இருக்கலாம் என்ற குறிப்போடு, அக்கடிதத்தைக் கவர்னர்-ஜெனரல் பர்மிய அரசாங்கத்திற்குத் திருப்பி அனுப்பி விட்டார்.

ஆனால், 1821-1822-ல் பர்மிய இராணுவத் தலைவர்கள், அசாமைக் கைப்பற்றியதால், வடகிழக்கில் சரியாக வரையறுக்கப்படாத பிரிட்டிஷ் எல்லையுடன் நேராகவே தொடர்பு கொண்டார்கள். அதன் பிறகு 1823, செப்டெம்பரில், கம்பெனிக்கு உரிமையானதும், சிட்டகாங்கிற்கு அருகில் உள்ளதுமான ஷாபுரி (Shapuri)த் தீவைக் கைப்பற்றி அங்கிருந்த பிரிட்டிஷ் காவலாளிகளை துட்பட்லி (Dudpatli) என்ற இடத்திற்குத் துரத்தி, வங்காளத்திலிருந்த கம்பெனியின் பிரதேசங்களைத் தாக்குவதற்கு ஏற்பாடுகளைச் செய்தனர். இதை ஆங்கிலேயர்களால் பொறுத்துக்கொள்ள இயலவில்லை. அதனால், ஆமெர்ஸ்ட் பிரபு என்னும் கவர்னர்-ஜெனரல் 1824, பிப்ரவரி, 24-ல் அவர்கள்மீது போர் தொடுத்தார். பர்மா நாட்டின் இயற்கை அமைப்பும், பர்மியர்களுக்குச் சிறந்த பாதுகாப்பைக் கொடுத்தது. அந்நாடு காடுகளும் சதுப்பு நிலங்களும் கொண்ட ஒரு பரந்த சமவெளியாகும். அதில் சரிகை போன்று நீள வாட்டத்தில் செல்லும் மலைத் தொடர்களும், ஐராவதி, சிட்டாங் (Sittang), சால்வீன் (Salween) ஆகியவைகளின் பள்ளத்தாக்குகளும் உள்ளன. நன்றாகப் பயிற்சியளிக்கப்பட்ட பிரிட்டிஷ் துருப்புகளுடன், பர்மிய வீரர்கள், நேருக்கு நேராய் நின்று போரிட முடியா விட்டாலும், சீக்கிரத்தில் மரங்களைக் கொண்டு குவிப்பதிலும், 'மண் சுவர்களைக் கொண்டு அரண் அமைப்பதிலும்,' துப்பாக்கிக் குழிகளைப் பறிப்பதிலும் கைதேர்ந்தவர்கள். ஆங்கிலேயரின் திட்டம் இரங்கூன் நகரத்தைக் கடலில் இருந்து தாக்குவதுதான். சர் ஆர்ச்சிபால்ட் கேம்பெல் (Sir Archibald

Campbell) என்பவர் தலைமையின்கீழ், சென்னையிலிருந்து சேர்க்கப்பட்ட 11,000 வீரர்களையும், நாவலாசிரியரான கேப்டன் மாரியட் (Marryat) என்பவரின் கீழ்க் கப்பல்களையும் கொண்ட ஒரு படையை அவர்கள் அனுப்பினார்கள்.

அசாமிலிருந்த பர்மியர்களை ஆங்கிலத் துருப்புகள் வெளியேற்றின. ஆனால், வங்காளத்தின்மீது படையெடுக்கும் நோக்கத்துடன் முன்னேறிய பந்துலா (Baudula) எனும் பர்மியரின் ஆற்றல் வாய்ந்த தளபதி, சிட்டகாங் எல்லையிலுள்ள இராமு (Ramu) என்னும் இடத்தில் ஒரு பிரிட்டிஷ் படைப் பகுதியைத் தோற்கடித்தார். இப்படியிருந்தும், ஆங்கிலேயர்கள் இரங்கூனைத் தாக்கினார்கள். அந்நகரத்தை 1824, மே, 11-ல் கேம்பெல் என்பவர் கைப்பற்றினார். அந்நகரத்தார் ஆக்கிரமிப்பாளர்களைத் தாக்காமல், பெகு காட்டிற்குள் எல்லாப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு ஓடிவிட்டனர். உணவுப் பொருள் கிட்டாததால், பிரிட்டிஷ் துருப்புகள் மிகவும் துன்பத்திற்குள்ளாயின. மழை காரணமாக அவ்விடம் ஆரோக்கியமற்று அவர்கள் துன்பங்களை அதிகப்படுத்தியது. மழைக்காலம் முடியும் வரையில் அவர்கள் துன்பம் மிகக் கொடுமையாய் இருந்தது. இடையில், பர்மியர்களுக்கு உதவி செய்வதற்காக, பந்துலா என்பவர் திரும்பி வரும்படி கட்டளையிடப்பட்டார். டிசம்பர் முதல் நாள், 60,000 வீரர்களுடன் அவர் இரங்கூனை அடைந்தார். டிசம்பர் 15-ல் அவர் தோற்கடிக்கப்பட்டதால், தானப்யூ (Donabew) என்னுமிடத்திற்குப் பின் வாங்கினார். அவ்விடத்தை 1825, ஏப்ரல் ஆரம்பம் வரையில், வெற்றிகரமாகப் பாதுகாத்தார்; அவ்விடத்தில் எதிர்பாராத விதமாகக் குண்டு அடிபட்டு இறந்தார். உண்மையில் பர்மியர்களுக்கு இது ஒரு பெரிய நஷ்டந்தான். கீழ்ப் பர்மாவின் தலைநகரான புரோம் (Prome) என்னுமிடத்தைக் கேம்பெல் ஏப்ரல், 25-ல் கைப்பற்றி மழைக் காலத்தை அவ்விடத்தில் கழித்தார். சமாதானத்திற்கான பேச்சுவார்த்தைகள் முரிந்த உடனே, 1825ஆம் ஆண்டின் இறுதியில், போர் மறுபடியும் தொடங்கியது. பர்மியரின் எதிர்ப்புகளை முரியடித்த பிரிட்டிஷ் துருப்புகள், பர்மாவின் தலைநகருக்கு அறுபது மைலில் இருந்த யாண்டபூ (Yandaboo) என்னும் இடத்தை நோக்கி முன்னேறின. 1824, பிப்பிரவரி, 24-ல் பர்மியர்கள் ஒரு சமாதான உடன்படிக்கையைச் செய்துகொண்டார்கள். கேம்பெல் என்பவரால் அதன் நிபந்தனைகள் கூறப்பட்டன. அதன்படி, அவாவின் அரசரிடமிருந்து ஒரு கோடி ரூபாயை ஆங்கிலேயர்கள் இழப்பீடாகப் பெற்றார்கள்.

அரக்கான், டெனசெரிம், நிலப்பகுதிகளையும் பர்மியர்கள் விட்டுக் கொடுத்தார்கள். அஸ்ஸாம் கச்சார் (Cachar) ஜெயின்டியா (Jaintia) ஆகிய இடங்களில் தலையிடுவதில்லை என்றும் பர்மியர்கள் உறுதி கூறினார்கள்; மணிப்பூரைச் சுதந்தர நாடாக ஒப்புக்கொண்டார்கள்; 'ஒருவருக்கொருவர் உதவி செய்யும் கொள்கையின் மீது' ஓர் வாணிக உடன்படிக்கை ஏற்பட்டது; அவாவில் பிரிட்டிஷ் ரெசிடென்டு ஒருவரும், கல்கத்தாவில் பர்மியத் தூதுவர் ஒருவரும் இருப்பர். 1826, நவம்பர், 23-ல் திருப்தியற்ற வாணிக உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது. 1830 வரை பிரிட்டிஷ் ரெசிடென்டு அனுமதிக்கப் படவில்லை. 1830 முதல் 1840 வரை, மேஜர் புர்னே (Burney) என்பவரும் கர்னல் பென்சன் (Benson) என்பவரும், வெற்றிகரமான முறையில் ரெஸிடென்டுகளாய்ப் பணியாற்றினார்கள். பாகீதா அரசர், மனநோயால் பீடிக்கப்பட்டு, 1837, மே மாதத்தில், ஆட்சியிலிருந்து விலக்கப்பட்டு, இறக்கும் வரையில் பாதுகாப்பான இடத்தில் வைக்கப்பட்டார். அவருக்குப் பிறகு அவர் சகோதரரான தாராவட்டி (Tharrawaddy) என்பவர் அரசரானார்.

முதலாவது ஆங்கில-பர்மியப் போரில், ஆங்கிலேயர் முக்கிய அனுகூலங்களைப் பெற்றனர் என்பதில் ஐயமில்லை. பர்மியக் கடற்கரையைப் பர்மியர்களிடமிருந்து பெற்றுக் கொண்டதுடன், அஸ்ஸாம், கச்சார், மணிப்பூர் ஆகியவற்றையும் பெற்றுக்கொண்டார்கள். சாதாரணமான திறமையுடையவரும் உறுதியான முரண்பாடில்லாத கொள்கையைப் பின்பற்ற முடியாதவருமான கவர்னர்-ஜெனரல், சமயத்திற்குத் தக்கவாறு உடனடி நடவடிக்கை எடுக்கத் தவறிய தளபதிகள் ஆகியவர்களின் ஆற்றலற்ற தன்மையினாலும் தவறுகளாலும் அப்போரில் ஆங்கிலேயர்கள் ஏராளமான வீரர்களையும் பணத்தையும் இழக்க நேரிட்டது. சென்னையின் கவர்னரான **சர் தாமஸ் மன்ரோ** (Sir Thomas Munro) என்பவர் உடனே போர் வீரர்களையும் உணவுப் பொருள்களையும் அனுப்பியதால், பர்மாவிலிருந்த பிரிட்டிஷ் துருப்புகள் அதிக இன்னல்கள் இல்லாமலும், அதிக தோல்விகள் அடையாமலும் தப்பின. இறுதியில் தோல்வி அடைந்தாலும், பர்மியத் துருப்புகள், பயர் (Phayre) கூறியபடி, வெற்றி பெற முடியாத நிலைமையில் போரிட்டன. ஆக்கிரமிப்பாளர்களை வீரத்துடன் எதிர்த்த செயலுக்கும், திறமையாகக் கிராதிகள் இட்டு வேலிகளை அமைத்ததற்கும் அவற்றை நாம் போற்ற வேண்டும். தகுதி பெற்ற நூலாசிரியர் ஒருவர் பின் வருமாறு

கூறுகிறார்: 'தானப்பூவின் நிலைமை பாதுகாப்பு ஆகியவற்றுக்குத் தற்காலிக அரண் அமைத்துப் பாதுகாத்த செயல், மிக்க விஞ்ஞான அறிவு படைத்த எஞ்சினியருக்கும் பெருமை தரக்கூடியது!'

பர்மாவில் ஆரம்பத்தில் ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட தோல்விகளையும் துன்பங்களையும் கண்ட சிலர், ஆங்கில டொமினியன் அழியக்கூடிய நிலையில் இருக்கிறது என உறுதியாக நம்பினர். இவ்வெண்ணம், சில இடங்களில் கலகங்கள் உண்டாவதற்குக் காரணமாயிருந்தது. பரத்பூரில் அரசர் இறந்தாலும், அவர் தம் இளைய குமாரர் டில்லியில் பிரிட்டிஷ் ரெசிடென்டாய் இருந்த சர். டேவிட் ஆக்டர்லோனி என்பவரின் சம்மதத்துடன் ஆட்சிப் பீடமேறினார். ஆனால், இதை அவருக்கு உறவினரான துர்ஜன் சால் (Durjan Sal) என்பவர் எதிர்த்தார். ஆமெர்ஸ்ட் பிரபு, முதலில் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றி, படையின் பலத்தைக் கொண்டு தமது முடிவைச் செயற்படுத்த நினைத்த சர் டேவிட் ஆக்டர்லோனியின் நடத்தையை ஆதரிக்கவில்லை. அதனால், ஆக்டர்லோனி பதவியை விட்டு விலகினார். அப்பதவிக்குச் சர் சார்லஸ் மெட்காப் (Sir Charles Metcalfe) என்பவர் நியமிக்கப்பட்டார். வயது முதிர்ந்து உடல் நலமில்லாமல் இருந்த சர் டேவிட் ஆக்டர்லோனி, சீக்கிரமே இறந்தார். சர் சார்லஸ் மெட்காப் என்கிற புதிய ரெசிடென்ட், உரிமையின்றி ஆட்சியைக் கைப்பற்றியவரை எதிர்த்து ஆங்கில ஆட்சியின் பெருமையை நிலைநாட்ட வேண்டுமென்று வற்புறுத்தி, அதற்கு கவர்னர்-ஜெனரலின் அனுமதியைப் பெற்றார். 1805-ல் லேக்குப் பிரபு என்பவரின் தாக்குதலை வெற்றிகரமாகச் சமாளித்த பரத்பூர்க் கோட்டையைக் காம்பர்மீர் பிரபு (Lord Combermere) என்பாரின் தலைமையில் அனுப்பப்பட்ட படை 1826, ஜனவரியில் தாக்கியது. துர்ஜன் சால் என்பவர் பிடிக்கப்பட்டு, நாடு கடத்தப்பட்டார். பாரக்பூரில் (Barrackpore) நடந்த சிப்பாய்களின் கலகம், மற்றொரு குறிப்பிடத்தக்க குழப்பம். 'ஆங்கிலேயர்கள் பீரங்கிகளைக்கொண்டு, கலகம் செய்த படைப் பகுதிகளைத் தாக்கி, அணி வகுப்பு நடக்கும் இடத்தைக் கொலைக்களமாக மாற்றிய பிறகுதான், அக்கலகம் அடங்கியது.'

## (ஆ) இரண்டாவது ஆங்கில பர்மியப் போர்

இந்தியாவின் கிழக்கு எல்லையில், உறுதியான ஆங்கில ஆதிக்கம் ஏற்படுவதற்கு முதலாவது ஆங்கில-பர்மியப்

போரில் கிடைத்த ஆதாயங்களைவிட வேறு சில ஆதாயங்களையும் பெறவேண்டியிருந்தது. பர்மாவின் புதிய அரசரான தாராவட்டி (1837–1845) யாண்டபூ உடன்படிக்கை தம்மைக் கட்டுப்படுத்தாது என அறிவித்தார். மரபின்படி, அவரது செய்கை 'பர்மிய அரசியல் அமைப்பு விதிகளின்படி சரியானது. அதன்படி புதிய அரசர் பதவிக்கு வந்ததும் அப்பொழுது இருக்கும் எல்லா உரிமைகளும், அவர் மறுபடியும் உறுதிப்படுத்தினாலன்றி, தவணை கடப்பாக எண்ணப்படும்.' மற்ற வழிகளாலும் பாதிக்கப்பட்ட ஆங்கிலேயரின் நலங்கள், இதனால் மிகப் பாதிக்கப்பட்டது. அவாவிலிருந்த பிரிட்டிஷ் ரெசிடென்டுகள் இழிவாக நடத்தப்பட்டதால், 1840-ல் இறுதி முறையாக, ரெசிடென்டும் வெளியேறினார். 1826ஆம் ஆண்டு உடன்படிக்கையின்படி பர்மாவின் தெற்குக் கடற்கரையில் குடியேறிய பிரிட்டிஷ் வணிகர்கள் இரங்கூன் கவர்னர் தங்களைக் கொடுமைப்படுத்துவதாகக் கூறினார்கள். கல்கத்தா அரசு இதில் தலையிட்டு, தங்கள் குறைபாடுகளைத் தீர்த்துவைக்க வேண்டுமென்று அவ்வணிகர்கள் முறையிட்டார்கள். பிரிட்டிஷ் வணிகர்களின் நட்டத்திற்கு ஈடுபெறும் எண்ணத்துடனும், இரங்கூன் கவர்னரை நீக்குவதற்காகவும், பாகன் (Pagan) என்கிற புதிய பர்மிய அரசரிடம் (1845–1852) மோடார் லாம்பெர்ட் (Lambert) என்பவர் தலைமையில் ஒரு போர்க்கப்பலை டல்ஹௌசி அனுப்பினார். தாராவட்டி மன மாருட்டம் அடைந்தார் என்று கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட்டதால், அவர் மைந்தர் பட்டத்திற்கு வந்தார். கவர்னர்-ஜெனரல் உண்மையிலேயே சமாதான உடன்படிக்கையை அவர் விரும்பியிருந்தால், கமோடாரை அனுப்பிய பிறகும் அவர் எண்ணம் ஈடேறவில்லை. ஏனெனில், அவசியமில்லாமல் ஆத்திரம் ஊட்டும் செய்கையாக, அது கருதப்பட்டது. 'இந்த கமோடார்கள் (கப்பற்படை அதிகாரிகள்) பேச்சு வார்த்தை நடத்துவதற்குத் தகுதியற்றவர்கள்,' என டல்ஹௌசியே பின்பு கூறியிருக்கிறார்.

பர்மிய அரசர் போரைத் தடுக்க நினைத்து, லாம்பர்ட் கோரியவைகளுக்கு மரியாதையான பதிலை அனுப்பி, பழைய கவர்னரை நீக்கி, அவ்விவகாரத்தைச் சமாதான முறையில் தீர்ப்பதற்கு ஒரு புதிய அதிகாரியையும் அனுப்பினார். ஆனால், பெரிய கப்பற்படை அதிகாரிகளின் குழுவொன்று, புதிய கவர்னரைக் காணச் சென்றபோது, அவர் தூங்குகிறார் என்ற காரணம் காட்டி, அவர்கள் கவர்னரைப் பார்க்க இயலாதபடி தடுக்கப்பட்டபோது, தமக்கு அவமானம் நேர்ந்ததாக

அப் பிரிட்டிஷ் கமோடார் கருதி, இரங்கூன் துறைமுகம் முற்றுகையிடப்பட்டது என அறிவித்து, பர்மிய அரசருக்குச் சொந்தமான ஒரு கப்பலைக் கைப்பற்றினர். இதனால் பர்மிய பீரங்கிகள், பிரிட்டிஷ் போர்க் கப்பலின்மீது குண்டுகளைப் பொழிந்தன. பிரிட்டிஷ் கமோடாரும், திருப்பிச் சுட்டார்.

லாம்பர்ட் என்பவர், கவர்னர்-ஜெனரல் கட்டளையை மீறி நடந்தார் என்பதும், அதனால் அவர் பதற்றத்தைக் கவர்னர்-ஜெனரல் கண்டித்தார் என்பதும், சில பத்திரங்களிலிருந்து தெரிய வருகின்றன. ஆனால், அவர் கமோடாரின் செய்கையை ஆதரிக்காமல் விட்டுவிடவில்லை. அச்செய்கைக்கான பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு ஈடு கேட்டும், 1852, ஏப்பிரல், 1-ல் 100,000 பவுன்களை இழப்பீடாகக் கொடுக்கும்படியும், பர்மிய ஆட்சிக்கு ஓர் இறுதி எச்சரிக்கை விடுத்தார். முதலாவது ஆங்கில-பர்மியப்போரில் ஏற்பட்ட தவறுகள், மறுபடியும் நிகழாதவாறு தடுப்பதற்காக, அதே சமயம், அண்மையில் ஏற்படவிருக்கும் பர்மியப் போருக்கான ஏற்பாடுகள், அவருடைய சொந்தத் தலைமையின்கீழ், மிக்க ஊக்கத்துடன் செய்யப்பட்டன. அவரது இறுதி எச்சரிக்கைக்கு ஒருவிதமான பதிலும் இல்லை. 1852, ஏப்பிரல், 1ஆம் தேதி எச்சரிக்கையில் குறிப்பிட்ட காலம் கடந்துவிட்டமையால், முதல் ஆங்கில-பர்மியப்போரில் ஈடுபட்ட இணையற்ற வீரரான ஜெனரல் காட்வின் (Godwin) அட்மிரல் ஆஸ்டின் (Austin) என்பவர்கள் தலைமையில் ஒரு பிரிட்டிஷ் படை, இரங்கூனை அடைந்தது. சீக்கிரமே மார்ட்டாபன் (Martaban) வீழ்ந்தது; ஏப்பிரல், 14-ல், இரங்கூனில் இருந்த பிரபல கோயில் தாக்கப்பட்டது; ஒரு மாதத்திற்குப் பிறகு, ஐராவதிக் கழிமுகத்தின் வடமேற்கு மூலையிலிருந்த பாசீன் (Bassein) என்ற இடமும் பிடிபட்டது. செப்டெம்பரில், டல்ஹௌசி இரங்கூனுக்குச் சென்றார். அக்டோபரில் புரோம் என்ற நகரமும், நவம்பரில் பெகு (Pegu) என்ற நகரமும் கைப்பற்றப்பட்டன. மேல் பர்மாவிற்குள் முன்னேற விரும்பாமல் ஆங்கிலேயர்கள் கீழ்பர்மாவில் கைப்பற்றிய இடங்களை, பர்மிய அரசர், சட்டபூர்வமான உடன்படிக்கைமூலம் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று, கவர்னர்-ஜெனரல் நிபந்தனைகளை விதித்தார். இதை பர்மிய அரசர் மறுத்ததால், 1852, டிசம்பர், 20-ல், ஒரு பிரகடனம் மூலம், பெகு அல்லது கீழ்பர்மாவை அவர் இணைத்துக் கொண்டார்.

பெகு என்னுமிடத்தை இணைத்துக்கொண்டதால், பிரிட்டிஷ் இந்தியப் பேரரசு, சால்வீன் (Salween) நதிக்கரை வரையிலும் பரவியது. வங்காள விரிகுடாவின் கிழக்குக் கடற்கரை முழுவதிலும் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டது. தளர்ச்சியடைந்த பர்மிய அரசு, கடலுடன் தொடர்பு கொள்ள முடியாதவாறு, வழி அடைக்கப்பட்டது. புரோமுக்கு அப்பால் வடக்கில் ஐம்பது மைலில் இருந்த மையிடே (Myede) வரையிலும் பரவியிருந்த புதிதாகப்பெற்ற பிரிட்டிஷ் மாகாணத்திற்கு மேஜர் (பின்பு சர்) ஆர்தர் பயர் என்பவர் கமிஷனராக நியமிக்கப்பட்டார்; கேப்டன் (பின்பு ஜெனரல்) பிட்ஷ் (Fytche) என்பவரின் உதவியுடன், அவசியமான சீர்திருத்தங்களை அவர் ஆட்சியில் புகுத்த முயன்றார்.

## 3. சீக்கியர்களுடன் ஆங்கிலேயரின் உறவும் பஞ்சாபைச் சேர்த்துக்கொள்ளுதலும்

### (அ) சீக்கிய அரசின் எழுச்சி

1708ஆம் ஆண்டிலிருந்து, 1716ஆம் ஆண்டு வரை, பண்டா (Banda) என்கிற மதச் சார்பற்ற தலைவர்களின்கீழ், சுதந்தரத்தைப் பெறுவதற்கான சீக்கியர்களின் போராட்டம், 1716ஆம் ஆண்டின் இறுதியில் தோல்வியுற்றது. முகலாயர்களால், பண்டாவைச் சித்திரவதை செய்து கொன்று விட்டார்கள். அவரைப் பின்பற்றியவர்களை இரக்கமின்றி மிகக் கொடுமைப்படுத்தினர். ஆனால், இந்த அடக்குமுறை, கால்சாவின் (Khalsa) இராணுவ மனப்பான்மையை முற்றிலும் நீக்க முடியவில்லை. டில்லிப் பேரரசின் வலுவற்ற தன்மை, தங்களைத் திருத்தி அமைத்துக்கொள்ளச் சீக்கியர்களுக்கு ஒரு சந்தர்ப்பத்தை அளித்தது. 1739-ல் ஏற்பட்ட நாதிர் ஷா (Nadir Shah) வின் படையெடுப்பும், அப்தாலியின் (Abdali) முதல் மூன்று தாக்குதல்களும் (1748–1752) பஞ்சாபிலிருந்த முகலாயர்களின் ஆதிக்கத்தை வலுவிழக்கச் செய்து, அம்மாகாணத்தைக் குழப்பத்தில் ஆழ்த்தின. இவை, சீக்கியர் செல்வந்தராக மாறுவதற்கும், இராணுவ அதிகாரத்தையும் அரசியல் ஆதிக்கத்தையும் அதிகரிப்பதற்கும் உதவின. சில ஆண்டுகளில் அவர்கள் 'வரிசையாகப் பெற்ற தோல்விகளை முழு வெற்றிகளாக மாற்றினார்கள்.' அவர்களை ஒடுக்க நினைத்த அப்தாலியின் படையெடுப்புகளை அவர்கள் முறியடித்தார்கள். பானிப்பட்டில் அப்தாலி அடைந்த வெற்றிக்குப் பிறகும், அவரைச் சீக்கியர்கள் எதிர்த்தார்கள். தாய் நாடு திரும்புவதற்காக,

1762, டிசம்பர், 12-ல், அவர் லாகூரைவிட்டுப் புறப்பட்டபோது, சீக்கியர்கள் அவரைப் பின் தொடர்ந்து சென்று தாக்கி, எல்லா வழிகளிலும் அவருக்குத் தொல்லை விளைத்தார்கள். பஞ்சாபிலிருந்த அப்தாலியின் அதிகாரிகளின் ஆற்றலற்ற தன்மை, சீக்கியர்களின் தாக்குதல்களால் அதிகமாகியது. அவர்கள் 1764-ல் லாகூரைக் கைப்பற்றினார்கள். 'முந்திய ஆண்டில் சார்ஹிண்ட் (Sarhind) சமவெளியைப் பங்கிட்டது போல, ஜீலம் (Jhelum) நதியிலிருந்து சட்லெஜ் (Sutlej) நதி வரையில் இருந்த முழுநாட்டையும் சீக்கியத் தலைவர்களும், அவர்களைப் பின்பற்றியவர்களும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள்.' அவர்கள் அமிர்தசரசில் (Amritsar) கூடி, தங்களுடைய சுயேச்சையான நாடு, சமயம் ஆகியவை ஆட்சி செய்வதைப் பிரகடனப்படுத்தினார்கள். குருகோவிந்த சிங், நானக்கிடமிருந்து டேக், டெக், படே (Degh, Tegh, Fateh) அதாவது, பண்பு, அதிகாரம், விரைவான வெற்றி (Grace, Power, rapid victory) ஆகியவைகளைப் பெற்றார் என்பதற்கு அடையாளமாக, நாணயங்களை வெளியிட்டனர். 1767-ல் கடைசியாக அஹமதுஷா அப்தாலி இந்தியாவைவிட்டு வெளியேறியதும், அவருக்கு வலுவற்ற வாரிசான தைமூர் ஷா (Timur Shah) என்பவரிடமிருந்து இந்தியாவில் அவர் கைப்பற்றிய இடங்களைச் சீக்கியர்கள் பறித்துக்கொண்டார்கள். 1773ஆம் ஆண்டில், சீக்கியர்களின் ஆட்சி கிழக்கே ஷாரன்பூரிலிருந்து (Shahranpur) மேற்கே அட்டோக் (Attock) வரையிலும், தெற்கில் மூல்தானிலிருந்து வடக்கில் கங்ரா, ஜம்மு (Khangra, Jammu) வரையிலும் பரவியிருந்தது.

இவ்விதம் சீக்கியர்கள் சுதந்தரத்தைப் பெற்றுத் தங்களைப் பன்னிரண்டு மிஸ்ல் (Misls) என்னும் கூட்டு ஆட்சிகளாக அமைத்துக் கொண்டார்கள். அவை, பங்கி, கான்ஹேயா, சுகெர்சக்யா, நாகாய், பைசுல்லாபுரியா, அலுவாலியா, ராம்கார்கியா, தலேவாலியா, கரோரா சிங்கியா, நிஷன்வாலா, சாகீத்தும் நிகாங்கும், புல்கியா (The Bhangi, the Kanheya, the Sukerchakia, the Nagai, the Fyzullapuria, the Aluwalia, the Ramgarhia, the Dalewalia, the Karora Singhia, the Nishanwala, the Sahid and Nigang, and the Phulkia) என்பவை. சீக்கியர்களின் இந்த அமைப்பு 'மதச்சார்பற்ற கூட்டாட்சியான நிலமானிய முறை' (theocratic confederate feudalism) எனக் கூறப்படுகிறது. பொதுப் பகைவன் மறைந்ததும் பொறாமையும் வெறுப்பும் சீக்கியக் கூட்டாட்சியிலிருந்த தலைவர்களுக்குள்ளே எழுந்தன. இந்தியாவில்

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் விரைவாகப் பரவிக்கொண்டிருந்தபோது, ஒருவரை ஒருவர் தாக்கும் கொள்கைகளை அத்தலைவர்கள் பின்பற்றினார்கள். நிலமானிய முறையை அழித்து, ஒரு தேசிய அரசாங்கமாகச் சீக்கியர்களை அமைத்தது, ரஞ்சித் சிங் என்கிற ஒருவரைச் சார்ந்தது. சீக்கிய, ஆங்கிலேய உறவைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன்னே, ரஞ்சித் சிங்கின் எழுச்சியைப்பற்றிச் சுருக்கமாக அறிய வேண்டும்.

## (ஆ) ரஞ்சித் சிங்

1780ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், 2ஆம் நாள் ரஞ்சித் சிங் பிறந்தார். சுகர்சாகியாக் கூட்டரசின் தலைவரான மகா சிங் (Maga Singh) என்பவர், ஜிண்ட் (Jhind) குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணை மணந்து ரஞ்சித் சிங்கைப் பெற்றார். சிவாஜியைப்போல ரஞ்சித் சிங் தமது ஆரம்ப வாழ்க்கையை உணர்ச்சியைத் தூண்டும் சூழ்நிலையில் நடத்தவில்லை. 1792-ல் அவர் தகப்பனார் இறந்தபோது, அவர் பன்னிரண்டு வயதுடைய சிறுவராயிருந்தார். சிறந்த தலைவர் பலர் இருக்கையில் சிறிய நாட்டையும், மிகக் குறைந்த அளவுள்ள இராணுவ வளத்தையும் பெற்று, ஒரு சிறிய கூட்டாட்சிக்கு அவர் தலைவராய் இருந்தார். 1793–1798-ல், காபூலின் அரசரான ஜாமன் ஷா (Zaman Shah) இந்தியாவின்மீது படையெடுத்து வந்தது, ரஞ்சித் சிங்கின் வாழ்க்கையில் முடிவான செல்வாக்கை உண்டாக்கியது. ஜாமன் ஷா ரஞ்சித் சிங்கிடமிருந்து குறிப்பிடத்தக்க உதவிகளைப் பெற்றதால், அவற்றிற்குக் கைம்மாறாக, ரஞ்சித் சிங்கை அவரது பத்தொன்பதாவது வயதில் லாகூரின் கவர்னராக நியமித்து, 1798-ல் 'ராஜா' என்னும் பட்டத்தையும் அவருக்குக் கொடுத்தார். ஆப்கானிய அரசரால் கொடுக்கப்பட்ட இப்பதவி, திகைப்பையுண்டாக்கும் வெற்றிகரமான இராணுவ வாழ்க்கையின் ஆரம்பத்தைக் குறித்தது; தீவிரமிக்க அவருடைய செயல்கள் பஞ்சாபிலிருந்த ஆப்கானிய மேலாட்சியை ஒழித்து, வலிய சீக்கிய தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்கு உதவியது. பஞ்சாபில் ஆதிக்கம் பெறுவதற்காக, ஜாமன் ஷாவின் முன்னோரான பேராசைகொண்ட அஹமது ஷா அப்தாலி என்கிற அரசரை எதிர்த்தார். சீக்கியர்கள் கடுமையாகப் போரிட்டது கவனிக்கத் தக்கது. மிகு விரைவிலேயே, ஆப்கானியரின் மேலாட்சியை ரஞ்சித் சிங் உதறித் தள்ளி,

சட்லெஜ் நதிக்கு அப்பால் இருந்த சீக்கியக் கூட்டாட்சிக்குள் இருந்த பிளவுகளையும் தகராறுகளையும் உபயோகப்படுத்தி, படிப்படியாக அவற்றைத் தம் நாட்டுடன் சேர்த்துக்கொண்டார். 1805-ல், லேக்குப் பிரபுவால் துரத்தப்பட்ட ஹோல்கார், ரஞ்சித் சிங்கின் உதவியை நாடினர். ஆனல், இச் சீக்கியத் தலைவர் அதற்கு இணங்கவில்லை. 1806, ஜனவரி, 1-ல் செய்யப்பட்ட உடன்படிக்கையால, ரஞ்சித் சிங், இந்தப் புதிய தொல்லையிலிருந்து விடுபட்டார். இந்த உடன்படிக்கை, ஹோல்காரைப் பஞ்சாபிலிருந்து விலக்கியது. அதனல், சட்லெஜ் நதிக்கு வடக்கே யிருந்த நாடுகளைக் கைப்பற்றுவது ரஞ்சித் சிங்கிற்கு மிக எளிதாய் முடிந்தது.

ஆனல், எல்லாச் சீக்கிய அரசுகளின்மீதும் ஆட்சி செலுத்த ரஞ்சித் சிங் விரும்பினர். கன்னிங்காம் என்பவர் பின் வருமாறு எழுதுகிறார்:

'நானக்கின் பொது நிறுவனங்களுக்குத் தொடர்பும் நோக்கமும் உண்டாக்கி, சமயப்பிரிவாய் இருந்த ஒன்றை மக்களினமாகக் கோவிந்தர் செய்ததுபோல, ரஞ்சித் சிங்கும் ஏறக்குறைய அதே விவேகத்தோடு, அணுக்களாகப் பிரிந்தும் தனிப் பொருள்களைப் போலச் சிதறியும் இருந்த கூட்டத்திற்கு ஒருமைப்பாடும் இசைவும் உண்டாக்கிச் சீக்கிய நாட்டினத்தை ஒழுங்காக அமைக்கப்பட்ட அரசாக அல்லது பொதுநல அரசாகச் செய்வதற்குப் பாடுபட்டார். இக்குறிக்கோளை அடைவதற்குச் சட்லெஜ் நதிக்கும் யமுனை நதிக்கும் இடையிலுள்ள நாடுகளை, ரஞ்சித்சிங், தம் ஆட்சியின்கீழ்க் கொண்டு வரவேண்டும். சட்லெஜ் நதிக்குக் கிழக்கில் இருந்த நாடுகளில் குழப்பமும் ஒற்றுமையின்மையும் இருந்ததால், மராட்டியர் தாக்குதலுக்கு உள்ளாகி, 1785-ல் சீக்கியர்களுடன் மஹாதாஜி சிந்தியா உடன்படிக்கை செய்துகொண்ட பிறகு, இந்நாடுகள் மராட்டியர்களின் செல்வாக்கின்கீழ் வந்தன. ஆனல், ஆங்கிலேயர் சிந்தியாவை விரட்டி அந்நாடுகளைத் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தனர். இந்நாடுகளின் மீது மராட்டியர்களுக்கோ, அன்றி ஆங்கிலேயர்களுக்கோ எந்த விதமான உரிமையும் இல்லை. ஆனல், குழப்பம் நிறைந்த அந்நாள்களில் 'வாளின் உதவியைக்கொண்டு' பெறும் உரிமையே, சிறந்த உரிமையாய் இருந்தது. ரஞ்சித் சிங் விரைவான வெற்றிகளைப் பெற்று, சட்லெஜ் நதியின் தென்பகுதி நாடுகளின் விவகாரங்களில் தலையிட்டார். அவ்விடமிருந்த சீக்கியத் தலைவர்களுக்குள் எழுந்த

தகராறுகளும் அதனுல் தலைவர் சிலர் அவருடைய உதவியைக் கோரியதையும் காரணமாகக் கொண்டு, 1806-லும், 1807-லும், ரஞ்சித் சிங் அவற்றின்மீது படையெடுத்து, லூதியாளுவைக் கைப்பற்றினுர். ரஞ்சித் சிங்கின் அதிகாரம் இவ்விதம் பரவுவதைச் சீக்கியத்தலைவர் சிலர் விரும்பவில்லை. அதனுல், அவர்கள் டில்லியிலிருந்த ஆங்கில ரெஸிடென்டு சேட்டன் (Saton) என்பவரை 1808 மார்ச்சில் கண்டு, ரஞ்சித் சிங்கிற்கு எதிராக ஆங்கிலேயரின் உதவியை நாடினுர்கள். அவ்வேண்டுகோளை அவர் கவனிக்கவில்லை.

இராணுவ முக்கியம் வாய்ந்த காரணங்களுக்காகவும் ராஜதந்திர காரணங்களுக்காகவும், யமுனை நதியை நோக்கி முன்னேறும் ரஞ்சித் சிங்கைத் தடுப்பது அவசியம் என ஆங்கிலேயர் கருதினர்; ஆனுல், அதைப் படைப்பலங்கொண்டு நிறைவேற்ற விரும்பவில்லை. ஏனெனில், துருக்கியர்களுடனும் பாரசீகர்களுடனும் சேர்ந்துகொண்டு பிரெஞ்சுக்காரர்கள், இந்நாட்டைத் தாக்கக்கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கையில், இந்தியாவின் வடமேற்கே உள்ள ஒரு நாட்டைப் பகைத்துக் கொள்வது ஆங்கிலேயருடைய நலன்களுக்கு உகந்ததாய் இல்லை. மின்டோ பிரபு (Lord Minto) என்பவர், ராஜதந்திர வழியைப் பின்பற்றினுர்.

ரஞ்சித் சிங்கின் முன்னேற்றத்தைத் தடுப்பதற்காகவும், பிரெஞ்சுப்படையெடுப்பிற்கு எதிராக அவருடைய நட்பைப் பெறுவதற்காகவும், அவர் மெட்காப் (Metcalfe) என்பவரைச் சீக்கிய அரசருடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொள்ள அனுப்பினுர். பாரசீகம் வழியாகப் பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவைத் தாக்கினுல், அதற்கு எதிராக இருப்பதற்கு ரஞ்சித் சிங்குடன் ஒரு பாதுகாப்பு அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தைச் செய்ய மெட்காப் விரும்பினுர். தமது நட்பு ஆங்கிலேயர்களுக்கு அவசியமாய் இருக்கிறது என்பதை உணர்ந்த ரஞ்சித் சிங், சட்லெஜ் நதியின் தெற்கில் இருந்த நாடுகளை இயலும் அளவு கைப்பற்றினுர். தாம் ஆங்கிலேயருடன் கொள்ளும் நட்பிற்குப் பதிலாக, சட்லெஜ் நதியின் தெற்கே இருந்த எல்லாச் சீக்கிய நாடுகளின்மீதும் தமது அதிகாரத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று ரஞ்சித் சிங் ஆங்கிலேயர்களைக் கேட்டார். இதற்கிடையில், தீபகற்பப் போரில் (Penisular War) நெப்போலியன் ஈடுபட்டிருந்ததால் இந்தியாவை நெப்போலியன் தாக்கக் கூடிய அபாயம் மறைந்தது.

தவிர, கி.பி. 1809-ல், டார்டனல்ஸ் உடன்படிக்கை (Dardanelles) ஏற்பட்டதன் மூலம், ஆங்கிலேயருக்கும் துருக்கியருக்கும் இடையே இருந்த உறவு சீர் திருந்தியது.

அரசியல் நிலைமையில் ஏற்பட்ட இந்த மாறுதல்கள் காரணமாக, ரஞ்சித் சிங்குடன் அவர் விரும்பியவாறு நட்புறவு கொள்வதில்லை என பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்தது. 'சட்லெஜ் நதிக்குத் தெற்கே உள்ள நாடுகளைக் கைப்பற்ற நினைக்கும் பேரவாவுள்ள இராணுவ அரசை எதிர்ப்பதற்கும் அவர்கள் முடிவு செய்தார்கள். ஏனெனில், இவ்வரசு வெற்றி பெற்றால், நம்முடைய (ஆங்கிலேயருடைய) எல்லையில் நாம் அளித்த பாதுகாப்பிற்காக நமது நலனில் விருப்பங்கொண்டு விசுவாசமாய் இருக்கும் நாடுகளுக்குப் பதிலாக, அந்த இராணுவ அரசு இருக்கும். ஆங்கிலேயரின் கோரிக்கையை உறுதிப்படுத்துவதற்காக, டேவிட் ஆக்டர்லோனி என்பவரின் தலைமையில் ஒரு படை அனுப்பப்பட்டது. பிரிட்டிஷ் படையின் ஆற்றலுக்கு அஞ்சியும், சட்லெஜ் நதியின் கிழக்கேயுள்ள பொறுமையுள்ள நாடுகள் ஆங்கிலேயரின் பாதுகாப்பை விரும்பும் என்ற அச்சம் கொண்டும், 1809, ஏப்பிரல், 25-ல் அமிர்தசரசில் ஒரு 'நிலையான நட்புடன்படிக்கை'யை ஆங்கிலேயருடன் செய்வதற்கு ரஞ்சித் சிங் இணங்கினார். இதன்படி ரஞ்சித் சிங்கின் நடவடிக்கைகள், சட்லெஜின் வலப்பக்கம் வரையிலும் பரவியிருக்கலாம். சட்லெஜின் தெற்கில் இருந்த நாடுகள், ஆங்கிலேயரின் பாதுகாப்பின் கீழ் வந்தன.

ஆங்கிலேயர்களின் எல்லை யமுனை நதியிலிருந்து சட்லெஜ் நதிவரையில் விரிந்தது. லூதியானாவில், ஓர் ஆங்கிலப்படை நிறுத்தப்பட்டது. எல்லாச் சீக்கியர்களுக்கும் தாம் ஒப்பற்ற தலைவராய் இருக்கவேண்டும் என்ற தமது வாழ்க்கையின் குறிக்கோளை ரஞ்சித் சிங் அடைய இயலாமல் போயிற்று. பிற்காலத்தில் ரஞ்சித் சிங்கின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய நூலாசிரியர் ஒருவர் பின் வருமாறு கூறுகிறார்:

'சட்லெஜ் நதியின் தெற்கே இருந்த நாடுகளை ரஞ்சித் சிங்கால் கைப்பற்ற இயலாமற்போனது, ஆற்றலுள்ள சீக்கியத் தேசியத்திற்கு ஏற்பட்ட ஒரு சோக நிகழ்ச்சியாகும். ஆங்கிலேயரின் உதவியுடன் சட்லெஜின் தெற்கேயிருந்த நாடுகள் பெற்ற வெற்றி, குரு கோவிந்தசிங் ஏற்படுத்திய ஒரு பெரிய சமுதாயத்தின் பிளவையும் குறிக்கிறது.

ரஞ்சித் சிங் கிழக்கே முன்னேற முடியாமல் தடுக்கப் பட்டதால், வடக்கிலும், வடமேற்கிலும், மேற்கிலும் அவர் கவனத்தைச் செலுத்தினர்; 1809 முதல் 1811 வரை, கூர்க்கர் களுடன் நடத்திய போரில் வெற்றி பெற்று, கங்ரா (Kangra)



**ஜம்ஜமா**

மூல்தான் முற்றுகையிற் பயன்படுத்திய பீரங்கி

மாவட்டத்தைப் பிடித்தார்; 1813, ஜூலை 13-ல், ஆப்கானியர்களை ஹய்தாரு (Haidaru) என்னுமிடத்தில் தோல்வியுறச் செய்து, அந்த எல்லையில் முக்கியமான நகரமான அட்டோக்கைக் கைப்பற்றினர்; பிறகு படைகளைக்கொண்டு அவ்விடத்தை வலுப்படுத்தினர். ஆப்கானிய நாட்டிலிருந்து துரத்தப்பட்ட ஷா சுஜா (Shah Shuja) என்ற ஆப்கானிய அரசர், லாகூரில் (1813–1814) தஞ்சம் அடைந்தபோது, அவரிடமிருந்த உலகப் பிரசித்தி பெற்ற **கோஹினூர்** (Koh-i-nur) என்னும் வைரத்தை ரஞ்சித் சிங் பெற்றுக்கொண்டார்; 1815, ஏப்பிரலில் லாகூரி லிருந்து தப்பி ஆங்கிலேயரின் செல்வாக்கு மண்டலத்திலிருந்த லூதியானவைச் சேர்ந்தார். பல முயற்சிகளுக்குப் பிறகு, 1818-ல் மூல்தானையும், 1819-ல் காஷ்மீரையும், ரஞ்சித் சிங் கைப்பற்றினர். 1823-ல் பெஷாவரும் (Peshawar) அவர் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. இப்படி 1824ஆம் ஆண்டில், சிந்து சமவெளியின் பெரும்பாகம், ரஞ்சித் சிங்கின் நாட்டைச் சேர்ந்திருந்தது.

ரஷ்யர்கள் இந்தியாவின்மீது படை எடுப்பார்கள் என அச்சங்கொண்டு, அதற்கெதிராக, சீக்கிய நாட்டை ஓர் இடைப்படு நாடாக்கும் எண்ணத்துடன், 1831, அக்டோபரில், சட்லெஜ் நதியின் கரையிலிருந்த ரூப்பர் (Rooper) என்னு மிடத்தில், ரஞ்சித் சிங்கை வில்லியம் பென்டிங்க் பிரபு (Lord William Bentinck) சந்தித்து, அவருடன் கொண்டிருந்த நட்புறவு உடன்படிக்கையைப் புதுப்பித்தார். 1834, மே, 6-ல் பெஷாவரின் கோட்டை, ஹரிசிங் நௌலா அல்லது நால்வா (Hari Singh Naola or Nalwa) எனும் சீக்கியத் தளபதியால் கைப்பற்றப்பட்டது. ஆனால், ஆப்கானிய நாட்டில் இருந்த இடங்களை அதற்கு மேலும் கைப்பற்றுவதற்கு ஆங்கிலேயர்கள் அனுமதிக்கவில்லை. சிந்து ஆட்சியிலும் சீக்கிய அரசு பரவுவதன் விளைவுகளை உணர்ந்தனர். உண்மையில் சிந்து நாட்டைக் கைப்பற்றுவது ரஞ்சித் சிங்கிற்கு மிக முக்கியமானது. ஏனெனில், அது அவரது நாட்டின் ஒழுங்கான அமைப்பை அதிகரிக்கும். தவிரவும், 'வங்காளமும், பீஹாரும் கங்கையின் மாகாணங்களாய் இருப்பதைப் போல, சிந்துவும் பஞ்சாபும் சிந்து நதியின் மாகாணங்களாய் இருக்கின்றன.' இங்கும் அவர் ஆங்கிலேயர்களால் தடுக்கப்பட்டுவிட்டார். ஆயினும், 1839, ஜூன், 27-ல், தமது ஐம்பத்தொன்பதாம் வயதில் இறப்பதற்கு முன்பே, தமது நாட்டை மிகப் பரந்த அளவில் விரிவுபடுத்தி அதற்கு மிகுந்த புகழையும் தேடித் தந்தார்.

ரஞ்சித் சிங் புதிய கால இந்திய வரலாற்றின் சிறந்த தலைவர்களுள் ஒருவராய்த் திகழ்கிறார். அழகிய தோற்றமுடையவராய் இல்லாமல், கொடிய வைசூரியால் தமது இடக்கண் பார்வையை அவர் இழந்தாலும், இனிமையான நடத்தை, பேச்சு, உணர்ச்சியை விளக்கும் முகத்தோற்றம் ஆகியவைகளைப் பெற்றிருந்தார். கன்னிங்காம் கூறியபடி அவர் 'அன்பு செய்வதில் மிகுந்த ஊக்கம் காட்டினார்.' மிகப் புனிதமானவர்களை மதிப்புடன் நடத்தினார்; நற்பணிகளைச் செய்யும் பொருட்டு அவர்களை ஊக்கப்படுத்தினார்; கடவுளின் அருளினாலேதான் அவர் ஒவ்வொரு வெற்றியையும் பெற்றார் என நம்பினார்; அவரையும் அவர் மக்களையும் அவர் கால்சா, கோவிந்தருடைய சுயேச்சை நாடு என்று வழங்கினார். மக்களை ஆளப்பிறந்தவரான ரஞ்சித் சிங், ஆங்கிலேயர் பாதுகாப்பில் இருந்த சட்லெஜ் நதிக்குத் தெற்கே இருந்த நாடுகளைக் கைப்பற்றி, தமது வாழ்க்கையின் குறிக்கோளான 'அகில-சீக்கிய அரசை' (Pan-Sikkism) அடைய முடியாவிட்டாலும், தங்களுக்

குள்ளே போரிட்டுக் கொண்டிருந்த சீக்கிய நாடுகளை ஒன்று திரட்டி ஆச்சரியப்படத்தக்கவகையில் அவைகளை ஒரு தேசிய மன்னராட்சியாக மாற்றியதால், அவர் மிகுந்த புகழுக்கு உரியவராகிறார். அவரது வரலாற்றை எழுதியவரான சர் லெப்பெல் கிரிப்பின் (Sir Lepel Griffin) என்பவர் பின் வருமாறு கூறுகிறார்: 'அவரை மாவீரர் என்றும், மக்களை ஆளும் அரசர் என்றும், வரலாறு புகழக் கூடிய ஒரு சில மனிதர்களுக்கிடையில் வைத்துப் போற்றத் தக்கவர் என்றும் நாம் தெரிந்துகொண்டோம். வழக்கத்தின்படி, எதை ஒழுக்கம் என நினைக்கிறோமோ, அதையும் நம் மனத்தில் இருக்கும் தப்பெண்ணத்தையும் விடுத்து, மற்ற மனிதர்களுக்கிடையில், ஒருவனை மட்டும் தலைவனாகச் செய்கிற அந்த அரிய குணத்தை மட்டும் எடுத்துக்கொண்டால், விவாதத்திற்கு இடமில்லாமல் ரஞ்சித் சிங்குக்கு அப்பெருமையை வழங்கலாம். அவர் வாழ்ந்த காலத்தின் இழிசெயல்களை அவர் பெற்றிருந்தாலும், மிகுந்த இராணுவ ஆற்றலுடனும் ஊக்கத்துடனும் நாடுகளை வென்று, அந்நூற்றாண்டின் ராஜ தந்திரிகளுக் குள்ளே முதன்மையாக வைத்து எண்ணப்படுகிறவர் என்ப தனால், அவர் அப்புகழுக்கு ஆளாகிறார்.'

ரஞ்சித் சிங்கின் சபையிலிருந்த விக்டர் ழாக்குமான் (Victor Jacquemont) என்னும் பிரெஞ்சு வழிப்போக்கர், அவரைப்பற்றி, 'அவர் அசாதாரணமான மனிதர்; போனப் பார்ட் என்கிற நெப்போலியனின் சிறிய உருவம்,' எனக் கூறினார். தமது குறிக்கோளை அடைவதற்குத் தமக்கு ஒரு வலுவுள்ள படை அவசியம் என்பதை ரஞ்சித் சிங் உணர்ந் தார்; 'வீரத்தைப் பெற்ற, ஆனால் போர்க் கலையை நன்கு உணராத' சீக்கியத் தலைவர்களின் படைகளை அடியோடு மாற்றி அமைத்து, உறுதியான தேசீயப் படையாகச் செய்து, தம் அதிகாரத்தின்கீழ் வைத்துக்கொண்டார். அப் படை, ஹன்டர் (Hunter) கூறியபடி, 'இரும்புப் படையைப் பெற்ற ஆலிவர் கிராம்வெல் காலத்திற்குப் பிறகு, ரஞ்சித் சிங் காலத்திலேதான், அவரிடத்தில், உறுதியும் சமய உணர்ச்சி யும் பெற்ற படைகள் இருந்தன.' இராணுவச் சீர்திருத்தத்தை, ரஞ்சித் சிங் உண்டாக்கினார். படையினர் பெரும்பாலும் சீக்கியராகவே இருந்தனர். ஐரோப்பாவில், நெப்போலியன் செய்த போரில் ஈடுபட்ட சிலரும் மற்ற ஐரோப்பிய அதிகாரி களுமான அல்லார்ட் (Allard), வென்டுரா (Ventura), கோர்ட் (Court), அவிதாபிள் (Avitable) போன்றவர் அவருக்கு உதவி யாய் இருந்ததாலும், அவருடைய படை தேசப்பற்று மிகுந்த

தாய் இருந்தது. அதை அவர் உறுதியான கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருந்தார். அவரது பீரங்கிப்படை மிக்க ஆற்ற லுள்ளது.

ரஞ்சித் சிங் பெரிய வெற்றிகளைப் பெற்றவராய் இருந் தாலும், கடுமையாய் இல்லாமல், தோற்கடிக்கப்பட்ட பகை வர்களிடத்தில் அன்பையும் ஆதரவையும் காட்டினார். 1885-ல் ரஞ்சித் சிங்கின் சபைக்கு வந்திருந்த பாரன் கார்ல் வான் ஹூகல் (Baron Carl Von Hugel) என்னும் ஜெர்மன் பிரயாணி, அவரைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: 'அவர் எப் பொழுதும் வேண்டுமென்றே கொலைகளைச் செய்வதில்லை. குறைந்த குற்றங்களைப் புரிந்து அவரைப்போல எவரும் ஒரு பெரிய நாட்டை ஏற்படுத்தியதில்லை.' தம் ஆட்சியைக் கட்டுப் பாட்டுடன் வைத்திருக்கும் உறுதியான அரசர், ரஞ்சித் சிங். எல்லா அதிகாரங்களையும் தம்மிடத்தில் குவித்து வைத் திருக்கிற 'சர்வாதிகாரியாக, அவர் இல்லை. அவர் அரசியல் 'உரிமைகள்' பாதுகாக்கப்பட்டன. விரிவான சட்டங்கள், நிலையான மன்றங்கள், ஆற்றலுள்ள காவற்படை ஆகியவை களைக் கொண்ட திட்டமிட்டுச் செய்யப்பட்ட ஆட்சியைக் கொண்டிராவிட்டாலும், அவரது சிவில் அரசாங்கம், கொடுமை யற்றதாகவே இருந்தது. அக்காலத்து பிரிட்டிஷ் அதிகாரி பின் வருமாறு கூறுகிறார்: 'ஒழுங்காக அமைந்த ஒரு நாட்டில் ஒரு சில மனிதர்களிடமிருந்தே உண்டாகும் முன்னேற்றத்தை அவர் செயலில் காட்டினார். இவ்விடத்தில், கடுமையற்ற சர்வாதிகாரம், கொடிய குணமில்லாத சர்வாதிகாரி, ஐரோப் பிய நாகரிகத்திற்கு மாறுபட்டிருந்த போதிலும், கிழக்கில் இருந்த எல்லா ஆட்சிகளையும்விடச் சிறந்த ஆட்சியையும், நாம் பார்க்கிறோம். அவருடைய ஆட்சியில், தொழில் அதிபர் களும், வணிகரும் செழிப்புற்று விளங்கினர். 'கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆற்றலை, ராஜதந்திரிக்குரிய முறையில் ஒப்புக் கொண்டதற்காகவும், ஆங்கிலேயரின் உறுதி மொழியை நம்பியதற்காகவும், வாக்களித்தபடி விசுவாசமாய் இருந்ததற் காகவும், ரஞ்சித் சிங்கை ஆங்கில நூலாசிரியர் பலர் புகழ்ந் திருக்கின்றனர். இம்முறையில், அவர், ஹைதருக்கும் திப்பு விற்கும் மாறுபட்டிருந்தார். ஆங்கிலேயருடன் அவர் கொண்ட உறவில், துணிச்சல் உள்ள ராஜ தந்திரிக்குரிய குணத்தையும் தைரியத்தையும் காட்டவில்லை என்று நூலாசிரியர் சிலர் அவரைக் குறை கூறுகின்றனர். சீக்கிய அரசை அவர் உண்டாக்கினார். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதைத் தடுக்க அவர் ஒரு முயற்சியையும் செய்யவில்லை. 'சாப், லால்,

ஹோ, ஐக்யேகா' என்று அவர் கூறியபோது, அதைப்பற்றி அவர் முன்னரே அறிந்திருந்தார் என்பது தெரிகிறது. இதற்குப் பதிலாக, குறைவான எதிர்ப்பை விளைக்கும் கொள்கையையே அவர் கையாண்டார்.

## (இ) முதலாவது ஆங்கில-சீக்கியப் போர்

ரஞ்சித் சிங்கால் உண்டாக்கப்பட்ட சீக்கிய இராணுவ மன்னராட்சியின் அமைப்பு, நெடுங்காலம் நீடிக்கவில்லை. அவ்வமைப்புகளின்படி, அது தொடர்ந்து நீடிப்பதும், அல்லது வளர்வதும், முக்கியமான அக்காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்தியாவில் வேகமாக வளரும்போது, உறுதியான தலைவருடைய செயலைப் பொறுத்திருந்தன. ரஞ்சித் சிங் இறந்தபோது, சீக்கியர்கள், மிகவும் ஆற்றலுள்ளவர்களாயும், அதிகாரம் உள்ளவர்களாயும் இருந்தார்கள். ஜெனரல் கார்டன் (Sri J. H. Garden) குறித்தபடி 'ஆனால், அது வெடித்து ஆற்றலுள்ள ஆனால் சிறுகச் சிறுகக் குறையும் தணலாக மாறி, கடைசியில் ஒன்றுமில்லாமல் மறைந்துவிட்டது.' உண்மையில், ரஞ்சித் சிங்கின் இறப்பு, அவர் நாட்டுக்குள்ளே எழுந்த குழப்பம், ஆட்சி முறை இல்லாநிலை ஆகியவற்றின் ஆரம்பத்தைக் குறித்தது. இந்நிலை நீடிக்கப்பட்டது, சீக்கிய அரசை வலுவிழக்கச் செய்து, இறுதியில் ஆங்கிலேயருக்கு அடிபணிய வைத்தது. 1843ஆம் ஆண்டு வரையில், ஒருவருக்குப் பின் ஒருவராக ஆற்றலற்ற அரசர் பலர், பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். பிறகு தலீப் சிங் (Dalip Sing) என்கிற சிறுவன், அரசனாக ஏற்கப்பட்டான். அச்சிறுவனுக்குத் தாயான ஜிண்டான் ராணி (Rani Jhindan) அரசப் பிரதிநிதியாயிருந்தாள்.' அக்காலத்தில் ஏற்பட்ட போராட்டங்களாலும், குழப்பத்தாலும், மத்திய சிவில் ஆட்சி வலுவற்று, பஞ்சாயத்துகளின் பிரதிநிதிகள் அல்லது ஐவர் குழுக்கள் என்பது மூலமாகக் கால்சாப் படை பதவியைக் கைப்பற்றியது. ஆற்றல் உடைய ஆட்சியினால் கட்டுப்பாட்டில் வைக்கப் படாததால், அப்படை, அடக்க முடியாததாயும், மூர்க்கத்தனமாயும் வளர்ந்து நாட்டின் சர்வாதிகாரியாய் மாறியது. அப்படையை அடக்கமுடியாமலும், வெளிப்படையாக எதிர்க்க முடியாமலும் இருந்த லாகூர் அரசு, கொடுமையான பேய் போன்ற அப்படையினின்றும் தன்னை விடுவித்துக்கொள்வதற்காக, ஆங்கிலப் பிரதேசத்தைத் தாக்கத்தூண்டும் ஒரு திட்டத்தை வகுத்தது. ஏனெனில், ஆங்கிலேயருடன் ஏற்படும் போரில், அப்படை முழுமையாக அழிக்கப்பட்டுவிடலாம்;

அல்லது அதனுடைய 'ஏராளமான சக்திகள்', நாடுகளை வென்று வென்று, அவற்றைக் கைப்பற்றுவதில் செலவழிந்து போகலாம் என அவ்வரசு நினைத்தது. தலைவர்களின் மனப் பூர்வமான சம்மதம் இல்லாததால், போர் ஆரம்பமாவதற்கு முன்பே, சீக்கியர்கள் தோல்வியடைந்தார்கள் என்ற நிலைமை இருந்தது. ராபர்ட்ஸ் குறித்ததுபோல, ஆங்கிலேயர்கள் 'தளபதி இல்லாத சிறந்த படையுடன் அல்லது கட்டுப்பாடு செய்யும் மேலான தலைவர் இல்லாமல் இருக்கும் படையுடன் போரிட்டனர்.'

தர்பாரின் நடவடிக்கைகளைத் தவிர, வேறு சில ஆத்திர மூட்டும் ஆங்கிலேயர்களின் செயலும் இப்போருக்குக் காரணங்களாய் இருந்தது. 'அவர்களுக்கு அருகில் இருக்கும் மாபெருநாடு, அவர்கள் நாட்டைக் கைப்பற்றி, அவர்களது சுதந்தரத்தை அழிக்கும் எனச் சீக்கியர் படை உணரும் அளவுக்கு, ஆங்கிலேயர்களின் ஆத்திரமூட்டும் செய்கைகள் இருந்தன. சட்லெஜ் நதியை நோக்கி, துருப்புகளைக்கொண்ட சிறு படைகளை அனுப்பினார்கள்; 1844, 1845 ஆகிய ஆண்டு களில், சட்லெஜ் நதியில் பாலம் அமைக்கும் குறிக்கோளுடன் பம்பாயில் படகுகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள்; மூல்தானைத் தாக்கும் நோக்கத்துடன், சிந்து மாகாணத்தில் புதியனவாகக் கைப்பற்றப்பட்ட பகுதிகளில் இருந்த துருப்பு களுக்கு ஆயுதங்கள் கொடுக்கப்பட்டன. வடமேற்கு மாவட்டங்களில் இருந்த கோட்டைகள் பலப்படுத்தப்பட்டன; இவை எல்லாம், 'பாதுகாப்புக்கான நடவடிக்கைகள் அல்ல; ஆனால், ஆக்கிரமிப்புச் செய்வதைத்தான் தெரிவிக்கின்றன,' என்பதைச் சீக்கியப்படை உணர்ந்தது.

கிழக்கிந்தியக் கம்பெனி, நாடுகளை இணைத்துக்கொள்ளும் கொள்கையைப் பின்பற்றிய சமயத்தில், சீக்கியநாட்டை ஆங்கிலேயர்கள் தாக்குவார்கள் என்று சீக்கியப்படை அச்சம் கொள்வதற்கு ஆதாரம் இருந்தது. 1845, டிசம்பர், 11-ல், கால் சாப் படை, எதிர்ப்பின்றி, சட்லெஜ் நதியைக் கடந்து சென் றது. ஆங்கிலேயர்கள் போருக்குத் தயாராய் இருந்தாலும், பெரோஸ்பூர் (Ferozepore) என்னுமிடத்திலிருந்த ஆங்கிலத் தளபதியான மேஜர் பிராட்புட் (Broadfoot) என்பவருடைய தவறான கருத்தினாலும், பொறுப்பின்மையினாலுந்தான், சீக்கியர்கள் எதிர்ப்பில்லாமல் ஆற்றைக் கடந்து செல்ல முடிந்தது. எல்லையிலிருந்த படை முதலிலேயே பலப்படுத்தப் பட்டு, 40,000 வீரர்களையும், 100 பீரங்கிகளையும் அவர்கள்

பெற்றிருந்தார்கள் என்பது நோக்கத் தக்கது. சர் ஹென்றி (பிறகு லார்ட்) ஹார்டிஞ்சு (Sir Henry Hardinge) என்கிற கவர்னர் ஜெனரல், உடனடியான ஒரு முடிவிற்கு வந்தார்; 1845, டிசம்பர், 13-ல், ஒரு போர்ப் பிரகடனத்தை வெளியிட்டு, சட்லெஜின் இடக்கரையிலிருந்த எல்லாச் சீக்கியப் பிரதேசங்களையும் கைப்பற்றி ஆங்கில நாட்டுடன் இணைத்துவிட்டதாக அறிவித்தார். சர் ஹக் கவ் (Sir Hugh Gough) என்னும் தளபதியின்கீழ் இருந்த பிரிட்டிஷ்படை, அம்பாலாவிலும், லூதியானாவிலுமிருந்து கொண்டு வரப்பட்டது. இப்படைக்கும், லால் சிங் (Lal Singh) என்பவரின் கீழிருந்த சீக்கியப் படைக்கும் நடந்த முதற்போர், பெரோஸ்பூருக்குத் தென் கிழக்கே இருபது மைலில் இருந்த முட்கி (Mudhi) என்ற இடத்தில் மிகக் கடுமையாகவும், இரத்தம் சிந்தும் வகையிலும், நடத்தப்பட்டது. வீரமுள்ள சீக்கியக் காலாட்படை, சிப்பாய்களையும், ஐரோப்பியத் துருப்புகளையும், கடுமையாகத் தாக்கியது. குறி தவருமல் சுடும் எதிரிகளுக்கு முன்னே நிற்க இயலாமல், ஆங்கிலப்படைகள் முதலில் ஓடின. நெருக்கடியான நேரத்தில், லால் சிங்கின் சோம்பல் காரணமாக, வெற்றி பெறும் வாய்ப்பைச் சீக்கியர்கள் இழந்தார்கள். அதனுல், அவர்கள் மிகுந்த சேதத்துடன் இறுதியில் தோற்கடிக்கப்பட்டார்கள். ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட சேதமும் அதிகந்தான். 657 வீரர்கள் காயமடைந்தார்கள். ஜலாலாபாதை (Jalalabad) வெற்றிகரமாகப் பாதுகாத்த மேஜர் ஜெனரல் சர் ராபர்ட் சேல் (Sir Robert Sale), மேஜர் ஜெனரல் சர் ஜான் மெக் கேஸ்கில் (Sir John Mc Caskill) ஆகிய தளபதிகள் உட்பட 215 வீரர்கள் கொல்லப்பட்டார்கள். இதன் பிறகு 1845, டிசம்பர், 31-ல், சட்லெஜ் நதிக்குப் பன்னிரண்டு மைலில் இருந்த பெரோஜ் ஷா (பிரூஸ்ஷுஹுர்—Feroze Shah or Firuzshuhur) என்னுமிடத்தில், சீக்கியர்கள் தங்கியிருந்த இடத்தை ஆங்கிலேயர்கள் தாக்கினுர்கள். சீக்கியர்கள் பிடிவாதத்துடனும் பயங்கரத்துடனும் எதிர்த்து, அலை அலையாய் வந்து தாக்கிய ஆங்கிலேயர்களை மூர்க்கத்தனமாகப் பீரங்கிகளால் சுட்டு, தாக்குதலை முரியடித்தனர். உண்மையில் ஆங்கிலேயர்களின் நிலை மிக மோசமாய் இருந்தது. தலைமைத் தளபதி, பின்பு பின்வருமாறு கூறினுர்: 'பயங்கரமான அந்த இரவில், நாங்கள் மோசமானதும் அபாயமானதுமான நிலையில் இருந்தோம். ஆனுல், அவர்கள் தளபதியான தேஜ் சிங் (Tej Sing) என்பவர், திடீரென்று போர்க்களத்தைவிட்டு நீங்கி, வீரமிகுந்த சீக்கியர்களை மறுபடியும் வஞ்சித்துவிட்டார். அதனுல், சீக்கியத் துருப்புகள்

போரைத் தவிர்த்து, சட்லெஜ் ஆற்றின் குறுக்கே பின் வாங்கின. இது ஆங்கிலப் படைக்கு மிக்க ஆறுதலைக் கொடுத்தது.' மாலசென் (Malleson) என்பவர் இதைப்பற்றிக் கூறுகிருர்: 'சீக்கியப் படைகளை நன்ருக நடத்தக்கூடிய தலைவர் நடத்தியிருந்தால், களைத்துப் போன ஆங்கிலேயர் களை எந்தச் சக்தியினுலும் காப்பாற்றியிருக்க முடியாது.' இரண்டு பக்கங்களிலும் ஏராளமான சேதங்கள் ஏற்பட்டன. ஆங்கிலேயர்கள் பக்கத்தில், 103 அதிகாரிகளைச் சேர்த்து, 694 வீரர்கள் கொல்லப்பட்டார்கள்; 1721 வீரர்கள் காய மடைந்தார்கள். சீக்கியர்கள், 8000 வீரர்களையும் 73 பீரங்கி களையும் இழந்தார்கள்.

பெரோஸ் ஷாவில் அடைந்த வெற்றிக்குப் பிறகு, ஆங்கிலப் படை ஏறத்தாழ 'ஆற்றலற்ற நிலையில்' சில நாள்கள் இருந்தது. அப்படை பீரங்கிகள், வெடி குண்டுகள், பண்டங்கள் ஆகியவைகளை டில்லியிலிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. அச்சமயம், ரஞ்சூர் சிங் மஜீத்தியா (Ranjur Singh Majhithia) என்பவரின் கீழிருந்த ஒரு சீக்கியப் படை, 1846, ஜனவரியில், சட்லெஜ் நதியைக் கடந்து, லூதி யானுவில் இருந்த எல்லை நிலையத்தைத் தாக்கியது. கேப் காலனியின் கவர்னர் சர். ஹென்றி ஸ்மித்து (Sir Henry Smith) என்பவர், முன்னேறும் கால்சாப் படைகளைத் தடுத்து நிறுத்துவதற்கு அனுப்பப்பட்டார்; ஆனல், ஜனவரி, 21-ல், புத்தேவால் (Buddewal) என்னுமிடத்தில் நடந்த போரில் தோல்வியடைந்தார்; புதிய படைகளைக்கொண்டு, 1846, ஜனவரி, 28-ல், லூதியானுவிற்கு மேற்கில் இருந்த அலிவால் (Aliwal) என்னுமிடத்தில், சீக்கியர்கள் மிக்க வீரத்துடன் எதிர்த்த போதிலும், அவர்களைத் தோற்கடித்தார். தோல்வி யுற்ற படை, அறுபத்தேழு பீரங்கிகளை இழந்து, சட்லெஜ் நதியின் குறுக்கே ஓடிவிட்டது. இறுதிப்போர், சட்லெஜ் நதியின் கரையிலிருந்த சோப்ரான் (Sobraon) என்னுமிடத் தில் நடந்தது. இவ்விடத்தில், சீக்கியப் படையின் முக்கியப் பகுதி நன்ருகப் பாதுகாக்கப்பட்ட இடத்தில் இருந்தது. இவ்விடத்திற்கூடச் சீக்கியர்கள், வியப்புக்குரிய உறுதி யுடனும் துணிவுடனும் பிப்பிரவரி மாதம் 10ஆம் நாள் காலையி லிருந்து போரிட்டனர்; வீரர்களின் துணிவுடனும், மதப்போர் செய்பவர்களின் ஊக்கத்துடனும், கொள்கை வெறி பிடித் தவனின் மூர்க்கத்துடனும், பகைவனை வெற்றி கொள்ள வேண்டும் அல்லது கையில் வாளுடன் இறக்க வேண்டும் என்னும் சபதத்துடனும், சீக்கியர்கள் போரிட்டார்கள்.'

ஷாம் சிங் (Sham Singh) என்பவரைத் தவிர்த்து, மற்ற எல்லாச் சீக்கியத் தளபதிகளும், அரை மனத்துடனும், துரோகச் சிந்தனையுடனும் இருந்ததால், இவை யாவும் பயனற்றுப் போய்விட்டன. பகல் ஒரு மணிக்குச் சீக்கியர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். அவர்களின் உறுதி வாய்ந்த அரண்களையும் ஆங்கிலேயர்கள் தாக்கினார்கள். ஏராளமான சீக்கியர்கள் ஆற்றைக் கடக்கும்போது, கடுஞ் சினம் கொண்ட ஆங்கிலப் படையால் கொல்லப்பட்டார்கள். ஆங்கிலேயர் பக்கம், 320 வீரர்கள் கொல்லப்பட்டார்கள்; 2083 பேர்கள் காயமடைந்தார்கள்.

சோப்ரானில் ஆங்கிலேயர்கள் பெற்ற வெற்றி மிக முடிவுள்ளதாய் இருந்தது. இந்தியாவில் எதிர்பார்க்க முடியாத ஆற்றலும் உறுதியும் வாய்ந்த பகைவர்களின் ஆபத்திலிருந்து அவர்கள் மீண்டார்கள். இப்போர்கள் வடமாகாணங்களி லிருந்த பிரிட்டிஷ் டொமினியன் என்கிற கட்டடத்தின் அடிப் பாகத்தையே அசைத்துவிட்டது. சீக்கியர்களின் வீழ்ச்சியைக் கண்டு பேரானந்தம் அடைந்த இங்கிலாந்தின் அதிகாரிகள், மிக முக்கியத்துவம் வாய்ந்த சிறப்பான வெற்றிகளுக்குப் பரிசு அளிக்கும் வகையில், சர் ஹென்றி ஹார்டிஞ்சு என்கிற கவர்னர்-ஜெனரலுக்கும், சர் ஹக்கப் என்கிற தலைமைத் தளபதிக்கும் 'கோமான்' என்கிற பட்டத்தை அளித்துச் சிறப்புச் செய்தார்கள். மற்றும் படையிலிருந்தவர்களுக்கும், புகழையும் சலுகைகளையும் தாராளமாக வழங்கினார்கள்.

பிப்பிரவரி, 13ஆம் தேதி, ஆங்கிலேயரின் வெற்றிப்படை யுடன் கவர்னர் ஜெனரல், சட்லெஜ் நதியின் குறுக்கில் படகு களால் கட்டப்பட்ட பாலத்தைக் கடந்தார்; பிப்பிரவரி 21ஆம் தேதியன்று லாகூரைக் கைப்பற்றினார். ஹார்டிஞ்சு பிரபு, தோல்வியடைந்த சீக்கியர்கள்மீது திணிக்கும் ஏற்பாட்டை ஒப்புக்கொள்வதைத் தவிர, வேறு வழியில்லை. தம்மிடம் இருக்கும் பணியாளர்களைவிட அதிகமான பணியாளர்கள் தேவைப்பட்டதால், பஞ்சாபு முழுவதையும் ஆங்கில நாட்டுடன் இணைத்துக்கொள்ள அவர் விரும்பவில்லை. எதிர் காலத்தில், அனுகூலமில்லாததால், பாதுகாப்பு முறை உடன் படிக்கையைச் செய்துகொள்ளவும் அவர் விரும்பவில்லை. 1846 மார்ச்சு 9-ல், தோல்வியடைந்த சீக்கியர்களுக்கு அவர்கள் தலைநகரிலேயே ஓர் உடன்படிக்கையை அறிவித்தார். இதன் படி, சட்லெஜ் நதிக்கு இடப்பக்கத்தில் இருக்கும் பிரதேசங்

களையும், சட்லெஜ் நதிக்கும் பீயாஸ் (Beas) நதிக்கும் இடையி லுள்ள ஜலந்தர் தோப் (Jullandur Doab) என்கிற இடத்தையும் சீக்கியர்கள் விட்டுக் கொடுக்கவேண்டும்.

ஒன்றரைக்கோடி ரூபாயைப் போரின் இழப்பீடாக லாகூர் அரசு கொடுக்க வேண்டும். அதை ஓரளவுக்குப் பணமும், ஓரளவுக்குப் பீயாஸ் சிந்து நதிகளுக்கிடையே இருக்கும் காஷ்மீர், ஹஜாரா (Hazara) உட்பட எல்லா மலை மாவட்டங்களையும் கொடுக்கலாம். சீக்கியர்கள் தாங்கள் கைப்பற்றிய தளவாடங்களை ஆங்கிலேயருக்குக் கொடுத்து விட வேண்டும்; 215 பட்டாலியன்களை (Battalions) உடைய காலாட்படை, 12,000 வீரர்களைக் கொண்ட குதிரைப் படை, 36 பீரங்கிகளைக் கொண்ட படையாகச் சீக்கியர்களின் படை குறைக்கப்பட்டது. பிரிட்டிஷ், ஐரோப்பிய, அமெரிக்கர்களை வேலையில் வைத்துக்கொள்ளக் கூடாதென்றும், ஆங்கில ஆட்சி யின் உத்தரவு இன்றி நாட்டின் எல்லைகளை மாற்றக்கூடா தென்றும், சீக்கியர்கள் தடுக்கப்பட்டார்கள். சிறுவனை தலீப்சிங், மகாராஜாவாகவும், ஜிண்டான் ராணியை அரசப் பிரதிநிதியாகவும், லால் சிங்கை முதல் அமைச்சராகவும், ஆங்கிலேயர்கள் ஒப்புக்கொண்டார்கள். லாகூர் அரசாங் கத்தின் உள்நாட்டு ஆட்சியில் தலையிடுவதில்லை என்றும் கவர்னர்-ஜெனரல் உறுதியளித்தார். மகாராஜாவைப் பாது காப்பதற்கு வேண்டிய பிரிட்டிஷ் படைகளை, 1846ஆம் ஆண்டு இறுதி வரையில் லாகூரில் வைத்திருப்பதும் ஒப்புக்கொள்ளப் பட்டது. அவ்விடத்தில் ஹென்றி லாரன்ஸ் என்பவர், பிரிட்டிஷ் ரெசிடென்டாக நியமிக்கப்பட்டார். லாகூர் நாட்டின் அளவைக் குறைப்பதற்காக, மார்ச்சு 16-ல், அமிர்தசரஸில் ஓர் உடன் படிக்கை ஏற்பட்டது. அதன்படி, லாகூர் அரசருக்குச் சர்தா ராய் (Sardar) இருந்த குலாப் சிங் (Golab Singh) என்ப வருக்குப் பத்து லட்சம் பவுன்களுக்குக் காஷ்மீர் நாடு, ஆங்கிலேயர்களால் விற்கப்பட்டது. கன்னிங்காம் என்பவர் பின் வருமாறு கூறுகிறார்: ‘சீக்கியர்களின் அதிகாரத்தைக் குறைப்பதற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டதென்றால், இது ஒரு துணிகரமான ஏற்பாடுதான்; ஆனால், இது ஆங்கிலே யரின் நல்ல பெயருக்கும் பெருமைக்கும் உகந்ததாய் இருக்க வில்லை. போர் ஆரம்பமாவதற்கு முன்பே, தமது மேலாட்சிக்கு அறுபத்தெட்டு லட்ச ரூபாயைக் கொடுப்பதாகக் குலாப் சிங் ஒப்புக்கொண்டார் என்பதையும், கிழக்கு நாடுகளிலும், மேற்கு நாடுகளில் உள்ள வழக்கங்களின்படி ஒரு சிற்றரசன் அவனுடைய தலைவன் செய்யும் வெளி நாட்டுப் போரிலும்,

உள் நாட்டுக் கலகத்தை அடக்கும்போதும், அவனுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதையும், லாகூர் அரசுக்குக் கட்டுப் பட்டுக் கொடுக்க வேண்டிய பணத்தைக் குலாப் சிங் கொடுப் பதற்குப் பதிலாக, லாகூர் மாகாணங்களைச் சேர்ந்த ஒரு பகுதிக்கு அங்கு ஆங்கிலேயர்களால் சுதந்தர அரசர் ஆக்கப் பட்டார் என்பதையும் நோக்கும்போது ஆங்கிலேயர்களை அதிகமாகக் கண்டிக்க வேண்டியிருக்கிறது.'

சில குழப்பங்கள் காரணமாக, முக்கியமாகக் குலாப் சிங்கை எதிர்த்து லால் சிங்கின் தூண்டுதல் பேரில் ஏற்பட்ட கலகங்களினால், ஆங்கிலேயருக்குப் பஞ்சாபில் அதிக அதி காரத்தைக் கொடுக்கும் வகையில் லாகூர் உடன்படிக்கை 1846, டிசம்பர், 16-ல், திருத்தி அமைக்கப்பட்டது. லால் சிங் செய்த குற்றத்திற்காக அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்ட தாலேதான் அவர் அரசருக்கு எதிராகக் கலகஞ் செய்தார் என்பதும் ஈண்டு நோக்கத்தக்கது. பிரிட்டிஷ் ரெசிடென்டு அதிகாரத்தின்கீழுள்ள எட்டுச் சீக்கிய சர்தார்களைக் கொண்ட அரசப் பிரதிநிதி மன்றத்திற்கு, லாகூரின் ஆட்சி மாற்றப் பட்டது. லாகூரில் ஒரு பிரிட்டிஷ் படை நிறுத்தப்படும். அதன் செலவிற்காக, இருபத்திரண்டு லட்ச ரூபாயை லாகூர் அரசாங்கம் கொடுக்க வேண்டும். 1854, செப்டெம்பர், 4ஆம் தேதியன்று மகாராஜா தக்க வயதை அடையும் காலம் வரையிலும், அன்றி, கவர்னர்-ஜெனரலும், லாகூர் தர்பாரும் அவசியம் என நினைக்கும் காலம் வரையிலும், இந்தப் புதிய ஏற்பாடு நீடிக்கும் என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டது. 1848, ஜனவரி, 18-ல், ஹார்டிஞ்சு பிரபு என்பவருடன் ஸர் ஹென்றி லாரன்ஸ் என்கிற பிரிட்டிஷ் ரெசிடென்டும், இங்கிலாந்துக்குப் பயணமானார். அவரது பதவியை ஒரு சிறிது காலத்திற்கு அவர் சகோதரர், சர் ஜான் (பிறகு லார்ட்) லாரன்ஸ் என்பவர் ஏற்றார். அதன் பிறகு 1848, ஏப்பிரல், 6-ல் சர் பிரெடரிக் கர்ரீ (Sir Frederick Currie) என்பவர் அப்பதவியைப் பெற்றார்.

## (ஈ) இரண்டாவது ஆங்கில-சீக்கியப் போரும், பஞ்சாபின் இணைப்பும்

பஞ்சாபிலிருந்த சீக்கியத் தலைவர்களுடன் ஹார்டிஞ்சு பிரபு செய்துகொண்ட ஏற்பாடுகள் 'நீடித்து நிலைப்பதற்கு' வாய்ப்பில்லாமல் போய்விட்டது. சீக்கியப் படையின் குறை பாடுகளால், சீக்கிய மக்களிடமிருந்த தேசீய உணர்ச்சி அழிக்கப்படவில்லை. அண்மையில் மிகக் கடுமையாக ஆங்கி

லேயரை எதிர்த்த சீக்கியர்கள், பெருமை மிக்க அருஞ் செயல்களைச் செய்யும் மரபில் வந்தவர்கள். தங்களுக்கு நேர்ந்த அவமானம், தங்கள் தலைவர்களின் துரோகத்திலைலே தான் ஏற்பட்டது என அவர்கள் நினைத்து, பஞ்சாபில் ஆங்கி லேயர்கள் ஆதிக்கம் கொண்டதை வெறுத்தார்கள். ஆங்கி லேயருக்கெதிரான சதியில் ஈடுபட்டாள் என்பதற்காக அரசரின் தாயான ஜிண்டான் ராணியை ஆங்கிலேயர்கள் லாகூரிலிருந்து நீக்கிய நிகழ்ச்சி, சீக்கிய மக்களின் அதிருப்தியை அதிகப்படுத்தியது. தேசீய எழுச்சி என்ற உருவில், மக்களின் உணர்ச்சி பீறிட்டு எழும் என்ற நிலைமை ஏற்பட்டது. அதிருப்தியுற்ற சீக்கியத் தலைவர்களுக்கும், அவர் களுக்குப் பகைவர்களான வெற்றி பெற்ற ஆங்கிலேயருக்கும் இடையில், ஒரு பலப் பரீட்சை நடக்கவிருந்தது. அதுவும் சீக்கிரத்திலேயே ஏற்பட்டது. மூல்தான் நகரத்தில் நடந்த ஒரு சம்பவந்தான் அதற்கு உடனடியான காரணமாய் அமைந்தது.

மூல்தான் நகரத்தின் கவர்னரான திவான் மூல்ராஜ் (Diwan Mulraj) என்பவர், தமது மாவட்டத்தில் ஏற்பட்ட வரி வசூல் குறைவால், நிதி நெருக்கடிக்கு ஆளானர். அவர் பதவியில் இருக்கவேண்டுமானல், ஒரு மில்லியன் பவுனை அவர் கொடுக்கவேண்டும் என வற்புறுத்தியதால், மிக்க சினங் கொண்டு, 1848, மார்ச்சில் தம் வேலையை ராஜிநாமாச் செய் தார். லாகூர் தர்பார், சர்தார் கான் சிங் (Sardar Khan Singh) என்பவரை அப்பதவியில் நியமிக்க, அதை ஏற்றுக்கொள்வ தற்கு, அவரை மூல்தானுக்கு அனுப்பியது. சிவில் செர்வீசைச் சேர்ந்த வான்ஸ் அக்னியூ (Vans Agnew), பம்பாய் படையைச் சேர்ந்த (Bombay European Regiment) லெப்டினென்ட் ஆண்டர் சன் (Anderson) ஆகிய பிரிட்டிஷ் அதிகாரிகள், புதிய கவர்னருடன் மூல்தானுக்கு அனுப்பப்பட்டார்கள். ஏப்பிரல், 20-ல், இவ்விருவரும் கொல்லப்பட்டனர். மூல்ராஜின் தூண்டு தலினலேதான் இக்கொடிய குற்றம் நடந்ததென நம்பப் பட்டது. ஆங்கிலேயரை எதிர்ப்பதற்காக, அவர் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். கௌபிரபு என்கிற தலைமைத் தளபதியும், டல்ஹௌசி பிரபு என்கிற கவர்னர் ஜெனரலும், அக்கலகத்தை அடக்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை உடனடியாக எடுக்காமல், குளிர்காலம் வரும் வரையிலும் காத்திருக்கலாம் என முடிவு செய்தனர். அவர்கள் கொள்கையைத் தாய் நாட்டு அதிகாரிகள் ஆதரித்தாலும், மற்றவர்கள் கடுமையாகத் தாக்கினர்கள். அரசியல்

குறிக்கோளுடனேதான், அவர்களுடைய நடவடிக்கைகள் இருந்தன என்பது உண்மைதான். நெடுந்தூரம் சென்று செய்யும் போரினால் ஏற்படும் துன்பங்களையும், அவ்விடத்திற்குக் கோடை காலத்திலும் மழை காலத்திலும் துருப்புகளைக் கொண்டு செல்வதால் ஏற்படும் இடுக்கண்களையும் மனத்தில் கொண்டு, கலகத்தை அடக்குவதற்கு லாகூர் அரசுக்குள்ள ஆற்றலையும் அறிய, அவர்கள் விரும்பினார்கள். மூல்தான் கிளர்ச்சி அதிகமாகப் பரவக்கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கையில், அக்கலகத்தை மட்டும் அடக்குவதற்கு அவர்கள் தயாராக இல்லை. முறைப்படி லாகூர் அரசுதான், அக்கலகத்தை அடக்கக் கடமைப்பட்டுள்ளது என்பதும் நோக்கத் தக்கது.

ஆங்கிலேயரின் தலைமை ஆட்சியினர் 'பொறுத்திருந்து, கவனிக்கும் கொள்கை'யைப் பின்பற்றினாலும், சீக்கிய அரசப் பிரதிநிதித்துவ மன்றத்தின்கீழ்ப் பணியாளராய் இருக்கும் ஹெர்பர்ட் எட்வார்ட்ஸ் (Herbert Edwards) என்ற இளைய ஆங்கில அதிகாரியும், கர்ரி என்கிற பிரிட்டிஷ் ரெசிடென்டும், கலகத்தை அடக்குவதற்கும் மூல்தானை முற்றுகையிடுவதற்கும் பயனற்ற முறையில் முயற்சி செய்தனர். ஹஜாரா மாவட்டத்தின் சீக்கியக் கவர்னரான சாட்டர் சிங் (Chatter Singh) என்பவரின் மைந்தரான ஷெர் சிங் (Sher Singh) என்பவரை மூல்தானை முற்றுகையிடும் படைக்கு உதவியாக பிரிட்டிஷ் ரெசிடென்டு அறிவற்ற முறையில் அனுப்பினார். அவர், 1848, செப்டெம்பர், 14-ல் மூல்ராஜுடன் சேர்ந்து கொண்டார். ஜிண்டான் ராணியின் நடவடிக்கைகளும், சீக்கியர்களின் அதிருப்தியை அதிகரித்தது. போரில் பயிற்சி பெற்ற சீக்கியத் தலைவர்கள், ஷெர் சிங் தலைமையின்கீழ்த் திரண்டார்கள். இவ்விதம் மூல்தானில் ஏற்பட்ட கலகம் சீக்கிரத்திலேயே சீக்கியர்களின் தேசீயப் போராட்டமாய் மாறியதால், இரண்டாவது ஆங்கில-சீக்கியப்போர் தொடங்கியது. பெஷாவர் என்னும் நகரத்தைக் கொடுப்பதாக ஆசை காட்டி, சீக்கியர்களின் பழைய பகைவர்களான ஆப்கானியர்களையும், சீக்கியர்கள் தங்களுடன் சேர்த்துக் கொண்டார்கள்.

டல்ஹௌசி பிரபு அறைகூவலை ஏற்கும் முடிவுக்கு வந்தார்; 1848, அக்டோபர், 10-ல் பின் வருபவற்றை அறிவித்தார்:

'முன் நிகழ்வு இன்றியும், எடுத்துக்காட்டாகக் கூறுவதற்கு எதுவும் இல்லாமலும், சீக்கிய நாட்டு மக்கள் போருக்கு

அழைக்கின்றார்கள். பழிக்குப்பழி வாங்கும் முறையில் அவர்கள் அதைப் பெறுவார்கள் என உறுதி கூறுகிறேன்.' நவம்பர், 16-ல் ஒரு பிரிட்டிஷ் படையுடன், கௌ பிரபு ராவி ஆற்றைக் கடந்து, சீனுப் (Chenab) நதித் தீரத்திலுள்ள ராம் நகர் (Ramnagar) என்னுமிடத்தில் ஷெர் சிங்குடன் முடிவற்ற போரில் ஈடுபட்டார். சில்லியன் வாலா (Chillianwalla) என்னுமிடத்தில் உறுதியான அரண் அமைத்து, சீக்கியர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொண்டார்கள். 1849, ஜனவரி 13-ல் ஒரு பயங்கரப்போர் அவ்விடத்தில் நடந்தது. 'எல்லா ஆயுதங்களையும்' கொண்ட சீக்கியர்கள், மிக்க வீரத்துடனும், பிடிவாதத்துடனும் போரில் ஈடுபட்டார்கள். கடைசியில், ஆங்கிலேயர்கள் ஏராளமாய் இழந்து ஒரு 'பிர்ரிக்' (Pyrrhic) வெற்றியைப் பெற்றார்கள். ஆங்கிலேயர் பக்கம், 602 பேர் கொல்லப்பட்டனர், 1651 பேர் காயமடைந்தனர்; மூன்று ரெஜிமென்ட் படையின் கொடிகளையும், நான்கு பீரங்கிகளையும் அவர்கள் இழந்தார்கள். சீக்கியர்கள் வீரமுள்ள சில துருப்புகளையும், பன்னிரண்டு பீரங்கிகளையும் இழந்தார்கள். மூல்தானில் ஆங்கிலேயருக்கு வெற்றி கிடைத்ததால், அதன் கோட்டை, 1849, ஜனவரி, 22-ல் தாக்கப்பட்டது. மூல்ராஜ் என்பவர் இராணுவ மன்றத்தால் விசாரணை செய்யப்பட்டு, இறக்கும் வரையில் சிறைத் தண்டனையை அனுபவிப்பதற்காகக் கடலுக்கு அப்பால் அனுப்பப்பட்டு, இறந்தார். சில்லியன் வாலாப் போரில், ஆங்கிலேயர்கள் ஏராளமாய் இழந்ததனால், இந்தியாவிலிருந்தவர்களும் இங்கிலாந்தில் இருந்தவர்களும் மிகக் கடுமையாக, கௌ பிரபுவைக் குற்றம்கூறினார்கள். டைரக்டர்கள் மன்றம், சர் சார்லஸ் நேப்பியர் (Sir Charles Napier) என்பவரை அவருக்குப் பதிலாக நியமித்தது; ஆனால், புதிய தலைமைத் தளபதி, இந்தியாவிற்கு வருவதற்கு முன்பே, உணவுப் பொருள் தட்டுப்பாட்டினால், சில்லியன் வாலாவிலிருந்த உறுதியான அரண்களை விடுத்து, சீனுப் நதிக்கு அருகிலிருந்த குஜராத்து என்னும் நகருக்கு வந்த சீக்கியப் படைகளையும் ஆப்கானியர்களையும் 1849, பிப்பிரவரி, 21-ல் கௌ பிரபு என்னும் ஆங்கிலத் தளபதி தோற்கடித்தார். முக்கியமாக, பீரங்கிகளால் நடத்தப்பட்டதும் பீரங்கிப் போர் என வழங்கப்பட்டதுமான குஜராத்துப் போரில், முன்பு போரிட்டதைப்போலவே, உறுதியான வீரத்துடன் சீக்கியர்கள் போரிட்டாலும், ஆற்றலுள்ள தலைமை இல்லாததால், மறுபடியும் தோல்வியடைந்தார்கள். மாலிசென் என்பவர் இப்போரைப் பற்றி, 'சீக்கியர்களைவிட எப்படையும் நன்றாகப் போரிட்டிருக்க முடியாது; எப்படையும், சீக்கியர்களைப்

போல மோசமாக நடத்தப்பட்டதுமில்லை,' என்று கூறுகிறார். மேற்கொண்டும் எதிர்க்க முடியாத வகையில், அவர்கள் ஏராளமாக இழந்து, முடிவான வகையில் தோல்வி அடைந்தார்கள். ஆங்கிலேயர்கள் குறைவாக இழந்தார்கள். 69 பேர் கொல்லப்பட்டனர். 670 பேர் காயமடைந்தனர். ஆனால், அவர்கள் அடைந்த வெற்றி, முடிவானதாய் இருந்தது. கவர்னர்-ஜெனரல், 'இந்தியாவில் ஆங்கிலேயர்களின் போர் வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றாகக் குஜராத்தில் போரைக் கருதவேண்டும். அச்சமயத்தின் முக்கியத்தாலும், மிகச் சிறப்பாக முடிவு செய்யப்பட்ட அப்போரின் பிரச்சினையினாலும், அப்போர் குறிப்பிடத்தக்கது,' எனக் கூறினார். மார்ச்சு, 12-ல், ஷெர் சிங், சாட்டர் சிங் உட்பட, எல்லாச் சீக்கியத் தலைவர்களும் வீரர்களும், தங்களுடைய ஆயுதங்களை ஆங்கிலேயர்களுக்குக் கொடுத்துச் சரணடைந்தார்கள். ஆப்கானியர்கள், கைபர்க் கணவாய், காபூல் என்னும் இடங்களுக்குச் செல்லும் வரையிலும், சர் வால்டர் கில்பர்ட் என்பவரால் (Sir Walter Gilbert) துரத்தியடிக்கப்பட்டார்கள்.

இதற்கு மேலும் சுதந்தரத்தைக் காப்பாற்றுவதற்குச் சீக்கியர்களால் இயலவில்லை. ஸர் ஹென்றி லாரன்ஸ், எல்லன்பரோ பிரபு, அமைச்சரவையினர் ஆகியவர்களின் சம்மதமின்றியே, 1849, மார்ச்சு, 30-ல், ஒரு பிரகடனம் விடுத்து, பஞ்சாபை இணைத்துக்கொண்டார். அவர் கூறினார்: 'முன்பு கடைப்பிடித்த கொள்கைக்கும், இப்பொழுது கடைப்பிடிக்கும் கொள்கைக்கும், எவ்வளவுதான் மாறுபாடிருந்தாலும், பஞ்சாபை இணைப்பதுதான் நாம் பின்பற்றக்கூடிய அனுகூலமான கொள்கை. நம்முடன் நட்பாய் இருக்கும் ஒரு சீக்கிய அரசை ஏற்படுத்த முடியாதென்பதே என்னுடைய உறுதியான நம்பிக்கை.' கவர்னர்–ஜெனரலின் துணிவுள்ள கொள்கை, இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் பேரரசை 'இந்தியாவின் இயற்கையான எல்லைக்கும், ஆப்கானிஸ்தானத்தின் மலைகளின் அடிப்பாகம் வரைக்கும்' விரிவுபடுத்தி, சிறந்த அனுகூலங்களை விளைத்தது என்பதைப்பற்றிய ஐயப்பாடு ஏதும் இல்லை. மற்றவர்கள் செய்த தவறுகளுக்காக, நல்வாய்ப்பற்ற தலீப் சிங், துன்பப்பட வேண்டியிருந்தது. ஆண்டுக்கு ஐந்து லட்ச ரூபாயை ஒய்வு ஊதியமாகப்பெற்று, அவர் திருப்தி அடையவேண்டியிருந்தது. அவருடைய தாயான ஜிண்டான் ராணியுடன் இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்டு, இறுதியில் கிறித்தவ மதத்தைத் தழுவி, நார்போக் (Norfolk) என்னுமிடத்தில் ஆங்கில நிலச்சுவான்தாராய்

வாழ்ந்தார். மறுபடியும் இந்தியாவிற்கு வந்து, பழைய மதத்தில் சேர்ந்தாலும், அவருடைய பழைய நிலைமையைப் பெற முடியவில்லை. ஜிண்டான் ராணி, இலண்டனில் இறந்தாள்.

பஞ்சாபில், பிரிட்டிஷ் அரசியல் ஆதிக்கத்தை அதன் படைக்கலங்கள் ஏற்படுத்தியதைத் தொடர்ந்து, ஆட்சியைச் சீர்திருத்தம் செய்வதற்கான நடவடிக்கைகள் கவர்னர் ஜெனரலின்கீழ் இருந்த சர் ஹென்றி லாரன்ஸ், அவர் சகோதரர் ஜான் லாரன்ஸ், ஹெர்பர்ட் எட்வார்ட்ஸ், ஜான் நிக்கல்சன், ரிச்சர்ட் டெம்பிள் (Richard Temple) ஆகியவர்களையும், மற்றும் சிலரையும் கொண்ட ஒரு பிரிட்டிஷ் அதிகாரிகள் குழுவினால் எடுத்துக்கொள்ளப்பட்டன. இராணுவம், காவற்படை (Police), நீதி, நிலவரி, தொழில், வேளாண்மை முதலிய ஆட்சியின் பல பிரிவுகளிலும் சீர்திருத்தம் செய்யப்பட்டது. கவர்னர் ஜெனரல் முதலில் ஸர் ஹென்றி லாரன்ஸ் என்பரைத் தலைவராகவும், அவர் சகோதரர் ஜான் லாரன்ஸ் சார்லஸ் மான்சல் (Charles G. Mansel) என்பவர்களை அங்கத்தினர்களாகவும் கொண்ட மூவர் குழுவை ஏற்படுத்தினார். 1851-ல் மான்சல் என்பவருக்குப் பதிலாக ராபர்ட் மான்ட்கோமரி (Robert Montgomery) என்பவர் நியமிக்கப்பட்டார். ஆனால், 1853-ல் இக்குழுக் கலைக்கப்பட்டு, கவர்னர் ஜெனரலின் பிரதிநிதியாக, சர் ஹென்றி லாரன்ஸ் என்பவர் இராசபுதனத்திற்கு அனுப்பப்பட்டார். ஜான் லாரன்ஸ் என்பவர், பஞ்சாபுக்கு முதல் முக்கியக் கமிஷனராக நியமிக்கப்பட்டார். இதிலிருந்து சீக்கியர் பிரிட்டிஷ் பேரரசுக்கு உண்மையாக நடந்துகொண்டு, இரண்டாவது ஆங்கில-பர்மியப் போரிலும், 1857–1859-ல் நடந்த கலகத்தின் போதும் ஆங்கிலேயருக்கு விசுவாசமாய் இருந்தனர்.

## 4. ஆப்கானிஸ்தானமும் கம்பெனியும்

### (அ) துரானியின் தொல்லைகளும், ஆங்கிலேயரின் வடமேற்கு எல்லைக் கொள்கையும்

1757ஆம் ஆண்டிலிருந்து, தெளிவாகக் கூற வேண்டுமானால், 1765ஆம் ஆண்டிலிருந்து பக்சாரில் ஆங்கிலேயர்கள் வெற்றியடைந்த பிறகு (1764, அக்டோபர், 22-ல்) பீஹாரின் வடமேற்கு எல்லையில் இருந்த அயோத்தியின் பாதுகாப்பு மிக அவசியமானதாகவும், வங்காளத்திலிருந்த ஆங்கிலே

யரின் நிலையான கொள்கையாகவும், மாறியதிலிருந்து பதி னெட்டாம் நூற்ருண்டின் இறுதி வரையில் துரானி (Durrani) படையெடுப்பார் என்ற அச்சம் இந்தியாவிலிருந்த ஆங்கில ராஜதந்திரிகளின் மனத்தை வாட்டியது. ஆப்கானியர்கள் முதலில் அயோத்தியையும், பிறகு வங்காளத்தையும் தாக்கு வார்கள் என்று கல்கத்தாவில் இருந்த கம்பெனியின் ஆட்சி அஞ்சியது. 1761-ல், மராட்டியர்களும் ஆப்கானியர்களும் மோதிக்கொண்டபடி, முகலாயப் பேரரசின் வீழ்ச்சியைத் தொடர்ந்து இந்துஸ்தானத்தில் அரசியல் தலைமை பெற நினைக்கும் ஆப்கானியர்களுக்கும், அதே குறிக்கோளை அடைய முயற்சி செய்யும் ஆங்கிலேயர்களுக்கும் இடையில் ஒரு மோதுதல் ஏற்படுதல், வரலாற்றில் தர்க்க ரீதியில் நடக்கக் கூடியதுதான். தாய் நாட்டில் ஏற்பட்ட தொல்லைகள் காரணமாக, பானிப்பட்டில் வெற்றி கிடைத்த பிறகும், கிழக்கு நோக்கி, அஹமது ஷா அப்தாலி முன்னேற முடியாது போனது, ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட ஒரு நல்ல வாய்ப்புதான். 1773, ஜூன் மாதத்தில் அஹமது ஷா அப்தாலி இறந்த பிறகு துரானியர்களின் நல்வாய்ப்பில் தாழ்வும் ஏற்றமும் இருந்தன. அப்தாலி இறந்த பிறகு, அவர் மைந்தரும் வாரிசுமான தைமூர் ஷா (Timur Shah-1773–1793) பதவிக்கு வந்தார். ஆற்ற லின்மையும், சோம்பேறித்தனமும் உடைய அவரால் தம் தகப்பனரைப் போல உறுதியான கொள்கையைப் பின்பற்ற முடியவில்லை. ஆனல், 1793, மே மாதத்தில் காபூலின் சிம்மா தனத்தைக் கைப்பற்ற தைமூரின் ஐந்தாம் மைந்தரும் வாரிசு மான ஜாமன் ஷா (Zaman Shah) என்பவர் ஆற்றலும் பேரவா வும் கொண்ட அரசர், தாய் நாட்டில் குழப்பம் உண்டாக்கிய சக்திகளை அடக்கிய பிறகு, 1798-ல் லாகூரை நோக்கி முன்னேறி, நாதிர்ஷாவைப் போலவும், அஹமது ஷா அப்தாலியைப் போலவும், இந்துஸ்தானத்தின் உட்பாகத்தில் நுழைவதற்கு விரும்பினர். அவர் காலத்திலிருந்த சிலரால், ஜாமன் ஷாவின் திட்டம் 'மிக அற்பமானதாக'க் கருதப் பட்டாலும், பெரும்பான்மையான புதியகால நூலாசிரியர்கள், மாறிவிட்ட அரசியல் சூழ்நிலைகளினல் அவ்விதம் நடக்க முடியாது எனக் குறிப்பிட்டாலும், கல்கத்தாவிலிருந்த கம்பெனி ஆட்சியினர் 'காபூலிலிருந்து படையெடுக்கும் எண்ணத்தைக் கற்பனையில் மட்டும் காணக்கூடிய அபாய மாகக் கருதவில்லை. திப்புச் சுல்தான் கம்பெனிக்கு எதிராகச் சதியைச் செய்வதற்கு முயற்சி செய்த வாசிர் அலி (Wazir Ali), வங்காளத்தின் அதிருப்தியுற்ற நவாபுவான நசிர்-உல்-முல்க் ஆகியோர், இந்தியாவிற்கு வரும்படி ஜாமன் ஷாவை

அழைத்தனர். உண்மையில், ஸர் ஜான் ஷோரும், வெல்லெஸ்லி பிரபுவும் ஆட்சி செய்தபோது, இந்துஸ்தானத்தின் மீது ஜாமன் ஷா படையெடுப்பார் என்ற நம்பிக்கை, 'பிரிட்டிஷ் இந்தியப் பேரரசை அமைதியற்ற நிலையில் வைத்தது.' கட்டுப்பாடு செய்யும் கழகத்தின் தலைவரான டண்டாஸ் (Dundas) என்பவர், 'அவருடைய (ஜாமன் ஷா) பகைமையான திட்டங்களில் நம்பிக்கை வைப்பதை' உறுதியாக நினைத்தால், அவ்வரசருடைய செய்கைகளை எப்பொழுதும் கவனித்துக் கொண்டிருக்குமாறு வெல்லெஸ்லி பிரபுவுக்குக் கட்டளையிட்டார். 'ஏனெனில், அவ்வரசருடைய ஆற்றல், இராணுவப் படை, பண சம்பந்தமான வளங்கள் ஆகியவைகள், எதிரியைத் தோற்கடிக்கக் கூடிய அளவுக்கு அவ்வரசருக்கு வலுவை விளைவிக்கின்றன என்றும் அவர் நினைத்தார். எதிர்பார்க்கப் பட்ட ஆப்கானியர்களின் படையெடுப்பிலிருந்து அந்நாட்டைக் காப்பாற்றுவதற்காக, சர். ஜே. கிரேய்க் (Sir J. Craig) என்பவரின் தலைமையில் ஒரு பெரிய பிரிட்டிஷ் படையை அயோத்தியில் கவர்னர்-ஜெனரல் வைத்திருந்தார். ஆப்கானிஸ்தானத்துடன் பகை உணர்ச்சி கொண்டிருந்த பாரசீக நாட்டிற்கு 1799-ல் இரண்டு தூதுக் குழுக்களை அனுப்பி, அந்த ஆபத்தைத் தடுத்துவிட்டதாக அவர் கூறிக்கொண்டார். பாரசீகத்தில் குடியேறி, புஷையரில் (Bushire) கம்பெனியின் ரெசிடென்டாய் இருந்த மேதி அலி கான் (Mehdi Ali Khan) என்பவரின் தலைமையில் முதல் தூதுக் குழுவும், அடுத்தது கேப்டன் ஜான் மால்காம் (Captain John Malcolm) என்பவருடைய தலைமையிலும் பாரசீகத்திற்குச் சென்றன. பாரசீகம் நெருக்கியதால், ஜாமன் ஷா என்பவர் லாகூரிலிருந்து பெஷாவருக்குத் திரும்பினார். இது ஆங்கிலேயருக்குப் பெரிய ஆறுதலைக் கொடுத்தது. 1801, செப்டெம்பர், 28-ல், லண்டனிலிருந்த இரகசியக் குழுவுக்கு வெல்லெஸ்லி பிரபு எழுதிய கடிதத்திலிருந்து இது தெளிவாகத் தெரிகிறது. சாதோஜைஸ் (Sadozais) (அரச குடும்பத்தின் அங்கத்தினர்கள்) பயந்தா கான் (Payendah Khan) அவன் மூத்த குமாரனை பட்டே கான் (Fateh Khan) ஆகியவர்களுடைய தலைமையின் கீழ் இருந்த பரக்ஜைஸ் (Barakzais) ஆகிய இருபிரிவுகளுக்குமிடையே ஏற்பட்ட சச்சரவுகள் காரணமாக ஜாமன் ஷா என்கிற அந்நாட்டின் அரசர் மிக்க தொல்லைக்குள்ளாகி, இறுதியில் பதவியிலிருந்து விரட்டப்பட்டு குருடராக்கப்பட்டார்; அவர் அங்கிருந்து புகாராவுக்குத் (Bukhara) தப்பியோடி, அதன்பின் ஹீராட்டுக்குச் (Herat) சென்று, கடைசியாக இந்தியாவை அடைந்து, பரிதாபமான நிலையில் பிரிட்டிஷ்

அரசாங்கத்திடமிருந்து ஓய்வு ஊதியம் பெற்று, பல ஆண்டுகள் வரையில் லூதியானு எனும் நகரில் வாழ்ந்திருந்தார். அவர் படையெடுப்பார் என்றுதான், ஒரு காலத்தில் ஆங்கில ஆட்சி மிக அஞ்சியிருந்தது என்பது நோக்கத்தக்கது.

## (ஆ) ஜாமன் ஷாவின் ஆட்சிக்குப் பிறகு ஆப்கானிஸ்தானத்தில் ஏற்பட்ட கடுந்தொல்லைகள்

ஜாமன் ஷா பதவியிலிருந்து நீக்கப்பட்டதைத் தொடர்ந்து, கடுமையான தொல்லைகளும் குழப்பமும் ஆப்கானிய நாட்டில் ஏற்பட்டன. அவருக்குத் தமையனுரான மஹமூது ஷா (Mahmud Shah) என்பவர், அடுத்த அரசரானுர் (1800-1803). பாரக் ஜாய்ஸ் பிரிவின் தலைவரான பட்டேகான் என்பவரின் கைப்பொம்மையாய் அவர் மாறி, காபூலில் ஏற்பட்ட குழப்பத்தை அடக்க இயலாமல் தவித்தார். 1803-ல் அஹமது ஷா துரானியின் பேரரான ஷுஜா மிர்ஜா (Shuja Mirza) என்பவர், காபூலின் சிம்மாதனத்தைக் கைப்பற்றினுர். ஆனுல், ஷா சுஜாவும், ஒரு திறமையான ஆட்சியை உண்டாக்கவில்லை. 'அவரது ஆதாயவளம் மிகவும் குறைவாய் இருந்தது; அக் குழப்பமான நிலைமையைச் சமாளிக்கக் கூடிய குணம் அவரிடம் இல்லை ; எவ்விதமான முடிவையும் செய்ய அவரால் இயலவில்லை ; எல்லாவற்றிற்கும் மேலாக அவருக்குப் பணம் தேவைப்பட்டது.' 1809ஆம் ஆண்டின் இடையில் மஹமூது ஷாவின் நண்பர்களான பாரக் ஜாய்ஸ் என்பவர்களால், அவர் தோற்கடிக்கப்பட்டார்: அதனுல் மஹமூது ஷா அரசரானுர். 'இழந்த நல்வாய்ப்பைத் திரும்பப் பெறுவதற்குப் பல முயற்சிகள் செய்து தோல்வியுற்றதால் ஷா சுஜா, 1816-ல் லூதியானுவை அடைந்து, தம் தமையனுரான ஜாமன் ஷாவைப் போல, தாமும் ஆங்கிலேயரின் பாதுகாப்பின்கீழ் வாழலானுர். பாரக் ஜாய்ஸ் பிரிவின் கைப்பொம்மையாய் இருந்த மஹமூது ஷா, அவர்களுடைய கட்டுத் திட்டங்களைக் கண்டு வெறுப்படைந்து, அவர்களுடைய தலைவரான பட்டேகான் என்பவரை, 1818-ல் மிகக் கொடுமையான முறையில் கொன்றுவிட்டார். இதனுல், பாரக் ஜாய்ஸ் பிரிவினர் மிகக் கோபமடைந்து, ஹீரட்டு மாகாணத்தைத் தவிர, ஆப்கானிஸ்தானம் முழுவதையும் கைப்பற்றிக்கொண்டார்கள். மஹமூது ஷாவும், அவருக்கு மைந்தரான காமரான் (Kamaran)

என்பவரும் ஹீரட்டில் தஞ்சமடைந்து, பாரசீக மன்னரின் மேலாட்சியை ஒப்புக்கொண்டனர். 1829-ல், மஹமூது இறந்த பிறகுங்கூடக் காமரான் ஹீரட்டை ஆண்டு வந்தார்.

## (இ) தோஸ்து முகம்மது

இதற்கிடையில், பாரக் ஜாய்ஸ் பிரிவின் சிறந்த தலைவரான தோஸ்து முகம்மது, 1826-ல், தம்மைக் காபூலின் அரசராக அறிவித்துக்கொண்டார்; அதன் பிறகு தகுந்த முறைப்படி, அவர் அமீராக (Amir) பறைசாற்றப்பட்டார். அவர் காலத்தில் இருந்த அரசர்களைவிட, தோஸ்து முகம்மது மிக்க துணிச்சல் உள்ளவராயும், சுருசுருப்பானவராயும் இருந்தார்; ரஞ்சித் சிங்கின் உதவியுடன், காபூலைக் கைப்பற்றுவதற்காக 1833-ல் ஷா சுஜா செய்த முயற்சியை தோஸ்து முகம்மது தோல்வியடையும்படி செய்தார்; ஆனல், அதே சமயத்தில், தோஸ்து முகம்மதுவின் சகோதரரான சுல்தான் முகம்மது கான் என்பவருடைய ஆதரவைப் பெற்று, பெஷாவர் என்னும் நகரத்தைச் சீக்கியர் கைப்பற்றிக்கொண்டனர். உண்மையில், எல்லாப் பக்கங்களிலும் அவர் ஆபத்தால் சூழப்பட்டிருந்தார். 'வடக்கில், பால்க் (Balkh) என்னும் மாகாணத்தில் கலகங்கள் ஏற்பட்டன; தெற்கில், அவருடைய ஒரு தமையனர், அவருக்கு எதிராக, காண்டஹாரைப் கைப்பற்றியிருந்தார். கிழக்கில் ஷா சுஜாவையும், ஆங்கில அரசையும் பின்னணியாகக் கொண்டு, பெஷாவரிலிருந்த ரஞ்சித் சிங் அவருக்கு மிகுந்த தொல்லை கொடுத்தார்; மேற்கில், மஹமூது ஷாவும், காமரானும் இருந்தனர்; அவர்களுக்குப் பின் பாரசீகத்தின் சதியும், அதற்கும் வெகுதூரத்தில் ரஷ்யாவின் ஆபத்தும் இருந்தன.' இவை காரணமாக ஆங்கிலேயருடன் நட்புக் கொள்ள, தோஸ்து முகம்மது விரும்பினர். 1836ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில், இந்தியாவின் கவர்னர்-ஜெனரலாய் வந்த ஆக்லண்டு பிரபு (Lord Auckland - 1836 - 1842) என்பவருக்குத் தோஸ்து முகம்மது ஒரு வாழ்த்துக் கடிதத்தை மே மாதத்தில் எழுதி, சீக்கியர்களுக்கும் பாரசீகர்களுக்கும் எதிராக, ஆங்கிலேயர்களின் உதவியைக் கோரினர். ஆனல், மற்ற நாடுகளின் விவகாரத்தில் தலையிடுவதற்குத் தமக்கு விருப்பமில்லை என்று கவர்னர்-ஜெனரல் கூறிவிட்டார். பிரிட்டிஷ் அரசாங்கத்தை ராஜதந்திரத்தின் மூலம் நெருக்குவதற்காக, ஆப்கானிஸ்தானத்தின் அமீர், பாரசீகம், ரஷ்யா ஆகிய நாடுகளின் உறவை வலிந்து கோரினர்.

அச்சமயத்திலிருந்த ஐரோப்பிய அரசியலின் போக்கினால், ஆசியாவின் வரலாறு பாதிக்கப்பட்டது. இதைப் போன்றே, பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து ஐரோப்பிய அரசியலின் போக்கு, ஆசியாவை மிகப் பாதித்துக் கொண்டே வந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே கிழக்கில் தன் நாட்டை விரிவுபடுத்த வேண்டும் என்னும் ஆசை ரஷ்யாவுக்கு இருந்தது; இதை நோக்கமாகக் கொண்டுதான், 1813-ல் பாரசீகத்துடன் குலிஸ்தான் (Gulistan) உடன்படிக்கையைச் செய்து கொண்டது. அச்சமயத்தில் ரஷ்யாவிடமிருந்து பாரசீகத்தைப் பிரிப்பதில் இங்கிலாந்து வெற்றி பெற்று, 1814, நவம்பர், 25-ல், தெஹ்ரான் (Tehran) உடன்படிக்கையைப் பாரசீகத்துடன் செய்துகொண்டது. அதன்படி 'கிரேட் பிரிட்டனுடன் பகையாயிருந்த எல்லா ஐரோப்பிய நாடுகளுடனும் பாரசீகம் செய்துகொண்ட உடன்படிக்கை உபயோகமற்றதாகிவிடும். கிரேட் பிரிட்டனுக்குப் பகையாய் உள்ள ஐரோப்பிய நாடுகளின் படைகள் பாரசீகத்தில் நுழைவதை அந்நாடு தடுக்கும்.' ஆனால், ஒரு சில ஆண்டுகளுக்குப் பிறகு, 1833, இளயுதிர் காலத்தில், அப்பாஸ் மிர்ஜா என்பவர் இறந்ததனால், அவருக்குக் குமாரரான முகம்மது மிர்ஜா என்பவர் பாரசீகத்தின் புது அரசரானார். அவர் ரஷ்யாவின் நண்பராய் விளங்கியதால், பாரசீக சபையில், ரஷ்யர்களின் ஆதிக்கம் அதிகமாய் இருந்தது. ரஷ்யா தன் செல்வாக்கை உபயோகித்து, பிரிட்டிஷ் இந்தியப் பேரரசின் நலன்கள் சம்பந்தப்பட்ட வரையில் இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடமான ஹீரட்டு நகரைத் (1837 நவம்பர்—1838 செப்டெம்பர்) தாக்கும்படி, பாரசீகத்தைத் தூண்டியது. பேரிங் கடல் இணைப்பிலிருந்து (Bering Straight), காஸ்பியன் கடல் வரையில் (Caspian Sea) தொடர்ச்சியாகவும், கடந்து செல்ல முடியாத அளவுக்கு உயரமாகவும் உள்ள ஒரு மலைத் தொடர் ஆசியாவில் இருக்கிறது; அதில் இருக்கும் ஒரே ஒரு பிளவும், ஹீரட்டு அருகில்தான் இருக்கிறது; ஹீரட்டு அருகில் ரஷ்யாவின் எல்லைப்புறத் தளத்திலிருந்து அதிக உயரமுள்ள மலைகளைச் சந்திக்காமல், இந்தியாவிற்குள் வரமுடியும்; இதைப்போல வருவதற்கு, வேறு இடங்கள் இல்லை,' என்று சர். டி. எச். ஹோல்டிச் (Sir T. H. Holditch) கூறுகிறார். அச்சமயத்தில் ஆப்கானிய நாட்டில் பிரயாணம் செய்த எல்டிரட் போட்டிங்கர் (Eldred Pottinger) என்னும் ஓர் இளம் பிரிட்டிஷ் அதிகாரியின் துணிவுள்ள முயற்சிகளின் ஆதரவுடன், ஆப்கானியர்கள், வீரத்துடன் தங்கள் நாட்டைப் பாதுகாத்ததனால்

ஹீரட்டு நகரத்தைப் பாரசீகர்கள் கைப்பற்ற முடியவில்லை. ஆசியாவிற்கு ரஷ்யர்கள் வருவார்களோ; என்கிற பிரிட்டிஷ் மனக்கவலையை அதிகப்படுத்துவதற்கு இந்நிகழ்ச்சி காரணமாய் அமைந்தது.

## (ஈ) முதலாவது, ஆங்கில-ஆப்கானியப் போர்

அதிக தூரத்திலுள்ள மாஸ்கோவிலிருந்து ஆசிய நாடுகளைக் கைப்பற்றுவது என்கிற ரஷ்யாவின் ஆசை, நிச்சயமாக, கடுமையான காரியந்தான்; ஏனெனில், ஆப்கானிஸ்தானின் பயங்கரமான பீடபூமியைக் கடந்து, ஆங்கிலேயருடன் நட்புக் கொண்டிருக்கும் பஞ்சாபு அரசரின் பயிற்சியளிக்கப்பட்ட படையை முரியடித்து அதன் பிறகு பிரிட்டிஷ் இந்தியப் பேரரசின் எல்லைக்குள் நுழைவது என்பது எளிதன்று. இருந்தபோதிலும், ரஷ்யாவின் நடவடிக்கைகள் பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளுக்கு அச்சத்தைக் கொடுத்தது. சிந்து தேசத்தின் அமீர்களிடத்தில் வில்லியம் பென்டிங் பிரபு பின்பற்றிய கொள்கைகளுக்கு இவர்களின் தூண்டுதல் தான் பெரும்பாலும் காரணமாய் இருந்தது. ஆக்லண்டு பிரபு மனத்தில் அமைதியற்ற நிலையை இவர்கள் உண்டாக்கினர்கள் முக்கியமாக சீக்கியர்களுக்கெதிராக உதவியைச் செய்வதற்கு ஆங்கிலேயர்கள் மறுத்தபொழுது, ஆப்கானிஸ்தானத்தின் அமீர், பாரசீகத்துடனும் ரஷ்யாவுடனும் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கியபோது ஆக்லண்டு பிரபு மன நிம்மதியற்று இருந்தார், இந்த ரஷ்யபீதி (Russophobia), இங்கிலாந்திலிருந்த மெல்போர்ன் பிரபுவின் (Lord Melbourne) விக் அமைச்சர் சபையையும் (Whig Cabinet) மிக வாட்டியது. துணிவுள்ள அயல்நாட்டு காரியதரிசியான பால்மர்ஸ்டன் பிரபு (Lord Palmerston) என்பவர், ரஷ்ய திட்டங்களினல், 'இந்தியப் பேரரசின் பாதுகாப்பிற்கும் அமைதிக்கும் உடனடியான பேரபாயம் ஏற்படுவதை உணர்ந்தார்; அவர்களைத் தடுத்து நிறுத்துவதற்கான ஆற்றலுள்ள நடவடிக்கைகளை எடுக்குமாறு, இந்திய அரசாங்கத்தை வற்புறுத்தினர். 'எவ்வித நடவடிக்கைகள் எடுத்தால், அது தகுதியானதாகவும் விரும்பத்தக்கதாகவும் இருக்குமென்பதைத் தீர்மானிக்கவும்—ஆப்கானிஸ்தானத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளின் முன்னேற்றங்களை, முன்பு கவனித்ததைவிட அதிகமாகக் கூர்ந்து கவனித்து, அப்பகுதியில் ஏற்பட்ட ரஷ்யச் செல்வாக்கின் முன்னேற்றத்தைத் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்றும், ஏனெனில் அப்

பகுதி இந்தியப் பிரதேசங்களுக்கு மிகு அருகில் இருப்பதால், அதன் செல்வாக்கு உறுதியான முறையில் ஏற்படுவதற்கு, ஒருமுறை விட்டுவிட்டால், அவை நம்முடைய நாட்டின் நட்புடன்படிக்கை முறைகளை மிகவும் பாதித்து, சில சமயம் நம் நாட்டின் அமைதியையும் கெடுக்கக் கூடும். அப் பகுதியில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கவனிப்பதற்காகமட்டும், காபூலின் தோஸ்து முகம்மதுவிடம், ஒரு நம்பிக்கையான பிரதிநிதியை அனுப்பி இப்பிரச்சினையைத் தீர்ப்பதா அல்லது முதலில் வாணிக உடன்படிக்கையைச் செய்துகொண்டு தீர்ப்பதா என்கிற முடிவையும், எல்லையிலுள்ள உங்களுடைய பிரதிநிதிகளிடமிருந்து பெற்ற செய்தியைக் கொண்டும் அல்லது திரு. மெக்நெயில் (Mr. McNeill) பாரசீகத்தை அடைந்தவுடன் அவரிடமிருந்து இனிமேல் பெறப்போகும் செய்தியைக் கொண்டும், ஆப்கானிய விவகாரங்களில் நீங்கள் தலையிடுவதற்குத் தகுந்த சமயம் கிடைத்துவிட்டது என நினைத்தால், அப்பகுதியில் ரஷ்யர்களின் ஆதிக்க வளர்ச்சியைத் தடுப்பதற்குத் தகுதியானது என நீங்கள் நினைக்கும் எவ்வித நடவடிக்கைகளையும் எடுக்கும் முடிவையும் உங்களுக்கு விட்டுவிடுகிறோம். அந்நாட்டில் பாரசீக நாட்டின் ஆதிக்கம் பரவுவதைத் தடுப்பதற்கும், அல்லது ஏற்படவிருக்கும் ரஷ்யச் செல்வாக்கின் ஆக்கிரமிப்புக்கு எதிராகத் தகுந்த சமயத்தில் ஒரு தடை ஏற்படுவதற்கும், சந்தேகமில்லாமல், இப்படிப்பட்ட ஒரு தலையீடு அவசியமானதுதான்,' என 1836, ஜூன், 25-ல், டைரக்டர்கள் மன்றத்தின் இரகசியக்குழு, கவர்னர்-ஜெனரலுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது.

இச்செய்தியை ஆதாரமாகக்கொண்டு, அலெக்ஸாண்டர் பர்னஸ் (Alexander Burnes) என்பவரை, 1836, நவம்பரில் பம்பாயிலிருந்து காபூலுக்குக் கவர்னர்-ஜெனரல் அனுப்பினார். வணிகத் தூதுக்குழு என்ற போர்வையில் அனுப்பப்பட்டாலும் உண்மையில், பர்னஸ் என்பவர் கூறியபடி 'அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளைக் கவனிப்பதற்கும், இனிச் செய்ய வேண்டியவைகளைத் திர்மானிப்பதற்குந்தான்' அவர் அனுப்பப்பட்டார். 1837, செப்டெம்பர், 20-ல், பர்னஸ் காபூலை அடைந்தார். ரஷ்யர்களின் நட்புறவைவிட, ஆங்கிலேயர்களின் நட்புறவை விரும்பிய தோஸ்து முகம்மது, பிரிட்டிஷ் ஆட்சி வலிய ஆரம்பித்த பேச்சு வார்த்தைகளை நடத்துவதற்கு அவர் சம்மதித்தார். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி தன் செல்வாக்கை உபயோகித்து, பெஷாவரை அவருக்குத் திரும்பக்கொடுக்க வேண்டும் என்று ரஞ்சித் சிங்கை வற்புறுத்தவேண்டும் என்ற

நிபந்தனையைக் கூறினார். இதை ஒப்புக்கொண்டு இந்த அமீருடன் ஒரு நட்புடன்படிக்கையைச் செய்துகொள்ளலாம் என்று பர்னஸ் என்பவரும் சிபாரிசு செய்தார். ஆக்லண்டு பிரபுவும், அவருக்குக் காரியதரிசிகளான வில்லியம் மக்நாட்டன் (William Macnaghten), ஜான் கால்வின் (John Colvin) ஆகிய இருவரும், இக்கருத்தை ஒப்புக்கொள்ளவில்லை. ஆங்கில-ஆப்கானிய உடன்படிக்கை ஏற்படும் என்கிற நம்பிக்கை, இவ்விதமாக அழிந்தது; பர்னஸ் என்பவருடைய தூது தோல்வியை அடைந்ததால் 1838, ஏப்பிரல், 26-ல் அவர் காபூலை விட்டு வெளியேறினார். பிரிட்டன் நட்புறவைப் பெறுவதில் ஏமாற்றம் அடைந்ததால், பாரசீக-ரஷ்ய நட்புறவை அமீர் இயற்கையாக விரும்பலானார்; இதுவரையிலும் 'வெறுக்கத்தக்க முறையிலும், ஊக்கம் இயக்கத்தக்க முறையிலும்' நடத்தப்பட்ட ரஷ்யத் தூதுவரான விக்டேவிட்ச் (Vicktevitch) என்பவரை அவர் வரவழைத்து அன்புடன் உபசரித்தார்.

சீக்கியர்களிடமிருந்து பெஷாவரைப் பெறுவதற்கு ஆங்கிலேயர்களின் உதவியைத் தோஸ்து முகம்மது நாடிய பொழுது, மற்ற நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதில்லை என்ற காரணத்தைக் கூறித் தயங்கிய ஆக்லண்டு பிரபு, இப்பொழுது தோஸ்து முகம்மதுவைப் பட்டத்திலிருந்து நீக்குவதற்கும், நாடு கடத்தப்பட்ட ஷா சுஜாவை ரஞ்சித் சிங்கின் ஆதரவுடன் காபூலின் சிம்மாதனத்தில் ஏற்றுவதற்கும் தகுந்த நடவடிக்கைகளை எடுப்பதற்குச் சிறிதும் அஞ்சவில்லை. இம்முடிவைச் செயற்படுத்துவதற்காக, அரசாங்கக் காரியதரிசியான மெக்நாட்டன் என்பவரை அவர் லாகூருக்கு அனுப்பினார்; 1838, ஜூன், 26-ல், ஷா சுஜா, ரஞ்சித் சிங், ஆங்கிலேயர்கள் ஆகியவர்களுக் கிடையே ஒரு முக்கூட்டு ஒப்பந்தம் (Tripartite Treaty) ஏற்பட்டது. இந்நடவடிக்கையால், ஆப்கானியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையில் போர் நிகழவிருந்தது. நடத்தக்கூடிய போரில் அரசாங்கத்தின் நியாயத்தைக் காட்டுவதற்காக, சிம்லாவிலிருந்து ஒரு விளம்பர அறிக்கையை, 1838, அக்டோபர், 1-ஆம் தேதி, கவர்னர்-ஜெனரல் வெளியிட்டார். ஹெர்பர்ட்டு எட்வார்ட்ஸ் என்பவர் கூறியபடி, அதில் 'ஒரு ரஷ்ய ராஜ தந்திரி பொருமை கொள்ளும் அளவுக்கு மிக்கத் துணிவுடன், 'தோஸ்து முகம்மதுவின் கொள்கைகளும் நடவடிக்கைகளும் திரித்துக் கூறப்பட்டிருந்தன.' சிம்லா அறிக்கையில் 'பொய்களின் மேல்

பொய்கள் குவிக்கப்பட்டிருந்தன.' 'கோபமூட்டப்படாமலே, எங்களுடைய பழைய நண்பன்மேல் தொடுக்கப்பட்ட தாக்குதல்' என்று தோஸ்து முகம்மதுவைப் பற்றிக் கவர்னர்-ஜெனரல் குறிப்பிட்டிருந்ததை 'உண்மை சம்பந்தப்பட்ட வரையில், கட்டுக் கதையில் வரும் ஆட்டுக் குட்டியின்மேல் ஓநாய் சாட்டிய குற்றச்சாட்டைப்போல இருக்கிறது' என ட்ராட்டர் (Trotter) என்பவர் பொருத்தமாக ஒப்பிட்டுக் கூறினர்.

ஆக்லண்டு பிரபுவின் கொள்கை, எவ்விதக் கோணத்தில் இருந்து பார்த்தாலும், நியாயமாகத் தென்படவில்லை. ஆப்கானிஸ்தானத்தின் சுதந்தரமான அரசர் என்ற முறையில், பாரசீக-ரஷ்ய நட்புறவைப் பெறுவதனுல், பிரிட்டிஷ் நலன்களுக்கு எவ்விதப் பாதகம் ஏற்பட்டாலும், அவைகளைப் பெறுவதற்குத் தோஸ்து முகம்மதுவிற்குப் பூரண உரிமை உண்டு. பிரிட்டிஷ் நட்புறவைப் பெற முடியாததால், பாரசீக-ரஷ்ய நட்புறவைப் பெறுவதற்குத் தோஸ்து முகம்மது, முடிவு செய்தார் என்பதையும் குறித்துக்கொள்ள வேண்டும். 'பாரக்ஜாய்ஸ் சர்தார்களின் (Barakzais Sirdars) நட்புறவை நாமே ஒதுக்கித் தள்ளி, அவர்களைப் பகைத்துக்கொண்டோம். நாம் அவர்களை ஒதுக்கி வைத்தமையால் அவர்கள் பாரசீக மன்னரிடம் தஞ்சம் அடைந்தார்கள்,' எனக் கேயி (Kaye) என்பவர் நியாயமாகக் கூறுகிருர். 1838, செப்டெம்பரில் ஹீரட்டிலிருந்து பாரசீகர்கள் பின் வாங்கியதற்குப் பிறகு, பாரசீக-ரஷ்யரின் ஆக்கிரமிப்பு, ஆங்கிலேயரின் நலன்களுக்கு மிகுந்த ஆபத்தைத் தருவது என்கிற பொருந்தாக் காரணம், அடிபட்டு விட்டது; 'பாரசீகர்கள் பின்வாங்கிய நிகழ்ச்சியினல் நேர்மை என்று ஆக்லண்டு காட்டியவைகள் எல்லாம் உண்மையற்றனவாகச் செய்து, சிந்து நதியின் குறுக்கே சென்று செய்த போரை, ஒரு அறிவற்ற செயலாகவும் ஒரு குற்றமாகவும் அது செய்தது.' அரசியல் கண்கொண்டு பார்க்கும் பொழுது கவர்னர்-ஜெனரலின் கொள்கை, தேவையற்றதாகவும், தகுதியற்றதாகவும் இருக்கிறது. தோஸ்து முகம்மதுவைப் பட்டத்திலிருந்து நீக்குவதற்கு அவர் விரும்பினர். அடக்க முடியாத ஆப்கானிய மலைச்சாதியினரைப்போதுமான அளவுக்குத் தம் கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருக்கும் அவர், ஒரு திறமையான அரசர்; ஆனல், சிறிது அளவு திறமையுள்ள ஷா சுஜா, இதுவரையில் தோல்வியைத் தவிர வேறு எதையும் பெறவில்லை; கிறிஸ்தவ பிரிட்டிஷ் ஆட்சி, ஆப்கானியர்களின் பழைய பகைவர்களான சீக்கியர்கள் ஆகியவர்களின் உதவியுடன், அவரை மறுபடியும் பதவியில் அமர்த்துவ

தால் ஆப்கானிய முஸ்லீம்களிடையே அவர் புகழைப் பெறு வார் என்ற நம்பிக்கையும் இல்லை. 'ஆப்கானிய மக்கள் மிகத் திடமான குரலில், பரூக்சயி (பாரக்ஜாய்) தலைவர்களை ஆதரித்து' ஷா சுஜாவை விரட்டி அடித்தனர். 'இப்பரூக்சயி தலைவர்களின் அரசு பல குறைபாடுகள் உள்ளதாய் இருந் தாலும், துரதிருஷ்டவசமான சுத்தோஜயி அரசர்க (Suddozye Princes) ளிடமில்லாத ஆற்றலுடனும் நிதானத்துடனும் மக்களைப் பாதுகாத்து, நாட்டில் அமைதி நிலவச் செய்தனர்.' சுருக்கமாகக் கூறவேண்டுமானால், ஆப்கானியப்போர், கேயி (Kaye) கூறியவாறு, 'அரசியல் இராணுவத் தந்திரங்களுக் கெதிராக நடத்தப்பட்டது. இதை விடுத்து, உயர்ந்த காரணங்களைக்கொண்டு ஆராய்ந்தவர்கள், இது நிச்சயமாகத் தோல்வியில்தான் முடியும் எனக் கூறினர்கள்; ஏனெனில், முக்கிய இடத்தில் அநீதி எனும் நோய் பரவி இருக்கிறது! உண்மையில், கடவுளின் பொறுமைக்கும், மனிதனின் தன் னடக்கத்திற்கும் இது ஒரு சோதனையாய்த் திகழ்ந்தது; அதனால், ஆரம்பத்தில் வெற்றியும் புகழும் கிடைத்தாலும், இறுதியில் தோல்வியும் அவமானமும் நிச்சயமாகக் கிடைத்தே தீரும்.' ஆக்லண்டு பிரபுவின் கொள்கையை அவர் காலத்தில் எதிர்த்தவர்களில், வெல்லிங்டன் பிரபுவை முக்கியமாகக் குறிப்பிடலாம்; அவர் ஸ்ரீ தக்கர் (Mr. Tucker) என்பவருக்குப் பின் வருமாறு எழுதினர்: 'ஆப்கானிஸ்தானத்தின் அர சாங்கத்தை நிர்ணயிப்பதற்கு, சிந்து நதியை ஒரு முறை கடந்து செல்வதன் விளைவு என்னவெனில், அந்நாட்டிற்கு அடிக்கடி செல்ல வேண்டியிருக்கும் என்பதுதான்.' அவருடைய கூற்று, தீர்க்க தரிசனம் வாய்ந்ததாய் இருந்தது.

இவ்வித ஆலோசனைகளை ஏற்காமல், ஜான் கால்வின் (John Colvin), டபிள்யூ. எச். மெக்நாட்டன் (W. H. Macnaghten) போன்ற தம் அந்தரங்க ஆலோசனையாளர்களின் அறிவுரை யின்படி தோஸ்து முகம்மது நாட்டின்மீது படையெடுப் பதற்குச் 'சிந்து நதிப் படைகளை'த் திரட்டும்படி, ஆக்லண்டு பிரபு உத்தரவிட்டார். பிரிட்டிஷ் படைகள் தம் நாட்டு வழி யாகச் செல்லக்கூடாதென ரஞ்சித் சிங் தடை செய்ததாலும், மற்றக் காரணங்களாலும், சர் ஜான் கீன் (Sir John Keane), சர் வில்லோபி காட்டன் (Sir Willoughby Cotton) ஆகியவர் களின் தலைமையின் கீழ், ஷா சுஜாவுடன், ஒரு முக்கிய பிரிட்டிஷ் படை, பெரோஸ்பூரிலிருந்து கிளம்பி, பஹவல்பூர் (Bahawalpur), சிந்து, பலுச்சிஸ்தான், போலன், கோஜாக் (Khojak) கண வாய்கள் வழியாக, ஆயிர மைல்களைக் கடந்து சென்று,

காபூலை அடைய வேண்டுமெனத் திட்டமிடப்பட்டது; அதே சமயத்தில் கர்னல் வேட் (Colonel Wade), ஷா சுஜாவின் மகனுரான தைமூர் (Timur) ஆகியவர்களைக்கொண்ட ஒரு சீக்கியப் படை, பஞ்சாபிலிருந்து கிளம்பி, பெஷாவர், கைபர்க் கணவாய் வழியாகச் செல்லும். டாக்டர் ஸ்மித்து (Dr. Smith) கூறியபடி, 'இத்திட்டத்தில் சிறந்த போர்த் தந்திரம் காணப் படவில்லை; இது ஒரு பைத்தியக்காரனின் திட்டமே ஒழிய, ஒரு சிறந்த ராஜதந்திரியின் திட்டமன்று.' மேலும், சிந்து நாடு வழியாகச் செல்வது, 1832ஆம் ஆண்டில் சிந்து நாட்டின் அமீர்களுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு விரோதமான செயலாகும். காண்டகாரை (Qandahar) அடையுமுன்னரே, பிரிட்டிஷ் படைகளில் பலர், தண்ணீர், உணவு ஆகியவைகள் கிடைக்காமல் இறந்தனர். அரசியல் விவகாரங்களைக் கவனிப் பதற்காக சர் டபிள்யூ. எச். மெக்நாட்டனும், அவருடைய முக்கிய உதவியாளரான சர் அலெக்ஸாண்டர் பர்னஸ் (Sir Alexander Burnes) என்பவரும், அப்படையுடன் சென்ருர்கள்.

நேசப்படைகள் முதலில் வெற்றியைப் பெற்றன. சர் ஜான் கீன் தலைமையின்கீழ், அவைகள் 1839ஆம் ஆண்டில், ஏப்பிரல் மாதத்தில் காண்டஹாரைக் கைப்பற்றி, ஜூலை மாதம் 23ஆம் தேதியன்று கஜினி நகரைத் தாக்கின. 1839ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 3ஆம் தேதியன்று காபூல் நகரம் பிடிக்கப்பட்டது; அதனுல் தோஸ்து முகம்மது அதைக் காலி செய்துவிட்டு, வெளியேறினுர். ஷா சுஜா, வெற்றியுடன் காபூல் சிம்மாதனத்தில் அமர்த்தப்பட்டார்; ஆனுல், மக்கள் அவருக்கு எவ்வித வரவேற்பையும் அளிக்கவில்லை; 'பொது வான சலாம்' கூடச் செய்யவில்லை. 'அந்நிகழ்ச்சி, பிரேத ஊர்வலம் போலக் காட்சியளித்ததேயல்லாமல், அவ்வரசன் தன் நாட்டை மீண்டும் பெற்று, தலைநகருக்குத் திரும்பும் காட்சியாக அது இல்லை' எனக் கேயி குறிப்பிடுகிருர். ஒரு சிறிது காலத்திற்கு பிரிட்டிஷ் படைக்கலங்கள் மிக்க பிரகாசத் துடன் விளங்குவது தெரிந்தது. ஆனுல், 1841ஆம் ஆண்டின் இறுதியில், 'பிரகாசமான நிலையில் இருந்து பரிதாபகரமான முறையில் மங்கலாக்கப்பட்டது.

அந்நிலையில், பெரிய அபாயங்கள் பல நேரும் வாய்ப் பிருந்தது. பிரிட்டிஷ் ஆயுத பலத்தாலும், சீக்கியர்களின் உதவியினுலும், இழந்த அரசைத் திரும்பப்பெற்ற ஷா சுஜா, மக்களின் அனுதாபத்தையாவது அல்லது ஆதரவையாவது பெற முடியவில்லை; 1840ஆம் ஆண்டு தோஸ்து முகம்மது

சரணடைந்து, கல்கத்தாவிற்கு அவர் கைதியாக அனுப்பிய பிறகுங்கூட, 'பிரிட்டிஷ் ஆயுதங்களை வேலியாகக் கொண்டு தான் அச்சிம்மாதனத்தைப் பாதுகாக்க வேண்டியிருந்தது.' ஆனல், ஏராளமான பொருளைச் செலவிட்டுதான், பிரிட்டிஷ் படையை ஆப்கானிஸ்தானத்தில் பாதுகாக்க வேண்டியிருந்தது. இதனல் இந்தியாவின் வள ஆதாரம் மிகப் பாதிக்கப்பட்டது; அப்படைகள் அந்நாட்டில் நிறுத்தப்பட்டதால், பொது மக்கள் உபயோகப்படுத்தும் சாமான்களின் விலைகள் உயர்ந்தன. அதனல் செல்வந்தர்களும், ஏழைகளும் மிகப் பாதிக்கப்பட்டனர். சுதந்தரப் பிரியர்களான ஆப்கானியர்கள் நாட்டில் நிறுத்தப்பட்டிருந்த பிரிட்டிஷ் துருப்புகளின் தவறுகளால், அயல்நாட்டு ஆக்கிரமிப்பிற்கு எதிராய் எழுந்த அதிருப்தி அதிகமாகியது. உண்மையில், ஆப்கானியர்கள் மேல் சுமத்தப்பட்ட அரசாங்கம், 'நாடு முழுவதற்குமே ஒரு சாபக்கேடாய்த் திகழ்ந்தது.'

ஷா சுஜாவை அவர் நாட்டினர் ஏற்றுக்கொள்ளாத பொழுது, அவரை அந்நாட்டிலிருந்து திரும்ப வரவழைப்பது தான் பிரிட்டிஷ் ஆட்சி செய்யக்கூடிய சிறந்த வழியாகும். ஆப்கானிஸ்தானத்தில் எழுந்துள்ள மிக மோசமான நிலைமையைக் கருத்தில் கொண்டு, டைரக்டர்கள் மன்றம், 'அந்நாட்டைக் கைவிட்டு, தோல்வியை வெளிப்படையாக ஏற்றுக்கொள்ளும்படி' மிக விவேகமான யோசனையைக் கூறியது. பிரிட்டிஷாரின் எதிர்கால வாய்ப்பு 'ஒவ்வொரு திசையிலும் பிரகாசமடைந்து வருவதாகவும்' ஒவ்வொரு பொருளும் '**ரோஜா மலர் வண்ணமாக**' (Couleur de rose) காட்சியளிப்பதாகவும் நினைத்த மக்நாட்டன், பின் வாங்கும் திட்டத்தை 'இணையற்ற அரசியல் தவருக' நினைத்து அதை ஒதுக்கித் தள்ளினர். ஆக்லண்டு பிரபுவுங்கூட, தம் கொள்கை முழுத்தோல்வி அடைந்ததை ஒப்புக்கொள்ள மனமின்றி, அபாயகரமானதும், உயர்வற்றதுமான அரை குறை நடவடிக்கைகளைப் பின்பற்றலானர். ஆப்கானிஸ்தானத்தைக் கைப்பற்றுவதற்கு வந்த பிரிட்டிஷ் படை, அந்நாட்டில் தங்கி விட்டது; கிழக்கு ஆப்கானிஸ்தானத்தில் உள்ள மலைச்சாதி தலைவர்களுக்குக் கொடுக்கப்படும் உதவித் தொகையைக் குறைத்து, செலவைக் குறைப்பதற்கு முயற்சி செய்யப் பட்டது; இவ்வித உதவித் தொகைதான், அவர்களை ஆங்கிலேயருடன் சேர்ந்து இருக்கும்படி செய்தது. 'தவருன இப்பொருளாதாரச் சிக்கனத்தின்' விளைவாக, அத்தலைவர்கள் பல பாகங்களிலும் கலகஞ்செய்தார்கள். கவர்னர்-ஜெனரல்

மற்றுமிரண்டு பெரிய தவறுகளையும் செய்தார். 1841ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் காட்டன் என்பவருக்குப் பதிலாக, வயதில் முதிர்ந்தவரான ஜெனரல் எல்பின்ஸ்டன், காபூல் படைகளின் தளபதியாக நியமிக்கப்பட்டார்; படை முதல்வர் (Commander-in-chief) இந்நியமனத்தை எதிர்த்து, காண்டஹாரின் தளபதியான நாட் (Nott) என்பவரை நியமிக்கக் கோரினார். ஆனால், கவர்னர்-ஜெனரல் அதைக் கேளாமல், இவ்விதப் பெருந்தவறான நடவடிக்கையை எடுத்தார். படைத்தளவாடங்கள் இருக்கும் இடத்திற்கு நெடுந்தூரத்தில், நகருக்கு வெளியே, சரியாக அரண் செய்யப்படாத படையிருப்பு நிலையங்களில் பிரிட்டிஷ் இராணுவத்தினர் அடைபட்டுக் கிடந்தபோது, பல ஹிசார் (Bala Hissar) என்கிற காபூல் கோட்டையைத் தம் அந்தப் புரமாக ஷா சுஜா உபயோகப்படுத்த அனுமதித்ததும் மற்றொரு பெரிய தவறு. 1839ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 27ஆம் தேதியன்று, ஆங்கிலேயரின் நண்பரான ரஞ்சித் சிங் இறந்தார். அவருக்குப் பின் பஞ்சாபில் குழப்பம் ஏற்பட்டதால், சீக்கியர்களின் உதவியை அவர்கள் பெற முடியாமற்போயிற்று.

1841ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் கலவரங்கள் உண்டாயின. நவம்பர் மாதம் 2ஆம் தேதியன்று, கூச்சலுடன் சென்ற ஒரு கும்பல் அலெக்ஸாண்டர் பர்னஸ் என்பவருக்குச் சகோதரரான சார்லஸ் (Charles) என்பவரும், லெப்டினன்ட் வில்லியம் பிராட்புட் (William Broadfoot) என்பவரும் கொலையுண்டனர். ஆங்கில சிவில் இராணுவ அதிகாரிகளும், துருப்புகளும், உடனடி நடவடிக்கை எடுக்காமல், 'சிறிய தீயை'த் 'தங்களுடைய சகிப்புத்தன்மை காரணமாகப் பெருந்தீயாக' வளருவதற்கு இடமளித்தனர்; தோஸ்து முகம்மதுவின் மகனான அக்பர்கான், புரட்சிக்காரர்களுக்குத் தலைமை தாங்கி நடத்தினார். ஆங்கிலேயர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டு, கலகத்தின் தன்மையைச் சரிவர உணரவில்லை. 'அபாயத்தின் குறிகளைக் கேட்கக் கூடாதெனத் தங்கள் காதுகளை இறுக மூடிக்கொண்டு, மராட்டியக் குழிகளில் பதுங்கி இருந்ததைப்போல, பாதுகாப்பான இடத்தில் இருப்பதாக அவர்கள் கனவு கண்டனர்,' என அக்காலத்திலிருந்த தார்ன்டன் (Thornton) என்கிற ஆசிரியர் கூறுகிறார். இக்கலவரங்களைக் கேட்ட ஆக்லண்டு பிரபு மிக்க கலக்கமடைந்தார். 'ஒரு நாட்டின் தேசீய, சமய உணர்ச்சிகளுக்கெதிராக'ப் போரிடும் தவற்றைக் காலங்கடந்து அவர் உணர்ந்தார்; 'இந்தியாவிற்குச் சொந்தமானவைகளை அந்

நாட்டிலிருந்து உடனடியாகவும், கௌரவமாகவும், வாபஸ் பெறும் வழியைப் பற்றிச் சிந்திக்க' ஆவலோடு இருந்தார். கலகக்காரர்களை ஒடுக்காமல், அவர்கள் தளவாட இருப் பிடத்தைக் கைப்பற்றுவதற்கு ஆற்றலற்ற தளபதியான எல்பின்ஸ்டன் இடங்கொடுத்தார்: ஆப்கானிஸ்தானத்தி லிருந்த உறுதியற்ற பிரிட்டிஷ் அரசியல் அதிகாரி, உணவுப் பொருள் இல்லாமல் இறக்க நேரிடும் எனப் பயந்து, டிசம்பர் மாதம் 11ஆம் தேதியன்று, அக்பர்கானுடன் ஓர் அகௌரவ மான உடன்படிக்கையைச் செய்தார். அதன்படி, காபூலி லிருந்து பிரிட்டிஷ் படைகள் உடனடியாக வெளியேற வேண்டு மென்றும், தோஸ்து முகம்மது காபூலுக்குத் திரும்பவேண்டும் என்றும் ஷா சுஜா, ஓய்வு ஊதியம் பெற்று அந்நாட்டில் தங்கலாம் என்றும், இல்லை என்றால் பிரிட்டிஷ் படையுடன் இந்தியாவிற்குச் செல்லலாம் என்றும் தீர்மானமாயிற்று. ஆனால் மக்நாட்டன், இவ்வுடன்படிக்கையின் விதிகளை உண்மை யாகப் பின் பற்றாமல், அக்பர் கானுக்குப் பகைவர்களான கிஜாலி (Ghizali) கிசில்பாஷி (Qizilbashi) தலைவர்களுடன் ஒரு சில நாள்களுக்குள்ளாகவே அவர் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர். விவேகமற்ற இச்செயல் காரணமாக அவருக்குத் தகுந்த தண்டனை கிடைத்தது. ஏனெனில், இத் தலைவர்கள் அவரை ஏமாற்றி, டிசம்பர் மாதம் 23ஆம் தேதி யன்று அக்பர் கானைச் சந்திக்கும்படி வஞ்சித்து, அவரையும் அவருடைய தோழர்களுள் ஒருவரான கேப்டன் திரெவோர் (Captain Trevor) என்பவரையும், அவர்கள் கொன்றார்கள்; அவருடைய மற்றுமிரண்டு தோழர்களான லாரன்ஸும், மெக்கன்ஸியும் உயிர் தப்பினாலும், அவர்கள் கைதிக ளானார்கள்.

மெக்நாட்டனுக்குப் பின் பதவி ஏற்ற மேஜர் எல்டிரட் போட்டிங்கர் (Major Eldred Pottinger) ஆப்கானியர்களுடன் நடத்தப்பட்ட பேச்சு வார்த்தைகளை நிறுத்த விரும்பினர்; மேலும், பலஹிசாரைக் கைப்பற்றி, உதவி வரும் வரையில் தங்களைப் பாதுகாத்துக்கொள்வது அல்லது சேல் (Sale) என்பவரால் மிக ஆற்றலுடன் பாதுகாக்கப்பட்ட ஜலாலா பாது (Jalalabad) கோட்டைக்குச் செல்வது எனவும் திட்ட மிட்டார். ஆனால், எல்பின்ஸ்டனும் மற்ற இராணுவ அதிகாரி களும் எதிர்த்து நிற்பதற்கும், தங்கள் நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும். ஆற்றலின்றி, அவருடைய ஆலோசனை களை ஏற்க மறுத்து, மேலும் பல சலுகைகளைப் பகைவர் களுக்குக் கொடுக்க முன் வந்தனர். பீரங்கிகளையும்,

துப்பாக்கிகளையும், போர்த் தளவாடங்களையும், பகைவர்களுக்குக் கொடுத்து, 1842ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 1ஆம் தேதி அவ்வுடன்படிக்கையை அங்கீகரித்தனர். ஜனவரி மாதம் 6ஆம் தேதியன்று, 'தலைகுனிந்த, சோர்வடைந்த, உணர்ச்சியற்ற' பிரிட்டிஷ் துருப்புகளும் அவைகளைச் சேர்ந்தவர்களுமாக, 16,500 பேர், இந்தியாவை நோக்கி, தங்கள் பயணத்தை ஆரம்பித்தனர்; குளிர்காலப் பனியின் கொடுமைக்காளாகியும், ஆப்கானியர்கள் பொழிந்த துப்பாக்கிக் குண்டுகளுக்கிரையாகியும், பலர் இறந்தனர்; ஆப்கானியர்களின் கோபத்தை அக்பர் கானுல் அடக்க முடியவில்லை. ஒரு சில நாள்களுக்குள், பெண்களும் குழந்தைகளும், போட்டிங்கர், லாரன்சு, எல்பின்ஸ்டனுட்பட பல அதிகாரிகளும், அக்பர்கானுக்குப் பணயக் (Hostages) கைதிகளாயினர். இப்படியிருந்தும், பிரிட்டிஷ் துருப்புகளைக் கொல்லும் வேலை தொடர்ந்து நடந்தது; ஜனவரி மாதம் 10ஆம் தேதியன்று புறப்பட்ட துருப்புகளில் நான்கில் ஒரு பாகந்தான் தப்பியது. 'பின் வாங்கும் நிகழ்ச்சி, நிலை குலைந்தோடும் நிகழ்ச்சி, கூட்டமாய்க் கொல்லப்படும் நிகழ்ச்சியாகவும் இருந்தது' என, ராபர்ட்ஸ் என்பவர் பரிதாபமாகக் குறிப்பிடுகிருர். இவ்விதம் ஆள்களை இழந்து சிறிதான பிரிட்டிஷ் படை, இறுதியாக எதிர்க்கும் பயனற்ற முயற்சியை, ஜனவரி மாதம் 11ஆம் தேதியன்று, ஜக்தலக் (Jagdalak) கணவாயில் சேர்ந்தது; அதன் பயனுக மேலும் பன்னிரண்டு அதிகாரிகள் இறந்தார்கள். இருந்த எல்லோரும் ஒரு வாரத்திற்கு முன் காபூலில் இருந்து புறப்பட்ட 16,500 பேர்களில், அக்பர் கானிடம் சிறைப்பட்ட 120 கைதிகளைத் தவிர, மற்ற எல்லோரும் கொல்லப்பட்டனர்: டாக்டர் ரைடன் (Dr. Brydon) என்பவர் மட்டுந்தான் படுகாயமடைந்து, மிகக்களைப்படைந்து, ஜாலாலாபாதை அடைந்து, பின் வாங்கும் படலத்தில்[1] ஏற்பட்ட சோகக் கதையைக் கூறினுர். நாட் என்பவரும்,

1. 37ஆம் சுதேசக் காலாட்படையின் செய்தித் தாளில் (Journal of the Serjiant) வெளியான ஒரு செய்தியை மெக்டொனல்டு 1842ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 17ஆம் தேதியன்று எழுதிய கடிதத்தில் குறிப்பிடுகிருர்; காபூலிலிருந்து எல்பின்ஸ்டனின் படைகள் புறப்பட்டு, அது அழிக்கப்படும் வரையிலும் நடந்த நிகழ்ச்சிகளைக் கண்கூடாகப் பார்த்தவர் இவர்; அதன்பின் அவர் ஜலாலாபாதிற்குத் தப்பி ஓடினுர். 'பிரைடன் கொடுத்த விளக்கத்தைவிட இது மிகச் சிறந்தது; ஏனெனில், அவர் அச்சங்கொண்டு, பகுத்தறிவை இழந்தார்; அச்சத்திலிருந்து மீளுவதற்கு முன்பே, அவர் அந்நிகழ்ச்சியைப் பற்றிக் கூறினுர்.'—J. I. H. August, 1933.'

ராலின்ஸன் என்பவரும் காண்டகாரை மிக்க வீரத்துடன் பாதுகாத்த நிகழ்ச்சியையும் சேல் என்பவரும் பிராட்புட் என்பவரும் ஜலாலாபாதைப் பாதுகாத்த நிகழ்ச்சியையும், பேரபாயம் என்னும் இருளில் தெரிந்த சிறு ஒளிக்கதிர் களாகக் கருதலாம். இக்கோர நிகழ்ச்சியைக் கண்டு அதிர்ச்சியும் அவமானமும் அடைந்த ஆக்லண்டு பிரபு, இப் பேரழிவை 'ஓரளவு தோல்வி' என, ஜனவரி மாதம் 31ஆம் தேதியன்று வெளியிடப்பட்ட ஒரு பொது அறிக்கையில் விவரித்து, 'பிரிட்டிஷ் ஆட்சியின் ஆற்றலையும், உறுதியையும், பிரிட்டிஷ்-இந்தியப் படையின் வீரத்தையும், போற்றத் தகுந்த மனத்திண்மையையும் காண்பிப்பதற்கு இதனல் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது' எனக் கூறி, தம்முடைய முன் யோசனை யின்மையை மறைக்கப் பார்த்தார். இழந்த பிரிட்டிஷ் கௌரவத்தைத் திரும்பப் பெறுவதற்கு அவர் பயனற்ற முயற்சிகளில் ஈடுபட்டார்; ஆனல், சீக்கிரத்தி லேயே பதவியை விட்டு விலகும்படி செய்யப்பட்டார்; எல்லன்பரோ பிரபு (Ellenborough) (1842-1844) 1842ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 28ஆம் தேதியன்று பதவி ஏற்றார்.

இந்தியாவிலிருந்த கம்பெனியின் ஆட்சி நியாயமற்ற முறையில் ஆப்கானியப் போரை ஆரம்பித்தது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை; அதனல் அதற்கு நேர்ந்த 'மாபெரு வீழ்ச்சி' மிகவும் நியாயமானதே எனச் சில ஆசிரியர்கள் கருதுகிறார்கள். 'ஒரு பாவச் செயல் காரணமாக, கடவுளின் சாபக்கேடு நம்மைச் சூழ்ந்திருக்கையில், நம்முடைய ராஜ தந்திரிகளின் கூரிய அறிவும் முட்டாள்தனமாக மாறி விடுகிறது; நம்முடைய படையின் வலிமை, ஆற்றலற்று விடு கிறது' எனக் கேயி பொருத்தமாகக் கூறுகிறார். மேலும், ஆற்றலற்ற அறிவற்ற விதமாக அது நடத்தப்பட்டதால், அதன் தோல்வியைத் தடுக்க முடியாமல் போய்விட்டது. ஆப்கானியப் போரில் நேர்ந்த தோல்விகளுக்கும் துன்பங் களுக்கும் காரணங்களை ஆராய்ந்தவரான கேப்டன் ட்ராட்டர் என்பவர் பின்வருமாறு கூறுகிறார்: 'திறமையற்ற பிரதிநிதி களைத் தேர்ந்தெடுத்ததன் விளைவாகத்தான் அக்கொள்கை (ஆக்லண்டு பிரபுவின்) பெருந்தோல்வியில் முடிந்தது: அக் கொள்கை, தவறானது துன்பம் நிறைந்தது; சட்ட விரோத மானது. மக்நாட்டனின் நம்பிக்கைத் துரோகம், எல்பின் ஸ்டனுடைய உடல் உள்ளத் தளர்ச்சி, ஷெல்டனின் முட்டாள் தனமான பிடிவாதம், சிவில் இராணுவ அதிகாரிகளிடையே ஏற்பட்ட பெருங்கருத்து வேறுபாடுகள், இடருற்றபோது

சேலின் உதவி கிடைக்காமை ஆகியவைகளுடன், ஆக்லண்டு பிரபுவின் அறைகுறை நடவடிக்கைகளும், பொருத்தமற்ற பொருளாதாரச் சிக்கனமும் சேர்ந்து, தவருன முட்டாள்தன மான முறையில் ஆரம்பிக்கப்பட்ட துணிவான காரியத்தைப் பெருந்தோல்வியுறும்படி செய்தன.

## (உ) எல்லன்பரோ பிரபுவும் (1842–1844) ஆப்கானிய விவகாரங்களும்

ஆப்கானியப் போரில் ஏற்பட்ட பேரிடர் காரணமாக, 1842ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 15ஆம் தேதியன்று, படை முதல்வருக்கு எழுதிய கடிதத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் முக்கூட்டு ஒப்பந்தத்தை' ஆதரிப்பதற்காக இனிமேல் 'அதனுடைய படைகளையும், படைகளுடன் இந்தியப் பேர ரசையும் ஆபத்தில் சிக்கும்படி' விடாது ; ஆனால், 'எப்படி யாவது ஆப்கானியர்களை வென்று குறிப்பிடத்தக்க, முடிவான வெற்றியைப் பெற்று' இழந்த இராணுவப் புகழை மறுபடியும் பெறுவதற்கு முயலும் என எல்லன்பரோ குறிப்பிட்டிருந்தார். ஹகல்ஜாய் (Hakalzai) என்னுமிடத்தில் ஜெனரல் இங்கி லாந்து (General England) அடைந்த தோல்வியின் செய்தியை யும், கஜினியில் பால்மர் சரணடைந்த செய்தியையும், அறிந்த வுடனே, அவர் தம் முடிவை மாற்றிக் கொண்டார்; ஆப்கானி ஸ்தானத்திலுள்ள எல்லா பிரிட்டிஷ் துருப்புகளும், உடனே பின்வாங்க வேண்டுமென்று அவர் உத்தரவிட்டார்; ஆனால், பழி வாங்கும் எண்ணத்தையும், கைதிகளை விடுவிக்கும் எண்ணத்தையும் அவர் நினைத்துப் பார்க்கவில்லை. பிரிட்டிஷ் படைக்கு இவ்வுத்தரவு, 'இடிமுழக்கம் போல' இருந்தது என அவுட்ராம் குறிப்பிடுகிருர்; கோபம் என்கிற பெரும் புயலை இங்கிலாந்திலும் இந்தியாவிலும் இது கிளப்பியது. இதற் கிடையில் ஷா சுஜா கொலையுண்டார். நாட்டும் போலக்கும் பின்வாங்கும் எண்ணமின்றி, தங்கள் நிலைகளில் இருந்தனர்; போதிய வாகன வசதி இல்லாமைதான் பின்வாங்காமல் தயங்குவதற்கு முக்கிய காரணம் எனக் கூறினர். இறுதியில் எல்லன்பரோ பிரபு 'தாம் உறுதியுடன் இருப்பதாக வெளிக் குக் காண்பிப்பதற்கும், அதே சமயத்தில் பின் வாங்கு வதற்கு முதற்படியாகக் காபூலை மறுபடியும் கைப்பற்றிக் கைதிகளை விடுவிக்க வேண்டும் என்கிற ஏகோபித்த கோரிக்கையைத் திருப்தி செய்வதற்கும் ஒரு வழியைக் கண்டு பிடித்தார்.' ஆப்கானிஸ்தானத்திலிருந்து பின் வாங்குமாறு,

நாட், போலக்கு ஆகியவர்களுக்கு மறுபடியும் உத்தரவிட்டு, ஜூலை மாதம், 4ஆம் தேதியன்று அவர் கடிதங்கள் எழுதினர்; ஆனால், அதே சமயத்தில், நாட் விருப்பம் போல இந்தியா திரும்புவதற்கு அனுமதித்தாலும், போலன் கணவாய் வழியாக வரக்கூடாதென்றும், ஆனால் கைபர்க் கணவாயைக் கடந்து, கஜினி காபூல் வழியாக வரலாமென்றும் கூறினர்; இப்படித் திருப்புவதைப்பற்றி, நாட் என்பவருடன் ஆலோசித்துச் செய்யவேண்டும் எனப் போலக் (Pollock) என்பவருக்கும் கட்டளையிட்டார். இவ்விதமாக முடிவு எடுக்கும் பொறுப்பை, அத்தளபதிகளிடம் கவர்னர்-ஜெனரல் விட்டது மிகத் தெளிவாகத் தெரிகிறது; அத்தளபதிகளும், தயங்காமல் அதை ஏற்றுக்கொண்டனர். ஆகஸ்டு மாதம், 20ஆம் தேதியன்று தேர்ந்தெடுக்கப்பட்ட 8000 துருப்புகளுடன் ஜலாலாபாதிலிருந்து போலக்குப்புறப்பட்டார்; செப்டெம்பர் மாதம், 13ஆம் தேதி ஜக்தலக் என்னுமிடத்திலும், ஆப்கானியரை வெற்றி கொண்டு, செப்டெம்பர் மாதம், 15ஆம் தேதியன்று காபூலை அடைந்து பல ஹிசார்கோட்டையில் மறுபடியும் பிரிட்டிஷ் கொடியை ஏற்றினர். செப்டெம்பர் மாதம் 17ஆம் தேதியன்று அவர் நாட் என்பவருடன் சேர்ந்து கொண்டார்; இவர் வருவதற்கு முன்பே, செப்டெம்பர் 6ஆம் தேதியன்று கஜினி கோட்டையையும் நகரத்தையும், நாட் அழித்துவிட்டார். எல்லன்பரோ பிரபுவின் உத்தரவின்படி 'சோமநாதர் கோயிலின் கதவுகளை' அவர் எடுத்துக்கொண்டார். இதுதான், பதினொன்றும் நூற்றாண்டில் சுல்தான் மாமூது எடுத்துச் சென்றதாகக் கூறப்பட்டது. ஆங்கிலக் கைதிகள் மீட்கப்பட்டனர். ஆனால், 'பழி வாங்குவதற்குக் காபூலுக்கு வந்த படையின் புகழ், அவர்கள் இழைத்த கொடுமைகளால் குன்றியது.' அப்படை காபூலின் பெரிய கடைத்தெருவை வெடிமருந்து கொண்டு இடித்தெறிந்தது. அந்நகரம் கருணையின்றி அழிக்கப்பட்டது; அக்டோபர் மாதம் 12ஆம் தேதியன்று அந்நகரத்தை விட்டு வெளியேறுமுன், சாதாரணப் பொதுமக்களுங் கூடப் பெருந்துன்பத்திற்குள்ளானர்கள். இந்தியாவிற்குத் திரும்பிய படையைப் பெரோஸ்பூரில் 'வெற்றி வளைவுகளுடனும், நாடக அரங்குக்கேற்ற வெற்றி முழக்கத்துடனும்' கவர்னர் ஜெனரல் வரவேற்றார். அக்டோபர் மாதம் 12ஆம் தேதியன்று சிம்லாவிலிருந்து வெளியிடப்பட்ட பிரகடனத்தில் 1ஆம் தேதி எனக் குறிப்பிடப்பட்டிருந்தாலும், அதில் அவருக்கு முன்னிருந்தவரின் கொள்கையை மிகக் கடுமையான மொழியில் தாக்கி, 'ஆப்கானிய மக்களால் அங்கீகரிக்கப்பட்டதும், அண்டை நாடுகளுடன் நட்புறவுடன்

இருக்க விரும்பி அதைச் செயலில் காட்டுவதற்குத் தகுதியுள்ள எவ்வித அரசையும் ஒப்புக்கொள்ளவும்' உள்ள விருப்பத்தை அவர் வெளியிட்டார். மற்றுமொரு தற்பெருமையுள்ள பிரகடனம், இந்திய அரசர்களுக்கும், தலைவர்களுக்கும், மக்களுக்கும் வெளியிடப்பட்டது. கவர்னர் ஜெனரல், பின்வருமாறு அதில் கூறினர்: 'நமது வெற்றிப்படை, சோமநாதர் கோயிலின் கதவுகளை வெற்றியின் சின்னமாக ஆப்கானிஸ்தானத்திலிருந்து கொண்டு வந்திருக்கின்றது. கொள்ளையிடப்பட்ட சுல்தான் மாமூதின் கல்லறை, அழிக்கப்பட்ட கஜினியைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. 800 ஆண்டுகளுக்கு முன் இழைக்கப்பட்ட அவமானம், இதன் மூலம் பழிவாங்கப்பட்டது.'

இரண்டாம் பிரகடனம் விவேகமற்றது, உபயோகமில்லாதது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. 'அப்பொருளின் முட்டாள்தனத்தை மறுக்க முடியாது; அதுவுங்கூட, அறிவற்ற விதமாக உள்ள தவறுதான். ஏனெனில், எவரையும் திருப்தி செய்யாவிட்டாலும் பலருடைய மனத்தைப் புண்படுத்துவதற்காகவே அப்படிச் செய்யப்பட்டது,' எனக் கேயி குறிப்பிடுகிருர். அது முஸ்லீம்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தியது. அக்கதவுகளைப்பற்றி இந்துக்கள் அதிக அக்கறையில்லாமல் இருந்தார்கள்; பண்டைப் பொருளாராய்ச்சிக்காரர்கள் (Antiquarians) உண்மையாகக் கூறியபடி, அக்கதவுகள் பதினென்ரும் நூற்ருண்டிற்கு வெகுகாலத்திற்குப் பிறகுதான் செய்யப்பட்டன. அதுவும் கள்ளிப்பலகை (deal) அல்லது தேவதாரு (deodar) பலகையைக் கொண்டுதான் நிச்சயமாக அவை செய்யப்பட்டன என அவர்கள் கூறுகின்றுர்கள். கவர்னர்-ஜெனரலுடைய 'வெற்றிப்போரின் புகழ் பெற்ற பரிசு' இறுதியில், ஆக்ராக் கோட்டையில் இருந்த கழிவுச் சாமான்கள் வைக்கப்படும் அறைக்கு அனுப்பப்பட்டன; வெல்லிங்டன் பிரபுவும், ஹார்டிஞ்சு பிரபுவும் அவரை மிகத் தீவிரமாக ஆதரித்த போதிலும், அவர் எள்ளி நகையாடப்பட்டு, கண்டிக்கப்பட்டார். நிபந்தனையில்லாமல் தம் சிம்மாதனத்தைப் பெறுவதற்குத் தோஸ்து முகம்மது அனுமதிக்கப்பட்டார்; 1863ஆம் ஆண்டில், தமது எண்பதாம் வயதில் அவர் இறக்கும் வரையிலும், அவர் அப்பதவியிலிருந்தார். ஆங்கிலேயருடன் அவர் நட்பு மனப்பான்மையைக் காண்பித்ததும், பாரசீகத்தை அவர் எதிர்த்ததும், 20,000

மனிதர்களைப் பலிகொண்டு, பதினைந்து மில்லியன் பணத்தை விழுங்கிய 'அப்பேரிடர் முழுவதும் சிறிதும் அவசியமில்லாதது' என்பது தெரிகிறது.

## 5. சிந்து நாட்டின் இணைப்பு

சிந்து நாட்டைக் கைப்பற்றுதலும், ஆப்கானியப் போரும் ஒன்றை ஒன்று சார்ந்திருந்தன; அப்போரைத் தொடர்ந்து, அந்நாடும் கைப்பற்றப்பட்டது. சிந்து நதியின் கீழ்ச் சம வெளியில் சிந்துநாடு இருந்தது. அது அஹமது ஷா துரானியினுடைய பேரரசின் ஒரு பாகமாய்த் திகழ்ந்தது. ஆனால் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் அது பெயரளவில்தான் ஆப்கானிஸ்தானத்திற்குக் கீழ்ப்படிந்திருந்தது. தால்புரா (Talpura) வகுப்பைச் சேர்ந்த மீர்கள் (Mirs) அல்லது அமீர்கள் (Amirs) என்பவர்களால் அது சுயேச்சையுடன் ஆளப்பட்டது. இக்குலத்தைச் சேர்ந்தவர்கள் முதன் முதல் பலுச்சிஸ்தானிலிருந்து வந்து, கலோரர் (Kaloras) குலத்தைச் சேர்ந்த கடைசி அரசனைக் கி. பி. 1783ஆம் ஆண்டில் வென்று, ஆட்சியைக் கைப்பற்றினர். தால்புராக் குலத்தைச் சேர்ந்த மூன்று பிரிவுகளும் ஹைதராபாது கெயிர்பூர் (Khairpur), மீர்பூர் (Mirpur) என்னுமிடங்களில் ஆட்சி புரிந்தன.

நெடுநாளாகவே, ஆங்கிலேயர், சிந்து நாட்டில் தமது வாணிகத்தை நடத்தி வந்தனர்; 1758ஆம் ஆண்டில் தர்ட்டா (Thatta) என்னுமிடத்தில் ஏற்பட்ட ஒரு பண்டகசாலை, 1775ஆம் ஆண்டு கைவிடப்பட்டது. 1799ஆம் ஆண்டில், தால்புரா மீர்களைச் சந்திக்கச் சென்ற ஒரு வாணிகத் தூது, எவ்விதப் பயனையும் அளிக்கவில்லை. அந்நாட்டிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கைத் தடுக்கும் நோக்கத்துடன் பிரிட்டிஷ் அரசாங்கம் சிந்து நாட்டின் அமீர்களுடன் ஓர் உடன்படிக்கையை 1809ஆம் ஆண்டில் செய்துகொண்டது; 1820ஆம் ஆண்டில் அது புதுப்பிக்கப்பட்டது. லாகூருக்குச் செல்வதற்காகச் சிந்து நதியின் மேல்புறத்தில் 1831ஆம் ஆண்டில் பிரயாணம் செய்த அலெக்ஸாண்டர் பர்னஸ் என்பவரால் சிந்து நாட்டின் அரசியல், வாணிப முக்கியத்துவம் ஆங்கிலேயருக்குத் தெரியவந்தது; அதிலிருந்து அதை பிரிட்டிஷ் பேரரசுடன் சேர்ப்பதற்கு ஒரு சில ஆண்டுகளே ஆயின. 'ஐயோ! ஆங்கிலேயர்கள் இந்நதியைக் கண்டுவிட்டதால் இனிச் சிந்து நாடும் போய்விட்டது!' என ஒரு சீயது (Seiad)

கூறினன். இக்கூற்றுத் தீர்க்கதரிசனம் வாய்ந்த முழு உண்மை என்பதை நாம் இனிப் பார்ப்போம்.

சிந்து நாட்டிற்கருகில் ரஞ்சித்சிங் என்கிற பேர்வலிமிக்க சீக்கியத் தலைவர் இருந்தார்; தம் பேரரசை விரிவுபடுத்துவதற்காக அதைக் கைப்பற்ற எண்ணங்கொண்டார். ஆனல், அவருடைய முயற்சிகள் அவருடைய ஆங்கிலேய நண்பர்களால் வீணக்கப்பட்டன; ஆங்கிலேயர்கள், இச்சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்தி, அந்நாட்டில் தங்கள் செல்வாக்கை அதிகப்படுத்தினர். இதனல், 1831ஆம் ஆண்டில் சிந்து நாட்டைப் பிரிவினை செய்வதற்காக ரஞ்சித்சிங் கொண்டுவந்த ஒரு திட்டத்தை வில்லியம் பென்டிங்கு பிரபு எதிர்த்தார். ஆனல், 1832ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 20ஆந் தேதியன்று, சிந்து அமீர்கள், விருப்பமின்றியே ஓர் உடன்படிக்கையை பிரிட்டிஷ் அரசுடன் செய்ய நேர்ந்தது; 'சிந்து நாட்டின் நதிகளும் பாதைகளும் இந்துஸ்தானத்தின் வணிகர்களுக்குத் திறக்கப்பட வேண்டும். ஆனல், இவைகள் வழியாக, இராணுவத் தளவாடங்களும், போர்க்கப்பல்கள் அல்லது போர்ப் படகுகளும் செல்லக்கூடாது' என்று அதில் குறிப்பிடப் பட்டிருந்தது. பிரிட்டிஷ்காரர்கள் தங்கள் நாட்டை அபகரித்துக் கொள்வார்களோவென அஞ்சிய அமீர்கள், 'ஒப்பந்தம் செய்துகொள்ளும் அரசுகள், ஒன்றின் நாட்டை மற்றென்று கைப்பற்றுவதற்கு என்றும் ஆசைப்படாது,' எனப் பொருள்படும் ஒரு நிபந்தனையையும் அதில் சேர்த்தனர். இவ்வுடன்படிக்கை, 1834ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டது. சிந்து நாட்டைக் கைப்பற்றித் தம் பேரரசுடன் சேர்ப்பதற்கு, 1838ஆம் ஆண்டு வரையிலும் ரஞ்சித்சிங் பல முறை எண்ணமிட்டார்; ஆனல், அது ஆங்கிலேயர்களால் தடுக்கப்பட்டது; 'பிரிட்டிஷ் பேரரசுடன் இணைக்கப்பட்ட' சிந்து அமீர்களின் உறவை மேலும் உறுதிப்படுத்தும் எண்ணத்துடன், சீக்கிய ஆக்கிரமிப்பிலிருந்து அவர்களைக் காப்பாற்றியதற்கீடாக, தங்களுக்கு உதவியாக இருக்கும் நிபந்தனைகளுக்கு அவ்வமீர்கள் ஒப்புக்கொள்ளவேண்டுமென ஆங்கிலேயர்கள் வற்புறுத்தத் தொடங்கினர்கள். 1838ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 20ஆம் தேதியன்று செய்துகொண்ட உடன்படிக்கைப் படி, ஒரு பிரிட்டிஷ் ரெஸிடென்டை அந்நாட்டின்மீது ஆக்லண்டு பிரபு நியமித்தார். உண்மையில் வெகு சீக்கிரத்திலேயே சிந்து நாடு வீழ்ந்தது. அந்நாட்டைக் கைப்பற்ற வேண்டுமென நினைத்த சீக்கியர்களின் எண்ணம் ஈடேறவில்லை; ஆனல், அவசியமற்ற பிரிட்டிஷ் பாதுகாப்பை அந்நாடு நாடியதால்,

அதற்குரிய பயனை அனுபவித்தது; பிரிட்டிஷ் அதிகாரிகள் பின்பற்றிய வாதத்திற்கிடமான நடவடிக்கைகள் மூலம், அந் நாடு தன் சுதந்தரத்தை இழந்தது.

முதல் ஆப்கானியப்போர் ஆரம்பித்தவுடனே, 1832ஆம் ஆண்டு உடன்படிக்கையை மீறி, ஓர் ஆயுதப்படையைச் சிந்து நாடு வழியாக ஆங்கிலேயர் நடத்திச் சென்றனர்; 'தற்கால அவசரநிலை நீடிக்கும் வரையிலும், இராணுவத் தளவாடங் களைச் சிந்து நதி வழியாகக் கொண்டு செல்வதைத் தடுக்கும் (1832ஆம் ஆண்டு) உடன்படிக்கையின் நிபந்தனைகளை நிச்சய மாக நிறுத்தி வைக்கவேண்டும்,' என அவ்வமீர்களுக்கு ஆங்கி லேயர் அறிவித்தனர். சிந்து நாடு பணம் தரவேண்டும் என ஷாசுஜா கோரியபொழுது, பிரிட்டிஷ் ஆட்சி, அழைக்கப் படாமலே அதில் தலையிட்டு, சமரசஞ் செய்து, அதைக் குறைத்தற்கீடாக ஒரு பெரிய தொகையைக் கொடுக்க வேண்டுமென்று ஆக்லண்டு பிரபு அமீர்களைக் கேட்டு, அவர்களை அவமானப்படுத்தி, பணமிழக்கும்படி செய்தார். ஷா சுஜா தம் நாட்டைத் துறந்து வாழ்ந்த முப்பது ஆண்டு களில், சிந்துவின் அமீர்கள் அவருக்கு எவ்விதக் கப்பமும் செலுத்தவில்லை; 1833ஆம் ஆண்டில் கப்பம் செலுத்த வேண்டு வதில்லை என்கிற விதி விலக்கையும், ஷா சுஜா அவர்களுக்கு அளித்தார்; இதனால், ஆக்லண்டு பிரபு கேட்ட தொகைகளைக் கொடுப்பதற்கு அவ்வமீர்கள் தயங்கினார்கள். அவர்களை அழிக்கக்கூடிய ஆற்றல் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உண்டு என்றும், பேரரசின் அல்லது அதன் எல்லைகளின் முழுமைக்காவது அல்லது பாதுகாப்பிற்காவது சிறிய ஆபத்து ஏற்படினும், அவசியம் நேர்ந்தால், அந்நாட்டை அழிப்பதற்கு அது தயங் காது என்றும் பொருள்படும் எச்சரிக்கையும் அவர்களுக்கு அனுப்பப்பட்டது. கவர்னர்-ஜெனரலின் கோரிக்கைக்குக் கீழ்ப்படிவதைத் தவிர, அமீர்களுக்கு வேறு வழியில்லை. மேலும், சிந்து நாட்டின் தலைநகரத்தின்மீது படையெடுப்ப தாக, சர் ஜான் கீன் பயமுறுத்தினார். அதனால், ஆக்லண்டு பிரபுவின் புதிய நிபந்தனைகளை அவர்கள் 1839ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதத்தில் ஏற்றுக்கொள்ள நேர்ந்தது; அதன்படி, ஒரு பிரிட்டிஷ் படையை அவர்கள் நாட்டில் வைத்துக்கொள் வதற்காக, ஆண்டுதோறும் மூன்று லட்ச ரூபாயை அவர்கள் கொடுக்கவேண்டும்; சிந்து நாடு 'பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் முறைப்படி வைக்கப்பட்டது.' இவ்வுடன்படிக்கையை, ஆக்லண்டு பிரபுவும் அவருடைய ஆலோசனையாளர்களும், தாங்கள் விரும்பியபடி மறுபடியும் மாற்றி இதில் அமீர்களின்

இறுதிக் கையொப்பத்தைப் பெறுவதற்காக அவர்களுக்கு அனுப்பினர்; அவர்கள் 'மறுத்தார்கள்; மன்றாடினார்கள்; ஆனால் திருத்தப்பட்ட பத்திரத்தில் தங்களுடைய முத்திரைகளையிட்டு, இறுதியில் ஏற்றுக்கொண்டார்கள்.'

மோசமான ஒரு முடிவு, சிந்து நாட்டிற்குக் காத்திருந்தது. அந்நாடு, ஆக்லண்டு பிரபுவால் பயமுறுத்தப்பட்டு, கட்டாயப் படுத்தப்பட்டது; ஆனால் அவரை அடுத்து வந்தவர், மேலும் ஒருபடி சென்று, படைப்பலத்தினை உபயோகித்து, அந்நாடு பிரிட்டிஷ் அதிகாரத்தை ஏற்கும்படி செய்தார். ஆப்கானியப் போர் நடந்த நெருக்கடியான காலத்தில், அம்மாகாணம் ஒரு முக்கியத் தளமாக பிரிட்டிஷ் ஆட்சியால் உபயோகிக்கப் பட்டது; அந்நாட்டு அமீர்கள், ஆங்கிலேயருடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி, மிக விசுவாசமாய் இருந்தார்கள். ஆனால், அவர்கள் காட்டிய அன்பிற்குப் பதிலாக, பிரிட்டிஷ் ஆட்சியிடம் வெறுப்புடனும் பகையுணர்ச்சியுடனும் இருந்தார்கள் என எல்லன்பரோ பிரபு அவர்கள்மீது அநியாயமாகக் குற்றஞ் சாட்டினார். சிந்து நாட்டைக் கைப்பற்றும் தம் திட்டத்தைச் செயற்படுத்துவதற்கு அவருக்கு ஒரு தகுந்த காரணம் இதனால் கிடைத்தது. அவருக்கு உதவியாக இருக்கும் பொருட்டு, அந்நாட்டின் விவகாரங்களில் அனுபவமுள்ள மேஜர் ஜேம்ஸ் அவுட்ராம் என்கிற ஹைதராபாதிலிருந்த ரெஸிடென்டை இப்புதிய கவர்னர்-ஜெனரல், நீக்கி, சர் சார்லஸ் நேப்பியர் என்பவரை முழுச் சிவில் இராணுவ அதிகாரங்களுடன், கவர்னர்-ஜெனரலின் பிரதிநிதியாக, சிந்து நாட்டிற்கு அனுப்பினார். சர் சார்லஸ் நேப்பியர், சிந்தனையற்ற, ஆனால் ஆணவமுள்ள ஓர் அதிகாரி; 'சிந்து நாட்டின் இணைப்பு, போக்கிரித்தனத்தின் உபயோகமுள்ள செயல் எனும் கொள்கையை' நம்பினார்; 'அதைச் செய்வதற்காக, அவர் ஒரு காரணத்தை—நியாயமாகத் தோன்றுகிற ஒரு கொள்ளையடிக்கும் வழியைக்—கண்டுபிடிக்க வேண்டும்.' அமீர்களின்மீது சாட்டப்பட்ட தெளிவற்ற குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டன என அவர் முடிவு செய்து, கெயிர்பூர் வாரிசு தகராற்றில் ஒருதலைப்பட்சமாகத் தலையிட்டதுமன்றி, ஒரு புது உடன்படிக்கையையும் அறிவித்தார்; அதன்படி, மூன்று லக்ஷரூபாய் கப்பத்திற்குப்பதில் சில முக்கியப் பிரதேசங்களை விட்டுக்கொடுக்கவும், சிந்து நதியில் செல்லும் பிரிட்டிஷ் கப்பல்களுக்கு எரிபொருளைக் கொடுக்கவும், பிரிட்டிஷ் ஆட்சிக்கு அனுகூலமாக நாணயத்தை வெளியிடும் உரிமையை விட்டுவிடவும் அவ்வமீர்கள் வற்புறுத்தப்

பட்டார்கள். அமீர்கள் தங்கள் தேசிய சுதந்தரத்தை விடுவதற்குச் சமமான இக்கோரிக்கைகளுடன் மட்டும் அவர் நிற்கவில்லை; ஆனால், சிந்து, பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பாகமாகிவிட்டது எனவும், பிரிட்டிஷ்-இந்தியாவின் கவர்னர்-ஜெனரல், விரும்பியபடி அதைப் பங்கிடுவதற்கு அவருக்கு இருக்கும் உரிமையைக் கேட்க முடியாது, மறுக்க முடியாது எனவும் நினைத்து அவர் நடக்கலானார்; மேலும், இந்த உரிமையை உபயோகப்படுத்த ஆவல் கொண்டுள்ளதாகவும், அப்படிச் செய்யும்போது, அதனால் பாதிக்கப்படுகிறவர்களுக்கு மிகுந்த துன்பம் கொடுக்கப்படும் என்ற மனப்பான்மையுடனும் அவர் நடக்கலானார்.' அமீர்கள் புதிய உடன்படிக்கையை ஒப்புக்கொள்வதற்கு முன்பே, அவர் கோரிய பிரதேசத்தைக் கைப்பற்றிக் கடுமையான மொழியில் ஒரு பிரகடனத்தையும் வெளியிட்டார். மேலும், உடன்படிக்கைகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுதே முறையான போர் அறிவிப்பில்லாமல், கெயிர்பூருக்கும் ஹைதராபாதிற்கும் இடையே இருந்த பிரபலமான பாலைவனக் கோட்டையான இமாம்கார் (Imamgarh) மீது படையெடுத்து, அமீர்களைப் பயமுறுத்த முனைந்தார்; 1843ஆம் ஆண்டு, ஜனவரி மாத ஆரம்பத்தில் அதை அழித்தார்.

இப்படிப்பட்ட தான்தோன்றித்தனமான செய்கைகளைக் கண்டு, போர்க்குணமுள்ள பலுச்சியர்கள், தங்கள் பொறுமையை இழந்து உணர்ச்சி வசப்பட்டு, 1843ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 15ஆம் தேதியன்று பிரிட்டிஷ் ரெஸிடெண்டு இருக்கும் இடத்தைத் தாக்கினார்கள்; சிந்துவில், பிரிட்டிஷ் கமிஷனராய் இருந்த அவுட்ராம் இதைக் கண்டு அஞ்சி, அருகிலிருந்த கப்பலில் தஞ்சமடைந்தார். இப்படிப் போர் வெளிப்படையாக அறிவிக்கப்பட்டது. 22,000 பேர்களைக் கொண்ட ஒரு பலுச்சிப்படை, 2,800 பேர்களுடனும் 12 பீரங்கிகளுடனும் இருந்த நேப்பியர் என்பவரால் ஹைதராபாதிற்குச் சில மைல் தூரத்திலிருந்த மியானி (Miani) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து அமீர்களுள் சிலர் சரணடைந்தனர்; 'மீர்பூச் சிங்கம்' எனப்படும் ஷேர் முகம்மது சரணடையவில்லை. ஆனால் அவரும், மார்ச்சு மாதம், 24ஆம் தேதியன்று, ஹைதராபாதிற்கு ஆறு மைலில் இருந்த தபோ (Dabo) என்னுமிடத்தில் முற்றிலும் தோல்வியுறும்படி செய்யப்பட்டார்; அதன்பின் நேப்பியர், மீர்பூரை மார்ச்சு மாதம் 27ஆம் தேதியிலும், அமர்கோட் என்னும் நகரத்தை ஏப்பிரல் மாதம் 4ஆம் தேதியிலும் கைப்பற்றி, எல்லன்பரோ பிரபுவுக்கு

இவ்வெற்றியைப் 'பெக்காவி' (Peccavi) அதாவது 'சிந்து' என்னிடம் இருக்கிறது,' எனும் சிலேடைச் செய்தி மூலம் அறிவித்தார். ஜூன் மாதத்தில், ஷேர் முகம்மது சிந்துவை விட்டுத் துரத்தப்பட்டார்; போரும் முடிந்தது. 1843ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தில், சிந்து பிரிட்டிஷ் பேரரசில் முறைப்படி சேர்க்கப்பட்டது; அமீர்கள் நாடு கடத்தப் பட்டனர். போரில் கைப்பற்றிய பொருளில் 70,000 பவுனைத் தம் பங்காகத் தயக்கமின்றி நேப்பியர் ஏற்றுக்கொண்டார்; ஆனால், அவுட்ராம், அதிக சொத்து இல்லாதவராய் இருந்த பொழுதுங்கூட, அவர் பங்குக்குக் கிடைத்த 3000 பவுனை ஏற்றுக்கொள்ளாமல், அதைச் சில அறநிலையங்களுக்குக் கொடுத்துவிட்டார். நேப்பியர் கொள்கைகளை அவுட்ராம் சிறிதும் விரும்பவில்லை; 'நான் உம் கொள்கைகளைக்கண்டு மிக்க வெறுப்படைந்துவிட்டேன்; உம்முடைய கொள்கைகள் சிறந்தனவென. நான் கூற முடியாது; ஆனால் வாளின் கொள்கை மிகவும் சுருக்கமானது; ஆ! ஒரு சிறந்த கொள்கைக்கு அவ்வாளை உருவினால் எனக்கு மிகவும் மகிழ்ச்சி யாக இருக்கும்!' என அவருக்கு எழுதினார்.

சிந்து நாட்டைப்பற்றிய எல்லன்பரோ பிரபுவின் கொள்கையையும், சர் சார்லஸ் நேப்பியருடைய தாந் தோன்றித் தனத்தையும் பெரும்பான்மையான ஆசிரியர்கள் கண்டித்திருக்கின்றார்கள். ஆங்கிலேயருக்கு ஒரு தீங்கும் செய்தறியாத அமீர்களை அடிமை நிலைக்குக் கொண்டு வரு வதற்காக, ஏகாதிபத்திய உடன்படிக்கை நிபந்தனைகளை வேண்டுமென்றே மீறுவது போன்ற விரும்பத்தகாத வழிகளை அவர்கள் பின்பற்றினார்கள் என்பதில் சந்தேகமில்லை. 'நம் வரலாற்றில் ஆப்கானிய நிகழ்ச்சி கடுந்துன்பமுடையது என்றால், சிந்து நாட்டின் நிகழ்ச்சி அறநெறிக்கு மிக ஒவ்வாத வொன்று எனக் கூறலாம்,' என இன்ஸ் என்பவர் குறிப்பிடு கிறார். பகுத்தறிவுக்கொவ்வாத, வரலாற்று அடிப்படையற்ற பல வாதங்களை மிகுந்த சிரமத்துடன் நேப்பியர் வாதாடி னும் அவர் தம் நாட்குறிப்பில் பின் வருமாறு ஒப்புக் கொள் கிறார்: 'சிந்துவைக் கைப்பற்றுவதற்கு நமக்கு உரிமை இல்லை; இருந்த போதும், மிக்க சாதகமான, உபயோகமுள்ள, போக் கிரித்தனம் என்கிற மனிதாபிமானச் செயலை, நாம் செய்வோம்.' டைரக்டர் மன்றம் வியப்புத்தரும் விதத்தில், சிந்துவை இணைக்கும் கொள்கையைக் கண்டித்தாலும், அத் தவற்றை நீக்குவதற்கு ஒருவித நடவடிக்கையையும் எடுக்க வில்லை. சிந்துவின் முதல் கவர்னராக நேப்பியர் நியமிக்கப் பட்டார். அவர் பதவியிலிருந்த நான்காண்டு காலத்தில், அம்மாகாணத்தில் பிரிட்டிஷ் ஆட்சியை நன்கு நிறுவ அரும் பாடுபட்டார்.

# 6. கம்பெனியும் இந்தியச் சிற்றரசுகளும் (1774–1858)

## 1. ஆரம்ப உறவுகள் (1774–1823)

இந்தியாவில் மிக வேகமாகப் பரவிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், வெல்லெஸ்லியின் காலத்திற்குப் பிறகு, முகலாயப் பேரரசின் வீழ்ச்சியின் பயனாக ஏற்பட்ட பல இந்திய அரசுகளின் விதியை நிர்ணயித்து, கம்பெனியின் ஆட்சியுடன் அவைகள் கொண்டிருந்த உறவு, மாறும் அரசியல் நிலைமைக்குத் தக்கவாறும், கவர்னர் ஜெனரலின் தனிப்பட்ட நோக்கம் விருப்பம் ஆகியவைகளுக்குத் தகுந்தவாறும் மாறியது. இந்தியா முழுவதையும் வெளிப்படையாகவோ அல்லது மறைமுகமாகவோ ஆட்சி செய்வதற்கு ஆங்கிலேயர்கள் முன்னரே நிர்ணயிக்கப்பட்டுள்ளார்கள் என, வெல்லெஸ்லி காலம் முதற்கொண்டு வளர்ந்துவந்த ஒரு திட நம்பிக்கை, நம் காலம் வரையிலும் தொடர்ந்து இருந்து இந்திய அரசுகளிடம் ஆங்கிலேயர்கள் பின் பற்றிய கொள்கையை உருவாக்குவதற்கு மிகவும் உதவியாயிருந்தது.

பிரிட்டிஷ் பிரதேசங்களை மராட்டியர்களிடமிருந்தும் போர் வெறி கொண்ட மைசூர் அரசர்களிடமிருந்தும் பாதுகாப்பதற்காக, வாரன் ஹேஸ்டிங்ஸ் 'சுற்றரண் காப்பு' (Ring Fence) அதாவது, அருகில் இருந்த நாடுகளின் எல்லையை முன் எச்சரிக்கையின் பொருட்டுப் பாதுகாத்தல் என்கிற கொள்கையைப் பின்பற்றினர். ஆனல், வாரணசி செயித் சிங்கினிடமிருந்தும் அயோத்தி பீகங்களிடமிருந்தும் அவர் வற்புறுத்திப் பெற்றவைகளும், ராம்பூரின் பெயிசுல்லா கானிடம் நடந்துகொண்டதுமான அவருடைய சில நடவடிக்கைகள், உடன்படிக்கைகளுக்கு விரோதமாகவும் அல்லது பழிக்கு அஞ்சாதனவாகவும் இருந்தன. உண்மையில்,

வெல்லெஸ்லி பிரபுவின் பாதுகாப்புமுறை உடன்படிக்கை, ஆங்கிலேயரின் ஆதிக்கத்தைச் சில இந்திய அரசுகளின்மீது ஏற்படுத்தியது. இந்நாடுகள், அக்கொள்கையை ஒப்புக் கொண்டாலும் சித்தாந்தத்திற்கு மாருக ஆங்கில மேலாட்சிக்கு உட்பட்டு இருக்கவில்லே. ஏனெனில், உள்நாட்டு ஆட்சியில் அவைகள் சுதந்தரத்தைப் பெற்றிருந்தன. வெல்லெஸ்லி செய்த எல்லா உடன்படிக்கைகளும், மைசூருடன் செய்து கொண்டதைத் தவிர்த்து, சம அந்தஸ்து என்ற நிபந்தனேயுடன் தான் செய்யப்பட்டன.

'இரட்டை ஆட்சி'யின் மூலம் 1765ஆம் ஆண்டிலிருந்து துயருற்ற வங்காளத்தைப் போல, பாதுகாப்பிற்காகக் கம்பெனியை நம்பியிருந்த அயோத்தி, கருநாடகம், தஞ்சாவூர் போன்ற நாடுகளும் இரட்டை ஆட்சியின் குறைபாடுகளால் துயருற்றன. ஹேஸ்டிங்ஸ் பிரபு என்பவர், 'பரஸ்பர உதவிக்கும் நட்பிற்கும்' செய்யப்பட்ட உடன்படிக்கையை 'ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட ஒத்துழைப்பு' உடன்படிக்கையாக மாற்றி, போர், சமாதானம், உடன்பாடு ஆகியவைகளே மற்ற நாடுகளுடன் செய்யும் ஆதிபத்திய உரிமையை விட்டுக்கொடுக்குமாறு இந்திய அரசுகளே வற்புறுத்தி, பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை அவற்றின்மீது ஏற்படுத்தினர். முறைப்படி, உள்நாட்டு ஆதிபத்தியத்தை இந்நாடுகள் தம்மிடமே வைத்திருந்தாலும், நடைமுறையில், ஆங்கில ரெஸிடென்டுகள், உள்நாட்டு ஆட்சி விவகாரங்களில் அடிக்கடி தலேயிட்டனர். தலேயீட்டின் தன்மையும் அளவும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் ஆளுமை, மனநிலே ஆகியவைகளுக்கு ஏற்ப மாறின. ஹேஸ்டிங்ஸ் பிரபு என்பவர் இணேக்கும் கொள்கையைப் பின்பற்றவில்லே.

## 2. 1823ஆம் ஆண்டுக்கும் 1858ஆம் ஆண்டுக்கும் இடையில் இருந்த உறவு

ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் புறப்பாடு, பெருங்கலகத்தின் ஆரம்பம் ஆகியவைகளுக்கிடையே இருந்த காலத்தில் இந்திய நாடுகளின் உள்நாட்டு ஆட்சியில் பிரிட்டிஷ் ரெஸிடென்டுகளின் நிருவாக அதிகாரமும் கட்டுப்படுத்தும் அதிகாரமும் ஒரு புறத்தில் அதிகமானதனுலும், மறுபுறத்தில் பிரிட்டிஷ் ஆட்சியின் இணேக்கும் கொள்கையை வெளிப்படையாக வெளியிட்டமையினுலும், இந்நாடுகளின்மீது பிரிட்டிஷ் செல்வாக்கு

அதிகமாகியது. டைரக்டர்களின் மன்றம் 1834ஆம் ஆண்டி லேயே ஏற்படுத்தியதும், 1841ஆம் ஆண்டு அவர்களால் தெளிவாக வற்புறுத்தப்பட்டதுமான இணைக்கும் கொள்கை, டல்ஹௌசி பிரபுவின் காலத்தில், மிக அதிகமாகப் பின்பற்றப்பட்டது. பிரிட்டிஷ் பேரரசுடன் புதிய நாடுகளைச் சேர்த்து அதனுடைய அரசியல் செல்வாக்கை அதிகப்படுத்தும் நோக்கத்தினாலும், வாணிகச் சரக்குகளை அனுப்புவதற்கும் நிலவரியை வசூலிப்பதற்கும் வேண்டிய அதிக அனுகூலங்களைப் பெறும் நோக்கத்தினாலும் இவ்விணைக்கும் கொள்கை ஏற்பட்டது. இந்தியாவின்மீது உள்ள பிரிட்டிஷ் மேலாட்சியின் பிடியை உறுதிப்படுத்துவதற்காக இவ்விரண்டு நோக்கங்களும் பயன்பட்டன. வில்லியம் பென்டிங்கு பிரபு 'தலையிடாக் கொள்கை'யைப் பின்பற்ற வேண்டுமென்று இங்கிலாந்து அதிகாரிகளால் கட்டளையிடப்பட்டிருந்தார். சில நாடுகளில் அக்கொள்கையை அவர் பின்பற்றவில்லை. ஒரு சில ஆண்டுகளில் அவருடைய அதிகாரிகளும், இணைக்கும் கொள்கையை வெளியிட்டனர். மைசூரின் அரசரான ராஜகிருஷ்ண உடையாரின் மோசமான நிருவாகத்தைத் தொடர்ந்து அங்கே குழப்பம் ஏற்பட்டதால், அந்நாட்டின் ஆட்சியை 1831ஆம் ஆண்டில் அவர் ஏற்றுக்கொண்டார். அவ்வரசர் ஓய்வு ஊதியம் கொடுக்கப்பட்டுப் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். 1881ஆம் ஆண்டு வரையில் பிரிட்டிஷ் அரசாங்கம் மைசூரை ஆட்சி செய்தது. மற்றும் சில இந்திய நாடுகளை பிரிட்டிஷ் பேரரசுடன் பென்டிங்கு இணைத்தார். காச்சார் (Cachar) நாட்டின் கடைசி அரசர் வாரிசு இல்லாமல் இறந்த பிறகு அந்நாட்டின் சிம்மாதனத்திற்கு உரிமை கொண்டாடியவர்களை பிரிட்டிஷ் ஆட்சி ஒதுக்கிவிட்டு, 1832, ஆகஸ்டில் அந்நாட்டை இணைத்துக்கொண்டது. அஸ்ஸாமிலிருந்த ஜெயிந்தியா (Jainthia) அரசர், ஆங்கிலேயரின் கண்டிப்பான நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளாததால், அவருடைய நிலங்கள், 1835 மார்ச்சில், ஆங்கிலப் பேரரசுடன் இணைக்கப்பட்டன.

தம் மக்களைக் கொடுந் துன்பத்திற்கு ஆளாக்கியதாகவும், ஆங்கிலேயருக்கெதிராக இரகசியமாகச் சதி செய்ததாகவும், குடகு நாட்டின் இளைய அரசரான வீரராஜா (Viraraja) என்பவர் குற்றம் சாட்டப்பட்டார். இக்குற்றச்சாட்டுகளுக்கு எவ்வித உறுதியான ஆதாரமும் கிடைக்காதிருந்த போதிலும், பிறகு அவை பெரும்பாலும் பொய் என நிரூபிக்கப்பட்ட போதிலும், குடகிற்கு ஆங்கிலப் படைகள் அனுப்பப்பட்டு, 1834, மே, 7-ல் ஒரு பிரகடனத்தின்படி அந்நாடு

இணைத்துக்கொள்ளப்பட்டது. இவ்விதமாக அற்பக்காரணங்களினால் சிறிய இந்திய நாடுகள், ஆங்கில நாட்டுடன் இணைத்துக்கொள்ளப்பட்டன. ஆப்கானியப் போரில் முழு மூச்சுடன் ஈடுபட்டிருந்ததால், ஆக்லண்டு (Auckland) என்பவர் இந்திய நாடுகளைக் கவனிக்க முடியாவிட்டாலும், சென்னை மாகாணத்திலிருந்த கர்னூல் (Karnul) நவாபு ஆங்கில ஆட்சியின்மீது போர் தொடுப்பதற்குத் திட்டமிட்டார் எனச் சந்தேகப்பட்டு, அவருடைய நாட்டை இணைத்துக்கொண்டார்.

அவருக்குப் பின் வந்தவரான எல்லன்பரோ பிரபு, குவாலியரில் ஏற்பட்ட பெருங்கிளர்ச்சியை அடக்க வேண்டியிருந்தது. 1817-1819-ல் ஏற்பட்ட மராட்டியப் போரின் இறுதியில், தௌலத்ராவ் சிந்தியாவின் ஆட்சியிலிருந்த குவாலியரும், சட்லெஜ் நதிக்குத் தெற்கே இருந்த நாடுகளும், மிக்க ஆற்றலுள்ள இந்திய ராணுவ அரசாய்த் திகழ்ந்தன.

1827-ல் தௌலத்ராவ் சிந்தியா இறந்தார். அவருக்குப் பின், அவருடைய உறவினர்களுள் ஒருவரான ஜன்கோஜி ராவ் (Jankoji Rao) என்பவர் அரசராகவும், தௌலத் ராவ் சிந்தியாவின் விதவையும் மிக்க பேராசையுடையவருமான பைஜா பாய் மஹாராணியார் (Maharani Baiza Bai) அரசப் பிரதிநிதியாகவும் நியமிக்கப்பட்டனர். புதிய அரசரின் ஆற்றலற்ற தன்மையினாலும் அரசப் பிரதிநிதியின் தகுதியற்ற செய்கைகளினாலும், குழப்பங்களும் சதிகளும் நாட்டில் ஏற்பட்டன. பின்னவர் நாடு கடத்தப்பட்ட பிறகும், அக்குழப்பங்கள் அடங்கவில்லை. இத்துன்பங்களுக்கிடையில் வாரிசு இல்லாமல், 1843-ல் ஜன்கோஜி இறந்தார். ஜெயாஜி ராவ் (Jayaji Rao) என்கிற ஒரு சிறுவன் அரசனாக்கப்பட்டான். சதிகளும், சதிகளுக்கெதிரான சதிகளும், வெகு வேகமாய் நடந்தன. காரணம், இளைஞனான அரசனுக்கு ஓர் அரசப் பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பதில், இரு கட்சியினரும் சதி வேலைகளில் ஈடுபட்டதே. இறந்த அரசரின் மாமா சாகிப் அல்லது, தாய் மாமனான கிருஷ்ண ராவ் கதம் (Krishna Rao Kadam) என்பவரை கவர்னர்-ஜெனரல் ஆட்சியில் அமர்த்தினார். இறந்த அரசரின் இளமனைவி, காஸ்கி வாலா (Khasgi Wala) என்பவரைப் பதவியில் அமர்த்துவதற்காக, கிருஷ்ண ராவ் கதம் என்பவரைப் பதவியிலிருந்து விரட்டினாள். உள்நாட்டுக் குழப்பத்தால், 40,000 பேர்களைக்கொண்ட குவாலியர் படை, அமைதியில்லாமல் இருந்தது. இதைக் கண்ட கவர்னர்-ஜெனரல், மனக்கவலை அடைந்தார். பஞ்சாபில் 70,000 பேர்

களைக் கொண்ட கால்சாப் படையுடன் இப்படை சேர்ந்தால், ஆங்கில ஆட்சிக்கு மிகுந்த தொல்லை கொடுக்க முடியும் என அவர் அஞ்சினர். தவிரவும், ஷெர் சிங் படுகொலை செய்யப் பட்ட பிறகு, பஞ்சாபில் உள்நாட்டுப்போர் ஏற்படும் நிலை இருந்தது. இவ்விதமான பயத்தால் உந்தப்பட்டு, எல்லன் பரோ பிரபு, சர்வாதிகாரியாய் நடந்துகொண்டார். அவருடைய நியாயமற்ற-அறிவுக்குப் பொருந்தாத—கோரிக்கைகளைக் குவாலியர் அதிகாரிகள் ஏற்றுக்கொண்ட போதிலும், அதற்கிணங்காமல், ஒரு பிரிட்டிஷ் படையைச் சிந்தியாவின் நாட்டிற்கு அவர் அனுப்பினர். தங்கள் தலைவருக்கு நேர்ந்த இந்த அவமானத்தைக் கண்டு ஆத்திரமுற்ற குவாலியர் துருப்புகள், பிரிட்டிஷ் துருப்புகளை எதிர்ப்பதற்கு ஆயத்தமாயின. குவாலியருக்கு வடக்கே இருந்த மகாராஜ்பூர் (Maharajpur) என்னுமிடத்தில் சர் ஹுக் கவ் என்பவராலும், பனியார் (Paniar) என்னுமிடத்தில் ஜெனரல் கிரே (Grey) என்பவராலும், 1843, டிசம்பர், 29-ல் குவாலியர் துருப்புகள் தோற்கடிக்கப்பட்டன. ஆங்கிலேயரின் பாதுகாப்பைப் பெற்ற குவாலியர் ஓர் அரசப் பிரதிநிதியின் மன்றத்தால் ஆளப்பட்டது. பிரிட்டிஷ் ரெஸிடென்டு கட்டுப்பாட்டின்கீழ், மஹாராஜா உரிய பருவம் அடையும்வரையில் அம்மன்றம் ஆட்சி செய்யும். அந்நாட்டின் படை 9000 பேர்கள் கொண்ட படையாகக் குறைக்கப்பட்டு, 10,000 ஆங்கில வீரர்களைக் கொண்ட ஒரு படை அந்நாட்டில் நிறுத்தப்பட்டது. பெருங் கலகத்தின் போது, தினகர் ராவ் (Dinakar Rao) என்கிற குவாலிய அமைச்சரின்கீழ் இருந்த குவாலியர்படை, ஆங்கிலேயரை ஆதரித்தபொழுது அந்நாட்டிலிருந்த கம்பெனியின் படை, கம்பெனிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தது விநோதமாய் இருந்தது.

டல்ஹௌசி பிரபு கவர்னர்–ஜெனரலாய் இருந்த சமயத்தில் பல இந்திய நாடுகளை பிரிட்டிஷ் பேரரசுடன் இணைத்து அதை விரிவுபடுத்தினர். அவகாசியிலிக் கொள்கை (Doctrine of Lapse) என்கிற கொள்கையைப் பின் பற்றி டல்ஹௌசி பிரபு என்பவர் ஏராளமான நாடுகளை இணைத்துக் கொண்டார். இக்கொள்கையின்படி, இயற்கையான வாரிசு இல்லாவிட்டால், 'சார்பு' நாடுகளின் ஆதிபத்திய உரிமை, மேலாட்சியிடம் (Paramount Power) சேர்ந்துவிடும். முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின் பிரிட்டிஷ் அரசாங்கம் அந்நிலையைப் (மேலாட்சியை) பெற்றது என ஒப்புக்கொள்ளப் பட்டது. தவிரவும், இக்கொள்கை, பிரிட்டிஷ் ஆட்சியால்

ஏற்படுத்தப்பட்ட நாடுகளுக்கு அல்லது அவ்வாட்சிக்குக் கீழ்ப் பட்ட நாடுகளுக்கு மட்டுமே பொருந்தக்கூடியது. வாரிசுகளைத் தத்து எடுத்துக்கொள்வது, இந்துக்களிடையே பல்லாண்டு காலமாய் இருந்துவரும் பழக்கமாய் இருந்தாலும், மேலாட்சி யின் சம்மதமில்லாமல் அந்த உரிமைகளை உபயோகப்படுத்து வதற்கு பிரிட்டிஷ் ஆட்சி இணங்கவில்லை. 'பாதுகாக்கப்பட்ட நண்பர்களிடம்' இக்கொள்கை பின்பிற்றப்படவில்லை. சில இந்திய நாடுகளின் ஆட்சியில் வெளிப்படையாகத் தெரிந்த தீய வழக்கங்களைச் சுட்டிக்காட்டி, கவர்னர்–ஜெனரல் பின் வருமாறு கூறினர்: 'ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் எவ்வித வாரிசும் இல்லாததால், அதன் ஆதிபத்திய உரிமை, மேலாட்சியைச் சேரும் என்கிற நிலைமை ஏற்பட்டாலும், வாரிசு இல்லாத நிலை இயற்கையாகவே ஏற்பட்டு, இந்து சட்டப்படி, தத்து எடுப்பதற்கு அரசாங்க அனுமதி பெற்று வாரிசைப் பெற்ருலும், சிறந்த கொள்கையைப் பின்பற்றும் பொழுது நாடு அல்லது வருமானம் பெறுவதற்கு உரிய வாய்ப்பு வந்தால், அதை ஒதுக்கி வைப்பதையோ, அல்லது தவற விடுவதையோ, ஆங்கில அரசாங்கம் செய்யாது. அப்படிப்பட்ட ஒவ்வொரு சமயத்திலும் கடமைப்படியும், கொள்கைப்படியும், அரசாங்கம் நேர்மையாகவும் நம்பிக்கை உண்டாக்கும் வகையிலும் நடப்பதற்குக் கடமைப்பட்டிருக் கிறது. சிறிது சந்தேகம் ஏற்படினும், அவ்வுரிமையை விட்டுவிடும். தத்து எடுத்த நாடுகளில் பின்பற்றப்பட்ட கொள்கையையும் இணைப்புக் கொள்கையையும் டல்ஹௌசி பிரபு உண்டாக்கவில்லை என்பது உண்மைதான். இவ்விரண்டும் 1834-ல், டைரக்டர்களின் மன்றத்தால் உறுதி செய்யப்பட்டு, சிலவற்றில் கையாளப்பட்டது. இதற்கு முன்பே சில நாடுகள் இணைக்கப்பட்டதைப் பார்த்தோம். அவகாசியிலிக் கொள்கை, 1839-ல் மண்டவி (Mandavi) என்னும் நாட்டில் பயன்படுத்தப்பட்டது. 1840-ல், கொலாபா (Kolaba), ஜலான் (Jalaun) என்கிற நாடுகளுக்கும், 1842-ல் சூரத்திற்கும் பயன் படுத்தப்பட்டது. ஆனால் டல்ஹௌசி பிரபு இக்கொள்கை யைத் தீவிரமான முறையில் பின்பற்றினர். அவருடைய ஒவ்வோர் இணைப்புக்கும், போதிய முன் மாதிரி இருந்தது. தவிர்க்கக் கூடுமானல், பிரதேச இணைப்பைத் தவிர்க்கின்ற பொதுக்கொள்கையை அவர்களுடைய முன்னவர்கள் பின்பற் றினர்கள்; ஆனல், டல்ஹௌசியோ, சட்டபூர்வமாகப் பிரதேச இணைப்பைச் செய்ய முடியும் எனில் பிரதேச இணைப்புப்பற்றிய பொதுக்கொள்கையைப் பின்பற்றினர்.'

1848-ல் சத்தாரா, 1850-ல் சட்லெஜ் நதிக்குத் தெற்கேயிருந்த பகத் (Bhagat) எனும் மலைநாட்டைச் சார்ந்த ஜெயித்பூர் (Jaitpur), சாம்பல்பூர் (Sambalpur), 1852-ல் உதயபூர், 1853-ல் நாகப்பூர், 1854-ல் ஜான்ஸி என்னும் நாடுகள், அவகாசியிலிக் கொள்கையைப் பின்பற்றி இணைக்கப்பட்டன. ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட நாடுகளுக்கும் பாதுகாக்கப்பட்ட நட்பு நாடுகளுக்குமுள்ள வித்தியாசம் மிக மிக நுட்பமானது என்பதை அறிந்துகொள்ளுதல் வேண்டும்; தவிரவும், இந்நாடுகள் எல்லாம் 'ஆட்சிக்குட்பட்ட நாடுகள்' என்கிற கருத்தே ஐயத்தற்கு இடமானது. 1818-ல் பேஷ்வாவின் வீழ்ச்சிக்குப் பிறகு, சத்தாரா நாடு, சிவாஜியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்கு ஹேஸ்டிங்ஸ் பிரபு என்பவரால் கொடுக்கப்பட்டது என்கிற பொருளில்தான் அந்நாடு, ஆங்கிலேயர்களால் உண்டாக்கப்பட்டது எனக் கூறப்பட்டது. 1839-ல் அந்நாட்டின் அரசர் அநீதியாக ஆட்சி செய்தார் எனக் குற்றஞ்சாட்டி, அவரை நீக்கிவிட்டு, அவர் சகோதரர் அரசராகச் செய்யப்பட்டார். அவருக்குக் குழந்தைகள் இல்லாததால், கவர்னர்-ஜெனரலையாவது அல்லது பிரிட்டிஷ் ரெஸிடென்டையாவது கலந்து ஆலோசனை செய்யாமல், 1848-ல் அவர் இறப்பதற்கு முன்பே, ஒருவனைத் தத்துக்கு எடுத்துக்கொண்டார். டல்ஹௌசி பிரபு, தம் முக்கிய சகாக்களின் ஆலோசனையின் படி, தத்து எடுத்தது செல்லாது எனக்கருதி, சத்தாரா நாடு மேலாட்சியிடம் சேர்ந்து விட்டதாக அறிவித்தார். 'இது இந்தியாவின் பொதுச் சட்டப்படியும் வழக்கப்படியும் இருக்கிறது,' என டைரக்டர்களின் மன்றமும் அவருடைய கொள்கையை ஒப்புக்கொண்டது. 1818-ல் நாகப்பூரும் ஆங்கிலேய ஆட்சியின்கீழ் வந்தது; ஆனால், ஹேஸ்டிங்ஸ் அதை அந்நாட்டின் பழைய அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்குக் கொடுத்துவிட்டார்.

1853-ல் அந்நாட்டின் அரசர், எவ்விதமான சந்ததியுமில்லாமலும், தத்துப் புத்திரன் இல்லாமலும் இறந்தார். அந்நாடு கம்பெனியால் உண்டாக்கப்பட்டது எனக்கூறி, டல்ஹௌசி பிரபு அதை இணைத்துக்கொண்டார். சத்தாராவும் நாகப்பூரும், ஆங்கில ஆட்சியிடம் கொண்டிருந்த உறவு சட்டப்படி எவ்விதமாய் இருந்தபோதிலும், அவைகளை இணைத்துக்கொள்வதற்கு, டல்ஹௌசியின் ஏகாதிபத்திய நோக்கங்களே காரணம் என்பது நன்றாகத் தெரிகிறது. சத்தாரா, நாகப்பூர் சம்பந்தப்பட்ட வரையில் 'ஏகாதிபத்திய நோக்கங்களே அவரிடம் இருந்தன. பம்பாய்க்கும் சென்னைக்கும் இடையிலும்,

பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் இடையிலும் உள்ள போக்கு வரத்து வழியில், அந்நாடுகள் இருந்தன,' என்று, டல்ஹௌசியை ஆதரிக்கும் லீ வார்னர் (Lee Warner) என்பவரும் கூறுகிறார். நாகப்பூர் அரசுக்குச் சொந்தமான பொருள்களையும் பெருஞ் செல்வத்தையும் பொது மக்களுக்கு ஏலத்தில் விட்ட செய்கை, 'அரண்மனையைச் சூறையிடுதல்' என்று கேயி (Kaye) என்பவர், சிப்பாய் போர் (Sepoy War) என்னும் நூலில் கூறியபடி உண்மையில் பெருந்தன்மையற்ற இழிசெயல்தான். பண்டல்கண்டில் ஒரு மாவட்டமான ஜான்ஸி, 1818-ல் பேஷ்வாவினால் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டது. 'ஆட்சிக்குட்பட்ட ஒத்துழைப்பின்' நிபந்தனைகளை ஒப்புக்கொண்ட ஒருவரை ஆங்கிலேயர்கள் அரசராக்கினார்கள். குழந்தைகள் இல்லாமல், ஒரு தத்துப் புத்திரனைப்பெற்ற அவ்வரசர், 1853 நவம்பரில் இறந்தார். அதனால் அந்நாட்டையும் டல்ஹௌசி இணைத்துக் கொண்டார். ஆங்கில ஆட்சியின் பிரதிநிதியைச் சிறைப்படுத்தியதாகவும், இரண்டு ஆங்கிலேயர்களைக் கொடுமைப்படுத்தியதாகவும், சிக்கிம் சிற்றரசரைக் குற்றம் சாட்டி, அவரிடமிருந்து 1675 சதுர மைல்களைக் கொண்ட இடங்களைக் கம்பெனி எடுத்துக்கொண்டது. நாராயண் சிங் என்கிற சாம்பல்பூரின் அரசர், வாரிசு இல்லாமல் இறந்ததால், அவருடைய நாடும் பிரிட்டிஷ் பேரரசுடன் இணைக்கப்பட்டது. பகத் உதயபூர் ஆகிய நாடுகள் சம்பந்தமாக டல்ஹௌசி செய்த முடிவைக் கானிங் பிரபு (Canning) என்பவர் மாற்றினார்: இராசபுதனத்திலிருந்த காருளி (Karuli) என்னும் நாட்டை இணைத்துக்கொள்வதற்காக அவர் கூறிய ஆலோசனையை அந்நாடு 'பாதுகாக்கப்பட்ட நட்பு நாடு' என்றும், 'ஆட்சிக்குட்பட்ட' நாடு அன்று என்றும் கூறி, டைரக்டர்கள் மன்றம், அவர் ஆலோசனையை நிராகரித்தது.

'உண்மையான அதிகாரம் இல்லாமல், வெளித் தோற்றங்கள்மட்டும் இருந்தால், அவைகள், சுதேசமக்கள் கம்பெனியிடம் வைத்திருக்கும் சிறந்த நம்பிக்கையைக் குலைத்துவிடும்,' எனக்கூறி, சில அரசர்கள் பெற்றிருந்த பட்டங்களையும், ஓய்வு ஊதியங்களையும் ஒழிப்பதற்கும் அவகாசியிலிக் கொள்கை பின்பற்றப்பட்டது. இதன்படி, 1853-ல் கருநாடக நவாபு இறந்த பிறகு, அவருக்கு வாரிசாக எவரையும் டல்ஹௌசி ஒப்புக்கொள்ளவில்லை. அவ்விதமே இரண்டு மகளிரையும், பதினாறு மனைவிகளையும் பெற்ற தஞ்சாவூரின் அரசர் 1855-ல் இறந்தபோது, அரச பதவியைக் கவர்னர்-

ஜெனரல் எடுத்துவிட்டார். பெயரளவில் டில்லிப் பேரரசராய் இருப்பவருடைய பட்டத்தையும் ஒழிப்பதற்கு அவர் விரும்பினர். ஆனால், அதை டைரக்டர்கள் மன்றம் ஏற்றுக் கொள்ளவில்லை. சர் ஜான் மால்காம் என்பவரால், முன்னாள் பேஷ்வாவான இரண்டாம் பாஜிராவ் என்பவருக்குக் கொடுக்கப்பட்ட எட்டு லட்ச ரூபாய் ஓய்வு ஊதியத்தையும், அவர் 1853-ல் இறந்த பிறகு நானசாகிபு எனப் பின்னர் வழங்கப்பட்ட துந்து பண்டிதர் என்கிற பாஜிராவின் தத்துப் புத்திரனுக்கு அப்பணத்தைக் கொடுப்பதற்கு டல்ஹௌசி பிரபு மறுத்துவிட்டார். பாஜிராவுக்கு அந்த ஓய்வு ஊதியம் தனிப்பட்ட முறையில் கொடுக்கப்பட்டதால், அது அவருடைய வாரிசுக்குக் கொடுக்கப்படமாட்டாது என அவர் காரணம் கூறினர். இந்தச் செயலைக் 'கொடுமையானது' எனக் கேயி என்கிற நூலாசிரியரும், 'பேராசைத்தனமானது' என ஆர்னல்டு (Arnold) என்பவரும் கூறியிருக்கிறார்கள். ஆங்கிலேயரிடம் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி ஒரு பிரிட்டிஷ் படையை அவர் வைத்திருக்க வேண்டுவதில்லை. இப்படியிருந்தபோதிலும், அப்படையைப் பராமரிப்பதற்கு வேண்டிய செலவை நவாபு கொடுக்கவில்லை என ஆங்கிலேயர்கள் கூறினர்கள். 'ஹைதராபாது படைக்கு'த் தன் நாட்டின் ஒரு பகுதியைக் கொடுக்குமாறு நைஜாமை டல்ஹௌசி வற்புறுத்தினர். 1853 மே மாதத்தில் ஒப்புக்கொண்ட ஏற்பாட்டின்படி, பருத்தி விளையும் பீரார் (Berar) மாகாணத்தைப் பண உதவிக்குப் பதிலாகக் கம்பெனி பெற்றுக்கொண்டது.

நாட்டைப் பற்றுதல், அவகாசியிலிக் கொள்கை ஆகியவைகளுடன்கூட, 'ஆட்சி செய்யப்படுபவர்களுக்கு நன்மை' என்ற முதுமொழியையும் பின்பற்றி, 'லட்சக்கணக்கான மக்களுக்குத் துன்பம் இழைக்கும்' சில நாடுகளை ஆங்கில ஆட்சி இணைத்துக் கொண்டது. இம்முதுமொழியை உபயோகப்படுத்தி இணைத்துக் கொண்ட நாடுகளுள், அயோத்தியை முதன்மையாகக் குறிப்பிடலாம். 1801-ல் செய்யப்பட்ட வெல்லெஸ்லி பிரபுவின் உடன்படிக்கைக்குப் பிறகு உள் நாட்டு ஆட்சியைப் பெற்ற 'பாதுகாக்கப்பட்ட ஜமீன் நாடாக' அயோத்தி கருதப்பட்டது. அயோத்தியின் அரசருக்கு அதிகாரத்தைக் கொடுக்காமல், பொறுப்புகளை மட்டும் கொடுத்தது, உண்மையில் அறிவற்ற ஏற்பாடுதான். அதனுடைய இயற்கையான விளைவுகளால், ஆட்சி சீர்கேடு அடைந்து மக்கள் மிக்க துன்பத்திற்குள்ளாயினர். பிரிட்டிஷ் ஆட்சி, அயோத்தி ஆட்சியின் தீங்குகளை உணர்ந்தது.

தொடர்ந்து வந்த கவர்னர்-ஜெனரல்கள், முக்கியமாக வில்லியம் பென்டிங்கு பிரபுவும் ஹார்டிஞ்சு பிரபுவும், இதைக் குறித்து அந்நாட்டின் அரசரை எச்சரித்தார்கள். ஆனால், பாதுகாப்பு முறை உடன்படிக்கையில் உள்ள அடிப்படையான குறைபாடுகளை நீக்குவதற்கு எவரும் முயற்சி செய்யவில்லை. அவ்வுடன்படிக்கை, அயோத்தியின் அரசரைப் பாதுகாப்பதாக உறுதிமொழி அளித்து, அதன்மூலம் நாட்டு நலனில் அக்கறையில்லாமல் அவரைச் செய்து, 'அவருடைய மக்கள் செய்த நியாயமான கிளர்ச்சி'யினின்றும் அவரைப் பாதுகாத்தது. 1848 முதல் 1854 வரை, அயோத்தியில் ரெஸிடென்டாய் இருந்த கர்னல் ஸ்லீமான் (Sleeman), அவருக்குப் பின்னர் அப்பதவிக்கு வந்த கர்னல் அவுட்ராம் (Outram) ஆகிய இருவரும், ஆங்கில ஆட்சிக்கு அயோத்தியின் பரிதாபமான நிலைமையை அவர்களுக்கு முன்பு இருந்தவர்கள் கூறியதைவிட மிகத் தெளிவாகக் கூறி, துணிவுள்ள ஒரு கொள்கையை அயோத்தியில் பின்பற்றும்படி கவர்னர்-ஜெனரலை வற்புறுத்தினார்கள். இந்தியாவில் வெகுவேகமாக வளரும் பிரிட்டிஷ் பேரரசின் மத்தியில் மோசமான ஆட்சியை உடைய அயோத்தி இருப்பது, அப்பேரரசின் சிற்பிகளுக்கு அக்காலத்திற்குப் பொருத்தமற்றதாகத் தெரிந்ததால், அவர்கள் மேற்கொண்ட வேலையை எளிதாக்கும்பொருட்டு, அது சீக்கிரத்திலேயே அகற்றப்பட வேண்டும். வாரன் ஹேஸ்டிங்ஸ் கால முதற்கொண்டு பிரிட்டிஷ் அதிகாரத்திற்கு உட்பட்ட ஒரு நாட்டிற்குச் சிறந்த அரசாங்கம் ஏற்படும் என்ற நம்பிக்கையைக் கொடுப்பதைவிட, சிறந்தனவும் வசதியானவையுமான காரணங்கள் இருக்க முடியாது. அயோத்தியை இணைக்காமல் அதன் ஆட்சியை மட்டும் எடுத்துக் கொண்டு, அவருடைய அரண்மனை, பதவி, பட்டம் முதலியவைகளை அவரிடமே விட்டு வைத்து, அயோத்தியின் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு டல்ஹௌசி பிரபு விரும்பினார். ஆனால், டைரக்டர்களின் மன்றம், முழு இணைப்பையும் செய்யும்படி கட்டளையிட்டது. 1856, பிப்பிரவரி, 13-ல் அவுட்ராம் என்பவரால் அது முறைப்படி பிரகடனப்படுத்தப்பட்டது. அயோத்தியின் கடைசி அரசரான வசீத் அலி ஷா (Wazid Ali Shah), கல்கத்தாவிற்கு அனுப்பப்பட்டு, பன்னிரண்டு லட்ச ரூபாயை ஆண்டுதோறும் ஒய்வு ஊதியமாகப்பெற்று, அவ்விடத்தில் தம் காலத்தைக் கழிக்கும்படி நேரிட்டது.

1855, டிசம்பர், 15ஆம் தேதி, சர் ஜார்ஜ் கூப்பர் (Sir George Couper) என்பவருக்கு எழுதிய கடிதத்தில், 'டல்ஹௌசி

குறிப்பிட்டபடி அயோத்தியின் இணைப்பு, உலகச் சட்டம் அனுமதிக்காத ஆக்கிரமிப்பிற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இந்தியாவில் இருந்த பிரதேசங்களை அச்சமயத்தில் வலுப் படுத்த விரும்பிய கம்பெனி, மோசமான ஆட்சி அயோத்தி யில் நடக்கிறது எனக் காரணம் காட்டி, அந்நாட்டை இணைத்துக்கொண்டது. ஆனால், அந்நாட்டில் மோசமான ஆட்சி ஏற்பட்டதற்குரிய முழுப்பொறுப்பையும் ஆங்கிலேயரே ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏனெனில், அவர்களே, தகுதி யற்ற ஏற்பாடான பாதுகாப்பு முறை உடன்படிக்கையை அந் நாட்டின் மீது திணித்து, அதன் உள் விவகாரங்களில் அடிக்கடி தலையிட்டனர். அந்நாட்டில், ஆங்கிலேயர்களின் தலையீடு, ஆங்கிலேயரின் நற்பெயருக்கு இழிவைக் கொடுத்தது போல, அந்நாட்டு மன்றத்திற்கும் மக்களுக்கும் தீமையை விளைத்தது. அயோத்தியின் விவகாரங்களைப்பற்றி எழுதிய நூலாசிரி யர்கள் கொடுத்த எல்லாச் சான்றுகளும், மேற்சொன்ன முடிவைத்தான் கொடுக்கின்றன,' என ஹென்றி லாரன்ஸ் என்பவர் கூறுகிறார்.

தவிர, அயோத்தியின் அரசர்கள் தளராத விசுவாசத்தை ஆங்கில ஆட்சியிடம் கொண்டிருந்ததற்கு ஈடாக எவ்விதமான கைம்மாற்றையும் பெறவில்லை. அயோத்தியை இணைத்தது, பழைய உடன்படிக்கையை அவமதிக்கும் வகையிலும் 'தேசிய நம்பிக்கையை மிகக் குலைக்கும்' வகையிலும் செய்யப்பட்ட ஒரு ஏற்பாடு எனப் பலரும் எண்ணினர். 1837-ல், ஆக்லண்டு பிரபு என்பவர், அயோத்தியின் அரசருடன் ஓர் ஏற்பாட்டைச் செய்துகொண்டார். அதன்படி, அவ்வரசர், சீர்திருத்தங்களை உண்டாக்க வேண்டும்; அல்லது ஆதிபத்திய உரிமையை வைத்துக்கொண்டு, ஆட்சியை பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் விட்டுவிட வேண்டும். இவ்வுடன்படிக்கையை டைரக்டர்கள் மன்றம் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் இவ்வுடன்படிக்கையில் இருந்த ஒரே ஒரு விதியை மட்டும் விலக்குவதாக அயோத்தி நவாபுவிடம் ஆக்லண்டு பிரபு அறிவித்தார். அதன் பிறகு எப்படியோ பின்னர் வெளி வந்த அரசாங்க வெளியீட்டில், அந்த உடன்படிக்கை சேர்த்துக்கொள்ளப்பட்டு அவருக்குப் பின் வந்த கவர்னர்-ஜெனரல்களால் அவ்வுடன்படிக்கை அமுலில் இருக்கிறதெனக் கூறப்பட்டது. அயோத்தியை இணைப்பதற்கு டைரக்டர்கள் முடிவு செய்தபோது, 1837-ல் ஏற்பட்ட உடன்படிக்கை ஒரு 'பயனற்ற காகிதம்' என அயோத்தி நவாபுவுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் திடீரென அறிவித்தது.

# 7. இந்தியப் பெருங்கலகம்

## 1. கலகத்தின் முன் குறிகள்

இந்தியாவில் பிரிட்டிஷ் டொமினியன் வேகமாகப் பரவியதைத் தொடர்ந்து, இந்தியரது ஆட்சி முறையிலும் பன்னெடுங்காலமாக மக்களுக்குப் பழக்கமான வாழ்க்கை முறையிலும் ஏற்பட்ட மாறுதல்கள், அமைதியான இந்திய வாழ்க்கையின் போக்கைக் குலைத்து, நாட்டின் பல பாகங்களிலும் கொந்தளிப்பை ஏற்படுத்தின. இவற்றைக் குறித்த சிலவற்றைப் பார்ப்போம். கி.பி. 1816-ல் ஏற்பட்ட **பரெய்லிக் கலகமும்** (Bareilly rising) 1831–32-ல் ஏற்பட்ட கோல் (Cole) கலகமும், சோட்டா நாகப்பூரிலும், (Chota Nagpur) பாலமுவிலும் (Palamu) ஏற்பட்ட சிறிய கிளர்ச்சிகளும், சையது அஹமது, அவர் சீடர் மீர் நிசர் ஆலி அல்லது டிட்டோமீர் (Niser Ali or Titto Meer) ஆகியவர்களின் தலைமையின்கீழ் 1831-ல் பராசத் (Barasat-வங்காளம்) என்னுமிடத்தில் நடந்த பொராஜீ (Farazee) அமளியைப் போன்ற முஸ்லீம் போராட்டமும்; அதன் பிறகு 1847-ல் டீடு மீர் (Deedu Meer) என்பவரின் தலைமையின்கீழ் பரீத்பூரில் (Faridpur-Bergal—வங்காளம்) ஏற்பட்ட கலகமும்; 1849, 1851, 1852 ஆகிய ஆண்டுகளில் நடந்த மாப்பிளா (Moplah) கலகங்களும் 1855–1857-ல் சந்தால் (Santhal) புரட்சியும் நோக்கத் தக்கவை. இக்கிளர்ச்சிகள், இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் பேரரசில் நிலவிய குழப்பத்தையே காட்டுகின்றன. இவற்றில், 1857–1859-ல் ஏற்பட்ட கலகமே கடைசியானதாகவும், மிகக் கடுமையானதாகவும் இருந்தது. இக்கலகம், ஆங்கிலப் பேரரசு என்னும் பிரமாண்டமான கட்டடத்தின் அடிப்பாகத்தையே ஆட்டிவிட்டது.

## 2. கலகத்தின் காரணங்கள்

அக்கால நிலைமைகள் மாறியதன் விளைவாக அக்கலகம் ஏற்பட்டது. அரசியல், பொருளாதாரம், சமூகம், சமயம்,

இராணுவம் ஆகிய நான்கு பிரிவுகளின்கீழ் அதன் காரணங்களைச் சுருக்கிக் கூறலாம். டல்ஹௌசி பிரபுவின் இணைப்புக் கொள்கை, அவகாசியிலிக் கொள்கை (Doctrine of Lapse or escheat) அல்லது வாரிசு இல்லாததால் சொத்து அரசனைச் சேரும் கொள்கை, மாபெரு முகலாயர்களின் சந்ததியார்களை அவர்கள் மூதாதையர்களின் அரண்மனையிலிருந்து நீக்கி டில்லிக்கருகேயுள்ள குதுப் (Qutb) என்னுமிடத்தில் வைப்பதற்கான திட்டம் ஆகியவைகள், முக்கிய அரசியல் காரணங்கள். இவைகளெல்லாம் இயற்கையாகவே அரசாட்சி செய்த பழைய இந்து அரசர்கள், முஸ்லீம் அரசர்கள் ஆகியவர்களின் மனத்தில் சந்தேகத்தையும் அமைதியின்மையையும் ஏற்படுத்தின. அயோத்தி ஆங்கில நாட்டுடன் இணைக்கப்பட்டதும், முகலாயப் பேரரசரைச் சூழ்ந்திருந்த குறைவான ஆடம்பரத்தை ஆங்கிலேயர்கள் ஒழித்துவிட நினைத்ததும், முஸ்லீம்களின் மனத்தைப் புண்படுத்தியது. முன்னாள் பேஷ்வாவான இரண்டாம் பாஜிராவ் என்பவருக்குக் கொடுத்துவந்த ஓய்வு ஊதியத்தை, அவருக்குத் தத்துப் புத்திரரான நானாசாகிபு என்பவருக்குக் கொடுக்க ஆங்கிலேயர் மறுத்தது, இந்துக்களின் மனத்தில் அதிருப்தியை உண்டுபண்ணியது. உண்மையில், இக்கலகம் நடப்பதற்கு முன்பே, அதிருப்தி அடைந்த அரசர்களும் அவர்கள் நண்பர்களும் கம்பெனியின் ஆட்சிக்கு எதிராகச் சதி செய்துகொண்டிருந்தார்கள். முன்னாள் அயோத்தி அரசரின் ஆலோசனையாளரான அஹமது உல்லா (Ahmed Ullah), நானாசாகிபு (Nana Sahib), நானாசாகிபுவின் மருமானரான ராவ் சாகிப் என்பவரும் அவரைச் சூழ்ந்தவர்களான தாந்தியா தோபி (Tantia Topi), அஜிமுல்லாகான் (Azimullah Khan) முதலியவர்களும், ஜான்ஸி ராணி, வருவாய்த் துறைக் கழகத்தால் (Board of Revenue) தன் உடைமைகளை இழக்கும்படி செய்யப்பட்ட குன்வார் சிங் (Kunwar Singh) எனும் பீஹார் மாகாணத்திலிருந்த ஜகதீஸ்புரம் என்னும் இடத்தின் இரசபுத்திரத் தலைவர், முகலாயப் பேரரசரான பஹதூர் ஷா என்பவரின் உறவினரான பிருஜ் ஷா (Firuz Shah) ஆகியவர்கள் முக்கியமானவர்கள்.

சில நிலச் சுவாந்தார்களின் சொத்தை ஆங்கில ஆட்சி பறிமுதல் செய்தது. பதவியிலிருந்து நீக்கப்பட்ட அரசர்களின் ஆதரவாளர்கள், வேலையாள்கள் ஆகியவர்கள் வேலை இல்லாது இருந்த நிலைமை ஆகியவை, கொடிய பொருளாதாரத் தொல்லைகள் சமூக அமைதியின்மை ஆகியவைகளை

நாட்டின் பல பாகங்களிலும் ஏற்படுத்தின. தீர்வையற்ற உரிமை முறையை மறுபடியும் பென்டிங்கு புகுத்தியது நாட்டின் வருவாயை அதிகப்படுத்தியது உண்மையானாலும், அதே சமயத்தில் அக்கொள்கை, தங்கள் உடைமைகளை இழந்த நிலச்சுவாந்தார்களை வறுமையில் ஆழ்த்தியது. மாபெருங் கலகம் ஆரம்பமாவதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னே, நிலச்சுவான்தார்களின் உரிமைகளைப்பற்றி ஆராய்வதற்காக, பம்பாயில், டல்ஹௌசி பிரபுவினால் ஏற்படுத்தப்பட்ட இனாம் கமிஷன் (Inam Commission) தக்காணத்திலிருந்த சுமார் 20,000 ஜமீன்களைப் பறிமுதல் செய்தது. இவ்விதமான தீவிர நடவடிக்கை நாட்டின் பொருளாதார நிலைமையில் சிக்கல்களை நிச்சயமாக ஏற்படுத்தும் என்பது தெரிந்த பிறகும், ஏராளமான ஜமீன்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டது. அயோத்தியில் மக்களிடையே மனக்கசப்பு அதிகமாய் இருந்தது. குறிப்பாக, கருணையற்ற கொள்கையும், இறுமாப்புடைய குணமும் பெற்ற கவர்லி ஜாக்சன் (Coverly Jackson) என்பவர், சர் ஜேம்ஸ் அவுட்ராம் (Sir James Outtram) என்பவருக்குப் பின்னர் சீப் கமிஷனராய்ப் பதவியில் இருந்தபோது, அம் மனக்கசப்பு அதிகமாகியது. அரசரிடமிருந்து பண உதவி பெற்றவர்களும் அதிகாரிகளும், தங்களுடைய படியையும் (அலவன்ஸ்) ஓய்வு ஊதியத்தையும் பெறமுடியவில்லை; அவருடைய தலைநகரம், புதிய சீப் கமிஷனரால் எடுத்துக் கொள்ளப்பட்டது. அவருடைய படையிலிருந்து விலக்கப்பட்ட ஏராளமான வீரர்கள், வேலையில்லாமல், வாழும் வழியின்றித் தவித்தார்கள். 'ஆங்கிலேயரிடம் பல ஆண்டுகளாக விசுவாசமாய் இருந்த அயோத்தி மக்களை மேற்கூறிய நிகழ்ச்சிகள் மாற்றி, ஆங்கிலேயரிடம் வெறுப்பை உண்டாக்கி, அவர்களுக்கெதிரான சதியிலும் ஈடுபட வைத்தன.' ஜாக்ஸனை நீக்கி, ஹென்றி லாரன்ஸ் என்பவரை மறுபடியும் நியமித்ததால், நிலைமையில் ஓரளவு அபிவிருத்தி ஏற்பட்டாலும், மக்களிடமிருந்த அதிருப்தி முற்றும் நீக்கப்படவில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியிலும் இந்தியாவில் மிக வேகமாகப் பரவிய மேற்கு நாடுகளின் நாகரிகத்தைக் கண்டு இந்தியாவிலிருந்த பழமைப் பற்றாளர்கள் (Conservatives) மிக அச்சமடைந்தார்கள். இரயில், தந்தி போன்ற புதியன புனைதல் (Inventions), மேற்கத்திய கல்வியைப் பரப்புதல், சதி, சிசுக் கொலை ஆகிய வழக்கங்களை ஒழித்தல், இந்து மதத்தை விட்டு விலகியவர்களின் சிவில் உரிமையைப் பாதுகாப்பதற்

காக 1856ஆம் ஆண்டில் உண்டாக்கப்பட்ட சமயக் குறைபாடு களை நீக்கும் சட்டம் (Religious Disabilities Act of 1856), விதவைகள் மறுமணம் செய்துகொள்வதைச் சட்டபூர்வமாக ஆதரித்த இந்து விதவைகள் மறுமணச் சட்டம், 1856 (Hindu Widows Remarriage Act of 1856), சில கிறித்தவ மிஷனரிகள் நேர்மையற்ற விதத்தில் வலியத் தலையிடும் போக்கு ஆகி யவைகளினால் அரசாங்கம், இந்தியர்களுடைய சமூக அமைப்பை அழிக்கவும், இந்நாட்டில் பல காலமாக இருந்து வரும் பழக்கங்களையும் முறைகளையும் மாற்றி மேற்கத்திய முறைகளைப் புகுத்தவும், இந்திய மக்களைக் கிறித்தவ மதத் திற்கு மாற்றவும் முயல்கிறது என அவர்கள் எண்ணினார்கள். வஹாபி மதப் பிரிவின் (Wahabi sect) நடவடிக்கைகள், முஸ்லீம்களின் உணர்ச்சிகளைக் கொழுந்து விட்டெரியுமாறு செய்தன.

இவ்விதம் பல காரணங்கள் ஒன்று சேர்ந்து அதிருப்தி என்னும் புகையை நாட்டின் பல பாகங்களிலும் எழுப்பியது. இந்தியச் சிப்பாய்களைக் கொண்ட படையானது, முன்பு இருந்ததைப்போலக் கம்பெனிக்கு விசுவாசமாய் இருந்திருந் தால், இப்புகை அழிவை விளைக்கும் பெருஞ்சுவாலையாக மாறி இராது. 'சிப்பாய்களைக் கொண்ட படையைக் கட்டுப் பாடு செய்வதிலேதான் மிகுந்த சிக்கல் இருக்கிறது,' என **இன்ஸ்** (Innes) என்பவர் கூறுகிறார். அக்காலத்தில் இருந்த பல காரணங்களினால், சிப்பாய்கள் கம்பெனியை விரும்ப வில்லை. தொலைவான நாடுகளில் தொடர்ந்து நடந்த போரில் அவர்களை ஈடுபடுத்தியதை அவர்கள் வெறுத்ததால், அவர் களது விசுவாசம் குறைந்தது. சில படைப்பகுதிகள், தாங்கள் தொலைவான இடங்களில் போரிடுவதால், அதிகப்படியான அலவன்ஸ் வேண்டுமென்று கேட்டதைக் கம்பெனியின் ஆட்சி கொடாததால், 1857-ல் ஏற்பட்ட மாபெருங் கலகத்திற்குப் பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்னமே, நான்கு முறை கலகம் செய்திருக்கின்றன ; 1844-ல், 34ஆம் படை ; 1849-ல் 22ஆம் படை ; 1850-ல் 66ஆம் படை ; 1852-ல் 38ஆம் படை தவிர, சிப்பாய் படைகளின் ஒழுங்கு—முக்கியமாக வங்காளப் படை யின் ஒழுங்கு—அரசின் குறைபாடுள்ள கொள்கையால் வேக மாகச் சீரழிந்தது. திறமையுள்ள இராணுவ வீரர்களை இராணுவத்திலிருந்து அரசியற்பதவிகளுக்கு அறிவற்ற முறை

யில் அரசாங்கம் மாற்றியது. வயதுக்கும் திறமைக்கும் மதிப்பு அளிக்காமல், மூத்தவர்களுக்கே மேல் பதவி அளிக்கும் கொள்கையையும் அது பின் பற்றியது. உதாரணமாக, ஜெனரல் காட்வின் (Godwin) என்பவர், தமது எழுபதாவது வயதில், இரண்டாவது பர்மியப் போரைத் தலைமை தாங்கி நடத்தினர். 'வங்காளப்படை' என்று வழங்கப்பட்ட படையில், அயோத்தியிலும் வடமேற்கு மாகாணத்திலுமுள்ள உயர் சாதியினர் சேர்க்கப்பட்டனர். சமூக உரிமைகளை அவர்கள் பெரியனவாக நினைத்ததால், ஒழுங்கு முறைக்கு அடங்கி நடக்கவில்லை. தவிர, அரசாங்கம், கிறித்தவ மதத்தையும் மேற்கத்திய கொள்கைகளையும் புகுத்துகிறது என்று பொதுவாக நம்பப்பட்டதை அவர்கள் நம்பினர்கள். கானிங் பிரபு (Canning) என்பவர், பொதுச் சேவைக்கான படையில் சேரும் சட்டம் (General Service Enlistment Act) என்கிற சட்டத்தை ஏற்படுத்தி, வங்காளப்படையில் சேர்ந்திருப்பவர்களை இந்தியாவிற்கு உள்ளும் வெளியிலும் போரிடுவதற்குத் தயாராய் இருக்குமாறு உத்தரவிட்டார். இச்சட்டம், அவர்களின் அதிருப்தியை வளர்த்தது. அச்சமயத்தில் ஐரோப்பியத் துருப்புகளின் எண்ணிக்கைக்கும் இந்தியத் துருப்புகளின் எண்ணிக்கைக்கும் இடையில் மிகுந்த ஏற்றத்தாழ்வு இருந்தன. டல்ஹௌசி பிரபு இந்தியாவைவிட்டுப் புறப்படும்பொழுது, முன்னவர் 45,322 பேர்களும், பின்னவர் 233,000 பேர்களுமாய் இருந்தார்கள். படைகளைப் பல இடங்களுக்கும் பிரித்து வைத்ததிலும் மிகுந்த வேறுபாடு இருந்தது. போர் முக்கியத்துவம் வாய்ந்த டில்லி, அலஹாபாது போன்ற இடங்களை இந்தியச் சிப்பாய்களே பாதுகாத்தார்கள். கல்கத்தாவுக்கும் அலகாபாதிற்கும் மத்தியில் பாட்னவுக்கு அருகிலுள்ள தினபூர் (Dinapore) என்னுமிடத்திலேதான் ஒரே ஒரு பிரிட்டிஷ் ரெஜிமென்டு இருந்தது. தவிர, கிரிமியப் போர் (Crimean War), பாரசீகப் போர், சீனப் போர் போன்ற இந்தியாவிற்குச் சம்பந்தமில்லாத போர்களில் இங்கிலாந்து ஈடுபட்டதால், அந்நாடு மிக்க துன்பத்திற்காளாகியது. இங்கிலாந்து மிக ஆபத்தான நிலையில் இருக்கிறதென்றும், இந்தியாவில் இருக்கிற பிரிட்டிஷ் படை மிகச் சிறியதாய் இருப்பதால், இந்தியப் பேரரசின் பாதுகாப்பு, சிப்பாய்களின் தயவிலேதான் இருக்கிறது என்கிற எண்ணத்தையும் சிப்பாய்கள் கொண்டிருந்தார்கள். மீரட்டின் கமிஷனர் பின் வருமாறு கூறுகிறர்: 'அதிகாரம் தம்மிடந்தான் இருக்கிறது என்ற எண்ணம் படையினருக்கு இருந்தது; கலகத்தின்

மூலந்தான் அந்த எண்ணத்தை விரட்ட இயலும். துப்பாக்கிக் குண்டுகளைப் பற்றிய கூச்சல், மனத்துக்குள் புதைந்திருந்த புரட்சி மனப்பான்மையை வெளிக்குக் கொண்டு வந்தது.' மிருகக் கொழுப்புத் தடவிய தோட்டாக்களை உபயோகப் படுத்தக்கூடிய என்பீல்டு துப்பாக்கிகளை (Enfield Rifles) அப்பொழுது புகுத்தியது, உண்மையிலேயே அசந்தர்ப்பமான செயல்தான். அதிருப்தி எனும் தணலைத் தூண்டுவதற்கு இச் செயல் ஒரு தீப்பொறியாக உபயோகப்பட்டது. நானு சாகிபு, அயோத்தி அரசனின் நண்பர்கள், ஜான்ஸி ராணி போன்றவர்கள், படையினரிடம் ஏற்பட்ட இத்தணலை விடாமுயற்சியுடன் அதிகமாக்கினர்கள். அந்த எண்ணெய்ப்பசை (Grease) பசு அல்லது பன்றியின் கொழுப்பிலிருந்து செய்யப்பட்டது எனச் சிப்பாய் படையினர் எண்ணியதற்குச் சில ஆதாரங்களும் இருந்தன. பசுவின் கொழுப்பை இந்துக்களும், பன்றியின் கொழுப்பை முஸ்லீம்களும் வெறுத்தார்கள் என்பது நோக்கத் தக்கது. 'இப்படிப்பட்ட எரியக்கூடிய மூலப் பொருள் மீது, உண்மையற்ற தோட்டாவின் கதை, காய்ந்த மரத்தின் மீது விழுந்த நெருப்புப் பொறி போல விழுந்தது. அதனல், சட்லெஜ் நதியிலிருந்து நருமதை நதி வரையில் இருந்த முழுப் பிரதேசத்திலும் கோபம் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது;' என்று அட்சிசன் (Atchison) என்பவர் கூறுகிறர்.

## 3. பெருங்கலகத்தின் ஆரம்பமும் அதனை அடக்குதலும்

1857ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் வங்காளத்திலிருந்த பாரக்பூரிலும் (Barrackpore), பெர்ஹாம்பூரிலும் (Berhampore) அமைதியற்ற நிலைமையின் முதற்சின்னங்கள் தென்பட்டன; ஆனல், அவை சீக்கிரத்திலேயே ஒடுக்கப்பட்டு, அதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டார்கள். ஆனல், 1857ஆம் ஆண்டு, மே மாதம், 10ஆம் தேதி, மீரட்டில் இருந்த சிப்பாய்கள், வெளிப்படையாகவே பெருங்கலகத்தை உண்டாக்கி, சிறைச்சாலைகளில் ஏராளமாகப் புகுந்து, சிறைப் படுத்தப்பட்ட அவர்களுடைய தோழர்களை விடுவித்து, ஒரு சில ஐரோப்பிய அதிகாரிகளைக் கொன்று, அவர்களுடைய வீடுகளையும் கொளுத்தினர்கள். ஜெனரல் ஹீவிட் (General Hewitt) என்ற ஆற்றலற்ற மீரட்டுத் தளபதியின்கீழ் 2200 ஐரோப்பியத் துருப்புகள் இருந்த போதிலும், கலகக்காரர்

களை அடக்குவதற்கான எவ்வித நடவடிக்கையையும் அவர் எடுக்கவில்லை. அச்சமயத்தில், ஒரு சிறிய பிரிட்டிஷ் படையும் இல்லாத டில்லிக்கு, இக்கலகக்காரர் விரைந்து சென்று, அதைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவந்தனர். அவர்கள் பல ஐரோப்பியர்களைக் கொன்று, அவர்களுடைய வீடுகளையும் அழித்தார்கள். தந்தி நிலையத்தைச் சேர்ந்த சைகைச் செய்தியை அனுப்பும் இருவர், டில்லிக்கு வெளியேயிருந்த பஞ்சாபின் அதிகாரிகளுக்குத் தந்திச் செய்தியை அனுப்பி, அவர்களை எச்சரித்தார்கள். வெடி மருந்துக் கிடங்கிற்குப் பொறுப்பாய் இருந்த லெப்டினன்ட் வில்லோபி (Lieutenant Willoughby) என்கிற அதிகாரி, தம்முடன் இருந்த வீரத் தோழர் எண்மருடன், ஒரு சில நாள்வரை எதிர்த்து நின்றார்; ஆனால், கடைசியில் எதிர்ப்பு அதிகமாகவே, அக்கிடங்கை வெடி வைத்துத் தகர்த்துவிட்டார். கலகக்காரர்களுக்கு இது மிகுந்த நஷ்டத்தை விளைத்தது. அதன் பின் சீக்கிரத்திலேயே அவர்கள் அரண்மனையைக் கைப்பற்றி வயது முதிர்ந்தவரும் பெயரளவில் அரசராய் இருந்தவருமான இரண்டாம் பஹதூர் ஷா என்பவரை இந்துஸ்தானத்தின் பேரரசராகப் பிரகடனப் படுத்தினார்கள். ஒரு காலத்தில் மாபெரு முகலாயப் பேரரசாய் விளங்கி, இப்போது அப்புகழை இழந்து நின்ற அப்பேரரசை இவருடைய பெயர்தான் அந்நாள் வரையிலும் பலருக்கு நினைவூட்டிக் கொண்டிருந்தது. கடினமான போர், ராஜதந்திரம் ஆகியவைகளின் மூலம் பெறப்பட்ட டில்லியை ஆங்கிலேயர்கள் இழந்தது, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பெருமைக்கு ஒரு பெரிய இழுக்காய் இருந்தது.

மூன்று வார அமைதி நிலவிய சமயத்தில், பஞ்சாபில் தலைமை ஆணையாளராய் இருந்த சர் ஜான் லாரன்ஸ் என்பவர், அம்மாகாணத்தில் குழப்பமேற்படாதபடி பார்த்துக் கொண்டார். ஆனால், டில்லியைத் திரும்பக் கைப்பற்றுவதற்கான நடவடிக்கைகளை எடுப்பதற்கு முன்பே, ஜூன் மாத முதல் வாரத்தில், மேல் கங்கை மாகாணங்கள், மத்திய இந்தியாவின் சில பாகங்கள், இராசபுதனத்திலிருந்த நசிராபாது (Nasirabad), ரோஹில் கண்டில் இருந்த பரெய்லி (Bareilly), கான்பூர், அயோத்தியிலிருந்த லக்னோ, வாரணாசி, பீஹாரின் சில பாகங்கள் ஆகியவற்றில் கலகங்கள் உண்டாயின. அர்ரா (Arrah) என்னுமிடத்திற்கு அருகிலிருந்த ஜகதீஸ்பூர் (Jagadishpur) என்னும் நகரத்தில், கன்வார்சிங் (Kunwar Singh) என்பவரின் தலைமையின் கீழ் ஏற்பட்ட பீஹார் இயக்கம், பாட்னாப் பகுதிக்கு ஆணையாளராய் இருந்த

வில்லியம் டெய்லர் (William Tayler) என்பவராலும், வங்காளப் பீரங்கிப் படையைச் சேர்ந்த மேஜர் வின்சென்டு ஐயர் (Majer Vincent Eyre) என்பவராலும் ஒடுக்கப்பட்டது. வாரணசியில் ஏற்பட்ட கலகத்தை, முதல் சென்னைத் துப்பாக்கிப்படையைச் சேர்ந்த (1st Madras Fusilieas) கர்னல் நீல் (Colonel Neill) என்பவர் அடக்கினர். கைப்பற்றப்பட்ட எல்லாக் கலகக் காரர்களையும் அவர் கொன்றுவிட்டார்; கவர்னர்-ஜெனரலால் கொண்டுவரப்பட்ட படையினரிடம் நிருவாக ஒப்படைப்புச் சட்டம் (Martial law) சுற்றிலுமுள்ள மாவட்டங்களில் அமுலாக்கப்பட்டது. அம்மாவட்டங்களிலிருந்த 'கலகக் காரர்கள், சந்தேகத்திற்கு ஆளானவர்கள், அடக்கமற்ற சிறுவர்கள் ஆகியவர்கள் கோபங்கொண்ட அதிகாரிகளாலும், தூக்கிலிடும் தொழிலை ஊதியமின்றிச் செய்வதற்கு முன்வந்த அதிகாரிகள் அல்லாத பிரிட்டிஷ் மக்களாலும் படுகொலை செய்யப்பட்டார்கள். ஒரு சிறிய சீக்கியப் படையின் உதவி யுடன், கேப்டன் பிரேசியர் (Captain Brazyer) என்பவரால் மிகுந்த வீரத்துடன் பாதுகாக்கப்பட்ட அலஹாபாது கோட்டைக்கு ஜூன் 11-ல், நீல் என்பவர் வந்து உதவி அளித்தார். கான்பூர், டில்லி, லக்னோ ஆகிய இடங்களில் கலகக்காரர்கள் மிகுந்த உற்சாகத்துடன் இருந்தார்கள். ஆங்கிலேயரின் நல்வினை காரணமாக, நருமதை நதிக்குத் தெற்கே இருந்த மண்டலம் முழுவதும், இப்பெருங்கலகத்தால் பாதிக்கப்படவில்லை. கோலாப்பூரில் ஓர் இந்தியப்படை கலகஞ் செய்த போதிலும், பம்பாய் மாகாணத்தின் அமைதியை எல்பின்ஸ்டன் பிரபு என்பவர் பாதுகாத்தார்; இராசபுதனத்தின் அமைதியை ஜார்ஜ் லாரன்ஸ் என்பவர் பாதுகாத்தார். பஞ்சாபு, முக்கியமாக அதனுடைய சீக்கியத் தலைவர்கள், காஷ்மீரத்தின் குலாப் சிங் (Gulab Singh), ஜமீந்தார்கள், இந்திய அதிகாரிகள் ஆகியவர்கள் கம்பெனி யிடம் மிகவிசுவாசமாய் இருந்தார்கள். சிந்தியா, அவருடைய அமைச்சரான சர் தினகர்ராவ், ஹைதராபாதின் அமைச்சரான சர் சாலர் ஜங் (Sir Salar Jung), போப்பாலின் பீகங்கள், நேப்பாளத் தேசத்தின் ஆற்றல் வாய்ந்த அமைச்சரான சர் ஜங் பஹதூர் (Sir Jang Bahadur) ஆகிய பிரபல இந்திய அரசர்களும், ராஜதந்திரிகளும், இக்கலகம் பரவாமல் தடுப் பதற்காகச் சிறந்த சேவைகளைச் செய்தார்கள். சிந்தியாவின் விசுவாசத்தினல், 'இந்தியா ஆங்கிலேயர்களுக்காகக் காப்பாற்றப்பட்டது,' என்ற கருத்தை இன்ஸ் (Innes) என்னும் நூலாசிரியர் கொண்டிருந்தார். இந்தியப் பெருங்கலகத்தின் வரலாறு (History of Indian Munity) என்கிற முக்கிய நூலை

எழுதிப் புகழ்பெற்ற ஹோல்ம்ஸ் (Holmes) என்பவர், 'நன்றியறிதலுடனும், புகழ்ச்சியுடனும், ஆங்கிலேயர்கள் என்று கூறத்தக்க பெயரை அவர் பெற்றிருந்தார்,' என, சர் சாலர் ஜங்கைப் பற்றிக் கூறினர்.

கான்பூரிலிருந்த கலகக்காரர்களுக்கு நானசாகிபு என்பவர் தலைமை வகித்தார்; கான்பூருக்கு அருகிலுள்ள பித்தூர் (Bithur) என்னுமிடத்தில் அவர் வாழ்ந்து வந்தார்; அவர், தம்மைப் பேஷ்வா எனப் பிரகடனப்படுத்திக்கொண்டார். அவ்விடத்தில் எழுபத்தைந்து வயதுள்ள சர் ஹக் வீலர் (Sir Hugh Wheeler) என்பவர் தளபதியாய் இருந்தார். உறுதியான பாதுகாப்பிற்குத் தகுதியற்ற வகையில் அவர் அவசரமாய்க் குழிகளை வெட்டி அரண் செய்தார். அவைகளைக் கலகக்காரர்கள் முற்றுகையிட்டார்கள். அக்கோட்டையில் படைக்கலங்களை உபயோகிக்கத் தெரிந்த நானூறு ஆடவரும் பெண்டிர் பலரும் குழந்தைகளும் இருந்தார்கள். முற்றுகை இடப்பட்ட அக்கோட்டையை ஜூன், 8ஆம் தேதியிலிருந்து 26ஆம் தேதி வரையில் மிகுந்த துன்பத்திற்கும் வறுமைக்கும் இடையில் மிகுந்த வீரத்துடன் பாதுகாத்தனர். அலஹாபாதிற்குப் பத்திரமாக அழைத்துச் செல்லப்படுவார்கள் என்ற உறுதிமொழி அவர்களுக்குக் கூறப்பட்டதால், 27ஆம் தேதியன்று அவர்கள் சரணடைந்தார்கள். ஆனால், ஏமாற்றப்பட்ட பிரிட்டிஷ் படையினர், தமக்குரிய இடங்களை விட்டுப் படகில் புறப்பட்டதும், படுகொலை புரியும் துப்பாக்கிக் குண்டுகள் அவர்கள் மீது பாய்ந்தன; அதனால் அவர்களில் பெரும்பான்மையினர் ஆற்றின் பக்கத்திலேயே கொலை செய்யப்பட்டனர்; நால்வர் மட்டும் தப்பி ஓட முடிந்தது. இருநூற்றுப் பதினொரு பெண்டிரும், குழந்தைகளும், பீபீகார் (Bibigarh) என்னும் கட்டடத்தில் அடைக்கப்பட்டு, ஜூலை 15-ல் நானசாகிபு அவர் நண்பரான தாந்தியா தோபி (Tantia Topi) என்பவர்களின் உத்தரவினால் அவர்கள் எல்லோரும் ஈவு இரக்கமின்றிக் கொலை செய்யப்பட்டு, அவர்களுடைய உடல்கள் ஒரு கிணற்றில் வீசி எறியப்பட்டன. அலகாபாதிலும் வாரணசியிலும் நடந்த கலகத்தை நசுக்குவதற்காக, பிரிட்டிஷ் துருப்புகளும் சீக்கியத் துருப்புகளும் கொண்ட நடவடிக்கைகளுக்குப் பதிலாகப் பழி வாங்கும் எண்ணத்துடன் இக்கொடுமைகள் நடத்தப்பட்டனவா என்பதைக் கூறுவது கடினந்தான். கான்பூர்ப் படுகொலையின் விளைவுகள் மிக வருந்தத் தக்கவையாய் இருந்தன. இச்செயல், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் இருந்த ஆங்கிலேயர்களின் மனத்தில் பழி வாங்கும் எண்ணத்தை

ஏற்படுத்தி, கொடுமையான நினைவுகளை உண்டாக்கி இரக்க மற்ற செயல்களைச் செய்யுமாறு கம்பெனியின் துருப்புகளைத் தூண்டிற்று. நீல், ஹேவ்லக்கு என்பவர்களின் தலைமையின் கீழ்ப் பழிவாங்குவதற்காகப் புறப்பட்ட ஒரு பிரிட்டிஷ் படை, வருந்தத்தக்க இந்நிகழ்ச்சி நடந்த பிறகு ஒருநாள் கழித்துக் கான்பூரை அடைந்தது. அந்நகரம், குவாலியர் கலகப் படையால் கைப்பற்றப்பட்டு, நவம்பர், 27-28 ஆகிய இரு நாள்கள் வரையிலும் இருந்தது; ஆனால், டிசம்பர் 6-ல், அதைச் சர் காலின் கேம்பெல் (Sir Colin Campbell) என்பவர் கைப்பற்றினார்.

கலகக்காரர்கள் ஒன்று சேர்ந்து இருக்கும் இடமான டில்லியை மீண்டும் கைப்பற்றுவதற்காக, பிரிட்டிஷ் அரசாங்கம் தீவிர ஆலோசனை செய்தது. உதவி செய்வதற்காக, ஜூன், 8ஆம் தேதியன்று அம்பாலாவிலிருந்து புறப்பட்ட ஒரு பிரிட்டிஷ் படை, மீரட்டிலிருந்துவந்த ஒரு படையுடன் சேர்ந்து, பத்லி சாரி (Badli Sari) என்ற இடத்திலிருந்த ஒரு கலகப்படையை முறியடித்து, டில்லி நகரத்தை எதிர் நோக்கியிருந்த பிரபலமாகிய குன்றின் (Ridge) மேல், அணிவகுத்து நின்றது. அதிகப்படியான உதவிப் படைகளைச் சீக்கியர் பலர் உட்பட, சர் ஜான் லாரன்ஸ் என்பவர், பஞ்சாபிலிருந்து நிக்கல்சன் (Nicholson) என்கிற ஒரு சிறந்த அதிகாரியின்கீழ் அனுப்பினார். அப்படை, டில்லிக்கு வெளியேயிருந்த பிரிட்டிஷ் படைகளுடன் சேர்ந்துகொண்டது. தனது முன்னேற்றத்தைத் தடுக்க நினைத்த ஒரு பகைப்படையை அவர் முறியடித்து, சர் ஆர்ச்டேல் வில்சன் (Sir Archdale Wilson), பேர்ட் ஸ்மித் (Baird Smith), நெவில் சேம்பர்லெய்ன் (Neville Chamberlain) என்பவர்களின் உதவியுடன் கலகக்காரர்களை மிகக் கடுமையாகத் தாக்கினார். செப்டெம்பர் 14-ல் காஷ்மீர் வாயில் (Kashmir Gate) தகர்க்கப்பட்டு, ஆறு நாள்கள் நடந்த கடும்போருக்குப் பிறகு, நகரமும் அரண்மனையும் பிடிக்கப்பட்டன. அப்போரில் நிக்கல்சன் படுகாயமுற்று இறந்தார். பிரிட்டிஷ் துருப்புகளால் அந்நகரம் தாக்கப்பட்டபோது, குற்றமற்றவர் ஏராளமாகக் கொல்லப்பட்டனர். 'நம்முடைய துருப்புகள் அந்நகரத்தில் புகுந்தபோது, அதன் சுவர்களுக்குள் இருந்த எல்லா நகரமக்களும், அவர்கள் இருந்த இடத்திலேயே, துப்பாக்கிச் சனியனால் (Bayonet) குத்திக் கொல்லப்பட்டார்கள். சில வீடுகளில் நாற்பது அல்லது ஐம்பது பேர் மறைந்திருந்ததனால் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாய் இருக்கவேண்டும் என நினைக்கலாம்,'

என்று பம்பாய்த் தந்தி (Bombay Telegraph) என்கிற ஒரு செய்தித்தாள் கூறியது. பெயரளவில் டில்லியின் பேரரசராய் இருந்த இரண்டாம் பஹதூர் ஷாவைக் கடுங்குணமுள்ள ஒரு குதிரைப்படை அதிகாரியான லெப்டினன்டு ஹாட்சன் (Lt. Hodson) என்பவர் ஹுமாயூன் மசூதியில் கண்டுபிடித்து, சிறைப்படுத்தினர். அவர் புதல்வர்களும் பெயரனும், போர்க் கைதிகளாய், ஹாட்சன் என்பவரிடம் சரணடைந்தார்கள். இரண்டாம் பஹதூர் ஷா, இரங்கூனுக்கு நாடு கடத்தப் பட்டார். அவர் தம் எண்பத்தேழாம் வயதில், 1862-ல் இறக்கும்வரையில், நாடு கடத்தப்பட்டவராய்த் தம் இறுதி வாழ்நாளைக் கழித்தார். ஆங்கிலேயர்களையும் அவர்கள் பெண்டிரையும் கொன்றதற்கு இந்த இளவரசர்களே காரண மெனவும், பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டு செல் வதற்கு முன்பே அவர்கள் கூட்டத்தால் காப்பாற்றப்படு வார்கள் எனவும் ஹாட்சன் நினைத்து, அவர்களைச் சுட்டுக் கொன்றார். இவ்விதம் முகலாயர்களின் ஏகாதிபத்திய வமிசம் முடிவுற்றது.

'ஹாட்சன் அக்கொலையைச் செய்திருக்க வேண்டியதில்லை. ஏனெனில், குற்றவாளிகளின்மீது சாட்டப்பட்ட குற்றங்கள் எவ்வித உறுதியான சான்றுகொண்டும் நிரூபிக்கப்படவில்லை; அவர்களைக் காப்பாற்றுவதற்காக, அங்கிருந்த கூட்டமும் முயற்சி செய்யவில்லை. இதைவிட மோசமான படுகொலை அல்லது அவசியமற்ற படுகொலை, எப்பொழுதும் நடந்த தில்லை. இது ஒரு பெருந்தவருகும்,' என மேலசன் (Malleson) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

அப்பெருங்கலகம், மே மாதம், 30ஆம் தேதியன்று லக்னோவில் உண்டாயிற்று; ஜாக்ஸன் (Mr. Jackson) என்ப வருக்குப் பின் தலைமை ஆணையாளராய் வந்த சர் ஜான் லாரன்ஸ் என்பவர், ஐரோப்பியர்கள், கிறிஸ்துவர்கள், 700 விசுவாசமுள்ள சிப்பாய்கள் ஆகியவர்களுடன், பிரிட்டிஷ் ரெஸிடென்டு இருந்த இடத்திற்குப் பின் வாங்கி, ஒரு சில நாள்கள் வரையில் அதைப் பாதுகாத்தார்; அதற்குப் பிறகு, துப்பாக்கிக் குண்டு வெடித்து அதனல் அவர் இறந்தார். முற்றுகையிடப்பட்ட அப்படையின் தலைமையை, பிரிகேடியர் இங்கிலிஸ் (Brigadier Inglis) என்பவர் ஏற்று, ஹேவ்லக்கு என்பவரும் அவுட்ராம் என்பவரும் கடுமையாகப் போரிட்டு, மிகவும் தேவைப்பட்ட உதவிப் படைகளுடன் செப்டெம்பர் 25ஆம் தேதி அதில் நுழையும் வரையில் பெருந்தாக்குதலுக்கு

எதிராக அவ்விடத்தை வீரத்துடன் பாதுகாத்தார். எல்லோரையும்விட மிகுதியான ஆற்றலும் உறுதியான குணமும் பெற்ற ஜெனரல் நீல் என்பவர், இச்சமயத்தில் லக்னோவில் இறந்தார். முற்றுகையிடப்பட்ட படையுடன் வெளியேற முடியாமல், இங்கிலிஸ், ஹேவ்லக்கு, அவுட்ராம் போன்றவர்கள் தவித்தார்கள். கடைசியாக அவர்கள், நவம்பர் மாத இடையில் இங்கிலாந்திலிருந்து தலைமைத் தளபதியாய் வந்த சர் காலின் கேம்பெல் (பிறகு கிளைட் பிரபு-Lord Clyde) என்பவரால் விடுவிக்கப்பட்டார்கள். அயோத்தியிலும் ரோஹில்கண்டிலும் நடந்த கலகத்தை அடக்குவதற்கு, சர் காலின் கேம்பெல் என்பவர் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டார். ஆற்றல் வாய்ந்த கூர்க்கப் படையுடன் நேப்பாளத் தேசத்தைச் சேர்ந்த ஜங் பஹதூர் என்பவர் கேம்பெல்லுடன் சேர்ந்துகொண்டார்; அவரது சிறந்த உதவியுடன், 1858, மார்ச்சு, 21-ல், பிரிட்டிஷ் படைகள் லக்னோவைக் கைப்பற்றின. ஆனால், அயோத்தியின் தாலுக்தார்கள் (Talukdars), மார்ச்சு மாத இறுதியில், கானிங் விடுத்த விவேகமற்ற பிரகடனத்தினால் மிக்கக் கோபமடைந்தார்கள்; எல்லாத் தாலுக்தார்களின் நிலங்களும் பறிமுதல் செய்யப்படும் என்றும், தனியாகக் குறிப்பிடப்பட்டுள்ள அறுவருக்கும் தங்கள் விசுவாசத்தை நிரூபிக்கும் மற்றவர்களுக்கும் விதிவிலக்கு உண்டு என்றும் அப்பிரகடனம் கூறியது. அதனால், தாலுக்தார்கள் கொரில்லாப்போரில் இறங்கினார்கள். மே மாதத்தில் ரோஹில்கண்டிலுள்ள பிரெய்லியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றியதால், அவர்கள் உற்சாகமிழந்தார்கள்; அவ்வாண்டின் இறுதியில், அவர்கள் முறியடிக்கப்பட்டார்கள். கலகத்தினருள் பலர் நேப்பாள நாட்டிற்கு அருகிலுள்ள பிரிட்டிஷ் எல்லையின் குறுக்கே ஓடியதால், பரிதாபமாகக் கொல்லப்பட்டனர்.

இதற்கிடையில், தாந்தியா தோபி என்கிற மராட்டிய அந்தணரை மத்திய இந்தியாவிலிருக்கும் கலகக்காரர்கள் தங்களுக்குத் தலைவராகக் கொண்டார்கள்; 20,000 பேர் கொண்ட குவாலியர் கலகப்படையுடன், அவர் கல்பி (Kalpi) என்னுமிடத்தில் யமுனை நதியைக் கடந்து, நானா சாகிபு துருப்புகளுடன் சேர்ந்துகொண்டார்; கான்பூருக்குப் பொறுப்பாய் இருந்த ஜெனரல் விந்தாம் (General Windham) என்பவரின் தாக்குதலை அவர் முறியடித்தார். ஆனால், தாந்தியா தோபி, சர் காலின் கேம்பெல் என்பவரால் 1857, டிசம்பர், 6ஆம் தேதி தோற்கடிக்கப்பட்டு, துரத்தியடிக்கப்பட்டார்.

அதன் பிறகு, தாந்தியா தோபி, ஜான்ஸியின் அரசியான இட்சுமிபாய் என்பவளுடன் சேர்ந்துகொண்டு மிகத் தீவிரமாக மத்திய இந்தியாவில் போராடினர். இதற்கிடையில், கலகம் ஆரம்பித்த இடத்திற்கு தெற்கிலிருந்த பண்டல்கண்டு என்னும் நாட்டில், சர் ஹக் ரோஸ் (Sir Hugh Rose) என்பவர், வெற்றிகரமான பல போர்களை நடத்தி வந்தார். 1858, ஜனவரி மாத ஆரம்பத்தில் மாவ் (Mhow) என்னுமிடத்தில் இருந்த இராணுவத் தளத்திலிருந்து அவர் புறப்பட்டு, சாவ்கார் (Saugor) என்னுமிடத்திலிருந்த படையை விடுவித்து, பிப்பிரவரி மாத ஆரம்பத்தில் ஹாட்கார் (Hatgarh) என்னும் நகரைக் கைப்பற்றி, பெட்வா (Betwa) நதியில் தாந்தியா தோபியை முறியடித்து, ஏப்பிரல் மாதம் 3ஆம் தேதி ஜான்ஸி என்னும் நகரை முற்றுகையிட்டார். இராணி ஏப்பிரல் 4ஆம் தேதி இரவில் ஜான்ஸிக் கோட்டையை விட்டு வெளியேறி. வீரர் சிலருடன் கல்பி என்னும் நகரத்தை அடைந்தாள், ஆனல், அந்நகரமும், மே, 22-ல் ஆங்கிலேயரால் கைப்பற்றப் பட்டது. வெல்லுதற்கரிய இராணியும் தாந்தியா தோபியும் குவாலியருக்குச் சென்று, அங்கிருந்த சிந்தியாவை ஆக்ரா வுக்குத் துரத்தினர்கள். இவ்விளவரசர் விசுவாசத்துடன் இருந்தாலும், இவரது படை இவரைக் கைவிட்டு, எதிரியுடன் சேர்ந்துகொண்டது. நான சாகிபு, பேஷ்வாவெனப் பிரகடனப் படுத்தப்பட்டார். இவர்களை ஆதரித்து மராட்டியர்கள் எழக் கூடும் எனப் பயந்து, இராணி, தாந்தியா தோபி, ஆகியவர் களின் நடவடிக்கைகளை நிறுத்துவதற்கு, சர் ஹக் ரோஸ் என்பவர் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டார். கலகக்காரர்களை மோரார் (Morar), கோட்டா (Kotah) என்னும் இடங்களில் முறியடித்து, அவர் குவாலியரைக் கைப்பற்றினர். சோவார் (Sowar) என்கிற ஆண் உடையில் இருந்த ஜான்ஸி ராணி, இங்கு நடந்த ஒரு போரில், 1858, ஜூன் 17-ல் கொல்லப் பட்டாள். தாந்தியா தோபி, ஒவ்வோர் இடத்திலிருந்தும் துரத்தப்பட்டு, இறுதியில் 1859, ஏப்பிரல் மாத ஆரம்பத்தில், சிந்தியாவின் சிற்றரசரான மான்சிங்கு என்பவரால் பிடிக்கப் பட்டு, ஆங்கிலேயரிடம் ஒப்படைக்கப்பட்டார்; கலகம், கொலை ஆகிய குற்றங்கள் சாட்டப்பட்டுத் தூக்கிலிடப்பட்டார். கான்பூர்ப் படுகொலையில் அவர் சம்பந்தப்பட்டிருந்தார் என்ற குற்றம் அவர்மீது சாட்டப்படவில்லை; ஆனல், அக்குற்றத் திற்காகவே அவர் தூக்கிலிடப்பட்டார் என அடிக்கடி சொல்லப்படுகின்றது. நான சாகிபு நேப்பாள நாட்டின் காடு களுக்குத் துரத்தப்பட்டு அவ்விடத்தில் இறந்ததாகச்

சொல்லப்படுகின்றது. இவ்வாறு பெருங்கலகம் ஒரு முடிவுக்கு வந்தது. இந்தியா முழுவதற்கும் அமைதிப் பிரகடனத்தைக் கானிங் என்பவர் வாசித்தார் :

'இரக்கமற்ற—பகுத்தறிவில்லாத—பழிவாங்கும் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்று இந்தியாவிலும் இங்கிலாந்திலும் இருந்த பலர் கோரினர். 'டில்லியிலிருந்த பெண்டிரையும் குழந்தைகளையும் கொலை செய்த கொலைகாரர்களுக்கு உயிரோடு இருக்கும்போதே அவர்களின் தோலை உரித்தல், கழுவேற்றுதல், எரித்தல் போன்ற தண்டனைகளை விதிப்பதற்கு அவைகளைச் சட்டப்படி செய்யவேண்டும் என நிக்கல்சன் என்பவர் கூறினர். ஆனல், கானிங் என்பவர், இக் கூப்பாடுகளுக்குச் செவி சாய்க்காமல், ராஜதந்திரிக்குரிய முன்யோசனையுடனும், அமைதியான ஆராய்ச்சியுடனும் இந் நிலையைச் சீர்தூக்கிப் பார்த்து, உண்மையாகவே குற்றம் செய்தவர்களை மட்டும் சரியான முறையில் விசாரணை செய்து தண்டிப்பதற்கான வழியை வகுத்தார். இதற்கு அவர் 'இரக்க'மனப்பான்மை கொண்ட கானிங்' (Clemency Canning) என்று ஏளனம் செய்யப்பட்டார். ஆனல், கவர்னர் ஜெனரலுடைய கொள்கைதான் சிறந்ததும் நடைமுறைக்கு உகந்ததுமான கொள்கை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் ; ஆள்பவர்களுக்கும் ஆளப்படுபவர்களுக்கும் இடையே இருக்கும் வெறுப்பு உணர்ச்சிகளை அதிகப்படுத்தும் ஒரே நோக்கத்துடன் கொண்டுவரப்பட்ட மசோதாக்களை எதிர்த்ததில் அவர் நியாயமாகவே நடந்துகொண்டார்.'

## 4. பெருங்கலகம் தோல்வியடைந்ததற்குரிய காரணங்கள்

இக்கலகம், மிக்க ஆற்றலுள்ள திடீர்க் கிளர்ச்சியாய் இருந்தாலும், கலகக்காரர்களின் மோசமான தளவாடங்கள் இராணுவ அமைப்பு ஆகியவைகளால் தோல்வி அடைய நேர்ந்தது. முதலாவதாக, அவர்களது இராணுவத் தளவாடம், ஆங்கிலேயர்களின் தளவாடத்தைவிட மிக மட்டமாய் இருந்தது ; எடுத்துக்காட்டாக, துப்பாக்கியின் வாயில் மருந்தை அடைத்து உபயோகிக்கும் பழைய துப்பாக்கியைக் கலகக்காரர்கள் உபயோகித்தார்கள். அதைவிட நெடுந்தூரம் சுடக்கூடிய புதிய துப்பாக்கியை ஆங்கிலேயர்கள் உபயோகப் படுத்தினர்கள். இரண்டாவதாக, கலகக்காரர்களுள் பெரும் பாலார் அக்கால விஞ்ஞானத்தின் முன்னேற்றங்களின்

பயனைத் தெரிந்துகொள்ளாமலும், சில சமயம் அவைகளைக் கண்டு நடுங்கிக்கொண்டும் இருந்தபோது, ஆங்கிலேயர்கள் அதனுடைய முழுப்பயனையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். பல பாகங்களிலும் பரவியிருந்த தந்தி முறை, அஞ்சல் செய்தி அறிவிப்பு ஆகியவைகளைத் தங்கள் கட்டுப்பாட்டின்கீழ் ஆங்கிலேயர்கள் வைத்திருந்ததால், நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வரும் செய்திகளைப் பெறவும், அவைகளைப் பரிமாறிக்கொள்ளவும், நிலைமைக்குத் தகுந்த விதத்தில் தங்களுடைய நடவடிக்கைகளைத் திருத்திக்கொள்ளவும் அவர்களால் முடிந்தது. மூன்றாவதாக, ஜான்ஸி ராணி, அயோத்தியின் பீகம், முக்கியமற்ற சிற்றரசர் சிலர் ஆகியவர்களைத் தவிர, பெரும்பாலாரான நிலமானியத் தலைவர்களின் விசுவாசத்தைப் பெற்ற நற்பேறுடையவர்களாய் ஆங்கிலேயர்கள் இருந்தார்கள். முன்பே குறித்துள்ளபடி, குவாலியரில் இருந்த சர் தினகர் ராவ், ஹைதராபாதிலிருந்த சர் சாலர் ஜங், நேப்பாளத்திலிருந்த ஜங் பஹதூர், சீக்கியர்கள் ஆகியவர்களிடமிருந்து அரிய ஆதரவை ஆங்கிலேயர்கள் பெற்றார்கள். வடமேற்கில் தோஸ்து முகம்மது என்கிற ஆப்கானிய அரசர், நட்புடன் இருந்தார். நான்காவதாக, நாட்டின் எல்லாப் பாகங்களிலுமுள்ள பொது மக்களின் அளவற்ற முழு ஆதரவையும் கலகக்காரர்கள் பெற முடியவில்லை; கலகத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட குழப்பத்தினாலும், அமைதியின்மையினாலும், அவர்களுட் பலர் அதிகத் துன்பப்பட்டுப் பொருளை இழந்ததால், கலகக்காரர்களைப் பகைவர்களாகக் கருதி வெறுத்தார்கள். இறுதியாக, ஒப்பிட்டுப் பார்க்கக்கூடிய அளவில் ஆற்றல் வாய்ந்த தலைவர் பலர் கலகக்காரர்களிடத்தில் இல்லை; ஆனால், அதே சமயத்தில் ஆங்கிலேயர்களிடத்தில் லாரன்ஸ் அவுட்ராம், ஹேவலக்கு, நிக்கல்சன், நீல், எட்வர்ட்ஸ் (Edwardes) போன்ற ஆற்றலும் அறிவும் வாய்ந்த தலைவர்கள் இருந்தார்கள்.

## 5. பெருங்கலகத்தின் தன்மையும் விளைவும்

மிகவும் சிறந்த முறையில் அமைக்கப்பட்ட ஒரு தேசீய இயக்கமாகவோ, அல்லது அக்காலத்தில் இருந்த ஜேம்ஸ் அவுட்ராம் நினைத்தபடியும் அல்லது புதிய கால நூலாசிரியர் பலர் கூறியபடியும் 'ஒரு சுதந்தரப் போராகவோ' அக்கலகம் இல்லை. முக்கியமாய் அது இராணுவக் கலகமாய் இருந்தது;

புதிய அரசியல் முறையினால் தங்களுடைய நலன்கள் பாதிக்கப்பட்டதால், அதிருப்தியுற்ற சிற்றரசர் சிலரும், நிலச்சுவாந்தார்களும், அதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டார்கள். கடைசியில் கூறப்பட்ட காரணம், சில பகுதிகளில் பொதுமக்களின் எழுச்சி என்கிற அடையாளத்தை அதற்குக் கொடுத்து, ஆங்கிலப் பேரரசுக்குப் பேரிடராக, குறிப்பாக அயோத்தியிலும் ரோஹில்கண்டிலும் பல மாதங்களுக்கு அது விளங்கியது. அது என்றும் அகில இந்தியத் தன்மையை அடையவில்லை. ஆனால், அது குறிப்பிட்ட இடத்தில் மட்டும் ஏற்பட்ட நிகழ்ச்சியாயும், வரையறுக்கப்பட்ட நிகழ்ச்சியாயும், போதுமான அளவு திட்டமிடப்படாத நிகழ்ச்சியாயும் இருந்தது. மூன்று மாகாணங்களிலிருந்த படைகளுள் ஒன்றின் படை மட்டுந்தான் இக்கலகத்தில் ஈடுபட்டது; எல்லா இந்தியச் சிப்பாய்களும், பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகக் கலகம் செய்யவில்லை. முன்பே குறித்துள்ளபடி, முக்கியமான இந்தியச் சிற்றரசர்களும், ஜமீந்தார்களும் ஆங்கிலேயர்களை ஆதரித்தார்கள்; மிகவும் அண்மையில் நிலங்களை இழந்த ஆயிரக்கணக்கான நிலச்சுவாந்தார்களுள் அயோத்தியில் இருந்த தாலுக்தார்கள் மட்டுமே புரட்சியாளர்களுக்கு உதவி செய்தார்கள். வீரப் பெண்மணியான ஜான்ஸி ராணியைத் தவிர, மிக்க திறமை வாய்ந்த தலைவர்கள், கலகக்காரர்களிடத்தில் இல்லை. 'கலகக்காரர்களின் மிகச் சிறந்த வீரமுள்ள இராணுவத் தலைவர்' என ஜான்ஸி ராணியை, சர் ஹக் கவ் (Sir Hugh Gough) என்பவர் மதிப்பிடுகிறார். கலகக்காரர்களிடத்திலிருந்த பல்வேறு பகுதியினரிடத்தில் ஒரு பொதுக் கொள்கையில்லை. துரதிருஷ்டவசமாக, இக்கலகத்தில் இரு பக்கத்தினரும் நாகரிகப் போரின் விதிகளை மதிக்காமல் நடந்துகொண்டனர். 'விநோதமான முறையில், காட்டுமிராண்டித்தனமாக, இக்கலகம் நடத்தப்பட்டது.' கலகக்காரர்கள் மிகக் கொடுமையான குற்றங்களைப் புரிந்தார்கள் என்ற குற்றச்சாட்டிற்குள்ளானால், பிரிட்டிஷ் துருப்புகளும், சில சமயங்களில், பகுத்தறிவுக்கு ஒவ்வாததும் அளவுக்கு மீறியதுமான கொடுமைகளை இழைத்து, தங்கள் நாட்டின் நல்ல பெயரை மாசுபடுத்திக் கொண்டன.

பல காரணங்களால் இப்பெருங்கலகம், இந்திய வரலாற்றில் ஒரு திருப்பு முனையைக் குறிக்கிறது. இந்தியாவில் இருந்த கம்பெனியின் ஆட்சி அந்நாள் வரையிலும் மிக மோசமாகவே இருந்தது என்பதை ஒருவிதத்தில் இக்கலகம் தெரிவிக்கிறது;

அதனுடைய படிப்பினையை இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் ஆட்சியினர் பல தலைமுறை வரையிலும் மறக்க இயலவில்லை. 'இங்கிலாந்திலுள்ள இளந்தலை முறையினர், இந்தியப் பெருங் கலகத்தின் வரலாற்றைப் படித்துக் குறித்து வைத்துக் கொண்டு, உணர்ந்து சிந்தனை செய்ய வேண்டும் என நான் விரும்புகிறேன். அதில் ஏராளமான படிப்பினைகளும், எச்சரிக்கைகளும் பொதிந்திருக்கின்றன,' எனக் காலஞ்சென்ற குரோமர் பிரபு (Lord Cromer) என்பவர் கூறியிருக்கிறார். மூன்று முக்கிய மாற்றங்களை ஆட்சி முறையிலும் அரசாங்கத்தின் கொள்கையிலும் அது நேரிடையாக உண்டாக்கியது.

முதலாவதாக, கம்பெனி எதிர்த்தபோதும், இந்திய அரசாங்கத்தை மேற்பார்வை செய்யும் அதிகாரத்தை இங்கிலாந்தின் அரசர் மேற்கொண்டார். இந்தியாவில் மிகச் சிறந்த அரசாங்கத்தை உண்டாக்குவதற்கான ஒரு சட்டம் (Act for the better Government of India) 1858, ஆகஸ்டு, 2-ல் நிறைவேற்றப்பட்டது; 'அரசராலும், அவர் பெயரிலும், நாட்டின் முக்கியக் காரியதரிசிகளுள் ஒருவர் மூலம், பதினைந்து அங்கத்தினர்களைக் கொண்ட ஓர் ஆலோசனை மன்றத்தின் உதவியுடன் இந்தியா ஆட்சி செய்யப்படும்;' என அச்சட்டம் கூறியது. அதே சமயத்தில், கவர்னர்-ஜெனரல், 'வைஸ்ராய்' (அரசப் பிரதிநிதி) என்கிற புதுப்பட்டத்தையும் பெற்றார். இது 'முறையான மாற்றமே ஒழிய, முக்கியமான மாற்றம் அன்று.' ஏனெனில், கம்பெனி இந்தியப் பிரதேசங்களை ஆட்சி செய்யும் அரசாங்கமாக மாறியதிலிருந்து, கம்பெனியின் விவகாரங்களில் தன் கட்டுப்பாடுகளை அரசாங்கம் தொடர்ந்து அதிகரித்துக்கொண்டே வந்தது; அரசரின் அமைச்சராய் இருந்தவரே மேற்பார்வைக் கழகத்தின் தலைவராயும் இருந்தார்; அவரே இது வரையிலும், உண்மையிலேயே கம்பெனியைக் கட்டுப்பாடு செய்து வந்தார். டைரக்டர்கள், ஆலோசனை கூறும் மன்றமாகத்தான் இயங்கி வந்தார்கள்.

இந்திய அரசாங்கத்தைக் கிரேட் பிரிட்டனின் அரசர் ஏற்றுக்கொண்டார் என்கிற செய்தியை அலகாபாது தர்பாரில் மகாராணியாரின் பெயரால் ஒரு பிரகடனத்தின் மூலமாக, 1858, நவம்பர், முதல் தேதி கானிங் பிரபு அறிவித்தார். இந்திய மக்களாய், 'மகாசாசனம்' (Magna Charta) எனப் புகழப்பட்ட அரசியாரின் பிரகடனம், இந்திய அரசர்களுடன் கிழக்கிந்தியக் கம்பெனி செய்துகொண்ட உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் உறுதிப்படுத்தியது;

இந்திய சுதேச அரசர்களின் உரிமைகள், மதிப்பு, புகழ் ஆகியவை மதித்து நடக்கப்படும் என்றும், இந்தியாவின் பழமையான உரிமைகள், வழக்கங்கள் ஆகியவைகளுக்கு உரிய மரியாதை கொடுக்கப்படும் என்றும் அது உறுதி கூறியது; 'மற்றவர்களின் நிலங்களை ஆக்கிரமிப்பதன் மூலம், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் பிரதேசங்களை அதிகரிக்கும் விருப்பம் இல்லை,' என்றும் கூறியது; 'பிரிட்டிஷ் குடி மக்களின்' கொலையில் நேரிடையாகச் சம்பந்தப்பட்டவர்கள் அதற்காகத் தண்டிக்கப்படுவார்கள்; அவர்களைத் தவிர, மற்றக் குற்றவாளிகளுக்கெல்லாம் ஒரு பொதுக்குற்ற மன்னிப்பை அது அளித்தது; 'நியாயம், நன்மை செய்வதில் விருப்பம், சமயச் சகிப்புத் தன்மை ஆகியவை அடங்கிய ஒரு கொள்கை பின்பற்றப்படும்,' என்று அது அறிவித்தது; 'குடி மக்களின் சமய நம்பிக்கை, வழிபாடு ஆகியவைகளில் தலையிடக்கூடாது,' என அது அரசாங்கத்திற்குக் கட்டளையிட்டது; 'எல்லா இனத்தினரும், எல்லாச் சமயத்தினரும், நம் பணியாளர் தொகுதியில் இருக்கும் பதவிகளுக்குத் தாராளமாகவும் பாரபட்சமில்லாமலும் எடுத்துக்கொள்ளப் படுவார்கள்; ஆனால், அப்பதவிகளுக்குரிய கடமைகளை ஆற்றுவதற்கு வேண்டிய கல்வி, ஆற்றல், நேர்மை ஆகியவைகளும் அவர்கள் பெற்றிருக்க வேண்டும்,' என அது கூறியது.

இரண்டாவதாக, இக்கலகம் உண்டாவதற்குக் காரணமான இராணுவப்படை முழுவதும் திருத்தி அமைக்கப்பட்டது; அடுத்த ஐம்பது ஆண்டுகள் வரையிலும், 'பிரித்துச் சமப்படுத்தும் எண்ணம்' (the idea of division and counterpoise) இந்தியாவில் பின்பற்றப்பட்ட பிரிட்டிஷ் இராணுவக் கொள்கையில் அதிகமாகக் காணப்பட்டது. 1893ஆம் ஆண்டு வரையில், மாநிலப் படைகள், தனியாகவே வைத்திருக்கப்பட்டன; அவற்றில் இருந்த ஐரோப்பியர் அதிகப்படுத்தப்பட்டு, சில முக்கியப் பணிகளுக்கு அவர்களே முழுப் பொறுப்பும் உள்ளவர்களாகச் செய்யப்பட்டார்கள்; ஐரோப்பியத் துருப்புகளின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது. 'கலகத்தினால் ஏற்பட்ட படிப்பினையிலிருந்து இரண்டு பெரிய கொள்கைகளைப் பின்பற்ற நேரிட்டது; ஒன்று, வெல்ல இயலாத அளவுக்கு பிரிட்டிஷ் படைகளை இந்நாட்டில் வைத்திருத்தல்; மற்றொன்று, ஐரோப்பியர்களின் பாதுகாப்பில் பீரங்கிப் படையை வைத்திருத்தல்,' என்று, 1878-ல் ஏற்படுத்தப்பட்ட இந்திய இராணுவ நிருவாகக் கமிஷன் (Commission on Indian Army Organisation) கூறியது.

மூன்ருவதாக, பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு புதுக் கொள்கையைச் சுதேச நாடுகளில் பின்பற்றியது. இந் நாடுகள், பிரிட்டிஷ் அரசரின் மேலாதிக்கத்தை இனி ஒப்புக் கொள்ள வேண்டும்; இவை ஒரே ஆட்சியின் பாகங்களெனக் கருதப்படும்.

இந்திய அரசியலில் தீவிர மனப்பான்மை ஏற்பட்டு வளர்ந்ததுதான் கலகத்தின் மறைமுகமான ஒரு விளைவு. இவ்வியக்கத்தில் அளவுக்கு மீறிச் செய்யப்பட்ட கொடுமை களால், இந்தியர்கள் மனத்திலும், இந்தியாவிலிருந்த ஆங்கி லேயர்கள் மனத்திலும் பகைமை உணர்ச்சி ஏற்பட்டது. இவ் விரண்டு பகுதியினர் இடையில் வளர்ந்துவந்த இன வேறு பாடுகளால், இவை அதிகமாக்கப்பட்டு, புதிய காலத்தில் இந்தியாவில் பின்பற்றப்பட்ட அரசியல் கருத்தையும் அரசாங்கத்தின் கொள்கையையும் நிர்ணயித்தது.

'இந்தியாவைப் பாதிக்கும் பல தீங்குகளுக்கு ஆட்சி செய்பவர்களை மட்டும் மாற்றி ஒரு பரிகாரம் காண முடியாத அளவுக்கு இக்கலகங்கள் அளவற்ற வெறுப்பையும் பகைமை உணர்ச்சியையும் இவ்விரண்டு இனத்தாரிடையே உண்டாக்கி யிருக்கிறது; சினங்கொண்ட மனப்பான்மைதான், அத்தீங்கு களில் மிகக் கடுமையான காட்சியாய் இருக்கிறது. இக் குழப்பங்களால் ஏற்பட்ட பகைமை உணர்ச்சி மறைவதற்குப் பல ஆண்டுகள் ஆகலாம்; சில சமயம் மறுபடியும் நம்பிக்கை உண்டாக்க முடியாமலும் போகலாம்; அப்படியாளுல், நினைத்த மாத்திரத்திலேயே பயத்தை உண்டாக்கும் அளவுக்கு உள்ள துன்பங்களைப் பெற்றுதான் நாம் நம்முடைய ஆட்சியை இந்தியாவில் நடத்த இயலும்,' என்பதை, 'டைம்ஸ்' (Times) என்கிற செய்தித்தாளுக்கு இந்தியாவில் நிருபராய் இருந்த ரஸ்ஸல் (Russell) என்பவர், தம் நாட்குறிப்பில் (Diary) நியாயமாகக் குறிப்பிடுகிருர்.

# 8. பெருங்கலகம் வரையிலும் ஆட்சியின் அமைப்பு

## 1. மத்திய ஆட்சி

கிழக்கிந்தியக் கம்பெனி வங்காளத்தைக் கைப்பற்றிய தால் பல பிரச்சினைகள் எழுந்தன. 'பாராளுமன்றத்தின் மேற் பார்வையில்லாமல் தனியாள்களின் நிறுவனம் ஒன்று ஏராள மான பிரதேசங்களை ஆட்சி செய்வதற்கு அனுமதிக்கப் படலாமா? வணிகக் கம்பெனியொன்று ஆசியப் பேரரசை ஆட்சி செய்வது பொருந்துமா?' என்னும் கேள்விகளே இங்கி லாந்தின் அரசியல் வாதிகளையும் ராஜ தந்திரிகளையும் குழப் பின. இவை பாராளுமன்றத்திலுள்ள கட்சியின் பிரச்சினைக ளாக மாற்றப்பட்டு, அவற்றுடன் பிணைக்கப்பட்ட சொந்த நலன்களினால் மேலும் சிக்கலாக்கப்பட்டன. சுவையான பிரச் சினையின் வரலாற்றைப் பற்றியோ, இங்கிலாந்து பாராளு மன்ற வரலாற்றில் அவை ஏறபடுத்திய விளைவுகளைப் பற்றியோ எழுதுவது இந்நூலின் நோக்கத்திற்கு அப்பாற் பட்டதாகும். கடுமையான முறையில் கண்டித்தல், தனிப்பட்ட முறையில் ஒருவரையொருவர் குற்றம் கூறுதல் ஆகியவை விரிவான விவாதத்திற்குப் பிறகு பாராளுமன்றம் பொறுக்கித் தேர்ந்தெடுத்த குழு ஒன்றையும் (Select Committee) இரகசியக் குழு ஒன்றையும் (Secret Committee) நியமித்தது. பாராளு மன்றம் கம்பெனியைக் கண்காணிக்கும் உரிமை பெற்று இங்கி லாந்திலும் இந்தியாவிலும் இருந்த தன் அரசியல் அமைப்பைத் திருத்துவதற்காக மிகச்சிறந்த 'ஒழுங்குமுறைச் சட்டம்' (Regulating Act) என்ற ஒரு சட்டத்தை மக்கள் மன்றம் 1773-ல் நிறைவேற்றியது.

உரிமையாளர் மன்றத்தில் (Court of Proprietors) வாக்குரிமை பெறும் உரிமையை 500 பவுன் முன் பெறுமான

பங்குதார்களே பெற்றிருந்தார்கள். இச்சட்டம் 1000 பவுன் பங்குப்பணம் வைத்திருப்பவர்களுக்கு அவ்வுரிமையைக் கொடுத்தது. ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்து நான்கு இயக்குநர்களும் இனி நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அவர்களுள் நான்கில் ஒரு பகுதியினர் ஆண்டுதோறும் பதவியிலிருந்து விலகுவர்.

'நிலவரிச் சம்பந்தமாக இந்தியாவிலிருந்து வரும் எல்லாவிதக் கடிதப் போக்குவரத்துகளையும் கருவூலத்திற்கும் (Treasury), சிவில், இராணுவக் கடிதப்போக்குவரத்துகளை இங்கிலாந்து தேசச் செயலாளரிடமும் (Secretary of State) இயக்குநர்கள் கொடுக்க வேண்டும்,' என அச்சட்டம் வற்புறுத்துகிறது. இவ்விதம் கம்பெனியின் பொது வணிக நடவடிக்கைகளைப் பாராளுமன்றம் கட்டுப்படுத்த முதல் நடவடிக்கை எடுத்துக்கொண்டது. 1781-ல் சட்டமாக்கப்பட்ட துணைச் சட்டத்தின்படி (Supplementary Act) இந்தியாவிற்கு அனுப்பப்படும் அதிகார பூர்வமான எல்லாவிதச் செய்திகளையும் அரசாங்கச் செயலாளரிடம் கம்பெனி காட்ட வேண்டுவதாயிற்று.

இந்தியாவிலிருந்த கம்பெனி ஆட்சி சம்பந்தப்பட்ட வரையில் பின்காணும் விதிகள் அச்சட்டத்தில் இருந்தன : நான்கு உறுப்பினர்களைக் கொண்ட ராஜபிரதிநிதி குழுவிடம் வங்காளத்தை ஆட்சி செய்யும் பொறுப்பு விடப்பட்டது. பெரும்பான்மையினரின் உடன்பாடு பெற்றே ஆட்சி நடைபெற இயலும். வாக்குகள் சமநிலையாக இருக்கும்போது முடிவு, வாக்குத் தலைவருக்கு உண்டு. முதல் கவர்னர்-ஜெனரலான வாரன் ஹேஸ்டிங்ஸும் மற்ற ஆலோசனையாளர்களான கிளாவெரிங் (Clavering), மான்சன் (Monson), பார்வெல் (Barwell), பிரான்சிஸ் (Francis) ஆகியவர்கள் சட்டத்தில் குறிக்கப்பட்டு, ஐந்து ஆண்டுகளுக்கு நியமிக்கப்பட்டார்கள். (துணைச் சட்டங்களின்படி அவர்கள் பதவி நீடிக்கப்பட்டது). அவர்களுக்குப் பின்னவர்களைக் கம்பெனி நியமிக்கும் ஆலோசனை மன்றமும், கவர்னர்-ஜெனரலும் போர் அமைதி உடன்பாடு சம்பந்தப்பட்ட வரையில் பம்பாய், சென்னை மாகாணங்களின் மீது அதிகாரம் செலுத்தலாம். ஒரு தலைமை நீதிபதியும், மற்றும் மூன்று நீதிபதிகளும் அடங்கிய ஒரு தலைமை உயர்நீதிமன்றத்தை அரசர், அரச சாசனமூலம் ஏற்படுத்துவதற்கு இச்சட்டம் வழி செய்தது.

1773 முதல் 1784 வரையில் இச்சட்டம் அமுலில் இருந்ததால், கவர்னர்-ஜெனரலாய் இருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் ஆட்சிக்காலம் முடிய அமுலில் இருந்தது. அக்காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக்கொண்டு இச்சட்டத்தின் விளைவுகளை விரிவாகப் பார்க்கலாம். நடைமுறைக்குக் கொண்டு வந்த உடனே இச்சட்டம் முரிந்துவிட்டது எனப் பொதுவாகக் குறிப்பிடலாம். கவர்னர்-ஜெனரல் ஆலோசனைச் சபையின் பெரும்பான்மையோருக்குக் கீழ்ப்பட்டவர் ஆக்கப்பட்டதால், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அபாயம் நேரும்வகையில் மத்திய அரசினர் ஆற்றலின்மையும் உறுதியற்ற தன்மையும் கொண்டிருந்தனர். ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களைக் கண்காணிக்கும் பொறுப்பு மிகக் கடினமாய் இருந்தது. அது அமுல் நடத்த முடியாதது என்பதை முதல் ஆங்கில மராட்டியப் போர் நன்கு புலப்படுத்திவிட்டது. உயர்நீதி மன்றத்தின் அதிகாரம் செவ்வனே வரையறுக்கப்படாமையால் அது எல்லையற்ற தொல்லைகளை ஏற்படுத்தியது. அதனால், அப்பொழுதிருந்த சட்ட மன்றங்களுடன் அது மோத நேரிட்டது. இங்கிலாந்திற் கூட அமைச்சரவை இயக்குநர்கள்மீது கொண்டிருந்த கட்டுப்பாடு, குறிப்பிடத்தக்க பல நிகழ்ச்சிகளில் பயனில்லாமல் போய்விட்ட முழு நிலைமையும் பின் வரும் வாக்கியங்களில் அழகாகக் கூறப்பட்டது:

'கம்பெனிமீது அரசாங்கத்திற்காவது, ஊழியர்கள்மீது மேலதிகாரிகளுக்காவது, ஆலோசனை மன்றத்தின்மீது கவர்னர்-ஜெனரலுக்காவது, சென்னை பம்பாய் மாகாணங்களின்மீது கல்கத்தா மாகாணத்திற்காவது தெளிவான அதிகாரத்தை அது கொடுக்கவில்லை.'

1774ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 26ஆம் நாள் புதிய ஆட்சி முறை ஆரம்பமானவுடனே ஆலோசனைச் சபையினருள் பெரும்பான்மையினரின் எதிர்ப்பை வாரன் ஹேஸ்டிங்ஸ் எதிர் நோக்க வேண்டியிருந்தது. ஆரம்பத்திலிருந்தே ஆலோசனையாளர்கள் கவர்னர்-ஜெனரலுடன் ஒத்துழைக்காமல், அவருடைய கொள்கைகளைப் பல முனைகளிலிருந்தும் தாக்கினார்கள். ஆட்சியின் அதிகாரங்களைத் தவறான நெறியில் பயன்படுத்துகிறார்களாதலால், தீவிரச் சீர்திருத்தம் செய்தாகவேண்டும் என்கிற கருத்தை முன்னதாகவே கொண்டிருந்த பிரான்சிஸ், கவர்னர்-ஜெனரலை எதிர்ப்பதில் முன்னின்றார். 1777, செப்டெம்பர், 25-ல் மான்சன் இறக்கும் வரையில் ஒரு சில ஆண்டுகளுக்கு

ஆலோசனையாளர்களின் வன்மையான இடையீடற்ற தாக்குதல் காரணமாக ஹேஸ்டிங்ஸ் வலியிழந்த நிலையில் இருந்தார். விடாத அவ்வெதிர்ப்பு அவரது புகழைப் பொன்றச் செய்தது. அதனால், கையூட்டு வாங்குதல், பணத்தைக் கையாடல் போன்ற குற்றங்களை அவர்மீது திணித்தனர்.

நந்தகுமாரைப் பற்றிய வழக்கில் இக்குற்றச்சாட்டுகள் வெள்ளிடை மலையாயின. அவர் நவாபுவின் ஆட்சியில் ஒரு முக்கியப் பதவியை வகித்த பிராமணர். அவரைப் பதவியிலிருந்து நீக்கியும், அவருக்குப் பகையான மோஹன் பிரசாது எனப்படும் இந்திய பாங்கின் தலைவர் ஒருவருக்கு வேண்டிய சலுகைகள் ஈந்தும் ஹேஸ்டிங்ஸ் நந்தகுமாருக்குக் கோப மூட்டினர். முனி பீகம் (Muni Begam) என்கிற மீர் ஜாபரின் விதவையை நவாபுவின் அரண்மனைக்கு அதிபதியாக்கி, அதற்காக அவளிடமிருந்து 3,54,105 ரூபாயையும், பல லட்ச ரூபாய் மதிப்புள்ள பரிசுகளையும் வாரன் ஹேஸ்டிங்ஸ் வாங்கினர் என்று நந்தகுமார் 1775, மார்ச்சு, 11-ல் குற்றம் சாட்டினர். அக்குற்றச்சாட்டுகள் உண்மைதானு எனக் கூறுவது மிகக் கடினந்தான். அக்குற்றச்சாட்டுகளுக்குப் பதில் கூறுவதற்கும் 'மனிதகுலத்திலே இழிந்தவர்' எனத் தாம் கருதி வெறுக்கும் ஒருவர் ஆலோசனைச் சபையில் குற்றம் சாட்டித் தம்மை விசாரிப்பதற்கு அவர் எவ்வகையிலும் உடன்படவில்லை. ஆனல், கவர்னர் ஜெனரலின்மீது சந்தேகமும் வெறுப்பும் கொண்ட ஆலோசனையாளர்கள், அவர்மீதுள்ள குற்றச்சாட்டுகள் உண்மை என்றும், அதனல் அப்பணத்தைக் கம்பெனியின் கருவூலத்திற்கு அவர் செலுத்த வேண்டுமென்றும் முடிவு செய்தார்கள். 1776-ல் இங்கிலாந்திலிருந்த கம்பெனியின் சட்ட அதிகாரிகள் பொய்யென அறிவித்தார்கள்.

இதற்கிடையில் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய உயிலில் நந்தகுமார் கள்ளக் கையெழுத்திட்டார் என அவர் மீது மோஹன் பிரசாது என்பவர், 1775, மே மாதத்தில் குற்றம் சாட்டினர். தலைமை நீதி மன்றத்தாலும் சான்று ஆய்பவராலும் அவர் விசாரணை செய்யப்பட்டு, குற்றமுள்ளவர் எனக்கண்டு, மரண தண்டனை விதிக்கப்பட்டுத் தூக்கிலிடப்பட்டார். அது நியாயமான முறையில் நந்தகுமார் விசாரிக்கப்படவில்லை என்பதிலும், நீதிப் போர்வையின் பெயரால் அளித்த மரணத்தீர்ப்பாகும் எனலாம். அரசாங்கத்தரப்பில் கூறப்பட்ட சான்றுகளை அவர் நம்பியிருந்தால், அவர் அந்தக்

கைதியைத் தண்டித்திருக்க மாட்டார் என, சர் ஜேம்ஸ் ஸ்டீபன் (Sir James Stephen) என்பவர் கூறுகிறார். மற்றும் இந்நாட்டு மக்களின்மீது தலைமை நீதி மன்றத்திற்கு அதிகாரம் உண்டா என்பதே ஐயப்பாட்டுக்குரிய செய்தியாகும். 'நந்தகுமார் பொய்க் கையொப்பமிட்டார் என்றதற்குப் பின்னர்ப் பல ஆண்டுகள் வரையிலும் பொய்க் கையொப்பமிட்டதற்குக் கொலைத் தண்டம் விதிக்கும் ஆங்கிலச்சட்டம் இந்தியாவில் அமுலில் இல்லை,' என்பதுதான் உண்மை. தவிர, பிரதிவாதியின் சார்பாகச் சான்று கூறுபவர்களை நீதிபதியே குறுக்கு விசாரணை செய்வது என்கிற வழக்கத்திற்கு மாறான செயலை அந்நீதிபதி 'சிறிது கடுமையாகவே' செய்தார்.

நந்தகுமாரைத் தூக்கில் ஏற்றியது 'நீதிக்கொலை' எனச் சில சமயம் சொல்லப்படுகிறது. மோகன் பிரசாது என்பவர், ஹேஸ்டிங்ஸால் உண்டாக்கப்பட்டவர் என்றும் குற்றம் சாட்டப்பட்டவருக்கு எதிரான முறையில் நீதிபதியின் முடிவு இருக்குமாறு செய்யத் தம் செல்வாக்கை ஹேஸ்டிங்ஸ் உபயோகித்தார் என்றும், அக்காலத்தில் பலரால் வெளிப்படையாக உறுதியாகக் கூறப்பட்டது. கவர்னர் ஜெனரல் ஆலோசனை மன்றத்திற்கும் தலைமை நீதி மன்றத்திற்கும் இடையே நடந்த ஒரு சதித்திட்டத்திற்கே ஒருவர் பலியாகிவிட்டதாகக் கிளாவெரிங் என்பவருக்கு நந்தகுமார் ஒரு கடிதம் எழுதினார். ஆனால், அந்த வழக்கை இம்பே (Impey) என்பவர்மட்டும் விசாரிக்கவில்லை ; அவருடன் அவர் கூட்டாளிகளும், தீர்ப்புச் சான்றோர் குழுவும் விசாரித்தார்கள். இம்பேவுடன் நட்புறவு கொள்ளாத ஹேஸ்டிங்ஸ், அவருடன் சேர்ந்து சதி செய்தார் என்பதற்குரிய திட்டமான சான்றுகள் கிட்டவில்லை என்பதையும் கவனிக்க வேண்டும். நந்தகுமாரைக் காப்பாற்றுவதற்கு ஆலோசனை மன்றம் முயலாதது, புரிந்துகொள்ள இயலாத மறை செய்தியாய் இருக்கிறது. தூக்குத் தண்டனையை நிறுத்தி வைப்பதற்கு மனுச் செய்துகொள்ளும் கருத்தைப் பிரான்சிஸ் வெளியிட்டார்; அதை மான்சனும், கிளாவெரிங்கும் எதிர்த்தார்கள். 'தங்கள் குறிக்கோளுக்காக அவரைப் பயன்படுத்திக்கொண்டு, பிறகு அவரை உணர்ச்சியற்று வெறுப்புடன் கைவிட்ட மனிதர்களின் புகழை இச்செயல் மிகவும் மாசுபடுத்துகிறது,' என ராபர்ட்ஸ் என்பவர் கூறுகிறார்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, ஒழுங்குமுறைச் சட்டத்தின் வெளிப்படையான குறைபாடுகள் தெரியலாயின. தகுதியான

பரிகாரங்களைக் கண்டுபிடிப்பதற்குரிய புதிய முயற்சிகள் செய்யப்பட்டன. நிதி சம்பந்தமான உதவிக்காகப் பாராளுமன்றத்தை 1783-ல் கம்பெனி நாடியபோது, இவ்விவகாரம் மிகத் தீவிரமாக எடுத்துக்கொள்ளப்பட்டது. கம்பெனிக்கு உதவியும் சீர்திருத்தமும் ஒன்ருகவே செய்ய வேண்டும் என, பர்க்கு (Burke) என்பவர் சொன்னபோது, அவர் பொதுமக்களின் அபிப்பிராயத்தையே பிரதிபலிக்கச் செய்தார்.

டண்டாஸ் (Dundas) என்பவர் கொணர்ந்த முதல் சீர்திருத்தத் திட்டம் உபயோகமில்லாமற் போய்விட்டது. கடுமையான நீண்ட விவாதத்திற்குப் பிறகு பாக்ஸ் (Fox) என்பவர் கொண்டு வந்த மசோதா மக்கள் சபையில் நிறைவேறினும், முக்கியமாக மூன்ரும் ஜார்ஜ் அரசரின் தலையீட்டால், பிரபுகள் சபை, அம்மசோதாவை ஒப்புக்கொள்ளவில்லை. பாக்ஸ் என்பவருக்குப் பிறகு, பிட்டு (Pitt) என்பவர் பதவிக்கு வந்தார். 1784, ஜனவரியில் ஒரு புதிய மசோதாவைக் கொணர்ந்து அதே ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அதைச் சட்டமாக்கினர்.

'இந்திய விவகாரங்களுக்கான ஆறு ஆணையாளர்களை—அதாவது இந்தியக் காரியதரிசி, கருவூலத்தலைவர், அரசரால் நியமிக்கப்பட்ட நான்கு பிரிவி கௌன்ஸிலர்கள் ஆகியவர்களைப் பிட்டு—இந்தியச் சட்டம் ஏற்படுத்தியது. கண்காணிப்புக் குழு (Board of Control) எனக் கூறப்பட்ட இக்குழு, டைரக்டர்களின் மன்றத்தைக் கட்டுப்பாடு செய்யவும் அதிகாரம் பெற்றிருந்தது. கம்பெனியின் எல்லாக் கடிதங்களையும் இக்குழு மேற்பார்வையிடும். வாணிகம் சம்பந்தமானவற்றைத் தவிர, மற்ற எல்லாக் கடிதப் போக்குவரத்தும், இதனுடைய சம்மதமில்லாமல் செய்யப்படக் கூடாது. உரிமையாளர் மன்றத்தின் அதிகாரம் பெரிதும் குறைக்கப்பட்டது; ஏனெனில், ஆணையாளர்களின் ஒப்புதலைப் பெற்ற டைரக்டர்கள் மன்றத்தின் தீர்மானத்தை அம்மன்றம் நீக்கவோ, அன்றி நிறுத்தி வைக்கவோ இயலாது. டைரக்டர்களின் இரகசியக் குழு மூலம், அவசரமான அல்லது இரகசியமான கட்டளைகளை அனுப்புவதற்கும் ஆணையாளர்களுக்கு அதிகாரம் உண்டு. அது இரகசியக் குழுவின் ஒப்புதல் முறைப்படி பெறக்கூடியது. இப்படித் தலையான அதிகாரம், ஆணையர்கள் கைக்குப் போய்

விட்டது. தங்கள் பணியாளர்களை நியமிப்பது அல்லது நீக்குவது சம்பந்தமான அதிகாரங்களையே டைரக்டர்கள் தங்களிடம் வைத்திருந்தார்கள்.

அதே சமயத்தில், இந்திய ஆட்சியிலும் சில முக்கிய மாறுதல்கள் செய்யப்பட்டன. கவர்னர்-ஜெனரலின் ஆலோசனைச் சபையின் அங்கத்தினர்கள், நால்வரிலிருந்து மூவராகக் குறைக்கப்பட்டு, இப்பதவிகளுக்கு ஒப்பந்தப் பத்திரத்திலுள்ள பணியாளர்களே தகுதியானவர்கள் என முடிவு செய்யப்பட்டது. சென்னை, பம்பாய் மாகாணங்களின்மீது கவர்னர் ஜெனரலுக்கும், ஆலோசனை மன்றத்திற்கும் இருந்த அதிகாரம் தெளிவாக விளக்கப்பட்டு, அவை பயனுள்ளனவாகச் செய்யப்பட்டன. 1786-ல் நிறைவேற்றப்பட்ட துணை மசோதாவின் படி, சில முக்கியமான நிலைமைகளில் ஆலோசனை மன்றத்தின் பெரும்பான்மையோரின் முடிவைப் புறக்கணிக்கவும், தலைமைப் படைத்தலைவர் பதவியை ஏற்றுக் கொள்ளவும், கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு.

இந்தியாவில் கம்பெனியின் ஆட்சி நீடித்த வரையில், பிட்டு இந்தியச் சட்டம் ஏற்படுத்திய அரசியல் அமைப்பு எவ்வித அடிப்படையான மாறுதல்களும் இல்லாமல் பின்பற்றப்பட்டது. அதனால், 1786ஆம் ஆண்டிற்கும், 1858ஆம் ஆண்டிற்கும் இடையே ஏற்பட்ட சிறு மாறுதல்களைத் துரிதமாகப் பார்வையிடலாம். இக்காலத்தில் ஏற்பட்ட சட்ட மாறுதல்களுடன் கம்பெனியின் சாசனமும், 1793, 1813, 1833, 1853 ஆகிய ஆண்டுகளில் புதுப்பிக்கப்பட்டது என்பதும் நோக்கத்தக்கது.

தாய் நாட்டு அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையில், மேற்பார்வைக் குழுவிலேதான் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் செய்யப்பட்டன. சிறுகச் சிறுக அதன் அதிகாரங்கள் தலைவரின் கைக்கு மாறின. அதனால், அவர், அமைச்சர் அவையில் இந்தியா அமைச்சராய் மாறினார்.

1813-ல் இயற்றப்பட்ட பட்டயச் சட்டம், கம்பெனிக்கு இந்திய வாணிகத்தில் இருந்த தனி உரிமையை நீக்கிவிட்டது. கிழக்கு இந்தியக் கம்பெனி உடைமைகளின்மீது ஐயத்திற்கிடமில்லாமல் அரசருக்கிருந்த ஆதிபத்திய உரிமையை இச்சட்டம் உறுதிப்படுத்தியது. 1833-ல் ஏற்படுத்தப்பட்ட ஒரு பட்டயச்

சட்டம், கம்பெனியின் வாணிக நடவடிக்கைகளை நீக்கியதால், அதிலிருந்து அது அரசருக்குக் கட்டுப்பட்டு ஆட்சி செய்யும் குழுவாய் மாறியது.

ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களின் மீது கவர்னர்–ஜெனரலுக்கு உள்ள அதிகாரத்தை 1793ஆம் ஆண்டு பட்டயச் சட்டம், மேலும் அதிகப்படுத்தியது. சென்னைக்கும் பம்பாய்க்கும் அவர் சென்று, வங்காளத்தைப் போலவே அந்தந்த மாகாணங்களின் மீதும் அதிகாரத்தைச் செலுத்தவும் இச்சட்டம் அனுமதித்தது. 1833ஆம் ஆண்டு பட்டயச் சட்டப்படி, கவர்னர்-ஜெனரலும் அவர்தம் ஆலோசனையாளர்களும், தங்கள் ஆட்சியின் கீழ் இருக்கும் மாகாணங்களின் மீது மேற்பார்வையிடுதல், கட்டளையிடுதல், கட்டுப்பாடு செய்தல் போன்ற அதிகாரங்களைப் பெற்றார்கள். இச்சட்டம் கீழடங்கிய மாகாணங்களிடமிருந்து சட்டமியற்றும் அதிகாரத்தைப் பறித்து முன்னவர்களுக்குக் கொடுத்தது. இக்காலத்திலிருந்து, அவசியமான சிலவற்றைத் தவிர, இந்தியர்கள் அல்லது ஆங்கிலேயர்கள் ஆகிய எல்லாருக்கும் மேன்மை பொருந்திய அரசரின் பட்டயப்படியோ அல்லது வேறு வகையிலோ உண்டாக்கப்பட்ட எல்லாவித நீதி மன்றங்களுக்கும் உரிய சட்டங்களையும் ஒழுங்கு முறை விதிகளையும் கவர்னர்-ஜெனரலும், அவரது ஆலோசனைச் சபையும் செய்யலாம்.

முக்கியமான இந்தச் செயல்களைத் திறமையாக ஆலோசனைச் சபை செய்யும் பொருட்டுச் சட்ட வல்லுனர் ஒருவரும் அதன் அங்கத்தினராகச் சேர்க்கப்பட்டார். சட்ட அங்கத்தினர், கம்பெனியின் பணியாளராய் இருக்கக் கூடாது. சட்ட சபை சம்பந்தமானவைகளை ஆலோசனைச் சபை ஆராயும் கூட்டங்களிலேதான், அவர் பேசவோ அல்லது தம் வாக்கை அளிக்கவோ இயலும்.

இந்தியாவிலிருக்கும் கம்பெனியின் உடைமைகளின் மீது, கவர்னர்-ஜெனரலுக்கும் ஆலோசனைச் சபைக்கும் இருக்கும் மேலான பாகத்தைச் சிறப்பாக உணர்த்துவது கவர்னர்-ஜெனரல் உள்ளிட்ட ஆலோசனைச் சபை என்று கூறப்பட்டு, நாட்டின் மேலதிகாரம் அவருக்குக் கொடுக்கப்பட்டது. கவர்னர்-ஜெனரல் உள்ளிட்ட ஆலோசனைச் சபை (Governor-General in Council), வங்காளத்தின் அரசாயும் இருந்தது. ஆலோசனை மன்றத்தின் அங்கத்தினர் ஒருவரை அம்மாகாணத்தின் துணைக் கவர்னராக நியமிப்பதற்கும் அச்சட்டம் வழி செய்தது.

1853ஆம் ஆண்டின் பட்டயச் சட்டம், மேலும் பல மாறுதல்களை உண்டாக்கியது. டைரக்டர்களின் எண்ணிக்கை பதினெட்டாகக் குறைக்கப்பட்டு, அவர்களுள் மூவரை (பின்பு அறுவர்) அரசர் நியமிப்பார். தேர்வுப் போட்டி முறையைப் பின்பற்றியே சிவில் பணியாளர்களை நியமிக்கும்படி இச் சட்டம் விதித்ததால், ஆதரவாளர்களைப் பதவியில் நியமிக்கும் அதிகாரத்தை டைரக்டர்களிடமிருந்து இது பறித்துவிட்டது. இந்தியாவின் செயலாளருக்குக் கொடுக்கும் சம்பளமே, மேற்பார்வைக் குழுவின் தலைவருக்கும் கொடுக்கப்பட்டது. மத்தியிலும் மாகாணத்திலும் நியமிக்கப்படும் ஆலோசனையாளர்களை அரசருடைய ஒப்புதலின் பேரிலேயே நியமிக்க வேண்டும்.

இந்திய அரசாங்கம் சம்பந்தப்பட்டவரையில், சட்டசபையைப்பற்றிய சில முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டன. சட்ட அங்கத்தினர், கவர்னர்-ஜெனரலின் ஆலோசனைச் சபையின் சாதாரண அங்கத்தினரானார். கவர்னர்-ஜெனரல் ஒப்புதல் இன்றி, எவ்விதமான சட்டமும் இயற்ற இயலாது. 'சட்டமியற்றும் கவுன்சிலர்கள்' எனக் கூறப்பட்ட புதிய அங்கத்தினர் அறுவர், சட்டமியற்றுவதற்கு மட்டும் ஆலோசனைச் சபையில் சேர்க்கப்பட்டு, அச்சபை விரிவுபடுத்தப் பட்டது.

நான்கு மாகாண அரசுகளின் (வங்காளம், பம்பாய், சென்னை, வடமேற்கு மாகாணம்) பிரதிநிதிகளும், தலைமை நீதிபதி, தலைமை நீதிமன்ற முறைவர்களுள் ஒருவராகிய அறுவருமே அப்புதிய அங்கத்தினர். நியமிக்கப்பட்ட அங்கத்தினர் குறைந்தது பத்து ஆண்டுக் காலம் சிவில் பணியாளராய் இருந்திருக்க வேண்டும். இந்தியச் சட்டங்களைத் தொகுப்பதற்காக இலண்டனில் ஒரு சட்டக் கமிஷன் ஏற்படுத்தப் பட்டது. தண்டனை விதித்தொகுப்பு (Penal Code), கிரிமினல் வழக்கு நடைமுறை விதித்தொகுப்பு (Criminal Procedure Code), சிவில் வழக்கு நடைமுறை விதித் தொகுப்பு (Civil Procedure Code) ஆகியவற்றை அக்கமிஷன் சட்டமாக்கியது.

தொடர்ச்சியாய் வந்த பல பட்டயச் சட்டங்கள், நார்த்து என்பவரின் ஒழுங்கு முறைச் சட்டத்திலும், பிட்டு என்பவரின் இந்தியச் சட்டத்திலும் ஆரம்பித்து வைக்கப்பட்ட செய்முறையை அனுமானத்திற்குக் கொண்டுசென்றன. அதாவது, கம்பெனியிடமிருந்து அதிகாரத்தையும் ஆட்சியையும் அரச

ருக்கு மாற்றின. இக்கால முழுவதிலும் இவை இரண்டுக்கும் உள்ள உறவுகள் மிகச் சிக்கலானதுதான். அவ்வுறவு பெரும் பாலும் குழுவின் தலைவருடைய ஆளுமையையும், அமைச்சர் அவையிடம் அவர் கொண்டிருந்த செல்வாக்கையும் சார்ந்தே இருந்தது. அது தொடங்குதல், இயக்குதல், கட்டுப்படுத்தல் ஆகியவற்றுடன், ஆற்றல் வாய்ந்த தலைவர், டைரக்டர்களை ஏறக்குறைய எல்லாவற்றிலும் பணிந்து போகும்படி கட்டா யப்படுத்த இயலும். ஆனால், அதை எதிர்த்துத் தடைகளை ஏற் படுத்தக் கூடிய ஆற்றலையும் பின்னவர்கள் எப்பொழுதும் பெற்றிருந்தார்கள். கவர்னர்-ஜெனரலைத் திரும்ப அழைக்கும் உரிமை அவர்களிடம் எப்பொழுதும் இருந்தது. அவர்களது உறுதியான பகையையும் துணிவு மிக்க எதிர்ப்பையும் பெறு வதற்கு எந்தத் தலைவருக்கும் துணிவு இராது. ஆனால், தடுக்க முடியாதவையும் ஒன்றன் பின் ஒன்றாக வந்தவையுமான பல நிகழ்ச்சிகள், நியாயமான முடிவில்—அதாவது, கம்பெனியை அழிப்பதில்—முடிந்தன. 1833ஆம் ஆண்டு பட்டயச் சட்டத் திற்குப் பிறகு, சிவில் பணியாளர்களை நியமிக்கும் உரிமை ஒன்றையே கம்பெனி நீடிப்பதற்குத் தனக்கு ஆதாரமாகக் கொண்டிருந்தது. இவ்வாற்றல் மிக்க ஆதரவை, ஆங்கிலக் குடியாட்சிக்குப் பாதகமில்லாத வகையில் அமைச்சரவைக்கு மாற்ற இயலாது. சிவில் பணியாளர்களை நியமிப்பதற்காகத் தேர்வுப் போட்டி முறையை உண்டாக்கியதும், கம்பெனிக் கிருந்த கடைசி அதிகாரமும் போய்விட்டது.

கம்பெனியை ஒழித்து அதன் அதிகாரத்தை அரசருக்கு மாற்றுவதற்கான சூழ்நிலையை இது ஏற்படுத்தியது. இம் முடிவைப் பலர் எதிர்பார்த்தனர். பெருங்கலகம் இதைத் திடீரென ஒரு முடிவுக்குக் கொண்டு வாராவிட்டாலும், காலக் கிரமத்தில் சீக்கிரத்திலேயே கம்பெனி இம்முடிவை அடைந் திருக்கும்.

## 2. மாகாண ஆட்சி

### வங்காளம் முதற்கட்டம் (1765–1793)

வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாகாணங்களில் வரி வசூலிக்கும் உரிமையை, 1765ஆம் ஆண்டிலேயே கம்பெனி பெற்றிருந்தாலும், 1772ஆம் ஆண்டுவரை, முகம்மது ரஜா கான் என்பவர் வங்காளத்திலும், சிதப் ராய் என்பவர் பீஹாரிலும் துணைத் திவான்களாய் இருந்து, அவ்வேலையைக்

கவனித்து வந்தனர். வசூலித்த வரிப்பணத்தில் அலகாபாது உடன்படிக்கைப்படி இருபத்தாறு லட்ச ரூபாயைப் பேரரசருக்கும், ஆட்சியை நடத்துவதற்காக முப்பத்திரண்டு லட்ச ரூபாயை (முதலில் ஐம்பத்து மூன்று லட்சம்) வங்காள நவாபுவிற்கும் கொடுத்ததுபோக, மீதியிருந்த பணத்தைக் கம்பெனி தம் உபயோகத்திற்கு வைத்துக் கொண்டது. கிளைவின் பெயருடன் சம்பந்தப்படுத்தப்பட்ட மிகப் பிரபலமான இரட்டை ஆட்சி என்பது இதுதான்.

கம்பெனிக்கும் வங்காள மக்களுக்கும் இதனல் பெருந் தீங்கு ஏற்பட்ட போதிலும், கம்பெனியின் பணியாளர்களும் துணைத் திவான்களும் பெருஞ்செல்வத்தைப் பெற்ருர்கள். தாய் நாட்டிலிருந்த அதிகாரிகள் தவருன முறையில் இத் திட்டம் உபயோகப்படுத்துவதை உணர்ந்து, ஆட்சியைச் சீர் திருத்தும் நோக்கத்துடன் 1772-ல், ஹேஸ்டிங்ஸ் என்பவரை வங்காளத்தின் கவர்னராக நியமித்தார்கள்.

ஹேஸ்டிங்ஸ் இரட்டை ஆட்சியைக் கலைத்துவிட்டு, 'திவானக ஆட்சி செய்யும்' கம்பெனியின் கொள்கையைப் பின்பற்றினர். உண்மையில், பிரதிநிதி மூலம் வரி வசூலிக்கும் திவானின் அதிகாரத்தைவிட அதிக அதிகாரத்தை அவர் செலுத்தினர். அம்மாகாணத்தின் சிவில் ஆட்சி முழுவதையும் கம்பெனி ஏற்றுக்கொள்ளும்படி அவர் செய்தார்; துணைத் திவான்கள் பதவியை ஒழித்துக் கருவூலத்தைக் கல்கத்தாவிற்கு மாற்றினர். நவாபு இளையவராய் இருந்ததால், இம் மாற்றம் சுலபமாய் முடிந்தது. தம் நம்பிக்கைக்குப் பாத்திரமானவளும் முதலில் நாட்டியப் பெண்ணய் இருந்தவளுமான **முனி பீகம்** என்பவளை நவாபுவுக்குக் காப்புப் பொறுப்பாளியாக அவர் நியமித்தார். நவாபுவின் மானியத் தொகை பதினறு லட்சமாகக் குறைக்கப்பட்டது. இவையும், இவற்றைப் போன்ற மற்ற நடவடிக்கைகளும் உண்மையான அதிகாரம், ஆட்சியின் அதிகாரம் ஆகியவற்றை நவாபுவினிடமிருந்து கம்பெனிக்கு மாற்றின. மூர்ஷிதாபாதிற்குப் பதிலாகக் கல்கத்தாவே, ஆட்சியின் உண்மையான பீடமாய் அமைந்தது.

அரசாங்க அதிகாரங்களைக் கைப்பற்றிய பிறகு, ஆட்சி முறையை உண்டாக்குவதில் ஹேஸ்டிங்ஸ் முனைந்தார். ஆனல், அவ்வேலை மிகக் கடினமானதாகத் தென்பட்டது. இது வரையிலும் வாணிகம் செய்வதற்காக மட்டும் ஏற்படுத்தப்

பட்ட கம்பெனியின் ஆட்சி இயந்திரம், வேறு ஒரு மாறுபட்ட குறிக்கோளுக்காகத் திருத்தி அமைக்கப்பட வேண்டிய நிலை ஏற்பட்டது. நவாபுவின் மோசமான ஆட்சியினால், இப்புதிய கட்டடத்தின் உறுதியான அடிப்படைக்கு வேண்டியவற்றைக் கொடுக்க இயலவில்லை. தவிர, கம்பெனியின் இந்தியப் பணியாளர்களின் ஒழுக்க அடிப்படை மிக மோசமாய் இருந்தது. அரசினர் பணி என்கிற மரபு அவர்களிடம் இல்லை. மக்களின் மொழி, அவர்களின் சட்டங்கள், முறைகள், பழக்கங்கள் முதலியன தெரியாததால், வேலையின் கடுமை அதிகமாகியது. இதனால், வங்காளத்திலிருந்த ஆங்கில அதிகாரிகள் நீண்டனவும் சோர்வைத் தரக்கூடியனவுமான செயல் முறைகளில் இறங்கி, அவர்களை எதிர் நோக்கியுள்ள பெரும்பிரச்சினைகளுக்கு முடிவு காண்பதற்காக, வெறுப்பை விளைவிக்கும் பரிசோதனைகளில் ஈடுபடவேண்டியிருந்ததில் ஆச்சரியமில்லை. ஹேஸ்டிங்ஸ், காரன்வாலிஸ் என்னும் இருவரும் ஆட்சி செய்த இருபது ஆண்டுநிகழ்ச்சியை வங்காளத்தில் ஏற்பட்ட இந்தியா பிரிட்டிஷ் ஆட்சி வரலாற்றில் குறிப்பிடத் தக்க முதல் அத்தியாயமாகக் கருதலாம். பல பரிசோதனைகளுக்குப் பிறகு, குறிப்பிட்ட சில கோட்பாடுகள் இக்காலத்தின் இறுதியில் உண்டாக்கப்பட்டன. இப்பொழுது நம்மைச் சுற்றிலும் நாம் காண்கின்ற மாபெரும் பிரிட்டிஷ் இந்திய ஆட்சி என்கிற கட்டடத்திற்கு அவை அடிப்படையாய் அமைந்தன. அதனால், இக்காலத்தை ஆரம்பமாகக் கொண்டு, வருவாய் நிருவாகம் நீதி நிருவாகம் ஆகிய இரு தலைப்புகளின் கீழ்ப் படிப்படியாய் வளர்ந்த ஆட்சி முறையை அறிந்துகொள்வது சுலபமாய் இருக்கும்.

## (அ) வருவாய் நிருவாகம்

இக்காலத்து வருவாயின் முக்கியத் தோற்றுவாய்கள் :

(1) நில வருவாய்

(2) உப்பு, அபினி வாணிகத்தில் தனி உரிமை

(3) சாயிர் (Sair) எனக் கூறப்படும் சுங்கவரி, வழிச் சுங்கம், ஆயத்தீர்வை முதலியன.

இவற்றுள் முதலாவதுதான் மிக முக்கியமானதும் நாம் கவனிக்க வேண்டுவதுமாகும். முன்பு குறித்தபடி, நில வருவாய் 1772ஆம் ஆண்டுவரை, இரண்டு துணைத் திவான்களால்

வசூலிக்கப்பட்டது. ஆரம்பத்தில் இது மிக இன்றியமையாததாய் இருந்தது. ஏனெனில், வருவாய் சம்பந்தப்பட்ட முறைகள் ஆங்கிலேயருக்கு முற்றிலும் தெரியா. இக்குறையைப் போக்குவதற்கும், வருவாயை வசூலிக்கும் முறையைக் கற்றுக்கொள்வதற்கும், இதிலுள்ள உள்ளூர்ப்பழக்க வழக்கங்களைத் தெரிந்துகொள்வதற்கும் 'மேற்பார்வையாளர்கள்' (Supervisors) நியமிக்கப்பட்டார்கள். குடியானவர்களிடமிருந்து நிலவரியை வசூலிக்கும் ஜமீந்தார்களுக்கும், பதிவுக்கட்டு அதிகாரிகளான 'கனுங்கோக்கள்' (Qanungoes) என்பவர்களுக்கும் மட்டுமே அவை தெரிந்திருந்தன. அவர்களில் யாருமே, தமக்குத் தெரிந்தவற்றை ஆங்கில அதிகாரிகளுக்கு தெரிவிக்க விரும்பவில்லை. அதனால், மேற்பார்வையாளர்களை நியமித்தது பயனில்லாமல் போய்விட்டது.

1772-ல் துணைத் திவான்கள் பதவி ஒழிக்கப்பட்டு, கவர்னர் ஆலோசனை மன்றத்தின் நேரிடையான கட்டுப்பாட்டின் கீழ் வருவாய் நிருவாகம் கொண்டுவரப்பட்டது. இவ்விதம் ரெவின்யூ போர்டு (Board of Revenue) உண்டாக்கப்பட்டது. பொது ஏலத்தின் மூலம் நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டன. ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை, வருவாய் நிருவாகத்தை மேற்பார்வை செய்வதற்காக, ஆங்கிலக் கலெக்டர் ஒருவரும், இந்தியத் திவான் ஒருவரும் ஒவ்வொரு மாவட்டத்திலும் நியமிக்கப்பட்டனர்.

எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், இத்திட்டத்தின் பயன் தீமையானதாகவே இருந்தது. கொள்கையற்ற சூதாடிகள் துடுக்கான முறையில் ஏலத்தில் விலை கேட்டு, ஜமீந்தார்களை வெளியேற்றுவதில் வெற்றி பெற்றார்கள். ஆனால், சீக்கிரத்திலேயே, குறிப்பிட்ட நில வருவாயை வசூலிக்க இயலாமல் தவித்தனர். நிலத்தின்மீது நிரந்தரமான அக்கறை இல்லாததால், தங்கள் குத்தகைக் காலத்திற்குள்ளேயே இயலும் அளவு பணத்தைப் பெறுவதற்காக, அவர்கள் குடியானவர்களை மிகவும் துன்புறுத்தினார்கள். இப்படியிருந்தபோதிலும், அவர்கள் கொடுக்க வேண்டிய பணம் அதிகமாய் இருந்தது. நிபந்தனையின்படி பணம் கொடாததால், அவர்களைக் கலெக்டர்கள் சிறையிலிட்டார்கள். இப்படி, ஜமீந்தார்கள், உழவர்கள், குடியானவர்கள் எல்லாரும் துன்பப்பட்டார்கள். கம்பெனிக்கும் பெரிய இழப்பு ஏற்பட்டது.

1773-ல் ஒரு புதிய முறை கையாளப்பட்டது. ரெவின்யூ போர்டின் அங்கத்தினர் இருவரையும் கம்பெனியின் மூத்த பணியாளர் மூவரையும் கொண்ட வருவாய்க்குழு (Committee of Revenue) ஒன்று கல்கத்தாவில் அமைக்கப்பட்டது. ஐரோப்பியக் கலெக்டர் பதவி நீக்கப்பட்டது. ஒவ்வொரு மாவட்டத்தின் நிலவருவாயின் நிருவாகமும் இந்தியத் திவானின் கையில் ஒப்படைக்கப்பட்டது. ஆறு மாகாண மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. விசேஷக் கமிஷனர்களால், சில சமயங்களில் ஆய்வு செய்வதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

இந்த மாற்றங்களினுலும் நிலைமை அதிகமாகச் சீரடையவில்லை. ஐந்து ஆண்டு குத்தகை முடிந்ததும், பொது ஏலத்தின் மூலம், ஆண்டுக்கொரு முறை வரி விதிக்கும் கொள்கையைக் கம்பெனி பின்பற்றியது. ஆனுல், இவ்விதம் வருடாந்தர நில வருவாயைத் தீர்மானிக்கும்போது, ஜமீந்தார்களுக்குச் சலுகை காட்டுமாறு மாகாணக் கவுன்சில்களுக்கு விசேஷக் கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன.

1781-ல் வருவாய் நிருவாகத்திற்கு ஒரு புதிய திட்டம் மேற்கொள்ளப்பட்டது. நிலவரி வசூலிக்கும் முழு வேலையையும் கல்கத்தாவில் ஒருமுகப்படுத்துவதுதான் புதிய திட்டத்தின் முக்கிய அமிசம். அங்கத்தினர் நால்வரையும், அவர்களுக்கு உதவியாகத் திவான் ஒருவரையும் கொண்ட ஒரு புதிய வருவாய்க்குழு அமைக்கப்பட்டது. மாகாண ஆலோசனைச் சபைகள் நீக்கப்பட்டன. ஐரோப்பியக் கலெக்டர்கள் மறுபடியும் ஒவ்வொரு மாவட்டத்திலும் நியமிக்கப்பட்டாலும், உண்மையான அதிகாரம் இல்லாமல், பெயரளவில் மட்டும் அதிகாரம் பெற்றிருந்தார்கள். அளவுக்கு மீறிய அதிகாரக் குவிப்பினுல் ஏற்படும் குறைபாடுகளும் தவருகக் கையாடுதலும் சேர்ந்து இத்திட்டம் நிறைவேற முடியாமல் செய்து விட்டன. 1786-ல் பகுத்தறிவுள்ள திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது. முறைப்படியான வருமானப் பகுதிகளாக மாவட்டங்கள் நிறுவப்பட்டு, ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள கலெக்டர் அங்குள்ள வருவாயை ஒழுங்குபடுத்துவதற்கும் வசூலிப்பதற்கும் பொறுப்புள்ளவராக்கப்பட்டார். முதலில் மாகாண முழுவதையும் முப்பத்தைந்து மாவட்டங்களாகப் பிரித்தார்கள். ஆனுல், 1871-ல் அந்த எண்ணிக்கை, இருபத்து மூன்ருகக் குறைக்கப்பட்டது. வருவாய்க் குழு, ரெவின்யூ போர்டாக மாற்றி அமைக்கப்பட்டு, ஆலோசனை மன்றத்தின் அங்கத்தினர் ஒருவர், அதற்குத் தலைவராக்கப்பட்டார்.

போர்டின் கடமைகள் தெளிவாக விளக்கப்பட்டன. 'கலெக்டர்களைக் கட்டுப்பாடு செய்வது, அவர்களுக்கு ஆலோசனை கூறுவது, அவர்களது ஏற்பாட்டை அங்கீகரிப்பது' ஆகியவைகளே அதனுடைய முக்கியக் கடமைகள். நில உரிமை முறை, நிலவருவாய் ஆகிய விரிவான பதிவேடுகளைக் கவனிப்பதற்காகத் தலைமைச் சிரஸ்ததார் (Sheristadar) என்கிற ஒரு புதிய அதிகாரி நியமிக்கப்பட்டார். இதனால், நிலத்தைப்பற்றிய எல்லா விவரங்களும், கனுங்கோவின் இரகசியத் தனியுரிமையாய் இல்லாமல், அரசாங்கத்திற்கு வேண்டியபொழுது கிடைக்கலாயிற்று.

கி. பி. 1790ஆம் ஆண்டு வரை, ஆண்டுதோறும் நிலவரி மதிப்பிடுகிற திட்டம் தொடர்ந்து இருந்தது. அத்திட்டம் தாற்காலிகமானதுதான் என ஒப்புக்கொள்ளப்பட்டாலும், அது நீடிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஏனெனில், நிரந்தரமான ஒரு திட்டத்தைச் செய்வதற்கு முன், அதற்கு வேண்டிய தகவல்கள் சேகரிக்கப்பட வேண்டும். நிலத்தின் உடைமையைப்பற்றிய பலவிதக் கோட்பாடுகள், இப்பிரச்சினையை மேலும் சிக்கலாக்கிவிட்டன. இப்பொருளைப்பற்றிய பலவித நோக்கங்கள், 'கிராண்ட் கோட்பாடு' எனவும், 'ஷோர் கோட்பாடு' எனவும், இரண்டு மாறுபட்ட கோட்பாடுகளாக உருப்பெற்றன. கம்பெனியின் பணியாளரான அவ்விருவரும், நிலவருவாய் என்கிற சிக்கலான பிரச்சினையில் பெரிதும் ஈடுபட்டனர். 'ஜமீந்தார்களே நிலத்தின் உரிமையாளர்கள்; ஆகையால், வழக்கமாகக் கொடுக்கும் நில வரியையே அவர்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்கவேண்டும்,' என ஷோர் என்பவர் கூறினார். 'நிலங்களின் உரிமை அரசாங்கத்தைச் சேர்ந்தது; ஜமீந்தார் அல்லது குடியானவர் ஆகிய எவருடனும் அரசாங்கம் விரும்பும் எம்முறைப்படியும் ஏற்பாடு செய்து கொள்ள, வரையறையற்ற உரிமைகள் உண்டு,' என கிராண்ட் என்பவர் கருதினார். இங்கிலாந்திலிருந்த அதிகாரிகள், ஷோரின் கொள்கையை ஆதரித்து, இயன்ற அளவு ஜமீந்தார்களுடன் ஏற்பாடு செய்துகொள்ளும்படி காரன்வாலிசு என்பவருக்குக் கட்டளையிட்டார்கள். அந்த ஏற்பாடு, ஆரம்பத்தில் பத்து ஆண்டுகளுக்கு மட்டுமே செய்யப்பட்டது. ஆனால், இறுதியில் அதை நிலையானதாகச் செய்ய வேண்டும் என்ற உறுதியான நோக்கத்துடனேயே அது செய்யப்பட்டது.

இக்கட்டளையை நிறைவேற்றுவதற்காக, ரெவின்யூ போர்டின் தலைவராக ஷோர் என்பவரைக் காரன்வாலிசு

நியமித்தார். நீண்டகால ஏற்பாடாக அதைச் செய்யும் நோக்கத்துடன் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 1790 வரையிலும், அவசியமான சில முதல் வேலைகள் முடிக்கப்படவில்லை. இதற்கிடையில் காரன்வாலிசின் நோக்கத்தில் சில முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டன. இறுதியில் நிலையான ஏற்பாடு என்ற எண்ணத்துடன் முதலில் பத்து ஆண்டுகளுக்கு மட்டும் தற்காலிக உடன்பாடு செய்வதற்குப்பதிலாக, ஆரம்பத்திலேயே அதை நிரந்தர ஏற்பாடாகச் செய்வதற்கு முடிவு செய்தார். ஷோரும் கிராண்டும் உட்பட, அவருடைய பெரும்பான்மையான ஆலோசகர்கள் இந்த முடிவை எதிர்த்தார்கள். பதிவேடுகளை மேலும் விரிவாக ஆராய்ந்து, நிலத்தின் உரிமையாளர்களை உறுதியாகக் கூறும் வகையில் இதைப் போன்ற மாற்ற முடியாத நடவடிக்கைகளைத் தள்ளிவைக்க வேண்டுமென்று கிரான்ட் விரும்பினர். சரியான, நேர்மையான அடிப்படையில், நிலையான நிலவரி ஏற்பாட்டை அரசாங்கம் செய்வதற்கு வேண்டிய நில அளவை எடுக்கும் வரையில், காரன்வாலிசு தம் முடிவைத் தள்ளிவைக்க வேண்டுமென்று ஷோர் விரும்பினர். அப்பிரச்சினையின் கோட்பாடு சம்பந்தப்பட்டவைகளையும், ஜமீந்தார்கள் கொடுக்கவேண்டிய முழு வருவாய்த்தொகை சம்பந்தப்பட்ட நடைமுறைச் செயல்களையும் முடிவு செய்வதற்கு வேண்டிய பொருள்கள் அரசாங்கத்திடம் உள்ளன என்று காரன்வாலிசு கூறினர். அச்சமயத்தில், நில வருவாய் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில், அரசாங்கம் தன் ஆற்றலையும் காலத்தையும் அதிகமாகச் செலவழிக்க வேண்டியிருப்பதால், இதைப் போன்ற நிலையான ஏற்பாட்டினலே தான் அரசாங்கத்தின் மிகவும் முக்கியக் கடமைகளான ஆட்சி, நீதி முதலியவைகளைக் கவனிப்பதற்கு இயலும் என அவர் மேலும் நினைத்தார். நிலத்தின்மீது செய்யப்படும் நிலையான ஏற்பாட்டினல் பல அனுகூலங்கள் ஏற்படும் எனக் காரன்வாலிசு கூறினர். தங்களுடைய நிலங்களை அபிவிருத்தி செய்வதற்கும், அக்காலத்தில் மாகாணம் முழுவதிலும் பரவியிருந்த தரிசு நிலங்களை நல்ல நிலங்களாக மாற்றுவதற்கும், ஜமீந்தார்களை ஊக்கப்படுத்துவதற்கு இந்த ஏற்பாடு உதவும் என்றும், இவ்வகையில் இது ஒரு சிறந்த அனுகூலம் எனவும் அவர் கூறினர்.

நிலவருவாய் ஏற்பாடு பத்து ஆண்டுகள் வரையில் இருக்கும் என, 1790, பிப்பிரவரி 10-ல் காரன்வாலிசு அறிவித்தார். இந்த ஏற்பாடு, டைரக்டர்கள் மன்றம் அங்கீகரித்தால், நிலையான ஏற்பாடாகும் எனவும் அறிவித்தார். டைரக்டர்களின்

அங்கீகாரம், காரன்வாலிசுக்கு 1793-ல் கிடைத்தது. அதே ஆண்டு, மார்ச்சு, 22-ல், பத்தாண்டுக்கால ஏற்பாடு, நிலையான ஏற்பாடாகச் செய்யப்பட்டதென அவர் அறிவித்தார். அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட நில வருவாயைச் செலுத்தும் வரையிலும், ஜமீந்தார்களை, அந்த நிலங்களுக்கு நிலையான உரிமையாளர்கள் என இந்த ஏற்பாடு செய்தது.

இருபது ஆண்டுகளுக்கு அதிகமான காலத்தில் நடந்த பல பரிசோதனைகளுக்குப் பிறகு, சிக்கலான ஒரு பிரச்சினை இவ்விதம் முடிவு செய்யப்பட்டது. இம்முடிவின் நீதியையும் நேர்மையையும் குறித்தும், இதனால் நாட்டிற்கு ஏற்படக்கூடிய இறுதியான விளைவுகளைப் பற்றியும், கருத்து வேறுபாடுகள் இருந்தன ; இப்பொழுதும் இருக்கின்றன. பல ஆண்டுகள் துன்பப்பட்டாலும், இறுதியில், நாட்டில் நீடித்து இருக்கக் கூடிய நிலச் சுவாந்தார்களின் வகுப்பை அது ஏற்படுத்தி, ஒரு குறிப்பிட்ட நிலவருவாய் நிலையாக வருவதற்கும் வழி செய்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், நிலத்திலிருந்து படிப்படியாக வரக்கூடிய அதிக வருமானத்தை அரசாங்கம் அடையமுடியாத வாறு அத்திட்டம் செய்தது. நிலவருவாயே வங்காளத்தின் முக்கிய வருமானம் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், ஜமீந்தார்களின் உரிமைகளை இது ஒப்புக்கொண்டாலும், குடியானவர்களின் உரிமைகளை ஒப்புக்கொள்ளாமல், அவர்களை ஜமீந்தார்களின் தயவில் இருக்கும்படி செய்தது. குடியானவர்களின் மீது ஜமீந்தார்களுக்கு இருக்கும் அதிகாரத்தை அளவுபடுத்தவும், கட்டுப்பாடு செய்யவும் பல ஒழுங்கு முறைகளைக் காரன்வாலிசு ஏற்படுத்தினர். ஆனால், அவை பலனளிக்கவில்லை. இந்த நிலையான நிலவரித் திட்டத்தினால் ஏற்பட்ட பெருங் குறைபாடுகளை நீக்குவதற்கு மேலும் சில சட்டங்கள் அவசியமாய் இருந்தன.

மேலே குறிப்பிட்ட வருவாய்களின் மற்றத் தோற்றுவாய்களைப் பற்றிய ஒரு சில வார்த்தைகளைக் கூறலாம். நில வருவாயைப் போலவே, உப்பு, அபின் வருவாய்களும் ஏலத்தில் விடப்பட்டு, அதிகத் தொகை கேட்பவருடன் ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஏற்பாடே பின்பற்றப்பட்டு வந்தது. 1780-ல், உப்பை உற்பத்தி செய்யும் தொழிலை அரசாங்கமே மேற்கொண்டு, அதைக் கவனிப்பதற்காகத் தலைமை ஆலோசனைச் சபையின் கட்டுப்பாட்டின்கீழ் ஒரு

சிறிய நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. நிலவருவாயை நிருவாகம் செய்யும் அலுவலகமே, சாயிர் வருவாயையும் நிருவாகம் செய்தது.

## (ஆ) நீதி நிருவாகம்

இந்தியாவில், சிவில் நீதி நிருவாகம், வருவாய் நிருவாகத்துடன் இணைக்கப்பட்டேயிருந்தது. 1765-ல் கொடுக்கப்பட்ட 'திவானி உரிமைகள்' இவ்விரண்டு கடமைகளையும் தன்னுள் கொண்டிருந்தது. வருவாய் நிருவாகத்தைப் போலவே, முடிவான நீதி நிருவாகம் ஏற்படுவதற்கு முன் பல பரிசோதனைகள் செய்யப்பட்டன. இந்தப் பரிசோதனைகள், நிலவருவாய் சம்பந்தப்பட்ட பரிசோதனைகளுடன் அதனுடைய ஒரு முக்கிய பாகமாக இணைக்கப்பட்டிருந்தது. எப்படியிருந்த போதிலும், இவை இரண்டும் ஒரே மாதிரியான உரு மலர்ச்சியின் செயலுக்கு உட்பட்டிருந்தன. பரிசோதனைக் காலத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் உண்டான நீதி முறையை வருவாய் நிருவாகத்தின் முறையைக் கொண்டுதான் தெரிந்துகொள்ள இயலும்.

இப்பிரச்சினை 1772-லேதான் முதன்முதலாக எடுத்துக் கொள்ளப்பட்டது. ஒவ்வொரு மாவட்டத்திலும் இரு நீதி மன்றங்கள் உண்டாக்கப்பட்டன ; திவானி அடாலட்டு (Diwani Adalat) என்கிற நீதி மன்றம் சிவில் அதிகார வரம்பையும் பௌஜ்தாரி அடாலட்டு (Faujdari Adalat) என்கிற நீதி மன்றம் கிரிமினல் அதிகாரவரம்பையும் பெற்றிருந்தன. இவற்றுடன் தலைமை நீதி மன்றங்கள் இரண்டு கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்டன. சிவில் வழக்குகளில் அப்பீல் செய்வதற்காக, சாதர் திவானி அடாலட்டு (Sadar Diwani Adalat) என்கிற நீதி மன்றமும், தண்டனைகளைத் திருத்துவதற்கும், உறுதிப்படுத்துவதற்கும், சாதர் நிஜாமத் அடாலட்டு (Sadar Nizamat Adalat) என்கிற நீதி மன்றமும் உண்டாக்கப்பட்டன. மாவட்டத்திலுள்ள திவானி அடாலட்டு, கலெக்டரின் பொறுப்பில் இருந்தது. சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றத்திற்குத் தலைவரும், ஆலோசனை மன்றத்தின் அங்கத்தினர்களும் தலைமை தாங்கினார்கள். பழைய வழக்கத்தின் படியும் முறைப்படியும் இந்திய நீதிபதிகளின் பொறுப்பில் கிரிமினல் நீதி மன்றங்கள் இருந்தன. ஆனால், கலெக்டர்களும் ஆலோசனைச் சபையும், முறையே, மாவட்ட நீதி மன்றங்களிலும், சாதர் நிஜாமத்து அடாலட்டு என்கிற நீதி மன்றத்திலும் சில அதிகாரங்களை உபயோகித்தன.

1773, 1781, 1786ஆம் ஆண்டுகளில், வருவாய் நிருவாகத்தில் செய்யப்பட்ட மாறுதல்கள், நீதி நிருவாகத்திலும் அதைப் போன்ற மாறுதல்களை உண்டாக்கியது. 1774-ல், மாவட்ட நீதி மன்றங்கள், ஆமில்கள் (Amils) எனக் கூறப்படும் இந்திய அதிகாரிகளின் பொறுப்பில் தீர்ப்பு விடப்பட்டது. அவர்களின் தீர்ப்புப் பிடிக்காவிட்டால், மாகாண ஆலோசனைச் சபைக்கு அப்பீல் செய்யலாம். சில முக்கிய வழக்குகளில் அச்சபையிலிருந்து சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றத்திற்கும் அப்பீல் செய்யலாம்.

1755-ல், சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றம், மூர்ஷிதாபாதிற்கு மாற்றப்பட்டு நாயிப் நஜீம் (Naib Nazim) என்பவர் பொறுப்பில் விடப்பட்டது. குற்றம் செய்தவர்களை நீதி மன்றத்திற்குக் கொண்டு வருவதற்காக, ஒவ்வொரு மாவட்டத்திலும், ஒரு பௌஜ்தார் நியமிக்கப்பட்டார்.

1780-ல், ஆறு மாகாண ஆலோசனைச் சபைகளின் நீதி மன்ற அதிகாரங்கள், திவானி அடாலட்டு என்கிற ஆறு நீதி மன்றங்களுக்கும் மாற்றப்பட்டு, ஒவ்வொரு நீதி மன்றத்திற்கும் கம்பெனியின் ஒப்பந்தப் பத்திரப் பணியாளர் தலைமை தாங்கினர். 1781-ல் இந்த நீதி மன்றங்களின் எண்ணிக்கை பதினெட்டாய்ப் பெருகியது. அச்சபைகள் சிவில் வழக்குகளை விசாரித்தன. வேறு வழியில் சொல்ல வேண்டுமானால், ஐரோப்பியர்களின் மேற்பார்வையின்கீழ் இருந்த பழைய மாவட்ட நீதி மன்றங்கள் புதுப்பிக்கப்பட்டன எனலாம். கலெக்டர்கள் தலைமை தாங்கிய நான்கு மாவட்டங்களைத் தவிர்த்து, மற்ற மாவட்டங்களில், அவை தனித்தனியான நீதிபதிகளின்கீழ் விடப்பட்டன. 1000 ரூபாய் வரையிலும், அவர்களின் தீர்ப்பே முடிவானது. விவாதத்தில் சம்பந்தப்பட்ட தொகை அதிகமானால், சாதர் திவானி அடாலட்டுக்கு அப்பீல் செய்யலாம். அதே சமயத்தில், 1775-ல், பௌஜ்தாரி முறையும் நீக்கப்பட்டு, அவர்களுடைய அதிகாரங்களும் கடமைகளும் மாவட்ட நீதி மன்றங்களின் நீதிபதிகளுக்கு மாற்றப்பட்டன, குற்றவாளிகள், இந்திய நீதிபதிகளைப் பெற்ற பௌஜ்தாரி அல்லது கிரிமினல் நீதி மன்றங்களால் விசாரிக்கப்பட்டார்கள். இந்நீதி மன்றங்கள், மூர்ஷிதாபாதிலிருந்த நாயிப் நஜீம் என்பவரின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தன.

இதற்கிடையில் ஒழுங்கு முறைச் சட்டத்தின்படி, 1774-ல், கல்கத்தாவில் தலைமை நீதி மன்றம் என்கிற புதிய இன்றி

யமையாத பகுதி உண்டாக்கப்பட்டது. தலைமை நீதிபதி ஒரு வரையும் துணை நீதிபதிகள் மூவரையும் கொண்ட இந்த நீதி மன்றம், அரசரால் உண்டாக்கப்பட்டது. ஆங்கிலேயர்களின் மீது மட்டுந்தான் இந்நீதி மன்றத்திற்கு அதிகாரம் இருந்தது. இது நடை முறையில் பல தொல்லைகளை விளைத்தது. இச் சபை எல்லா மக்களின் மீதும் அதிகார வரம்பு இருப்பதாக உரிமை கொண்டாடி, அதிகாரம் செலுத்தியது. கம்பெனியின் நீதி மன்றங்களின் அதிகாரத்தை ஒதுக்கித் தள்ளியது மல்லாமல், இந்நீதி மன்றங்களில் நீதிபதிகளுக்கும் அதிகாரி களுக்கும் எதிராக, அதிகாரத் தோரணையில் அவர்கள் செய்த செயலுக்காகக் கொண்டுவரப்பட்ட வழக்குகளையும் ஏற்றுக் கொண்டது. அவர்கள் பின்பற்றிய சட்ட சம்பந்தமான கொள்கைகளும், நடை முறைகளும் இந்தியாவிற்குப் பொருத்தமற்றனவாகவும் மிகுந்த தொந்தரவுகளைக் கொடுப் பனவாகவும் இருந்தன. 'இந்நீதி மன்றம், சுதேச மக்களுக்குப் பொதுவாகக் கடுமையாகவும், கம்பெனியின் ஆட்சியைக் குழப்புவதாகவும் இருந்தது,' எனத் தேர்ந்தெடுத்த குழு, சரியாகக் கூறியது. தலைமை நீதி மன்றத்தின் போலி உரிமை, மிகப் பிரபலமான கோசிஜூரா (Cosijura) வழக்கில் உச்சத்தை அடைந்தது. இவ்வழக்கு இப்பொருளை உச்ச நிலைக்குக் கொண்டு வந்தது. கோசிஜூராவின் ராஜா என்கிற ஒரு ஜமீந்தாருக்கு எதிராகத் தலைமை நீதி மன்றத்தின் நீதிபதி ஒருவர், 'ரிட்டு' ஒன்றைப் பிறப்பித்தார். ஆனால், ஜமீந்தார்மீது அதிகார வரம்பைச் செலுத்துவதற்குத் தலைமை நீதி மன்றத்திற்கு அதிகாரம் இல்லை எனத் தலைமை ஆலோசனைச் சபை கூறியது. ஏனெனில், அந்த ஜமீந்தார், பிரிட்டிஷ் பிரஜையாகவோ அல்லது பிரிட்டிஷ் பிரஜையின் பணியாளராகவோ இல்லை என்ற காரணத்தையும் அது கூறியது. தலைமை நீதி மன்றத்தின் அதிகாரிகள், ஜமீந்தாரை கைது செய்யப் புறப்பட்டபோது, அந்த அதிகாரிகளைக் கைது செய்யும்படி ஆலோசனைச் சபை சிப்பாய்களை அனுப்பியது. இப்படி வங்காளத்தின் மிகப் பெரிய நிருவாக அதிகாரிக்கும் நீதி மன்ற அதிகாரிக்கும் இடையில் வெளிப்படையான போர் நிகழவிருந்தது. ஆனால், இறுதியாக ஏற்படவிருந்த துயர முடிவு, ஹேஸ்டிங்ஸின் திறமை மிக்க திட்டத்தினால், தவிர்க்கப் பட்டது. தலைமை நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியான இம்பே (Impey) என்பவரை உயர்ந்த சம்பளத்தில் சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றத்திற்குத் தலைவராக நியமித்ததால், மனக் குழப்பம் உடனே மறைந்தது.

இம்பே என்பவருக்குக் கொடுக்கப்பட்ட இலஞ்சம் எனப் பொதுவாகக் கருதப்பட்ட இம்முறை, மிகவும் கண்டிக்கத் தக்கது. தலைமை நீதிமன்றம் உண்டாவதற்குரிய நோக்கங்களுள் ஒன்று, கம்பெனியின் பணியாள்களுக்கு எதிரான முறையீடுகளைக் கவனிப்பதற்குச் சுதந்தரமான தனிப்பட்ட வழக்கு மன்றம் ஒன்று இருக்கவேண்டும் என்பதுதான். தலைமை நீதி மன்றத்தின் தலைவர், உயர்ந்த சம்பளம் பெற்று, கவர்னர்-ஜெனரலும் ஆலோசனைச் சபையும் விருப்பத்தோடு இருக்கும் வரையில், அந்நோக்கம் நிறைவேறவியலாது. முட்டுநிலை (Deadlock)யை நீக்கியதோடு அல்லாமல், சாதர் திவானி அடாலட்டு என்கிற மாகாணத்தின் மிகப் பெரிய அப்பீல் நீதி மன்றம் கவர்னர்-ஜெனரலின் தலைமையின்கீழ் இருந்திருப்பதைவிட மிக்க திறமையுடன் இயங்கும்படி செய்தது என்பதே மோசமான சூழ்நிலையிலும் ஆறுதல் அளிக்கக்கூடிய முக்கிய அமிசம். உயர்ந்த பதவியின் கடமைகளை இனக்கமான முறையில் செயலாற்ற உதவும் சட்ட அறிவைக் கவர்னர்-ஜெனரல் பெருத காரணத்தாலும், போதிய அவகாசம் இல்லாமையினுலும், அவரால் அப் பதவியைத் திறமையாகத் தாங்க இயலவில்லை.

ஆனுல், இந்த ஏற்பாடு, தாய்நாட்டு அதிகாரிகளால் மாற்றப்பட்டது. இம்பே என்பவர் வாங்கிய சம்பளத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி செய்யப்பட்டு, துரோகக் குற்ற விசாரணைக்கும் உட்படுத்தப்பட்டார். 1781-ல் ஒரு புதிய சட்டம் உண்டாக்கப்பட்டது. இச்சட்டம் மிகத் தெளிவாகத் தலைமை நீதிமன்றத்தின் அதிகார வரம்பை விளக்கிக் கூறியது. கவர்னர்–ஜெனரல் அலுவலையும் ஆலோசனைச் சபையின் அலுவலையும் பற்றிய நடத்தைகள், ஜமீந்தார்கள் அல்லது குடியானவர்கள், நிலவருவாய், வசூல் சம்பந்தமான எல்லாச் செய்திகளும், தலைமை நீதி மன்றத்தின் அதிகார வரம்பிற்கு உட்படாதனவாகச் செய்யப்பட்டன.

காரன்வாலிஸ் ஆட்சியின்போது, நீதித்துறை உட்பட, ஆட்சியின் எல்லாப் பிரிவுகளிலும் முக்கிய மாறுதல்கள் செய்யப்பட்டன. டாக்கா, பாட்ஞ, மூர்ஷிதாபாது ஆகிய மாவட்டங்களைத் தவிர, மற்ற மாவட்ட நீதி மன்றங்கள், மறுபடியும் கலெக்டர்களின் கையில் ஒப்படைக்கப்பட்டன. மாஜிஸ்ரேட்டுகளின் அதிகாரம், கலெக்டர்களுக்குக் கொடுக்கப்பட்டது. வரம்புக்கு உட்பட்ட சில கிரிமினல் வழக்குகளை அவர்கள் விசாரிக்கலாம். மிக முக்கியமான

கிரிமினல் வழக்குகளை மாவட்டக் கிரிமினல் நீதிமன்றங்களும், சாதர் நிஜாமத் அடாலட்டும், விசாரணை செய்தன. நிலவரி சம்பந்தப்பட்ட வழக்குகளைக் கலெக்டர்கள் விசாரணை செய்ய இயலாது. அவை ரெவின்யூபோர்டுக்கு மாற்றப்பட்டன.

1790-ல் மேலும் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. நிலவரி சம்பந்தமான வழக்குகளை ரெவின்யூபோர்ட்டுக்கு அனுப்பும் பரிசோதனை தோல்வியில் முடிந்தது. அதனுல், இவ்வழக்குகளை விசாரிப்பதற்குக் கலெக்டர்களின் அதிகாரத்திற்குட்பட்ட புதிய நீதி மன்றங்கள் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏற்படுத்தப்பட்டன. குற்றச் சட்ட நீதியிலும், மிக விரிவான மாற்றங்கள் செய்யப்பட்டன. சாதர் நிஜாமத் அடாலட்டு, மறுபடியும் மூர்ஷிதாபாதிலிருந்து கல்கத்தாவிற்கு மாற்றப்பட்டு, (இதைப் போன்று முன்பு ஒரு முறை ஹேஸ்டிங்ஸால் செய்யப்பட்டது.) முகம்மதிய நீதிபதிக்குப்பதில், இந்தியச் சட்ட வல்லுனர்களை உதவியாக பெற்ற கவர்னர்-ஜெனரலும், ஆலோசனைச் சபையும் அதற்கு தலைமை தாங்குமாறு செய்யப்பட்டனர். மாவட்டக் கிரிமினல் நீதிமன்றங்கள் நீக்கப்பட்டு, கல்கத்தா, மூர்ஷிதாபாது, பாட்னு ஆகியவற்றில் உண்டாக்கப்பட்ட நான்கு சுற்றுலா நீதி மன்றங்கள் அவற்றின் பொறுப்பை ஏற்றுக்கொண்டன. இந்திய வல்லுனர்களின் உதவியுடன், கம்பெனியின் பணியாளர் இருவர் இந்நீதிமன்றங்களில் தலைமை தாங்கினர். ஆண்டுக்கு இருமுறை தங்கள் அதிகாரவரம்புக்குட்பட்ட பிரதேசங்களில் இவர்கள் சுற்றுப் பயணம் செய்ய வேண்டும். மாஜிஸ்ட்ரேட்டுகள் என்கிற முறையில், கலெக்டர்களின் அதிகாரங்கள் அதிகப்படுத்தப்பட்டன. கைதிகளைப் பாதுகாப்பதும், நான்கு மாகாணக் கிரிமினல் நீதிமன்றங்களால் அவர்களுக்கு விதிக்கப்பட்ட தண்டனைகளை நிறைவேற்றுவதும், அவர்களுடைய பொறுப்பாகச் செய்யப்பட்டன.

1793-ல் ஏற்படுத்தப்பட்ட மிகப் பிரபலமான காரன்வாலிசு விதித்தொகுப்பு, முன்பே செய்யப்பட்ட மாற்றங்களை ஓரளவுக்கு விளக்கியும், புதியவைகளை ஓரளவிற்குப் புகுத்தியும், பிரிட்டிஷ் இந்திய ஆட்சிக்கு அடிப்படையாய் விளங்கிய ஒரு முறையைத் தோற்றுவித்தது. இரண்டு கொள்கைகளைக் கொண்டு அம்மாற்றங்கள் செய்யப்பட்டன. மாவட்டத்தில் ஆங்கில அதிகாரத்தின் தனிப் பிரதிநிதியாய் இருந்து, எல்லையற்ற அதிகாரங்களைக் கொடுத்த பல விதக் கடமைகளைக் குறைப்பதற்காக ஏற்பட்ட அவசியம்,

முதலாவது கொள்கை. அதன்படி, நீதி முறைக்கு உரியனவும், மாஜிஸ்ட்ரேட்டுக்குரியனவுமான அதிகாரங்கள், கலெக்டர்களிடமிருந்து நீக்கப்பட்டு, நீதிபதிகள் எனச் சொல்லப்பட்ட ஒரு புதிய அதிகார வகுப்பினரிடம் கொடுக்கப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்திலுமிருந்த தனித்தனி நிலவரி சம்பந்தமான நீதி மன்றங்களும், ரெவின்யூ போர்டின் நீதிமுறையான அதிகாரங்களும் நீக்கப்பட்டு, எல்லாச் சிவில் வழக்குகளையும் உயர்நீதிபதிகளே விசாரணை செய்தார்கள்.

இருபத்துமூன்று மாவட்ட நீதி மன்றங்கள், பாட்னு, டாக்கா, மூர்ஷிதாபாது என்னும் இடங்களிலுள்ள மூன்று நகர நீதி மன்றங்களுக்கும் கூடுதலாக, பெரும்பான்மையான கீழ்நிலை நீதிமன்றங்கள், அதிகமான வழக்குகளை விசாரிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டன. முனிசீப்பு நீதி மன்றந்தான், மிகக் கீழான நீதி மன்றம். 50 ரூபாய் வரையிலுமுள்ள வழக்குகளை அது விசாரணை செய்யலாம். இதற்கும் மேலாக இருப்பனவற்றை ரெஜிஸ்ட்ரார் நீதிமன்றங்கள், ஜில்லா நீதி மன்றங்களுடன் இணைக்கப்பட்ட இவ்வித அதிகாரிகள் 200 ரூபாய் வரையிலுமுள்ள வழக்குகளை விசாரணை செய்யலாம். இந்நீதி மன்றங்களின் தீர்ப்பின்மீது செய்யக்கூடிய அப்பீல்களை, மாவட்ட நீதி மன்றத்திற்கு எடுத்துச் செல்லலாம்.

1790-ல் உண்டாக்கப்பட்ட நான்கு மாகாணச் சுற்றுலா நீதி மன்றங்கள், திருத்தி அமைக்கப்பட்டன. ஒவ்வொன்றும், இருவருக்குப் பதிலாக மூவர் ஆங்கில நீதிபதிகளைக் கொண்டிருந்தது. முன்பு இருந்ததைப் போலவே, அவை கிரிமினல் சுற்றுலா நீதி மன்றங்களாகவும், அவற்றைத் தவிர, மாவட்ட நீதிபதிகளின் தீர்ப்பின்மீது செய்யப்படும் அப்பீல்களை ஏற்றுக்கொள்ளும் நீதி மன்றங்களாகவும் விளங்கின. சில முக்கிய வழக்குகளின் அப்பீல்களை இவைகளிலிருந்து கல்கத்தாவிலுள்ள சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றத்திற்கு எடுத்துச் செல்லலாம். மேலும், கலெக்டர்களின் அதிகாரத்தைக் குறைப்பதற்காகவும், அவர்களுடைய கொடுமைகளிலிருந்து இந்தியர்களைக் காப்பாற்றுவதற்காகவும், கலெக்டர்களும், அரசாங்கத்தின் எல்லா அதிகாரிகளும், 'அதிகாரிகள் என்ற முறையில் செய்யப்பட்ட செயல்களுக்கும், நீதி மன்றங்களுக்குப் பொறுப்புள்ளவர்களாகச் செய்யப்பட்டார்கள்.' உடைமை சம்பந்தமாகத் தன் குடிமக்களுடன் கொண்டிருக்கும் தகராறுகளில், அரசாங்கம் கூடத் 'தன் உரிமைகளை இந்நீதிமன்றங்கள் அப்பொழுது

இருக்கும் சட்டங்களின் படியும், விதித்தொகுப்புகளின் படியும், விசாரிப்பதற்குச் சமர்ப்பிக்க வேண்டும்.'

இந்தியர்களிடமிருந்த ஆட்சி சம்பந்தமான பொறுப்புகளையும், உண்மையான அதிகாரங்களையும் நீக்கிவிடுவது தான், காரன்வாலிசு பின் பற்றிய இரண்டாவது கொள்கை. கிரிமினல் நீதி நிருவாகத்தின் மீது தலைமையானதும் முழுமையானதுமான அதிகாரத்தை இந்தியர்கள் பெற்றிருந்தார்கள். அந்த அதிகாரங்களையெல்லாம் அவர்களிடமிருந்து காரன்வாலிசு நீக்கிவிட்டார். ஜமீந்தார்களின் அதிகார வரம்புக்குட்பட்ட பிரதேசங்களில் ஒழுங்கை நிலை நாட்டும் பொறுப்பையும் அதிகாரத்தையும் அவர்களிடமிருந்து அவர் நீக்கிவிட்டார். அவர்களுடைய போலீஸ் படைகளையும் கலைத்துவிடும்படி அவர்கள் வற்புறுத்தப்பட்டார்கள். ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள பல தரோகாக்கள் (Darogas) என்கிற அதிகாரிகளுக்குப் போலீஸின் கடமைகள் கொடுக்கப்பட்டன. மாஜிஸ்ட்ரேட்டின் நேரிடையான மேற்பார்வையின்கீழ், ஒவ்வொரு தரோகாவும், குறிப்பிட்ட ஒரு பிரதேசத்திற்குப் பொறுப்பாய் இருந்தது.

காரன்வாலிசு உண்டாக்கிய மாறுதல்களின் முக்கிய விளைவு என்னவெனில், மாவட்ட அரசாங்கத்தின் முழு வேலைகளையும், ஐரோப்பிய அதிகாரிகள் இருவரின் இடையில் பிரித்துக் கொடுப்பதுதான். அவர்களுள் ஒருவர் நில வரி வசூலிக்கும் கலெக்டராய் இருப்பவர். மற்றவர், நீதிபதியாகவும், மாஜிஸ்ட்ரேட்டாகவும் இருப்பவர். நம்பிக்கையும் பொறுப்பும் உள்ள பதவியிலிருந்து இந்தியர்கள் வேண்டுமென்றே விலக்கப்பட்டார்கள்.

## வங்காளம், இரண்டாம் கட்டம் (1793–1828)

முப்பத்தைந்து ஆண்டு வரையிலும், காரன்வாலிசு ஏற்படுத்திய அமைப்பே வழிகாட்டும் முறையெனக் கொள்ளப்பட்டது. அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்ட சில குறைபாடுகளை நீக்குவதிலேயே அரசாங்கம் ஈடுபட்டிருந்தது. நிலையான நிலவரித்திட்டத்தின் முக்கியத் தொல்லைகள் நிபந்தனையில் குறிப்பிட்ட பணத்தை முறையாக வசூலிப்பதிலேதான் இருந்தன. இவை அதிகமாக நிலுவையில் இருந்தன. அதனால், நிலங்கள் அடிக்கடி விற்பனை செய்யப்பட்டன. நிலையான நில வருவாய், விசுவாசமும் திருப்தியும்

உடைய ஜமீந்தார்களின் வகுப்பு ஆகிய கொள்கைகள் அதிக அளவிற்கு நிறைவேற முடியாமல் போயின. ஜமீந்தார்களின் கொடுமைகளிலிருந்து பயிரிடுபவர்களுக்குப் போதுமான பாதுகாப்பைத் தாராதது, இச்சட்டத்தின் மற்றொரு குறை பாடு. சட்ட நீதி மன்றங்களை ஏற்படுத்தியது, பயிரிடுபவர் களின் குறைகளைத் தீர்க்குமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், நடை முறையில், அது பயனில்லாமல் போய்விட்டது. நிலங்கள் சம்பந்தப்பட்ட எவ்வித முறையான சர்வேயும் இல்லாததாலும், நிலங்களின் உரிமை முறை பற்றிய முடி வான பதிவேடுகள் இல்லாமையாலும், சட்ட நீதி மன்றங்கள், பயிரிடுபவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய இயல வில்லை.

நீதி மன்றங்கள் செய்த பாதுகாப்பும் வெகுசீக்கிரத்தில் பொய்த்தோற்றமாய் மாறியது. ஏனெனில், நீதி மன்றங்கள் விசாரணை செய்ய இயலாத அளவுக்குச் சிவில் வழக்குகள் ஏராளமாகப் பெருகிவிட்டன. இவ்வகையில் சட்டத்தாமதம், நீதி மறுக்கப்பட்டது எனச் சொல்லும் அளவுக்கு மிகக் கடுமையாய் இருந்தது. ஏனெனில், சாதாரணமாக ஒரு வழக்கு, ஒரு மனிதனுடைய வாழ்க்கைக் காலத்திற்குள் முடியுமென எதிர்பார்க்க இயலாது. கடைசியாகக் குற்றங் கள் ஏராளமாகப் பெருகின. உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கப்படவில்லை.

இக்கடுமையான தீங்குகளை ஒழிப்பதற்குத் தொடர்ந்து வந்த கவர்னர் ஜெனரல்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கை களைப் பற்றி விரிவாகக் கூறுவது அவசியமன்று; அவர்கள் கைக்கொண்ட முக்கியக் கொள்கைகளை மட்டும் குறிப்பிடுவது போதுமானது.

நிலையான நிலவரித்திட்டம் சம்பந்தப்பட்ட வரையில், உரிமை முறை பற்றிய பதிவேடுகளைத் தொகுப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1819ஆம் ஆண்டின் 7ஆம் ஒழுங்கு முறை விதிகள், பலவகைப்பட்ட பயிரிடுவோர் களின் உரிமைகளைத் தெளிவாக விளக்கின. பயிரிடுவோர்க ளிடமிருந்து குத்தகைத் தொகையை வசூலிப்பதற்காக ஜமீந்தார்களுக்கு விரிவான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. ஆண்டுதோறும் கொடுக்கக்கூடிய குத்தகைத் தொகையைச் செலுத்தவில்லையானால், அவர்களைக் கைதியாக்குவதற்கு ஜமீந்தார் பொறுப்பானவராகச் செய்யப்பட்டார். ஏராள

மான சிவில் வழக்குகளைத் தீர்ப்பதற்காக, மாவட்ட நீதிபதிகளின் எண்ணிக்கையும் அதிகாரமும் அதிகமாக்கப்பட்டன. இந்தியர்கள் முனிசீப்பாகவும் (1793-ல் கொடுக்கப்பட்டதை விட அதிக அதிகாரத்துடன்) சாதர் அமீன்களாகவும் (Sadar Amins) செய்யப்பட்டு, குறிப்பிட்ட எல்லைக்குள் இருக்கும் சிவில் வழக்குகளை விசாரிப்பதற்கு அவர்கள் அனுமதிக்கப் பட்டார்கள். கிரிமினல் வழக்குகள் சம்பந்தப்பட்ட வரையில், அவைகளை விசாரித்த மாஜிஸ்ட்ரேட்டுகளின் அதிகாரம் விரிவு படுத்தப்பட்டு, தன் உதவியாளர்களுக்கு அந்த அதிகாரத்தை ஒப்படைப்பதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். சிலவகைப்பட்ட நிலவருவாய் வழக்குகளை விசாரணை செய்வதற்கு மறுபடியும் கலெக்டர்கள் அதிகாரமளிக்கப்பட்டார்கள். அவர்களுள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலருக்கு, மாஜிஸ்ட்ரேட்டின் அதிகாரங்களும் கொடுக்கப்பட்டன. மாகாண அப்பீல் நீதிமன்றங்களின் நடைமுறையில் தகுதியான மாற்றங்கள் செய்யப்பட்டன. நீதிபதிகள் சுற்றுப்பயணத்தில் இருந்தாலும், அப்பீல் வழக்குகளை இத்திட்டத்தினுல் விசாரணை செய்ய இயலும். இந் நீதி மன்றங்களிலிருந்த நீதிபதிகளின் எண்ணிக்கை, மூன்றிலிருந்து நான்காக உயர்த்தப்பட்டது. சாதர் திவானி அடாலட்டு முழுமையாகத் திருத்தி அமைக்கப் பட்டது. கவர்னர்-ஜெனரலுக்கும், ஆலோசனைச் சபைக்கும் பதிலாக, மூன்று நீதிபதிகள் நியமிக்கப்பட்டு, படிப்படியாக, அவர்களின் எண்ணிக்கை ஐந்தாக அதிகரிக்கப்பட்டது. இந்த நீதிமன்றத்தின் தீர்ப்புகளின்மீது, அரசருக்கும் அவருடைய ஆலோசனைச் சபைக்கும் அப்பீல் செய்யலாம். ஆனுல், வழக்கில் சம்பந்தப்பட்ட தொகை 5000 பவுனுக்கும் மேற் பட்டதாய் இருக்க வேண்டும்.

சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டுவதற்காகப் பெரிய நகரங்களிலும், ஒவ்வொரு மாவட்டத்தின் தலைமை யிடங்களிலும், ஆற்றல் வாய்ந்த போலீஸ் (ஊர் காவற்படை) நிறுவப்பட்டது. கல்கத்தா, டாக்கா, பாட்னு, மூர்ஷிதாபாது ஆகிய இடங்களில் உள்ள போலீஸ் கண்காணிப்பாளர்களின் மேற்பார்வையில் இப்போலீஸ் படை இயங்கியது.

## வங்காளம், மூன்ருவது கட்டம் (1829–1858)

காரன்வாலிசு உண்டாக்கிய திட்டத்தில் முதன்முதல் தீவிர மாறுதல்களை 1829-ல் வில்லியம் பென்டிங்கு பிரபு என்பவர் உண்டாக்கிஞர். இப்புதிய முறை ஆட்சி,

கமிஷனர்கள் என்று சொல்லப்பட்ட அதிகாரிகளைக் கொண்டிருந்தது. அவர்களுள் ஒவ்வொருவரும், சில மாவட்டங்களைக் கொண்ட ஒரு பகுதிக்குப் பொறுப்பாளராக்கப் பட்டனர். மாகாண அப்பீல் நீதி மன்றங்களும், போலீஸ் கண்காணிப்பாளர்கள் பதவியும் நீக்கப்பட்டு, அவர்களுடைய கடமைகள் கமிஷனருக்கு மாற்றப்பட்டன. இவற்றைத் தவிர, அக்கமிஷனர், அவருக்குக் கீழிருந்த கலெக்டர்கள், மாஜிஸ்ட்ரேட்டுகள், நீதிபதிகள் ஆகியவர்களின் வேலைகளையும் மேற்பார்வையிட வேண்டும். தனி மனிதனுக்கு இவ்வளவு வேலைகளும் மிக அதிகமானவையென்பது, அனுபவத்தால் தெரிந்தது. 1831, 1837ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட மாற்றங்களினால், செஷன்ஸ் நீதிபதியின் கடமைகள் புதியவர்க்காக ஏற்படுத்தப்பட்ட அதிகாரிகளுக்கு மாற்றப் பட்டன. இப்படி டிவிஷனல் கமிஷனரின் மேற்பார்வையின் கீழ் ஒப்பந்தப் பத்திரச் சிவில் பணியாளர் தொகுதியைச் சேர்ந்த உதவியாளர்களுடன், நீதிபதி, கலெக்டர், மாஜிஸ்ட்ரேட்டு ஆகியவர்கள், மாவட்ட ஆட்சியை நடத்தி வந்தார்கள்.

இந்தியர்களிடம் அதிகமான ஆட்சி அலுவல்களை ஒப்படைத்தது, இம்மாற்றத்தினால் ஏற்பட்ட மற்றொரு முக்கிய அமிசமாகும். இதற்காக இந்தியர்கள் துணை மாஜிஸ்ட்ரேட்டுகளாகவும், துணைக் கலெக்டர்களாகவும் நிய மிக்கப்பட்டார்கள். சிவில் வழக்குகளை விசாரணை செய் வதற்காகத் தலைமைச் சாதர் அமீன் என்கிற புதிய பதவி உண்டாக்கப்பட்டது. சில முக்கிய வழக்குகளை இந்நீதி மன்றங்களின் தீர்ப்புகளின்மீது முன்பு இருந்தவாறு மாவட்ட நீதிபதிகளிடம் அப்பீல் செய்யாமல், கல்கத்தாவிலுள்ள சாதர் திவானி அடாலட்டு என்கிற உயர்நீதி மன்றத்திற்கு அப்பீலில் எடுத்துச் செல்லலாம்.

வில்லியம் பென்டிங்கு பிரபு என்பவர், கூட்டு-மாஜிஸ்ட்ரேட்டுகளின் பதவிகளை உண்டாக்கி, அவர்களை உட் கோட்டங்களின் (Sub-divisions) பொறுப்பை ஏற்கும்படி செய்தார். படிப்படியாகத் துணை மாஜிஸ்ட்ரேட்டுகள், உட் கோட்ட அதிகாரிகளாய் நியமிக்கப்பட்டார்கள்.

வங்காள ஆட்சியின் மிக முக்கியமான மாற்றம், 1854-ல் ஏற்பட்டது. அது வரையிலும் கவர்னர்-ஜெனரலும், ஆலோசனைச் சபையினரும் வங்காள ஆட்சிக்குப் பொறுப்

புள்ளவர்களாய் இருந்தார்கள். அவர்களை எப்பொழுதும் எதிர் நோக்கிய மிகப்பெரிய ஏகாதிபத்தியச் செய்திகளைவிட, வங்காளத்தின் உள்ளூர்த் தேவைகளே அவர்களுக்கு முக்கிய மானவைகளாய்த் தென்பட்டன. 1853-ல் உண்டாக்கப்பட்ட பட்டயச் சட்டப்படி, வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம் ஆகியவைகள் லெப்டினென்டு-கவர்னர் பொறுப்பில் விடப் பட்டன. 1854, ஏப்பிரல், 28-ல், ஹல்லிடே (F. J. Halliday) என்பவர் இப்பதவிக்கு நியமிக்கப்பட்டார்.

## சென்னை

வங்காளத்தைப் போலவே, சென்னை மாகாணத்திலும் நிலவருவாயை வசூலிப்பதுதான், ஆட்சியாளரின் முக்கியப் பிரச்சினையாய் இருந்தது. நில வருவாய்தான், இம்மாகாண வருமானத்திற்கு முக்கிய மூலமாய் இருந்தது. வங்காளத்தைப் போல அல்லாமல், சென்னையிலிருந்த பிரிட்டிஷ் பிரதேசங்கள், வெவ்வேறான காலங்களில் வெவ் வேறான அரசர்களிடமிருந்து பெறப்பட்டதால், பற்பல சட்டங் களையும் வழக்குகளையும் பெற்றிருந்தது. அதனால், நில வருவாய் நிருவாகத்தையும் தலத் தேவைகளுக்கு உகந்தவாறு வெவ்வேறான கொள்கைகளைக் கொண்டு உருவாக்க வேண்டி யிருந்தது.

பொதுவாக, மாறுபட்ட இரு முறைகள் கையாளப் பட்டன. ஜாகீர்ப் பிரதேசங்களிலும் வடசர்க்காரிலும், ஒவ்வொரு கிராமமும், பரம்பரைப் பங்குகளைப் பெற்ற மிராசுதார்களுக்கு உரிமையாய் இருந்தன. அவர்களுள் முதன்மையானவர்கள், அக்கிராமத்தின் பிரதிநிதிகளாய் இருக்கும் நீண்ட காலப் பழக்கத்தை அவர்கள் பெற்றிருந் தார்கள். அதனால், முழுக் கிராமமும் சம்பந்தப்பட்ட ஓர் உடன்பாட்டை முதன்மையான மிராசுதார்கள் அடங்கிய ஒரு குழுவுடன் ஆங்கிலேயர்கள் செய்துகொண்டார்கள். நிலத்தைப் பெறுவதற்காக அவர்கள் ஒரு மொத்தமான தொகையைக் கொடுக்க வேண்டும்.

1792-ல் திப்புவிடமிருந்து கைப்பற்றப்பட்ட பாரா மஹால் (Bara mahal) என்கிற இடத்தில் முற்றிலும் மாறுபட்ட முறை வழங்கியது. இவ்விடத்தில், கிராமத் தலைவன், ஒவ்வொரு குடியானவரிடத்திலும் வரி வசூல் செய்து, அதை அரசாங்கத் திற்குச் செலுத்துவான். அலெக்ஸாண்டர் ரீட் (Alexander

Read) என்பவரும், தாமஸ் மன்ரோ (Thomas Munro) என்பவரும், இம்முறையின் நுண்ணிய விவரங்களை ஆராய்ந்து, படிப்படியாக ரயத்துவாரி (Ryotwari) உடன்பாடு என்று கூறப்பட்ட முறையை உண்டாக்கினார்கள். 1855-ல், சரியான படி வளர்ச்சியடையாத அம்முறையின் முக்கிய அமிசம், சிறிய உழவனுடன் ஒரு ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது. குறிப்பிட்ட ஒரு நில வரியைச் செலுத்தி நிலத்தின் மீதுள்ள எல்லா உரிமைகளையும் அக்குடியானவர்கள் அனுபவிக்கலாம். அந்த நில வரியை, அரசாங்கம், தன் பணியாளர்களைக் கொண்டு வசூலித்துக்கொள்ளும். இந்த ஏற்பாடு செய்யப்பட்டு, குறிப்பிட்ட காலங்களுக்கு—பொதுவாக 30 ஆண்டுகளுக்குப்—புதுபிக்கப்பட்டது. இக்காலத்தில், அக்குடியானவனை, அவன் நிலத்திலிருந்து நீக்கவும் இயலாது. விளைச்சலின் நிகர மதிப்பிற் பாதியை அரசாங்கம் தன் பங்காகப் பெறுவதற்கு இந்த ஏற்பாட்டில் வழி செய்யப்பட்டது.

மேலே விவரிக்கப்பட்ட இரு முறைகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, பற்பல காலங்களில் ஆங்கிலேயர்களால் கைப்பற்றப்பட்ட அல்லது அவர்களிடத்தில் ஒப்படைக்கப்பட்ட பிரதேசங்களுக்கு உபயோகப்படுத்தப்பட்டன. ஆனால், ரயத்துவாரி முறை மிகவும் விரும்பப்பட்டது. ஏனெனில், முதன்மையானவர்கள் மற்றக் கிராம மக்களைக் கொடுமைப் படுத்துவதற்கு மிராசுதாரி முறை அனுமதித்தது.

வங்காளத்தில் நிலையான நிலவரித் திட்டம் உண்டாக்கப்பட்டு சென்னையிலும், அத்திட்டம் புகுத்தப்பட்டது. வங்காளத்திலிருந்த ஜமீந்தார்களைப் போலவே, சென்னையிலிருந்த பாளையக்காரர்களும், ஏறக்குறைய நிலமானியத் தலைவர்களாய் இருந்தார்கள். அவர்கள் இராணுவ ஏவலாளரை வைத்திருந்தார்கள். அவர்களுடைய அதிகார வரம்புக்குள், நீதி சம்பந்தமான அதிகாரத்தையும் நிருவாக சம்பந்தமான அதிகாரத்தையும் செலுத்தினார்கள். வங்காளத்தில் செய்ததைப்போலவே, இவர்களிடமும் நிலையான ஓர் ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டு, இவர்களிடமிருந்த இராணுவ அதிகாரத்தையும் நீதி சம்பந்தமான அதிகாரத்தையும் ஆங்கிலேயர்கள் எடுத்துக்கொண்டார்கள் இதுவரையிலும் இப்பரிசோதனை வெற்றியிலேதான். முடிந்தது. ஆனால், பாளையக்காரர்கள் இல்லாத இடங்களும் சென்னையில் இருந்தன. இவ்விடங்களில் புதிய ஜமீந்தார்

களின் வகுப்பை ஏற்படுத்தித் தொல்லைகளை நீக்க அரசாங்கம் முயற்சி செய்தது. பல கிராமங்களை ஒன்று சேர்த்து, ஒரு பெரிய ஜமீனை உண்டாக்கி, அதிகப் பணத்திற்காக ஏலத்தில் விடப்பட்டது. இதனால் உண்டான பயன் திருப்தியளிக்க வில்லை. அதனால், படிப்படியாக இக்கொள்கை கைவிடப் பட்டது. அதற்குப் பதிலாக ஆரம்பத்தில் மிராசுதாரி திட்டம் கைக்கொள்ளப்பட்டது. ஆனால், இறுதியில் ரயத்துவாரி திட்டமே ஒப்புக்கொள்ளப்பட்டது.

சீக்கிரத்திலேயே, ரயத்துவாரி முறை, அங்கீகரிக்கப் பட்ட அமைப்பாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், அம் மாகாணத்தின் நாலில் ஒரு பங்கில் ஜமீந்தாரி முறையே இருந்தது. மிராசுதாரி முறை, அதிகாரப் பூர்வமாகக் கைவிடப்பட்டாலும், ஒரு சில தனிப்பட்ட இடங்களில் இருந்தது.

நிலையான நிலவரித் திட்டத்துடன் காரன்வாலிசின் நீதி சம்பந்தப்பட்ட முறைகளும், சென்னையில் உண்டாக்கப் பட்டன. வங்காளத்தைப் போலவே, இவ்விடத்திலும், ஆட்சி யென்கிற இயந்திரம், உருவாக்கப்பட்டது. இம்மாகாணமும் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு மாவட்டமும் பல தாலூக்காவாகப் பிரிக்கப்பட்டது. முதலில் மாவட்ட நீதிபதி, மாஜிஸ்ட்ரேட்டின் அதிகாரத்தையும் போலீஸ் அதிகாரத்தையும் பெற்றிருந்தார். ஆனால், சீக்கிரத்திலேயே அவை கலெக்டருக்கு மாற்றப்பட்டன. படிப்படியாகக் கலெக்டரின் பதவி, மிக முக்கியமானதாய் மாறியது. வங்காளக் கலெக்டர் பெற்றிருந்த அதிகாரங்களுடன், நிலவரி விதிப்பது, நிலவரியை வசூலிப்பது ஆகியவை சம்பந்தமாக முக்கியக் கடமைகளையும் அவர் பெற்றிருந்தார்.

## பிரிட்டிஷ் இந்தியாவின் மற்றப் பாகங்கள்

வங்காளத்தில் உண்டாக்கப்பட்ட ஆட்சி முறை, பிரிட்டிஷ் இந்தியாவின் மற்றப் பாகங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது; அதனால், அதை விரிவாக விளக்க வேண்டுவதில்லை. நில ஏற்பாடுகள் சம்பந்தப்பட்டவரையில், ரயத்துவாரிமுறை பம்பாயிலும், இப்போது இருக்கின்ற ஐக்கிய மாகாணங்களை ஒத்து இருக்கிற மேல் மாகாணங்களிலும் (Upper Provinces) உபயோகப்படுத்தப்பட்டது. அந்த ஏற்பாடு, கிராமச் சமுதாயத்துடன் செய்துகொள்ளப்பட்டது. இத்திட்டம்,

சென்னையின் மிராசுதாரி திட்டம்போன்று இருந்தது. கிராமச் சமுதாயம் என்பது எல்லாக் கிராமங்களின் ஒருமித்த உடைமையைக் குறிக்கவில்லை. ஆனால், நெருங்கிய உறவுடனிருந்த மக்களின் குழுவையே அது குறித்தது. அவர்கள் கூட்டாகவும் தனித்தனியாகவும், முப்பது ஆண்டிற்கு விதிக்கப்பட்ட நிலவரியைக் கொடுப்பதற்குப் பொறுப்பானவர்கள். பம்பாயிலும், மேல் மாகாணங்களிலும் உண்டான இத்திட்டத்திற்கு, மவுன்ட்ஸ்டுவர்ட்டு எல்பின்ஸ்டனும் (Mountstuart Elphinstone), ஜேம்ஸ் தாம்ஸனும் (James Thomson) பொறுப்பாளர்கள்.

மேல் மாகாணங்களில் பின்பற்றப்பட்ட திட்டம், சிறிய மாறுதல்களுடன், பஞ்சாபிலும் உபயோகப்படுத்தப்பட்டது. இவ்விரண்டு மாகாணங்களிலும், கிராமச் சமுதாயத்தின் அங்கத்தினர்களாய் இல்லாத உழவர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் பட்டன. நடைமுறையில் ஒரு நிலத்தை உழவர் ஒருவர் தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகளுக்கு வைத்திருந்தால், அந்நிலத்தில் அவருக்கு நிலையானதும், பரம்பரையானதுமான உரிமைகள் உண்டு என்பது தீர்மானிக்கப்பட்டது. ஆனால், அவர் நியாயமாகக் குறிப்பிட்ட தீர்வையைச் செலுத்தியாக வேண்டும். 1868-ல் உண்டாக்கப்பட்ட பஞ்சாபு குடிவாரச் சட்டம் (Panjab Tenancy Act) மூலம், இவ்வுரிமை சட்டபூர்வமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. அதே ஆண்டில் நிறைவேற்றப்பட்ட அயோத்திக் குடிவாரச் சட்டம் அவ்வித உரிமையை ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால், ஐந்தில் ஒரு பங்கு குடியானவர்களுக்கு அனுபோக உரிமையை அது கொடுத்தது. மேம்பாடு செய்தல், தீர்வைகளை அதிகமாக்குதல் போன்றவைகளில் இழப்பீடு கொடுப்பதில் நியாயமான முறைகளை அது உண்டாக்கியது.

வங்காளத்தின் நீதி சம்பந்தமான முறைகள், வாரணசி, அயோத்தி, டோப் (Doab) என்னுமிடங்களுக்கு முறையே 1795, 1803, 1804 ஆகிய ஆண்டுகளில் விஸ்தரிக்கப்பட்டது. கல்கத்தாவிலிருந்து அலகாபாது அதிக தூரத்தில் இருந்ததால் தனித்தனியான சாதர் திவானி அடாலட்டு, சாதர் நிஜாமத் அடாலட்டு என்கிற நீதிமன்றங்கள், 1831-ல் அலகாபாதில் ஏற்படுத்தப்பட்டன.

பம்பாய் சம்பந்தப்பட்டவரையில், 1799-ஆம் ஆண்டின் விதிகளின் தொகுப்புப்படி, வங்காளத்தைப் போன்ற நீதி

நிருவாகம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால், 1827-ல், அது மவுன்ட் ஸ்டூவர்ட்டு எல்பின்ஸ்டன் என்பவரால் திருத்தி அமைக்கப் பட்டது. இப்புதிய திட்டத்தின்படி, ஜில்லா நீதி மன்றங்கள் உண்டாக்கப்பட்டன. ஒவ்வொன்றும், ஒரு நீதிபதி தலைமை யில் செயலாற்றியது. இவற்றிலிருந்து சாதர் திவானி அடா லட்டு என்ற உயர்நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்யலாம். சிறிய வழக்குகள், இந்தியர்களின் பொறுப்பில் இருந்த கீழ் நீதி மன்றங்களால் விசாரணை செய்யப்பட்டன. இப்படி பென்டிங்கின் சீர்திருத்தங்களை எல்பின்ஸ்டன் என்பவர் முன்னறிந்து செயலாற்றினார். அச்சீர்திருத்தங்கள், வங்காளத்தில் கையாளப்பட்டதைப் போல, பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் புகுத்தப்பட்டது.

## தலைமை நீதி மன்றங்கள்

கல்கத்தாவில் ஒரு தலைமை நீதிமன்றம் ஏற்படுத்தப் பட்டதையும், அதன் ஆரம்ப வரலாற்றைக் குறித்தும் முன்பே கூறப்பட்டுள்ளது. 1797-ல் நீதிபதிகளின் எண்ணிக்கை மூன்றாகக் குறைக்கப்பட்டது. அதைப் போன்ற அதிகாரங் களுடனும், அமைப்புடனும், அதிகார வரம்புடனும், 1801-ல் சென்னையில் ஒரு தலைமை நீதி மன்றமும், 1823-ல் பம்பாயில் மற்றொரு தலைமை நீதி மன்றமும் உண்டாக்கப்பட்டன.

1853-ல் இந்நீதிமன்றங்களின் அதிகார வரம்புகள் (அ) ஆங்கிலேயருக்குப் பிறந்த குடிமக்கள், (ஆ) மூன்று நகரங் களின் எல்லைக்குள் வாழ்ந்த மக்கள் அல்லது அவ்விடங்களில் குடியிருக்கும் வீட்டையும் பணியாளர்களையும் பெற்றிருப் பவர்கள், (இ) கம்பெனியின் பணியில் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ இருக்கும் எல்லா மக்கள் ஆகியவர்களுடன் கட்டுப்படுத்தப்பட்டது.

திருத்தி அமைக்கப்பட்ட 1726ஆம் ஆண்டின் ஆங்கிலச் சட்டம், இந்திய அரசாங்கத்தால் செய்யப்பட்ட ஒழுங்கு முறை விதிகள் ஆகிய இவைகளையே மேற்கூறிய நீதி மன்றங்கள் பின்பற்றின. ஆனால், வாரிசு உரிமை, வழியுரிமை, ஒப்பந்தம் சம்பந்தப்பட்ட வரையில், இந்துக்களின் சட்டங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவை இந்துக்களுக்கும், முஸ்லீம் களின் சட்டங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவை முஸ்லீம் களுக்கும் பயன்படுத்தப்பட்டன.

இந்நீதிமன்றங்களின் முடிவுகளுக்குமேல், ஆலோசனை மன்றத்துடன் கூடிய அரசருக்கு அப்பீல் செய்யலாம்; ஆனால், விவாதத்திற்கிடமான தொகை, 4000 ரூபாய்க்கும் அதிகமாய் இருக்கவேண்டும். (பம்பாயில் ரூ. 3000) 1833ஆம் ஆண்டின் சட்டம், ஆலோசனை மன்றத்துடன் கூடிய அரசர் பெற்றிருந்த அதிகார வரம்பு, புதிதாக உண்டாக்கப்பட்ட பிரிவி கவுன்சிலின் நீதிக்குழுவுக்கு மாற்றப்பட்டது. அக்குழு, தலைவர், சான்சலர் பிரபு, மற்றும் வேறு அங்கத்தினர்கள் ஆகியவர்களுடனும் கடல் கடந்த ஆங்கில டொமினியன்களில் நீதிபதிகளாய் இருந்த இருவரையும் கொண்டிருந்தது.

கடைசியாக, இந்தியாவின் நீதி நிருவாகத்தில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க இரண்டு முக்கிய நிகழ்ச்சிகளை நாம் குறிப்பிடலாம். சட்டங்களை முறைப்படுத்துதல், உயர்நீதி மன்றங்களை அமைத்தல் ஆகிய இவை இரண்டும் முக்கிய நிகழ்ச்சிகள். உயர்நீதி மன்றங்களுக்கான அடிப்படை, கம்பெனியின் ஆட்சியின்போது அமைக்கப்பட்டாலும், அதை முடிவுக்குக் கொண்டு வரும் வேலை, இந்தியா, இங்கிலாந்து அரசரின் ஆட்சிக்கு வரும் வரையிலும் தள்ளி வைக்கப்பட்டது.

பலதரப்பட்ட சட்டங்களுக்கும் பழக்கங்களுக்கும் பதிலாக, ஒரு முறையான சட்ட விதித்தொகுப்பை உண்டாக்கும் எண்ணம், பிரிட்டிஷ் வரலாற்றின் ஆரம்பத்திலேயே இருந்தது. பிரிட்டிஷ் டொமினியனில் ஐந்திற்குக் குறையாத மாறுபட்ட சட்டமுறைகள் இருந்தன. அந்த நிலைமை எப்பொழுதும் திருப்தியற்றதாகவே இருந்தது. 1833ஆம் ஆண்டின் பட்டயச்சட்டம், அவற்றை ஒன்று சேர்த்து முறைப்படுத்துவதற்கான வழியைச் செய்தது. அதனால், 1834-ல் ஒரு சட்டக்கமிஷன் நியமிக்கப்பட்டது. அக்கமிஷனுக்கு மெக்காலே (Macaulay) என்பவர் மிக முக்கியமானவராய் இருந்து, இந்தியத் தண்டனை விதித்தொகுப்பை உண்டாக்குவதற்கான வரைவு ஒன்றை வெளியிட்டார். ஆனால், அவர் இந்தியாவை விட்டுச்சென்ற பிறகு, ஒன்றும் செய்யவில்லை. கடைசியில், அக்கமிஷன் நீக்கப்பட்டது.

1853ஆம் ஆண்டின் பட்டயச் சட்டம் ஒரு புதிய கமிஷனை ஏற்படுத்தியது. தலைமை நீதி மன்றத்தையும், சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதி மன்றத்தையும் ஒன்றுசேர்த்து உயர்நீதி மன்றங்களாகச் செய்வதற்கும், இந்த உயர்நீதி மன்றங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவிலிருக்கும் மற்றக் கீழ்

நீதி மன்றங்களுக்கும் உபயோகப்படும்படியான ஒரே மாதிரியான சிவில் வழக்கு நடைமுறை விதித்தொகுப்பு, கிரிமினல் நடைமுறை விதித்தொகுப்பு ஆகியவைகளை உண்டாக்குவதற்கான திட்டத்தைச் சமர்ப்பித்தது.

இந்தச் சிபாரிசுகள் ஒப்புக்கொள்ளப்பட்டன. 1861-ல் ஏற்பட்ட இந்திய உயர்நீதிமன்றச் சட்டம் கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய இடங்களில் தலைமை நீதி மன்றம், சாதர் திவானி அடாலட்டு ஆகியவற்றுக்குப் பதிலாக, உயர் நீதிமன்றங்களை மேற்கூறிய நகரங்களில் அமைப்பதற்கு அதிகாரமளித்தது. இப்படித் தலைமை நீதி மன்றமும் சாதர் திவானி அடாலட்டு என்கிற நீதிமன்றமும், தொண்ணூறு ஆண்டுகளுக்குப்பிறகு மறைந்துவிட்டன. அதே கொள்கையைப் பின் பற்றி அலகாபாதில் ஓர் உயர்நீதி மன்றமும், 1866-ல் பஞ்சாபில் ஒரு முதன்மையான நீதிமன்றமும் அமைக்கப்பட்டன.

மெக்காலேயின் தண்டனை விதித் தொகுப்புத் திருத்தப் பட்டு, 1860-ல் சட்டமாகச் செய்யப்பட்டது. சிவில் வழக்கு நடைமுறை விதித்தொகுப்பும், கிரிமினல் நடைமுறைவிதித் தொகுப்பும், முறையே 1859, 1861ஆம் ஆண்டுகளில் அரசாங்க அறிவிப்பு மூலம் தெரிவிக்கப்பட்டன.

# 9. வாணிபமும் தொழிலும்[1]
# (1757-1857)

பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட முதல் நூற்றுண்டிலே இந்தியா வில் வளர்ந்திருந்த வாணிகமும் தொழிலும் அழிவுற்றது இந்திய வரலாற்றில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகளுள் ஒன்ருகும். இந்த அழிவிற்குப் பிரிட்டிஷ் ஆட்சி எந்த அள விற்குக் காரணமாய் இருந்தது என்பதை அறிய வேண்டின், வங்காளத்திலிருந்து தொடங்குவது அவசியம். ஏனெனில், அவ்விடத்திலேதான் முதன்முதல் ஆங்கில ஆட்சி உறுதியாய் நிறுவப்பட்டது.

வங்காளத்தில் ஐரோப்பிய வாணிகக் கம்பெனிகளின் வாணிகத்தைப்பற்றி முன்னரே குறிப்பிட்டோம். பதினேழாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில், போர்த்துகீசியர்கள், தங்கள் விரிவான அயல்நாட்டு வாணிகத்தை வங்காளத்தில் தொடங்கினுர்கள். ஆனுல், பதினெட்டாம் நூற்றுண்டில் அது மிகச் சுருங்கிக் குறைந்துவிட்டது. டச்சுக்காரர்கள் சிறப்பாக வாணிகத்தை வங்காளத்தில் என்றும் நடத்தியதில்லை.

சந்திர நாகூரின் அதிகாரியாக டியூப்ளே நியமிக்கப்படும் வரையில் பிரெஞ்சுக்காரரின் வங்காளத்து வாணிகம் மிகச்

1. இவ்வரலாறு பற்றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு. எனினும், டாக்டர் சின்ஹா (Dr. J. C. Sinha) என்பவருடைய கருத்தைப் பின்பற்றுவது தான் சிறந்தது என நான் எண்ணுகிறேன். ஏனெனில், முற்பட்ட நூலாசிரியர்களுக்குக் கிட்டாத சில மூலச் சான்றுகள் அவருக்குக் கிட்டின. அவற்றின் துணைகொண்டு அவர் இதனைக் குறித்து நுட்பமாக ஆராய்ந்துள்ளார். இந்த அத்தியாயத்தில் காணப்படும் செய்திகள் பெரும்பாலும் டாக்டர் சின்ஹாவின் வங்காளப் பொருளாதார வரலாறு (Economic Annals of Bengal, Macmillan, 1927) என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவையே.

சுருங்கிய அளவிலேதான் இருந்தது; அதுவும் 1741-ல் அவர் பாண்டிச்சேரிக்கு மாற்றப்பட்டவுடன் மேலும் நலிந்து சீரழிந்தது. டச்சுக்காரர்களும் பிரிட்டிஷ்காரர்களுமே மிகச் செழிப்பான வாணிகத்தை அங்குப் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதி முழுவதிலும் நடத்தி வந்தார்கள். பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சி அதிகாரத்தை வங்காளத்தில் பெற்றவுடன், டச்சுக்காரர்களின் வாணிபம் அழிந்தது. அதனால், வங்காளத்தின் தனி உரிமையை ஆங்கிலக் கம்பெனி பெற்றது. முன்னரே குறிப்பிட்டபடி கம்பெனிக்கு இந்திய வாணிகத்தில் இருந்த தனி உரிமையை 1813ஆம் ஆண்டின் பட்டயச்சட்டம் நீக்கிற்று. 1833ஆம் ஆண்டின் பட்டயச்சட்டம் கம்பெனி செய்த வியாபாரத்தையே அடியோடு நிறுத்திவிட்டது.

ஐரோப்பியக் கம்பெனிகள் நடத்திவந்த வியாபாரத்தைத் தவிர, பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் வங்காளத்தில் நடத்தப்பட்ட உள்நாட்டு, வெளிநாட்டு வாணிபங்கள் மிகப்பெரிய அளவில் இருந்தன. இந்து, ஆர்மீனிய, முகம்மதிய வியாபாரிகள், இந்தியாவின் மற்றப் பாகங்களுடனும், துருக்கி, அரேபியா, பாரசீகம், திபெத்து ஆகிய நாடுகளுடனும், மிகப் பரப்பரப்பான வாணிகத்தை நடத்தி வந்தார்கள். அயல் நாட்டு வாணிகத்தின் கொடுக்கல் நிலை எப்பொழுதும் வங்காளத்திற்குச் சாதமாகவே இருந்தது. எனவே, அதன் ஏற்றுமதிகளின் உபரிமதிப்பிற்கு ஈடாகத் தங்கத்தையே அது பெற்றது. 1708ஆம் ஆண்டிற்கும் 1756ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வங்காளத்திற்குக் கிடைத்த தங்கக் கட்டிகளின் மதிப்பு மொத்த இறக்குமதிகளின் மதிப்பில் நான்கில் மூன்று பங்காய் இருந்தது.

பருத்தி, பட்டு, கச்சாப்பட்டுத் துணி வகைகளும், சீனி உப்பு, சணல், வெடியுப்பு, அபின் முதலியனவும், வங்காளத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட முக்கியப் பொருள்களாய் விளங்கின. மெல்லிய பருத்தித் துணிகள், முக்கிய டாக்கா மஸ்லின் (Dacca muslin) எனப்படும் துணிகள், உலகத்தின் எல்லாப் பாகங்களிலும் தேவைப்பட்டன. வங்காளத்தின் பருத்தித் துணிகளையே ஐரோப்பியக் கம்பெனிகள் பெரிய அளவில் ஏற்றுமதி செய்தன. அவை இஸ்பகான் (Ispahan) நாட்டிற்குத் தரை வழியாயும், பாஸ்ரா (Basra), மோச்சா (Mocha), ஜெட்டா (Jedda) ஆகிய நாடுகளின் சந்தைகளுக்குக்

கடல் வழியாகவும் சென்றன. பதினேழாம் நூற்றாண்டின் மத்தியில் டச்சுக்காரர்கள் முக்கால் மில்லியன் பவுன் மதிப்புள்ள காசிம் பஜார்க் கச்சாப்பட்டை ஆண்டு தோறும் ஜப்பானுக்கு அல்லது ஹாலந்து நாட்டிற்கு ஏற்றுமதி செய்தார்கள். மத்திய ஆசியாவிற்கும், அவை பெரிய அளவில் செய்யப்பட்டன. அலிவர்திகான் காலத்திற்கூட, எழுபது லட்ச ரூபாயை மதிப்புள்ள கச்சாப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டதென்பது, மூர்ஷிதாபாதிலிருந்த சங்க அலுவலகப் புத்தகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஐரோப்பியர் செய்த வாணிகம் அதில் சேர்க்கப்படவில்லை.

சர்க்கரைத் தொழிலுக்கு வங்காளம் மிக முக்கிய இடமாய் விளங்கிற்று. பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியிற்கூட இப்பண்டம் மிகப் பெரிய அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது. 1756ஆம் ஆண்டு வரையில் இது சென்னை, மலபார்க் கடற்கரை, பம்பாய், சூரத்து, சிந்து, மஸ்காட்டு (Muscat), பாரசீக வளைகுடா, மோச்சா (Mocha), ஜெட்டா (Jedda) என்னும் இடங்களுக்கு அனுப்பப்பட்டது. வங்காளத்தின் சணல் தொழிலும், பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து வளர்ச்சி பெறத் தொடங்கியது.

1756ஆம் ஆண்டிற்கூட, 'சோழமண்டலக் கடற்கரை, மலையாளக் கடற்கரை, பாரசீகவளைகுடா, செங்கடல், மணில்லா (Manilla), சீனு, ஆப்பிரிக்கக் கடற்கரை' ஆகியவை மிகப்பெரிய அளவில், வங்காளத்துடன் வாணிகம் நடத்தின என்று பிரபல ஆங்கில நூலாசிரியர் ஒருவர் கூறியிருக்கிறார். அதனால், ஆங்கில ஆட்சி ஏற்படும் வரையில் வளமான வேளாண்மை பொறி வழித்தொழில் ஆகியவற்றால் செல்வச் சிறப்புடன் மிகச் செழிப்புற்றிருந்த வியாபாரம் அவ்விடத்தில் நடந்தது.

பிளாசிப்போர் வங்காளத்தின் அரசியல் வரலாற்றிலும், பொருளாதார வரலாற்றிலும் ஒரு பெரிய 'திருப்பு' மையமாகும். இதனால் உருவான தவறான ஆட்சியும் குழப்பமும், வியாபாரத்தையும் தொழிலையும் மிகக் கடுமையாகப் பாதித்தது. நாட்டில் வறுமை ஏற்பட்டுச் செழிப்பாய் இருந்த வாணிபமும் தொழிலும் அழிவதற்கு மேல்குறித்த காரணங்களன்றி, வேறு பல காரணங்களும் இருந்தன.

## 1. பொருளாதார விரயம்

முதற்கண் அந்நாட்டில் பெரும் பொருளாதார விரயம் ஏற்பட்டது. வங்காளத்தின் ஆட்சியைப் பெறுவதற்காகக் கம்பெனிக்கும், அதனுடைய பணியாளர்களுக்கும் ஏராள மான பணத்தை மீர் ஜாபர் என்பவரும், மீர் காசீம் என்ப வரும் கொடுக்க வேண்டியிருந்தது. 1757ஆம் ஆண்டிலிருந்து 1765ஆம் ஆண்டு வரையில் அவர்கள் கொடுத்த தொகை, ஐந்து மில்லியன் பவுன்களுக்கும் அதிகமாய் இருந்தது. ஆங்கிலக் கிழக்கு இந்தியக் கம்பெனி திவானி உரிமையை 1765ஆம் ஆண்டில் பெற்றது. அவ்வருடத்திலிருந்து அது வங்காள மாகாணத்தின் வருவாயில் உபரியாய் இருந்த பணத்தைக்கொண்டு பண்டங்களை வாங்கி, அவைகளை இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்தது. ஏற்றுமதி செய்யப் பட்ட பண்டங்களின் மதிப்பு, பத்து மில்லியன்களுக்கும் அதிகமாய் இருந்தது இவ்வாண்டிலேதான். இப்படிப்பட்ட பொருளாதார விரயம் கடைசியாக நிறுத்தப்பட்டது. சீனுவுக்குத் தங்கம் ஏற்றுமதி செய்யப்பட்டது. கம்பெனியின் பணியாளர்கள் ஏராளமான பணத்தைச் சொந்தமாகச் சேர்த் திருந்தார்கள். இவற்றில் பெரும் பாகம், எந்த உருவத்தி லாவது இங்கிலாந்தை அடைந்திருக்க வேண்டும். 1757ஆம் ஆண்டிலிருந்து 1780ஆம் ஆண்டு வரையில் வங்காளத்திலிருந்து இங்கிலாந்திற்குச் சென்ற பணத்தின் மதிப்பு முப்பத்தெட்டு மில்லியன் பவுன்கள் இருக்கலாமென மதிப்பிடப்படுகிறது. இச்செல்வம் தங்கமாய் அனுப்பப்பட்டதா என்பது முக்கிய மன்று. ஆனால், அதற்குப் பதிலாக வங்காளம் எதையும் பெற வில்லை என்பதுதான் மதிப்பிடத்தக்கது. உண்மையைக் கூறின், இருபத்து மூன்று ஆண்டுகளுக்குள் வங்காளம் இழந்த தொகையின் மதிப்பு ஏறக்குறைய அறுபது கோடி ரூபா யாகும். (இப்பணம் 1900-ல் முந்நூறு கோடி ரூபாய்க்குச் சமமானது; ரூபாயின் வாங்கும் திறன் அப்பொழுது ஐந்து மடங்கு அதிகமாய் இருந்தது). இப்பெரும் பொருள் விரயம் நாட்டை வறுமையில் ஆழ்த்தி, வாணிகத்தையும் தொழிலையும் கடுமையாகச் சிதைத்து மூலதனச் செல்வத்தைக் குறைத்தது.

## 2. அனுமதிச்சீட்டு

இரண்டாவது, அனுமதிச் சீட்டை (Dastak) தவருகப் பயன்படுத்தியது. வழக்கமாகச் செலுத்த வேண்டிய $2\frac{1}{2}\%$ (சதவிகித) சுங்கவரியைச் செலுத்தாமலிருப்பதற்கான வரி

விலக்கை வங்காளக் கவர்னரான சுஜா (Shuja) என்ற இளவரசரிடமிருந்து கிழக்கிந்தியக் கம்பெனி 1656-ல் பெற்றது. அதற்கு ஈடாக அது ஆண்டுதோறும் ரூ. 3000 கொடுப்பதாக ஒப்புக்கொண்டது. இச்சான்றுகளை முர்ஷித் குலி ஜாபர்கான் (Murshid Quli Jafarkhan) என்பவர் கொடுக்க மறுத்ததால், 1717-ல் பருக்ஸியர் (Farrukhsiyar) என்ற பேரரசரிடமிருந்து ஒரு புதிய பட்டயத்தை ஆங்கிலக் கம்பெனி பெற்றது. அதில் அச்சலுகைகள் புதுப்பிக்கப்பட்டன. நவாபு விதித்த சில நிபந்தனைகளைக் கம்பெனியும் ஏற்றுக்கொண்டது. அதன்படி உள்நாட்டு வியாபாரத்திற்குக் கம்பெனியின் அனுமதிச் சீட்டை அல்லது தஸ்தக்கை உபயோகப்படுத்தக்கூடாது. அவைகளை இறக்குமதிப் பொருள்களுக்கும் கடல்வழியாக அனுப்பப்படும் ஏற்றுமதிப் பொருள்களுக்கும் மட்டுமே உபயோகப்படுத்தலாம்.

ஆனால், இச்சலுகைகள் இரண்டு விதத்தில் தவருகப் பயன்படுத்தப்பட்டன. முதலாவதாக, கம்பெனியின் பணியாளர்கள் தங்களுடைய சொந்த வியாபாரங்களுக்கு அந்தத் தஸ்தக்கை உபயோகப்படுத்தினர்கள், இரண்டாவதாக, இந்திய வியாபாரிகளுக்கு அந்தத் தஸ்தக்கு விற்கப்பட்டது. அதை வைத்துக்கொண்டு இந்திய வியாபாரிகள் சுங்கவரியைக் கொடுக்காமல் தப்பித்துக் கொண்டார்கள். முர்ஷித் குலியும், அலிவர்தியும் மிக்க எச்சரிக்கையோடிருந்தாலும், தவருகப் பயன்படுத்தும் செயல்கள் அதிகரித்தன. அவர்களுக்குப் பிறகு சிராஜ் உத்தெளலா அக்குறையைச் சுட்டிக் காட்டினர். மீர் ஜாபர் பதவிக்கு வந்த பிறகு, அப்பழக்கங்கள் மேலும் அதிகரித்தன. கம்பெனியின் பணியாளர்கள் உள்நாட்டு வாணிகத்திற்கும் தீர்வை விலக்கு உண்டென உரிமை கொண்டாடினர்கள். இதைக்குறித்துக் கல்கத்தாவிலிருந்த ஆங்கிலக் கவர்னரிடம் மிகப் பரிதாபமாக, மீர் ஜாபர் முறையிட்டுக்கொண்டார். ஆனல், அது பயனில்லாமல் போய் விட்டது. இதனல் கம்பெனியின் பணியாளர்கள் வங்காளத்தின் உள்நாட்டு வியாபாரத்தில் தனி உரிமை பெற்று அதிகமான செல்வத்தைச் சேர்த்துக்கொண்டார்கள். ஆதலால், ஏராளமான வருவாயை நவாபு இழக்க நேரிட்டது. நியாயமற்ற இந்தப் போட்டியால், இந்திய வியாபாரிகளும் அழிந்தார்கள். இதற்கும் மிகையாகக் கம்பெனியின் பணியாளர்கள் ஏழைகளைக் கொடுமைப்படுத்தி நேர்மையற்றதும் விரோதமானதுமான ஆதாயங்களைப் பெற்றனர். அவர்களைப் பற்றிக் கம்பெனியின் கவர்னருக்கு, 1762-ல் மீர்காசிம்,

'கம்பெனிப் பணியாளர்கள் பொருள்களுக்குரிய விலைமதிப்பில் நான்கில் ஒரு பாகத்தைக் கொடுத்துவிட்டு அவைகளைப் பல வந்தமாக எடுத்துக்கொள்கிறார்கள். ஒரு ரூபாய் மதிப்புள்ள பொருளுக்கு ஐந்து ரூபாய் தருமாறு மக்களைக் கொடுமைப் படுத்துகிறார்கள்,' என எழுதினார். கம்பெனியின் அலுவலக எழுத்து ஆதாரங்கள் இப்படிப்பட்ட குறைகளை அம்பலப் படுத்துகின்றன. எடுத்துக்காட்டாக, கம்பெனிப் பணியாளர் கேட்ட நியாயமற்ற தொகைகளைக் கொடுக்க மறுத்தவர்கள், 'சவுக்கால் அடிக்கப்பட்டு, சிறையில் அடைக்கப்பட்டார்கள்,' என்பது அப்பத்திரங்களில் காணக்கிடக்கிறது.

இக்கொடிய செயல்களைத் தமக்கு முன்னர் இருந்தோர் எதிர்த்ததைவிட அதிகக் கடுமையாக மீர் காசிம் எதிர்த்தார். எனினும், ஆலோசனை மன்றம் இதை ஒழிப்பதற்கு எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆனால், அவர் எல்லா வியாபாரிகளுக்கும் ஒரே விதமான சலுகை அளிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் உள் நாட்டுத் தீர்வை முழுவதையும் நீக்கிவிட்டார். நாம் முன்னர்ப் பார்த்தபடி இது அவருக்கு ஆங்கிலேயருடன் ஏற்பட்ட பகைக்கு ஒரு மூல காரணமாகிக் கடைசியில் அவர் இதனால் பதவியையும் இழக்க நேரிட்டது.

## 3. கம்பெனி அனுபவித்த உரிமை

கம்பெனி அனுபவித்த தனி உரிமை கம்பெனியின் பணியாள்கள் புரிந்த கொடுமைகளைப் புதுப்பித்தது. முறையாக அதிக அளவில் பருத்தித் துணிவகைகள் கிடைத்ததற்காகக் கம்பெனி நெசவாளருடன் முன்னேக்கியே ஒப்பந்தம் செய்துகொண்டது. அதன்படி குறிப்பிட்ட அளவு துணிகளைக் குறிப்பிட்ட விலைக்கு நெசவாளர்கள் கொடுக்கவேண்டும். கம்பெனிப்பணியாளர் இதனைத் தொல்லைகளைக் கொடுப்பதற்குரிய ஒரு புதிய வழியாக்கிக் கொண்டார்கள். கம்பெனியின் அதிகாரத்தைக் காட்டிக் கொடுமையான பத்திரங்களில் கையொப்ப மிடும்படி ஏழை நெசவாளர்களை வற்புறுத்தினார்கள். 'கையெழுத்திட மறுத்தால் சாட்டை அடி விழும்!' எனவும் அவர்கள் அச்சுறுத்தப்பட்டார்கள். நெசவாளரின் துணிகளுக்கு வழக்கமான விலையைவிட மிகக்குறைவான விலை கொடுக்கப்பட்டது. சில சமயங்களில் நெசவாளர்களுக்குக் கொடுக்கும் பணம், அவர்கள் வாங்கும் பண்டங்களின் விலையைவிடக் குறைவாய் இருக்கும். அவர்கள் மற்றவர் களுக்கு உழைக்கக்கூடாது. மீறினல், தண்டனை விதிக்கப்

படும் எனவும் அச்சுறுத்தப்பட்டார்கள். இது போன்ற கொள்கை, கச்சாப் பட்டுத் தொழிலாளரிடத்தும் பின் பற்றப் பட்டது.

கம்பெனிக்காக நெசவு செய்ய வேண்டும் என்று வற்புறுத்தப்படவே, நெசவாளர் சிலர் அதிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வதற்காகத் தம் பெருவிரல்களை வெட்டிக் கொண்டனர். இக்கதை வங்காளத்தில் பரவிற்று. இது மக்களால் கட்டிவிடப்பட்டதாய் இருக்கலாம். ஆனால், கம்பெனியின் பணியாள்களால் அக்காலத்தில் இந்த ஏழை நெசவாளர்கள் மிகுந்த தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் ஆளாக நேரிட்டது என்பதில் சிறிதும் ஐயமில்லை. வெரலெஸ்ட் (Veralest) என்பாரும் என்றுமில்லாத விதமாய் நெசவாளர்கள் கிடைப்பது அரிதாய் இருக்கிறதென்று 1767-ல் குறிப்பிட்டுள்ளார். பெரும்பான்மையான நெசவாளர்கள் தங்கள் தொழிலைக் கைவிட்டார்கள். இங்ஙனம் கம்பெனி தனி உரிமையைப் பெற்று அதிகாரம் செய்ததாலும், அதனுடைய பணியாள்களின் தவறுதலான நடத்தையாலும், வங்காளத்தில் செழிப்பாய் இருந்த இரண்டு தொழில்களான பட்டு நெசவுத்தொழிலும் பருத்தி நெசவுத் தொழிலும் அழிந் தொழிந்தன. மேலே கூறப்பட்ட இரண்டு தீங்குகளையும் நீக்கி இத்தொழிலை உயிர்ப்பிப்பதற்குக் காரன்வாலிசு பிரபு உண்மையாகவே முயன்றார். ஆனால், இத்தொழில்கள் மறுபடியும் தழைக்க முடியாத அளவிற்குப் பெருத்த கேடுகள் முன்பே செய்யப்பட்டுவிட்டன.

## 4. ஆங்கிலேயர்களின் போட்டி

இங்கிலாந்தின் உற்பத்தியாளரின் நியாயமற்ற போட்டியினால் வங்காள நெசவாளர்களின் அழிவு முற்றுப்பெற்றது. கிழக்கு இந்தியக் கம்பெனியால் ஏற்றுமதி செய்யப்பட்ட பருத்தித் துணிகளையும் பட்டுத் துணிகளையும் இங்கிலாந்து மக்கள் விரும்ப ஆரம்பித்த உடனே பொறாமை கொண்ட பிரிட்டிஷ் உற்பத்தியாளர்கள், அத்தொழிலைச் சட்டத்தின் மூலம் அழிக்க விரும்பினார்கள். 1700, 1720 ஆகிய ஆண்டுகளில் பார்லிமென்டில் நிறைவேற்றப்பட்ட இரண்டு சட்டங்களின் படி, இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பருத்தி பட்டுத் துணிகளை 'இங்கிலாந்தில் அணிந்துகொள்ளவும் முடியாது; வேறு விதத்தில் உபயோகிக்கவும் முடியாது.' ஆனால், மற்ற ஐரோப்பிய நாடுகளில் இவை நன்கு விரும்பப்

பட்டன. அதனால், இங்கிலாந்திற்கு இறக்குமதி செய்யப்பட்ட துணிகள் ஐரோப்பாவின் பல நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

அமெரிக்கச் சுதந்தரப்போர், நெப்போலியப் போர்கள் ஆகியவற்றால், இங்கிலாந்துக்கும் மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையில் ஏற்பட்ட பகை காரணமாக, அந்நாடுகளுக்கு இந்தியத் துணிகளை அனுப்ப இயலவில்லை. அதனால், 1779-ல், வங்காளத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பருத்தித் துணிகள், மிகவும் குறைந்து விட்டன. தவிர, 1780-ல், பிரிட்டிஷ் அச்சுத் தொழிலாளிகளின் வேண்டுகோளின்படி, பத்து ஆண்டுக் காலத்திற்கு வங்காளத்திலிருந்துவரும் அச்சிடப்பட்ட பருத்தித் துணிகளை இறக்குமதி செய்வதைத் தடுப்பதற்கு டைரக்டர்களின் மன்றம் ஒப்புக் கொண்டது.

சட்டத்தின் மூலம் இறக்குமதியைச் செயற்கையாகக் கட்டுப்படுத்தியது, இங்கிலாந்தின் பருத்தித் தொழிலுக்குத் தூண்டுகோலாயிற்று. தொடர்ச்சியான பல புதியன புனைதல் காரணமாக ஆங்கிலப் பருத்தித் துணி உற்பத்தியாளர்கள், தங்களுடைய துணிகளின் தரத்தை உயர்த்தினார்கள். கம்பெனியின் இறக்குமதிகளின் மீது விதிக்கப்பட்ட தீர்வை, சரக்குக் கட்டணம் ஆகியவற்றால், பிரிட்டிஷ் சந்தையில், இந்தியப் பருத்தித் துணிகளின் விலைகளை விடக் குறைந்த விலைக்கு விற்பனை செய்ய ஆங்கில உற்பத்தியாளர்களால் முடிந்தது. அதனால், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்குப் பதிலாகக் கச்சாப் பொருளை—அதாவது, பருத்தியை—இறக்குமதி செய்யும் கொள்கையைக் கம்பெனியின் பற்றியது.

இதன் பிறகு, மான்செஸ்டர் (Manchester) என்னும் நகரத்தில் உண்டாக்கப்பட்ட பருத்தித் துணிகளை வங்காளத்திற்கு அவர்கள் ஏற்றுமதி செய்தார்கள். விசைத்தறி சிறப்பான முறையில் அமைக்கப்பட்டதால், மலிவான பருத்தித் துணிகளை மான்செஸ்டர் என்னும் நகரம், மிகுந்த அளவில் உற்பத்தி செய்யத் தொடங்கியது. அதனால் அவை இந்தியச் சந்தைகளுக்கு ஏராளமாய் வந்தன. 1786, 1790 ஆகிய ஆண்டுகளுக்கிடையே, இங்கிலாந்திலிருந்து ஆண்டுதோறும் ஏற்றுமதி செய்யப்பட்ட பருத்தித் துணிகளின் சராசரி மதிப்பு ஏறக்குறைய 1,200,000 பவுனாய் இருந்தது.

1809-ல் அது 18,400,000 பவுனாய் அதிகரித்தது. அதற்குப்பின் ஏற்பட்ட அதன் முன்னேற்றம் வியப்புத் தரும் அளவுக்கு அதிகமாயிற்று.

காரன்வாலிசின் முயற்சிகளும், ஐரோப்பியப் போரின் முடிவும், வங்காளப் பருத்தித் தொழிலை உயிர்ப்பிக்கத் துணை புரிந்தாலுங்கூட இங்கிலாந்தின் பருத்தித்துணி உற்பத்தி, விசையில் நூல் நூற்பாலும் விசை நெசவாலும் அளவிறந்து வளரவே, வங்காளத்தின் தொழில் அழிந்தது. சட்டம், முன்னேற்றமான முறைகள் ஆகியவற்றை உபயோகப் படுத்தி, வங்காளத் தொழிலைத் தவிர்த்தற்கரிய அழிவி லிருந்து பாதுகாக்க எவ்வித முயற்சியும் செய்யப்படவில்லை.

பிளாசிப்போர் ஏற்பட்ட அரை நூற்றாண்டுக்குள், வியப்பைத்தரும் வங்காளத்தின் வளப்பமான நிலை இவ்விதம் தடுக்கப்பட்டு அழிக்கப்பட்டது. அதிலிருந்து மீள்வதற்கு இந்நாள் வரையிலும் அதனால் இயலவில்லை. வங்காளத்தின் செழிப்பான தொழிலை அழிப்பதற்கும், அதன் உள்நாட்டு வாணிகத்தைத் தனிச் சலுகை பெற்ற ஒரு வகுப்புக்கு மாற்று வதற்கும் காரணமாயிருந்த சூழ்நிலைகள், வாணிபம், தொழில் ஆகியவைகள் உண்டாக்குவதற்கான ஊக்கத்தைக்கூட, வங்காளத்திலிருந்து விரட்டிவிட்டன. ஏராளமான பண விரயத்தினால், மூலதனம் இல்லாத நிலை, பிரிட்டிஷ் மேலாட்சி யின் ஆரம்பக் காலத்தில் ஏற்பட்ட தவறான ஆட்சியினால் நாட்டில் உண்டான குழப்ப நிலை ஆகியவை காரணமாக, வாணிபத்தையும் தொழிலையும் மீண்டும் உயிர்ப்பிக்க இயல வில்லை. அதே சமயத்தில், நிலையான நிலவரித்திட்டம், வேளாண்மைக்கும் நிலத்தில் மூலதனத்தை ஈடுபடுத்து வதற்கும் ஊக்கமளித்தது. இங்ஙனம் தொழில் அழிந்ததால், ஏழை மக்கள் மேலும் மேலும் விவசாயத்தையே நாடும்படி நேரிட்டது. அவர்களுக்குக் கிட்டக்கூடிய மூலதனத்தையும், நிலத்திலேயே ஈடுபடுத்தினார்கள். அதனால், நாட்டின் வாணிகம் ஐரோப்பியர் கைக்கு மாறியது. தங்களுக்குச் சொந்தமான வாணிப முறையையும் பாங்கி முறையையும் அவர்கள் படிப்படியாக உண்டாக்கிக் கொண்டார்கள். இவற்றில் இந்நாட்டு மக்கள் சேர்க்கப்படவில்லை. சுருங்கச் சொன்னால், இப்பொழுது வங்காளத்தில் பரவியிருக்கும் பொருளாதார அமைப்பின் தொடக்கத்தை நாம் இங்கே காணலாம்.

வாணிகம் தொழில் சம்பந்தமாக வங்காளத்தைப் பற்றிக் கூறியது, பொதுவாக இந்தியாவின் மற்றப் பாகங்களுக்கும் பொருத்தமாக இருக்கும். இந்தியா எக்காலத்திலும் தொழில் நிறுவனங்கள் மிகுந்த நாடாய் இல்லை என்ற பொதுவான கருத்து மிகத் தவறான தாகும். நெடுங்காலமாக இந்தியக் கலைகளும் கைத்திறத் தொழில்களும் இந்நாட்டிற்கு ஏராளமான செல்வத்தை உண்டாக்குவதற்குக் காரணமாய் இருந்தன. 'மேற்கு நாடுகளிலிருந்து துணிகர வியாபாரிகள் இந்தியாவிற்கு முதன்முதலாகப் பிற்காலத்திலேதான் வந்தார்கள். அச்சமயத்திற்கூட இந்நாட்டிலிருந்த தொழில் வளர்ச்சி, மிக முன்னேற்றமடைந்த ஐரோப்பிய நாடுகளுக்குக் கீழ்த்தரமாய் இல்லை,' என்று தொழிற்கமிஷனின் அறிக்கை (Industrial Commission Report) கூறுகிறது. இந்தியத் தொழிலில் முற்றுப் பெற்ற பண்டங்களும், முத்து, நறுமணப் பொருள்கள், சாயப்பொருள்கள், வாசனைத் திரவியங்கள், சர்க்கரை, அபின் போன்ற மூலப் பொருள்களும் தொலைவிலுள்ள நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, தங்கம், செம்பு, துத்தநாகம், தகரம், ஈயம், மது, குதிரை முதலியன இறக்குமதி செய்யப்பட்டன. ஆனால், எப்பொழுதும் இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாய் இருந்தது. அதனால், மிகுந்த அளவில் தங்கம் இந்நாட்டிற்குள் கொண்டுவரப் பட்டது. இந்தியாவின் ஆடம்பரப் பொருள்களை உபயோகப் படுத்தியதால், உரோமானியப் பேரரசின் தங்கம் விரயமானதாக, பிளினி (Pliny) என்பவர் முதல் நூற்றாண்டில் குறைபட்டுக்கொண்டார். இப்படிப்பட்ட குறையை, ஆங்கிலேயர்களும், பதினெட்டாம் நூற்றாண்டில் தெரிவித்தார்கள்.

பருத்தி ஆடை, பட்டு, கம்பளி ஆகியவைகளை நெய்வது இந்தியாவின் முக்கியத் தொழில். வங்காளத்திற்கு வெளியில், லக்னோ, அஹமதாபாது, நாகப்பூர், மதுரை ஆகிய நகரங்கள் பருத்தித் தொழிலுக்கு முக்கிய இடங்களாய் இருந்தன. பஞ்சாபிலும் காஷ்மீரத்திலும் மிக நேர்த்தியான சால்வைகள் நெய்யப்பட்டன. பித்தளை, செம்பு, மணி-வெண்கலம் ஆகியவற்றாலான பண்டங்கள் இந்தியா முழுவதும் உற்பத்தி செய்யப்பட்டன. வாரணாசி, தஞ்சாவூர், பூனா, நாசிக்கு, அஹமதாபாது ஆகிய நகரங்கள் இப்பண்டங்களை உற்பத்தி செய்யும் முக்கிய இடங்களாகும். நகைத்தொழில், கல்லிற் சிற்பம் செதுக்குதல், தங்கத்திலும் வெள்ளியிலும் சரிகைச் சித்திர வேலை, சலவைக்கல், சந்தனக்கட்டை, தந்தம், கண்ணாடி இவைகளில் கலைத் திறமை வாய்ந்த வேலைகளைச் செய்தல் ஆகியவை

முக்கியத் தொழில்களாகும். இவைகளைத் தவிர, தோல் பதனிடுதல், நறுமணப் பொருள் செய்தல், காகிதம் செய்தல் போன்ற பலவகைப்பட்ட கலை நுணுக்கக் கைத்திறன் தொழில்களும் இருந்தன.

கடல் துறை வாணிகமும் பெரும்பாலும் இந்தியர்களிடந்தான் இருந்தது. கி. பி. பத்தொன்பதாம் நூற்றுண்டு ஆரம்பம் வரையிலும் கப்பல் கட்டும் தொழில், இங்கிலாந்தைவிட இந்தியாவில் மிக அபிவிருத்தி அடைந்திருந்தது. இந்திய நெசவுத் தொழிலைப்போல இதுவும் ஆங்கில உற்பத்தியாளர்களின் பொருமையைத் தூண்டிற்று. அதனுல், முன்னேற்றமும் அபிவிருத்தியும் சட்டங்களால் கட்டுப்பாட்டினுள் ஒடுக்கப்பட்டன.

வங்காளத்தைப் போலவே, இந்தியாவின் மற்ற இடங்களிலிருந்த வாணிகமும் தொழிலும், பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியில் அழியத் தொடங்கி, பத்தொன்பதாம் நூற்றுண்டின் மத்தியில் முற்றும் மறைந்தன.

அவ்விதம் அழிந்ததற்கு முக்கிய காரணங்கள் வங்காளத்திற்குக் கூறியன போன்ற காரணங்களே. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் கொள்கை, இயந்திரங்களால் உற்பத்தி செய்யப்பட்ட மலிவான பண்டங்களின் போட்டி, இந்தியக் கலைகளையும் கைத்திறன் தொழில்களையும் பாதுகாப்பதற்கு அல்லது ஊக்குவிப்பதற்கு இந்திய அரசாங்கத்தின் விருப்பமின்மை அல்லது ஊக்கம் நல்காமை ஆகியவைகளே அக் காரணங்கள். இந்தியாவின் வாணிபமும் தொழிலும் அழிவுற்றதற்கு இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் ஆட்சி எந்த அளவிற்குப் பொறுப்பானது என்பது விவாதத்திற்கு உரிய ஒரு பிரச்சினை, விசையின் உதவியால் நூற்றலையும் நெய்தலையும் நடத்தி, பருத்தித் துணிகளை உற்பத்தி செய்வதற்கு வழி வகுத்த இங்கிலாந்தின் தொழிற் புரட்சிதான், இந்தியப் பருத்தித் தொழில் அழிந்ததற்குக் காரணம். இந்தத் தொழிலை வெற்றிகரமாகப் பாதுகாக்க ஆட்சியில் இருப்பவர்களால் இயலாது; ஏனெனில், விசையினுல் உற்பத்தி செய்வதற்கும், கைகளினுல் உற்பத்தி செய்வதற்கும் இடையில் உள்ள மிகப் பெரிய ஏற்றத்தாழ்வை ஈடு கட்டுவதற்கு இயலவில்லை என்று நூலாசிரியர் சிலர் நினைக்கின்றனர். இந்நோக்கத்தைக் கொண்டிருக்கும் ரஷ்புரூக் வில்லியம்ஸ் (Rushbrook Williams) என்பவர், பின்வருமாறு கூறுகிறுர் :

'அளவுகடந்த புதிய அனுகூலங்களைப் பெற்று விசையால் நடத்தப்படும் பிரிட்டிஷ் தொழிலுக்கு எதிராக, இந்தியப் பருத்தித் துணி உற்பத்தியாளர்களைப் பாதுகாப்பதற்கு எவ்வித முயற்சியும் செய்யவில்லையென, பிரிட்டிஷ் அதிகாரிகளின்மீது குறைகூறுவோர், அக்காலத்தில் இருந்த ராஜதந்திரிகள், புதிய காலக் கண்கொண்டு இப்பிரச்சினைகளை நோக்கினர்கள் என்று கருதுவோராவர்.'

இங்கிலாந்தின் தொழிற்புரட்சி 'இந்தியாவின் செல்வத்தைக் கொள்ளை கொண்டதன் விளைவாகத்தான்' ஏற்பட்டது. அழிந்து கொண்டிருக்கும் இந்தியத் தொழில்களைப் பாதுகாப்பதற்கு பிரிட்டிஷ் அதிகாரிகள் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்பதோடு, அவற்றிற்குத் தடைகளை ஏற்படுத்தி, இங்கிலாந்தின் உற்பத்தியாளர்களை மேம்பாடு அடையச் செய்வதற்காகச் சில சந்தர்ப்பங்களில் இந்திய உற்பத்தியாளர்களின் ஊக்கத்தைக் கெடுத்தார்கள் என்று சிறந்த இந்திய ஆங்கில நூலாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ரஷ்புரூக் வில்லியம்ஸ் என்பவர் இறுதியாகக் குறிப்பிட்ட கருத்துரையைப் பற்றிச் சொல்ல வேண்டுமானல், இந்தியப் போட்டியிலிருந்து ஆங்கிலத் தொழிலைச் சட்டத்தின் மூலம் பாதுகாக்கும் புதியகாலப் பொருளாதார முறையைப்பற்றி, 1700ம் ஆண்டிலேயும் (அதற்குப் பிறகும்) அறிந்திருந்தார்கள் என்பதை நினைவுபடுத்துவது அவசியமாகும். அதைப்போன்ற நடவடிக்கைகளை எடுத்து, இந்தியத் தொழிலைப் பாதுகாப்பதற்கு வேண்டிய இராஜ தந்திரம் இங்கு இருந்துங்கூட, அப்படிச் செய்யாததற்கு இந்தியத் தொழிலை அழித்து அதன் மூலம் ஆங்கிலத் தொழிலை மேம்பாடு அடையச் செய்ய வேண்டும் என்று ஆட்சியில் உள்ளவர்களுக்கு இருந்த விருப்பந்தான் காரணமாகும். ஆங்கிலப் போட்டி என்னும் கடலெழுச்சியை வெற்றிகரமாகத் தடுத்து நிறுத்த முடியுமா என்ற நேர்மையான ஐயம் எழக்கூடும். ஆனல், அது ஒரு கற்பனைக் கேள்வியாய் இருப்பதால், இவ்விடத்தில் விவாதிக்க முடியாத பல முக்கியப் பிரச்சினைகளை அது எழுப்புகிறது. உலக வாணிகத்திலும் தொழிலிலும் புகழ் பெற்ற தலைமை நிலையை இரண்டாயிரம் ஆண்டுகளாகப் பெற்றிருந்ததைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியில் இந்தியா

இழந்தது. தவிரவும், கச்சாப் பொருள்களை உற்பத்தி செய்யும் தோட்டமாகவும், முற்றுப்பெற்ற மலிவான பொருள்களை மேற்கிலிருந்து கொண்டுவந்து குவிக்கும் இடமாகவும் இந் நாடு படிப்படியாக மாற்றப்பட்டது. மில்லியன் கணக்காக இருக்கும் மக்களின் நலத்திற்குப் பொறுப்பான அரசாங்கம் இவ்வளவு காலம் வரையிலும் பார்த்துக்கொண்டு இருந்ததே தவிர, இவற்றைத் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கையை எடுக்கவில்லை.

# 10. புதிய இந்தியாவின் தோற்றம்

## 1. புதிய இந்தியாவும், ராஜாராம் மோகன்ராயும்

அரசியல் குழப்பமும், பொருளாதாரப் பின்னடைவும் இருப்பினும், இந்தியாவில் ஏற்பட்ட பிரிட்டிஷ் ஆட்சியின் முதல் நூற்றாண்டு (1757-1858) சில முறைகளில், வரலாற்றில் குறிப்பிடத்தக்க திரும்பு முனையாய் அமைந்திருக்கிறது. இக்காலத்தில் அறிவு இயக்கம், குறிப்பிடத்தக்க வகையில் திடீரெனத் தோன்றியது. இதனால், சமூக சமயக் கொள்கை களில், தீவிர மாறுதல்கள் ஏற்பட்டன. இவை காரணமாக, இந்தியா 'இடைக்' காலத்திலிருந்து, 'புதிய' காலத்திற் புகுந்தது.

இம்மாற்றம் இந்நாட்டில் ஆங்கிலக் கல்வி புகுத்தப்பட்ட தால், ஏற்பட்டது. இக்கல்வி மூலமாக, மேலை நாடுகளிலிருந்து வந்த பரந்த மனப்பான்மைக்குரிய கருத்துக்கள் மக்களைக் கவர்ந்தன. நெடுங்காலமாய் உறக்கத்திலிருந்த மக்களை இக்கருத்துகள் விழிப்புறச் செய்தன. அவர்கள் பழமையைச் சாடி, எதிர்காலத்தைப் பற்றிய புதிய நம்பிக்கை ஒளியைப் பெற்றார்கள். சமுதாயத்தில், புது விழிப்புணர்ச்சிக்குரிய அறிகுறிகள் தென்படலாயின. பக்தியும் நம்பிக்கையும் இருந்த இடத்தில், ஆராய்ச்சியறிவும் பகுத்தறிவும் ஏற்பட்டன. மூடநம்பிக்கை ஒழிந்து, விஞ்ஞான உணர்வு தலைதூக்கியது. சமுதாயத்தில் இருந்த தேக்கநிலை மாறி, முன்னேற்றம் அடைவதற்கான வழி ஏற்பட்டது. நெடுங் காலமாகவே மக்கள் உணர்ச்சியற்ற நிலையில், மந்தமான வாழ்க்கையை நடத்தி வந்தமையால், சமுதாயத்தைக் கேடுகள் சூழ்ந்தன. அக்கேடுகளைக் களைந்தெறியும் ஆர்வ மில்லாமல் அவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ளும் உணர்வே பெருகியிருந்தது. இக்குறைகளை நீக்கிச் சீர்திருத்தம் செய்

வதற்கான ஆர்வம், மக்களிடையே உருவாகியது. மரபு வழக்குப்படி, சாத்திரங்களில் கூறப்பட்ட பொருள், திறனாய்வு செய்யப்பட்டு, ஒழுக்கம் சமயம் ஆகியவைகளுக்குப் புதிய விளக்கங்கள் தரப்பட்டதால், பழைய நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் காலத்திற்குத் தகுந்தவாறு புதிய முறையில் மாற்றி அமைக்கப்பட்டன.

இப்புதிய கருத்துகள், முதலில் ஒரு சிலரிடத்திலேதான் காணப்பட்டன. ஆனால், படிப்படியாக, இவை பெரும் பகுதியான மக்களிடையே பரவி, இறுதியில் எல்லாரும் இவற்றைக் குறைவாய் அல்லது அதிகமாய் ஏற்றுக் கொள்ளும் நிலை நேரிட்டது.

இக்காலத்தின் புதிய உணர்ச்சிகளைச் சிறந்த பெரியாரான **ராஜாராம் மோகன்ராய்** அவர்களின் வாழ்க்கை வரலாறும் தெளிவாக விளக்குகின்றது. அவர் மறைவின் (1883) நூற்றாண்டு நினைவு நாள், அண்மையில், இந்தியாவெங்கும் கொண்டாடப்பட்டது.

கடவுளின் ஒருமைப்பாட்டை உபதேசித்து, ராஜா தம்முடைய சீர்திருத்தச் செயல்களைத் தொடங்கினார். இந்தியர் பல கடவுளரைத் தொழுவதையும், விரிவான சடங்குகளுடன் கூடிய உருவ வழிபாடு செய்வதையும் அவர் சாடினார். அவருடைய கருத்துகள், பழையனவும் உண்மையானவையுமான இந்து சமய நூல்களை ஒட்டியவை என நிரூபிப்பதற்கு அவர் முயன்றார். அவற்றிலிருந்து மாறுபட்டிருக்கும் புதிய காலக் கருத்துகளுக்குப் பிற்காலத்தில் ஏற்பட்ட மூட நம்பிக்கைகளே காரணம் என்றும், அவற்றுக்கு ஒழுக்க அடிப்படையோ அன்றிச் சமய அடிப்படையோ இல்லை என்றும் அவர் கூறினார். ராம் மோகனரின் கொள்கைகள் இந்து சமுதாயத்தை அதிரச் செய்தன; அதனால், கடுமையான கருத்து வேறுபாடுகள் எழுந்தன. தம்முடைய கோட்பாடுகளை உறுதிப்படுத்துவதற்காக, ராம்மோகனர் பண்டைக் காலச் சமய நூல்களை வங்காள மொழியில் மொழி பெயர்த்து வெளியிட்டார்; மேலும், சமயத்தைப் பற்றிய சிறிய கட்டுரைகளை ஏராளமாக வங்காள மொழியில் வெளியிட்டு, தன்னந் தனியாக இப்போராட்டத்தை நடத்தினார். அவருடைய சமயக் கருத்துகளை மேலும் பரப்புவதற்காக, வாழ் நாளின் இறுதிக் கட்டத்தில், 1828-ல் ஒரு நிறுவனத்தை அவர் உண்டாக்கினார். இந்த நிறுவனம் இறுதியில் பிரம்ம

**சமாஜமாய்** வளர்ந்தது. இதைப் பற்றிப் பின் வரும் அத்தியாயத்தில் நாம் பார்ப்போம். அவரது போராட்டத்தினால், வங்க இலக்கியமும், வங்கப் பத்திரிகைத் தொழிலும் தூண்டப்பட்டு மிகவும் வளர்ச்சியடைந்தன.

ஆங்கிலக் கல்வியில் இந்தியருள் முன்னோடியாய் ராம் மோகனர் திகழ்ந்தார். இந்தக் கல்வியைப் பரப்புவதற்காக, அவர் பல நிறுவனங்களை ஏற்படுத்தினார். இப்பணியை ஏற்றுக்கொண்ட மற்றவர்களுக்கும், அவரது உதவி எப்பொழுதும் கிட்டியது.

இந்து சமுதாயக் கேடுகளை முக்கியமாகச் சாதிக் கொடுமைகள், பெண்களின் இழிவான நிலை ஆகியவைகளை எதிர்த்துச் சீர்திருத்தம் செய்யும் நடவடிக்கைகளை அவர் ஆரம்பித்தார். கணவனை இழந்தவள் உடன்கட்டை ஏறும் வழக்கத்தை ஒழிப்பதற்கு அவர் செய்த முயற்சிகளைப் பற்றிப் பிறகு கூறப்படும். கைவிடப்பட்ட கைம்பெண்களின் அவல நிலையைப் போக்குவதற்காக, அவர் பல வகைகளில் உழைத்தார். பெண்களுக்கு வழியுரிமை வழங்கும் இந்து சட்டத்தை, அவர்களுக்குச் சாதகமாக மாற்றியும், தகுந்த முறையில் கல்வியைப் போதித்தும், அவர்களுக்கு உதவினார். வங்காளத்தின் சமுதாய முறையில் இருந்த பல கேடுகளை—முக்கியமாகப் பல தார மணம் செய்துகொள்ளும் வழக்கத்தை—அவர் எதிர்த்தார். குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் கைம்பெண்கள் மறுமணம் புரிவதை அவர் ஆதரித்தார். பெண்மையைப் பற்றிய மிகச் சிறந்த நோக்கங்கள், அவைகளை அடைவதற்கு ஆடவர் செய்யக்கூடிய கடமை, இவைகளை வலிமை மிக்க மொழியில் சிறு சமய நூல்கள் வாயிலாக அவர் வெளியிட்டு மக்களுக்கு உணர்த்தினார். அவருடைய கொள்கைகள், அவர் காலத்திற்கு மிகவும் முற்பட்டனவாய் இருந்தன. பொற்கால இந்தியாவின் நினைவுகளால், அவைகள் தூண்டப்பட்டன. பெண்களின் உரிமையை ஆதரித்தும், சாதிச் சட்டங்களின் கொடுமையைக் கண்டித்தும், இந்தியாவில் சமுதாயச் சீர்திருத்தம் செய்வதற்கான அடிப்படைக் கொள்கைகளை அவர் உண்டாக்கினார். அவருக்குப் பிறகு இவ்விரண்டு முக்கிய வழிகளைப் பின்பற்றியே எல்லாச் சமுதாயச் சீர் திருத்தங்களும் உண்டாயின.

இந்திய அரசியலிற்கூட, புதிய காலத்தின் தீர்க்க தரிசியாராய் ராஜாராம் மோகனர் விளங்கினார். சட்ட

திட்டங்களுக்குட்பட்டு, அரசியல் கிளர்ச்சி செய்வதற்கான வழிகளையும் அவர் வகுத்துத் தந்தார். இக்கிளர்ச்சிகளின் பயனாக, அரை நூற்றாண்டிற்குப் பிறகு இந்திய தேசியக் காங்கிரஸ் உண்டாயிற்று. அரசியல் பிரச்சினைகளைப் பற்றிய அவருடைய கருத்துகள் வியப்புக்குரிய வகையில் புதிய காலக் கருத்துகளாய் விளங்கின; சில முக்கியக் கூறுகளில் அவை பத்தொன்பதாம் நூற்றாண்டில் இருந்த இந்திய அரசியற் கோட்பாடுகளின் உயர்ந்த வளர்ச்சியைக் காட்டுகின்றன.

தமது ஆன்மாவின் உறுதியான பேரார்வத்திற்குச் சமமாக, விடுதலையை விரும்புவதும், நாகரிகமடைந்த மற்ற மக்களைப்போல முன்னேற்றம் அடைவதற்கான ஆற்றல் இந்திய மக்களுக்கும் இருக்கிறது என்பதுமே ராம் மோகனருடைய அரசியலின் அடிப்படைக் கொள்கைகள். அவருடைய அரசியற் கொள்கைகளைப் பற்றி, அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஆங்கிலேயர் ஒருவர் பின் வருமாறு குறிப்பிடுகின்றார்:

"இந்தியா, கல்வியிற் சிறந்திருக்க வேண்டும்; ஐரோப்பா அடைந்திருக்கும் பண்பட்ட அறிவு நிலையை இந்தியாவும் அடைய வேண்டும்," என்ற எண்ணம், ராம் மோகனருடைய மனத்தில் எப்பொழுதும் நிலைத்திருந்தது; நாகரிக வளர்ச்சியினால் ஏற்பட்ட அரசியல் உரிமைகளைத் தம் நாட்டவருக்கும் கொடுக்க வேண்டுமென அவர் முன்னாடியே வாதிட்டார். இதிலுங்கூட, மக்களின் தலைவராயும், புதிய இந்தியாவின் தீர்க்கதரிசியாராயும் ராம் மோகனர் விளங்கினார்.'

அக்காலத்திலிருந்த அரசியற் கருத்துகளை விளக்குவதற்காக, அவர் கொண்டிருந்த சில திடமான கொள்கைகளைப் பார்ப்போம்:

ராம் மோகனர் பத்திரிகைச் சுதந்தரத்தை ஆதரிக்கும் மிகப் பெரிய வீரராய்த் திகழ்ந்தார். பத்திரிகைகளை வெளியிடுவதற்கு முன்னரே அவற்றைக் கடுமையான முறையில் குறை ஆய்வு செய்யும் முறை 1799ஆம் ஆண்டிலிருந்து பின் பற்றப் பட்டது. 1817-ல் ஹேஸ்டிங்ஸ் பிரபு குறை ஆய்வு செய்யும் முறையை நீக்கிவிட்டார். ஆனால், அதற்குப் பதிலாகச் சில விதித் தொகுப்புகளை அவர் வெளியிட்டார். அவை பல செயல்களைத் தடுத்ததுடன், குறிப்பிட்ட சில செய்திகளை விவாதிக்கக்

கூடாதெனத் தடுத்தன. ஹேஸ்டிங்ஸ் பிரபு ராஜிநாமாச் செய்த பிறகு கவர்னர்-ஜெனரல் பதவியைத் தாற்காலிகமாய் ஏற்ற ஆடம் (Mr. Adam) என்பவர், 'அரசாங்கத்தின் அனுமதியைப் பெருமல், பத்திரிகைகள் அல்லது மற்றச் செய்தித்தாள்களை வெளியிடக்கூடாது' எனச் சட்டங்கள் மூலமாகத் தடுத்தார். புதிய பத்திரிகை விதித் தொகுப்புகளை எதிர்த்து, தலைமை நீதிமன்றத்திற்கும், அரசர் உள்ளிட்ட ஆலோசனைச் சபைக்கும், ராஜாராம் மோகன்ராய் விண்ணப்பம் செய்தார். இவ்விண்ணப்பங்கள் தள்ளப் பட்டாலும், 'இந்தியப் பண்பாட்டு நிலையின் முன்னேற்றத் திற்கு ஒரு முக்கிய நிகழ்ச்சியாய்' விளங்குகின்றன.

ஆங்கில மொழியிலுள்ள அவர் வாழ்க்கை வரலாற்றி லிருந்து சிலவற்றை இங்கு நாம் எடுத்துக் கூறலாம்: 'ராம் மோகனர் எழுதிய இவ்விண்ணப்பம், ஆங்கில மொழியில் உள்ள மிகச் சிறந்த பகுதிகளுள் ஒன்ருய்த் திகழ்கிறது. இதனுடைய கம்பீரமான வாக்கியங்களும், உயர்வான நோக்கங் களும் ஒரு நூற்றுண்டிற்கு முன்னிருந்த பெரிய சொற்பொழி வாளர்களின் சொல் வன்மையை நமக்கு நினைவூட்டுகின்றன. பத்திரிகைச் சுதந்தரத்தை மிக மேன்மையான முறையில் எப்பொழுதும் ஆதரித்து நிற்கின்ற இதன் மொழியும், அம்மொழி எழுதப்பட்ட முறையும், ஆங்கில அதிகாரத்தின் நியாயமற்ற செயலுக்கு எதிராக பிரிட்டிஷ் வரலாற்றில் மிகத் தெளிவாக இருக்கும் பத்திரிகை மரபு, கொள்கைகள் ஆகியவைகளை எடுத்துக் காட்டின.' பத்திரிகைச் சுதந்தரம் பெறுவதற்காக ராம் மோகனர் செய்த பெருமுயற்சி பலன் அளித்தது. ஆனல், அதைக் காண்பதற்கு அவர் உயிரோடு இருக்கவில்லை. 1835-ல் **சர் சார்ல்ஸ் மெட்காப்** என்பவர் பத்திரிகைகளின் மீதிருந்த எல்லாவிதமான கட்டுப்பாடு களையும் நீக்கிவிட்டார்.

ராம் மோகனர், 1827-ல் உண்டாக்கப்பட்ட சான்று ஆய்பவர்களின் சட்டத்தை (Jury Act) எதிர்த்தும், இப்படிப் பட்ட விண்ணப்பங்களைக் கொடுத்தார். அச்சட்டத்தின் விதிகளைப்பற்றியும், அவர் எதிர்த்ததற்கான காரணங் களையும் பின்வரும் பகுதியிலிருந்து காணலாம். 'கட்டுப்பாடு செய்யும் கழகத்தின் முன்னுள் தலைவரான **வயின்** (Mr. Wynn) என்பவர், சான்று ஆய்பவர்கள் மசோதாவைப் பாராளு மன்றத்தில் நிறைவேற்றினர். அதில் இந்நாட்டு நீதி மன்ற முறைகளில் சமயவேற்றுமையைப் புகுத்தி இந்நாட்டு

மக்களிடையே அதிருப்தி உண்டாவதற்கு வழிகோலினர்; அதோடு அரசியற் கொள்கைகளை அறிந்த ஒவ்வொருவர் மனத்திலும் அச்ச உணர்ச்சியை உண்டாக்கினர். இந்து அல்லது முகமதிய சுதேசிகளுள் எவரையும், சுதேச அல்லது ஐரோப்பியக் கிறிஸ்தவர்கள் நியாய விசாரணை செய்வதற்கு இம்மசோதா அனுமதிக்கிறது. ஆனால், கிறிஸ்தவர்களை அல்லது கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றப்பட்ட சுதேசிகளைச் சமூகத்தில் மிக உயர்வாக எண்ணப்படும் ஓர் இந்து அல்லது முகம்மதிய சான்று ஆய்பவர் விசாரணை செய்வது இழிவு எனக் கருதப்பட்டதால், அவர்களுக்கு விதி விலக்கு அளிக்கப் பட்டது. தங்களுடன் இருக்கும் இந்துக்கள் அல்லது முஸல் மான்கள் விசாரணை செய்யப்படும்போது, பெரிய ஜூரியில் (Grand Jury) அமர்ந்து தீர்ப்புக் கூறும் கௌரவத்தை இந்துக் களுக்கும் முகமதியர்களுக்கும் கொடுப்பதற்கு இம்மசோதா மறுக்கிறது. இவைகளே, காலஞ்சென்ற வயின் என்பவர் உண்டாக்கிய மசோதாவின் முக்கிய விதிகள். இவற்றைக் குறித்துதான் நாங்கள் கடுமையான முறையில் குறை கூறுகிறோம்.'

இந்தியாவை ஆட்சி செய்வதற்கு உதவும் அரசியல் அமைப்பைப்பற்றி ராம் மோகனர் தெளிவாக அறிந்திருந்தார். இங்கிலாந்தின் பாராளுமன்றம், கம்பெனியின் பட்டயத்தை 1833-ல் புதிப்பிக்க ஆலோசனை செய்துகொண்டிருக்கும் சமயத்தில், அந்நாட்டு அதிகாரிகளுக்கு இந்தியாவின் கருத்துகளை எடுத்துக் கூறுவது மிகவும் அவசியமென அவர் உணர்ந்தார். அவர் இங்கிலாந்திற்குச் செல்வதற்குரிய காரணங்களுள், இது ஒரு முக்கிய காரணமாகும். மக்கள் சபையால் தேர்ந்தெடுக்கப்பட்ட குழுவிடம் அவருடைய கருத்துகளைக் கூறுமாறு அவர் அழைக்கப்பட்டார். அவருடைய கருத்துகளை அவரே நேரிடையாகக் கூறுவதற்கு விரும்பாவிட்டாலும், அவற்றைக் 'கட்டுப்பாடு செய்யும் கழகத்திற்கு எழுதிய பல கடிதங்கள் மூலமாக' அவர் வெளி யிட்டார். அக்காலத்தில் மிகத் தீவிரமாக விவாதிக்கப்பட்ட பிரச்சினைகளைப்பற்றி ராஜாராம் மோகனர் அவர்களும் அவர் காலத்திலிருந்த முன்னேக்குள்ள இந்திய அறிஞர்களும் ஏவ்விதமான கருத்துகளைக் கொண்டிருந்தார்கள் என்பதை அறிவதற்கு இந்தக் கடிதப் போக்குவரத்து, நமக்குப் பயன் படுகிறது.

குடிகளின் உரிமையை மிகத் தீவிரமாக ராம் மோகனர் ஆதரித்தார். நிலையான நிலவரித் திட்டத்தினல், ஜமீந்தார்

களின் செல்வம் அதிகரித்தாலும், பயிரிடுபவர்களிடமிருந்து அதிக வரியை வாங்கியதால், குடியானவர்கள் மிக்க இன்னல் களுக்காளானூர்கள் என்பதை அவர் குறிப்பிட்டார். ஜமீந் தார்கள் ஆங்கிலேயர்களுக்குச் செலுத்தும் நிலவருவாயைக் குறைத்து, அதன் மூலம் பயிரிடுபவர்களிடமிருந்து அவர்கள் பெறும் தீர்வையைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்றும் அவர் வாதாடினூர். இம்முறையால் ஆங்கிலேயர்களுக்கு ஏற்படும் வருவாய் இழப்பைப் போக்குவதற்கு, ஆடம்பரப் பொருள்கள்மீது வரியை விதிக்கலாமென்றும், அல்லது கொழுத்த சம்பளத்தில் ஐரோப்பியர்களைக் கலெக்டர் வேலைக்கு நியமிப்பதற்குப் பதிலாகக் குறைந்த சம்பளத்தில் இந்தியர்களைக் கலெக்டர்களாக நியமிக்கலாமென்றும் அவர் யோசனை கூறினூர். நிலையான நிலவரித் திட்டத்தை ராம் மோகனர் ஆதரித்தாலும் ஒவ்வொரு குடியானவனும் கொடுக்கக்கூடிய மிக உயர்ந்த தீர்வையை அரசாங்கம் குறிப் பிடவேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினூர்.

பிரிட்டிஷ் இந்தியப் படையை இந்திய மயமாகச் செய்தல், சான்று ஆய்பவர்கள் மூலமாக நீதிமன்ற விசாரணை செய்தல், நீதிபதி மாஜிஸ்ட்ரேட்டுப் பதவிகளைத் தனியாகப் பிரித்தல், சிவில் கிரிமினல் சட்டங்களைத் தொகுத்தல், புதிய சட்டங் களைச் செய்வதற்கு முன்பு இந்தியத் தலைவர்களைக் கலந் தாலோசித்தல், நீதிமன்றங்களில் பாரசீக மொழிக்குப் பதிலாக ஆங்கில மொழியை நிருவாக மொழியாக்குதல் ஆகியவை ராம் மோகனர் கொண்டிருந்த கருத்துகளில் மிகச் சிறந்தனவாகும் என்று கூறலாம்.

'பத்தொன்பதாம் நூற்றுண்டிலேதான் இந்தியர்களை உயர்வுறுத்துவதற்கான முக்கிய இயக்கங்கள் எல்லாம் தோன்றின. அவற்றிற்கு வேண்டிய அடிப்படைகளை ராம் மோகன்ராய் அமைத்தார்,' என்னும் உண்மை, மேற்குறித்த செயல்களை நோக்கும்போது புலனுவதோடு அது நியாய மானது என்பதும் புலப்படும். அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஆங்கிலேயர் ஒருவர் அவரைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறுர்: 'அறிவு ஊட்டக்கூடிய விதத் திலும், சிந்தனையைத் தூண்டக்கூடிய இயல்பிலும், புதிய இந்தியாவை அறிந்துகொள்வதற்கு ராம் மோகனர் அவர்கள் உதவியாய் இருக்கிறுர்; அவர் புதிய இந்தியாவின் சின்ன மாயும், முன்னேடியாயும் திகழ்கிறுர். புதிய உணர்ச்சி அதனுடைய ஆராயச்சிச் சுதந்தரம், விஞ்ஞான அறிவைப்

பெறுவதற்கான அதன் ஆர்வம், மனிதனுக்குரியதான பரந்த இரக்கக் குணம், அதன் தூய்மையானதும் ஆராய்ந்து எடுக்கப்பட்டதுமான அறவியல் (Ethics); பழைமையைப் போற்றக் கூடிய, ஆனால் அதைத் திறனாய்ந்து பார்க்கக்கூடிய மனப்பான்மை, பழைமையை எதிர்த்துக் கிளர்ச்சி செய்வதற்கு விருப்பமின்மை ஆகியவற்றுக்கு உருவம் அளிப்பவராயும் அவர் இருக்கிறார்.'

## 2. ஆங்கிலக் கல்வியைப் புகுத்துதல்

ஆங்கிலேயர்கள் வங்காள ஆட்சியைக் கைப்பற்றிய போது, எல்லா உயர்தரக் கல்விகளையும் இலக்கியக் காலச் சம்ஸ்கிருதம், அராபி, பாரசீகம் ஆகியவைகளையும் மட்டும் தோல்கள் (Tols), மத்ரஸாக்கள் (Madrasas) என்னும் பள்ளிகள் கற்பிப்பதோடு நின்றுவிட்டன. தாய் மொழிகள் புறக்கணிக்கப்பட்டன. இயற்கை விஞ்ஞானம் (Natural Science), கணிதம், வரலாறு, அரசியல், தத்துவம், பொருளாதாரம், பூகோளம் ஆகியவைகள், மாணவர்களின் பாடத் திட்டத்தில் இடம் பெறவில்லை. இலக்கணம், பழைய இலக்கியங்கள், அளவை இயல் (Logic) தத்துவம், சட்டம், சமய நூல்கள் ஆகியவைகளே, உயர்தரக் கல்வியின் முக்கிய மூலக் கல்விகளாய் விளங்கின. பாடசாலைகளிலும் (Patasalas), மக்தாபுகளிலும் (Maktabs) தொடக்கக் கல்வி புகட்டப்பட்டது. எண்ணும் எழுத்தும் படிப்பும், சமயக் கட்டுக் கதைகளும் புராணக் கதைகளும் அவ்விடங்களில் கற்றுத் தரப்பட்டன. இந்தியாவுக்கு வெளிப்புறத்தில் இருக்கும் உலகத்தைப் பற்றியும் மறுமலர்ச்சிக்குப் (Renaissance) பிறகு ஐரோப்பாவில் ஏற்பட்ட முன்னேற்றங்களைப்பற்றியும் இந்தியர்கள் அறியவில்லை; அறிவதற்கு விருப்பமும் கொள்ளவில்லை. கல்வி, அறிவு சம்பந்தமான முன்னேற்றம் ஆகியவற்றில் இந்தியா, ஐரோப்பாவின் இடைக்காலத்திற்குச் சமமான ஒரு காலத்தில் இருந்தது.

ஆங்கில அரசாங்கம், முதலில் கல்வி வளர்ச்சியில் அதிக அக்கறை காட்டவில்லை. இந்தியாவின் கல்வியை மறுபடியும் நல்ல நிலைக்குக் கொண்டுவரும் முயற்சிகளை வாரன்ஹேஸ்டிங்ஸ் ஆதரித்தார். கல்கத்தாவில் மத்ரஸா (1781) ஏற்பட்டதற்கு அவர் பெரிதும் காரணராய் இருந்தார். இவ்வுணர்ச்சியால் தூண்டப்பட்டு, சர் வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) என்பவரும் 1784-ல் **வங்காள ஆசியச் சங்கத்தைக்**

(Asiatic Society of Bengal) கல்கத்தாவில் ஏற்படுத்தினர். வாரணசியில் ரெஸிடென்டாய் இருந்த ஜொனதன் டங்கன் (Jonathan Duncan) என்பவர், அவ்விடத்தில் ஒரு சம்ஸ்கிருதக் கல்லூரியை, 1792-ல் உண்டாக்கினர். ஆனல், அரசாங்க மேற்பார்வையில் - அல்லது கட்டுப்பாட்டின் கீழ் - ஒரு கல்வி முறையை ஏற்படுத்தும் திட்டமோ, அன்றி, உத்தேசமோ, அவர்களுக்கு இல்லை.

ஆங்கில மொழியைக் கற்றுத் தருவதற்காகப் பல பள்ளிகளை ஏற்படுத்தும் கருத்தைக் கம்பெனியின் சிவில் பணியாளரான **சார்லஸ் கிரான்டு** என்பவரே முதன்முதலில் வெளியிட்டார். 'மக்களின் சமூகத் தவறுகளும் ஒழுக்க இழிநிலையும் மிகப் பரந்த அளவில் இருக்கும் அறியாமையால் ஏற்பட்டன,' என்றும், 'அவற்றைக் கல்வியினல்—அதுவும் ஆங்கிலக் கல்வியினலேதான்-முதலில் போக்க முடியும்,' என்றும் அவர் கருதினர். கிரான்டு இங்கிலாந்திற்குத் திரும்பியதும், மக்கள் சபையையும் டைரக்டர்களின் மன்றத்தையும் தமது கருத்தை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினர். ஆனல், அவர் முயற்சி பலிக்கவில்லை.

அரசாங்கத்தின் மூலம் கிரான்டு என்பவர் செய்ய முடியாததைக் கிறிஸ்தவப் பாதிரிகள் சென்னையிலும் வங்காளத்திலும் செய்து காட்டினர்கள். இந்தியாவில் ஆங்கிலக் கல்வி தொடங்கியதற்கு அவர்களைப் போன்ற சிறந்த ஊழியர்களின் கூட்டமே காரணமாகும். அவர்களுள் மிகச் சிறந்தவர் **வில்லியம் காரி** (William Carey) என்பவரே. முதலில் செருப்புத் தைக்கும் தொழிலில் இருந்த அவர், பிற்காலத்தில் பேப்டிஸ்டு (Baptist) என்கிற பாதிரியாராய் மாறி, 1793-ல் கல்கத்தாவிற்கு வந்தார். அரசாங்க ஆதரவுடன் பாதிரிமார்களின் பள்ளிகள், முன்பே சென்னையில் ஏற்படுத்தப்பட்டன. முதலில் காரி என்பவருக்கும் அவர் நண்பர்களுக்கும் இவ்வித அரசாங்க உதவி மறுக்கப்பட்டாலும் அவர்கள் பல பள்ளிகளை ஏற்படுத்தி விவிலிய நூலின் (Bible) வங்காள மொழி பெயர்ப்பை வெளியிட்டார்கள்; இவ்விதம் ஆங்கிலக் கல்விக்கும் வங்காள உரைநடை இலக்கியத்திற்கும் வேண்டிய அடிப்படையை அமைத்தார்கள். அவர்கள் உண்டாக்கிய இவ்வழியைப் பின்பற்றியே பிற்காலத்தின் அறிவு வளர்ச்சி ஏற்பட்டது.

காரி என்பவரின் செயலை மற்றப் பாதிரிகளும், பரந்த மனப்பான்மையுள்ள இந்தியர்களும் பின்பற்றினர்கள்.

அவர்களுள் டேவிட் ஹேர் (David Hare) என்பவரும், ராஜா ராம் மோகன்ராய் அவர்களும் மிகச் சிறந்தவர்கள். இந்து கல்லூரி (Hindu College) உட்படப் பல ஆங்கிலப் பள்ளிகளை ஏற்படுத்தியதற்கு இவ்விருவரும் காரணராவர். இக்கல்லூரி பிற்காலத்தில் மாநிலக் கல்லூரியாய் (Presidency College) வளர்ந்தது.

புதிய உணர்ச்சிகளை முற்றிலும் ஒதுக்கித் தள்ளி விடுவதற்கு அரசாங்கத்தால் இயலவில்லை. 1813-ல் கம்பெனியின் பட்டயத்தைப் புதுப்பிக்கும் சமயத்தில், 'பயனுள்ள கலை அறிவு, சமய நல்லொழுக்க மேம்பாடு ஆகியவைகளை உண்டாக்குவதற்கான நடவடிக்கைகளைக் கம்பெனி எடுத்துக் கொள்ள வேண்டும்,' என்று பாராளுமன்றம் கட்டளையிட்டது. 'இலக்கியத்தை மறுபடியும் தழைக்கச் செய்து அதில் முன்னேற்றம் காண்பதற்கும், இந்தியாவில் இருக்கும் படித்த சுதேசிகளை ஊக்குவிப்பதற்கும் இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் பிரதேசங்களில் வாழும் மக்களிடையே விஞ்ஞானத்தைப் பற்றிய அறிவை ஏற்படுத்தி அதை வளர்ப்பதற்கும் ஒரு லட்சத்திற்குக் குறையாத ஒரு தொகையை ஆண்டுதோறும் ஒதுக்க வேண்டும்,' எனவும் அது கூறியது. துரதிருஷ்டவசமாக, உடனடியாக விளைவுகளோ, அன்றி முக்கிய விளைவுகளோ, அதனால் ஏற்படவில்லை. 1823ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் மக்கள் கல்விக்குழு (Committee of Public Instruction) ஒன்று வங்காளத்தில் ஏற்படுத்தப்பட்டு, கல்கத்தாவில் ஒரு சம்ஸ்கிருதக் கல்லூரி ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இதற்கு எதிரான மறுப்புரையை ஒரு விண்ணப்ப மூலம் ஆமெர்ஸ்டு பிரபு என்னும் கவர்னர்-ஜெனரலுக்கு ராஜா ராம் மோகான்ராய் சமர்ப்பித்தார். சம்ஸ்கிருதக் கல்லூரி உண்டாக்க நினைக்கும் ஏற்பாட்டைப் பற்றி அவர் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்ததையும் அதற்கும் மேலாக வெறுமையானவையும் பயனற்றவையுமான நுட்பங்களையுமே மாணவர்கள் இக்கல்லூரியில் படிப்பார்கள். இந்நாட்டை அறியாமை என்னும் இருளில் ஆழ்த்துவதுதான் பிரிட்டிஷ் சட்டசபையின் கொள்கை என்றால், அதற்குச் சம்ஸ்கிருத முறையைப் பின்பற்றிக் கற்பிக்கப்படும் கல்விதான் மிகச் சிறந்த வழியாகும். ஆனால், சுதேச மக்களை மேம்பாடு அடையச்செய்ய வேண்டும் என்ற கொள்கை அரசாங்கத்தின் குறிக்கோளாய் இருப்பதால், கணிதம், இயற்கைத் தத்துவம், வேதியியல் (Chemistry), உடல் அமைப்பு இயல் (Anatomy)

ஆகிய பயனுள்ள பல விஞ்ஞானங்களை உள்ளடக்கிய முற்போக்கும் அறிவும் உள்ள ஒரு கல்விமுறையை வளர்ப்பதற்கு அது கடமைப்பட்டிருக்கிறது; ஆலோசனையிலுள்ள பணத்தைக் கொண்டு, ஐரோப்பாவில் கல்வியைக் கற்று அறிவும் திறமையும் பெற்ற பெருந்தன்மையுடைய சிலரை நியமித்து, தேவையான நூல்களையும் கருவிகளையும் கொண்ட ஒரு கல்லூரியை ஏற்படுத்தி அவற்றைப் பெறலாம்.'

ஒரு பக்கத்தில் அரசாங்கமும், மறு பக்கத்தில் இந்திய ஐரோப்பிய முற்போக்காளர்களும் கொண்டிருந்த மாறுபட்ட கருத்துகளை இவ்விண்ணப்பம் நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது.

மக்கள் கல்விக்குழு, தன்னிடமுள்ள பணத்தைச் சம்ஸ்கிருத, அராபிய, பாரசீக நூல்களை அச்சிடுவதிலும், சம்ஸ்கிருதக் கல்லூரி மத்ரஸா ஆகியவைகளை நடத்துவதிலும், செலவிட்டபோது, தாராளச் சிந்தையுள்ள இந்தியர்களின் உதவியுடன், பாதிரிகள் மேல் நாட்டு முறையில் கல்வியைப் புகட்டுவதற்காகப் பள்ளிகளையும் கல்லூரிகளையும் ஏற்படுத்தியதோடு ஆங்கில நூல்களை விற்பனை செய்வதற்காகப் பள்ளி நூற்சங்கம் ஒன்றையும் ஏற்படுத்தினார்கள். திரவெல்யன் (Trevelyan) என்பவர் குறிப்பிட்ட நிகழ்ச்சியிலிருந்து அக்காலத்தில் நிலவிய உணர்ச்சியை அறியலாம். 'இரண்டு ஆண்டுகளில், 31,000க்கு மேற்பட்ட ஆங்கில நூல்களைப் பள்ளி நூற்சங்கம் விற்பனை செய்திருக்கையில், மக்கள் கல்விக் குழுவிற்கு அராபிய, சம்ஸ்கிருதத் தொகுதிகளை மூன்று ஆண்டு விற்பனையினால் வரும் தொகை, அவற்றை இரண்டு மாதத்திற்கு வைத்திருப்பதற்கான செலவிற்கும் போதவில்லை; இது இங்ஙனமாக, அச்சிடுவதற்கு வேண்டிய செலவைப்பற்றிக் கூறத் தேவையில்லை.'

மக்கள் கல்விக் குழுவினரும் மிக விரைவிலேயே புதிய கொள்கைகளின் ஆதிக்கத்தை உணரத்தலைப்பட்டனர். படிப்படியாக இக்குழுவினர் கீழ்த்திசை மொழிகளை ஆதரிப்பவர்கள் (Oarientalists) என்றும், ஆங்கிலத்தை ஆதரிப்பவர்கள் (Anglicists) அல்லது 'ஆங்கிலக் கட்சி' என்றும் இரு பகுதியினராய்ப் பிரிந்தனர். பரந்த மனப்பான்மையுள்ள கல்வியை மேல் நாட்டு முறையில் ஆங்கில மூலமாக கற்றுக்கொடுப்பதற்கே பொதுப்பணத்தை உபயோகிக்க வேண்டுமெனப் பின்னவர் கூறினர். இக்கல்வி மாணவர் சிலருக்கே கற்பிக்

கப்பட்டாலும், இறுதியில் இவ்வறிவு தாய் மொழி இலக்கியத்தின் மூலம் எல்லா மக்களுக்கும் போய்ச்சேரும். இதுவே ஆங்கிலத்தை ஆதரிப்பவர்களின் 'வடிகட்டுக் கோட்பாடு' (Filtration theory) ஆகும்.

மிகப் பிரபலப் பாதிரியாரான 'அலெக்ஸாண்டர் டப்' (Alexander Duff) என்பவர், மக்கள் கல்விக் குழுவில் நியமிக்கப்பட்டதால், ஆங்கிலக் கட்சியின் கை வலுத்தது. கல்கத்தாவில், வில்லியம் பென்டிங் பிரபுவால் ஏற்படுத்தப்பட்ட மருத்துவக் கல்லூரி, அவர்களுக்குக் கிடைத்த முதல் வெற்றியாகும். தாமஸ் பேபிங்டன் மெக்காலே (Thomas Babington Macaulay) என்ற சட்ட அங்கத்தினர், அக்குழுவின் தலைவராய் நியமிக்கப்பட்டது, கீழ்த்திசை மொழிகளை ஆதரிப்பவர்களுக்கு ஏற்பட்ட ஒரு பெருந்தோல்வி எனக் கருதலாம். மெக்காலே, பண்டைக்கால இந்தியக் கல்வி முறையைக் கடுமையாகக் கண்டித்து, மேல் நாட்டுக் கல்வியை ஆதரிக்குமாறு தம் சொல்வன்மை மூலம் எடுத்துக் கூறி, பென்டிங்கின் சம்மதத்தைப் பெற்றார். இதற்குப் பிறகு, கிடைக்கக் கூடிய பொதுப்பணத்தை மேல்நாட்டுக் கல்வியைப் பரப்புவதிலேதான் செலவிட வேண்டுமென ஆலோசனைச் சபை, 1836ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 7ஆம் தேதி முடிவு செய்தது. அப்பொழுது நடந்துகொண்டிருக்கும் சம்ஸ்கிருதக் கல்லூரி, மத்ரஸா போன்ற கீழ்த்திசை மொழிகளின் நிறுவனங்கள் தொடர்ந்து நடப்பதற்கு அனுமதிப்பதென்றும், ஆனால், இந் நிறுவனங்களில் படிக்கும் மாணவர்களுக்குப் புதியதாகக் கொடுக்கப்படும் உதவித் தொகையும், பண்டைக்கால நூல்களின் வெளியீடும் நிறுத்தப்படும் என்றும் அறிவித்தது. இப்படிச் செய்வதால் கிடைக்கும் தொகையைக் கொண்டு, 'சுதேச மக்களுக்கு ஆங்கில மொழியின் மூலம் ஆங்கில இலக்கியத்தையும் விஞ்ஞானத்தையும் போதிப்பதற்கு செலவிடப்படும்,' என்றும் அது முடிவு செய்தது.

முதலாம் ஹார்டிஞ்சு பிரபு என்பவரால் உண்டாக்கப்பட்ட விதித்தொகுப்பு, ஆங்கிலக் கல்வி ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்தை மேலும் உறுதிப்படுத்தியது. கல்வி மன்றத்தால் (Council of Education) (மக்கள் கல்விக் குழுவின் பின்னர் ஏற்பட்டது.) நடத்தப்படும் வெளிப்படையான தேர்வுப் போட்டியின் மூலமாகத்தான் எல்லா அரசினர் பணிகளும் நிரப்பப்படும் என்றும், ஆங்கிலக் கல்வி அறிவுக்குச் சலுகை காட்டப்படும் என்றும் அவ்விதிகள் அறிவித்தன.

இந்தியர்களுக்குக் கிடைக்கக் கூடிய உயர்தரப் பதவிகளுக்கு ஆங்கிலக் கல்வி ஓர் அனுமதிச் சீட்டாகச் செய்யப்பட்டதால், பொதுமக்களால் விரும்பப்படும் தன்மையும், விரைவான முன்னேற்றமும் உறுதிப்படுத்தப்பட்டன.

உயர்குடிப்பிறந்த நடுத்தர மக்களுக்குக் கற்பிக்கப்பட்ட ஆங்கிலக் கல்விக்கும், பொதுமக்களுக்குத் தாய்மொழிப் பள்ளிகளில் கற்பிக்கப்பட்ட கல்விக்கும் இடையே இருந்த ஏற்றத் தாழ்வுதான், வங்காளத்தில் அமுலாக்கப்பட்ட இம் முறையின் முக்கியக் குறைபாடு. பென்டிங்கின் அரசாங் கத்தால், இந்நாட்டுக் கல்வியின் நிலையைப்பற்றி ஆராய் வதற்கு வில்லியம் ஆடம் (William Adam) என்பவர் நியமிக்கப் பட்டார். இப்பொருளைப்பற்றி மிக்க உபயோகமுள்ள அறிக்கையை அவர் தயாரித்தார். தாய் மொழிப் பள்ளி களின் அவல நிலையையும், மக்களிடையே பரவியிருந்த அறியாமை, மூடநம்பிக்கை ஆகியவைகளையும் அவர் விரி வாகக் கூறினர். ஆனல், வடி கட்டுதல் கோட்பாடில் நம்பிக்கை வைத்திருந்ததால், பொது மக்களின் தொடக்கக் கல்வி முறையைச் செம்மையாக்குவதற்கான எவ்வித முயற்சியை யும் அரசாங்கம் செய்யவில்லை.

வங்காளத்திற்கு வெளியே இத்தீங்கு அவ்வளவு கடுமை யாய் இல்லை. பாதிரிகளின் முயற்சிகளால் அல்லது தொடங்கும் பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொண்டால், பம்பாய், சென்னை, வடமேற்கு மாகாணம் ஆகியவைகளில், மேலே குறிப்பிட்ட முறையில் ஆங்கிலக் கல்வி வளர்ச்சி யடைந்தது. ஆனல், ஆங்கிலக் கல்வியைக் கற்பதற்கு அதிக உற்சாகம் இல்லாததால், சுதேசப் பள்ளிகளை மேம்பாடு அடையச் செய்வதற்கும், தாய் மொழிகளின் மூலம் கல்வி யைப் பரப்புவதற்கும் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது.

நடுத்தர வகுப்பில் இருந்த இந்துக்களே ஆங்கிலக் கல்வியின் பயனை அதிகமாக அனுபவித்தார்கள். இந்து மதத்தைச் சேர்ந்த உயர்குடிப் பிறப்பாளர்களும், முஸ்லீம் இனமும், ஆங்கிலக் கல்வியை விரும்பவில்லை. ஒரு சிலருக்கு மட்டும் கற்பிக்கப்பட்ட ஆங்கிலக் கல்வி, குறிப்பிடத்தக்க விளைவுகளை ஏற்படுத்தியது. இங்கிலாந்தில் கத்தோலிக்க விடுதலைச் சட்டம் (1829) (Catholic Emancipation Act), சீர்திருத்தச்சட்டம் (1832) (Reform Act) அடிமைத்தன ஒழிப்பு (1833) (Abolition of Slavery), புதிய இரவலர் சட்டம் (1834)

(New Poor Law) ஆகிய குறிப்பிடத்தக்க நடவடிக்கைகள் ஏற்படுவதற்கு அருள் கலந்த தாராள நோக்கங்களே காரணமாகும். இவ்வித நோக்கங்கள் இந்தியர்களிடையே உருவாவதற்கும், இந்நாட்டு ஆட்சியில் இந்தியர்கள் தங்களுக்குரிய பங்கைப் பெறுவதற்கும், இவற்றிற்கு அவர்களைத் தகுதியுள்ளவர்களாக்குவதற்கும் ஆங்கிலக் கல்வி உதவியது. துரதிருஷ்டவசமாக, ஆரம்பத்திலிருந்தே இப்புதிய கல்வித் திட்டத்தில் சில பெருங்குறைபாடுகள் இருந்தன. முதலாவதாகப் பாடத்திட்டத்தில் அதிகப்படியான இலக்கியங்கள் இடம் பெற்றன. இரண்டாவதாக, சமயக் கல்வியும், நல்லொழுக்கக் கல்வியும் அதில் இடம் பெறவில்லை. முதல் குறைபாடு, மெக்காலேயின் ஆளுமையால் ஏற்பட்டதெனக் கூறலாம். ஒரு பக்கத்தில் கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப வேண்டுமென்கிற பாதிரிகளின் ஆவலும், மறுபக்கத்தில் இந்துக்களிடத்திலும் முஸ்லீம்களிடத்திலும் ஆழ்ந்த சமயக் கொள்கைகளும் இருந்தன. இவற்றில் சிக்காமல் இருப்பதற்கு அரசாங்கம் விரும்பியது. இப்படிப்பட்ட விசித்திரமான சூழ்நிலையில் அரசாங்கம் இருந்ததால், இரண்டாம் குறைபாடு ஏற்பட்டது. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சமயக் கொள்கைகளில் தலையிடுவதில்லை என அரசாங்கம் செய்த முடிவு, அறிவுள்ள ஒரு முடிவுதான்.

சிறந்த ஓர் அடிப்படையின்மீது எழுதப்பட்ட ஆங்கிலக் கல்வி 1835ஆம் ஆண்டின் குறிப்பிடத் தக்க முடிவினால் தொடங்கப்பட்டாலும், விரிவானதும், சம நிலையானதுமான ஒரு கல்வி முறை உண்டாவதற்குப் பட்டயச் சட்டம் அடுத்தபடியாகப் புதுப்பிக்கும் காலம் வரைக்கும்—அதாவது இருபதாண்டுகள் வரையிலும்-பொறுத்திருக்க வேண்டியிருந்தது. அச்சமயத்தில் இப்பொருளைப் பற்றி முழுமையாக ஆராய்வதற்கு ஒரு பாராளுமன்றக் குழு ஏற்படுத்தப்பட்டது. இதன் பயனாக, 'சர் சார்லஸ் வுட்' (Sir Charles Wood) என்பவரின் குறிப்பிடத்தக்க அறிக்கை, 1854, ஜூலை, 19-ல் வெளியிடப்பட்டது. அக்காலத்திலிருந்து வளர்ச்சியடைந்த பிரிட்டிஷ் இந்தியாவின் கல்விக் கொள்கைக்கு வேண்டிய அடிப்படைகள் இந்த அறிக்கையால் அமைக்கப்பட்டன.

ஆரம்ப நிலையிலிருந்து உயர்தர நிலை வரைக்கும் உதவியாய் இருக்கும் ஒரு கல்வி முறை, தகுதியான சமநிலையுடன் உண்டாக்கப்பட்டதுதான் புதிய திட்டத்தின் முக்கியக் கூறு. தொடக்கப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள்

போன்ற திறமையான பல கல்வி நிறுவனங்கள், வேண்டிய அளவுக்கு ஏற்படுத்தப்பட்டன. ஒரு கல்வி நிலையத்திலிருந்து அடுத்த உயர்ந்த கல்வி நிலையத்திற்குச் செல்வதற்கு உபயோகப்படும் அளவில் அவை ஏற்படுத்தப்பட்டன. தகுதி உள்ள மாணவர்கள், உயர்தரக் கல்வியைப் பெறுவதற்காக, அவர்களுக்கு உபகாரச் சம்பளம் (Scholarship) கொடுக்கும் ஒரு திட்டம் ஏற்படுத்தப்பட்டது. தனிப்பட்டவர்களின் முயற்சியால் ஏற்படுத்தப்பட்ட கல்வி நிலையங்களுக்கு அரசாங்க நிதியிலிருந்து உதவிப்பணம் கொடுத்து ஆதரிக்கும் திட்டமும் உண்டாக்கப்பட்டது.

மேலே கூறப்பட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக ஒவ்வொரு மாகாணத்திலும், தனிப்பட்ட ஒரு கல்வித்துறை (Department of Education) ஏற்படுத்தப்பட்டது. இக்கல்வி நிலையங்களைத் தகுந்த முறையில் ஆய்வு செய்வதற்காக ஆய்வாளர் பலர் நியமிக்கப்பட்டனர்.

உயர்தரக் கல்வியைச் சமநிலைப்படுத்துவதற்காக ஒவ்வொரு மாநில நகரத்திலும் ஒரு பல்கலைக்கழகம் (University) ஏற்படுத்தவேண்டும். இலண்டன் பல்கலைக்கழகத்தைப் போன்று, இப்பல்கலைக்கழகமும், தேர்வு நடத்தும் நிலையமாக இருக்கும். கல்லூரிகளின் மூலமாக உயர்தரக் கல்வி போதிக்கப்படும். சட்டம், சிவில் எஞ்சினியரிங், தாய் மொழிகள், பண்டைக்கால மொழிகள் ஆகியவைகளைப் போதிப்பதற்குப் பேராசிரியர் பதவிகளைப் பல்கலைக் கழகம் ஏற்படுத்தும்.

பொதுமக்கள் கல்வியும், பெண் கல்வியும், தாய் மொழிகளை மேம்பாடு அடையச் செய்தல், ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளித்தல் ஆகியனவும் முக்கியத்துவம் பெறும். ஒவ்வொரு மாவட்டத்திலும் பல பள்ளிகள் ஏற்படுத்தப்படும். இப்பள்ளிகள் ஒரு சில இளைஞர்களுக்கு உயர்தரக் கல்வியைக் கற்பிக்கும் நோக்கத்துடன் இல்லாமல், வாழ்க்கையின் எப்படிப்பட்ட நிலையிலும் சமுதாயத்திற்கு உபயோகமுள்ள அங்கத்தினர்களாய் விளங்குவதற்கு உதவும் கல்வியை அவர்கள் பெறுவதற்கு இப்பொழுது இருக்கும் சந்தர்ப்பங்களைவிட அதிகச் சந்தர்ப்பங்களை வழங்கும் நோக்கம் உள்ளனவாக இருக்கவேண்டும்.

இறுதியாக, 'தாய்மொழியே போதனை மொழியாக (Medium of Instruction) இருக்க வேண்டுமென உறுதி செய்யப்

பட்டது. 'இந்நாட்டில் இருக்கும் தாய் மொழிகளுக்குப் பதிலாக ஆங்கில மொழியை ஏற்படுத்தும் நோக்கமோ அல்லது விருப்பமோ எங்களுக்கு இல்லை. அதனால், எவ்விதமான பொதுமுறைக் கல்வியிலும், தாய்மொழியை கற்பிப்பதற்கு வேண்டியவைகளைச் செய்வது மிக முக்கியமானது; மேம்பாடுடைய ஐரோப்பிய நாடுகளின் அறிவைப் பற்றிப் பொதுமக்களுக்குத் தெரிவிக்க வேண்டுமானால், இங்குள்ள ஏதாவது ஒரு தாய்மொழியின் மூலமாகத்தான் அது தெரிவிக்கப்படும்,' என அந்த அறிக்கை கூறுகிறது.

அரசாங்கக் கல்வி நிலையங்கள், 'இந்தியாவில் இருக்கும் எல்லா மக்களுக்கும் பயனளிக்கும் வகையில் ஏற்படுத்தப் பட்டதால் அவற்றில் கற்பிக்கப்படும் கல்வியும் சமயச் சார்பு இல்லாமல், இருக்க வேண்டும்,' என்று சமயக் கல்வி போதிப்பது சம்பந்தமாக, அவ்வறிக்கைத் தெளிவாகக் கூறுகிறது.

அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ள, கொள்கையை, டல்ஹௌசி பிரபு என்பவர் சீக்கிரத்திலேயே அமுலுக்குக் கொண்டுவந்தார். ஒரு சில ஆண்டுகளுக்குள்ளேயே, எல்லா மாகாணங்களிலும், மக்கள் கல்வித்துறை ஏற்படுத்தப்பட்டது. இந்தியாவின் முதல் பல்கலைக் கழகம், 1857-ல், கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்டது. 1857-க்கும் 1887-க்கும் இடைப்பட்ட காலத்தில், நான்கு புதிய பல்கலைக் கழகங்கள், பம்பாய், சென்னை, லாகூர், அலஹாபாது ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்பட்டன. பெரிய அளவில் முன்னேற்றம் ஏற்படுவதற்கு முன்பே, இந்தியப் பெருங்கலகம் ஏற்பட்டு, கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி முடிவுற்றது.

## 3. அரசாங்கமும் சமூகச் சீர்திருத்தமும்

தொடக்கத்திலிருந்தே, இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் ஆட்சி சமுதாய விவகாரங்களில் நற்செயலாற்றும் விருப்பமுள்ள நடுவு நிலைமைக் கொள்கையைப் (Benevelent neutrality) பின்பற்றி வந்தது. இந்தியாவில் கிறிஸ்தவப் பாதிரிகள் சமயப் பிரசாரத்தைச் செய்வதை ஊக்குவிப்பதற்கும், ஆதரிப்பதற்கும், இந்நாட்டிலுள்ள பிரிட்டிஷ் ஆட்சி நெருக்கப் பட்டாலும், இவ்வாட்சி அதைச் செய்வதற்கு உடன்படவில்லை. அரசாங்கத்தால் நடத்தப்படும் கல்வி நிலையங்களில் மதக் கல்வியைப் போதிக்காமலிருந்ததற்கும் இக்கொள்கையே காரணமாகும்.

இந்தியர்களுடைய வழக்கங்களையும் சடங்குகளையும் ஆங்கில ஆட்சியினர் அனுமதித்ததோடல்லாமல், சில சமயங்களில் அவைகளுக்கு ஆதரவு காட்டி, அவைகளைக் கௌரவித்து ஊக்குவித்தனர் என்ற குற்றச்சாட்டைப் பெறும் அளவுக்கு அவர்கள் நடந்து கொண்டார்கள். இரண்டு குறிப்பிட்ட நிகழ்ச்சிகளை இதற்குக் குறிப்பிடலாம். இந்துச் சட்டப்படி, கிறிஸ்தவமதத்திற்கு மாறிய ஓர் இந்துவுக்கு வழியுரிமை இல்லை. அதோடு அவனுக்குப் பல தடைகளும் ஏற்படுத்தப்பட்டன. இதை ஆங்கில ஆட்சி அங்கீகரித்தது. இதைத் தவிர, இந்துக்களின் விழாக்களுக்கும், சமயச்சடங்குகளுக்கும் அரசாங்கம் பெருமதிப்பைக் காட்டியது. சில சமயங்களில் இவைகளுக்குப் படை அணி வகுப்பு, வணக்கம் செலுத்தும் வகையில் பீரங்கியால் சுடுதல் போன்ற நிகழ்ச்சிகளும் நடத்தப்பட்டன.

இவ்விதமான நல்லவைகளைச் செய்ய விரும்பும் கருத்து, மிகு விரைவிலேயே கைவிடப்பட்டது. 1832-ல் செய்யப்பட்ட ஒரு சட்டமும், அதற்குத் துணையாக 1850-ல் நிறைவேற்றப்பட்ட மற்றொரு சட்டமும், சமய மாற்றம் செய்வதால் ஏற்படும் எல்லாத் தடைகளையும் அகற்றின. இந்தியர்களின் சமயச் சடங்குகளுக்குத் தனி ஆதரவு அல்லது மரியாதை ஆகியவைகளை அரசாங்கம் காட்டக்கூடாது என, 1833-ல், மேல் பார்வைக் குழுவின் தலைவர் கட்டளையிட்டார். இக்கட்டளைகளையும், யாத்திரிகர்களுக்கு விதிக்கப்படும் வரி, கோயில் கட்டளைகளை (Endowments) அரசாங்கம் கட்டுப்பாடு செய்வது ஆகியவைகளை ஒழிக்கும் கட்டளைகளையும், ஆக்லண்டு பிரபு என்பவர் அமுலாக்கினார்.

நல்லவைகளைச் செய்ய விரும்பும் நடுவுநிலைமைக் கொள்கையுங்கூடத் தயாள சிந்தையுடைய ஆங்கிலேயர்களின் இரக்கமுள்ள முன்னேற்றக் கருத்துகளுடன் மோதும்படி ஏற்பட்டது. இந்தியர்களின் சமுதாய சமய வழக்கங்களில் தலையிடுவதில்லை எனப் பல தடவைகளில் பறைசாற்றப்பட்ட கொள்கை இருந்தாலும், மனிதத்தன்மைக்கு மதிப்புத்தரும் எண்ணங்களால் தூண்டப்பட்டுச் சமயத்தின் அனுமதி அல்லது நெடுங்காலப் பழக்கம் ஆகியவைகளினால் இந்து சமுதாயத்தில் நிலவிய பல அநாகரிகமான கொடுமைகளை நீக்குவதற்காக, முற்போக்கான இந்தியர்களுடன் ஒத்துழைக்குமாறு, ஆங்கில ஆட்சியினர் தூண்டப்பட்டனர்.

இந்தியரின் விநோதமான சிசுக்கொலை (Infanticide) வழக்கந்தான் ஆட்சியினரின் முதல் தாக்குதலுக்கு இலக்காயிற்று. சில சமயப் பொருத்தனைகளை நிறைவேற்றுவதற்காகக் கங்கையின் முகத்துவாரத்திலிருந்து ஒரு குழந்தையைக் கடலில் எறிவது, இந்துக்களிடையே நெடுங்காலமாய் இருந்து வரும் ஒரு பழக்கமாகும். எடுத்துக்காட்டாக, குழந்தையற்ற ஒரு பெண், குழந்தையைப் பெறுவதற்குப் பிரார்த்தனை செய்யும்போது, ஒன்றுக்குமேற்பட்ட குழந்தைகள் அவளுக்கு உண்டானால், அவைகளில் ஒன்றைக் கங்கை அன்னைக்குக் (Mother Ganges) கொடுக்கப்படும் என்கிற 'நேர்ச்சையை', அப்பெண்மணி செய்துகொள்வாள். இம்முறை, இந்தியாவில் சில இடங்களில் மட்டும் இருந்தாலும், சமயத்தின் மூடநம்பிக்கைகளினால் உணர்ச்சியை இழக்காதவர்களுக்கு இம்மனிதத் தன்மையற்ற செய்கை, மிகக் கொடூரமானதென்பது தெரிந்தது. அதனால் இதை அற்பமென விட்டுவிட அவர்களால் முடியவில்லை.

மற்றொரு விதமான சிசுக்கொலை, மத்திய மேற்கு இந்தியாவிலிருந்த இராச புத்திரர்கள், ஜாட்டுகள் (Jats), மேவாட்டுகள் (Mewats) ஆகியவர்களிடையே அதிகமாகப் பரவியிருந்தது. அவர்களுள் தங்கள் பெண்களுக்கு மணமுடித்து வைப்பதற்கு முடியாத நிலையிலிருந்த பெற்றோர் பலர், தம் பெண் குழந்தைகளுக்குச் சத்துள்ள உணவைக் கொடுக்காமல் இருக்கச் செய்வர். சில சமயங்களில், தாய்மார் தம் முலைக் காம்புகளின்மேல் நஞ்சைத் தடவிப் பச்சிளங் குழந்தைகளைக் கொல்வர். உணர்வு ஒளிர்வும், பரோபகாரச் சிந்தனையுமுள்ள சில ஆங்கில அதிகாரிகள், நல்ல வார்த்தைகள் மூலம், அவர்களை இணங்கச் செய்து, இப்பழக்கத்தை நிறுத்துவதற்கு முயன்றனர். ஆனால், அவர்களது முயற்சி பலனளிக்கவில்லை.

இறுதியில் இவ்விரண்டு விதமான சிசுக்கொலைகளையும் தடுப்பதற்காகச் சட்டங்கள் இயற்ற வேண்டிய நிலைமை ஏற்பட்டது. வங்காளத்தில் 1795-ல் உண்டாக்கப்பட்ட XXI ஆம் விதித் தொகுப்பும், 1802-ல் செய்யப்பட்ட VIஆம் விதித் தொகுப்பும், முறையே முதலாவது சிசுக்கொலையும், இரண்டாவது சிசுக்கொலையும், கொலை செய்வதற்குச் சமமாகும் என அறிவித்து, அதற்கு உரிய தண்டனைகளையும் விதித்தன.

1804-ல் உண்டாக்கப்பட்ட விதித்தொகுப்பு, 1795-ல் ஏற்பட்ட விதித்தொகுப்பைப் புதியதாகச் சேர்க்கப்பட்ட

மாகாணங்களுக்கு விரிவுபடுத்தினும் பெண் குழந்தைகளை இரகசியமாகக் கொலைசெய்யும் அநாகரிகத் தீய வழக்கம் உடனே நின்றுவிடவில்லை. ஏனெனில், இரகசியமாகச் செய்யப்படுவதால், அச்செயல்களைக் கண்டுபிடிப்பது அரிதாய் இருந்தது. மேல்நாட்டுக் கல்வியின் செல்வாக்கினுல் உண்டான பயனுலும், மேல்நாட்டுக் கருத்துக்களாலும், இக் கொடிய பழக்கம் படிப்படியாய் ஒழிந்தது.

இத்தீய வழக்கங்களைச் சீர்திருத்திய பிறகு, மற்ருெரு பயங்கரமான வழக்கமும் ஒழிக்கப்பட்டது. இதைச் 'சதி' (Suttee or Sati) எனக் கூறுவார்கள். இச்சொல், 'தூய்மையும் கற்பும் உள்ள பெண்' என்று பொருள்படும். ஆனல், ஒரு விசித்திரமான முறையில், இறந்த கணவன் பிணத்துடன் குற்றமில்லாத பெண்ணைச் சேர்த்து எரிக்கும் முறைக்கு இச் சொல் பயன்படுத்தப்பட்டது.

இறப்புக்குப் பின் ஏற்படும் வாழ்க்கை, உயிரோடு இருக்கும்போது ஏற்பட்ட வாழ்க்கையின் தொடர்ச்சி ஆகிய இவ்விரண்டு வாழ்க்கையின் தேவைகளும் ஒன்றே என்ற நம்பிக்கை, பல நாட்டு ஆதிக் குடிகளிடையே இருந்து வந்தது. மறு உலகத்தில் ஒரு மனிதனுக்கு அவன் மனைவியும் வேலையாள்களும் தேவைப்பட்டார்கள்; அதனல், அரசன் அல்லது பெரிய தலைவன் இறந்த பிறகு, அவன் மனைவிகள், வைப்பாட்டிகள், ஏவலாளர்கள், பணியாளர்கள் ஆகியவர்களும், அவன் பிணத்துடனே வைத்துக் கொளுத்தப் பட்டார்கள். இச்செயலை அவர்கள் தாங்களே செய்வார்கள்; அல்லது அதைச் செய்வதற்குக் கட்டாயப்படுத்தப்படுவார்கள். இப்படிச் செய்வதால் அவர்கள் இறந்துவிட்ட தலைவன் அருகில் இருந்து இவ்வுலகத்தில் இருந்தபோது அவனுக்குச் செய்த பணிவிடைகளைப் போல, அவ்வுலகத்திலும் செய் வார்கள் என்னும் நம்பிக்கை இருந்தது. இப்பழக்கம், சைன, பாபிலோனியாப் போன்ற பல நாடுகளிலும் இருந்தது. இப் பழக்கத்தின் அடையாளங்களை இன்றும் ஜப்பானில் காணலாம். அந்நாட்டில் அரசன் இறந்துவிட்டால் அவ்வரசனை விரும்பிய மக்களும் ஹரா-கிரி (Hara-Kiri) எனப்படும் தற் கொலையை செய்துகொண்டு, உயிரை விடுவார்கள்.

பல இடங்களில் பரவியிருந்த பண்டைய பழக்கத்தில் கடைசியாக எஞ்சியுள்ள ஒரு பகுதியின் தோற்றந்தான், மனைவியை எரிக்கும் பழக்கம். இப் பழக்கம் ஆரம்பக்காலத்தி

லிருந்தே இந்தியாவில் இருந்திருக்க வேண்டும். கி.மு. நான்காம் நூற்றாண்டில் நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிய ஒரு விரிவான செய்தியைக் கிரேக்க நூலாசிரியர்கள் பாதுகாத்து வைத்திருந்தார்கள். ஆனால், பல நூற்றாண்டுகளுக்குப் பிறகுங் கூட அது ஒரு புனிதமான சமயக்கடனாக விதிக்கப்படவில்லை. மிகத் தொன்மையான சட்ட நூல்களில் இப்பழக்கம் குறிப்பிடப்படவில்லை. பிற்காலத்தில் ஏற்பட்ட நூல்களிலும், விதவைகளின் விருப்பத்திற்கு அச்செயல் விடப்பட்டதே அன்றி, அவர்களைக் கட்டாயப்படுத்தவில்லை. பண்டைக் காலத்தின் இறுதியில் அல்லது அதற்கும் பிற்பட்ட காலத்திலேதான், இப்பழக்கம் ஒரு சமயக்கடனென விதிக்கப் பட்டது. கணவனது பிணம் கொளுத்தப்படும் போது, மனைவியும் அதில் விழுந்து இறப்பதுதான் கற்புள்ள மனைவி புகழ் அடைவதற்குரிய சிறந்த வழி என்று புனித நூல்கள் கூறியதே இத்துன்ப நிகழ்ச்சியின் இறுதிக் கட்டமாய் அமைந்தது. இப்படிச் செய்வதால், ஒரு பெண் தேவலோகத்திலுள்ள முடிவற்ற பேரின்பத்தைத் தன் கணவனுடன் அனுபவிக்கலாம் என்றும், அவள் கணவனுடைய குடும்பத்தின் தாயின் வழியிலும் தகப்பன் வழியிலும் மூன்று தலைமுறைகளில் இருந்தவர்கள் செய்த பாவத்தையும் தன் செயலால் போக்குகிறாள் எனவும் கருதினார்கள்.

இப்படிப்பட்ட நம்பிக்கைகளும் தூண்டுதல்களும் கைம்பெண்களுக்கும் அவர்களைக் காப்பாற்ற வேண்டியவர்களுக்கும் கற்பிக்கப்பட்டதால், தடுக்க முடியாத விளைவுகள் ஏற்பட்டு, ஒவ்வோர் ஆண்டும், நூற்றுக்கணக்கான பெண்கள், சமயத்தின் பெயரால், காட்டுமிராண்டித்தனமாகக் கொல்லப் பட்டார்கள். பல நிகழ்ச்சிகளில் சமயப்பற்றுடன் ஆண் உறவினர்களின் பொருளாசையும் சேர்ந்துவிட, அவர்கள் நல்ல வார்த்தைகள் கூறிக் கைம்பெண் உடன் கட்டை ஏறுவதற்கு இணங்கச் செய்தார்கள்; அப்படி இணங்குவதற்கு மறுத்தால், கட்டாயப்படுத்தி உடன்கட்டை ஏற்றி, கைம்பெண்ணைக் கொன்றார்கள். சில சமயங்களில் அபினும் மற்ற மருந்துகளும் கைம்பெண்ணுக்குக்கொடுத்து, அவளுடைய உணர்ச்சிகளை அழித்து, அவளை மயக்கி இணங்கச்செய்து, உடன்கட்டை ஏற்றினார்கள். இப்படிச் செய்யப்பட்ட சிலர், நெருப்பின் சூடு பட்டவுடனே எழுந்து ஓடினர் என்பதும், அவர்கள் மறுபடியும் பிடித்துக் கொண்டுவரப்பட்டு, பலவந்தமாக நெருப்பில் தள்ளப்பட்டார்கள் என்பதும் பலரால் குறிக்கப்பட்டுள்ளன. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடை

பெருமல் தடுப்பதற்காகக் கைம்பெண்ணின் ஆண் உறவினர்கள் மிக்க எச்சரிக்கையுடன் மரக்கட்டைகள், இலைகள், வைக்கோல் முதலியவைகளை அப்பெண்ணின்மேல் வைத்து, நெருப்பு வைப்பதற்கு முன்னே இரண்டு மூங்கில்களால் அவளைக் கீழே அழுத்திப் பிடித்துக்கொள்வார்கள். அதே சமயத்தில், கூட்டத்தினர் எழுப்பும் இடிமுழக்கம்போன்ற சத்தத்தினுலும், முரசுகளின் ஒலியினுலும் மரணத் துன்பத்தால் அவதிப்பட்டு அப்பெண் எழுப்பும் கதறல்கள் மற்றவர்களுக்குக் கேட்காதபடி செய்யப்பட்டன.

அறிவும் பண்பாடும் உள்ள மக்கள், இப்படிப்பட்ட பழக்கங்களைப் பல நூற்ருண்டுகளாகக் கொண்டிருந்தார்கள் என்கிற உண்மை வரலாறு, உலகப் பொருள்களைவிடச் சிறந்த ஒரு வாழ்க்கையில் நம்பிக்கை வைப்பதானது, எவ்விதம் மனிதனுடைய எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் ஒளியூட்டாமலும், புனிதமாக்காமலும், சில சமயங்களில் அவனது முடிவை மாற்றி அமைத்து, அவனுடைய சிறந்த இயல்புணர்ச்சிகளையும் மனித உணர்ச்சிகளையும் ஆற்றலற்றன வாக்கிவிடுகிறது என்பதையே தெளிவாகக் காட்டுகிறது.

அக்பரைப் போன்ற உணர்வு ஒளிர்வைப்பெற்ற முகலாய அரசர்கள், இதைத் தீவிரமாக எதிர்த்து, வெறுக்கத்தகுந்த இப்பழக்கத்தைத் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டார்கள் என்பதை அறிவது மிகத் திருப்தியாய் இருக்கிறது. ஆனுல், ஒழுங்கான முறையிலும் உறுதியான முறையிலும் இவை பின்பற்றப்படவில்லை. அதனுல், ஒரு நிலையான பயனை இவை உண்டாக்கவில்லை. ஆங்கில ஆட்சியின் தொடக்கத்திலிருந்து அதிகாரிகளும் பாதிரிமார்களும் இத்துன்பம் நிறைந்த பழக்கத்தை நிறுத்தும்படி அரசாங்கத்திடம் முறையிட்டுக் கொண்டார்கள்; தாய் நாட்டு அதிகாரிகள் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதற்காக, இங்கிலாந்தில் ஒரு கிளர்ச்சி உண்டாக்கப்பட்டது. சமய விவகாரங்களில் தலையிடாமை (Laissez faire) என்கிற கொள்கை அறிவிப்பைச் செய்ததாலும், பெரும்பான்மையான மக்களின் சமய உணர்ச்சிகளைப் புண்படுத்த விரும்பாததாலும், இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் ஆட்சி, ஒரு முடிவான நடவடிக்கையை எடுக்க முடியாமல் நெடுங்காலம் வரையில் தயங்கிக்கொண்டிருந்தது. தவிர, பெரும்பான்மையான மக்களுக்கு விரோதமாக ஏதாவது செய்தால், அது இராணு

வத்தை இறுதியில் பாதிக்கலாம் என்கிற பயமும் அவர்களுக்கு இருந்தது. ஆனால், கல்கத்தாவிற்குள் இதை அனுமதிக்கத் தலைமை நீதி மன்றம் மறுத்தது. டச்சுக்காரர்களும் டேனிஷ்காரர்களும், பிரெஞ்சுக்காரர்களும், முறையே சின்சுரா, செராம்பூர், சந்திர நாகூர் என்னும் இடங்களில் இப்பழக்கத்தைத் தடை செய்தார்கள்.

நல்ல முறையில் மக்களுக்கு எடுத்துச் சொல்லி, இப்பழக்கம் ஏற்படாதவாறு பார்த்துக்கொள்ளும்படி தன் அதிகாரிகளுக்கு அரசாங்கம் முதலில் கட்டளையிட்டது. இவ்விவகாரத்தைப் பற்றி, சாகபாது (Shahabad) மாவட்டத்தின் கலெக்டர், காரன்வாலிசு என்பவருக்கு, 1789-ல் பின் வருமாறு குறிப்பிட்டார்:

'இந்து சமயத்தின் சடங்குகளும் மூடப் பழக்கங்களும் தகுதியற்ற விதத்தில் இருந்தாலும், அவைகளைப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால், மனிதனுடைய இயற்கையே கண்டு நடுங்கும்படியான ஒரு செயலை, குறிப்பிட்ட கட்டளை இருந்தாலொழிய, அனுமதிக்க இயலாது.'

முடிவை மாற்றுவதற்கு மட்டுமே, அவர் முயற்சி செய்ய வேண்டுமே தவிர கட்டாய முறையில் தடுப்பதும் அல்லது அதிகாரத்தைப் பயன்படுத்தி அதை நிறுத்துவதும் கூடா என அவருக்குப் பதில் கிடைத்தது.

கலெக்டரின் கடிதமும், அதற்கு அவருக்குக் கிடைத்த பதிலும், இப்பிரச்சினையைப்பற்றித் தொடக்கத்தில் அதிகாரிகள் என்ன மனப்பான்மையைக் கொண்டிருந்தார்கள் என்பதை விளக்குகின்றன. 1805-ல், பீஹார் மாவட்டத்தின் மாஜிஸ்ட்ரேட்டு இதைப் போன்ற ஒரு கடிதத்தை எழுதிய போது, **'நிஜாமத் அடாலட்டு'** என்கிற நீதி மன்றத்திற்கு இப்பிரச்சினையை வெல்லெஸ்லி பிரபு அனுப்பினார். இதற்குக் கிடைத்த பதிலை ஆதாரமாகக் கொண்டு, இப்பொருளைப் பற்றிய விதித் தொகுப்பை, 1812-ல், அரசாங்கம் உண்டாக்கியது; அதற்குத் துணையாக, வேறு பல விதிகளையும் 1815, 1817ஆம் ஆண்டுகளில் உண்டாக்கி, அதனுடன் சேர்த்தது. இளமையாகவோ, சூல்கொண்டோ அல்லது சிறிய குழந்தைகளை வைத்துக்கொண்டோ இருக்கிற விதவைகளைக் கொளுத்தாமல் தடுப்பதுதான், இவ்விதத் தொகுப்புகளினால் ஏற்பட்ட முக்கியப் பயன். தன்னைத்தானே கொளுத்திக்கொள்வதற்கு

ஒரு பெண்ணைக் கட்டாயப்படுத்துவதும், அக்குறிக்கோளுக்காக அவளுக்கு மருந்து அல்லது மயக்கம் கொடுப்பதும் குற்றமாகச் செய்யப்பட்டன.

இவ்விதித் தொகுப்புகளால் பெரும்பயன் ஏற்படவில்லை. கல்கத்தாவைச் சுற்றிலுமுள்ள மாவட்டத்தில் மாத்திரம், ஆண்டுக்குச் சராசரி ஐந்நூறு 'சதி'களுக்கு மேல் நடந்தன என்பதை நம்பத்தகுந்த சான்றுகள் காட்டுகின்றன. இப்பழக்கத்தை முற்றிலும் ஒழிக்கும் அவசியத்தை அரசாங்கத்தின் கவனத்திற்கு ஆங்கில அதிகாரிகள் அடிக்கடி கொண்டு வந்தார்கள். ஆனால், அதைச் செய்வதற்குத் துணிவில்லாமல், இறுதியாக இப்பழக்கத்தை ஒழிப்பதற்கு இந்திய மக்களின் கருத்துப் படிப்படியாக ஒளி பெறவேண்டும் என்கிற எண்ணத்தை அரசாங்கம் கொண்டிருந்தது.

இம்முற்போக்கான உணர்ச்சி வளர்ந்திருப்பதற்கான அறிகுறிகள் தென்படலாயின. ராஜாராம் மோகன்ராய் அவர்களின் சலியாத உழைப்புக் காரணமாக, இந்திய மக்களின் கருத்து, படிப்படியாக உறுதி பெற்றது. 1817ஆம் ஆண்டின் விதித்தொகுப்புகளை எதிர்த்தும், அவற்றை நீக்க வேண்டுமென்றும் அரசாங்கத்திற்கு வைதிக இந்துக்கள் விண்ணப்பம் செய்தபோது, அவ்விண்ணப்பத்திற்கு எதிரான ஒரு விண்ணப்பத்தை ராஜா அவர்களும், அவருக்கு உதவியாளர்களும் அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்தார்கள்; 'சதியின் கொடூரங்களைத் தெளிவான முறையில் விவரித்து, சாஸ்திரத்தின் வண்ணமும், எல்லா நாடுகளின் பொது அறிவுப் படியும் இந்நிகழ்ச்சிகளெல்லாம் கொலைக்குற்றந்தான்,' என்று அறிவித்தார்கள். மக்களின் கருத்துகளைத் தங்களுக்குச் சாதகமாகத் திருப்புவதற்காக ராஜாராம் மோகனர், அப்பொருளைப்பற்றிய ஒரு சிறு நூலை வெளியிட்டார். அது அரசாங்கத்தின் விதி முறையில் பின்பற்றப்படுகின்றதா எனக் கவனிப்பதற்கு அவர் ஒரு 'கண்காணிப்புக் குழு'வை ஏற்படுத்தினர். ராஜா ராதா காந்த தேவ் (Raja Radha Kantha Deb) என்பவரைத் தலைவராகக் கொண்டு, வைதிக இந்துக்கள், ராஜாவை மிகக் கடுமையாக எதிர்த்தார்கள். ராஜாராம் மோகனரின் உயிருக்கு ஆபத்து ஏற்படும் வகையில் உணர்ச்சிகள் பெருகின.

பிரச்சினைகள் இவ்விதக் கடுமையான நிலையை அடைந்தபோது, வில்லியம் பென்டிங்கு பிரபு கவர்னர்-ஜெனரலாக

நியமிக்கப்பட்டார். உடனடியாக அல்லது, படிப்படியாகச் சதியை ஒழிப்பதற்கு வேண்டிய திட்டமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளும்படி தாய்நாட்டு அதிகாரிகள் அவருக்குக் கட்டளையிட்டார்கள். நிலைமையை மிக்க கவனத்துடன் ஆராய்ந்த பிறகு, அதை உடனடியாக ஒழிப்பதற்கு அவர் முடிவு செய்தார். அவரது சீர்திருத்த ஆவலைப் பலர் ஆதரிக்க வில்லை. உடனடியாக அதை ஒழித்தால், அதனால் பெரிய அதிருப்தியும் மனக் கிளர்ச்சியும் ஏற்படலாமென எதிர் பார்த்து எச்சரிக்கையுடன் இருக்குமாறு கவர்னர்-ஜெனர லுக்கு ராஜாராம் மோகனர் ஆலோசனை கூறினர். சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற உணர்ச்சிமிக்க ஆர்வம் கொண்டிருந்த தால் பென்டிங்கு தாமதத்தை விரும்பவில்லை. 1829, டிசம்பர், 4-ல், 'சதி' சட்ட விரோதமானது என்றும் நீதிமன்றங்களால் தண்டிக்கப்படக் கூடியது என்றும் கூறிய பிரபல XVIIஆம் தொகுப்புச் சட்டத்தை அவர் சட்டமாக்கினர். எவ்விதமான பலாத்காரத்தையும் உபயோகப்படுத்துகிறவர்கள் அல்லது தூண்டுதலைச் செய்பவர்கள் சொந்த விருப்பத்தின்மேல் நடக்கிற சதிக்கு எவ்வகையிலாவது சம்பந்தப்பட்டிருப்ப வர்கள் ஆகிய எல்லாரும், குற்றவாளிகள் எனக் கருதப்படு வார்கள் என அச்சட்டம் கூறியது.

எதிர்பார்த்தபடியே பென்டிங்கின் நடவடிக்கைகள் அதிக எதிர்ப்பை உண்டாக்கின. ஏராளமான மக்களின் கையெழுத் தைப் பெற்ற ஓர் ஆட்சேப மனுவைக் கவர்னர்-ஜெனரலுக்குக் கொடுத்து இங்கிலாந்தில் இருக்கும் அதிகாரிகளுக்கும் இவர்கள் முறையிட்டுக் கொண்டார்கள். அவர் இங்கிலாந் திற்குச் செல்வதற்குப் பல காரணங்களில் இதுவும் ஒரு காரணம். பிரிவி கவுன்சிலை உபயோகப்படுத்தி, புதிய விதித் தொகுப்பை நீக்குவதற்குச் செய்யப்படும் முயற்சியை முறியடிப்பதிலேதான் ராம் மோகனருடைய முயற்சிகள் வெற்றி பெற்றன. தாய் நாட்டு அதிகாரிகள், புதிய விதித் தொகுப்பை ஆதரித்தார்கள்; அதனல், மனிதத் தன்மையற்ற இப்பழக்கம், இறுதியாக ஒழிக்கப்பட்டது. பென்டிங்கின் முயற்சிகளை மிக மேன்மையான முறையில் முதலாம் ஹார்டிஞ்சு பிரபு ஆதரித்து, இந்திய சமஸ்தானங்களில் பரவி யிருந்த சதியையும் சிசுக் கொலைகளையும் ஒழிப்பதற்கு முக்கிய காரணராய் இருந்தார்.

தகுந்த அமைப்புடன் இருந்த தக்கர்களின் (Thugs) கொள்ளைக் கூட்டங்களை ஒழித்தது, பென்டிங் செய்த

மற்றொரு பெரிய சீர்திருத்தமாகும். இரகசியமாய் இருந்த இக்குற்றவாளிகளின் கூட்டத்தின் அங்கத்தினர்கள், விநோதமான முறையில் கொள்ளை அடிக்கத் தொடங்கினார்கள். இவர்கள் மாறு வேடத்துடன் பிரயாணம் செய்து உதவியில்லாத பிரயாணிகளைக் கொலை செய்தார்கள்; பெரும்பாலும், ஒரு கைக்குட்டை அல்லது கழுத்துக் குட்டையின் சுருக்கு முடிச்சு மூலம் அவர்களுடைய கழுத்தை இறுக்கிக் கொன்றார்கள். இக்கூட்டங்களில் இந்துக்களும் முஸ்லீம்களும் இருந்தாலும், தக்கர்கள் காளி தேவியையே தங்களுக்குத் தெய்வமாகக் கொண்டார்கள். தங்கள் கொடிய தொழிலான கொலைக்குத் தேவியின் அருள் இருக்கிறது என்னும் தவறுதலான நம்பிக்கையுடன், இவர்கள் அதை நடத்தி வந்தார்கள். இவர்களது அமைப்பு இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் பரவியிருந்தது. சிற்றரசர் சிலர், நிலச் சுவாந்தார்கள், வணிகர்கள் ஆகியவர்களின் உதவி இவர்களுக்கு இருந்தது என்று நினைப்பதற்குக் காரணங்கள் இருந்தன. வில்லியம் சிலீமான் (William Sleeman) என்பவரையும், அவரைப் போன்ற பல ஆற்றல் வாய்ந்த அதிகாரிகளையும் பென்டிங்கு நியமித்து, இக்கூட்டங்களை ஒழித்தார். சிறை பிடிக்கப்பட்டவர்களைத் தண்டிப்பதற்காக, அவர் பல தனிச் சட்டங்களை உண்டாக்கினார். 1831ஆம் ஆண்டிற்கும் 1837ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் மூவாயிரவருக்கும் அதிகமான தக்கர்கள் பிடிக்கப்பட்டார்கள். இக்கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட்டதால், இந்தியாவைப்பற்றிய பேரிடர் நீக்கப்பட்டது.

அதிக அளவில் உணர்ச்சிகளை உண்டாக்காத மற்றொரு முக்கியச் சீர்திருத்தம், 1843-ல் ஏற்பட்ட Vஆம் சட்டப்படி, அடிமைத்தனத்தை அகற்றியதுதான். பொதுவாக மக்களிடையே நிலவிவந்த நம்பிக்கைக்கு மாறாக ஆரம்பக் காலத்திலிருந்தே இந்நாட்டில் அடிமைத்தனம் இருந்திருக்கிறது. 1843ஆம் ஆண்டிலுங்கூட, பல மில்லியன் கணக்கான அடிமைகள் இந்தியாவில் இருந்தார்கள். 'அடிமைத்தனத்தைச் சட்டப்படியான ஒரு சமூக நிலையாக' ஒப்புக்கொள்ள இச்சட்டம் மறுத்தது. இதனால், அடிமைகளைப் பெற்றிருந்தவர்களுக்கு நட்ட ஈடு கொடுக்கப்படாமலே, அவர்கள் விடுவிக்கப்பட்டு, சுதந்தர மக்களானார்கள். இச்செயல்கள் எவ்வித எதிர்ப்பையோ கிளர்ச்சியையோ உண்டாக்கவில்லை. மேல்நாட்டுக் கல்வியும், பரந்த மனப்பான்மை கொண்ட ஆங்கிலேய மரபும் இந்தியர்கள் உள்ளத்தில் உண்டாக்கிய

அதே சமயத்தில், மாநில நகரங்களில் அரசாங்கத்தால் நடத்தப்பட்டு வந்த சூதாட்டங்களை ஒழித்தது, அக்காலத்திலிருந்த அரசாங்கத்தின் பரந்த மனப்பான்மைக்கு மற்றுமொரு சான்றாய் விளங்குகிறது. இந்தச் சூதாட்டத்தின் மூலம் கிடைக்கும் பணம் தலமுன்னேற்றத்திற்குப் பயன்படுத்தப்படுவதால், இது நியாயமானது எனக் கூறுவதற்கு ஒரு முயற்சி செய்யப்பட்டது. பண ஆதாயம் கிடைத்தாலுங்கூட நல்லொழுக்கத்திற்கு எதிராக இது இருக்கின்றது எனக் கடுமையாக மக்களால் எதிர்க்கப்பட்டதால், இந்தச் சூதாட்டம் கைவிடப்பட்டது.

மக்களைப் பலி கொடுப்பதால் நிலத்தின் செழுமை அதிகரிக்கிறது என்ற ஒரு தப்பான நம்பிக்கை, ஒரிஸ்ஸாவிலிருந்த கோண்டுகள் (Khonds) என்னும் மக்களிடத்தில் இருந்ததால், அவர்கள் அப்பழக்கத்தைக் கடைப்பிடித்து வந்தார்கள். அதை ஒழித்துக்கட்டுவதற்கான நடவடிக்கைகளை எடுத்து, முதலாம் ஹார்டிஞ்சு பிரபுவின் ஆட்சி புகழடைந்தது. ஹார்டிஞ்சு பிரபு கவர்னர்-ஜெனரலாய் இருந்த காலத்தில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளின் பலன்கள் திருப்தியாய் இல்லாவிட்டாலும், கேம்பெல் (Campbell) என்பவரும், 1847–1854ஆம் ஆண்டுகளுக்கிடையில் இக்குறிக்கோளை அடைவதற்குத் தனியாக நியமிக்கப்பட்ட அதிகாரிகளும் மிக்க ஆற்றலுடன் கூடிய முயற்சிகளைச் செய்து இக்கொடிய பயங்கரப் பழக்கங்களை உறுதியான முறையில் ஒழித்துக் கட்டினர்கள்.

# 1. அரசியல் உறவுகள் (1858-1905)

## 1. ஆப்கானிஸ்தானமும் வடமேற்கு எல்லைப்புறமும்

இந்திய அரசாங்கம், இங்கிலாந்து அரசரின் சார்பில் நடத்தப்படுவதற்கு ஆரம்பமான 1858ஆம் ஆண்டு முதல், 1935ஆம் ஆண்டின் அரசியல் சீர்திருத்தப்படி ஏற்பட்ட **'மாகாணச் சுய ஆட்சி'** ஆரம்பமான 1937ஆம் ஆண்டு வரையில் உள்ள காலம், இந்திய வரலாற்றில் முக்கியக் கட்டமாய் விளங்குகின்றது. இந்தக் காலத்தை ஏகாதிபத்தியத்தின் காலம் (1858–1905), சீர்திருத்தங்களின் காலப்பகுதி (1905–1937) என இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். பிரிட்டிஷ் அரசரின் முக்கிய மந்திரிமார்களுள் ஒருவர், இந்திய ஆட்சியை நிருவாகம் செய்ததுதான், அக்காலத்தில் குறிப்பிடத்தகுந்த நிகழ்ச்சி. அயல் நாட்டுக் கொள்கையிலேதான் இது மிகத் தெளிவாகத் தெரிந்தது. 1858ஆம் ஆண்டிலிருந்து இந்தியாவின் அயல் நாட்டுக் கொள்கை, ஐரோப்பாவின் நிலைமையைக்கொண்டு உருவாக்கப் பட்டதென்றும், இலண்டனிலிருந்த வெள்ளை மாளிகையில் இருந்து ஆட்சி புரிந்த பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அயல் நாட்டுக் கொள்கையின் ஒரு பாகமாய் இருந்ததென்றும் கூறுவது மிகையாகாது.

வடமேற்கு எல்லைப்புறத்தின் கொள்கை, நெடுங்காலமாகவே, இங்கிலாந்திற்கும் ரஷ்யாவிற்கும் இடையே நிலவிய உறவைப் பொறுத்திருந்தது. முதலாவது ஆப்கானியப் போருக்குப் பின், இவ்விரண்டு நாடுகளுக்குமிடையில், நட்புறவே மறுபடியும் ஏற்பட்டது. 1844ஆம் ஆண்டில், **முதலாம் நிக்கோலஸ்** (Nicholas-I) என்ற ரஷ்யப் பேரரசர், விக்டோரியா பேரரசியாரைச் சந்தித்தார்; அதன் விளைவாக, மத்திய ஆசியா சம்பந்தமாக ஓர் உடன்பாடு ஏற்பட்டது. புக்காரா

(Bukhara), கிவா (Khiva), சாமர்கண்டு (Samarkand) போன்ற **கன்டிஸ்** (Khantes) என்னும் சிற்றரசுகள் (Principalities) 'ஆபத்தான உறவைப்பெருமல் தடுப்பதற்காக, இரண்டு பேரரசுகளுக்கும் இடையில் உள்ள நடுநிலைமைப் பிரதேச மாக' இருக்க வேண்டுமென்பதுதான், அவ்வுடன்பாட்டின் அடிப்படை.

அவ்வித நட்புறவு, கிரீமியப் போரால் (Crimean War) மிகப் பாதிக்கப்பட்டது; தென்கிழக்கு ஐரோப்பாவில் முன்னேறமுடியாதபடி தடுக்கப்பட்ட ரஷ்யா, முன்னேறும் கொள்கையை மத்திய ஆசியாவில் கடைபிடித்தது. ஆப்கானிஸ்தானத்தின் எல்லையை நோக்கி ரஷ்யா மிக விரைந்து முன்னேறியதால், பிரிட்டிஷ் அரசு மிக்க அச்சமும் கவலையும் கொண்டது. பஞ்சாபையும் சிந்துவையும் கைப்பற்றியதால், பிரிட்டிஷ் பிரதேசங்கள், ஆப்கானிஸ்தான் மலைகள் வரையில் பரவின; ரஷ்யாவின் எல்லை நிலையங்களுக்கும் இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் பேரரசுக்கும் இடையில் அந்நாடு மட்டுந்தான் இருந்தது. ஆனல், துரதிருஷ்டவசமாக, ஆப்கானிஸ்தானத்தின் விவகாரங்கள், பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பாதகமாகவே இருந்தன.

முதலாவது ஆப்கானியப்போர் முடிந்ததும், பிரிட்டிஷ் ஆட்சிக்கும் காபூலின் அமீரான தோஸ்து முகமதுவுக்கும் இடையில் இருந்த உறவு மிகச் சுமுகமாகவே இருந்தது. ஹீரட்டு, காண்டகார் என்னும் நகரங்களைப் பாரசீகர்கள் தாக்கியதால், அமீர் ஆங்கிலேயரது உதவியைக் கோரினர்; 1855ஆம் ஆண்டில் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அவ்வுடன்படிக்கையின்படி, அமீரின் நாட்டை மீறுவதில்லை என இந்திய அரசு உறுதிமொழி அளித்தது; 'மேன்மைமிக்க கம்பெனியின் நண்பர்களுட் சிறந்த நண்பராகவும், விரோதிகளுக்குக் கொடிய விரோதியாகவும்' இருப்பதற்குப் பின்னது ஒப்புக்கொண்டது.

1856ஆம் ஆண்டில் பாரசீகர்கள் ஹீரட்டைத் தாக்கிய போது, இந்நட்பு, சோதனைக்குள்ளாகியது. பிரிட்டிஷார், பணமும் படைக்கலங்களும் அமீருக்குக் கொடுத்து உதவி செய்தனர்; அவற்றுடன் நில்லாமல், பாரசீகத்தின்மீது போரை அறிவித்து, பம்பாயிலிருந்து ஒரு படையையும் அனுப்பினர். 1857ஆம் ஆண்டில், பாரசீகர்கள் சமாதானத்திற்கு வந்தார்கள்.

முகமது போர் வெறி கொண்டு ஒரு சுதந்தரத் தலைவரின் கீழ் இருந்த ஹீரட்டு நகரத்தை 1862ஆம் ஆண்டில் தாக்கிய

போது, இவ்வித நட்புணர்ச்சி முதன்முறையாகப் பாதிக்கப் பட்டது. இந்திய அரசு, அவருடைய நடவடிக்கையை எதிர்த்து, 1857ஆம் ஆண்டு முதல் காபூலில் நியமிக்கப் பட்டிருந்த தன்னுடைய முஸ்லீம் ஏஜென்டுக்குத் திரும்பி வருமாறு பணித்தது. தோஸ்து முகமது, இந்த எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல், 1863ஆம் ஆண்டில் ஹீரட்டு நகரைக் கைப்பற்றினார்.

இது நடந்த சிறிது காலத்திற்குப் பிறகு, தோஸ்து முகமது தமது எண்பதாம் வயதில் இறந்தார். அதனால், அவருடைய பதினாறு பிள்ளைகளுக்கிடையே தடுக்கவியலாத வாரிசு உரிமைப் போர் ஏற்பட்டது. ஐந்து ஆண்டுகள் வரையில் ஆப்கானிஸ்தானத்தில் உடன் பிறப்பாளர்களைக் கொல்லும் போர் (fratricidal war) நிகழ்ந்தது. வெறுப்பு, ஒற்றுமை யின்மை, பிரதேசங்களின் பிரிவினை ஆகிய தீமைகள் போரின் விளைவாக ஏற்பட்டன. இறுதியில், காலஞ்சென்ற அமீரின் மூன்ருங் குமாரரும், அவரால் வாரிசாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வருமான ஷெர் அலி (Sher Ali) என்பவர், 1868ஆம் ஆண்டில் போட்டியாய் இருந்தவர்களைத் தோற்கடித்து, ஆப்கானிஸ் தான் முழுவதையும் தமது ஆட்சியின்கீழ் ஒன்றுபடுத்தினார்.

அக்காலத்தில், பிரிட்டிஷ் ஆட்சியின் நிலைமை மிக்க இடர் வாய்ந்ததாய் இருந்தது. சர் ஜான் லாரன்சு (கவர்னர்-ஜெனரல், 1864–69) உறுதியான நடுவுநிலைமைக் கொள்கையைப் பின்பற்றினார்; ‘ஆப்கானிஸ்தானை ஆளும் அரசர்களிடத்திலேதான் பிரிட்டிஷ் ஆட்சி உறவு வைத்துக் கொள்ளும்,’ என்கிற கொள்கையை அவர் பின் பற்றினார். இதன்படி, பதவிக்குப் போட்டியிட்ட சகோதரர் பலரும் விரும்பிய உதவியை அவர் அளிக்கவில்லை; ஆனால், ஒருவர் பின் ஒருவராக அவர்கள் காபூலைக் கைப்பற்றியதும் அவர்களை ஒவ்வொருவராக அங்கீகரித்தார். ஷெர் அலி, ஆங்கில ஆட்சியின் உதவியை நாடி மூன்றுமுறை வந்தார்; மூன்று முறையும் உதவி மறுக்கப்பட்டது. ஆனால், இப்போட்டியில் அவர் வெற்றி பெற்றவுடனே, லாரன்சு அவரை அங்கீகரித்து, பணமும் அனுப்பினார்; இறுதியில், இவ்வுதவியால் தம் நிலையை உறுதிப்படுத்திக்கொண்டார்.

லாரன்சு பின் பற்றிய கொள்கையைத் ‘திறமையான செயலின்மை’ (Masterly inactivity) எனச் சிலர் புகழ்ந்து கூறுகின்றனர்; ஆனால், வேறுசிலர் அதைக் கடுமையாகக்

குறை கூறுகின்றனர். போட்டியிடுபவருள் ஒருவரை ஆதரித்தால், மற்றவர் நிச்சயமாக ரஷ்யா அல்லது பாரசீகத்தின் உதவியைப் பெறுவதற்கு முயல்வார் என்னும் அச்சத்தினலே தான், அவர் நடுவு நிலைமைக் கொள்கையைப் பின்பற்ற நேர்ந்தது. இதற்கு எதிராக, பிரிட்டிஷ் அரசு தலையிட்டாலும், தலையிடாவிட்டாலும், எதிர்பார்க்கும் இந்நிகழ்ச்சி நடந்தே தீரும் எனக் குறிப்பிடப்படுகின்றது. பிரிட்டிஷ் ஆட்சி நடுவு நிலைமையைப் பின்பற்றுவதால், அயலாரின் தலையீடு ஏற்படும்பொழுது, அதைத் தடுப்பதற்கு அதற்கு நியாய மான உரிமைகள் உண்டு; ஆனல், லாரன்சு போட்டியாளருள் ஒருவரை ஆதரித்து, மற்ருெருவரை ரஷ்யா அல்லது பாரசீகம் ஆதரிப்பதைத் தடுப்பதற்கு எவ்வித நியாயமோ, காரணமோ இல்லை; ஆனல், இவ்விஷயம் மறுக்கப்படுகிறது. எப்படியிருந்த போதிலும், ஆப்கானியப்போரைத் தனிப்படுத்துவதில் அவர் வெற்றி பெற்ருர்; பல நாடுகள் தலையிட்டுக் குழப்பம் ஏற்படுத்துவதையும் தடுத்தார்.

போட்டியிடுபவர்களுள் ஒருவரை லாரன்சு ஆதரித்து, பதவியைப் பெறுவதற்கு உதவி செய்திருந்தாரானல், ஆப்கானிஸ்தானத்தில் உறுதியாக ஊன்றுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கும். அதனல், ரஷ்யச் செல்வாக்கு அந்நாட்டில் ஏற்படாதபடி உறுதியாகத் தடுத்திருக்க இயலும் என்பதையே, லாரன்சைக் குறை கூறுபவர்கள் குறிப்பாகச் சொல்கின்ருர்கள். முதலாவது ஆப்கானியப் போரின் அனுபவம், இப்படி எதிர்பார்ப்பதற்கு மாருகவே இருந்தது; தவருன ஒருவரை லாரன்சு ஆதரிக்க நேரலாம்; அத்தவறுகளை ஈடு செய்வதற்காகப் பின்பு மிக வருந்த நேரிடும். இவ்விதப் பேராபத்தையும் தடுக்க முடியாதபடி ஏற்படும் ரஷ்யப் போரையும் மனத்தில் கொண்டால், லாரன்சு பின்பற்றிய நிதானம் மிக்க கொள்கைக்காக அவரை மன்னிக்கலாம். இது ஒரு துணிகரச் செயல்தான்; இதில் வெற்றி பெற்ருல், தீர்க்க தரிசனமான ராஜதந்திரமுள்ள நடவடிக்கை இது எனப் புகழப்படும்; தோல்வியடைந்தாலோ, துடுக்கான, முட்டாள் தனமான துணிகரச் செயல் எனத் தூற்றப்படும்.

லாரன்சின் கொள்கையின் விளைவு, பிரிட்டிஷ் ஆட்சிக்கு அனுசரணையாய் இல்லை என்பது தெளிவு. தமது வாழ்க்கையின் ஆபத்து மிக்க காலங்களில் தமது உதவிக்கு வர மறுத்த வல்லரசுடன் புதிய அமீரான ஷெர் அலி, நட்புணர்ச்சியுடன் இருப்பார் என எதிர்பார்த்தல் இயலாது. ‘ஆங்கிலேயர்கள்

தங்களுடைய நலன்களைக் கருதினார்களேயன்றி, வேறு எதையும் கவனிக்கவில்லை,' என்கிற சாதாரண உண்மையை ஷெர் அலி, எளிதில் புரிந்துகொண்டிருப்பார். 'ஒரு சிறிது காலத்திற்கு ஆற்றலுடன் இருப்பவர்களைப் பார்த்து, அவர்கள் தங்களுடைய நண்பர்களாகக் கருதுகிறார்கள்,' என அவர் வெறுப்புடன் கூறினார்.

ஆப்கானிஸ்தான் இவ்விதம் குழப்பமுற்றிருக்கையிலே தான் ரஷ்யர்கள் தங்களுடைய ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பை மத்திய ஆசியாவில் தொடங்கினார்கள். 1864ஆம் ஆண்டில் முன்னேறும் முதல் நடவடிக்கையை அவர்கள் எடுத்தார்கள். புகாரா ரஷ்யாவுக்குக் கீழ்ப்பட்ட நாடாக, 1866-ல் செய்யப் பட்டது. முன்பு படைத்தளமாய் விளங்கிய ஆரன்பர்கு (Orenburg) என்னுமிடத்திலிருந்து ஆயிரம் மைல் தொலைவி லிருந்த தாஷ்கெண்டை (Tashkend) தலை நகரமாகக்கொண்ட ரஷ்யத் துருக்கிஸ்தானம் என்கிற புதிய ரஷ்ய மாகாணத்தை மறு ஆண்டில் ஏற்படுத்தினார்கள். 1868ஆம் ஆண்டில், ரஷ்ய நாட்டுடன் சாமர்கண்டும் சேர்க்கப்பட்டது; ஐந்து ஆண்டு களுக்குப் பிறகு கிவாவும் ரஷ்யப் பிரதேசமாய் மாறியது.

ரஷ்யா ஆப்கானிஸ்தானத்தை நோக்கித் துரிதமாக முன்னேறியதால், பிரிட்டிஷ் ஆட்சி அச்சமும் கவலையும் கொள்வதைத் தவிர்க்க முடியாதுதான். அண்மையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் காரணமாக, பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாக மாறிய புதிய அமீரை நீக்குவதுதான் அவர்களுடைய முதல் முயற்சியாய் இருந்தது. 1868-ல், பணத்தையும் படைக்கலங்களையும் லாரன்சு அனுப்பினார்; இவ்வுதவித் தொகை கொடுப்பதை மேயோ பிரபுவும் (1869–72) தொடர்ந்து நடத்தி வந்தார். அமீரின் நாட்டைப் பெறுவதில் இம்முறைகள் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றன என்பதைக் கூறுவது கடினந்தான். ஆனால், ரஷ்யாவின் முன்னேற்றம், ஆப்கானிஸ்தானத்திற்கு ஒரு பெரிய இடை யூறாகவே இருந்தது; அதனால், ஆங்கிலேயரின் உதவியைப் பெற அமீர் விருப்பமுள்ளவராய் இருந்தார். இருவர்க ளிடையே இருந்த வேற்றுமை நீங்கி, மறுபடியும் ஒன்று சேர் வதை இந்நிகழ்ச்சி சுலபமாக்கியது. இச்சமயத்தில் ஆங்கிலே யர்கள் நுட்பமான திறத்துடனும், ராஜதந்திரத்துடனும் நடந் திருந்தால், அமீரைத் தம் பக்கத்திற்கு இழுத்திருக்க முடியும்; ஆனால், துரதிருஷ்டவசமாக, இவ்வாபத்து மிக்க சமயத்தில்

ஆங்கில ராஜதந்திரம் பரிதாபமான முறையில் தோல்வியடைந்தது; அமீரின் நட்புறவைப் பெறுவதற்குப் பதிலாக, அவரை ரஷ்யர்களின் கையில் சிக்கும்படி செய்தது.

அமீரும், மேயோ பிரபுவும், 1869ஆம் ஆண்டில் அம்பாலாவில் சந்தித்துப் பேசினர். இச்சந்திப்பு நீடித்த நட்புறவைப் பெறுவதற்கு அருமையான சந்தர்ப்பங்களை அளித்தது. ரஷ்யாவிற்கு எதிராக அமீரை ஆதரித்து, அவரையும் அவருடைய சந்ததியார்களைத் தவிர மற்றவரையும் ஆப்கானிஸ்தானத்தின் அமீராக ஏற்றுக்கொள்வதில்லை என்கிற உறுதிமொழியை ஆங்கிலேயர்கள் கொடுத்தால் அதற்கு ஈடாக அவர்களுடைய எல்லாக் கோரிக்கைகளையும் ஏற்றுக்கொள்வதற்கு அமீர் தயாராய் இருந்தார். இவ்விதக் குறிப்பிட்ட உறுதி மொழிகளைக் கொடுப்பதற்குப் பதிலாக, அமீருக்கு எழுதிய கடிதத்தில், 'உம்மைப் பதவியிலிருந்து நீக்குவதற்காக உம் பகைவர்கள் செய்யும் எவ்வித முயற்சிகளையும் மிக்க வெறுப்புடன் இந்திய அரசு நோக்கும்,' என்பதையும், 'மேன்மை பொருந்திய அரசரின் ஆட்சியை உறுதிப்படுத்துவதற்கு மேலும் முயற்சி செய்யும்,' என்பதையும் மட்டும் மேயோ பிரபு கூறியிருந்தார்.

மேயோவின் ஆதரவாளர்கள், அம்பாலாவில் நடந்த சந்திப்பை ஒரு மாபெரும்வெற்றி எனக்கூறி, ஷெர்அலி, ஆங்கிலேயர் பக்கத்தில் சேரும்படி செய்யப்பட்டார் என மற்றவர்கள் நினைக்க வேண்டும் என்பதற்காகப் பாசாங்கு செய்தார்கள். ஆனால், ஷெர் அலி ஊக்கமுள்ளவராய் இருந்தால், திட்டமான உறுதி மொழிகளுக்கும், மேயோ பிரபுவின் கடிதத்தில் கூறப்பட்டுள்ள பொதுப்படையான உத்தரவாதத்திற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை எளிதில் உணர்ந்துகொண்டார். எப்படியிருந்த போதிலும், கிவாவை ரஷ்யர்கள் ஆக்கிரமித்துக்கொண்டதைக் கண்டு அஞ்சி, நார்த்புரூக்குப் பிரபு (Lord Northbrook) என்கிற அடுத்து வந்த கவர்னர்-ஜெனரலிடம் தம் பிரதிநிதியை 1873ஆம் ஆண்டில் அவர் அனுப்பினர்; ரஷ்யா அல்லது அதனால் பாதுகாக்கப்பட்ட அல்லது அதைச் சார்ந்து இருக்கிற நாடுகள், அமீரின் நாட்டைத் தாக்கினால், பிரிட்டிஷ் அரசு பணமும் படைக்கலங்களும் கொடுத்து உதவுவதோடு, தேவைப்பட்டால், அவருக்கு உதவியாக இராணுவத்தையும் அனுப்பும் என்கிற திட்டவட்டமான உறுதி மொழிகளை எழுத்து மூலமாகக் கொடுக்க வேண்டும் எனவும் அவர் கோரினர்.

நார்த்புரூக்குப் பிரபு (1872-76) நிலைமையை நன்கு ஆராய்ந்து, அமீரின் கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ள விரும்பினார். ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் இப்படிப்பட்ட ஓர் உறுதிமொழியை இந்திய வைஸ்ராய் தம் சொந்தப் பொறுப்பின்மீது கொடுத்துவிட்டு, அவர் செயலை அங்கீகரிக்கும்படி இந்தியக் காரியதரிசிக்கு எழுதியிருக்கக் கூடும். ஆனால், இந்தியாவிற்கும் இலண்டனுக்குமிடையில் நேரிடையான தந்திப் போக்குவரத்து ஏற்பட்டதால், கவர்னர்-ஜெனரலுக்கும் இந்தியக் காரியதரிசிக்கும் இடையில் இருந்த உறவில் பெரும் மாறுதல் உண்டாயிற்று. 1873ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 24ஆம் தேதி இந்தியக் காரியதரிசியாருக்கு அனுப்பிய தந்தியில், 'அயல் நாட்டு விவகாரங்களில் நம்முடைய ஆலோசனைகளை நிபந்தனையில்லாமல் ஏற்று அவற்றின்படி நடப்பதற்கு ஒப்புக்கொண்டால், அவருக்குப் பணமும் படைக்கலங்களும் கோபமூட்டப்படாத படையெடுப்பை எதிர்த்து விரட்டுவதற்காகத் தேவைப்பட்டால் துருப்புகளையும் கொடுத்து உதவுவோம்; தேவை என்ன என்பதை நாமே முடிவு செய்வோம்,' என்கிற உறுதிமொழியை அமீருக்குக் கொடுக்க உத்தேசித்துள்ளதாக அவர் அதில் கூறியிருந்தார்.

ஆனால், இந்தியக் காரியதரிசியார் இத்திட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தார்; ஏனெனில் கிளாட்ஸ்டனுடைய (Gladstone) மந்திரிசபை, ரஷ்யாவை விரோதித்துக்கொள்ள விரும்பவில்லை; மேலும், மத்திய ஆசியாவில் ஏற்பட்ட ரஷ்ய முன்னேற்றத்தினால் ஆப்கானிஸ்தானின் பாதுகாப்பிற்காவது அல்லது இந்தியாவின் பாதுகாப்பிற்காவது எவ்வித ஆபத்தும் இல்லை என்று அம்மந்திரிசபை கருதியது. தாய் நாட்டு அரசாங்கத்தின் கட்டளைப்படி, 'ஆப்கானிஸ்தானத்தில் உறுதியாக்கப்பட்ட கொள்கைப்படி நாம் நடப்போம்,' என்கிற உறுதிமொழியைத்தான் நார்த்புரூக்குப் பிரபுவால் அமீருக்கு அளிக்க முடிந்தது. ரஷ்யாவிற்கு எதிராக அமீரைப் பாதுகாப்பதற்கு ஆங்கிலேயருக்கு விருப்பமில்லை என்பதையே இது காட்டுகிறது என்று அமீர் கூறினார்.

மேலும், இரண்டு நிகழ்ச்சிகளால் அமீர் ஆங்கிலேயரை வெறுக்க நேர்ந்தது. செயிஸ்தான் (Seistan) எல்லைகள் சம்பந்தமாகப் பாரசீகம், ஆப்கானிஸ்தான் என்னும் நாடுகளின் உரிமைகளைப்பற்றி அவற்றுக்கிடையே மத்தியஸ்தம்

செய்து வைப்பதாக, பிரிட்டிஷ் அரசாங்கம் முட்டாள்தனமாக ஒப்புக்கொண்டது. சில பிரிவுகளில் ஆப்கானிஸ்தானத்திற்கு எதிராக, பிரிட்டிஷ் முடிவு இருந்ததால், அது அநீதியான செய்கை என அமீர் கோபமடைந்தார். இரண்டாவதாக, அப்துல்லா ஜான் (Abdullah Jan) என்கிற தம் மகனை அமீர் வாரிசாகத் தேர்ந்தெடுத்து, தமது முடிவை இந்திய அரசாங்கத்திற்குத் தெரிவித்தபோது, அதை ஏற்றுக்கொள்ள முடியாதென்று நார்த்புரூக்குப் பிரபு கூறினர்; சிம்மாதனத்தைப் பெறுவதற்குப் போட்டியாளர்களுடன் போரிட்ட போது அமீருக்கு பிரிட்டிஷ்காரர்களிடமிருந்து கிடைத்த உதவியைவிட அதிக உதவியை அப்துல்லா ஜான் எதிர் பார்க்க முடியாது என்பது அமீருக்கு நிச்சயமாகப் புரிந்து விட்டது.

ஆங்கிலேயர்களின் மனப்பான்மையைக் கண்டு வெறுப் படைந்த அமீர், ரஷ்யர்களுடன் ஒரு சிறந்த உடன்பாட்டைச் செய்துகொள்ள மிக்க விருப்பத்துடன் இருந்தார். அதனல், இச்சமயத்தை நழுவ விடாமல், அதை உடனே ரஷ்யர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள். ஆப்கானிஸ்தான் அவர்களுடைய விருப்ப மண்டலத்திற்கு அப்பால் இருப்பதாக அவர்கள் கூறினலும், அவர்கள் அமீருடன் கடிதப் போக்கு வரத்துச் செய்து, அவர்களுடைய நல்லெண்ணங்களை அமீர் விரும்பும்படி செய்தார்கள். ரஷ்யர்களின் கடிதப் போக்கு வரத்து, படிப்படியாய் அதிகரித்தன; அக்கடிதத்தைக் கொண்டு வந்தவர்களை ரஷ்ய அரசாங்கத்தின் பிரதிநிதிகளைப் போன்று அமீர் நடத்தினர்; அவர்கள் காபூலில் எப்பொழுதும் காணப்பட்டார்கள்.

இதற்கிடையில் தாய்நாட்டு அரசாங்கத்தில் மாறுதல் ஏற்பட்டது. 1874ஆம் ஆண்டில் கிளாட்ஸ்டனுக்குப் பிறகு டிஸ்ரேலி (Disraeli) பதவிக்கு வந்தார்; அதனல் சாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) இந்தியக் காரியதரிசியாரானர். இரண்டு ஆண்டுகளுக்குப் பின், நார்த்புரூக்கு என்பவரை அடுத்து லிட்டன் பிரபு (Lord Lytton) (1876–80) வைஸ்ராயாய் நியமிக்கப்பட்டார். 1877ஆம் ஆண்டில் நடந்த ரஷ்ய-துருக்கிப் போரால், ரஷ்யாவிற்கும் இங்கிலாந்திற்கும் இடையே இருந்த உறவு பாதிக்கப்பட்டது; அதனல், இவ்விரு நாடுகளுக்கு மிடையே போர் ஏற்படும் நிலைமை உருவானது. சூழ்நிலை இங்கிலாந்திற்குப் பெரிதும் பாதகமாய் இருந்தது. ஆப்கானிய

விவகாரங்களில் உறுதியுடன் இருந்து, அப்பிரதேசத்தில் ரஷ்யரின் செல்வாக்கைத் தடுப்பதற்குப் புதிய மந்திரிசபை முடிவு செய்தது.

அவர்கள் எடுத்த முதல் நடவடிக்கை, குவெட்டாவைக் கைப்பற்றியதுதான். குவெட்டா காண்டகாருக்குச் செல்லும் பாதையில் இருந்ததால், எல்லையில் ஒரு முக்கிய இடமாய் இருந்தது; கைபர்க் கணவாய் வழியாக இந்தியாவைத் தாக்கும் படையின் ஒரு பாகத்தை இவ்விடத்திலிருந்து அழிக்க இயலும். காலத் கானிடம் (Khan of Kalat) ஓர் உடன் படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அதன்படி, 1877ஆம் ஆண்டில் குவெட்டா கைப்பற்றப்பட்டது.

ஹீரட்டில் ஒரு பிரிட்டிஷ் ஏஜென்டை நியமிப்பதுதான், புதிய மந்திரி சபையின் இரண்டாவது குறிக்கோள். ஏனெனில், எல்லையில் நடமாடும் ரஷ்யர்களைப் பற்றிய உண்மையான தகவல்களை அறிந்து அரசாங்கத்திற்குத் தெரிவிப்பதற்கு இது வசதியாய் இருக்கும். 1876ஆம் ஆண்டுவரையில் வைஸ்ராயாய் இருந்த நார்த்புரூக்குப் பிரபுவும், அவர் ஆலோசனை மன்றத்தின் பெரும்பான்மையான அங்கத்தினர்களும் இக்கொள்கையை எதிர்த்தார்கள். இதை ஏற்றுக் கொள்ள அமீர் நிச்சயமாக மறுத்துவிடுவார். அதன் விளைவு மற்றொரு போராக இருக்கும் என அவர்கள் நினைத்தார்கள். தமது கொள்கையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சாலிஸ்பரி பிரபு வற்புறுத்தினார். அதனால், நார்த்பூருக்குப் பிரபு, தம் வைஸ்ராய் பதவியை ராஜினாமாச் செய்தார்; அதனால் லிட்டன் பிரபு, வைஸ்ராயாய் நியமிக்கப்பட்டு, புதிய கொள்கைகளைப் பின்பற்றும்படி கூறப்பட்டார். 1873ஆம் ஆண்டில் அமீர் விதித்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்வதாக, வைஸ்ராய் கூறினார்; ஆனால், இப்படியிருந்தாலும், பிரிட்டிஷ் தூதுக்குழுவை ஏற்க அவர் மறுத்தார். அவர் இதற்கு ஒப்புக் கொண்டால், ரஷ்யா அனுப்புகிற மற்றொரு தூதுக்குழுவையும் அவர் மறுக்க முடியாது என்பதை எடுத்துக் கூறினார்.

இதற்கிடையில், ரஷ்யாவுடன் கொண்ட அமீரின் உறவு அதிகரித்தது. 1878ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில், ஓர் ஒப்பந்த நகலுடன், 'ஸ்டோலியெடோப்' (Stolietoff) என்கிற தம் அதிகாரியை, ரஷ்ய கவர்னர்-ஜெனரல், அமீரிடம் அனுப்பினார்; 1873ஆம் ஆண்டில், அமீர், பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டதும் 1878ஆம் ஆண்டில் லிட்டன் பிரபு ஏற்றுக் கொண்டதுமான நிபந்தனையை, இவ்வுடன்படிக்கையின் நகல்

ஏற்றுக்கொண்டது. தூதுவருடன் தாஷ்கெண்டிலிருந்து வந்த ஒரு சிறிய படைப்பகுதியும், ஆப்கானிய எல்லையை நோக்கி வந்தது. ஆப்கானிஸ்தானத்திற்குள் வரவேண்டாவென, ஸ்டோலியெடோப்புக்கு அமீர் கட்டளையிட்டார். ஆனால், அவர் அக்கட்டளையைப் பொருட்படுத்தாமல், அந்நாட்டிற்குள் நுழைந்து, ஜூலை, 22ஆம் தேதியன்று காபூலை அடைந்தார். அவ்விடத்தில் அமீருடன் ஓர் உடன்படிக்கைக்காகப் பேச்சு வார்த்தைகள் நடத்தி, அயல் நாட்டு ஆக்கிரமிப்பிற்கு எதிராக உத்தரவாதம் அளிப்பதாகவும் ஒப்புக்கொண்டார்.

ரஷ்யத் தூதுவரைக் காபூலில் வரவேற்றதால், அமீருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குமிடையே இருந்த உறவு பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆங்கிலத் தூதுவர் ஒருவர் காபூலுக்கு அனுப்பப்படுவார் என்பதை லிட்டன் பிரபு அமீருக்கு அறிவித்தார்; இதற்கான தாய்நாட்டு அங்கீகாரத்தை அவர் முன்னதாகவே பெற்றுவிட்டார். அத்தூதுக்குழு, கைபர்க் கணவாய் வழியாக அனுப்பப்பட்டாலும், அது ஆலி மஸ்ஜித்து என்னும் இடத்தருகே செப்டெம்பர் மாதம், 21ஆம் தேதி நிறுத்தப்பட்டது. அத்தூதுக்குழுவை ஏற்றுக்கொண்டு, அதை 26ஆந் தேதிக்குள் தெரியப்படுத்தாவிட்டால், அமீரின்மீது போர் தொடுக்கப்படும் என்கிற இறுதி எச்சரிக்கையை நவம்பர் மாதம், 2ஆம் தேதி லிட்டன் பிரபு அனுப்பினார். இதனால், ரஷ்யாவின் உதவியை அமீர் நாடினார். ஆனால், இதற்கிடையில் பெர்லின் உடன்படிக்கைப்படி, ஐரோப்பியப் பிரச்சினைகள் தீர்க்கப்பட்டன. அதனால், அவ்வுடன்படிக்கையை மீறி அவ்வுடன்படிக்கை மூலம் பெறப்பட்ட எல்லா ஆதாயங்களையும் இழந்துதான் இங்கிலாந்துடன் போர் புரிய முடியும். அதனால், பிரிட்டிஷ் அரசுடன் ஷெர் அலி சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்று, காப்மான் (Kaufmann) என்கிற ரஷ்யக் கவர்னர்-ஜெனரல் அமீருக்கு ஆலோசனை கூறினார். பிரிட்டிஷ் ஆட்சிக்கு அதிருப்தியை உண்டாக்க வேண்டும் என்பதற்காக அமீரை ஊக்குவித்த ரஷ்யர்கள் உரிய சமயத்தில் அவரைக் கைவிட்டார்கள்.

நவம்பர் மாதம், 20ஆம் தேதி பிரிட்டிஷ் துருப்புகள், ஆப்கானிஸ்தானத்தின்மீது படையெடுத்தன. ராபர்ட்ஸ் தம் ஆற்றல் மூலம் குர்ரம் கணவாயைக் கடந்தார்; காண்டகார், ஜெனரல்-ஸ்டுவர்ட்டு என்பவரால் கைப்பற்றப்பட்டது. டிசம்பர் மாதத்தில் ஷெர் அலி துருக்கிஸ்தானுக்குச் சென்று, சில நாள்களில் மரணமடைந்தார். அவருக்கு மைந்தரான

யாகூப் (Yakub) ஆங்கிலேயருடன் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கி, 1879ஆம் ஆண்டு, மே மாதம், 26ஆம் தேதி கண்டமக் உடன்படிக்கையில் (Treaty of Gandamak) கையெழுத்திட்டார்.

இவ்வுடன்படிக்கை ஆங்கிலேயர்களுக்கு மிக்க அனுசரணையாய் இருந்தது. அவர்களுடைய எல்லாக் கோரிக்கைகளும் அமீரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. நிரந்தர பிரிட்டிஷ் தூதுவர் ஒருவரைக் காபூலில் ஏற்றுக்கொள்வதற்கும் வைஸ்ராய் ஆலோசனையுடன் தம் அயல் நாட்டு விவகாரங்களை நடத்தவும் அமீர் ஒப்புக்கொண்டார். குர்ரம், பிஷின் (Pishin), சிபி (Sibi) என்னும் மாவட்டங்களையும் அமீர் ஆங்கிலேயருக்குக் கொடுத்தார்.

அவ்வுடன்படிக்கையின் நிபந்தனைப்படி, கவக்நரி (Cavagnari) என்கிற பிரிட்டிஷ் ஏஜென்டு, ஜூலை மாதம், 24ஆம் தேதியன்று காபூலை அடைந்தார். ஆனால், செப்டெம்பர் 3ஆம் தேதி, ஒரு கலகப்படையால் அவர் கொல்லப்பட்டார். இச்சதியில் அமீரின் பங்கு இருக்குமானால், அது எத்தகையது என்பது எப்பொழுதும் தீர்மானிக்கப்படவில்லை. பிரச்சினையைத் தீர்ப்பதில் கவக்நரி நமது திறமையின்மையைக் காட்டினர் என்பதில் ஐயமில்லை. அவர் பின்வாங்க வேண்டும் என்பதை அமீர் விரும்பினர் என்பதிலும் சந்தேகமில்லை.

இவ்விதமான நேர்மையற்ற கொலையால், மறுபடியும் போர் தொடங்கியது. அக்டோபர் மாதம், 7ஆம் தேதி, ராபர்ட்ஸ் காபூலைக் கைப்பற்றினர். பிரிட்டனுடன் அமீர் சேர்ந்துகொண்டாலும், ஆட்சி செய்வதற்குத் தகுதியற்றவரென நினைத்து, அவர் நீக்கப்பட்டு, இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார். ஷெர் அலியின் மருமகனும் ரஷ்ய ஆதரவின் கீழ்ச் சாமர்கண்டில் அகதியாய் இருந்தவருமான அப்துர் ரஹ்மானுடன் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின.

ஆனல், இப்பேச்சுவார்த்தைகள் முடியுமுன்பே பீக்கன்ஸ்பீல்டு பிரபுவின் (Lord Beaconsfield) அரசாங்கம் கிளாட்ஸ்டன் கைக்கு மாறியது. முன் இருந்தவர்களின் ஆப்கானியக் கொள்கை முழுவதையும் மாற்றவும், கண்டமக் உடன்படிக்கை மூலம் கொடுக்கப்பட்ட மாவட்டங்களிலிருந்து

வெளியேறவும், புதிய அரசு முடிவு செய்தது. இப்புதிய கொள்கைகளைப் பின்பற்றுவதற்காக ரிப்பன்பிரபு (1880–84) வைஸ்ராயாக அனுப்பப்பட்டார்.

ரிப்பன் பிரபு இந்தியாவை அடைந்த சில நாள்களுக்குள் (1830, ஜூன், 8ஆம் தேதி) காண்டகாரிலிருந்த பிரிட்டிஷ் துருப்புகள், ஷெர் அலியின் மகனுரான அயூப்கான் என்பவரால், மய்வண்ட் (Maiwand) என்னுமிடத்தில் (1880, ஜூலை,) தோற்கடிக்கப்பட்டது. காபூலிலிருந்து காண்டகார் செல்லும் பிரபலப் பயணத்தை, ராபர்ட்ஸ் தொடங்கி, அயூப்கானுடைய படையை முறியடித்தார். இந்நடவடிக்கையின்போது, அப்துர் ரஹ்மானுடைய பேருதவி கிடைத்தது.

இந்தியாவில் இருக்கும் நிலையை உணர்ந்து, தம் முன்னவர்களின் கொள்கையைப் பின் பற்றுவதென ரிப்பன் முடிவு செய்து, அப்துர் ரஹ்மானிடம் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். ஆண்டுதோறும் கொடுக்கப்படும் பண உதவிக்குப் பதிலாக, தமது அயல் நாட்டுக் கொள்கையை இந்திய அரசாங்கம் கட்டுப்பாடு செய்வதற்குப் புதிய அமீர் ஒப்புக் கொண்டார். கண்டமக் உடன்படிக்கைப்படி கொடுக்கப்பட்ட மாவட்டங்களை ஆங்கிலேயர் தம்மிடம் வைத்துக்கொண்டனர்.

இரண்டு போட்டி வல்லரசுகளான ரஷ்யாவும் இங்கிலாந்தும், தங்களுடைய செல்வாக்கை ஆப்கானிஸ்தானத்தில் ஏற்படுத்த விரும்பியதாலேதான் இரண்டாம் ஆப்கானியப் போர் நிகழ்ந்தது. ஆப்கானிஸ்தான் வழியாக ரஷ்யா இந்தியாவைத் தாக்கக்கூடும் என, ஆங்கில ராஜதந்திரிகள் அச்சமடைந்தார்கள். ஆனால், இவ்வாபத்து உண்மையானதாவென்பது, ஐயத்திற்கிடமானது. ஆப்கானிஸ்தானத்தை நட்பாகப் பெற்ற ரஷ்யா, பிரிட்டிஷ் ஆட்சியின்மீது நிர்ப்பந்தங்களைப் பிரயோகித்து, ஆபத்தான ஓர் ஐரோப்பியப் போரின் போது, இவ்விடத்தில் போரில் ஈடுபடுத்தி, தனது மேலான நிலையை ஒரு கருவியாக உபயோகித்து ஐரோப்பாவிலிருந்து ஆங்கிலேயரிடமிருந்து சலுகைகள் பெறலாம் என்பதில் சந்தேகமில்லை. இப்படி ஆப்கானிஸ்தானம், ஐரோப்பா எனும் சதுரங்கப் பலகையில் சிறு மதிப்புடைய வெறுங் காயாக உபயோகப்படுத்தப்பட்டது; பரிதாபமான ஷெர் அலி, தாம் பொறுப்பாக இல்லாததும் கட்டுப்படுத்த முடியாததுமான ஒரு சூழ்நிலைக்குப் பலியானர்; பெர்லின்

உடன்படிக்கைதான், ஷெர் அலியின் வீழ்ச்சிக்கு நேரிடையான காரணம் என்ருல், அது வியப்பாகத்தான் இருக்கும்.

இங்கிலாந்தும் ரஷ்யாவும் பின்பற்றிய ஆப்கானியக் கொள்கை, சுய நலக் குறிக்கோளுடன், ஏகாதிபத்தியக் கொள்கையின்மீது எழுப்பப்பட்டது. இந்தக் காரணத்தினுல் மட்டுந்தான், லிட்டன், சாலிஸ்பரி ஆகியவர்களின் முன்னேறும் கொள்கை (Forward Policy) நியாயமெனக் கூறலாம்; ஏனெனில், பிரிட்டிஷ் ஆட்சிக்கு உறுதியான ஓர் இடத்தை ஆப்கானிஸ்தானத்தில் பெற்றுத் தந்து, ரஷ்யர்களின் செல்வாக்கு மண்டலத்தில் ஆப்கானிஸ்தானே வைக்கக் கூடிய ஆபத்தை அது அகற்றுவதால், பிரிட்டிஷ் ராஜதந்திரத்தின் முக்கியக் குறிக்கோளே இதனுல் பெற முடிகிறது.

ஆப்கானிஸ்தானத்தில் பிரிட்டிஷ் செல்வாக்கு ஏற்பட்டதால், ரஷ்யாவின் முன்னேறும் கொள்கை மிகவும் தடைபட்டது. ஆனுல், இழந்ததை ஈடு செய்யும்பொருட்டு ரஷ்யர்கள் காவல் நிலையங்களே முன்னுக்குத் தள்ளினுர்கள். சமாதான நோக்கங்களேத் தவிர வேறு எதுவும் இல்லே எனக் கூறி, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அச்சங்களேப் போக்குவதற்கு ரஷ்ய அயல் நாட்டு இலாக்கா எப்பொழுதும் முயற்சி செய்தது; ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளே உள்ளூர் அதிகாரிகளின் அதிகார பூர்வமில்லாத நடவடிக்கைகள் அல்லது உள்ளூர்த் தேவைக்காக எடுக்கப்பட்டவைகள் என்பது விளக்கப்பட்டது, இறுதியில் மெர்வ் (Merv) ரஷ்ய நாட்டுடன் சேர்க்கப்பட்ட போது, மிகத் தீவிரமான கண்டனங்களே பிரிட்டிஷ் அரசாங்கம் தெரிவித்தது. ரஷ்ய-ஆப்கானிய எல்லேகளே வரையறுக்கும் திட்டத்தை ரஷ்யர்கள் ஏற்றதுதான், இதனுல் விளேந்த ஒரே பயன். இரு பக்கத்தைச் சேர்ந்த கமிஷனர்கள் நியமிக்கப்பட்டாலும், ரஷ்யாவைச் சேர்ந்தவர்கள் ஏதோ ஒரு காரணத்தைக் காட்டி, பிரச்சினேயைத் தாமதம் செய்தனர். இதற்கிடையில் ரஷ்யர்கள் தங்களுடைய உரிமைகளே நடந்து போன செய்கைகளாக மாற்றும்பொருட்டு விவாதத்திற்கிடமான பிரதேசங்களேக் கைப்பற்றினுர்கள்.

பஞ்டே (Panjdeh) என்னுமிடத்திலிருந்த ஆப்கானியர்களே 1885ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 30ஆம் தேதி விரட்டிவிட்டு, அதை ரஷ்யர்கள் கைப்பற்றியதால், உணர்ச்சிகள் உச்ச நிலேக்குச் சென்றன. அமைதியை விரும்பிய, கிளாட்ஸ்டனின் மந்திரி சபையும், போர் நடவடிக்கைகளே எடுக்கும் அளவுக்கு

உணர்ச்சிகள் பெருகின. படை திரட்டுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன; இராணுவ நடவடிக்கைகளை எடுப்பதற்குச் சாதகமாகப் பாராளுமன்றம் ஒரு நம்பிக்கைத் தீர்மானத்தை நிறைவேற்றியது. தடுக்க முடியாதெனக் கருதப்பட்ட இப் போர், கிளாட்ஸ்டனின் திறமையால் தடுக்கப்பட்டது. இறுதியில், இரு நாடுகளும் ஓர் உடன்பாட்டிற்கு வந்தன. பஞ்டேயை ரஷ்யர்கள் தங்களுடன் வைத்துக்கொண்டாலும், ஜுல்பிகர் கணவாய் (Zulfikar Pass) அமீருக்குக் கொடுக்கப்பட்டது.

இவ்விதம் இணக்கமான உடன்பாட்டிற்குப் பிறகு ரஷ்யாவிற்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் இடையே இருந்த உறவு சீர்திருந்தியது. 1886ஆம் ஆண்டில், எல்லைக்கமிஷன் தன் வேலையை முடித்தது; ஆக்ஸஸ் (Oxus) எனும் இடத்திலிருந்து, ஜுல்பிகர் கணவாய் வரையிலும் இருந்த ரஷ்ய ஆப்கானிய எல்லை, முறையாக வரையறுக்கப்பட்டது. ஆறு ஆண்டுகள் வரையிலும் சமாதானம் தொடர்ந்து நிலவியது. ஆனால், 1892-ல், பாமீர்கள் (Pamirs) முழுமைக்கும் ரஷ்யர்கள் உரிமை கொண்டாடியதால், மறுபடியும் தகராறுகள் எழுந்தன. இறுதியில் 1895ஆம் ஆண்டில் ஓர் உடன்பாடு ஏற்பட்டது; இப்பிரதேசத்தின் எல்லைக்கோடு முறையாக ஏற்பட்டது. ஆசியப் பேரரசுகள்மீது இங்கிலாந்தும் ரஷ்யாவும் கொண்டிருந்த நெடுநாளைய போட்டி, தற்காலிகமாக முடிவுக்கு வந்தது. ஆப்கானிஸ்தானைத் தன் உறுதியான கட்டுப்பாட்டின் கீழ் இங்கிலாந்து வைத்திருந்தது; ரஷ்யா தன் கண்ணோட்டத்தைக் கிழக்கை நோக்கிச் செலுத்தியது.

இதிலிருந்து பல ஆண்டுகள் வரையில், இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புறத்தின் கொள்கை, ஆப்கானிஸ்தானத்துடன் உறவுகளுடன் மட்டும் நிறுத்திக்கொள்ளப்பட்டது. ஆப்கானிய, பிரிட்டிஷ் பிரதேசங்களுக்கிடையில் வாழ்ந்து கொண்டும், இரண்டு நாடுகளின் மேலுரிமையை ஏற்காமலும் இருந்த நாகரிகமற்ற மலைவாசிகளின் நிலைமைதான், முக்கியப் பிரச்சினையாய் இருந்தது. 'முன்னேறும் கொள்கை' எனக் கூறப்பட்ட கொள்கையை அனுசரித்து, தனது ஆதிக்கத்தை அவர்கள்மீது ஏற்படுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் ஆவலோடு இருந்தது; ஏனெனில், இதனால் பிரிட்டிஷ் இந்தியாவின் எல்லை சிந்து நதிக்கப்பாலும் பரவியிருக்கும். சிறிது இடர்ப்பாட்டிற்குப் பின், தங்கள் செல்வாக்கு மண்டலத்தைப்பற்றி இரண்டு அரசுகளும் ஓர் உடன்பாட்டிற்கு வந்தன. சர். மார்ட்டிமர் துராண்டு (Sir Mortimer Durand) தலைமையில்

ஏற்படுத்தப்பட்ட ஆப்கானிய எல்லைக் கமிஷன், முறையாக எல்லைக்கோட்டை ஏற்படுத்தியது. அமீருடைய ஆண்டு உதவித்தொகை பன்னிரண்டு லட்சத்திலிருந்து பதினெட்டு லட்சமாக உயர்த்தப்பட்டது. எல்லைக்கோட்டின் இந்திய பாகத்தில் வசித்த மலைச்சாதியார் விஷயத்தில் தலையிடுவதில்லை என அமீரும் ஒப்புக்கொண்டார்.

இம்மலைச் சாதியார்களை எப்படி நடத்துவது என்பதுதான் அடுத்த பிரச்சினை. இது ஒரு சுலபமான காரியமாகத் தெரியவில்லை. கீழ்ப்படியாத மலைச்சாதியினரை ஒடுக்குவதற்கு, இராணுவ நடவடிக்கை தேவையாய் இருந்தது. 1893ல், சித்ரால் (Chtral), கில்ஜிட்டு (Gilgit) பிரதேசங்கள் அடங்கிய ஒரு காப்பரசு நாடு (Protectorate) முறையாக அறிவிக்கப்பட்டது; ஆனால், இரண்டு வருடங்களுக்குப் பிறகு, சித்ராலில் ஏற்பட்ட வாரிசுப் போட்டியில், ஒருவருக்கு உதவுவதற்காக அனுப்பப்பட்ட ஒரு பிரிட்டிஷ் அதிகாரி, ஆங்கிலேயர்களுக்கெதிராக, ஜிஹாட் (Jihad) அல்லது தூய்மைப் போரைத் (Holy war) தொடங்கிய மலைவாசிகளால் சூழப்பட்டார். இம்முற்றுகை ஒன்றரை மாதங்கள் வரையில் நீடித்தது. அதன்பின் அவர் உதவிக்கு, கில்ஜிட்டிலிருந்து ஒரு படையும், மலகண்ட கணவாய் வழியாக மற்றொரு படையும் வந்தன. மறுபடியும், 1897ஆம் ஆண்டில் மிக மோசமான கலவரங்கள் ஏற்பட்டன. முகமண்ட்ஸ், ஆப்ரிதிகள் உட்படப் பல மலைவாசி கூட்டத்தினர் கலகஞ் செய்தனர்; முறையான இராணுவ நடவடிக்கைகள்—குறிப்பாக, திரா (Tirah) நடவடிக்கையைப் போன்றவைகள்—அவர்களை அடக்குவதற்குத் தேவைப்பட்டன.

இவ்விதக் கலகங்கள் மறுபடியும் ஏற்படாமல் தடுப்பதற்காக, எல்லைப்புற மாவட்டங்களில் ரோடுகளும், ரயில் பாதைகளும் ஏற்படுத்தப்பட்டன; அவர்களைச் சீக்கிரத்தில் அடக்குவதற்காகத் துருப்புகளும் மாற்றி அமைக்கப்பட்டன. எல்லைப்புற மாவட்டங்கள், பஞ்சாபிலிருந்து பிரிக்கப்பட்டு, வடமேற்கு எல்லை மாகாணமாகச் செய்யப்பட்டன. அம் மாகாணம் கவர்னர்-ஜெனரலின் நேரிடையான பார்வையின் கீழ், கவர்னருக்குப் பொறுப்பான ஒரு தலைமை அலுவலர் ஆதிக்கத்தின் கீழ் விடப்பட்டது.

இந்நடவடிக்கைகளால், அவ்விடங்களில் அமைதியை ஏற்படுத்திக் குழப்பங்களை ஒழிக்க இயலவில்லை. மலைவாசிகள்

அடிக்கடி பிரிட்டிஷ் பிரதேசத்திற்குள் புகுந்து திடீரெனத் தாக்குவதும், மற்றக் குழப்பங்களைச் செய்வதும் நிலைபெற்று விட்ட வழக்கமாகிவிட்டன. அவர்களுக்குப் பேரச்சத்தை உண்டாக்குவதற்காக, ஆகாய விமானத்திலிருந்து குண்டுகளை வீசும்படி இந்திய அரசு உத்தரவிட்டது. இப்படிப் பின்னர் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது, பிரிட்டிஷ் ஆட்சியின் 'முன்னேறும் கொள்கை'யின் விளைவுகளைப்பற்றி லேன்ஸ்டவுன் பிரபுவுக்கு (1888-94) தாம் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்ட அமீர் அப்துர் ரஹ்மானின் விவேகத்தை நாம் பாராட்டத்தான் வேண்டும்.

'அவர்களை (மலைச்சாதியினரை) என் நாட்டிலிருந்து நீங்கள் பிரிப்பதனால், அவர்களால் உங்களுக்கும் பயன் இல்லை, எனக்கும் பயன் இல்லை. அவர்களுடன் நீங்கள் எப்பொழுதும் போரிட வேண்டியிருக்கும், அல்லது மற்றத் துன்பங்களில் சிக்க வேண்டியிருக்கும். அவர்கள் எப்பொழுதும் கொள்ளை அடித்துக்கொண்டுதான் இருப்பார்கள். உங்கள் அரசாங்கம் உறுதியாய் உள்ள வரையிலும், அமைதியான காலத்திலும், தீவிர நடவடிக்கை மூலம் அவர்களை அடக்கி ஆள இயலும்; ஆனால் எப்பொழுதாவது, வெளிநாட்டுப் பகைவன் இந்திய எல்லைப்புறத்தில் காலெடுத்து வைத்தால், இவ்வெல்லைப்புற மலைவாசிகள், உங்களுக்குத் தீவிரமான பகைவர்களாக மாறுவார்கள்.'

ஆனால், மறுபக்கத்தில், முன்னேறும் கொள்கையை ஆதரிப்பவர்கள், இம்மலைப் பிரதேசங்களை பிரிட்டிஷ் ஆட்சி அதிகாரத்தின்கீழ்க்கொண்டு வரவேண்டுமென்று வாதாடுகிறார்கள்; ஏனெனில், மேற்கிலிருந்து வரும் பகைவனைத் தடுத்து நிறுத்தச் சிந்து நதியைவிட இப்பிரதேசம் நல்ல பாதுகாப்பான அரணாய் விளங்குகிறது என அவர்கள் கருதுகிறார்கள். ஆனால், இக்கொள்கையைப் பின்பற்றியபோது அவ்வித ஆபத்துத் தொலைவானதாகவேதான் உண்மையில் இருந்தது. ஆனால், யாரும் எதிர்பார்க்க இயலாத பின்பு ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக்கொண்டு பார்க்கும்போது, அவ்வாபத்து உண்மையாய்த்தான் இருந்தது என்பது விளங்கும்.

## 2. மேல் பர்மாவை இணைத்தல்

இரண்டு போர்களின் விளைவாக, கீழ் பர்மாவிலிருந்த அரகான் (Arakan), தெனசரீம் (Tennasserim), பெகு (Pegu)

போன்றவைகளை பிரிட்டிஷ் ஆட்சி கைப்பற்றிக் கொண்டது. பழைய பர்மிய அரச குலம், மேல் பர்மாவில் இருந்து கொண்டு ஆட்சி செலுத்தியது; 1857ஆம் ஆண்டில், தலைநகர மாக்கப்பட்ட மாண்டலேயில் (Mandalay) ஒரு பிரிட்டிஷ் ரெஸிடென்டும் தங்கியிருந்தார். மேல் பர்மாவுடன் வாணிகம் நடத்தப்பட்டது; 1862ஆம் ஆண்டிலும், 1867ஆம் ஆண்டிலும் உண்டான இரண்டு உடன்படிக்கைகள் மூலம் ஆங்கிலேயரின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டன.

இரண்டு அரசர்களுக்கும் இடையில் என்றும் நல்ல உறவு ஏற்படவில்லை. கீழ் பர்மாவை இழந்ததனால், மிண்டன் (Mindon) என்கிற பர்மிய அரசர் மிக்க கோபத்துடன் இருந்தார்; ஆனால், அரசருடைய தன்மதிப்பைப் பற்றிய இடைக் காலக் கருத்து, ஆங்கிலேயருக்கு வெறுப்பை விளைத்தது. பர்மிய வழக்கப்படி, பிரிட்டிஷ் ரெஸிடென்டு சபைக்கு வரும் பொழுது பாத அணிகளைக் கழற்றிவிட்டு, அரசருக்கு முன்னால் மண்டியிட்டு வணக்கம் செலுத்த வேண்டும். 1876ஆம் ஆண்டில் இப்பழக்கத்தை வைஸ்ராய் எதிர்த்தார்; ஆனால், இதை விட்டுக்கொடுக்க மிண்டன் இணங்கவில்லை. இதனால், பிரிட்டிஷ் ரெஸிடென்டுகள் அரச சபைக்குச் செல்வதில்லை; இதன் பயனாக, பர்மிய மன்றத்திலிருந்த பிரிட்டிஷ் செல்வாக்கு சிறிது குறைய ஆரம்பித்தது.

மிண்டனுக்குப் பின் பதவி ஏற்ற திபா (Thibaw) என்பவர் ஆற்றலற்ற தீய அரசர். போட்டியாக இருப்பவர்கள் என அவரால் நினைக்கப்பட்ட எண்பது அரசகுமாரர்களையும் அரச குமாரிகளையும் அவர் கொன்று தாம் பதவிக்கு வந்ததை அறிவிப்புச் செய்தார். பிரிட்டிஷ் ரெஸிடென்டு, இதற்குத் தமது கண்டனத்தைத் தெரிவித்தார். ஆனால், பர்மா ஒரு சுதந்தர நாடு என்கிற வெடுக்கென்ற பதில் அவருக்குக் கிடைத்தது. பெகு நகரத்தின் தலைமை ஆணையாளர், ரெஸிடென்டைத் திரும்ப அழைக்க வேண்டுமெனச் சிபாரிசு செய்தார்; ஆனால், இதை இந்திய அரசாங்கம் ஏற்கவில்லை. திபா, மறுபடியும் 1884ஆம் ஆண்டிலும் பல படுகொலைகளைச் செய்தார். மனித குலத்தின் பெயரால் ஒரு பெரிய கூக்குரல் எழும்பியது; இரங்கூனில் நடத்தப்பட்ட பொதுக்கூட்டங் களில், மேல் பர்மாவை உடனடியாக இணைக்க வேண்டும் என்று இந்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தப்பட்டது. இக் கூட்டங்களில் பர்மியர்கள் பங்கு பெறவில்லை என்பதையும், வாணிகத்தை முக்கியமாகக் கருதிய ஆங்கில சீன வணிகர்

களாலேதான் அவை நடத்தப்பட்டன என்பதையும் குறிப்பிடுதல் வேண்டும். பர்மியப் பிரச்சினைகளை பர்மிய அரசரே தீர்க்கட்டும் என நினைத்து, இந்திய அரசாங்கம் இந்நிகழ்ச்சிகளைக் கவனிக்காமல் இருந்துவிட்டது.

வடகிழக்கு அரசியலில், இச்சமயத்தில் வேறொரு நாடும் பங்குகொள்ள ஆரம்பித்தது. தூரக்கிழக்கில் (Far East) பிரான்ஸ் நாடு ஒரு குடியேற்றப் பேரரசை ஏற்படுத்தியிருந்தது. 1884ஆம் ஆண்டில், கொச்சின்-சைனு, டோன்கின் (Tonkin) ஆகியவைகளை அது பெற்று, மேல் பர்மாவை நோக்கி முன்னேறியது. பிரான்சோடு நட்புடன் இருக்க பர்மிய அரசாங்கம் விரும்பியது. 1885ஆம் ஆண்டில், ஒரு வாணிக உடன்படிக்கையை இரு நாடுகளும் தங்களுக்குள் செய்துகொண்டன. டோன்கின் வழியாகப் படைக்கலங்களை பர்மாவுக்குள் இறக்குமதி செய்வதற்கு அனுமதிப்பதாகப் பிரெஞ்சுக்காரர் இரகசியமாக உறுதி மொழி அளித்தனர். மாண்டலேயில் ஒரு பிரெஞ்சு கான்சல் தங்கி யிருப்பதற்கு அனுமதிக்கப்பட்டார். அந்நகரத்தில் ஒரு பிரெஞ்சு பாங்கியைத் திறப்பதற்கும், ஓர் இருப்புப்பாதை அமைப்பதற்கும், அரசரின் தனி உரிமைகளை மேற்பார்வை செய்ய அனுமதி பெறுவதற்கும் பேச்சு வார்த்தைகள் நடத்தப்பட்டன.

அமைதியான முறையில் ஏற்பட்ட பிரெஞ்சுக்காரர்களின் ஊடுருவலைக் கண்டு, பிரிட்டிஷ் அரசாங்கம் அச்சமடைந்தது; ஆனல், அதனுல் ஒன்றும் செய்ய இயலவில்லை; ஏனெனில், தலையிடுவதற்குப் போருக்கான காரணங்கள் அல்லது தகுந்த காரணங்கள் இல்லை. திபாவின் முட்டாள்தனமான ஒரு நடத்தையின் மூலம், இக்காரணம் கிடைத்தது. மேல் பர்மாவில் மர வியாபாரம் செய்துவந்த பம்பாய்-பர்மா வாணிகக் கார்ப்பொரேஷன் என்னும் ஆங்கில வாணிக நிறுவனம் போலிக் காரணங்களுக்காகக் குற்றம் சாட்டப்பட்டது; கட்சி இல்லாமல் செய்யப்பட்ட (Ex-party) தீர்ப்பின்படி, அந்நிறுவனம் 2,30,000 பவுன்களைக் கட்ட வேண்டியிருந்தது. பிரிட்டிஷ் கம்பெனியை நீக்கிவிட்ட பிறகு, அக்காடுகளை ஒரு பிரெஞ்சு சிண்டிகேட்டிற்குக் (Syndicate) கொடுப்பதுதான் அதன் உண்மையான நோக்கம்.

இவ்விதத் தூண்டுதலைக் கண்டு கொதிப்படைந்த இந்திய அரசாங்கம், இவ்வழக்கை வைஸ்ராயிடம் எடுத்துச் சென்று

தீர்வு காண வேண்டும் எனக் கோரியது. இதற்குப் பர்மிய அரசர் இணங்கவில்லை. அவரது துரதிருஷ்டம் காரணமாக, டோன்கின் பிரதேசத்தில் பிரெஞ்சுக்காரர் தோல்வியடைந்து, மேல் பர்மாவிலிருந்து பின்வாங்கினர். மாண்டலேயிலிருந்த பிரெஞ்சு கான்ஸல், பேச்சு வார்த்தைகளை நடத்தினர் என்கிற குற்றச்சாட்டை, இலண்டனிலிருந்த பிரெஞ்சுத் தூதுவர் மறுத்தார். இவ்வருமையான சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாக, பிரிட்டிஷ் அரசாங்கம் உபயோகித்துக்கொண்டது. கீழ்க்காணும் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளுமாறு, திபா அரசருக்கு இறுதி எச்சரிக்கை அனுப்பப்பட்டது.

1. மாண்டலேயில், ஒரு நிரந்தர ரெஸிடென்டை ஏற்றுக் கொள்ள வேண்டும். பாத அணிகளைக் கழற்றிவிட்டு மண்டியிடுதல் போன்ற கேவலமான சடங்குகள் இல்லாமல், அரசரைச் சந்திப்பதற்கு அவருக்கு உரிமை இருக்க வேண்டும்.

2. பர்மாவின் அயல் நாட்டு உறவு, பிரிட்டிஷ் ஆட்சியின் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும்.

3. பம்பாய்-பர்மா வர்த்தகக் கார்ப்பொரேஷனின் வழக்கை வைஸ்ராயின் தீர்ப்பிற்கு விடவேண்டும்.

4. யுன்னனுடன் (Yunnan) ஆங்கிலேயர்கள் வாணிகம் செய்வதற்கு, பர்மிய அரசாங்கம் உதவ வேண்டு.

1885ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், 9ஆம் தேதி, இந்த இறுதி எச்சரிக்கையைத் திபா ஏற்றுக்கொள்ள மறுத்ததால், ஆங்கிலேயர் அந்நாட்டின்மீது படையெடுத்தனர். இருபது நாள்களுக்குள், மாண்டலே கைப்பற்றப்பட்டு, திபா தம் அரண்மனையிலேயே கைதியாக்கப்பட்டார். தலை நகரின் வீழ்ச்சியை அந்நாட்டின் வீழ்ச்சியாகக் கொள்ள முடியாது. திருடர்களின் கூட்டங்களும், கலைக்கப்பட்ட துருப்புகளும், ஒரு விதமான கொரில்லாப் போரைத் தொடர்ந்து நடத்தின. மேல் பர்மாவை ஒன்று சேர்த்து ஆட்சி செய்வதற்கு ஐந்து ஆண்டுகள் ஆயின. ஷான்கள் (Shans), சின்கள் (Chins) போன்ற எல்லையிலிருந்த மலைவாசிகளை அடக்கி ஆள்வதற்கு மேலும் ஆறு ஆண்டுகள் ஆயின. வெல்லப்பட்ட பிரதேசங்கள் கீழ்பர்மாவுடன் சேர்க்கப்பட்டு, இரங்கூனைத் தலைநகராகக் கொண்ட புதிய பர்மிய மாகாணம் ஏற்படுத்தப்பட்டது.

பர்மாவின் நிலைமையும், அதன் எதிர்ப்பக்க எல்லையில் இருக்கும் ஆப்கானிஸ்தான் நிலைமையைப் போன்றே

இருந்தது. பிரிட்டிஷ் பிரதேசங்களின் எல்லையிலுள்ள ஆசிய நாடுகளில் ரஷ்யா அல்லது பிரான்ஸ் போன்ற முதல் தரமான ஐரோப்பிய வல்லரசுகள் தங்களுடைய அரசியல் செல்வாக்கை ஏற்படுத்தக்கூடும் என்கிற அச்சத்தினலேதான், இவ்விரண்டு நாடுகளிலும் பின்பற்றப்பட்ட கொள்கைகள் உருவாயின. இவ்விரண்டு நாடுகளின் மன்னர்களும், இங்கிலாந்திற்குப் போட்டியாய் இருந்த ஐரோப்பிய வல்லரசின் உதவியைப் பெறுவதற்காக, ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்தார்கள்; ஆனல், ஆபத்தான சமயத்தில், இரண்டிலும் அவை ஏமாறும்படி செய்யப்பட்டன. நில அமைப்புச் சம்பந்தமான கூறுகளும், இன சம்பந்தப்பட்ட கூறுகளுமே மாறுபட்ட விளைவுகளை உண்டாக்கின. பர்மா, பிரிட்டிஷ் இந்தியாவுடன் இணைக்கப்பட்டது; ஆனல், ஆப்கானிஸ்தானை முற்றிலும் வெல்வதற்கு உயர்வாகவும் கரடுமுரடாகவும் இருந்த ஆப்கானிய மலைத்தொடர்களுடன் மூர்க்கமான போர்க்குணம் படைத்த பட்டாணியர்களும் தடையாய் இருந்தார்கள்.

## 3. இந்திய சமஸ்தானங்கள்

இந்திய ஆட்சியை, பிரிட்டிஷ் அரசர் ஏற்றுக்கொண்ட பின், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும், இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையே இருந்த உறவில், மிகுந்த மாறுதல்கள் உண்டாயின. இதற்கு முன்பு இவ்வுறவு, ஒரே மாதிரியாகவும் இல்லை; நன்ருக விளக்கப்படவுமில்லை. முதற்குறைபாடு தடுக்க முடியாதது; ஏனெனில், மாறுபட்ட சூழ்நிலைகளில், வெவ்வேருன காலங்களில், மாறுபட்ட நாடுகள், வெவ்வேறு விதமான உடன்படிக்கைகளைச் செய்துகொண்டன. இரண்டாவது சம்பந்தப்பட்ட வரையில், பிரிட்டனைப் போன்ற வளரும் வல்லரசின் கொள்கை, காலத்திற்குக் காலம் பல விதச் சூழ்நிலைகள் செல்வாக்குகள் ஆகியவைகளுக்குத் தக்கவாறு, இயற்கையாக மாறுபட்டது. இதில் ஆள்களின் தன்மையும் மிக முக்கியமானது. வெல்லெஸ்லி பிரபு, ஹேஸ்டிங்ஸ் பிரபு, டல்ஹெளசி பிரபு போன்றவர்கள், காலத்தில், புதிய கொள்கை எதையும், கம்பெனி ஏற்படுத்தாவிட்டாலும், நாம் முன்பு பார்த்தபடி, மற்றவர்களைவிட அதிகமான ஆக்கிரமிப்பு மனப்பான்மையை அவர்கள் பெற்றிருந்தார்கள்.

இது காரணமாகவே இந்திய சமஸ்தானங்களில் நிச்சயமற்ற நிலைமையும், திகைப்பான நிலைமையும் நிலவின. அவர்கள் நிலைமையைப்பற்றி அவர்களுக்கே உறுதியாகத்

தெரியாது. கொள்கையளவில், அவர்கள் தனிப்பட்ட நாடாய் விளங்குவதற்கு அவர்களுடைய உடன்படிக்கைகள் உறுதியளித்தன; அவைகளில் பல சம்ஸ்தானங்கள், குறிப்பிட்ட சில தடைகளைத் தவிர, மற்றப்படி, சுதந்தர நிலையிலேதான் இருந்தன. ஆனால், நடைமுறையில் (அயோத்தி, சதாரா, நாகபூர், ஜான்ஸி, கருநாடகம் போன்ற) பல சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் ஆட்சியில் இணைத்துக்கொள்ளப்பட்டன; (பரத்பூர், மைசூர், குவாலியர் போன்ற) வேறு பல சமஸ்தானங்களின் உள்நாட்டு ஆட்சியில் பிரிட்டிஷ் ஆட்சி தலையிட்டதுடன், அதன் தலைவர்களைப் பதவியிலிருந்தும் நீக்கியது; அல்லது, அவர்களின் மதிப்பு நிலையை நிச்சயமாகத் தாழ்த்தியது.

1841ஆம் ஆண்டில், நியாயமாகவும் நேர்மையாகவும் சேருகின்ற பிரதேசங்களையோ, அல்லது வருமானத்தையோ கைவிடுவதில்லை என்ற கொள்கையை டைரக்டர்கள் மன்றம் உறுதியாகக் கடைப்பிடித்தது; அதனால், டல்ஹௌசி இதைத் தீவிரமான முறையில் பின்பற்றத் தொடங்கினார். இக்கொள்கையின் கோரமான விரிவுரையாக, பெருங் கலகத்தின் திடீர் எழுச்சி விளங்கியது; அரசாங்கம் பிரிட்டிஷ் அரசரிடம் மாறியபோது, இந்திய சமஸ்தானங்களுடன் பின்பற்றப்பட்ட கொள்கை மறுபடியும் மாற்றி அமைக்கப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவில் ஏற்பட்ட வேறுபல மாறுதல்களைப் போலவே, இப்புதிய உறவும், ஓரளவு எழுதிய கொள்கை அறிவிப்பு மூலமாகவும், ஆனால் முக்கியமாக மேற்கோள்கள் உடன்படிக்கைகள் மூலமாகவுமே, நிதானமாகவும் படிப்படியாகவும் உருவாக்கப்பட்டது.

‘இப்போதுள்ள பிரதேச உடைமைகளை அதிகரிக்கும் ஆசை எங்களுக்கு இல்லை,’ என்கிற அரசியாரின் உறுதியான வாக்குறுதியுடன்தான், இப்புதிய கொள்கை அறிவிக்கப் பட்டது. இவ்வறிவிப்பை உண்மையாகப் பின்பற்றுவதற் குரிய நடவடிக்கைகளை எடுத்திராவிட்டால், இவ்வறிவிப்பினால் மட்டும், பிரச்சினையைத் தீர்த்திருக்க இயலாது. சிறிது காலத்திற்கு முன்பு சமஸ்தானங்கள் இணைக்கப்பட்டதற்கு இரு முக்கிய காரணங்கள் கூறப்பட்டன. அவையாவன, (1) இயற்கையான வாரிசு இல்லாமை, (2) சுதேச அரசர் கொடுங்கோலாட்சி, இணைக்காமல் இருக்கும் கொள்கையை நடைமுறையில் பின்பற்றுவதற்குமுன் இவைகளைத் தீர்ப்பதற்குரிய வழிகள் கண்டு பிடிக்கப்பட வேண்டுவது.

முதல் பிரச்சினைக்குச் சுலபமான வழி கிட்டியது; அதனால் அது உடனே பின்பற்றப்பட்டது. 1860ஆம் ஆண்டில், இந்திய அரசர்களுக்குச் **சன்னதுகள்** (Sanads) வழங்கப்பட்டன; இதன்படி இயற்கை வாரிசு இல்லாவிட்டால், தத்து எடுத்துக் கொள்வதற்கு இந்துமதத்தைச் சார்ந்த அரசர்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது; முஸ்லீம் அரசர்கள், முஸ்லீம்களின் சட்டப்படி, தங்களது வாரிசு சம்பந்தப்பட்டவைகளைத் தீர்க்கலாம். 'பிள்ளைகளைத் தத்து எடுக்கும் சன்னதுகள்' எனக் கூறப்பட்ட இவைகள், சமஸ்தானங்கள் நீடித்திருப்பதை உறுதிப்படுத்தின.

கொடுங்கோலாட்சி சம்பந்தப்பட்ட வரையில், அவை மிகச் சிக்கலாய் இருந்தன; அதனால், குறிப்பிட்ட எவ்விதக் கொள்கையினாலும் அதைத்தீர்க்க இயலவில்லை. 1858ஆம் ஆண்டிற்குப் பின் நடந்த நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது, கொடுங்கோலாட்சிக்காக மன்னரைத் தண்டிப்பது, அவசியமானால் அவரைப் பதவியிலிருந்து நீக்குவது, ஆனால், அவருடைய தவற்றுக்காக அவர் நாடு இணைக்கப்படுவதில்லை என்பதுதான் புதிய கொள்கை என்பது தெரிகிறது. தீவிர நடவடிக்கை எடுக்கும் அளவுக்குக் கொடுங்கோலாட்சியை விடுவதற்கு முன்பே உள்நாட்டு ஆட்சியில் தலையிட வேண்டும் என்பதுதான் இப்புதிய கொள்கையின் தொடர் முடிவு (Corollary) மல்ஹார் ராவ் கெயின்வாரின் நிகழ்ச்சிதான் மிக முக்கியமானது. கொடுங்கோலாட்சி என்ற குற்றத்தை அவர் செய்தார்; கர்னல் ஃபேயர் (Colonel Phayre) என்கிற ரெஸிடென்டு, அவர் ஆட்சியின் தவறுகளை வெளிப்படையாக்கினார். அதன் பிறகு, வைரத்தின் பொடியை உணவுடன் கலந்து, ரெஸிடென்டைக் கொல்வதற்கு முயற்சி செய்தார் எனக் கெயிக்வார்மீது குற்றம் சாட்டப்பட்டது (1874 நவம்பர்). 1875ஆம் ஆண்டு, ஜனவரி மாதத்தில், நார்த்புரூக்குப் பிரபுவின் உத்தரவின்பேரில், கெயிக்வார் கைது செய்யப்பட்டார்; அவரை விசாரணை செய்வதற்காக ஒரு கமிஷனையும் நார்த்புரூக்குப் பிரபு ஏற்படுத்தினார். அக்கமிஷனில் வங்காளத்தின் பிரதம நீதிபதியின் கீழ் ஆங்கிலேயர் மூவரும், இந்தியர் மூவரும் இருந்தனர். அக்கமிஷன் மாறுபட்ட இரண்டு அபிப்பிராயங்களைக் கொண்டிருந்தது. கெயிக்வார் குற்றவாளிதான் என, ஆங்கிலேயர் மூவரும் தீர்மானித்தனர்; ஆனால், குவாலியர், ஜெய்ப்பூர் மகாராஜாக்கள், சர் தினகர் ராவ் ஆகிய புகழ்மிக்க இந்திய அங்கத்தினர்கள், அக்குற்றம் நிரூபிக்கப்படவில்லை என்கிற கருத்தைக் கொண்டிருந்தார்கள்.

அதனால், கெயிக்வார் குற்றவாளி அல்லர் என இந்திய அரசாங்கம் தீர்மானித்து, அவரை விடுதலை செய்தது. ஆனால், 'அவரது தவறான நடத்தை, கொடுங்கோலாட்சி, வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்வதற்கு இயலாத திறமையின்மை' ஆகியவைகளுக்காக அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

புதிய கெயிக்வார் ஒருவர் அரசராகச் செய்யப்பட்டார். அரச குடும்பத்திற்குத் தூர உறவினராய் இருந்த சயாஜிராவ் (Sayaji Rao) என்கிற ஒரு சிறுவருக்கு அப்பதவி அளிக்கப் பட்டது. அச்சிறுவருக்குச் சரியான முறையில் கல்வியைக் கற்பிப்பதற்கும், அவரை நல்ல முறையில் வளர்ப்பதற்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன; அச்சிறுவர் 21ஆம் வயதை அடையும் வரையில், சர். டி. மாதவராவ் (Sir T. Madava Rao) என்பவர், சமஸ்தானத்தைச் சிறப்புடன் ஆட்சி செய்தார். அரசராக்கப்பட்ட அச்சிறுவர், இந்திய அரசர் களுள் மிகச் சிறந்தவராய் விளங்கினார்; தந்தையாரைப் போன்ற அவரது தலைமையின்கீழ், பரோடா, இந்திய சமஸ் தானங்களுக்குள் மிகவும் முன்னேற்றமான சமஸ்தானமாய் விளங்கியது. 1939ஆம் ஆண்டில் அவர் இறந்தார்.

மணிப்பூரின் நிகழ்ச்சியும், இப்புதிய கொள்கைக்கு ஓர் எடுத்துக் காட்டாய் விளங்கியது. 1890ஆம் ஆண்டில் மணிப் பூரின் அரசர் சேனாபதி அல்லது படை முதல்வராய் இருந்த தம் சகோதரரின் தூண்டுதல் பேரில், பதவியிலிருந்து நீக்கப் பட்டார். புதிய அரசரை பிரிட்டிஷ் ஆட்சி அங்கீகரித்தது; ஆனால், சேனாபதி நாடு கடத்தப்படவேண்டும் என அது முடிவு செய்தது. அஸ்ஸாமின் தலைமை அலுவலராய் இருந்த ஸ்ரீ குவின்டன் (Mr. Quinton) என்பவர், இதற்காக, ஒரு சிறிய படையின் உதவியுடன் மணிப்பூருக்குச் சென்றார் (1891, மார்ச்சு). சேனாபதி அவரை எதிர்த்தார். அதனால், சிறு போர் நிகழ்ந்தது. இறுதியில், அவருக்கும் ஸ்ரீ குவின்டனுக்கும் இடையே ஒரு பேட்டி ஏற்பாடு செய்யப்பட்டது; ஆனால், பிரிட்டிஷ் அதிகாரிகள் துரோகத்தனமாகத் தாக்கப்பட் டார்கள்; ஸ்ரீ குவின்டனும் அவர் காரியாலயத்தைச் சேர்ந்த அங்கத்தினர் நால்வரும் கொல்லப்பட்டனர். அவர்களுள் ஒருவர் ஈட்டியால் குத்தப்பட்டு இறந்தார்; மற்றவர்கள், அரசாங்கத்தைச் சேர்ந்தவர்களால் தலை வெட்டப்பட்டு இறந் தார்கள். நேர்மையற்ற இக்கொலைக்காகப் பழிவாங்கும் பொருட்டு, ஒரு பெரிய பிரிட்டிஷ் படை அனுப்பப்பட்டது. சேனாபதியும் புதிய ராஜாவும் பிடிக்கப்பட்டுக் கொல்லப்

பட்டனர். ஒரு சிறுவன் அரசனுக்கப்பட்டான்; அவன் பட்டத்திற்கு வரும்வரையில், அச்சமஸ்தானம், அரசியல் ஏஜென்டு ஒருவரால் நிருவாகம் செய்யப்பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியின்போது, இதே காரணங்களுக்காக பிரிட்டிஷ் ஆட்சியுடன் இணைக்கப்பட்ட அயோத்தி, பஞ்சாப், குடகு போன்ற சமஸ்தானங்களின் நிகழ்ச்சிகளை, பரோடா, மணிப்பூர் நிகழ்ச்சிகளுடன் சேர்த்துப் பார்க்கும்போது, அதனுடைய வித்தியாசம் தெளிவாகத் தெரிகிறது. மேலாட்சியைப் பெற்ற அரசாங்கத்தின் தலையிடாக் கொள்கையை, இந்நிகழ்ச்சிகள் காட்டுகின்றன; ஆனால், தேவைப்பட்டால், தகராறுள்ள வாரிசு, கொடுங்கோலாட்சி, உள்நாட்டுப் புரட்சி போன்றவைகளைத் தீர்ப்பதற்குத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்பதையும் அவை காட்டுகின்றன. மறு பக்கத்தில், இந்திய சமஸ்தானங்களைச் சேர்த்துக்கொள்வதில் தங்களுக்கு விருப்பமில்லை என்பதையும் அவை காட்டுகின்றன.

மைசூர் உதாரணத்திலிருந்து, அச்சமஸ்தானம் தனியாய் இருப்பதை அவர்கள் விரும்புகிறார்கள் என்பதும் தெரிகிறது. முன்பு குறிப்பிட்டுள்ளபடி, அச்சமஸ்தானம் 1831ஆம் ஆண்டில், பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. ஐம்பது ஆண்டு பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பிறகு, அச்சமஸ்தானம், அதன் சட்டப்படியான அரசரிடம் ஒப்படைக்கப்பட்டது (1881). மைசூர் ஒப்படைக்கப்பட்ட நிகழ்ச்சி இந்திய சமஸ்தானங்களிடம் பின்பற்றப்பட்ட புதிய கொள்கைப்படி, ஒரு சிறந்த எடுத்துக்காட்டாயும் விளங்குகின்றது.

இந்திய சமஸ்தானங்களை இணைத்தல் என்பது இறந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சி என்பதை இவ்வித உதாரணங்கள் உறுதியாகத் தெரிவிக்கின்றன; அதனால், இயற்கையான வாரிசு இல்லாமை, அரசருடைய கொடுங்கோலாட்சி ஆகியவைகள் ஒரு நாடு தனியாய் இருப்பதற்குத் தடையாய் இரா என்பதையும் அவை தெரிவிக்கின்றன. கம்பெனியிடமிருந்த அரசாங்கம், பிரிட்டிஷ் அரசரிடம் மாறியதால், இந்திய சமஸ்தானங்களுக்கு இது வரையிலும் நிச்சயமாக நன்மையாகத்தான் இருக்கிறது. ஆனால், பாதுகாப்பு, நிலையான தன்மை ஆகியவைகள் அதிகரித்ததற்குத் தகுந்தவாறு, அவர்களுடைய மதிப்பு நிலையும் படிப்படியாய்க் குறைந்தது. ஓரளவுக்கு இவற்றைத் தடுக்க இயலாவிட்டாலும், இவை வேண்டுமென்றே பின்பற்றப்பட்ட கொள்கையின் விளைவாகவும் ஓரளவுக்கு ஏற்பட்டன.

1858ஆம் ஆண்டில், இந்நாட்டில் அறுநூறு சமஸ்தானங்கள் இருந்தன. இவற்றுள் ஐந்நூற்றுக்கு மேற்பட்டவை, மிகவும் சிறிய சிற்றரசு நாடுகள்; பிரிட்டிஷ் ஆட்சியுடன் இவை கொண்டுள்ள உறவுகளைப்பற்றி, எப்பொழுதும் தெளிவாக, எழுத்தால் விளக்கப்படவில்லை. மற்றவைகளின் உறவுகள், உடன்படிக்கையில் விளக்கப்பட்டுள்ளன. ஆனால், உடன்படிக்கை உரிமைகள், வெவ்வேறு நாடுகளுக்கு வெவ் வேறு விதமாய் இருந்தன; அதனால், அவை பேரரசருக்கு உட்பட்டிருந்த நிலையிலும் பலவித வித்தியாசங்கள் இருந்தன. ஹைதராபாதைப் போன்ற சில நாடுகள், முதலில், சம வுரிமையின்மீது கம்பெனியுடன் உடன்படிக்கையைச் செய்து கொண்டன; அதனால், குறிப்பிட்ட சில உரிமைகளை (உதாரண மாக, அயல் நாட்டுக் கொள்கையைக் கட்டுப்படுத்துதல்) பின்னர்க் கொடுத்துவிட்டு, சில குறிப்பிட்ட நிபந்தனைகளில் (சில குறிப்பிட்ட படையைக் கொடுத்தல்) கையெழுத் திட்டது. இவைகளைத் தவிர்த்து, கொள்கைப்படி, அது பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கட்டுப்படாத முழுச் சுதந்தர நாடு என்பது தெளிவாய் விளங்கும்.

இரஜபுத்திர சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில், அவ்வரசர்கள், அயல் நாட்டு வல்லரசுகளுடன் எவ்வித உறவையும் வைத்துக்கொள்ளக்கூடாது; போர் ஏற்படும் போது, அச்சமஸ்தானங்களின் வசதிகளைக்கொண்டு கம்பெனிக்கு உதவ வேண்டும்; மற்றப்படி, தங்களுடைய பிரதேசங்களில் அவர்கள் முழு அதிகாரத்தையும் உபயோகப் படுத்தலாம் என அவர்களுடைய உடன்படிக்கைகள் கூறின.

இச்சமஸ்தானங்கள், மைசூர், பரோடா, அயோத்தி ஆகிய சமஸ்தானங்களைக் காட்டிலும் மாறுபட்ட அடிப் படையில் இருந்தன; மைசூர், பரோடா, அயோத்தி சமஸ் தானங்களின் உடன்படிக்கைகள், அவற்றின் உள்நாட்டு விஷயங்களில் பிரிட்டிஷ் ஆட்சி தலையிடுவதை அனுமதித்தன. இந்நிகழ்ச்சிகளிற் கூட, இரண்டு சுதந்தர நாடுகளுக்கிடையில் ஏற்பட்ட உறவுகளைப் போன்று, அவைகளின் உறவுகள், உடன்படிக்கைகள் மூலம் விளக்கப்பட்டனவேயன்றி, மேலதி காரமுள்ள ஒரு வல்லரசு, தன்னாட்சிக்குக் கீழ்ப்பட்ட ஒரு நாட்டின்மேல் திணிக்கப்படும் ஒப்பந்தமாக அவை இருக்க வில்லை.

இந்திய சமஸ்தானங்களின் மதிப்பு நிலையில் காணப்பட்ட இவ்வித வித்தியாசங்களை ஒதுக்கித்தள்ளி, கொள்கையிலும்

நடைமுறையிலும், பிரிட்டிஷ் அரசரின் மேலதிகாரத்தை எல்லாவற்றின் மீதும் ஒரே மாதிரியாக ஏற்படுத்துவதுதான், இங்கிலாந்து அரசரின்கீழ் இருந்த அரசாங்கத்தின் கொள்கையாய் இருந்தது. 1858ஆம் ஆண்டிலிருந்து இந்திய சமஸ்தானங்களுடன், பிரிட்டிஷ் ஆட்சி பின்பற்றிய கொள்கையை ஆராய்ந்து பார்க்கிறவர்களுக்கு இது தெளிவாகத் தெரியும்.

1876ஆம் ஆண்டு சட்டத்திலேதான் இப்புதிய கொள்கை மிகவும் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது; அச்சட்டத்தின்படி, 1877ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 1ஆம் தேதியிலிருந்து 'இந்தியப் பேரரசியார்' எனும் பட்டத்தை விக்டோரியா அரசியார் ஏற்றுக்கொண்டார். இந்திய சமஸ்தானங்களை இச்சட்டம் பிரிட்டிஷ் பேரரசுக்குள் கொண்டு வந்தது; சட்டப்படி கூற வேண்டுமானால், இச்சமஸ்தானங்களின் மன்னர்களையும் மக்களையும் பிரிட்டிஷ் அரசியாரின் அடிமைகளாகக் (Vassals) கருதவேண்டும். கொள்கை சம்பந்தப்பட்ட வரையில், இம்மாற்றம் மிகவும் முக்கியமானது. கிழக்கிந்தியக் கம்பெனிக் காலத்தில், இச்சமஸ்தானங்களின் மதிப்பு நிலையைப்பற்றி முன்னரே கூறியிருந்தோம். இதை இங்கிலாந்தின் அரசர், 1858ஆம் ஆண்டின் பிரபல பிரகடனத்தின் மூலம் அப்படியே ஏற்றுக்கொண்டார் என்பதைக் கீழ் வரும் வாக்கியங்களில் காணலாம்:

'இந்தியாவின் சுதேச மன்னர்களுக்கு இதன் மூலம் அறிவிக்கப்படுவது என்னவென்றால், அவர்களுடன், கிழக்கிந்தியக் கம்பெனியாவது அல்லது அதனுடைய அதிகாரம் பெற்றவர்களாவது செய்துகொண்ட எல்லா உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் நாம் ஏற்றுக்கொள்கிறோம்; அவைகளை மிக்க கவனத்துடன் பின்பற்றுவோம்; அவர்களும், அதைப் போலவே அவைகளைப் பின்பற்றுவார்கள் என எதிர்பார்க்கிறோம்.

'இப்பொழுது இருக்கும் எங்களுடைய பிரதேசங்களை விரிவுபடுத்தும் நோக்கம் எங்களுக்கில்லை; தண்டனை அச்சமின்றி, எங்கள் டொமினியன்கள் மீதும், உரிமைகள்மீதும் செய்யப்படும் ஆக்கிரமிப்பை நாம் அனுமதியோம்; மற்ற நாடுகளை உரிமையின்றிக் கைப்பற்றுவதையும் நாம் அனுமதியோம்.

'சுதேச மன்னர்களின் உரிமைகள், மதிப்பு, புகழ் ஆகியவைகளை எங்களுடையவற்றைப் போலப் பாவித்து,

அவைகளை நாங்கள் மதித்து நடப்போம்; உள் நாட்டு அமைதி, சிறந்த ஆட்சி ஆகியவைகளால் மட்டும் பெறப்படும் செழிப்பு, சமூக முன்னேற்றம் ஆகியவைகளுடன், அவர்களும், நம் மக்களும் வாழ வேண்டும் என்பதுதான் எங்களுடைய ஆவல்.'

இந்திய அரசாங்கத்தை பிரிட்டிஷ் அரசர் ஏற்றுக்கொண்ட பிறகும், இந்திய சமஸ்தானங்கள், சுதந்தர நாடுகளாக ஒப்புக்கொள்ளப்பட்டு, அடிமை நாடுகளைப்போல அல்லாமல், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நட்புகளாகக் கருதப்பட்டன என்பதை மேற்கூறியவற்றிலிருந்து அறியலாம். ஆனால், 1876ஆம் ஆண்டின் சட்டம், இந்நோக்கம் முழுவதையும் மாற்றி, இங்கிலாந்து அரசரை, இந்திய சமஸ்தானங்களுக்கும் அதிபதியாகச் செய்தது. இந்நாளிலிருந்து, பிரிட்டிஷ் ஆட்சி எல்லாவற்றிற்கும் மேலான அரசாக வெளிப்படையாய் விளங்கியது; கடந்த சில காலமாகவே, இந்நிலையை அவை நடைமுறையில் ஏற்று வந்தன.

இப்புதிய நிலையைப் பற்றி, 'அதிகாரத்தை மாற்றும் ஒப்பந்தத்தில் (Instrument of Transfer) தெளிவாகக் கூறப் பட்டுள்ளது; 1881ஆம் ஆண்டில், மைசூரின் இந்திய அரசர் களுக்கு இந்நாடு மாற்றப்பட்ட நிபந்தனைகள் அதில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தத் தஸ்தாவேஜியையும், ஸ்ரீரங்கப் பட்டணத்தின் உடன்படிக்கையையும் ஒப்பிட்டுப் பார்ப்பது, வியப்பாகவும் அறிவுறுத்துவதாகவும் இருக்கும்; ஏனெனில், இவ்வுடன்படிக்கையிலேதான், புதிதாக உண் டாக்கப்பட்ட இந்திய நாடான மைசூரின் நிலைமையை வெல்லெஸ்லி விளக்கியுள்ளார்.

'உடன்பாடு செய்துகொள்ளும் கட்சிகளில் ஏதாவ தொன்றின் நண்பர்களும் பகைவர்களும், இரண்டு நாடுகளின் நண்பர்களாகவும் பகைவர்களாகவும் கருதப்பட வேண்டும்,' என்பது ஸ்ரீரங்கப்பட்டணத்தின் உடன்படிக்கையில் கூறப் பட்டுள்ளது. மைசூர் அரசர், 'இங்கிலாந்து அரசருக்கு விசு வாசம், கீழ்ப்படிதல் போன்றவைகளில் நம்பிக்கைக்குரியவ ராக நடக்க வேண்டும்,' என்பது அதிகாரமாற்ற ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ளது.

மேன்மையான அதிகாரத்தை வெளிப்படையாக ஏற்றுக் கொண்டதுடன், அதிகாரமாற்ற ஒப்பந்தத்தின் பல விதி களிலும் அவை உண்டாக்கப்பட்டன; ஆனால், ஸ்ரீரங்கப் பட்டணத்தின் உடன்படிக்கையில் அவை காணப்படவில்லை.

இவ்விதிகளின்படி, 'தந்தி, இரயில், உப்பு, அபினி இவற்றின் உற்பத்தி, குற்றவாளிகளை நாட்டிலிருந்து அனுப்புதல், பிரிட்டிஷ் இந்தியாவின் நாணயத்தை உபயோகித்தல்' போன்றவைகளை ஆட்சி செய்வதில், பிரிட்டிஷ் ஆட்சியுடன் மைசூர் அரசாங்கம் ஒத்துழைக்க வேண்டும்.

முக்கியமாகக் குறிப்பிடத்தக்க புதிய விதி எதுவும் இவ்வொப்பந்தத்தில் இல்லை. கவுன்சிலுடன்கூடிய கவர்னர்-ஜெனரல் அங்கீகரிக்காத வரையில், மைசூர் அரசின் வாரிசு, சட்டப்படி செல்லக்கூடியதன்று என்பதை அது உறுதியாக அறிவிக்கிறது. இந்திய அரசர்களின் விருப்பத்திற்கிணங்க, தத்து எடுப்பதைச் சட்டப்படி அங்கீகரித்து, ஒரு பெரிய சலுகையை இங்கிலாந்தின் அரசர் அவர்களுக்குக் கொடுத்தாலும், வாரிசைப்பற்றிய இப்புதிய கொள்கையால், அது பயனில்லாமல் போயிற்று. வாரிசு இல்லாமல் அரசர் ஒருவர் இறந்தால், தான் அந்நாட்டு வாரிசைக் கட்டுப்படுத்துவதற்குக் கம்பெனி உரிமை கொண்டாடியது. பிரிட்டிஷ் ஆட்சி ஆங்கீகரிக்கும் வரையில் இந்திய சமஸ்தானங்களில் ஏற்படும் வாரிசைச் சட்ட பூர்வமானதாக ஏற்றுக்கொள்ள முடியாது என ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ளது. இந்திய அரசாங்கம், இந்தியக் காரியதரிசி ஆகியவர்களின் அறிவிப்பிலிருந்து இதுதான் அரசாங்கத்தின் கொள்கை என்பது தெளிவாகத் தெரிகிறது. 1884ஆம் ஆண்டில் முன்னது (இந்திய அரசு) பின் வருமாறு எழுதியுள்ளது: 'சுதேச சமஸ்தானங்களின் வாரிசு பிரிட்டிஷ் அதிகாரிகளின் அங்கீகாரத்தை எம்முறையிலாவது பெற்றால்தான் அது சட்டப்படியாகும்.' பின்னவர் (இந்தியக் காரியதரிசி) 1891ஆம் ஆண்டில் பின்வரும் நிபந்தனைகளில் அதை உறுதிப்படுத்தியுள்ளார்:

ஒவ்வொரு வாரிசும், பிரிட்டிஷ் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப் படவேண்டும். அங்கீகாரம் அளிக்கப்படுவதற்கு முன் எந்த வாரிசும் சட்டப்படியானதாகக் கருதப்பட மாட்டாது. இதன்படி கொள்கையளவில் பார்க்கும்போது, இந்திய சமஸ்தானத்தின் அரசர் இறந்த பிறகு, அரசரில்லாக் காலம் ஏற்படும்; அவர் குமாரருடைய உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கீகரிக்கும் வரையில், அவர் பதவி ஏற்க முடியாது. இந்திய சமஸ்தானங்கள் மீதுள்ள மேலாட்சிக் கொள்கை, நல்லாட்சியை ஏற்படுத்துவதற்குத் தேவையான சமயத்தில் உள்நாட்டுப் பிரச்சினைகளில் தலையிடுவதற்கு பிரிட்டிஷ் ஆட்சிக்குள்ள உரிமைக்கு அடிப்படையாகவும்

நியாயமான காரணமாகவும் விளங்குகிறது. மேலாட்சி என்கிற முறையில், சமஸ்தானங்களில் சிறந்த ஆட்சி ஏற்படுத்தும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். இதற்கு முன்பு, ஒரு சமஸ்தானம் விசுவாசமாய் உள்ள வரையில், அதனுடைய உள்நாட்டு ஆட்சியில் கம்பெனி தலையிடாமல், அதன் விருப்பப்படியே நடப்பதற்கு விட்டுவிடும்; கொடுங்கோலாட்சி அதிகமாகும்பொழுதுதான் அதில் கம்பெனி தலையிட்டு, அந்நாட்டை நிரந்தரமாகத் தன்னுடன் இணைத்துக்கொள்ளும். இங்கிலாந்து அரசரின் கீழ், ஒரு சமஸ்தானம் விசுவாசமாய் இருப்பதுடன், உயர்தரமான ஆட்சியையும் நடத்தவேண்டும்; இதைச் செய்யத் தவறினால், மேலாட்சி அதில் தலையிடவேண்டியிருக்கும். முன்பு குறிப்பிட்டுள்ளபடி, பரோடா, மணிப்பூர் உதாரணங்களைத் தவிர, அண்மையில், ஹைதராபாது, காஷ்மீர், ஆள்வார் சமஸ்தானங்களில் ஏற்பட்ட தலையீட்டைப் பற்றியும் குறிப்பிடலாம்.

நைஜாம் சமஸ்தானத்தில் தலையீடு சம்பந்தமாக ரீடிங் பிரபுவின் (Lord Reading) அறிவிப்பில் புதிய கொள்கை மிகத் தெளிவாய் இருக்கிறது:

'பிரிட்டிஷ் அரசர் மேலாட்சியை ஏற்றதன் விளைவிற்கு மற்றோர் உதாரணமாக இந்திய சமஸ்தானங்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதற்கு பிரிட்டிஷ் ஆட்சிக்குள்ள உரிமையைக் குறிப்பிடலாம். போதிய காரணங்களில்லாமல், இவ்வுரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் உபயோகப்படுத்த விரும்பவில்லை என்பது அடிக்கடி காட்டப்பட்டிருக்கிறது. இப்பொழுதிருக்கிற அரசர்களுக்கு உள்நாட்டுப் பாதுகாப்பும், வெளிநாட்டுப்பாதுகாப்பும் இருக்கிறதென்றால், அது பிரிட்டிஷ் அரசாங்கத்திலேதான் ஏற்பட்டது; ஏகாதிபத்தியத்தின் உரிமைகள் பாதிக்கப்படும்பொழுது அல்லது ஒரு சமஸ்தானத்தின் ஆட்சியின் மூலம் அதனுடைய மக்களின் பொது நலம் தீவிரமாக அல்லது பொறுக்க இயலாத அளவுக்குப் பாதிக்கப்படும்பொழுது, தேவைப்பட்டால், வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கும் பொறுப்பு மேலாட்சியிடந்தான் இருக்கிறது. மன்னர்கள் அனுபவிக்கும் பலவிதப்பட்ட உள்நாட்டுச் சுதந்தரங்கள், இவ்விதப் பொறுப்புடைய மேலாட்சியின் கட்டுப்பாட்டிற்குள்ளேதான் இருக்கின்றன.'

# 2. வெள்ளை மாளிகையும் இந்திய அரசாங்கமும் (1858–1905)

## பிரிட்டிஷ் அரசரின்கீழ் இந்தியா

### 1. உள்நாட்டு அரசாங்கம்

மேற்பார்வைக்குழு (Board of Control) அல்லது அதன் தலைவர், டைரக்டர்கள் மன்றம் (Court of Directors) ஆகியவைகளின் இரட்டை ஆட்சியை, 1858ஆம் ஆண்டின் சட்டம் ஒழித்துக்கட்டியது. இந்திய அரசாங்கத்தை மேற்பார்வை செய்யும் அதிகாரம், 'இந்தியா மந்திரியார்' எனப்படும் பாராளுமன்ற அமைச்சர் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டது. ஆங்கில அரசியல் வாதிகளுக்கு இந்தியாவைப் பற்றி அதிகம் தெரியாததாலும், ஏராளமான அதிகாரங்களையும் ஆதரவு கொடுப்பதையும் அவர் செலுத்த வேண்டியிருந்தமையாலும், இந்தியா மந்திரியாருக்கு ஆலோசனை கூறுவதற்காக ஒரு குழு நியமிக்கப்பட்டது. தங்கள் கடமைகளைச் சுதந்தரமாகச் செய்யும் பொருட்டு, அவ்வங்கத்தினர்கள் 'நன்னடத்தை பெற்றுள்ள வரையிலும்' (during their good behaviour) நியமிக்கப்பட்டார்கள். குறிப்பிட்ட சில அதிகாரங்கள் அவர்களுக்கு உண்டு; இந்திய வருமானத்தை ஒதுக்குவதற்கும், செலவு செய்வதற்கும், வைஸ்ராய் நிருவாக சபையின் சாதாரண அங்கத்தினர்களை நியமிக்கவும் அவர்களுடைய அங்கீகாரத்தைப் பெறவேண்டும். இப்படியிருந்த போதிலும், இந்தியா மந்திரியார் அவருடைய குழுவுக்கு அடங்கியிருக்க வேண்டிய அவசியமில்லை; அவசரமான, இரகசிய காரியங்களில் அவர் தம் விருப்பப்படி நடக்கலாம். கொள்கைகளை உருவாக்குவதில் இக்குழு உரிய பங்கைப் பெறும் என எதிர்பார்க்கப்பட்டது.

ஆனால், இந்தியா மந்திரியார், எல்லா முக்கிய விஷயங்களிலும், தம் குழுவை உதாசீனம் செய்யும் நிலையில் இருக்கிறார் என்பது வெகுசீக்கிரத்திலேயே தெரிந்தது. இந்நிலையை, 1869ஆம் ஆண்டின் சட்டம் நியாய வரம்புக்குள்ளாக்கியது; குழுவின் பெரும்பான்மையான அதிகாரங்களை இச்சட்டம் பறித்துவிட்டது; மேலும், அதன் அங்கத்தினர்கள் பத்து ஆண்டுகள் வரையிலுமே பதவி வகிக்கலாம் என்றும், இந்தியா மந்திரியார் விரும்பினால், அவர்கள் பதவியில் மறுபடியும் அமர்த்தப்படுவார்கள் என்றும் அச்சட்டம் கூறியது. அவர்கள் நிலைமாறியதைச் **சர் சார்லஸ் டில்க்** (Sir Charles Dilke) என்பவர், காமன்ஸ் சபையில், மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்; 'இந்தியா மந்திரியாரின் அதிகாரத்தைக் குறைக்கவேண்டும் என்கிற நோக்கத்துடன்தான் இக்குழு அமைக்கப்பட்டது அவ்வெண்ணம் போய்விட்டது. இக்குழு, ஆலோசனைச் சபையாகத்தான் இருக்க வேண்டுமே ஒழிய, மேற்பார்வைச் சபையாய் இருக்கக்கூடாதென்பது எல்லோராலும் இப்பொழுது ஒப்புக்கொள்ளப்படுகிறது.'

இந்திய மந்திரியாரும் மற்ற மந்திரிமார்களைப் போலவே பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர். ஆனால் இவ்விடத்திலும், பிரிட்டிஷ் அரசியல்வாதிகள், பொதுவாக இந்தியாவைப் பற்றிய போதிய அறிவு பெற்றிருக்கவில்லை அதில் அதிக கவனம் செலுத்தவில்லை; இந்தியா மந்திரியாரின் மீது பாராளுமன்றத்தின் கட்டுப்பாடு என்பது வெறு கேலிக் கூத்தாய்த்தான் இருந்தது.

இதனால், சட்டத்தின்படி இல்லாவிட்டாலும், நடைமுறையில், இந்திய அரசாங்கத்தின்மீது இந்தியா மந்தியாருக்கு ஏராளமான அதிகாரங்கள் இருந்தன. இதனை அச்சட்டம் வெள்ளை மாளிகையில் இருந்த உள்நாட்டு அரசாங்கத்திற்கும், இந்திய அரசாங்கத்திற்கும் இடையேயிருந்த உறவுகளின்மீது இயற்கையான விளைவுகளை உண்டாக்கியது.

இந்திய அரசாங்கத்தின் தலைவரை மாற்றியதைத் தவிர வேறு எதையும் 1858ஆம் ஆண்டுச் சட்டம் செய்யவில்லை என்பது மேலோடு பார்ப்பவர்களுக்குத் தெரியும். ஆனால் உண்மையில், அச்சட்டம், வியப்புத் தருகிற மாறுதல்களை ஏற்படுத்தியது.

டைரக்டர்கள் மன்றம், மேற்பார்வைக் குழு ஆகியவைகளின் அதிகாரங்கள், இந்தியா மந்திரியாரிடம் கொண்

வந்து குவிக்கப்பட்டதால், முக்கிய விளைவுகள் உண்டாயின. இரு தலைவர்களிடம் வேலை செய்வது கடினமாய் இருக்கலாம். ஆனால், அதன் மூலம் பல ஆதாயங்களும் உண்டு. இவ்விரண்டிற்குமிடையே ஏற்படும் இடைவிடாத போட்டியைத் தெரிந்துள்ள ஊகமும் திறமையும் வாய்ந்த ஒரு கவர்னர்-ஜெனரல், ஒன்றை ஒன்று மோதவிட்டு, தம் விருப்பப்படி நடக்கலாம்; பல சமயங்களில் அப்படிச் செய்துமிருக்கின்றனர். இதைத் தவிர, இந்திய அரசாங்கம் விரும்பாத உறுதியான ஒரு கொள்கையை உருவாக்குவதற்கும், அவையிரண்டுக்குமிடையே இருந்த போட்டி, தடையாய் நின்றது. மேலும், இந்தியா மந்திரியார், மேற்பார்வைக் குழுத் தலைவரைவிட என்றும் மிக முக்கியமானவராய் இருந்தார். இதற்கு எடுத்துக்காட்டாக, இந்தியா மந்திரியார், மேலே கூறியுள்ளபடி, ஏராளமான தம் அதிகாரங்களை எவ்விதக் கட்டுப்பாடுமின்றி உபயோகித்தார். அதனால், ஏராளமான செல்வாக்கைப் பெறலாம். இதைத் தவிர, இந்திய அரசாங்கத்தின் நிதிக் கொள்கைகளைக் கட்டுப்பாடு செய்வதற்கான ஏராளமான அதிகாரங்களையும், 1858ஆம் ஆண்டுச் சட்டம் இந்தியாவின் குழுவிற்குக் (India Council) கொடுத்திருந்தது. இவ்வதிகாரங்கள் படிப்படியாக, இந்தியா மந்திரியாரின் கைகளுக்கு மாறின; அதனால், வைஸ்ராயையும் அவருடைய சபையையும், அவர் உறுதியுடன் கட்டுப்பாடு செய்ய முடிந்தது.

ஆனால், சட்டசபை உண்டாக்கிய சட்டங்களைத் தவிர, வேறு பல காரணங்களினாலும், இந்தியா மந்திரியாரின் அதிகாரங்கள் அதிகரித்தன. 1870ஆம் ஆண்டில் இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்கும் இடையே ஏற்படுத்தப்பட்ட தந்தியமைப்பு, பல முக்கிய விளைவுகளைக் கொண்ட ஒரு நிகழ்ச்சியாய் விளங்கியது. கடிதப்போக்குவரத்தில் ஏற்பட்ட தாமதம், இந்திய அரசாங்கத்திற்கு மிக உபயோகமாய் இருந்தது; ஏனெனில், அவசரமான காரியங்களில் தேவையின் நிமித்தம் கொள்கைகளை உருவாக்கும் அதிகாரம் அதனிடம் இருந்தது; அக்கொள்கைகளை நிறைவேற்றியதால் ஏற்பட்ட விளைவுகளை மட்டுமே அவ்வரசு இந்தியா மந்திரியாருக்கு அனுப்பியது. இந்தியாவில் நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றி இந்தியா மந்திரியாருக்கு அடிக்கடி தெரிவிப்பதாலும், அவர் தகுந்த உத்தரவுகளை உடனே பிறப்பிக்கும் நிலையில் இருந்ததாலும், முன்பு இருந்த நிலை அவசியம் மாறியது. இது முதற்கொண்டு

இந்திய அரசாங்கத்தின்மீது முன்பிருந்ததைவிட உறுதியான அதிகாரத்தைச் செலுத்த இந்தியா மந்திரியாரால் முடிந்தது; அதனுல், வைஸ்ராய், இந்தியா மந்திரியாரின் 'வெறுஞ்செயலாளராக' இருக்க நேரிட்டது.

## 2. இந்திய அரசாங்கம்

இந்திய அரசாங்கத்தின் ஆட்சியை, ஆங்கிலேய அரசர் 1858ஆம் ஆண்டு எடுத்துக்கொண்டதும், சட்ட நிருவாக அதிகாரங்கள், மேலே கூறியபடி, கவர்னர்-ஜெனரலுடன் கூடிய சபையிடம் விடப்பட்டன. நிருவாக அதிகாரங்களைச் செலுத்துவதற்கு அச்சபை, கவர்னர்-ஜெனரல், நான்கு சாதாரண அங்கத்தினர்கள் (பத்து ஆண்டு அனுபவமுள்ள மூன்று அதிகாரிகளும் ஒரு பாரிஸ்டரும்), தனிப்பட்ட அங்கத்தினரான படை முதல்வர் ஆகியவர்களை அங்கத்தினர்களாகக் கொண்டிருந்தது. சட்டங்கள் செய்வதற்காக, அச்சபையுடன், ஆறு அங்கத்தினர்கள், 1853ஆம் ஆண்டுச் சட்டப்படி சேர்க்கப்பட்டார்கள்.

1853ஆம் ஆண்டின் மாறுதல்கள் மூலம் சட்டசபை ஆட்சி, சிறிய அளவில் இந்தியாவில் ஆரம்பமானது; அதனுல், அது முக்கியமாகக் குறிப்பிடத் தகுந்தது. கவெல் (Cowell) என்பார் குறிப்பிட்டபடி, 'எழுத்து மூலமாக அல்லாமல் பேச்சு மூலமாக, வாதங்கள் நடத்தப்பட்டன; மசோதாக்கள் அங்கத்தினர் ஒருவருக்கு அனுப்பாமல், பொறுக்கு உட்குழுவிற்கு (Select Committee) அனுப்பப்பட்டது; சட்ட சம்பந்தமான வேலைகள், இரகசியமாகச் செய்யப்படாமல், வெளிப்படையாகவே செய்யப்பட்டன.'

சட்டசபை மன்றத்தில் இரு பெருங் குறைகள் இருந்தன. அதில் இந்தியர்கள் சேர்க்கப்படவில்லை; வங்காளத்திற்கு வெளியே இருந்த பிரதேசங்களின் நிலையைப்பற்றிப் போதிய அறிவு அச்சபைக்கு இல்லாததால், மற்ற மாகாணங்களைப் பற்றிய சட்டங்களைச் சரிவரச் செய்ய முடியவில்லை.

1857-59ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலகம், முதல் குறையைப் பற்றிப் பலர் உணரும்படி செய்தது. 'நாட்டின் சட்டத்தை உருவாக்கும்போது, அதில் இந்தியர்கள் பங்கு கொள்ளாமல் தடுப்பதால் ஏற்படும் அபாயங்களைப் பெருங்கலகத்தின்

கொடிய நிகழ்ச்சிகள் அவர்களுக்கு எடுத்துக் காட்டின. **சர் சையது அஹமது** போன்ற சிறந்த இந்திய அறிஞர்கள், இவ்வாபத்தின் இரு தன்மைகளைச் சுட்டிக் காட்டினார்கள். ஒரு பக்கத்தில் மக்கள் விரும்பாத சட்டங்களை எதிர்த்துக் கண்டனத்தைத் தெரிவிக்கும் வழியை அவர்கள் மக்களிட மிருந்து பறித்துவிட்டார்கள். மறு பக்கத்தில், அரசாங்கம் தன் குறிக்கோள்களையும், நோக்கங்களையும் எடுத்துக் கூறுவதற்கு எவ்விதச் சந்தர்ப்பமும் அதற்குக் கிட்டவில்லை, அதனால் அவை தவறாக எடுத்துக்கொள்ளப்பட்டன. ஆங்கில அரசியல் வாதிகளுங்கூட இதே அபிப்பிராயத்தையே கொண்டிருந்தார்கள். 1860ஆம் ஆண்டில் சர் பார்ட்டில் பிரேர் (Sir Bartle Frere) எழுதிய திறமையான கூட்ட நடவடிக்கைக் குறிப்பில், 'மில்லியன்கள் கணக்காக உள்ள மக்களுக்குச் சட்டம் செய்யும் ஆபத்தான ஆராய்ச்சியை ஒழிப்பதற்கு இந்தியர்களைச் சட்ட சபையில் சேர்க்க வேண்டும், ஏனெனில், செய்யப்படும் சட்டங்கள் அவர்களுக்குப் பயன்படு கின்றனவா, இல்லையா என்பதை அறிய, புரட்சியைத் தவிர, வேறு வழி அவர்களுக்குத் தெரியாது,' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

அப்போதைய சட்டசபையின் இயற்கையான இக்குறை பாடுகளைத் தவிர, வேறு பல இடர்களும் ஏற்பட்டு, இந்திய ஆட்சியின் அமைப்பையே மாற்றிவிடுவதாகப் பயமுறுத்தின. இவற்றைச் சுருக்கிக் கூறலாம் :

1853ஆம் ஆண்டின் சட்டமியற்றியவர்களின் நோக்கங் களுக்கு மாறாக, அது (சட்டசபை) 'ஓர் ஆங்கிலோ-இந்திய காமன்ஸ் சபையாக' உருவெடுத்தது ; நிருவாகத்தையும் அதன் செய்கைகளையும் எதிர்த்ததுடன், அந்தரங்கமான தஸ்தாவேஜுகளையும் அதன் முன் வைக்கும்படி அது நிர்ப்பந்தித்தது ; சட்டசபை தீர்மானிக்குமுன்னர்ச் சட்ட மசோதாக்களை இந்தியா மந்திரியாரு'க்கு அனுப்ப மறுத்தது; இந்தியா மந்திரியார் (அல்லது 1858ஆம் ஆண்டிற்கு முன்னர் டைரக்டர்கள் மன்றம்) விரும்பிய சட்டங்களை நிறைவேற்ற மறுத்தது ; மறுபக்கத்தில், சட்டத்தைச் சுதந்தரமாக உரு வாக்குவதற்குத் தனக்குள்ள உரிமையை அது வற்புறுத்திக் கூறியது.

ஆரம்பத்திலிருந்து, சட்டசபை காட்டிய சுதந்தர உணர்ச்சியைக் கண்டு, அச்சபையை உண்டாக்கிய சர் சார்லஸ் உட் (Sir Charles Wood) என்கிற மேற்பார்வைக்

குழுவின் தலைவர், பெருங்குழப்பமடைந்தார். 'இச்சபையை அரசியலமைப்புடன் கூடிய இந்தியப் பாராளுமன்றத்தின் முக்கியப் பகுதி என்றும், தொடக்கம் என்றும் இந்திய இளைஞர் சிலர் கூறுவதைப் போன்று, நான் நினைக்கவில்லை,' என அவர் கூறினர். ஆனால், டல்ஹௌசி, 'இச்சட்டசபைக்குச் சட்டம் தெளிவாகக்கூறும் அதிகாரங்களைத் தவிர, அதிகமானவற்றை நான் கொடுக்கவில்லை,' என அறிவித்தார். 'ஒரு மசோதாவின் பின் விளைவுகளைத் தம் நோக்கத்திற்குள் கட்டுப்படுத்த முயன்று உட் என்பவர், முதலாவது சட்டமியற்றுபவராயும் இல்லை,' என்பது பொருத்தமாகக் கூறப்பட்டது.

இந்நிலை வெகு சீக்கிரத்திலேயே மாறத் தொடங்கியது. 1861ஆம் ஆண்டின் இந்தியக் கவுன்சில் சட்டம், இந்நாட்டுச் சட்ட சபைகளின் வரலாற்றில் மற்றுமொரு முக்கிய நிகழ்ச்சியாய் விளங்குகிறது. நிருவாக சபைக்குச் சாதாரண, அதிகாரியல்லாத ஐந்தாவது அங்கத்தினரை இச்சட்டம் நியமித்தது; இந்தியா மந்திரியார் படை முதல்வரைத் தனிப்பட்ட அங்கத்தினராக நியமிக்கும் அதிகாரம் தொடர்ந்து செலுத்தப்பட்டது. கவர்னர்-ஜெனரலின் அதிகாரங்கள் மிகவும் விரிவுபடுத்தப்பட்டன. அவரது சபையின் அதிகாரத்தைப் பெற்று, கவர்னர்-ஜெனரலுடன் கூடிய கவுன்சிலின் எல்லா அதிகாரத்தையும் அவர் செலுத்தலாம். மேலும், சபையின் வேலைத் திட்டங்களை நடத்துவதற்கான விதிகளையும் கட்டளைகளையும் உண்டாக்குவதற்கு இச்சட்டம் அவருக்கு அதிகாரமளித்தது. இப்பொழுது வழங்கப்படும் அமைச்சரகத் திட்டத்தை (Portfolio System) இவ்வதிகாரத்தை உபயோகித்துக் கானிங் பிரபு உண்டாக்கினர். இப்பொழுதும் பின்பற்றப்படும் இத்திட்டப்படி, அங்கத்தினர் ஒவ்வொருவரும், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட இலாக்காவை நிருவகிப்பர்; அவ்விலாக்கா சம்பந்தப்பட்ட முக்கியமல்லாத பிரச்சினைகளைத் தமது அதிகாரமூலம் அவர் முடிவு செய்வார்; முக்கியப் பிரச்சினைகளை வைஸ்ராயுடன் கலந்தாலோசித்து முடிவு செய்வார்; பொதுக் கொள்கை சம்பந்தப்பட்டவைகளையே கவுன்சிலின் முடிவுக்கு விடுவார். வேலை அதிகரித்ததன் விளைவாக, அத்திட்டம் ஏற்பட்டது; ஆனால், அது கவுன்சிலின் முக்கியத்துவத்தை மிகவும் குறைத்துவிட்டது; ஆனால், அதே அளவுக்கு வைஸ்ராயின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் உயர்த்தியது.

1861ஆம் ஆண்டுச் சட்டத்தின், சட்டசபை சம்பந்தமான விதிகள் மிக முக்கியமானவை. சட்டங்கள் செய்வதற்காக வைஸ்ராயின் கவுன்சிலுக்குப் புதியவராக ஆறு அங்கத்தினர்க்குக் குறையாமலும் பன்னிரண்டு அங்கத்தினர்களுக்கு மேற்படாமலும் சேர்க்கப்பட்டனர்; அவர்களுள் பாதிப்பேர், அதிகாரிகள் அல்லாத அங்கத்தினர்களாய் இருக்க வேண்டும். கூடுதலாக நியமிக்கப்படும் இவ்வங்கத்தினர்கள், கவர்னர்-ஜெனரலால் இரண்டு ஆண்டுகளுக்கு நியமிக்கப்படுவார்கள்.

சட்டங்கள் இயற்றுவதுதான் இக்கவுன்சிலின் வேலை என்பது உறுதியாகக் கூறப்பட்டது; வேறு எந்தப் பணியையும் இது செய்யக்கூடாதென இச்சட்டம் வெளிப்படையாகத் தடை விதித்தது.

'ஆங்கிலேயர், சுதேசமக்கள், அயல் நாட்டினர், மற்றுமுள்ள அனைவருக்கும், குறிப்பிடப்பட்ட பிரதேசத்தில் உள்ள இடங்களுக்கும், பொருள்களுக்கும், மேன்மைதங்கிய அரசியாருடன் நட்பாய் இருக்கும் டொமினியன் அரசுகள் நாடுகள் இவைகளில் இருக்கும் இந்திய அரசாங்கத்தின் எல்லா ஊழியர்களுக்கும் (பின்பு எல்லா பிரிட்டிஷ் பிரஜைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்ட) சட்டங்களையும் கட்டளைகளையும் ஏற்படுத்துவதற்கு' இச்சபைக்கு அதிகாரமளிக்கப்பட்டது.

சட்டமியற்றுவதற்குக் கொடுக்கப்பட்ட விரிவான அதிகாரத்திற்குப் பல தடைகளும் விதிக்கப்பட்டன. முதலில் பொதுக் கடன்கள் (Public debts), பொது வருமானம், இந்தியர்களின் சமயச்சடங்குகள், இராணுவக் கட்டுப்பாடு, இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட கொள்கைகள் போன்ற குறிப்பிட்ட சில தலைப்புகள் சம்பந்தமாகச் சட்டமியற்ற வேண்டுமானால், கவர்னர்-ஜெனரலின் முன் அங்கீகாரத்தைப் பெற வேண்டும்.

இரண்டாவதாக, இங்கிலாந்தின் உள்நாட்டு அரசாங்க அதிகாரத்தை மீறுவதாக உள்ள சட்டங்களையும், அல்லது பாராளுமன்றத்தால் உண்டாக்கப்பட்ட சில சட்டங்களையும் மீறுவதாக உள்ள சட்டங்களையும் அது செய்ய முடியாது.

மூன்றாவதாக, கவுன்சில் நிறைவேற்றிய எந்தச் சட்டத்தையும், மறுப்பாணை (Veto) செய்யும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலுக்கு உண்டு. அதைத் தவிர, நெருக்கடிக்

காலத்தில், கவுன்சில் நிறைவேற்றிய சட்டத்தில் இருக்கும் அதிகாரத்தைப்போன்ற அதிகாரக் கட்டளைகளைப் பிறப்பிப்பதற்கும் அவருக்கு அதிகாரமுண்டு.

இறுதியாக, கவுன்சில் நிறைவேற்றிய சட்டத்தை மேன்மை பொருந்திய அரசியார் தடை செய்யலாம்.

பம்பாய், சென்னை மாநிலங்களில் அமைதியும் சிறந்த ஆட்சியும் ஏற்படுத்துவதற்காக, 'சட்டங்களையும் அதிகாரக் கட்டளையையும்' எற்படுத்துவதற்கு வேண்டிய அதிகாரங்களை 1861ஆம் ஆண்டின் சட்டம், இவ்வரசாங்கங்களுக்கு மறுபடியும் கொடுத்தது; ஆனால், கவர்னர்-ஜெனாலின் கவுன்சிலுக்கு விதிக்கப்பட்ட அத்தடைகளே, இவற்றுக்கும் விதிக்கப்பட்டன. இதைத் தவிர, நாணயம், பதிப்புரிமை (Copy-right), தபால் தந்திகள், குற்றச்சட்டம் (Penal code) போன்ற அனைத்திந்தியத் தலைப்புகளைப்பற்றிய சட்டங்கள் இயற்றுவதற்கு முன், மாகாணக் கவுன்சில்கள், கவர்னர்-ஜெனரலின் அனுமதியைப் பெறவேண்டும். சட்டமியற்றுவதற்காக, அட்வகேட்டு ஜெனரல், 'நால்வருக்குக் குறையாத ஆனால் எண்மருக்கு மேற்படாத' கவர்னரால் நியமிக்கப்படும் அங்கத்தினர்களாகிய அதிகப்படியான அங்கத்தினர்களைக்கொண்டு கவர்னரின் நிருவாகக் கவுன்சில் விரிவு படுத்தப்பட்டது. நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களுள் பாதிப்பேர், அதிகாரிகள் அல்லாதவர்களாய் இருக்க வேண்டும்.

1861ஆம் ஆண்டின் சட்டம், பல வழிகளில் பிற்போக்கானது என்பதையும், சட்டசபையின் சுதந்தர அதிகாரத்தைப் பறித்துவிட்டதென்பதையும் நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். நிருவாகத் தடை செய்யவோ, அன்றிக் கட்டுப்பாடு செய்யவோ, அதனால் இயலவில்லை; அதன் சட்டசபை வேலைகளும், பலவிதக் கட்டுப்பாடுகளால் பயனற்றுப் போயின. இவ்விதமான குறைபாடுகள் இருந்தபோதிலும், 1861ஆம் ஆண்டு இந்தியக் கவுன்சில்கள் சட்டத்தை மிக முக்கியமானது என்றும் கொள்ள வேண்டும். இந்திய அரசாங்கத்திற்கு அது ஓர் அமைப்புத் திட்டத்தைக் கொடுத்தது; இன்று வரையிலும் அது நீடித்து நிற்கிறது; பிறகு செய்யப்பட்ட எல்லா மாற்றங்களும், அவ்வமைப்புத் திட்டத்திற்குள்ளேதான் செய்யப்பட்டன. பெருமாற்றங்கள் ஏற்படுவதற்கும் அது காரணமாய் இருந்தது; அரசாங்கத்தின் உயர்ந்த சபைகளில் இந்தியர்களைச் சேர்த்துக்கொள்ளுதல்

போன்ற ஆட்சிச் சீர்திருத்தங்கள், பின்னர் இந்நாட்டில் ஏற்பட்டு, அம்மாற்றங்களைச் சிறப்பித்துக் காட்டுகின்றன. சட்டசபையின் அதிகாரிகள் அல்லாத அங்கத்தினர்களைப் பற்றி அச்சட்டத்தில் வெளிப்படையாக ஒன்றும் கூறப்படவில்லை. அதனுல், இந்தியர்களையும் அதில் சேர்க்கலாம். 1853ஆம் ஆண்டின் சட்டம் ஏற்படுத்திய சட்டசபையில் இந்தியர்களையும் சேர்க்கவேண்டும் என டல்ஹௌசி வற்புறுத்தினுர். எவ்விதப் பயனும் அதனுல் ஏற்படவில்லை. 1857ஆம் ஆண்டின் கலகத்தினுல், இங்கிலாந்து அரசாங்கம் இதைப்பற்றிக் கொண்டிருந்த கருத்து மாறியது. பாட்டியாலா மகாராஜா, வாரணுசியின் ராஜா, சர் தினகர் ராவ் ஆகியவர்களைக் கானிங் பிரபு 1862ஆம் ஆண்டில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட சட்டசபைக்கு நியமித்தார்.

அச்சட்டத்திற்குப் பின் முப்பது ஆண்டுகளில் (1861-1891) செய்யப்பட்ட பலவிதச் சட்டங்களை விரிவாகக் கூறுவது அவசியமில்லை. வைஸ்ராயின் சட்டம் செய்யும் அதிகாரமும் அவரது கவுன்சிலின் சட்டம் செய்யும் அதிகாரமும் அதிகமாகப் பெருகியதை முக்கிய மாற்றங்களுள் ஒன்ருகக் குறிப்பிடலாம். 1870ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட இந்தியக் கவுன்சில்களின் சட்டப்படி, சட்டசபையைக் கலக்காமலே சட்டங்களைச் செய்யும் உரிமை கவர்னர்-ஜெனரலோடு கூடிய கவுன்சிலுக்குக் கொடுக்கப்பட்டது. அவருடைய கவுன்சிலின் பெரும்பான்மையினரின் முடிவைத் தள்ளி வைக்கும் வைஸ்ராயின் அதிகாரத்தை இச்சட்டம் மறுபடியும் தெளிவாகக் கூறியது: "இந்தியா முழுவதிலும் அல்லது எப்பாகத்திலும் உள்ள பிரிட்டிஷ் உடைமைகளின் பாதுகாப்பு, அமைதி, நலன்கள் ஆகியவைகளைப் பாதிக்கும் மசோதாவைச் சட்டசபையின் பெரும்பான்மையினரின் அபிப்பிராயத்திற்கு எதிராக ஏற்றுக்கொண்டு அமுலுக்குக் கொண்டு வரலாம்; அல்லது அதை நிறுத்தி வைக்கலாம், அல்லது தள்ளி விடலாம்.'

1874ஆம் ஆண்டுச் சட்டப்படி, சாதாரண ஆரும் அங்கத்தினர், 'பொது வேலைகள் அங்கத்தினர்' (The Member of Public Works) வைஸ்ராய் நிருவாகக் கவுன்சிலில் சேர்க்கப்பட்டார்.

அந்த முப்பதாண்டு காலத்திலேதான், முதல் பெரிய தேசீய இயக்கம் இந்தியாவில் ஏற்பட்டது; இந்தியத் தேசீயக் காங்கிரசும் அப்பொழுதுதான் ஆரம்பிக்கப்பட்டது; இதைப்

பற்றிப் பின்னர் விரிவாகக் கூறுவோம். புதியதாகத் தூண்டப்பட்ட இந்தியர்களின் அரசியல் உணர்ச்சி, காங்கிரஸால் முறைப்படுத்திக் கூறப்பட்ட அரசியல் உரிமைகளைக் கேட்பதில் முடிந்தது. மாகாண, மத்திய சட்டசபைகளைக் கீழ்க்காணுமாறு சீர்திருத்தம் செய்வதைத் தன் திட்டத்தின் முன் காங்கிரஸ் வைத்தது:

(1) வங்காளம், பம்பாய், சென்னை ஆகிய மாகாணங்களைத் தவிர்த்து, மற்ற மாகாணங்களிலும் சட்டசபைகளை நிறுவுதல்.

(2) தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்களின் எண்ணிக்கையை அதிகமாக்கிச் சட்டசபையை விரிவுபடுத்துதல்.

(3) சட்டசபைகளுக்கு அதிகப்படியான அதிகாரங்களை அளித்தல், முக்கியமாக வரவு செலவு திட்டத்தை விவாதித்தல், கேள்விகளைக் கேட்பதன் மூலம் வேண்டிய செய்திகளைப் பெறுதல் போன்ற அதிகாரங்களை அளித்தல்.

இத்தேவைகளை, ஓரளவாவது பூர்த்தி செய்வதற்காகச் சில திட்டங்களை இங்கிலாந்தின் உள்நாட்டு அரசாங்கத்திற்கு டப்ரின் பிரபு (Lord Dufferin) அனுப்பினார்; இதனால், 1892ஆம் ஆண்டின் இந்தியக் கவுன்ஸில்கள் சட்டம் ஏற்பட்டது; இதுவும், இந்திய அரசியல் வளர்ச்சியின் வரலாற்றில் மிக முக்கியமானது.

இச்சட்டப்படி, மாகாண, மத்திய சட்டசபைகளின் அங்கத்தினர் எண்ணிக்கை சிறிது உயர்த்தப்பட்டது; மத்தியச் சட்டசபையின் அதிகப்படியான எண்ணிக்கை பதினாறு எனவும், பம்பாய், சென்னை, வங்காளம் ஆகியவைகளுக்கு இருபது எனவும், வடமேற்கு மாகாணங்களுக்கும், 1836ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட அயோத்தியின் சட்டசபைக்கும் பதினைந்து எனவும், அங்கத்தினர்களின் எண்ணிக்கை தீர்மானிக்கப்பட்டது. இவ்வாறு அதிகமாக்கப்பட்ட எண்ணிக்கை, காங்கிரஸ் எதிர்பார்த்ததைவிடக் குறைவாகவே இருந்தது; இந்தியர்களின் அரசியல் ஆர்வத்தை ஆதரவுடன் நோக்கிய ஆங்கிலேய அரசியல்வாதிகளுங்கூட இதை மிக மிகக் குறைவானதெனக் கருதினார்கள்.

இதைவிட முக்கியமானது, இவ்வங்கத்தினர்களை நியமிக்கும் முறையில் ஏற்பட்ட மாறுதலே. காங்கிரஸ் கோரிய

தேர்தல் கொள்கை, நேரிடையாகக் கொடுக்கப்படவில்லை. ஆனால், அதிகப் படியாக அங்கத்தினர்கள் நியமிக்கப்படும் முறையைக் கவுன்சிலுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் ஏற்படுத்த வேண்டுமென்று அச்சட்டம் கூறியது. காமன்ஸ் சபையில் இம்மசோதா விவாதிக்கப்படுகையில் புதியவராகச் சேர்க்கப்படும் அங்கத்தினர்களைத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுப்பதற்கு இவ்விதி கவர்னர்-ஜெனரலுக்கு உதவியாய் இருக்கும் என்பதை அரசாங்கத்தின் அங்கத்தினர்கள் விளக்கினார்கள். உண்மையில் லேன்ஸ்டௌன் பிரபு (Lord Lansdowne) இவ்வதிகாரத்தைப் பயன்படுத்தி மாகாணச் சபைகளின் அங்கத்தினர் எண்மரை முனிஸிபாலிட்டிகள், மாவட்டக் குழுக்கள், வர்த்தகச் சபைகள், பல்கலைக் கழகங்கள் போன்றவைகள் தேர்ந்தெடுக்கும்படி செய்தார்; மத்திய சட்டசபையின் நான்கு அங்கத்தினர்களை மாகாணச் சட்ட சபைகளில் இருக்கும் அதிகாரிகள் அல்லாத அங்கத்தினர்கள் தேர்ந்தெடுத்ததற்கும் அவரே காரணர். வரவு செலவு திட்டத்தை விவாதிக்கும் உரிமை, பொதுநலன்களைப் பற்றிய கேள்விகளைச் சட்டசபை அங்கத்தினர்களுக்கு, 1892ஆம் ஆண்டின் சட்டம் வழங்கியது.

இந்திய தேசியக் காங்கிரஸ் கோரியதைவிட, மிக மிகக் குறைவானதை 1892ஆம் ஆண்டின் சட்டம் கொடுத்தாலும், முன்பு இருந்ததைவிட அது அதிக உரிமையைக் கொடுத்தது, தேர்தல் கொள்கையை ஒப்புக்கொண்டதாலும் சட்டசபைகளுக்கு நிருவாகத்தின்மீது ஓர் அளவுக்குக் கட்டுப்பாட்டைக் கொடுத்ததாலும் மேற்கொண்டு அதிகமான சீர்திருத்தங்களை இவ்வழியைப் பின்பற்றி உண்டாக்குவதற்கு அது வழி வகுத்தது; இந்நாட்டு ஆட்சியை மேற்பார்வை செய்யும் ஏராளமான அதிகாரங்கள் இவற்றின் மூலம் இந்தியர்களுக்குக் கிடைக்கும்.

# 3. உள்நாட்டு ஆட்சி (1858–1905)

## 1. பொதுப் பணிக்குப் புதியவர்களை எடுத்தல்

இந்திய அரசாங்கத்தை நேரிடையாக ஆட்சி செய்யும் பொறுப்பை இங்கிலாந்து அரசர் ஏற்றவுடன், உள்நாட்டு அரசியலின் தன்மையிலும் நுணுக்கப் பிரிவிலும் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. கம்பெனி ஆட்சியின்போது ஏற்படுத்த முடியாத அளவுக்கு ஆட்சி இயந்திரம் படிப்படியாக உருவாக்கப்பட்டது; இங்கிலாந்து நாட்டின் ஆட்சி முறை வழக்கங்களும், அரசியற் கொள்கைகளும், இந்நாட்டிற்கும் பேரளவில் பயன்படுத்தப்பட்டன. இந்திய ஆட்சி திறமை யானதாகவும், இக்காலத்திற்கு உகந்ததாகவும் மாறியது; கம்பெனிக்கும் மேற்பார்வைக் குழுவிற்கும் இடையே இருந்த பழைய போட்டியும் பொறாமையும் மறைந்தன; பாராளு மன்றத்தின் ஒருமுக (Unitary) அதிகாரம் ஏற்படுத்தப்பட்டது.

ஆனால், இதனால் தீமைகளும் உண்டாயின. பழைய ஆட்சியின் போது கிழக்கு இந்தியக் கம்பெனியின் பட்டயம், குறிப்பிட்ட காலத்திற்கொருமுறை புதுப்பிக்கப்பட்டதால், இந்திய விவகாரங்களை மிக்க ஆர்வத்துடன் ஆராய்வதற்குப் பாராளுமன்றத்திற்கு ஒரு வாய்ப்புக் கிட்டியது. ஆனால், இந்தியாவிற்கு ஒரே அதிகாரியாக, இந்தியக் காரியதரிசியார் நியமிக்கப்பட்டவுடன், இந்த ஆர்வம் இல்லை. கொள்கை யளவில், சந்தேகமில்லாமல், காமன்ஸ் சபை, இந்திய ஆட்சிக்குப் பொறுப்பானது; ஆனால், இந்நாடு பற்றிய பிரச்சினைகளில் ஒரு சிலரே ஆர்வமுடையவராய் இருந்தனர். கம்பெனியின் காலத்தில் ஆட்சி பற்றி அறிக்கை சமர்ப்பிக்கப் பாராளுமன்றம் ஒரு பொறுக்குக் குழுவை நியமித்தது; இக்குழு எல்லாவற்றையும் ஆராய்ந்து, தவறுகளை வெளிப் படுத்தியது; அவற்றைப் போக்குவதற்கான வழிகளையும்

கூறியது. இவை புதிய பட்டயங்களில் சேர்த்துக்கொள்ளப் பட்டன. ஆனால், இப்பொழுதோ, முழுச்சபையின் முன்பு ஆண்டு அறிக்கையை மட்டுமே காரியதரிசியார் சமர்ப் பித்தார். அதைப்பற்றி அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஆராயவேண்டும் என்பதுதான் நியதி; ஆனால், எப்பொழுதும் நிகழ்கிறபடி, எல்லோருடைய பொறுப்பும் எவருடைய பொறுப்புமன்று எனச் செய்யப்பட்டது.

இதன் பயனாக, இந்தியக் காரியதரிசியாரின் அதி காரங்கள் அதிகரித்ததைப் பற்றி மேலே கூறியுள்ளோம்; ஆனால், இந்தியாவின் உள்நாட்டு ஆட்சியும் இதனால் பாதிக்கப் பட்டது. இந்திய அதிகாரிகள், இந்தியக் காரியதரிசியாருக்கு மட்டுமே பொறுப்பானவர்கள்; அவருக்குத் திருப்தியாக நடக்கிற வரையிலும், வேறு எந்த அதிகாரத்திற்கும் அவர்கள் அஞ்ச வேண்டுவதில்லை. இவ்வளவு தூரத்திலிருந்துகொண்டு, ஆட்சியின் நுணுக்கங்களைச் சரியாகக் கண்காணிப்பது என்பது காரியதரிசியாருக்கு இயலாத காரியந்தான்; இறுதிப் பொறுப்பு அவரைச் சேர்ந்ததால், அதிகாரிகளின் நடவடிக்கைகளை அவர் ஆதரிக்க வேண்டியிருந்தது.

மேலான இந்திய சிவில் சேர்வீஸைச் சேர்ந்த (Superior Indian Civil Service) அங்கத்தினர்களின் தலைமையின்கீழ், எல்லா அதிகாரங்களையும் பெற்ற அதிகார வர்க்கம் வளர்ச்சி பெற்றதே இதனால் ஏற்பட்ட பயன். இந்தப் பணித்துறை வெகு சீக்கிரத்திலேயே, ஆற்றல் வாய்ந்த ஒரு கார்ப்பொ ரேஷனாய் மாறியது; இதன் அங்கத்தினர்கள்—பிளன்டு (Blunt) என்பார் கூறியபடி—நடைமுறையில் இந்தியாவைத் தங்களுடைய உடைமையாக்கிக் கொண்டார்கள். நீக்க முடியாதவர்களாகவும், பொறுப்பற்றவர்களாகவும் அவர்கள் மாறினார்கள்; அவர்கள் தங்களைப் போன்ற அங்கத்தினர்களின் அதிகாரத்தைத் தவிர, வேறு அதிகாரத்திற்குத் திருந்தக்கூடியவர்களாய் இல்லை. இப் பணித்துறையைச் (Service) சேர்ந்த அங்கத்தினர்கள், உண்மையில் திறமை மிகுந்தவர்களாயும், பொதுவாக நேர்மையுள்ளவர்களாயும் இருந்தார்கள். ஆனால், அவர்கள் இருந்த நிலைமையினால், தாங்கள் உயர்வானவர்கள் என்ற உணர்ச்சி அவர்களுக்கு ஏற்பட்டது; அதனால், ஆள்பவர் களுக்கும் ஆளப்பட்டவர்களுக்குமிடையே பல வித்தியாசங்கள் ஏற்படுத்தப்பட்டன. சிறந்த அரசாங்கத்திற்கு அடிப்

படையாய் இருக்கும் இரக்கம், பரஸ்பரம் ஒருவரையொருவர் தெரிந்துகொள்ளுதல் போன்றவை அவர்களிடத்தில் காணப் படவில்லை.

உயர்தர பிரிட்டிஷ் அதிகாரிகள் ஒதுங்கி நிற்பதை அதிகப் படுத்துவதற்குத் துரதிருஷ்டவசமாக வேறு சில காரணங் களும் இருந்தன. கம்பெனியின் காலத்தில், ஆங்கில அதிகாரிகள், இந்தியர்களுடன் நெருங்கிப் பழகினார்கள்; அதனால், உண்மையான நல்லுணர்ச்சியும் சில சமயம் நட்புணர்ச்சியும் அவர்களிடம் இருந்தன. பெருங்கலகத்தின் கொடுமைகளினால், ஆங்கிலேயர்களின் மனத்தில் இந்தியர் களைக் குறித்து ஒரு வெறுப்புணர்ச்சி உண்டாயிற்று. சாதாரணமாக விடப்பட்டிருந்தால் இவ்வுணர்ச்சிகள் ஆற்ற லிழந்து, சில நாள்களில் முழுவதும் மறைந்துவிட்டிருக்கும். ஆனால், நீர்வாயுக் கப்பல்கள், சூயஸ் கால்வாய் தந்தி, தரை மார்க்கப்பாதை ஆகியவற்றின் மூலம் தாய் நாட்டுடன் சுலப மாகத் தொடர்பு கொள்ள ஆங்கிலேயர்களால் முடிந்தது. தாய்நாட்டை விட்டு அயல்நாட்டில் வசிப்பதாக அவர்கள் கருதவில்லை; ஆனால், தங்கள் நாட்டுடன் அடிக்கடி தொடர்பு கொண்டிருந்தார்கள். பெரிய நகரங்களில் ஆங்கில சமூகம் படிப்படியாய் வளர்ந்தது. இக்காரணங்களினால் இந்தியர் களுடன் நட்புறவுடன் இருக்க வேண்டிய அவசியமில்லை; இந்திய மக்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஆங்கில அதிகாரிகள் மேலும் மேலும் ஒதுங்கியே வாழ்ந்து வந்தார்கள். அலுவலகத் திற்கும் சங்கத்திற்கும் (Club) செல்வதற்கு மட்டுமே ஆங்கி லேயருக்கு நேரமிருந்தது; அதனால், அவர் இந்தியர்களுடன் பழகவில்லை. இந்தியாவில் பல ஆண்டுகள் இருந்தாலும், அவன் அயல் நாட்டவனாகவே காலத்தைக் கழித்தான்; இந்தியர்களின் உணர்ச்சிகள், உணர்ச்சியால் பாதிக்கப்படும் கருத்து (Sentiment), விருப்பம் ஆகியவைகளைப் பற்றி அதிகம் தெரியாது. 'கம்பெனியின் காலத்திலிருந்த ஆங்கில–இந்திய அதிகாரிகள், அரசியாரின் அதிகாரிகள் கனவு காண முடியாத அளவுக்கு இந்தியர்களை விரும்பினார்கள்; அப்படி அவர்களை விரும்பியதால், அவர்களுக்குச் சிறப்பாகச் சேவை செய்ய முடிந்தது,' என பிளன்டு என்பவர் உண்மையாகக் கூறியுள்ளார்.

பொதுப்பணிகளில் ஏராளமான இந்தியர்களை நிய மிப்பதன் மூலமாகத்தான் இந்நிலையை மாற்ற முடியும் என இந்தியர்கள் இயற்கையாய் எண்ணலானார்கள். 1833ஆ

ஆண்டின் சட்டம், உயர்தரப் பதவிகளுக்கு இந்தியர்கள் நியமிக்கப்படுவதைச் சட்டபூர்வமான செயலாக்கியது. 'ஒப்பந்தப்படி ஏற்படுத்தப்பட்ட கம்பெனியின் பணியாளர்களே ஆண்டுக்கு 800 பவுன் சம்பளமுள்ள பதவிகளில் நியமிக்கப்படலாம்; மற்றவர்களை நியமித்தல் கூடாது,' என 1793ஆம் ஆண்டுச் சட்டத்தின் விதிகள் கூறுகின்றன. ஆனால், இது வரையிலும் அவ்விதிகள் மாற்றப்படவில்லை. இதனால், கிழக்கிந்தியக் கம்பெனியுடன் அல்லது 1858ஆம் ஆண்டிற்குப் பின் இந்தியக் காரியதரிசியாருடன் ஒப்பந்தம் செய்து நிரந்தர அதிகாரிகளாகி விட்ட இந்தியர்கள் மட்டுமே, உயர்தரப் பதவிகளில் நியமிக்கப்படுவார்கள்; இதற்கு முன்பு இவ்வதிகாரிகள் ஓரளவு டைரக்டர்களாலும், ஓரளவு மேற்பார்வைக் குழுவாலும் நியமிக்கப்பட்டார்கள்; நியமிக்கப்பட்ட பிறகு, ஹெயிலிபரியிலிருந்த (Hailey bury) கிழக்கிந்தியக் கம்பெனியின் கல்லூரியில் இரண்டு ஆண்டு காலம் பயிற்சி பெறுவார்கள். இந்நியமனங்களுக்கான தேர்வுப்போட்டி முறை, 1853ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது; 1858ஆம் ஆண்டில் மறுபடியும் உறுதிப்படுத்தப்பட்டது. மேன்மை தங்கிய அரசருக்குப் பிறப்பளவில் குடியுரிமை பெற்ற எல்லா மக்களும், ஐரோப்பியர்கள் அல்லது இந்தியர்கள் எவரும், இத்தேர்வில் பங்கு கொள்ளலாம். இத்தேர்வுக்கு அனுமதிக்கப்படுபவர்களின் அதிக பட்சமான வயது, முதலில் இருபத்து மூன்றாய் இருந்தது. 1859ஆம் ஆண்டில் அது இருபத்திரண்டாகக் குறைக்கப்பட்டது. தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தகுதி ஆய்வுக்காலமான (Probation) ஓர் ஆண்டிற்கு இங்கிலாந்தில் இருக்க வேண்டும். 1866ஆம் ஆண்டில், மறுபடியும் உச்சவயது இருபத்தொன்றாகக் குறைக்கப் பட்டது; தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள், அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக் கழகத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு பிரத்தியேகமான பயிற்சி முறையைப் பெற வேண்டியிருந்தது.

இந்தியர்கள் இத்தேர்தலில் வெற்றி பெறுவதென்பது மிகக் கடினமான காரியம். இங்கிலாந்திற்குச் செல்வதற்குப் பணம் மிகுதியாக வேண்டியிருந்தது; தவிர, அந்நாடு நன்கு பழக்கமில்லாத நாடு. இந்துக்களாய் இருந்தால், அவர்களைச் சமூகத்தின் பழமை விரும்பிகள் மிகவும் வெறுத்தார்கள். ஆங்கிலப் பல்கலைக்கழகத்தில், ஆங்கில போதன மொழி மூலம், ஆங்கிலப் பிள்ளைகளுடன் போட்டியிடுவதென்பது

மிகவும் சிரமமான காரியந்தான். இந்தியர் ஒரு சிலரே இதில் வெற்றி பெற்றனர் என்ருல், அதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.

இந்நிலைமை, இந்தியாவின் அரசியல் இயக்கத்தை எவ்வாறு பாதித்தது என்பது வேறு அத்தியாயங்களில் கூறப்படும். மேலான பொதுத்துறைப் பணியில் இந்தியர் ஒரு சிலரே இருப்பதை பிரிட்டிஷ் அரசாங்கமும் உணர்ந்தது. தேர்வு இல்லாமலே, உயர்தரப் பதவிகளுக்கு இந்தியர்களை நியமிக்கலாம் என, 1870ஆம் ஆண்டின் சட்டம் கூறியது; பின்னர்க் கூறப்படும் சூழ்நிலையிலேதான், 1879ஆம் ஆண்டில் இச்சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது.

'இந்தியக் காரியதரிசியாரால் எவ்வாண்டிலும் நியமிக்கப் படும் ஒப்பந்தப் பொதுத்துறைப் பணியாளர்களின் எண்ணிக் கையில் ஆறில் ஒரு பங்கிற்குக் குறையாத அளவில் உள்ள சுதேசிகளை ஸ்தல ஸ்தாபனங்கள் தேர்ந்தெடுக்கலாம்; ஆனல், அவர்களைக் கவுன்சிலுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் அங்கீ கரிக்க வேண்டும்,' என 1879ஆம் ஆண்டின் சட்டத்தின் விதிகள் கூறுகின்றன. 'சட்டபூர்வமான பொதுத்துறைப் பணியாளர்கள் (Statutary Civil Servants) என இவ்வதிகாரிகள் வழங்கப்பட்டார்கள். 'நல்ல குடும்பம், சிறந்த சமூக நிலை, போதுமான திறமை, கல்வி ஆகியவற்றைப் பெற்றுள்ள இளைஞர்கள்' இதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நியமனத்தால் ஏற்படும் எல்லாக் குறைபாடுகளும் இத் திட்டத்திலும் இருந்தன. அதனல், வெளிப்படையான தேர்வுப் போட்டியையே இந்தியர்கள் விரும்பினர்கள். ஆனல், இந்தி யர்களுக்குச் சமமான நியாயமான ஒரு சந்தர்ப்பத்தை அளிப்பதற்காக, இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஒரே சமயத்தில் தேர்வுகள் நடத்தப்பட வேண்டுமென அவர்கள் சிபாரிசு செய்தார்கள். அதேகாரணங்களுக்காவே, தேர்வுக்கு அனுமதிக்கப்படும் உச்சவயதை இருபத்தொன்றுக்குக் கீழ் குறைக்கக்கூடாததென அவர்கள் கோரினர்கள். ஏனெனில், அயல் நாட்டு மொழியில் தேர்வு செய்யப்படும் இந்திய மாணவர்களை இது அதிகமாகப் பாதிக்கலாம். 1877ஆம் ஆண்டில், உச்சவயது வரம்பைப் பத்தொன்பதாகக் குறைத்த போது, 'இது இந்தியர்களைச் சேர்க்காமலிருப்பதற்காக, வேண்டுமென்றே செய்யப்பட்ட ஒரு நடவடிக்கை, என நினைக்கப்பட்டது; இறுதியில் இதில் கிளர்ச்சி ஏற்பட்டு, காங்கிரஸ் இயக்கத்தில் முடிந்தது. ஒரே சமயத்தில் தேர்வு,

அதிக இந்தியர்களை நியமித்தல் ஆகிய பிரச்சினைகளைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது.

இப்பிரச்சினையை ஆராய்வதற்காக, ஒரு பொதுப்பணிக் குழுவை டப்ரின் பிரபு (Lord Dufferin) 1886ஆம் ஆண்டில் ஏற்படுத்தினர். ஒப்பந்தப் பணியாளர்களைத் தேர்ந்தெடுக்க, ஒரே சமயத்தில் இரண்டு இடங்களில் தேர்வு வைக்கப்பட வேண்டும் என்னும் கொள்கையை அது நிராகரித்தது; சட்டப் படியமைந்த சிவில் செர்வீஸை ஒழித்து விடவும் அது ஆலோசனை கூறியது. ஒப்பந்தப் பணிக்கு இதுவரையில் ஒதுக்கப்பட்ட பல பதவிகள், 'மாகாணச் சிவில் செர்வீஸ்' எனக் கூறப்படும் உள்ளூர்பணிக்குக் கொடுக்கப்பட வேண்டும்; ஒவ்வொரு மாகாணத்திலும் கீழ்ப்பதவியிலிருந்து பதவி உயர்வு மூலமாக அல்லது நேரிடையாக நியமித்தல் மூலமாக அவர்கள் நியமிக்கப்படலாம் என அவர்கள் ஆலோசனை கூறினர்கள். 'ஒப்பந்தப்படியுள்ள, ஒப்பந்தப்படி அல்லாத' என்னும் சொற்றொடர்களுக்குப் பதிலாக, 'இம்பீரியல், மாகாணம் சம்பந்தப்பட்ட' என்பவை உபயோகிக்கப்படும். பின்னதற்குக்கீழே, கீழ்ப்பட்ட சிவில் செர்வீஸ் இருக்கும்.

இந்தச் சிபாரிசுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஒப்பந்தச் சிவில் செர்வீஸ், அதன்பிறகு இந்தியாவின் சிவில் செர்வீஸ் எனவும், மாகாணச் செர்வீஸ் குறிப்பிட்ட ஒரு மாகாணத்தின் பெயரைக் கொண்டும், (உதாரணமாக, வங்காளச் சிவில் செர்வீஸ் எனவும்) வழங்கப்படும். இந்தியச் சிவில் பணியாளர்களுக்கு ஒதுக்கப்படும் பதவிகளைப் பற்றிய ஒரு பட்டியல் தயாரிக்கப்பட்டது; ஆனல், புதிய மாகாணச் செர்வீஸுக்கும் அவர்கள் செல்லலாம்; இப்பட்டியல் பதவிக்கு இந்தியர் ஒருவரை உள்ளூர் அரசாங்கம் நியமிக்க, அதற்கு அதிகாரமளிக்கப்பட்டிருக்கின்றது. கல்வி, போலீஸ், மராமத்து வேலைகள், மருத்துவத்துறைகள், போன்ற ஆட்சியின் பிரிவுகளும் இம்பீரியல், மாகாண, கீழ்ப்பட்ட செர்வீஸ்களும் ஏற்படுத்தப்பட்டன. முதல் பிரிவில் ஆங்கிலேயர் மட்டுமே இருந்தனர். மற்ற இரண்டு பிரிவுகளில் ஏறக்குறைய இந்தியரே அதிகமாய் இருந்தனர்.

பிரிட்டிஷ் ஆட்சி முடிகிற வரையிலும், இத்திட்டம் சிறு மாறுதல்களுடன் பின்பற்றப்பட்டது. பணியின் தரத்தை இது உயர்த்தினலும், நாட்டின் உயர்ந்த பதவிகளில்

ஏராளமான இந்தியர்கள் நியமிக்கப்படவேண்டும் என்கிற இந்தியர்களின் நியாயமான கோரிக்கைகளை இது திருப்தி செய்யவில்லை.

இந்தியச் சிவில் செர்வீஸுக்கு ஆள்களைத் தேர்ந்தெடுப்பதற்காக இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒரே சமயத்தில் தேர்வுகள் நடத்தப்படவேண்டும் என்பதற்கு ஆதரவாக, காமன்ஸ் சபை, 1893ஆம் ஆண்டில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. லேன்ஸ்டௌன் பிரபுவின் அரசாங்கம், மாகாண அரசாங்கங்களைக் கலந்த பிறகு, இத்தீர்மானத்தின் கொள்கையை உறுதியாக எதிர்த்தது. 'இப்பொழுது பதவியிலிருக்கும் ஐரோப்பிய ஊழியர்களை அதிகமாகக் குறைப்பது,' பிரிட்டிஷ் ஆட்சியின் பாதுகாப்பிற்கு ஏற்றதர்க இராது, என அவர்கள் கூறினர்கள். வரையறுக்கப்படாத தேர்வுப் போட்டிகள், சிவில் செர்வீஸில் இருக்கும் பிரிட்டிஷ் அதிகாரிகளை அதிகமாகப் பாதிக்கும், அதோடு முகம்மதியர்கள், சீக்கியர்கள் போன்ற வேறு இனத்தவர்களையும் நடைமுறையில் செர்வீஸில் சேர்க்காமல் விலக்கிவிடும்; ஏனெனில், அவர்கள் மரபு முறைப்படி ஆள்பவர்கள்; சிறந்த ஒழுக்கம் இருந்தாலும், அவர்களுக்கு இலக்கியக்கல்வி இல்லை. இத்திட்டத்தைப்பற்றி ஒன்றும் ஏற்படவில்லை; கால் நூற்றுண்டிற்குமேல் உள்ள காலம் கழிந்தும், இதைப்பற்றி எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

## 2. ஸ்தல ஸ்தாபனச் சுய ஆட்சி

உலகத்தில் எப்பாகத்திலும் இருந்ததைவிட அதிக அளவில் ஸ்தல ஸ்தாபனச் சுய ஆட்சியின் குறிக்கோள்கள், பல்லாண்டு காலமாகவே இந்தியாவில் இருந்து வந்திருக்கின்றன. கிராமங்களும் நகரங்களும் சிறிய அளவில் இருக்கும் நாடுகளாகவே இருந்து வந்தன. சுகாதாரம், போக்குவரவு, நீதி போன்றவைகளை மக்கள் மன்றங்களே ஒரு பிரதம நிருவாக அதிகாரி உதவியுடன் நடத்தி வந்தன.

முகலாயப் பேரரசு அழிந்ததற்குப் பின் ஏற்பட்ட குழப்பமான காலத்தில் இச்சுய ஆட்சி நிறுவனங்கள் நகரங்களிலிருந்து பெரும்பாலும் மறைந்தொழிந்தன. கிராமங்களிலும் இவை சிறுகச்சிறுக அழிந்தன. கிராமச் சபைகள் எங்கெங்கு நல்ல நிலையில் இருக்கின்றனவோ, அங்கங்கெல்லாம், அவற்றை ஆதரிப்பதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம்

முயற்சி செய்தது; அவை இல்லாத இடங்களில் அவற்றை மறுபடியும் ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்தது. ஆனால், பரந்த கிராமப் பிரதேசங்களுக்கும், நகரங்களுக்கும் குறிப்பிட்ட ஸ்தல ஆட்சியை ஏற்படுத்தும் பெரிய பிரச்சினை அவர்களை வாட்டியது.

ஆரம்பத்தில் கிராமப்புறங்களில் இருந்த ஸ்தல ஸ்தாபனங்களை ஆட்சி செய்வதில் குறிப்பிட்ட ஒரு கொள்கையை அரசாங்கம் பின்பற்றவில்லை; அப்பொழுதிருந்த நிறுவனங்களை உபயோகித்துக் கொண்டது; அல்லது, தேவைக்குத் தகுந்தவாறு மற்றவைகளைத் தரப்படி ஏற்படுத்தியது. பரிசல்களைக் (Ferries) காப்பாற்றுவதற்கும், பாதைகள், பாலங்கள், வடிகால்கள் ஆகியவைகளை ஏற்படுத்துவதற்கும், பழுது பார்ப்பதற்கும் தீர்வை விதிப்பதற்கும் 1816, 1819 ஆகிய ஆண்டுகளில் வங்காளத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள், அரசாங்கத்திற்கு அதிகாரமளித்தன. இப்படி எழுப்பப்பட்ட நிதியை நிருவகிப்பதற்காக மாஜிஸ்ட்ரேட்டைக் காரியதரிசியாகக் கொண்ட உள்ளூர்க் கமிட்டிகள் அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறின; இக்கமிட்டிகளை மாவட்டத்திற்கு ஒன்றாக அரசாங்கம் நியமித்தது.

வங்காளத்திற்கு வெளியில், தேவையான பணம், பிரதேச வரியின் மீது ஒரு சிறிய விகிதம் மூலமோ அல்லது நிலவரியின் மீது ஒரு சிறிய விகிதம் மூலமோ பெறப்பட்டது. 1869ஆம் ஆண்டில் பம்பாயில் குறிப்பிட்ட ஓர் அடிப்படையின் மீது, சட்டப்படி விதிக்கப்பட்டது. பிரதேச வரியைச் சட்டபூர்வமானதாகச் செய்து, பொதுப் பணிகளுக்கு வேண்டிய பணத்தைப் பெறுவதற்கு இச்சட்டம் வழிசெய்தது. மேலும், இந்நிதியை நிருவகிப்பதற்காக, மாவட்டம் முழுவதற்குமே யல்லாமல் அதனுடைய உட்பிரிவுகளுக்கும் கமிட்டிகள் அச்சட்டத்தால் ஏற்படுத்தப்பட்டன.

1870ஆம் ஆண்டு, இந்திய அரசாங்கத்தின் தீர்மானம் ஸ்தல ஸ்தாபன ஆட்சி வளர்ச்சியடைவதற்கு மிக்க ஊக்கமளித்தது. ஓர் ஆண்டுக்குள்ளேயே பம்பாய் அரசாங்கத்தைப் பின்பற்றி, பல மாகாணங்களிலும் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அப்பொழுதிருந்த பிரதேச வரிகள் சட்டபூர்வமாக விதிக்கப்பட்டு, அதிகரிக்கப்பட்டன. இந்நிதியை நிருவகிப்பதற்காக மாவட்டம் முழுவதற்கும் கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன; ஆனால், பம்பாயைப்போல மாவட்

டத்தின் சிறிய பிரதேசங்களுக்குக் கமிட்டிகள் ஏற்படுத்த வில்லை. இக்கமிட்டிகள் எல்லாம் அரசாங்கத்தால் ஏற் படுத்தப்பட்டு, அதனுல் மேற்பார்வை செய்யப்பட்டன. அதிகாரியைத் தலைவராகக் கொண்ட இக்கமிட்டியில், அதிகாரிகளும், அதிகாரிகள் அல்லாதவர்களும் அங்கத் தினர்களாய் இருந்தார்கள்.

புதிய சட்டத்தை உபயோகப்படுத்திப் பிரதேசவரி (Cess) முதல்முறையாக வங்காளத்தில் விதிக்கப்பட்டது; இது நிரந்தர உடன்படிக்கையை மீறுவதாகும் எனப் பெரிய கூச்சல் எழுப்பப்பட்டது. ஓரளவுக்கு இதை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, பாதைகளுக்கு வேண்டிய பணத்தைமட்டும் பெறுவதற்காக, அவ்வரி கட்டுப்படுத்தப்பட்டது. இதனுல், சாலை-வரி (Road Cess) என வங்காளத்தில் கூறப்பட்டதை மற்ற மாகாணங்களில் செய்யப்பட்டதைப் போன்று ஆரம்பக் கல்விக்கு ஒதுக்க முடியாது.

1871ஆம் ஆண்டில் உண்டாக்கப்பட்ட சட்டம், உண்மையில், அப்பொழுதிருந்த சட்டங்களைவிட மிகவும் சிறந்ததுதான். ஸ்தல ஸ்தாபனங்களின் போக்குவரத்து, சுகாதாரம், கல்வி போன்றவைகளை அபிவிருத்தி செய்வதற்கு வேண்டியவைகள் செய்யப்பட்டன. ஆனுல் அதில் பல பெரிய குறைபாடுகள் இருந்தன. இக்கமிட்டிகளில் அதிகாரிகளே மிகுதியாய் இருந்தார்கள்; மக்களின் விருப்பமும் உணர்ச்சி யும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்துதான் போக வேண்டி யிருந்தன. மேலும், இக்கமிட்டிகள் கவனிக்க வேண்டிய பிரதேசமோ, பெரியது; அதனுல், அப்பெரிய பிரதேசத்தின் விவகாரங்களைப் பற்றித் தனிப்பட்ட அங்கத்தினர்கள் சரியாகத் தெரிந்துகொள்ளாததால், அதைப்பற்றி அதிகம் கவனிக்கவில்லை. இத்தவறுகளை நீக்குவதற்கும் ஆங்கிலச் சட்டத்தின் அடிப்படையில் உண்மையான ஸ்தல-ஸ்தாபனச் சுய ஆட்சியை ஏற்படுத்துவதற்கும் ரிப்பன் பிரபு அக்கறை யுள்ள முயற்சிகளைச் செய்தார். அவருடைய நோக்கங்கள், அரசாங்கத்தின் தீர்மான உருவில், 1882ஆம் ஆண்டு மே மாதம் கொடுக்கப்பட்டன. அவருடைய புதிய திட்டத்தின் முக்கியக் கூறுகள் பின் வருவன :

(1) ஒரு கமிட்டி அல்லது உள்ளூர்ச்சபை அதிக பட்ச மாக ஒரு சப்-டிவிஷனையே கவனிக்க வேண்டுமே ஒழிய, ஒரு மாவட்டத்தைக் கவனிக்கக் கூடாது; அதன் கீழ், பிரைமரி போர்டுகள் இருக்கும். ஏனெனில், அதனுடைய அங்கத்தினர்

ஒவ்வொருவரும் அதைப்பற்றிச் சரிவரத் தெரிந்துகொள்ள லாம். அது அதன் பிரச்சினைகளைக் கவனிப்பதற்குச் சுலப மாய் இருக்கும்.

(2) உள்ளூர்ச் சபைகளில் (Local Boards) அதிகாரிகள் அல்லாத தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் அதிகம் இருக்க வேண்டும்; அதற்கு அதிகாரியல்லாதவரே தலைமை தாங்க வேண்டும்.

இங்கேதான் சுய ஆட்சியின் ஆரம்பம் இருக்கிறது. ஆனால், துரதிருஷ்டவசமாக, இத்தீர்மானத்திலுள்ள நோக்கங் களைப் பல மாகாணங்கள் நிறைவேற்றவில்லை. மத்திய மாகாணத்தில், அதிகாரியல்லாதவரே தலைவராய் இருந்தார்; தேர்தல் முறை ஒரு சிறிது ஏற்கப்பட்டது; மற்ற மாகாணங் களில் பழைய முறையே நீடித்தது. அங்கத்தினர் ஒரு சிலரே தேர்ந்தெடுக்கப்பட்டனர். எல்லா இடங்களிலும், மாவட்டங் களே, ஸ்தல ஸ்தாபனச் சபைகளின் பிரதேசங்களாய் விளங்கின. வங்காளத்தில் மட்டுந்தான் ரிப்பன் பிரபுவின் கொள்கைகளை முழுவதும் பின்பற்றுவதற்கு முயற்சி செய்யப் பட்டது. ஆனால், இக்குறிக்கோளை அடைவதற்காகக் கொண்டு வரப்பட்ட மசோதா, இந்தியக் காரியதரிசியாரின் மறுப் பாணையால் (Veto) நிறைவேற்ற முடியாமற் போய்விட்டது. இறுதியில் 1885ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டப்படி, மாவட்டச்சபைகள், மாவட்ட நீதிபதியின் தலைமையின் கீழ்ச் செயலாற்றின.

1882ஆம் ஆண்டு, மே மாதத் தீர்மானத்தின் கொள்கைக்கு மாறுபாடான விதத்தில் நடந்ததற்கு முக்கியக் காரணம், எல்லாவிடங்களிலும் திறமையாக நடத்தப்பட வேண்டும் என்பதுதான். இக்குறிக்கோள் ஓரளவுக்கு நிறைவேறியது. ஆனால், இக்கொள்கையின் உயர்வு வேறு வழியிலேதான் இருக்கிறது. இதை ஏற்படுத்தியவரான ரிப்பன் பிரபு, கீழ்க் காணும் வாக்கியத்தில் மிகத்தெளிவாகக் கூறியுள்ளார்:

'ஆட்சியை அபிவிருத்தி செய்யும் முக்கிய நோக்கத் துடனேதான் இந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, ஆதரிக்கப் பட்டன. அரசியற் கல்வி, மக்கட்கல்வி என்ற முறையிலே தான் இது மிக முக்கியமானதாய் இருக்கிறது.'

துரதிருஷ்டவசமாக, ரிப்பன் பிரபுவினுடைய தாராளமான கொள்கைகளை ஸ்தல ஸ்தாபன ஆட்சிகளாவது, அல்லது

இங்கிலாந்தின் அதிகாரிகளாவது சரிவரப் புரிந்துகொள்ள வில்லை. இந்திய மக்களின் மனத்தில் எழுந்த உயர்ந்த நம்பிக்கைகள், இவ்விதம் நிறைவேற இயலவில்லை. ஆனால், இப்பிரச்சினையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டு, இதை நிறை வேற்ற வேண்டுமென்று அரசாங்கத்தை ஒவ்வோர் ஆண்டும் வற்புறுத்தியது.

## நகரசபைகள்

ரிப்பன் பிரபு பதவி வரையில், நகரங்களின் ஸ்தல ஆட்சி, கிராமப் பிரதேசங்களைப் போலவே, ஒரே மாதிரியான கொள்கைகளோடு, அல்லது குறிப்பிட்ட கொள்கைகளோடு நடத்தப்படவில்லை. பெரிய நகரங்களில், மாவட்ட நீதிபதியின் தலைமையின்கீழ் நகரசபைக் குழுக்கள் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டன. உள்ளூர்த் தேவைகளைப் பூர்த்தி செய் வதற்காக, அவர்களது வரி விதிக்கும் அதிகாரங்கள், சில வற்றில் சட்டசபை ஏற்படுத்திய சட்டங்களால் உண்டானவை; மற்றவைகளில், அதன் அதிகாரம், உள்ளூர்ப் பழக்கவழக்கங் களால் ஏற்பட்டவை. பெரும்பாலானவற்றின் ஆட்சியின்மீது அரசாங்கத்திற்கு முழுக்கட்டுப்பாடு இருந்தது; சில இடங் களில், அரசாங்கத் தலையீட்டின் அளவு, சட்டத்தால் வரை யறுக்கப்பட்டது.

1882ஆம் ஆண்டு, மே மாதத்தில் செய்யப்பட்ட ரிப்பன் பிரபுவின் தீர்மானத்தின் நோக்கம், நாட்டுப்புறச் சபைகளில் ஏற்படுத்தியபடி, நகரசபையிலும், சுய ஆட்சிக் கொள்கை களைப் புகுத்துவதுதான். இறுதி மேற்பார்வை, கட்டுப்பாடு, ஒழுங்குபடுத்தி மேற்பார்வை செய்தல் ஆகியவற்றை அரசாங்கத்திற்கு விட்டுவிடவேண்டும். நகரசபைகளின் நிரு வாகம், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளிடம் விடப்பட வேண்டும். இதுதான் அவரது குறிக்கோள். அதிகாரியல்லாத தலைவரின் கீழ்த் தங்கள் பிரதிநிதிகள் மூலம், தங்களைத் தாங்களே ஆட்சி செய்வதற்கு மக்களுக்குப் பயிற்சி அளிக்கப்படவேண்டும். காவல் துறைச் செலவுகளை (Police Charges) அரசாங்கம் ஏற்கவேண்டும். கல்வி, சுகா தாரம், விளக்கு, சாலைகள், குடிதண்ணீர் போன்றவைகளுக் கான ஏற்பாடுகளையும், மற்றும் அவற்றைப் போன்ற பொது நன்மைக்கான வேலைகளையும், நகரசபைகள் கவனிக்க வேண்டும் என மேலும் அவர் ஆலோசனை கூறினார்.

ரிப்பன் பிரபுவின் நோக்கங்கள், பேரளவில் நிறைவேறின. பல மாகாணங்களுக்கான சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன ; நகரசபை ஆணையர்களுள் பெரும்பாலாரை அரைப்பங்கி லிருந்து முக்காற்பங்கு வரையில் கட்டாயத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்க வேண்டும் என அச்சட்டம் கூறியது. இது இடங்கொடுக்கின்ற ஒரு விதியாய் இருந்ததால், பல இடங் களில் இவ்வதிகாரம் கொடுக்கப்படவில்லை. இவ்வதிகாரம் கொடுக்கப்பட்ட இடங்களிலும், மாவட்ட அதிகாரி, தலைவ ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சில ஆண்டுகளுக்குப் பிறகு, அதிகாரியில்லாத தலைவர் என்பது விலக்காய் இருந்ததற்குப் பதிலாக, ஒரு சட்டமாகிவிட்டது.

இவ்விதம் புதிய இந்தியாவின் ஸ்தலச் சுய ஆட்சிகளை உண்மையான முறையில் ரிப்பன் பிரபு ஆரம்பித்து வைத்தார். அவருடைய நோக்கங்கள் யாவற்றையும் செயலிற்காட்ட இயலவில்லை ; ஆனால், அவர் விதைத்த விதைகளினால், உண்மையான ஸ்தல சுய ஆட்சி இறுதியில் மலர்ந்தது.

## மாகாண நகரங்கள்

கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய மாகாண நகரங் களில் சுய ஆட்சி வளர்ந்ததைப் பற்றித் தனியே பார்க்க வேண்டும். இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் அதிகாரத்தின் ஆரம்பப் பீடமாக இவை இருந்ததால், அவர்களின் ஸ்தல ஆட்சியின் வரலாறு, மிகப் பழமையானது ; பிரிட்டிஷ் இந்தி யாவிலிருந்த மற்ற நகரங்களின் தன்மையிலிருந்து மாறு பட்ட இவற்றின் வளர்ச்சியை அது காட்டுகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில், இந்த நகரங் களில், அமைதி காணும் நீதிபதிகளை (Justices of Peace) நியமிக்கும் அதிகாரத்தைப் பாராளுமன்றத்தின் ஒரு சட்டம், கவர்னர்-ஜெனரலுக்கு அளித்தது. சுகாதாரம், காவல் போன்றவைகளை அந்நீதிபதிகள் கவனித்தார்கள். செலவுக்கு வேண்டிய பணத்தைப் பெறுவதற்காக வீடுகளின் உரிமை யாளர்கள்மீதும், அவற்றில் வசிப்பவர்கள்மீதும், வரி விதிப்ப தற்கான அதிகாரங்கள் அவர்களுக்கு அளிக்கப்பட்டன.

இவ்வேற்பாடு தேவைக்குக் குறைவானதாகவும், திருப்தி யில்லாததாகவும் இருந்தது; நகரங்களின் பாதுகாப்பு அபிவிருத்தி, வரிகளைச் சிறந்த முறையில் விதித்தல்,

வசூலித்தல் போன்றவைகளுக்காக, 1856ஆம் ஆண்டில் இரண்டு சட்டங்கள் நிறைவேறின. ஒவ்வொரு நகரத்திற்கும் ஆணையாளர் மூவர் நியமிக்கப்பட்டனர்; கல்கத்தாவின் சட்டத்தில், வாயுமூலம் விளக்குகளை ஏற்படுத்தவும், சாக்கடைகளைக் கட்டவும் பிரத்தியேகமான ஏற்பாடுகள் செய்யப் பட்டன.

இதிலிருந்து இம்மூன்று நகரங்களின் வளர்ச்சிகளும் வெவ்வேறாய் இருந்தன. அவற்றைத் தனித்தனியாகக் கவனிக்கலாம்.

## கல்கத்தா

புதிய திட்டம் சரியாக வேலை செய்யாததால், அமைதி காணும் நீதிபதிகளுக்கு மறுபடியும் பொதுவான மேற் பார்வை வேலைகள் அளிக்கப்பட்டன. ஆனால், நிருவாக அதிகாரம், அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட தலைவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அத்தலைவர் போலீஸின் ஆணையாள ராகவும் செய்யப்பட்டார். இவ்வித உறுதியான நிருவாக அதிகாரியின் கீழ்ப் பல பெரிய அபிவிருத்திகள் ஏற்பட்டன; சர் ஸ்டிவார்ட்டு ஹாக் (Sir Stewart Hogg) என்பவர், சிறந்த சாக்கடைத் திட்டங்களுக்கும், தண்ணீர் வசதிக்கும் வேண்டிய அடிப்படைகளை அமைத்தார்.

இந்த நிருவாகத் திட்டம் சரிவர இயங்கவில்லை. நிருவாக அதிகாரிக்கும் பெரும்பான்மையான எண்ணிக்கையில் இருந்த அமைதி காணும் நீதிபதிகளுக்கும் இடையே இருந்த உறவு சரியாக விளக்கப்படவில்லை; அதனால், அவற்றிற்குள் அடிக்கடி சச்சரவுகள் உண்டாயின. 1876ஆம் ஆண்டு சட்டப்படி, கல்கத்தாவின் மாநகராட்சி மாற்றியமைக்கப்பட்டது. அதில் எழுபத்திரண்டு அங்கத்தினர்கள் இருந்தார்கள்; அவர்களுள் மூன்றில் இரு பகுதியினர், வரி கொடுப்பவர்களால் தேர்ந் தெடுக்கப்பட்டனர். 1882ஆம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்களின் எண்ணிக்கை ஐம்பதாக, சுற்றுப்புறப் பிரதேசங்கள் சேர்க்கப்பட்டு நகர சபையின் அதிகாரம் விரிவுபடுத்தப் பட்டது.

கல்கத்தா நகரின் ஆட்சியில், படிப்படியாய் வளர்ந்து வந்த சுயஆட்சிக் கொள்கைகள், திடீரென்று, கர்சான் பிரபுவால் தடுக்கப்பட்டன. 1899ஆம் ஆண்டில் நிறைவேற்றப்

பட்ட சட்டப்படி, வரி கொடுப்பவர்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்களின் எண்ணிக்கை, மொத்த எண்ணிக்கையில் பாதியாகக் குறைக்கப்பட்டது; அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட தலைவருக்குப் பல சுதந்தர அதிகாரங்கள் வழங்கப்பட்டன. வரியின் அளவையும், பொதுக் கொள்கையையுமே மாநகராட்சி ஏற்படுத்தலாம். நிருவாகத்தின் விவரங்கள் சம்பந்தப்பட்ட வரையில் பன்னிரண்டு அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு பொதுக்குழுவே, தலைவரைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒரே சாதனம்; அவர்களுள் நால்வர்; தேர்ந்தெடுக்கப்பட்ட ஆணையாளர்களால் நியமிக்கப்படுவர்; நால்வர், மற்ற ஆணையாளர்களால் நியமிக்கப்படுவர்; மற்றுமுள்ள நால்வரை அரசாங்கம் நியமிக்கும்.

அதிகமான பேச்சும், குறைவான செயலும் மாநகராட்சியில் காணப்பட்டதாலும், மாநகராட்சிக்கு அல்லது அதனுடைய பிரத்தியேகமான குழுவுக்குக் கட்டுப்படாத உறுதியான, சுதந்தரமான நிருவாகியாலேதான் சிறந்த நிருவாகத்தை ஏற்படுத்த முடியும் என்கிற காரணங்களைக் கூறி, மக்களுடைய அதிகாரம் குறைக்கப்பட்டது.

இச்சட்டம் பொதுமக்களின் வன்மையான கண்டனத்திற்கு உள்ளாக்கியது என்பதைச் சொல்லத் தேவையில்லை. வங்காள மேல்சபையில், இம்மசோதா விவாதிக்கப்படும் பொழுது, ஸ்ரீ சுரேந்திரநாத் பானர்ஜி என்பவர், மிகச் சிறந்த முறையில் பேசி, இதைக் கண்டித்தார். அவ்விவாதத்தின் இறுதி நாளான செப்டெம்பர் மாதம், 27ஆம் தேதியன்று, அவர் இம்மசோதாவை இறுதி முறையாக எதிர்த்தபோது, 'கல்கத்தா நகரின் ஸ்தலச் சுய ஆட்சியின் அழிவைக் குறிக்கும் நாளாக, எதிர்கால வங்காளச் சந்ததிகள் இந்நாளை நினைப்பார்கள்,' எனக் கூறினார்.

இம்மசோதாவிற்குத் தங்கள் எதிர்ப்பைக் காட்டும் வகையில், சுரேந்திரநாத் உள்ளிட்ட மாநகராட்சியைச் சேர்ந்த இருபத்தெட்டு அங்கத்தினர்கள், தங்களுடைய ராஜிநாமாவைச் சமர்ப்பித்தார்கள். விதியின் வியப்பான ஒரு செயல் மூலம், இருபத்து நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இப்பெரிய தவற்றை நீக்கும் பொறுப்பு, அமைச்சராய் இருந்த சுரேந்திரநாத் என்பவரிடமே விடப்பட்டது.

## பம்பாய்

பம்பாயிலும், கல்கத்தாவைப் போலவே பழைய முறை, 1865ஆம் ஆண்டில் மறுபடியும் கொண்டுவரப்பட்டது. அந் நகரை ஆட்சி செய்வதற்கு, அமைதிகாணும் நீதிபதிகள் ஐந்நூறு பேர் அடங்கிய ஒரு கூட்டுக்குழு ஏற்படுத்தப் பட்டது; அதில் ஆணையாளர் எனப்படும் தலைவர் மிக உயர்ந்த சம்பளத்தைப் பெறும் அதிகாரியாய் இருந்தார்; தவிர அதற்குக் கீழ்ப்படாத கணக்குத்துறை மேற்பார்வையாளர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். இவர் பயனுள்ள மேற் பார்வையைச் செய்ய இயலவில்லை. அதே சமயத்தில், மாநகராட்சி மிகப் பெரியதாய் இருந்ததால், சரிவரக் கட்டுப் படுத்தவோ, அல்லது ஆலோசனை கூறவோ இயலவில்லை.

இந்த ஆட்சிமுறை 1872ஆம் ஆண்டில் மாறியது. மாநகராட்சியின் மொத்த எண்ணிக்கை அறுபத்துநான்கு அங்கத்தினர்களாய்க் குறைக்கப்பட்டது; அவர்களுள் நான்கில் ஒரு பகுதியினர், அந்நகரத்தில் வசிக்கும் நீதிபதி களாலும், பாதி அங்கத்தினர்கள் வரி கொடுப்பவர்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்டு, மீதியிருந்த நான்கில் ஒரு பகுதியினர் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டனர். முன்பு இருந்தபடியே, நிருவாக அதிகாரம் ஆணையாளரிடம் ஒப்படைக்கப்பட்டது; ஆனால், கணக்கு மேற்பார்வையாளர் பதவி நீக்கப்பட்டது. அதற்குப் பதிலாக, மாநகராட்சியின் நிரந்தரக்குழு ஒன்று, கணக்குகளை வாரத்திற்கொருமுறை பரிசீலனை செய்யும் மாதாந்தரப் பரிசீலனையைச் சம்பளத்தைப் பெறும் கணக்குத் தணிக்கையாளர் (Auditor) செய்வார்.

இவ்வாட்சிமுறை, ஏறக்குறைய நன்றாகவே நடந்தது; இம்முறை சிறு மாறுதல்களுடன், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரை நீடித்தது.

## சென்னை

ஆணையாளர் மூவரைக்கொண்ட ஆட்சி, 1867ஆம் ஆண்டு வரையில் சென்னையில் நீடித்தது. அவ்வாண்டில் நிறை வேற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி, இந்நகரம் எட்டுப்பிரிவு களாகப் (Wards) பிரிக்கப்பட்டது. ஒவ்வொன்றுக்கும் நான்கு அங்கத்தினர்களை அரசாங்கம் நியமித்தது.

1878ஆம் ஆண்டில் மாநகராட்சியின் பாதி அங்கத்தினர்கள், வரி கொடுப்பவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்; ஆனால், தலைவரும், இரண்டு உதவித்தலைவர்களும் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட சம்பளத்தைப் பெறும் அதிகாரிகள். 1884ஆம் ஆண்டில், தேர்தல் முறை விரிவுபடுத்தப்பட்டு, மாநகராட்சியில் இருந்த முப்பத்திரண்டு அங்கத்தினர்களுள், இருபத்து நான்கு அங்கத்தினர்கள், வரி செலுத்துபவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

கர்சான் பிரபுவின் காலத்தில், பிற்போக்கான எண்ணம் உதித்து சென்னை மாநகராட்சி, 1899ஆம் ஆண்டில் உண்டான கல்கத்தா நகரச்சட்ட அடிப்படையில் மாற்றி அமைக்கப்பட்டது.

இவ்விதம் பல சோதனைகளுக்குப் பிறகு, மூன்று மாகாண நகரங்களுக்கும், ஒரே விதமான ஆட்சி ஏற்பட்டது; ஒரே மாதிரியான முக்கிய அமைப்புகளை அவை கொண்டிருந்தன. அவையாவன, ஒரே அளவுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு மாநகராட்சி, உறுதியான, சுதந்தரமான நிருவாக அதிகாரம் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டவருக்குக் கொடுக்கப்படுதல், கணக்கைப் பரிசீலனை செய்வதற்கு வேண்டிய பாதுகாப்பு ஏற்பாடுகள், சுகாதாரம் தண்ணீர் வசதி போன்ற அவசியமான கடமைகளைச் செய்வதற்கான சட்டம் முதலியன. மோசமான முறையில் கடமையில் தவறான நடத்தை ஏற்பட்டால், அதில் தலையிடுவதற்கு அரசாங்கத்திற்கு உரிமையுண்டு.

## 3. நிதி நிருவாகம்

1858ஆம் ஆண்டு சட்டப்படி, இந்திய நிதி நிருவாகத்தில் முக்கிய மாறுதல்கள் உண்டாக்கப்பட்டன. நிதி நிருவாகத்தின் இறுதி மேற்பார்வை கவுன்சிலுடன் கூடிய இந்தியக் காரியதரிசியாரிடம் இருந்தது; இந்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட விருப்பப்படி நடக்கும் சில அதிகாரங்களைத் தவிர, மற்றபடி, இந்திய வருமானத்திலிருந்து இந்தியக் கவுன்சில் அங்கீகாரம் பெறாமல் எச்செலவையும் செய்ய இயலாது. இந்த அதிகாரத்திற்கு உட்பட்டு, இந்திய நிதி நிருவாகத்தின்மீது, இந்திய அரசாங்கம், தலைமை அதிகாரத்தைச் செலுத்தியது; கவுன்சிலுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் அங்கீகாரமில்லாமல், மாகாண அரசாங்கங்

களுக்குச் செலவு செய்யும் அதிகாரம் இல்லை. வரவு-செலவு திட்ட முறை (Budget), 1860ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது; பலவிதத் தலைப்புகளின்கீழ் உள்ள வருமான ஒதுக்கீட்டை (Appropriation of revenues), சட்டத்தில் உள்ளபடி, உள்ளூர் அதிகாரிகள் பின்பற்ற வேண்டும்.

மத்தியில் குவிக்கப்பட்ட அதிகாரமுறை சரிவர இயங்க வில்லை. செலவு செய்வதில் மாகாண அரசாங்கங்கள் விருப்பம் போல நடக்க இயலாததால், வருமானத்தைப் பெருக்கவோ, அன்றிச் செலவைக் குறைக்கவோ, அவை ஊக்கத்துடன் இல்லை. கிடைக்கும் வருமானத்தை, ஒரு பரந்த நாட்டில், ஒரு சமமாகப் பிரிப்பதற்கு வேண்டிய அனுபவம், இந்திய அரசுக்கு இல்லை. இங்கிலைமையில் மத்திய மாநில அரசுகளுக்கிடையே, அடிக்கடி தகராறு ஏற்படுவதைத் தடுக்க முடியவில்லை. இத்திட்டத்தின்கீழ்ப் 'பொதுப் பணத்தைப் பிரிக்கும் ஏற்பாடு, ஒருவருக்கொருவர் முதலில் பெறுவதற்காக ஏற்படும் சச்சரவு செய்யும் இழிந்த நிலைக்கு வந்துவிட்டது. மூர்க்கத்தனமாக நடப்பவர்கள், காரண மின்றியே அதிகப் பயனைப் பெற்றார்கள்,' என ஸ்ட்ராச்சி (Strachey) என்பவர் உண்மையாகக் கூறியுள்ளார்.

1871–1877 ஆகிய ஆண்டுகளுக்கிடையே ஆட்சியைப் பன்முகப்படுத்துவதற்கு (Decentralisation) இப்பெரிய குறை பாடுகள் ஓரளவுக்குக் காரணமாய் இருந்தன. இப்புதிய திட்டப்படி, அதிகாரக்குவிப்பின் கீழிருந்த தபால் நிலையம், ரெயில் போன்றவைகள் முழுமையாக மத்திய அரசாங்கத் தால் எடுத்துக்கொள்ளப்பட்டன. இந்த இலக்காக்களிலிருந்து பெறப்படும் வருமானத்தையும், உப்பு, அபினி, சுங்கம் போன்றவைகளால் பெறப்படும் வருமானத்தையும் மத்திய அரசாங்கம் தன்னிடமே வைத்துக்கொண்டது. நிலவரி, உள்நாட்டுப்பொருள் வரி (Excise), ஸ்டாம்புகள் (Stamps), கார்டுகள், பதிவு செய்தல் போன்ற மற்ற வழிகளிலிருந்து பெறப்படும் வருமானம் மத்திய, மாநில அரசுகளுக்கிடையே பிரித்துக் கொடுக்கப்படும்; குறிப்பிட்ட ஒரு மாகாணத்தின் தேவைகளுக்குத் தக்கபடி, அவற்றின் பங்கு நிருணயிக்கப் படும். ஒவ்வொருவருடைய பங்கையும் பற்றிய இவ்வேற் பாடு, அடிக்கடி சரிபார்க்கப்பட்டுத் திருத்தப்படும். இத் திட்டத்தின்படி, மாகாண அரசுகள் தங்கள் வருமானத் திற்குத் தக்கவாறு செலவு செய்ய வேண்டும். இவ்விதம் தாங்கள் வசூலிக்கும் வருமானத்தைச் செலவு செய்வதற்கு

அவர்களுக்கு அதிக சுதந்தரமும், கட்டுப்பாடற்ற தன்மையும் இருந்ததோடு வருமானத்தைப் பெருக்கவும் செலவுகளைக் குறைக்கவும் நேரிடையான விருப்பமும் இருந்தது.

மேலே கூறப்பட்ட பல்வேறு வருமானத் தலைப்புகளில் பிரிட்டிஷ் இந்தியாவில் விதிக்கப்பட்ட நில வரி, உப்பு வரி, அபினிவரி ஆகிய இவைகளில் அரசாங்கம் பெற்றிருந்த விற்பனைச் சர்வாதீனத்திலிருந்து (Monopoly) வரும் வருமானம் ஆகியவைகளை முன்பே கூறியிருந்தோம். ஸ்டாம்பு-வருமானம், நீதிமன்ற நடவடிக்கைகளின் மீதும், வாணிக நடைமுறைகளின் மீதும் விதிக்கப்பட்ட நேரிடையான வரி. நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்பவர்களும், வாணிக நடைமுறைகளில் ஈடுபடுபவர்களும், அவர்களுடைய பத்திரங்களைச் சட்டப்படி ஒப்புக்கொள்வதற்காக, அவற்றின்மேல் குறிப்பிட்ட மதிப்புள்ள ஸ்டாம்புகளை ஒட்ட வேண்டும்.

சுங்கத்தால் பெறப்படும் வருமானம், இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களின்மீது அல்லது இறக்குமதி செய்யப்படும் பொருள்களின்மீது **பெறுமான விகிதவரி** (ad valarem duty) மூலம் கிடைப்பதாகும். இத்தீர்வையின் அளவு காலத்திற்குக் காலம் மாறுபடும். இவற்றில் முக்கியமானது பருத்தித்துணிகளின்மீது விதிக்கப்பட்ட இறக்குமதி வரிதான்; மொத்த இறக்குமதி மூலம் பெறப்படுகிற வருமானத்தில் ஏறக்குறைய மூன்றில் இரண்டு பங்கு இதிலிருந்தே கிடைக்கிறது. ஆனல், நூற்பு ஆலைகள் இந்தியாவில் ஏற்பட்டவுடன் இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்பட்ட பருத்தித் துணிகளை இவ்வரி மிகவும் பாதித்தது. இங்கிலாந்திலிருந்த உற்பத்தியாளர்கள், தாய் நாட்டு அரசாங்கத்தை நெருக்கினர்கள். அப்பொழுது இங்கிலாந்தில் பின்பற்றப்பட்டு வந்த தடையில்லா வாணிகத்தை (Free Trade) இந்தியாவும் பின்பற்ற வேண்டுமென்று இந்திய அரசாங்கத்திற்குக் கூறப்பட்டது. அதனல், எல்லா இறக்குமதித் தீர்வைகளும், 1882ஆம் ஆண்டில் நீக்கப்பட்டன; ஆனல், ஒயின் (Wine) உப்புப் போன்றவைகளின்மீது இறக்குமதி வரி நீடிக்கப்பட்டது; அவற்றின் மீது உள் நாட்டு வரி விதிக்கப்பட்டது.

சுங்கவரியில் ஏற்பட்ட நஷ்டத்தை வேறு வழிகளிலிருந்து பணம் பெற்று ஈடு செய்வது என்பது மிகக்கடினமான காரியமாய் இருந்தது. இந்திய நாணயத்திற்குப் பொது அளவுகோலாய் இருந்த வெள்ளியின் விலையில் பெரிய சரிவு,

பர்மாவில் ஏற்பட்ட போரினாலும், வடமேற்கில் ஏற்பட்ட ரஷ்யர்களின் பயமுறுத்தலினாலும் உண்டான இராணுவச் செலவு, பஞ்ச இன்சூரன்ஸ் நிதியின் (Famine Insurance Fund) விதிகள் ஆகியவைகளினால், இந்திய நிதி நிலைமை மிகப் பாதிக்கப்பட்டது. வரவு செலவுத் திட்டத்தைச் சமப்படுத்துவதற்காக, 5 சதம் பெறுமான விகிதமாகப் பொது இறக்குமதித் தீர்வையை மறுபடியும் ஏற்படுத்துவதற்கு இந்திய அரசாங்கம் முடிவு செய்ய வேண்டியிருந்தது. பருத்தித் துணிகளை உற்பத்தி செய்யும் ஆங்கில உற்பத்தியாளர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்காக, இந்திய ஆலைகளில் தயாராகும் பருத்தித்துணிகளின்மீதும், அதே விகிதமான உள்நாட்டு வரி விதிக்கப்பட்டது.

பருத்தித்துணிகளின்மீது விதிக்கப்பட்ட இறக்குமதித் தீர்வையை நீக்கியதும், மறுபடியும் இறக்குமதித்தீர்வை ஏற்படுத்தியபோது இந்தியாவில் தயாராகும் பருத்தித் துணிகளின்மீது விதிக்கப்பட்ட உள்நாட்டு வரியும் ஆகியவைகள் இந்திய நலன்களுக்கு மிக்க பாதகம் செய்யும் வகையில் இருந்ததால், இந்த நடவடிக்கைகளை வைசிராயின் கவுன்சிலும் எதிர்க்க நேர்ந்தது. இவ்விரண்டு உதாரணங்களிலும் பிரிட்டிஷ் மந்திரிசபை, தன்னுடைய கொள்கைகளை விருப்பமில்லாத இந்திய அரசாங்கத்தின்மீது திணித்தது. பின் கூறப்பட்டவற்றில், இந்தியக் காரியதரிசியாராய் இருந்த சர் ஹென்றி பௌலர் (Sir Henry Fowler) என்பவர், பொதுக் கொள்கையைப் பின் வருமாறு விளக்கினர்:

'(பிரிட்டிஷ்) மந்திரி சபையின் கட்டளைப்படி, ஒரு கொள்கை முறையை ஒரு தரம் ஏற்றுக்கொண்டபோது அக்கொள்கை எப்படி இருக்கவேண்டும் என்பதைக் கருதாமல், முடிவு செய்யப்பட்ட கொள்கையை எவ்விதம் சிறப்பாக நடைமுறைக்குக் கொண்டு வருவது என்பதை நினைப்பதுதான் இந்திய அரசாங்கத்தைச் சேர்ந்த ஒவ்வோர் அங்கத்தினருக்கும் தெளிவான கடமையாகும்.'

மேலே குறிப்பிட்ட வருமானங்களைத் தவிர, வருமான வரியும் (Income-tax) வருமானத்திற்கு உபயோகமுள்ள வழியாய் இருந்தது. பெருங்கலகத்தால் (Revolt) ஏற்பட்ட பணநெருக்கடியைத் தீர்ப்பதற்காக, அது ஒரு தாற்காலிக நடவடிக்கையாய் 1860ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. ரூ. 500க்கும் அல்லது அதற்கு மேலும் பெறும் எல்லா

வருமானத்திற்கும் 4 சதவிகிதமும், ரூ.200க்கும் ரூ.500க்கும் இடையில் பெறும் வருமானத்திற்கு 2 சதவிகிதமும் என்ற அளவில், ஒரு பொதுவான வரியாய் அது இருந்தது. 1865ஆம் ஆண்டில் அது நீக்கப்பட்டது. ஆனால், இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, வாணிகத்தின் மீதும் தொழிலின் மீதும் விதிக்கப்படும் லைசன்ஸ் வரி என்ற உருவில் அது மறுபடியும் புகுத்தப் பட்டது. 1869ஆம் ஆண்டில் ஒரு பொது வருமான வரி ஏற்படுத்தப்பட்டது; ஆனால், அது மறுபடியும் கைவிடப் பட்டது. இறுதியில், நிதி நெருக்கடி காரணமாக வேளாண்மையைத் தவிர, மற்ற எல்லா வருமானங்களின் மீதும் வரி விதிப்பதற்கு அரசாங்கம் 1886-ல் முடிவு செய்ய வேண்டி நேர்ந்தது. இவ்வரி, அவ்வருடத்திலிருந்து தொடர்ந்து விதிக்கப்பட்டது; விகிதந்தான் காலத்திற்குக் காலம் மாறியது.

வெறுப்பைத்தரும் நாணயப் பிரச்சினையைப் பற்றி ஒரு சிறிது கூறலாம். தென்னிந்தியாவில் தங்கம் முக்கிய நாணயமாய் வழங்கியபோது, வடஇந்தியாவில் மொகலாயர்களின் ஆரம்பகாலத்தில், தங்க மொகராக்களும் (Gold mohurs), வெள்ளி ரூபாயும் உபயோகத்தில் இருந்தன. மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் பல சுதந்தர நாடுகள் எழுந்ததால், பலவிதமான நாணயங்கள் வழங்கின; ஏனெனில், நாணயத்தை வெளியிடுதல் இறைமையின் அடையாளச் சின்னங்களுள் ஒன்றெனக் கருதப்பட்டது. 994 மாறுபட்ட தங்க, வெள்ளி நாணயங்கள் அப்பொழுது உபயோகிக்கப் பட்டன என மதிப்பிடப்படுகிறது.

வாணிகத்திற்கு அதனால் ஏற்படும் தீமைகள் நன்கு தெரியலாயின; குறிப்பிட்ட ஒரு சட்டப்படியான அளவு, எடை, நேர்த்தி ஆகியவைகளைக் கொண்ட தங்க, வெள்ளி நாணயங்களை வெளியிட்டு இத்துன்பங்களைப் போக்குவதற்கு கிழக்கிந்தியக் கம்பெனி முயன்றது. ஆனால், இரண்டு உலோகத்தின் விலையில் ஏற்ற இறக்கங்கள் காரணமாக, இவ்விரண்டு விதமான நாணயங்களின் சட்டப்படியான அளவைப் பாதுகாப்பது மிகக்கடினமான காரியமாகவே தென்பட்டது. தங்கமொகராக்களின் விலை குறைந்ததால், அது படிப்படியாக மறைந்தது. 1818ஆம் ஆண்டில், 180 குன்றிமணியளவு எடையுள்ள (grains) ($\frac{11}{12}$ நயம்) வெள்ளி ரூபாய், சென்னையிலிருந்த தங்கநாணயத்திற்குப் (gold pagoda) பதிலாக வெளியிடப்பட்டது; 1835 ஆம் ஆண்டில்,

இப்பொழுதுள்ள ரூபாயின் உருவம், அளவு ஆகியவைகளுடன், ஆனால், 1818ஆம் ஆண்டில் இருந்ததைப் போன்ற ரூபாயின் எடையும் நேர்த்தியும் உள்ள ரூபாய்தான் இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் பிரதேசங்கள் அனைத்திலும் தனிப்பட்ட சட்டப்படியான நாணயமாகச் செய்யப்பட்டது. அரசாங்க நாணயச்சாலைகள், பொது மக்களுக்காக இந்த ரூபாயைக் கட்டுப்பாடில்லாமல் அச்சடித்துக் கொடுத்தது. இந்த ரூபாயில் இருந்த வெள்ளியின் விலை, ரூபாய்க்குச் சமமானது.

1841ஆம் ஆண்டில், தங்க நாணயங்களை மறுபடியும் புகுத்துவதற்கு முயற்சி செய்யப்பட்டது; பொது மக்கள் செலுத்த வேண்டிய பணத்திற்கு ஒரு மொகராவுக்குப் பதினைந்து ரூபாய்கள் வீதம் தங்க **மொகராக்கள்** ஏற்றுக் கொள்ளப்பட்டன. 1848–1849ஆம் ஆண்டில் ஆஸ்திரேலியா, கலிபோர்னியா என்னும் இடங்களில் இவ்வுலோகம் கண்டு பிடிக்கப்பட்டதால், தங்கத்தின் விலை குறைந்தது; அதனால், 1841ஆம் ஆண்டின் சோதனையை, டல்ஹௌசி பிரபு நிச்சயமான முறையில் கைவிட்டார். இவ்விதம் பரிவர்த்தனைச் சாதனமாக (medium of exchange) இருந்த தங்கம் கைவிடப் பட்டது. வெள்ளிக்குப் பதிலாகத் தங்கநாணயங்களை இந்தியாவில் வெளியிடுவதற்குப் பல திட்டங்கள் கூறப்பட்டன; ஆனால், அவைகளை நடைமுறையில் பின்பற்றவில்லை.

1874ஆம் ஆண்டிலிருந்து இப்பிரச்சினை மிகக் கடுமையானதாகி விட்டது. பெரும்பான்மையான ஐரோப்பிய நாடுகள் பொன் (நாணயத்) திட்டத்தை ஏற்றுக்கொண்டதாலும், வெள்ளியின் உற்பத்தி அதிகரித்ததாலும், தங்கத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது வெள்ளியின் விலை குறைந்தது. 1871ஆம் ஆண்டில் ஒரு ரூபாய், ஆங்கில நாணயமான இரண்டு ஷில்லிங்குகளுக்குச் சமமாய் இருந்தபோது, 1892ஆம் ஆண்டில் அதன் மதிப்பு 1 ஷில்லிங் 2 பென்சாய்க் குறைந்தது. தங்க நாணயத்தைக் கொண்டிருந்த அயல் நாடுகளுடன், இந்தியா ஏராளமான வாணிகத்தைச் செய்ததால், நிலைமை மிக மோசமாய் இருந்தது. இந்தியாவில் தங்க நாணயத்தை ஏற்படுத்த வேண்டுமென்று இந்திய அரசாங்கம் 1878ஆம் ஆண்டில் இந்தியக் காரியதரிசியாருக்குச் சிபாரிசு செய்தது; ஆனால், பின்னவர் அத்திட்டத்தைத் தள்ளுபடி செய்தார். ஹெர்செல் குழுவின் (Herschell committee) சிபாரிசின்படி, கீழ்க்காணும் முக்கிய மாறுதல்களை இந்திய அரசாங்கம் தன் நாணயத்தில் 1893ஆம் ஆண்டு ஏற்படுத்தியது.

(1) இந்திய நாணயச் சாலைகள் பொதுமக்களுக்காகக் கட்டுப்பாடில்லாமல், தங்க, வெள்ளி நாணயங்களை அடித்துக் கொடாது.

(2) ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் வீதம் நாணயச் சாலைகள், ரூபாய்களைக் கொடுத்துத் தங்கத்தை வாங்கிக் கொண்டன.

(3) பொதுமக்கள் செலுத்தவேண்டிய பணத்திற்குப் பதிலாகச் சவரன்களை (15 ரூபாய்க்கு ஒரு சவரன் வீதம்) செலுத்தலாம்.

(4) தங்க நாணயங்கள், அல்லது கட்டித் தங்கத்தை அதே விலைக்குக்கொடுத்து, கரன்ஸி நோட்டுகளைப் பெறலாம்.

தங்கத்தைச் சட்டப்படி நாணயமாகச் செய்யாவிட்டாலும் அது விலையின் பிரமாணம் (standard) ஆகிவிட்டது. ரூபாயின் நாணய மாற்று மதிப்பு அதில் இருக்கும் வெள்ளியின் விலைக்குச் சமமாய் இல்லை. இதுதான் மேற்கூறப்பட்ட நடவடிக்கைகளின் பயனாக ஏற்பட்டது.

இறுதியாகப் பொன் நாணயத்தை ஏற்படுத்துவதற்கு இப்புதிய நடவடிக்கையே முதல் அடி எனக் கருதப்பட்டது. சர் ஹென்றி பௌலர் (Sir Henry Fowler) தலைமையின் கீழ் மற்றொரு கமிட்டியும் நியமிக்கப்பட்டது. 1899ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பட்ட அதன் சிபாரிசுகளின்படி, ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் வீதம் சவரன்களும் ரூபாய்களும் வரையரையற்ற சட்டப்படி நாணயங்களாகச் செய்யப்பட்டன; தங்கத்தை மட்டும் நாணயமாக அச்சடிப்பதற்கே நாணயச் சாலைகள் இணங்கின. அரசாங்கம் திரும்பவும் ரூபாய்களை அடித்துத்தர ஆரம்பித்து அப்படிச் செய்வதால் உண்டான இலாபத்தைக் கொண்டு பொன் (நாணயத்) திட்டத்தின் காப்புநிதி (Gold Standard Reserve) என்பதை 1900ஆம் ஆண்டில் ஏற்படுத்தியது.

ஆனால், இதுவும், இந்திய நாணயத்தில் பிரச்சினைகளைத் தீர்க்க இயலவில்லை. இருபதாம் நூற்றாண்டில் வேறு மாறுதல்களும் செய்யப்பட்டன; இன்றைக்கும், அது இந்தியப் பொருளாதாரத்தில், விவாதிக்கக் கூடிய பிரச்சினையாகவே இருக்கிறது.

## 4. அரசாங்கத்தின் உயர்நிலை

இந்திய அரசாங்கம் கம்பெனியிடமிருந்து இங்கிலாந்து அரசருக்கு மாற்றப்பட்டதால், நாம் முன்பு பார்த்தபடி, இந்தியாவின் அரசாங்கத்திற்கும், இங்கிலாந்து அரசுக்கும் இடையில் ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. சில காலத்திற்குப் பின்னர், கொள்கையிலும் நடை முறையிலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ்ப்பட்ட பிரிவாக, இந்திய அரசாங்கம் கருதப்பட்டது. பிரிட்டிஷ் மந்திரி சபையின் முடிவு இந்திய நலன்களுக்குப் பாதகமாய் இருக்கிறது என இந்திய அரசாங்கம் நினைத்தாலும், அதன்படியே இந்திய அரசாங்கம் நடக்கவேண்டும் என இந்தியக் காரியதரிசியாரான சர் ஹென்றி பௌலர் ஐயத்திற்கிடமற்ற மொழியில் கூறியுள்ளார். மற்றோர் இந்தியக் காரியதரிசியாரும், அயல் நாட்டுக் கொள்கைகளையும் நடவடிக்கை முறைகளையும் ஏற்படுத்தும்போது, பிரிட்டனின் நலன்களையே பிரிட்டிஷ் மந்திரி சபை மிக முக்கியமானதாகக் கருதுவதைத் தடுக்க முடியாது. இதனால், அடிக்கடி இந்திய நலன்களைப் பேரரசின் நலன்களுக்காகப் பலியிட வேண்டியிருக்கும். இதை, வாணிகம், உற்பத்தி செய்தல், நாணயம், அயல் நாட்டுக் கொள்கை ஆகியவைகளைப் பாதிக்கும் விஷயங்களில் வெளிப் படையாகவும், ஆட்சியின் மற்றப் பிரிவுகளில் ஒரு சிறிய அளவுக்கும் காணலாம்.

ஆனால், ஐயத்திற்கிடமில்லாத தீங்குகளுக்கெதிராக, அதே காரணங்களால், இந்தியாவிற்குக் கிடைத்த ஐயத்திற் கிடமில்லாத ஆதாயங்களையும் நாம் கூறத்தான் வேண்டும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஆசியாவிலிருந்து ஐரோப்பாவைப் பிரித்துக் காட்டிய 'புதிய கால' உணர்ச்சி, ஆட்சி சம்பந்தப்பட்ட உயர்ந்த நோக்கங்கள் ஆகியவைகளை இந்திய அரசாங்கத்தில் புகுத்தி அதைப் புரட்சிகரமாக மாற்றி அமைத்தது; பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் இந்திய அரசாங்கம் நெருங்கிப் பழகியதாலேதான் இது சாத்திய மாயிற்று. ஆங்கிலேயர்களின் நாட்டில் உண்டாக்கப்பட்ட அதே உயர்நிலையிலுள்ள நிருவாகத் திறமையை இந்தி யாவிலும் ஏற்படுத்துவதற்கு, பிரிட்டிஷ் அரசாங்கம் இயற்கை யாகவே முயற்சி செய்தது; மேல்நாட்டில் இருந்த ஒளியூட்டத் தக்க-தாராளமான-மனிதாபிமான உணர்ச்சிகள் இந்தியா விற்கும் பரவின. மேல் நாட்டில் ஏற்பட்ட விஞ்ஞானக்

கண்டுபிடிப்புகளும், இந்தியாவின் வளங்களை அதிகரிப்பதற்காக இந்நாட்டில் உபயோகப்படுத்தப்பட்டன. சுருக்கமாகக் கூறவேண்டுமானால், இங்கிலாந்து ஒரு சாதனமாகப் பயன்பட்டது; அதன் மூலம் ஐரோப்பாவின் புதிய கால முன்னேற்றக் கருத்துகள், நெடுங்காலமாக முன்னேற்றமில்லாமல், இடைக்கால அமைப்பைக் கொண்டிருந்த இந்திய அரசாங்கத்தை மாற்றியமைத்தது. இங்கிலாந்தின் அரசர் இந்திய ஆட்சியை ஏற்குமுன்னரே, இம்முறை உண்மையில் பரவினாலும், இதனால் சிறப்பாகக் கூறக் கூடிய பயன்களும், குறிப்பிடத்தக்க மாறுதல்களும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் ஏற்படவில்லை. இப்பொழுது நாம் பார்க்கப் போகிற அரசாங்கத்தின் சில நடவடிக்கைகளில் புதிய உணர்ச்சியை நன்கு கவனிக்கலாம்.

மனிதாபிமான உணர்ச்சியால் உந்தப்பட்டு அதனால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை நாம் முதலில் பார்ப்போம்.

## (அ) போதையூட்டும் மருந்துகளைக் கட்டுப்படுத்துதல்

தன்னடக்கத்தின் உயர்ந்த குறிக்கோள்கள், இங்கிலாந்திலும் இந்தியாவிலும் விடாமுயற்சியுடன் பரப்பப்பட்டன. அபினி, ஹெம்பு (Hemp), சாராயச் சத்து ஆகியவை முற்றிலும் இந்தியாவிலிருந்து ஒழிக்கப்பட வேண்டுமென்று ஆங்கிலப் பொது மக்களின் ஒரு பகுதி விடாமல் கோரியது. ஸ்ட்ரெயிட்ஸ் (Straits) என்னும் இடத்திலும், சீனாவிலும் செய்யப்பட்ட அபினி வாணிகத்தில் இந்திய அரசுக்குத் தனியுரிமை இருந்தாலும், அபினி, சாராயச் சத்து, ஹெம்பு ஆகியவைகளின்மீது இந்தியாவில் விதிக்கப்படும் உள்நாட்டு வரியினாலும், இந்திய அரசாங்கத்திற்கு அதிக ஆதாயம் கிடைத்து வந்தது. ஆயினும், அது பொதுமக்கள் அபிப்பிராயத்திற்கு ஓரளவு இணங்கும்படி செய்யப்பட்டது. இவ்விவகாரத்தை விசாரணை செய்வதற்காக, ஒரு ராயல் கமிஷன், 1894ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. 1907ஆம் ஆண்டில் சைனாவுடன் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி, அபினி வாணிகம் படிப்படியாகக் குறைக்கப்பட்டு, இறுதியில் ஒழிக்கப்படும். இம்மூன்று போதைப் பொருள்களையும் உள்நாட்டில் உபயோகிப்பது சம்பந்தப்பட்டவரையில், இவற்றை முற்றும் ஒழிப்பதற்கு அரசாங்கம் மறுத்தது; அதிகமான வரி விதித்து,

சிறிய அளவில் விற்கும் கடைகளுக்கு லைசென்ஸ் அளிப்பது மூலம், இவற்றின் உபயோகத்தைக் கட்டுப்படுத்தி, மேற்பார்வை செய்யும் குறிப்பிட்ட ஒரு கொள்கையை அது பின்பற்றியது. அதை உபயோகிக்காமல் இருப்பவர்களுக்கு ஏற்படும் ஆசையைக் குறைத்தலும் மற்றவர்கள் அதிகமாக உபயோகிப்பதைத் தடுத்தலும் கொள்கை என்றும், வருமானம் சம்பந்தப்பட்ட நோக்கங்கள் இக்கொள்கைக்குத் தடையாக இருக்கக் கூடாதென்றும் அது வெளிப்படையாகக் கூறியது.

## (ஆ) தொழிற்சாலைச் சட்டங்கள்

தொழிற்சாலையில் வேலை செய்த தொழிலாளர்களின் வேலை நேரத்தைக் குறைக்கவும், மற்றும் பல வாழ்வு நலன்களை அளிக்கவும் தொடர்ந்த கிளர்ச்சி இங்கிலாந்தில் நடந்ததைப்பற்றி, ஆங்கில வரலாற்றின் மாணவர்கள் அறிவார்கள். தங்களுக்குப் பொருளிழப்பு ஏற்பட்டாலும், தொழிலாளர்களின் துன்பங்களைப் போக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் ஆலை உரிமையாளர்களை வற்புறுத்தியது. இந்த எண்ணத்துடனே, இந்திய அரசாங்கமும், இந்தியத் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களின் துன்பங்களைப் போக்குவதற்காகப் பல சட்டங்களை நிறைவேற்றியது. 1881, 1891ஆம் ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களால், பெண்டிரும் சிறுவரும் செய்யும் வேலை நேரம் வரையறுக்கப்பட்டது. மேலும், தொழிற்சாலைகளில் நல்ல குடிதண்ணீருக்கு வசதி செய்யவும், சிறந்த காற்றோட்ட வசதிகளை உண்டாக்கவும், இடத்தைத் துப்புரவாக வைத்திருக்கவும் வேண்டிய சட்டங்களைச் செய்ய, ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இச்சட்டம் அதிகாரமளிக்கிறது.

## (இ) பஞ்ச நிவாரணம்

பஞ்ச நிவாரணத்திற்குக் குறிப்பிட்ட ஒரு திட்டத்தை ஏற்படுத்தியதே, நாம் இப்பொழுது திரும்பிப் பார்க்கிறபோது இந்திய அரசாங்கத்தின் மிக முக்கியமான சாதனையெனத் தெரிகிறது. இந்தியாவைப் போன்ற விவசாய நாட்டில் ஏற்படும் பஞ்சத்தினுல், நினைவுக்கெட்டாத கால முதற்கொண்டே மக்கள் பெருந் துன்பமுற்று இருக்க வேண்டும். 'இந்தியாவில் பஞ்சம் ஏற்படுவதில்லை,' என்ற மெகஸ்தனிஸ் (Megasthenes) என்பவரின் கூற்றை உண்மை

யானதெனக் கருத இயலாது; ஆனால், பஞ்சத்தின் கொடுமைகள், பரந்த பிரதேசத்தை அவ்வளவாகப் பாதிக்காமல், உள்ளூர்ப் பிரதேசங்களையே அதிகமாகப் பாதித்திருக்கின்றன என்னும் உண்மையையே அந்தக் கிரேக்க நாட்டு ஆசிரியர் தவறாகப் புரிந்துகொண்டார். மக்கள் தொகை உயர்வாலும், தொழிற்சாலைகளின் வேலைக் குறைவாலும், அடிக்கடி ஏற்பட்ட பஞ்சங்கள் மிக ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்தின. பிரிட்டிஷ் கால ஆரம்பம் வரையில், இவற்றினால் ஏற்பட்ட அழிவைப்பற்றி, உண்மையான செய்தி எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. 1770ஆம் ஆண்டில் வங்காளத்தில் கொடுமையான பஞ்சம் ஏற்பட்டது; ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதி மக்கள் அதற்குப் பலியானார்கள். மறு நூற்றாண்டில், இந்தியாவின் பல பாகங்களிலும் பஞ்சம் ஏற்பட்டது. 1866-67ஆம் ஆண்டில் ஏற்பட்ட கொடிய பஞ்சத்தினால், ஒரிஸ்ஸாவில் ஏராளமான மக்கள் மடிந்தார்கள். கல்கத்தாவிலிருந்து சென்னை வரையில் இருந்த கிழக்குக் கடற்கரையிலும் அப்பஞ்சம் பரவியது. அடுத்த பத்து ஆண்டுகளில், ஐக்கிய மாகாணத்திலும், பஞ்சாபிலும், 1868-1869ஆம் ஆண்டுகளில், இராஜபுதனத்திலும், 1873ஆம் ஆண்டில் வட பீஹாரிலும் சிறிய அளவில் பஞ்சங்கள் ஏற்பட்டன.

இதற்குப் பிறகு மற்றொரு கடும் பஞ்சம் 1876ஆம் ஆண்டில் உண்டாயிற்று; இது இரண்டு ஆண்டுகள் வரையில் நீடித்து, சென்னை, மைசூர், ஹைதராபாது, பம்பாய், ஐக்கிய மாகாணங்கள் ஆகியவற்றிலுள்ள பெரும்பான்மையான பிரதேசங்களுக்குப் பரவியது. இந்தச் சமயங்களிலெல்லாம் மக்களுக்குப் பஞ்ச நிவாரணம் அளிக்க, பல நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொண்டது. ஆனால், அவை பெரும்பயனைத் தரவில்லை. திட்டமான கொள்கைகளும், சிறந்த வேலைத் திட்டங்களும் இல்லாதபோது, பல பிரதேசங்களில் அளிக்கப்பட்ட நிவாரணங்கள் ஒரே மாதிரியாகவும் இல்லை; செலவு செய்யப்பட்ட பணத்திற்குத் தகுந்தனவாகவும் இல்லை. உதாரணமாக, சென்னை மக்களைவிடப் பம்பாயில் அதிக மக்கள், பாதிச் செலவில் காப்பாற்றப்பட்டார்கள். பஞ்ச நிவாரணங்களுக்காகப் பொதுக் கொள்கைகளை ஏற்படுத்த வேண்டுமென்று கவர்னர் ஜெனரலாய் இருந்த லிட்டன் பிரபு எண்ணினார். இக்குறிக்கோளுக்காக ஆற்றல் வாய்ந்த ஒரு கமிஷனை, ஜெனரல் சர் ரிச்சர்டு ஸ்ட்ராச்சி (General Sir Richard Strachey) என்பவரின் தலைமையில் அவர் நியமித்தார். 1880ஆம் ஆண்டில் அதன் அறிக்கை வெளியிடப்பட்டது.

இந்திய அரசாங்கத்தில் 1883ஆம் ஆண்டில் உண்டாக்கப்பட்ட பஞ்ச நிவாரணச் சட்டத்திற்கு அடிப்படையாக, இதன் சிபாரிசுகள் விளங்கின. மற்ற மாகாணங்களில் ஏற்பட்ட பஞ்ச நிவாரணச் சட்டத்திற்கும், அவைகளே அடிப்படையாய் விளங்கின.

பஞ்ச காலத்தில் தேவையுள்ளவர்களுக்கு நிவாரணம் அளிப்பதே அரசாங்கத்தின் கடமை என்கிற அடிப்படைக் கொள்கையுடனே தான் அக்கமிஷன் தன் வேலையைத் தொடங்கியது. வேலை செய்வதற்கேற்ற மனிதர்களுக்கு வேலையும், முதியவர்களுக்கும் ஊனமடைந்தவர்களுக்கும் உணவு அல்லது பண வடிவில் நிவாரணமும் அளிக்கப்பட்டன. முதலில் கூறப்பட்டதற்காக நிவாரண வேலைத் திட்டங்களை முன்பாகவே தயாரித்து வைத்துக்கொள்ளவேண்டும்; ஏனெனில், அப்படிச் செய்வதால், பஞ்சம் ஏற்பட்ட உடனே, அவ்வேலைகளை ஆரம்பிக்கலாம். அந்த வேலைகள் நிரந்தர உபயோகமுள்ளனவாகவும், ஏராளமானவர்களுக்கு வேலை கிடைக்கும்படி பரந்த அளவிலும் இருக்க வேண்டும். பெரிய வேலைகளுக்கு அனுப்பத் தகுதியற்றவர்களுக்கு வேலை கொடுப்பதற்காகக் குளம் குட்டைகளைத் தோண்டுதல், கரைகளை உயர்த்துதல் போன்ற உள்ளூர் வேலைகளைக் கிராமங்களில் மேற்கொள்ளலாம். பசியினால் மக்களுடைய உடலின் ஆற்றல் குறையுமுன்பே, மக்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்பது குறிப்பாக வற்புறுத்தப்பட்டது.

நிலவரியையும் நிலவாரத்தையும் நிறுத்திவைத்தல், குறைத்தல், தானிய வித்துக்களையும் எருதுகளையும் வாங்குவதற்காகக் கடன் கொடுத்தல் ஆகிய இவற்றின் மூலம், மேலும் நிவாரணத்தை அளிக்கவேண்டும்.

நிவாரணம் அளிப்பதால் ஏற்படும் அளவுக்கு மீறிய செலவையும் வீண் செலவையும் தடுப்பதற்காக ஏற்படும் செலவில் ஒரு பெரும் பகுதியை மாகாண அரசுகள் ஏற்க வேண்டும் எனவும், மாகாணங்களின் ஆதார வளத்தையும் திறமையையும் கவனமாக ஆராய்ந்த பிறகுதான் மாகாணங்களின் நிதிகளுக்கு உதவி செய்வதற்கு மத்திய அரசு முன்வரவேண்டும் எனவும் அக்கமிஷன் கூறியது. சம்பந்தப்பட்ட மக்களுக்குப் பொறுப்புணர்ச்சியை ஏற்படுத்துவதற்காக, அந்நிதியின் பெரும்பாகத்தையும் கொடுக்கும் வரி செலுத்துவோரின் பிரதிநிதிகள் மூலம், நிவாரணம் அளிக்கப்பட வேண்டும் என அக்கமிஷன் சிபாரிசு செய்தது.

பஞ்சம் காரணமாக ஏற்பட்ட எதிர்பாராத அதிக செலவுகளுக்கு வேண்டிய பணத்தைப் பெறும்பொருட்டு ஒவ்வோர் ஆண்டும் பதினைந்து மில்லியன் ரூபாய்களை ஒதுக்குவதென்பது தீர்மானிக்கப்பட்டது; இப்பணத்தைக்கொண்டு 'பஞ்ச நிவாரண இன்சூரன்ஸ் நிதி' ஏற்படுத்தப்பட்டது.

1896–1897, 1899–1900 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட கடும் பஞ்சங்களை தீர்ப்பதற்காக, பஞ்ச நிவாரணச் சட்டத்தின் கொள்கைகள் தீவிரமாகப் பின்பற்றப்பட்டன. ஐக்கிய மாகாணங்கள், பீஹார், மத்திய மாகாணங்கள், சென்னை, பம்பாய் ஆகிய மாகாணங்களிலிருந்த 1,25,000 சதுர மைல்களைக்கொண்ட பிரதேசத்தில் வாழ்ந்த முப்பத்து நான்கு மில்லியன் மக்கள், 1896–1897ஆம் ஆண்டில் ஏற்பட்ட பஞ்சத்தால் கடுமையாகப் பாதிக்கப்பட்டார்கள். 1899–1900 ஆம் ஆண்டில் உண்டான பஞ்சத்தால், பம்பாய், மத்திய மாகாணங்கள், பஞ்சாபு, இராஜபுதனம், பரோடா, மத்திய இந்தியாவிலிருந்த சிற்றரசுகள் ஆகியவை பல்வேறு விதத்தில் துன்பப்பட்டன. பரந்த அளவில் பஞ்ச நிவாரண நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன; 'இந்தியாவின் மக்கள் தொகையில் நான்கில் ஒரு பகுதியினருக்குப் பஞ்ச நிவாரண உதவி அளிக்கப்பட்டது,' என்று சர்சான் பிரபு மதிப்பிட்டார்.

1896–1897ஆம் ஆண்டில் பஞ்சம் ஏற்பட்ட பிறகு, சர் ஜேம்ஸ் லேயால் (Sir James Lyall) என்பவரின் தலைமையில் ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. 1880ஆம் ஆண்டில் பின்பற்றப்பட்ட கொள்கைகள் அனைத்தையும் ஆதரித்து, அத்திட்டத்தை விரிவாக நடத்துவதிலேதான் ஒரு சில மாறுதல்களை அது சிபாரிசு செய்தது.

1900ஆம் ஆண்டில் சர் அந்தோனி மெக்டானல் (Sir Antony Macdonnell) தலைமையில் மற்றொரு கமிஷனும் நியமிக்கப்பட்டது. இதுவும் 1880ஆம் ஆண்டின் கொள்கைகளை ஆதரித்தது; ஆனால், நிலத்தீர்வையையும் நிலவாரத்தையும் வெகு சீக்கிரத்தில் நிறுத்தி வைப்பதால் ஏற்படும் பயனையும் தானிய வித்துக்களையும் மாடுகளையும் வாங்குவதற்காகக் கொடுக்கப்படும் முன் பணத்தை விரைவில் பட்டுவாடாச் செய்வதனால் ஏற்படும் பலனையும் அது வலியுறுத்திக் கூறியது. பரந்த அளவில் பஞ்ச நிவாரணம் அளிக்கப்படும் மாகாணத்தில், பஞ்ச ஆணையாளர் (Famine Commissioner)

ஒருவரை நியமிக்கவேண்டுமென்று அது சிபாரிசு செய்தது. கமிஷன் கூறிய வேறு பல சிபாரிசுகளில் பின் வருபவைகளை முக்கியமானவையாகக் கொள்ளலாம்.

(அ) இது வரையில் பஞ்ச நிவாரண வேலைகளில் முக்கியமாய் இருந்த பெரிய மராமத்து வேலைகளுக்குப் பதிலாக, உள்ளூர் வேலைகளுக்குக் குறிப்பிட்ட சில சமயங்களில் அதிக முக்கியத்துவம் கொடுத்தல் வேண்டும்.

(ஆ) பஞ்ச நிவாரண உதவியை அளிக்கும்போது, அதிகாரிகள் அல்லாதவர்களின் உதவியை அதிகமாகப் பெறுதல்.

(இ) விவசாயப் பாங்குகளை ஏற்படுத்துதலும், முன்னேற்ற முறைகளை விவசாயத்தில் புகுத்துதலும்.

(ஈ) நீர்ப்பாசன வசதிகளை அதிக அளவில் விரிவு படுத்துதல்.

இந்தச் சிபாரிசுகள் அரசாங்கத்தால் ஏற்கப்பட்டு, அமுல் செய்யப்பட்டன. இவ்விதம் இந்தியாவில் பஞ்சத்தைத் தடுத்துப் போராடுவதற்காகப் பெரிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. இரயில்களின் விஸ்தரிப்பும் பஞ்ச நிவாரணத்திற்கு முக்கிய வழியாய் உதவியது எனக் கூறலாம்; ஏனெனில், பாதிக்கப்பட்ட மாகாணத்திற்குத் தானியங்களை ஏற்றிச் செல்லவும், அவசியமாகத் தேவைப்பட்ட பல பிரதேசங்களுக்கு அவற்றை வழங்கவும் இது உதவியாய் இருந்தது.

இனி, விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளின் உதவியுடன் நாட்டின் வளங்களை அபிவிருத்தி செய்வதற்காக அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பற்றிப் பார்ப்போம்.

## (ஈ) இரயில்வேக்கள்

இவற்றில் மிகவும் முக்கியமானது, இரயில்வேக்களை விரிவுபடுத்தியதுதான். டல்ஹௌசி பிரபு சிறிய அளவில் ஆரம்பித்ததைத் தொடர்ந்து, 350 மில்லியன் பவுன்களைச் செலவுசெய்து, 36,000 மைல் நீளமுள்ள இரயில் பாதைகள் ஏற்படுத்தப்பட்டன. ஆரம்பத்தில் இந்தத் தொழிற்றுணிவு (Enterprise) தனியாள்களின் முயற்சிகளுக்கு விடப்பட்டது. அவற்றின் இலாபம் 5 சத விகிதத்திற்குக் குறைவாய் இருந்

தால், குறைவை அரசாங்கம் கொடுக்க வேண்டும் என்ற உறுதி மொழியை இந்திய அரசாங்கம் அளித்து, தனியார் (Private) கம்பெனிகளுக்கு ஊக்கமளித்தது. இதற்குப் பதிலாகச் சில சலுகைகளை அரசாங்கம் பெற்றது. கம்பெனியின் இலாபம், உறுதிமொழி அளிக்கப்பட்ட 5 சத விகிதத்திற்குமேல் இருந்தால், அதிகமாகக் கிடைக்கும் இலாபத்தில் பாதியைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு உரிமையுண்டு. மேலும், இரயில் பாதைகளின் நிருவாகத்தை (Management) அரசாங்கம் மேற்பார்வை செய்யலாம்; பொதுவாக இருபத்தைந்து ஆண்டுகள் என்கிற குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு, மாறு விகிதப்படி (Fixed Rate) அவற்றை அரசாங்கம் வாங்கலாம்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்து, உண்மையாகக் கூற வேண்டுமானுல், இறுதி வரையிலும், அரசாங்கத்திற்கு அதிக இழப்பு ஏற்பட்டது. முதலில் கொடுக்கப்பட்ட ஒப்பந்தம் (Contract) முடிந்த பிறகு, அனுகூலமான நிபந்தனைகள் கம்பெனிகளின்மீது விதிக்கப்பட்டன. சிலவற்றில் அரசாங்கமே இரயில் பாதைகளை ஏற்படுத்தி நிருவகித்து வந்தது. படிப்படியாக இரயில்வேக்கள் வருமானத்தைக் கொடுக்க ஆரம்பித்தன. இரயில்வேக்களின் முக்கியத்துவத்தை அவை கொடுக்கும் இலாபத்தைக் கொண்டு மதிப்பிடக் கூடாது. போக்குவரத்திற்கு அவற்ருல் ஏற்படும் நன்மையிலும், வாணிகத்திற்கும் தொழிலுக்கும் ஏற்படும் ஆதரவிலுமேதான் அவற்றின் முக்கியத்துவம் இருக்கிறது. பரந்த இந்நாட்டில், தூரத்திலுள்ள இடங்களுக்குச் சுலபமாகச் செல்வதற்கு வழிசெய்து, இந்தியர்களிடத்தில் ஒற்றுமை உணர்ச்சியும் தேசபத்தியும் தோன்றுவதற்கு அது மிக உதவியாய் இருந்திருக்கிறது.

## (உ) காடுகள்

இந்தியக் காடுகள் வருமானத்திற்குச் சிறந்த ஆதாரமாய் என்றும் விளங்கி வந்துள்ளன. தட்ப வெப்ப நிலையைப் பெரிதளவுக்குக் காடுகள் நிருணயிக்கின்றன என்பதைக் காட்டுத் துறை விஞ்ஞானத்தின் (Science of forestry) வளர்ச்சியால்; முக்கியமாக, ஜெர்மனி பிரான்சு நாடுகளில் காணலாம்; காடுகள் நாட்டிற்குப் பெரும்பயனை அளிக்க வேண்டுமானுல், அவற்றை எவ்விதம் பாதுகாத்து அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பதற்கு வேண்டிய திட்டங்களை அந்நாடுகள்

ஏற்படுத்தியுள்ளன. 1864ஆம் ஆண்டில் இந்தியக் காடுகளின் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக ஜெர்மானிய வல்லுநர் ஒருவர் நியமிக்கப்பட்டதிலிருந்து, இந்தியக் காடுகளின் நிருவாகம், ஒரு புதிய விஞ்ஞான முறையில் நடத்தப்பட்டது. அரசாங்கக் காடுகளைப் பாதுகாத்துத் திறமையுடன் நிருவகிப்பதற்காக, 1865ஆம் ஆண்டில் ஒரு சட்டம் இயற்றப்பட்டது; அதைத் தொடர்ந்து பிற்காலத்தில் வேறு பல சட்டங்களும் ஏற்பட்டன. 1878ஆம் ஆண்டில், டேராடூனில் (Dehra Dun) ஒரு பயிற்சிப் பள்ளியும் ஆரம்பிக்கப்பட்டது. 500,000 சதுர மைல் களைக் கொண்ட ஒரு பிரதேசத்தைக் காட்டிலாக்கா இப்பொழுது நிருவகித்து வருகிறது; விஞ்ஞான முறையில் ஏற்பட்ட காட்டுத்துறையின் பயனை இந்தியா அனுபவிக் கிறது.

## (ஊ) நீர்ப்பாசனம்

இந்தியாவைப் போன்ற ஒரு விவசாய நாட்டில் நீர்ப் பாசனம், என்றுமே நிருவாகத்தின் முக்கியக் கிளையாய் இருந்து வருகிறது. குறிப்பிடத்தக்க நீர்ப்பாசனத் திட்டங்களை இந்து முஸ்லீம் அரசர்கள் நிறைவேற்றியிருக்கிறார்கள். அவற் றைப் பின் தொடர்ந்து, ஆரம்பக் காலத்தில் இருந்த பிரிட்டிஷ் ஆட்சியாளர்களும் பல திட்டங்களை ஏற்படுத்தியிருக்கின் றார்கள். ஆனால், ஒரு புதிய கொள்கையை லாரன்சு பிரபு 1866ஆம் ஆண்டில் ஏற்படுத்தினார். பொதுக் கடன்கள் (Public loans) மூலமாக, ஏராளமான நீர்ப்பாசனத் திட்டங் களுக்கு அவர் பணமளித்து உதவினார். சர்ஹிண்டு கால்வாய் (Sirhind Canal, 1882), கீழ்க்கங்கைக் கால்வாய் (Lower Ganges Canal, 1878), ஆக்ராக் கால்வாய் (Agra Canal, 1874) போன்றவை இப்புதிய கொள்கையால் ஏற்பட்டவைகளே. கிளைக் கால்வாய்களைச் (Feeder Canals) சேர்த்து, முதல் கால்வாய் 3,700 மைல் நீளமுள்ளது.

பஞ்சாபின் குடியேற்றக் கால்வாய்கள் (Colony Canals) ஒரு தனி இரகத்தைச் சேர்ந்தவை. அரசாங்கத்திற்குச் சொந்தமாய் இருந்த பரந்த தரிசு நிலங்களை விளைநிலங் களாக மாற்றுவதற்காக அவை ஏற்படுத்தப்பட்டன. 1890–1899ஆம் ஆண்டுகளுக்கிடையே உண்டாக்கப்பட்ட கீழ்ச்சீனுப் கால்வாயின் (Lower Chenab Canal) மொத்த நீளம் 2,700 மைல்; சீனுப், ராவி என்னும் ஆறுகளுக்கு இடையேயுள்ள இரு மில்லியன் ஏக்கராவுக்கும் அதிகமாய் உள்ள பிரதேசங்

களுக்கு அதனால் நீர்ப்பாசன உதவி கிடைக்கிறது. முதலில் தரிசு நிலமாய்க் கிடந்த அப்பிரதேசம், 1901ஆம் ஆண்டில், 8,00,000 மக்களைக் காப்பாற்றுவதற்கு உதவியாய் இருந்தது. விடுமுதல் மூலதனத்தில் (Capital outlay) 40 சதவிகிதமுள்ள ஆண்டு வருமானத்தை அக்கால்வாய் அளிக்கிறது.

நீர்ப்பாசனம், ஒவ்வொரு மாகாண அரசாங்கத்திற்கும் முக்கியப் பகுதியாய் விளங்குகிறது. பயிரிடப்படும் பிரதேசங்களுக்கு நீர்ப்பாசன வசதி செய்து தருவதற்காகவும், தரிசு நிலங்களை விளைநிலங்களாக மாற்றுவதற்காகவும் பெரியனவும், சிறியனவுமான பல திட்டங்கள் இப்பொழுது உருவாக்கப்படுகின்றன.

## 5. இராணுவ நிருவாகம்

பெருங்கலகம் வரையிலும், அதன் பிறகு நீண்ட காலத்திற்கும், வங்காளம், பம்பாய், சென்னை மாநிலங்கள், தனித்தனியான படைகளைத் தனித்தனியான தளபதிகளின் கீழ் வைத்திருந்தன. வங்காளப் படையின் படை முதல்வர், பெயருக்கு இந்தியாவிலிருந்த இராணுவத்திற்குத் தலைவராய் இருந்தாலும், பம்பாய், சென்னை அரசுகள் தங்களுடைய படைகளைத் தாங்களே நிருவாகம் செய்து, அவற்றுக்கு வேண்டிய ஆள்களை உள்ளூரிலேயே சேர்ந்தன. 1893ஆம் ஆண்டில் இயற்றப்பட்டு, 1895ஆம் ஆண்டில் அமுலுக்குக் கொண்டு வரப்பட்ட ஒரு சட்டத்தின் படி, இந்தியாவிலிருந்த இராணுவம் முழுவதும், படைமுதல்வரின் தனியான கட்டுப்பாட்டின் கீழ் வைக்கப்பட்டது; அது நான்கு பிரதேசப் பகுதிகளாக—வங்காளம், சென்னை, பம்பாய், பஞ்சாப்—பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றும் ஒவ்வொரு லெப்டினென்டு ஜெனரலின் (Lieutinant General) கீழ் வைக்கப்பட்டது. 1904ஆம் ஆண்டில், கிட்சினர் பிரபு (Lord Kitchener) அதை மாறுபட்ட கொள்கைகளைக் கொண்ட ஒரு புதிய நிறுவனமாக அமைத்தார். இந்திய இராணுவப் படைகள், மூன்று இராணுவ கமாண்டுகளாகவும் (Army Commands), ஒன்பது டிவிஷன்களாகவும் (Nine Divisions) பிரிக்கப்பட்டது. அமைதிக்கால நிருவாகத்தைப் போர்க்கால நிருவாகத்துடன் ஒன்று சேர்ப்பதிலேதான் இதன் நன்மை இருக்கிறது. வேறு வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், அந்த ஜெனரல்களே, அதே படைப்பகுதிக்கு, அமைதிக்காலத்திலும் போர்க்காலத்திலும் தளபதிகளாய் இருப்பார்கள் எனலாம்.

முதலில், ஒவ்வொரு மாகாணப் படையிலும் மூன்று பகுதிகள் இருந்தன. அவை, (1) பெரும்பாலும் அம்மாகாணத்திலேயே சேர்க்கப்பட்ட இந்தியத் துருப்புகள், (2) கம்பெனிக்குச் சொந்தமான ஐரோப்பியர்கள் அடங்கிய படைப்பகுதி, (3) ராயல் ரெஜிமென்டுகள் (Royal Regiments) என்பவை. 1858ஆம் ஆண்டிற்குப்பின் கடைசி இரண்டும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டன; ஆனால், இதைக் கண்டு கம்பெனியின் படைகள் அதிருப்தியுற்றன; சுமார் 10,000 பேர்கள், தங்கள் வேலையை விட்டு நீக்க வேண்டும் என்று கோரினார்கள். இதுவே '**வெள்ளைக் கலகம்**' (White Mutiny) எனக் கூறப்படுகிறது. கொடையினாலும், மற்றச் சலுகைகளினாலும் அதிருப்தி நீக்கப்பட்டது. 1857-59ஆம் ஆண்டுகளின் பெருங் கலகத்தின் பயனாகப் படை அமைப்பில் பல மாறுதல்கள் செய்யப்பட்டன. முதலில் ஐரோப்பியத் துருப்புகளின் வீதம் அதிகமாக்கப்பட்டு இந்தியத் துருப்புகளின் வீதம் குறைக்கப் பட்டது. 1863ஆம் ஆண்டில் படையில் 1,40,000 இந்தியத் துருப்புகளும், 65,000 ஐரோப்பியத் துருப்புகளும் இருந்தன; முதல் உலகப்போர் ஆரம்பமாகும் வரையிலும் இதே விகிதந் தான் இருந்தது. பீரங்கிப் படையை ஐரோப்பியத் துருப்புகள் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தன.

இரண்டாவதாக, இந்தியத் துருப்புகளின் அமைப்பில்—முக்கியமாக வடஇந்தியாவின் துருப்புகளில்—பெருமாறுதல்கள் ஏற்பட்டன. முதலில் இந்தியச் சிப்பாய்கள் ஒரே பிரதேசத்திலிருந்து படையில் சேர்க்கப்பட்டார்கள், இவர்களுள் பெரும்பாலார் உயர்சாதியைச் சேர்ந்தவர்கள். இத் திட்டத்தின் குறைபாட்டைப் பெருங்கலகம் எடுத்துக் காட்டியது. அதிலிருந்து எல்லாச் சாதியிலிருந்தும் ஆள்கள் எடுக்கப்பட்டார்கள். அதனால், ஒவ்வொரு படைப்பிரிவிலும் (Company) எல்லா இனங்களையும் சாதிகளையும் மதங்களையும் சேர்ந்தவர்கள் இருந்தார்கள்.

மூன்ருவது மாற்றம், படிப்படியாகத்தான் தெரிய வந்தது. கூர்க்கர்கள், பட்டானியர்கள், சீக்கியர்கள் போன்ற போரில் பற்றுக்கொண்ட இனங்களைச் சேர்ந்தவர்கள், பெரிய அளவில் படையில் சேர்க்கப்பட்டார்கள். ஒரு சில ஆண்டுகள், வங்காளப் படையிலிருந்த இந்துஸ்தானித் துருப்புகளுக்கும், பம்பாய், சென்னை ஆகிய மாகாணங்களில் சேர்க்கப்பட்ட சிப்பாய்களுக்கும் பதிலாக, அவர்கள் சேர்க்கப்பட்டார்கள். சென்னைப் படையிலேதான் முழு

மாறுதல்கள் ஏற்பட்டன. சீக்கியர்களும், கூர்க்கர்களும், மற்றும் பல வடஇந்தியர்களும் படிப்படியாக அதில் சேர்க்கப் பட்டு, இறுதியில், தெலுங்கர்கள் சேர்க்கப்படுவது முழுவதும் நிறுத்தப்பட்டது.

வைசிராயின் நிருவாகக் கவுன்சிலுக்கு இராணுவ அங்கத்தினராக இராணுவ அதிகாரி ஒருவர் நியமிக்கப் பட்டார்; அவர் மூலமாக, இந்தியப்படையின் நிருவாகத்தை அரசாங்கம் மேற்பார்வை செய்தது. கவர்னர்-ஜெனரலின் நிருவாக சபையில் தனிப்பட்ட அங்கத்தினராகப் படை முதல்வர் இருந்ததால், நிலைமை மிகவும் முரண்பாடுள்ளதாய் இருந்தது. இராணுவ அங்கத்தினரைவிட, படை முதல்வர், மேலான தகுதிவாய்ந்தவராய் இருந்தாலும், அவரால் (படைத்தலைவர்) சமர்ப்பிக்கப்படும் எத்திட்டமும், பரிசீலனை செய்வதற்கும், முடிவுசெய்வதற்கும், முன்னவரிடமே சமர்ப்பிக்கப்படவேண்டும். ஒவ்வொரு மாகாணமும் தனித் தனியான படையை வைத்திருந்தபோது, வியப்புக்குரிய இம் முரண்பாடு, நியாயமாய் இருக்கலாம்; ஆனால், இந்தியாவின் எல்லாப்படைகளும், படை முதல்வரின் ஒரே கட்டுப்பாட்டில் 1895ஆம் ஆண்டில் வைக்கப்பட்டதனால், இந்த முரண்பாடு நீக்கப்படவேண்டியிருந்தது. 1904ஆம் ஆண்டில், இப்பிரச் சினையைக் கிட்சினர் பிரபு தீர்க்க விரும்பினார்; இராணுவப் பிரச்சினைகளில் அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறும் ஒரே ஆலோசனையாளராகப் படை முதல்வரை நியமித்த இந்த முரண்பாட்டை நீக்கலாம் என அவர் ஆலோசனை கூறினார். இராணுவ நிருவாகத்தின்மீது சிவில் நிருவாகத்துக்குள்ள இறுதி மேற்பார்வையை இந்த ஏற்பாடு பெரிதளவுக்கு நீக்கி விடும். அதனால், அரசியலின் அடிப்படைக் கொள்கையே மிகப்பாதிக்கப்படும் என அஞ்சி, வைசிராயாய் இருந்த கர்சான் பிரபு, இத்திட்டத்தைக் கடுமையாக எதிர்த்தார். ஆனால், இந்தியக்காரியதரிசியார், கிட்சினர் பிரபுவின் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். அவரது தீர்மானம் அளிக்கப் பட்ட விதத்தைக் கண்டு, கர்சான் பிரபு 1905ஆம் ஆண்டில் தமது ராஜிநாமாவைச் சமர்ப்பித்தார். இராணுவ நிருவாகத் திற்கு இந்திய அரசாங்கத்தின்கீழ்ப் பொறுப்புள்ள ஒரே அதிகாரியாய்ப் படை முதல்வர், 1907ஆம் ஆண்டிலிருந்து பணியாற்றினார்.

## 6. சிவில் நிருவாகம்

பலபின்விளைவுகளைக் கொண்ட ஒரு முக்கிய மாறுதல், 1905ஆம் ஆண்டில் சிவில் நிருவாகத்தில் ஏற்பட்டது. அது

வரையில், ஒரு லெப்டினென்டு கவர்னரின் தலைமையின்கீழ் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மூன்றும் ஒரே மாகாண மாய் இருந்தன. 1,89,000 சதுர மைல்களைக் கொண்ட இப் பிரதேசத்தைத் திறமையாக ஆட்சி செய்வதற்கு முடியவில்லை எனக் கர்சான் பிரபு நினைத்து, மாகாண எல்லையை மாற்றி அமைக்க முடிவு செய்தார். டாக்கா, சிட்டகாங், ராஜ்ஷாஹி (Rajshahi) என்னும் டிவிஷன்களை அம்மாகாணத்திலிருந்து பிரித்துவிடுவதென்று இறுதியில் முடிவு செய்யப்பட்டது. தலைமை ஆணையாளரின்கீழ் இருந்த அஸ்ஸாமுடன் இவை சேர்க்கப்பட்டு, டாக்காவைத் தலைநகராகக் கொண்ட கிழக்கு வங்காள அஸ்ஸாம் மாகாணம் என்னும் ஒரு புதிய மாகாணம் உண்டாக்கப்பட்டது. பொது மக்களிடமிருந்து கடுமையான எதிர்ப்பு எழுந்தும், இத்திட்டம் 1905ஆம் ஆண்டில் நிறை வேற்றப்பட்டது. பின் அத்தியாயத்தில் கூறப்படுவதைப் போல, வங்காளப் பிரிவினை மிகப்பெரிய அரசியல் இயக்கம் ஏற்படுவதற்குக் காரணமாய் இருந்தது. இவ்வியக்கத்தால் இந்தியாவின் தேசிய உணர்ச்சி பெருகியது.

# 4. புதிய இந்தியாவின் வளர்ச்சி (1858–1905)

## 1. கல்வி

இந்தியாவின் ஆட்சி, இங்கிலாந்தின் அரசருக்கு மாற்றப் பட்ட போதிலும், 1854ஆம் ஆண்டின் அறிக்கையே, இந்திய அரசாங்கம் பின்பற்றிய கல்வி முறையின் அடிப்படையாய்த் திகழ்ந்தது. இக்கொள்கை, இந்தியக் காரியதரிசியாரால் 1859-ல் ஒப்புக்கொள்ளப்பட்டது. தொடக்கக் கல்வியின் முக்கியத்துவத்தை இந்தியக் காரியதரிசியார் (Secretary of State) வற்புறுத்தி, அதை மேம்பாடு அடையச் செய்வதற்கு வேண்டிய பணத்தைப் பெறும் பொருட்டு நிலத்தின் மீது தனி வரியை விதிக்கலாம் என யோசனை கூறினர். இதன் பயனாக, பள்ளிகளும் கல்லூரிகளும் அதிகமாய்ப் பெருகின. அவற்றுள் ஒரு சில பள்ளிகளையும் கல்லூரிகளையும் அரசாங்கம் நடத்தியது; மற்றவைகள் அரசாங்கத்தின் உதவித் தொகையைப் பெற்றும், அல்லது பெருமலும் தனியார் நிறுவனங்களால் நடத்தப்பட்டன.

புதிய கொள்கைகளின் பயனாக ஏற்பட்ட கல்வி வளர்ச்சியை ஆராய்வதற்காக, சர் வில்லியம் ஹன்டர் (Sir William Hunter) என்பவரின் தலைமையின்கீழ் ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. அதன் அறிக்கையை அரசாங்கம், 1884-ல் அங்கீகரித்தது. 1854ஆம் ஆண்டின் கொள்கை முழுவதையும் இந்த அறிக்கை ஆதரித்தாலும், தொடக்கக் கல்வி, வேண்டும் அளவு வளர்ச்சி பெறவில்லை என்பதை இது சுட்டிக் காட்டியது. பொதுமக்களுடைய தொடக்கக் கல்வியை அதிகப்படுத்தி மேம்பாடு அடையச் செய்வதற்குரிய தனியான அவசரத் தேவையை இவ்வறிக்கை குறிப்பிட்டது. புதியதாக ஏற்படுத்தப்பட்ட நகராட்சி, மாவட்டக் கழகங்களால்,

அரசாங்கத்தின் மேற்பார்வையின் கீழும் கட்டுப்பாட்டின் கீழும், தொடக்கப் பள்ளிகள் நடத்தப்படவேண்டும் என்றும் அது சிபாரிசு செய்தது.

உதவித் தொகை கொடுக்கும் முறை மிகத் திருப்தியான விளைவைக் கொடுக்கிறது என்று அக்குழுக் கூறியது. 'படிப் படியான முறையில் தொடக்க, இடைநிலை, கல்லூரிக் கல்வியைத் தனியாரின் பார்வைக்கு விட்டுவிட வேண்டும்; அவர்களுடன் போட்டியிடுவதிலிருந்து அரசாங்கம் படிப்படி யாக விலகிக் கொள்ள வேண்டும்,' என்று அவ்வறிக்கை சிபாரிசு செய்தது. அவ்வறிக்கையின் பயனாகப் பள்ளிகளும் கல்லூரிகளும் ஏராளமாய்ப் பெருகின.

## 2. சமுதாய, சமயச் சீர்திருத்தங்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியில், சமயத் திலும் சமுதாயத்திலும் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ராஜாராம் மோகன்ராய் என்பவர் முன்பே செய்திருந்தார். சமுதாயத்திலும் சமயத் திலும் இருந்த கேடுகளைப் பற்றிப் பொதுமக்கள் அறிந்திருந் தார்கள். வழக்கமாக நடைபெறுவதைப்போல, இச்சீர் திருத்த ஆவல், பல வழிகளைப் பின்பற்றியது. சிலர் மேல் நாடுகளின் கருத்துகளால் கவரப்பட்டு மிகத் தீவிரமான ஒரு கொள்கையை விரும்பினர். இயற்கையாக இச்செயல் சில எதிர்ப்பு உணர்ச்சிகளை உண்டாக்கி, வைதிகவாதிகளின் கைகளை உறுதிப்படுத்தியது. இவ்விரண்டு மாறுபட்ட கருத்து களிடையே, சீர்திருத்த மிதவாதிகள் இருந்தார்கள். குறைந்த அளவு எதிர்ப்பு இருக்கும் வழியில் மிகுந்த எச்சரிக்கையுடன் சீர்திருத்தம் செய்யவேண்டுமென அவர்கள் விரும்பினார்கள். பற்பல சக்திகளின் செயல்களைப்பற்றிய முக்கியத்துவம், அவற்றினால் ஏற்பட்ட பலாபலன்கள் ஆகியவைகளைப் பற்றிச் சரியாக மதிப்பிடுவதற்குத் தகுந்த காலத்தில் நாம் இப் பொழுது இல்லை. அதனால், அவற்றில் முக்கியமான இயக்கங் களைப் பற்றி மட்டும் நாம் பார்க்கலாம். இரண்டு தலைப்பு களில் அவற்றைப் படிப்பது மிக எளிதாய் இருக்கும். முதலாவது, வைதிக இந்து சமயத்திற்கு வெளியே, ஒரு குழு அல்லது துறவிகளின் குழுவை ஏற்படுத்துவதில் வெற்றி பெற்ற ஓர் இயக்கம்; இரண்டாவது, எல்லா இந்துக்களுடைய நம்பிக்கை, பழக்க வழக்கங்கள் ஆகியவைகளில் ஏற்பட்ட பொதுவான மாற்றம்.

## (அ) பிரம்ம சமாஜம்

முதல் தலைப்பின்கீழ் ஆற்றல் வாய்ந்த சீர்திருத்த இயக்கத்தின் பலனாக ஏற்பட்ட பிரம்ம சமாஜத்தைப்பற்றித் தெரிந்துகொள்வோம்: பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், மக்களின் மனத்தில் கிளர்ச்சியை உண்டாக்கிய புதிய கருத்துகளின் பயனாகவும், புதிய நம்பிக்கைகளின் பயனாகவும் இச்சீர்திருத்த இயக்கம் தோன்றியது.

1828-ல் ராஜாராம் மோகன்ராய் அவர்களால் உண்டாக்கப்பட்ட ஆத்திக நிறுவனத்தைப்பற்றி முன்பே குறிப்பிட்டிருந்தோம். அது 'பிரம்ம சபை' (Brahma Sabha) என வழங்கப்பட்டது. அது உருவ வழிபாட்டை நீக்கி, கடவுளின் ஒருமைப்பாட்டில் நம்பிக்கை கொண்டவர்களின் திருக்கூட்டமாய் அமைந்தது. அவர் ஒரு கட்டடத்தைக் கட்டி அதைப் பொறுப்பாளர்களின் (Trustees) கழகத்திற்குக் கொடுத்தார். 1830, ஜனவரி, 8-ல் ராஜா அவர்கள் ஒரு பொறுப்புப் பத்திரத்தை ஏற்படுத்தினார்; 'எவ்வித வித்தியாசமும் இல்லாமல், எல்லாவிதமான மக்களும் பொதுக் கூட்டம் நடத்துவதற்கும் அல்லது நடத்தப்படுவதற்கும், ஒரே கடவுளைத் தொழுவதற்கும் அவ்வீடு உபயோகப்பட வேண்டும்,' என்றும் அதில் நிபந்தனைகளை விதித்திருந்தார். தவிர, அக்கட்டடத்தில், உருவங்களை வைப்பதும், சடங்குகளைச் செய்வதும் தடுக்கப்பட்டன.

சாதி சமயப்பற்று இல்லாத, ஒரே உண்மையான கடவுளைத் தொழுவதற்குச் செய்த ஏற்பாடுதான், பிரம்ம சமாஜத்தின் தலையாய கொள்கையென இக்காலத்தில் அறிஞர் சிலர் எண்ணுகின்றனர். ராம்மோகன்ராய் அவர்கள், தம்மை இந்து என நினைத்தாரேயன்றி, வேறு வகையில் நினைக்கவில்லை. அவர் ஒரு புதிய மதக்கூட்டத்தை ஏற்படுத்துகிறார் என்கிற குற்றச்சாட்டையும், இறக்கும் வரையிலும் அவர் மறுத்தார். அப்பொழுது பிரம்ம சபையின் வாராந்தர நிகழ்ச்சி நிரலில், வைதிக பிராமணர்கள் வேதங்களை ஓதுவதும் சேர்க்கப்பட்டிருந்தது. அவ்வறையில், பிராமணர்கள் அல்லாதவர்கள் அனுமதிக்கப்படவில்லை. இறக்கும் வரையிலும், ராம்மோகன் ராய் பூணூலை அணிந்திருந்தார்.

ராஜாராம் மோகன்ராய் இங்கிலாந்தில் இறந்ததில் இருந்து, தேவேந்திரநாத தாகூர் (இரவீந்திரநாதரின் தகப்பனார்) அதற்குப் புத்துணர்ச்சியை ஏற்படுத்திய காலம் வரையில், அவரது அமைப்புச் சீரழிந்து கொண்டிருந்தது. 1854-ல் தேவேந்திரநாத தாகூர் முறைப்படி இவ்வியக்கத்தில் சேர்ந்தார். அவர், ஒரு புதிய உடன்படிக்கையை ஏற்படுத்தி, முறையான ஆரம்பச் சடங்கையும் புகுத்தினார். பிணைப்பு இல்லாதிருந்த இந்த நிறுவனத்தை அவர் தம் செயல்களால், ஒரு சமயக் கூட்டமாக மாற்றினார். 'தத்துவபோதினி பத்திரிகா' (Tattvabodhini Patrika) என்னும் பத்திரிகை மூலம் புதிய தத்துவத்தைத் தேவேந்திரநாதர் பரப்பினார்; அதைத் தவிர, சமயப் பிரசாரம் செய்பவர் பலரை நியமித்தும், அத்தத்துவத்தைப் பரப்பினார். புதிய மதத்தில் சேர்பவர்கள் செய்கிற ஆரம்பச் சடங்கு, 'மஹாநிர்வாண தந்திரம்' (Mahanirvana Tantra) என்னும் வேதத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதையும், அவ்வியக்கத்தின் அதிகார பூர்வ அங்கமான தத்துவபோதினி பத்திரிகா, வேதங்களை, தெய்வத் தன்மையுள்ள இறைவழி வெளிப்பாடு (Divine Revelation) எனவும் புதிய திருச்சபையின் சமய நம்பிக்கைகளுக்கு ஒரே அடிப்படை எனவும் அறிவித்தது.

புதிய இயக்கத்தில் இருந்த இளைஞர்களின் பகுதி, அட்சயகுமார் தத்தா (Akshayakumar Datta) என்பவரைத் தலைவராகக் கொண்டு, 'வேதங்கள் தவறில்லாதவை,' என்கிற கொள்கையைத் திறனாய்வு செய்யும் மனப்பான்மையைப் படிப்படியாக வெளியிட்டது. அதைத் தேவேந்திரநாதரும் அனுதாபத்துடன் அனுமதித்தார். ஒரே கடவுளின் கோட்பாட்டை உணர்த்தக் கூடிய தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளை உபநிஷத்திலிருந்து எடுத்து, அவற்றைத் தொகுத்து, பழைய வேதாந்தக் கூட்டு ஒப்பந்தம் (1850) இருந்த இடத்தில், இயற்கையானதும், பொதுமையானதுமான (Universal) கடவுட்கொள்கைகளைக் கொண்ட ஒரு புதிய கூட்டு ஒப்பந்தத்தைத் திருச்சபைக்காக அவர் உண்டாக்கினார்.

இவ்வெற்றியால் தூண்டப்பட்ட இளைஞர்களின் பகுதி, மிகத் தீவிரமான சமுதாயச் சீர்திருத்தங்களை ஆதரித்ததோடு, சமய நம்பிக்கைகளை அடிப்படையாகக்கொண்ட விதிகளையும், பகுத்தறிவுகொண்டு ஆராய்வதற்கு விரும்பியது. இக்கட்சியினர், 1857-ல் புதிய இயக்கத்தில் சேர்ந்த கேசவ சந்திர சென் (Keshav Chandra Sen) என்பவரைத் தம்

கொள்கைகளை ஏற்றுக்கொள்ளும்படி செய்தனர். கேசவ சந்திரரின் ஆர்வமிகுந்த பத்தி, உணர்ச்சிப் பெருக்குடைய உற்சாகம், வியக்கத் தகுந்த சொல்வன்மை ஆகியவை, இவ் வியக்கத்தை மக்களிடையே பரவச்செய்து, இதன் அங்கத்தினர்களை அதிகரிக்கச் செய்தது. அதே சமயம், அவர் இதனுடைய அறிவு முதற்கொள்கைகளை (Rationalistic Principles) தீவிரப்படுத்தி, புதிய பிரம்ம இயக்கம் (New Brahmaism) என்பதை உண்டாக்கினார். செய்த தவற்றுக்கு உண்மையாக வருத்தப்படும் மனப்பான்மை, உண்மையான கடவுள் வணக்கம் ஆகியவைகளைத் தோற்றுவித்து, புதிய திருச்சபையின் கொள்கைகளுக்கு ஆற்றலுள்ள உணர்ச்சியையும், பத்தியுள்ள ஆர்வத்தையும் அவர் புகுத்தினார். கேசவ சந்திரரைப் பின்பற்றியவர்களிடத்தில் ஒரு புதிய சேவை உணர்ச்சி காணப்பட்டது. அவர்களுள் சிலர் மதச் சார்பற்ற காரியங்களைக் கைவிட்டு, புதிய நல்லுபதேசத்தை வங்காளம் முழுவதிலும் பரப்புவதற்குத் தம்முடைய முழு நேரத்தையும் பயன்படுத்தினர். கேசவசந்திரர் தம் கொள்கைகளைப் பரப்புவதற்காக, பம்பாய்க்கும் சென்னைக்கும் சென்றார்.

குறிப்பிடத்தக்க விளைவுகள் இச்செயல்களால் ஏற்பட்டன. 1865ஆம் ஆண்டு முடிவதற்கு முன்பே, வங்காளத்தில் ஐம்பதும், வடமேற்கு மாகாணத்தில் இரண்டும் பஞ்சாபிலும் சென்னையிலும் ஒவ்வொன்றும், ஆக மொத்தம் ஐம்பத்துநான்கு சமாஜங்கள் (Samajas), உள்ளூர்க்கிளைகள் ஏற்பட்டன.

முதலில் கேசவசந்திரருடைய சேவைகளைத் தேவேந்திரநாதர் பெரிதும் புகழ்ந்தார்; மூத்த அங்கத்தினர்களின் விருப்பங்களுக்கு மாறாக, கேசவசந்திரரைச் திருச்சபையின் மதகுருவாகவும், சமாஜத்தின் காரியதரிசியாராகவும் அவர் நியமித்தார். ஆனால், கேசவசந்திரரும் அவரது கட்சியும் கொண்டிருந்த முன்னேற்றக் கருத்துகளைப் பெருமை பொருந்திய தலைவர் வெறுத்தார். கலப்புத் திருமணம் விதவைத் திருமணம் ஆகியவைகளை ஆதரித்து, வெளிப்படையாக அவற்றைக் கொண்டாடினர். பூணூலை அணிந்திருக்கும் அந்தணர்கள் சமய போதனைக்குரிய பீடத்திலிருந்து பேசுவதற்கு அனுமதிக்கக்கூடாது எனவும், அவர்கள் வற்புறுத்தினார்கள். ராஜாராம் மோகன்ராய் அவர்கள் ஏற்படுத்திய பழைய இந்துக்களின் வழியிலிருந்து மாறுபட்டுச் செல்வ

தற்குச் சமாஜத்தை அனுமதிக்காமல், சமாஜத்தின் ஒரே பொறுப்பாளர் என்ற நிலைமையைக் கொண்டு, நம்பிக்கையும் பொறுப்பும் உள்ள நிறுவனங்கள் பதவிகள் ஆகியவற்றி லிருந்து கேசவசந்திரரையும் அவரைப் பின்பற்றியவர் களையும், தேவேந்திரநாதர் விலக்கினர். கேசவசந்திரர் இந்த அறைகூவலை ஏற்று ஒரு தனியான நிறுவனத்தை உண்டாக்கி, உள்ளூரிலிருந்த பெரும்பான்மையான கிளைகளையும் அதனுடன் இணைத்தார். இவ்விதம் 1865ஆம் ஆண்டில் பிரம்ம சமாஜத் தார்கள், பழைமை விரும்பிகள் என்றும், முற்போக்காளர்கள் என்றும் இரு பிரிவினர்களாய்ப் பிரிந்தார்கள். முன்னவர்கள், ஒரே கடவுளிடம் நம்பிக்கைவைத்து, உருவ வழிபாட்டைக் கைவிட்டார்கள்; ஆனால், இந்து சமுதாயத்தினிடம் கொண்டிருந்த மற்ற எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக் கொள்ள விரும்பவில்லை; பின்னவர்கள், பொது மக்களிடம் இந்து சமுதாயம் மிகக் குறுகிய நோக்குக் கொண்டிருக்கிறது என நினைத்து, சம்ஸ்கிருத நூல்களை உபயோகப்படுத்து வதையும், அந்த மதத்திற்குச் சின்னமாய் இருக்கிற சமுதாயக் கொள்கைகளின் சடங்குகளையும் கண்டு எள்ளி நகையாடினர்கள்.

இப்பெரிய சமய பிளவுக்குப் பின், '**ஆதி பிரம்ம சமாஜ்**' என்கிற தேவேந்திர நாதரின் நிறுவனம், இந்து மதத்தின் சிறந்த ஒரே கடவுட்கொள்கையைப் பின்பற்றி, சமுதாயச் சீர்த்திருத்தங்களையும் எவ்விதமான மதப் பிரசாரத்தையும் எதிர்த்தது. ஆனால், அது சீக்கிரத்திலேயே மறைந்துவிட்டது. ராஜாராம் மோகன்ராய் என்பவரால் உண்டாக்கப்பட்ட சமயச் சீர்திருத்தக் காலப் பகுதி முடிவடைந்து, ஒரு புரட்சி ஆரம்பமாகிக் கொண்டிருந்தது.

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட 'இந்தியாவின் பிரம்ம சமாஜம்' கேசவ சந்திர சென்னின் கண்காணிப்பின்கீழ் வெற்றிகரமாய் நடந்து வந்தது. வங்காளத்திற்குள்ளும், அதன் எல்லைக்கு வெளியில் வெகுதூரம் வரையிலும் மிஷனரிகள் செய்த ஆற்றல் வாய்ந்த சேவைகளால் தலத் திருச்சபைகளின் எண்ணிக்கை பெருகிற்று. பெண்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொண்டதும், சமுதாயச் சீர்திருத்தங்களில் மிதமான கொள்கைகளும், புத்துணர்ச்சி பெற்ற இப்புதிய சங்கத்தின் புதிய கூறுகளாய் அமைந்தன. இதனுடைய முயற்சிகள் காரணமாகவே 1872ஆம் ஆண்டின் 111ஆம் சட்டத்தை அரசாங்கம் நிறைவேற்றியது. இந்து மதம்,

இஸ்லாம் போன்ற அங்கீகரிக்கப்பட்ட மதங்களை ஒப்புக் கொள்ளாதவர்களுக்கு, விதவைகளின் மறுமணம், கலப்புத் திருமணம் செய்தல் ஆகியவற்றை இச்சட்டம் வழங்கியது. மற்றும், இச்சட்டம், பெண்கள் குழந்தையாய் இருக்கும் போது செய்கின்ற மணத்தையும், பலதார மணத்தையும் நீக்கியது. பிரசாரம் செய்வதற்கு வைணவர்கள் பின்பற்றிய சங்கீர்த்தனம் (Samkirtan) முறையை, இச்சங்கம் பின் பற்றியது, மற்ருெரு முக்கியக் கூறுகும். முதலில் இயேசு கிறிஸ்து, கேசவ சந்திரருக்குக் குருவாயும், உணர்ச்சியைத் தூண்டுபவராயும் இருந்தார். இப்பொழுது அவருக்குச் சைதன்னியர் குருவாய் இருக்கிருர். இவ்விரண்டு நதிகளும் ஒன்ருய்க் கலந்தன. இதனுல், குறிப்பிடத் தகுந்த புதிய பலன்கள் உண்டாயின. பக்தி (பற்று) உணர்ச்சி, அதைப் பின்பற்றுபவர்களிடத்தில் ஏற்பட்டு, அவர்கள் வைணவர் களைப் போல, ஒருவருடைய காலில் மற்ருெருவர் சாஷ்டாங்க மாய் விழுந்து கும்பிட்டார்கள். முக்கியமாக, கேசவ சந்திர ருடைய பாதத்தில் அனைவரும் விழுந்து வணங்கினர். தலைவ ரிடத்தில் பக்தி பெருகியது. சிலர் அவரைத் தீர்க்கதரிசியார் என்றும், கடவுளின் அவதாரம் என்றும் கருதினர்.

'மனிதனைத் தொழுகிற' பழக்கத்தினுல் பிரம்ம திருச் சபையில் புதிய கருத்து வேறுபாடு தோன்றியது. முற்போக் காளர்களும், பகுத்தறிவுவாதிகளும், சில புதுமையான முறைகளைக் கடுமையாக எதிர்த்தார்கள். திருச்சபையைப் பரிபாலனம் செய்ய நிச்சயமான அடிப்படைச் சட்டங்களை ஏற்படுத்த வேண்டுமென்று அவர்கள் கோரினுர்கள். சீக்கிரத் திலேயே ஏற்பட்ட வேறு சில கொள்கைகளாலும், இரண்டு பகுதிகளுக்கும் இடையே இருந்த வேற்றுமை அதிகமாகியது. பெண் கல்வியைப்பற்றியும், பெண் விடுதலையைப்பற்றியும் மிதமான கொள்கைகளைக் கேசவசந்திரர் கொண்டிருந்தார். முற்போக்காளர்கள் செய்ய விரும்பிய சீர்திருத்தத்தை அவர் ஏற்கவில்லை. உயர்ந்த பல்கலைக் கழகப் படிப்புப் பெண் களுக்குத் தகுந்தது அன்றென்றும், ஆடவர்களும் பெண்டிரும் கட்டுத்திட்டமின்றி உறவாடுவதும் பர்தா (Purdah) முறையை முழுவதும் ஒழிக்கும் முறையும் சமுதாயத்திற்குப் பெரிய அபாயத்தை உண்டாக்குமென்றும் அவர் எண்ணினுர். முன் னேற்றமான பகுதி, அதன் தலைவர் கொண்டிருந்த இம்மாறு பாடான கருத்துகளைக் குறித்து மிகுந்த மனக்கிளர்ச்சியை அடைந்தது. 1878ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில், கூச் பீஹாரில் (Cooch Bihar) இருந்த இந்து மகாராஜாவுக்குப்

பதினன்கு வயதான தம் மகளைக் கேசவசந்திரர் மணம் செய்ததால், இப்பிரம்ம திருச்சபையில், இரண்டாவது சமயப் பிளவு ஏற்பட்டது.

மாறுபட்ட கருத்துள்ளவர்கள், 1874ஆம் ஆண்டு, மே மாதம், 15ஆம் தேதி பிரிந்து சென்று, சாதாரண பிரம்ம சமாஜ் (Sadharan Brahma Samaj) என்கிற வேறெரு நிறுவனத்தைத் தொடங்கினர்கள். இக்கட்சியின் ஆற்றலைப் பிற்கால நிகழ்ச்சிகள் காட்டின. கேசவசந்திரரின் திருச்சபையும், தேவேந்திரநாதரின் திருச்சபையின் கதியையே அடைந்து, மறைந்துவிட்டது. பிரம்ம இயக்கத்தின் உணர்ச்சி, சாதாரண பிரம்ம சமாஜ் என்கிற நிறுவனத்தின் மூலந்தான் வெளிப் பட்டது. இச்சமாஜத்தில் மாநிலத்தின் எல்லாச் சமாஜங் களும் இணைக்கப்பட்டன.

புதிய சமாஜம், சட்டபூர்வமான வழிகளையே பின்பற்றி, முன்னேற்றமான முறையில், சமுதாயச் சீர்திருத்தங்களை உண்டாக்க விரும்பியது. பர்தா முறையை ஒழித்தும், விதவை மறுமணத்தை உண்டாக்கியும், பலதார மணம், இளம் பருவ மணம் ஆகியவைகளை நீக்கியும், உயர்தரக் கல்விக்கு உதவியும், சமுதாயத்தில் பெண்களுக்கிருந்த நிலைமையில் முக்கிய மாறுதலை ஏற்படுத்தியது. இந்து சமுதாயம் இக்கருத்துகளை ஏற்றுக்கொண்டது என்பதைக் காண ஆச்சரியமாய் இருக் கிறது! சாதியின் கடுமையைப் போக்கியதால், படிப்படி யாக ஒப்புக்கொண்டிருக்கிற ஒரு சீர்திருத்தத்தை அது இந்து சமுதாயத்திற்கு அளித்தது. விதவைகளின் மறுமணத்தையும் இந்துக்களுக்கு இடையே பலசாதித் திருமணங்களையும் ஆதரித்துச் சட்டங்கள் இயற்றப்பட்டன என்கிற உண்மை, பிரம்ம இயக்கம் இந்து சமுதாயத்தில் ஏற்படுத்திய மாறு தலையே காட்டுகிறது. அமைதியும் உறுதியுமான முறையில் பல பின் விளைவுகளைக்கொண்ட மாற்றங்களை இந்து சமுதாயக் கருத்துகளில் பிரம்ம சமாஜத்தின் மறைமுகமான செல்வாக்கு உண்டாக்கியது; உண்டாக்கிக்கொண்டும் இருக் கிறது. பொது நிகழ்ச்சிகளில், சிலசமயங்களில் சமுதாய நிகழ்ச்சிகளில், மாறுபட்ட சாதிகள் ஒன்று சேர்ந்து உண் பதும், சாதியை இழக்காமல் கடலுக்கு அப்பால் இருக்கும் அயல் நாடுகளுக்குப் பிரயாணம் செய்வதும் இதற்கு உதாரண மாகக் கூறலாம். ஒரே கடவுட்கோட்பாடு, உருவ வழிபாட்டை நீக்குதல் ஆகியவைகளிலேதான், குறிப்பிடத்தக்க விதத்தில் உள்ள மாறுதல்களை அதனல் இந்து சமுதாயத்தில் புகுத்த

இயலவில்லை என்பதைக் காண வியப்பாய் இருக்கிறது! ஏனெனில், இதையே முதல் கொள்கையாகவும் அடிப்படைக் கொள்கையாகவும் வைத்துப் புதிய இயக்கம் ஆரம்பிக்கப் பட்டது.

## (ஆ) பிரார்த்தனை சமாஜம்

பிரம்ம சமாஜ இயக்கம் படிப்படியாக வங்காளத்திற்கு வெளியிலும் பரவியது; ஆனால், மகாராஷ்டிரத்திலேதான் நன்றாக வேரூன்றியது; அவ்விடத்தில், பிரார்த்தனை சமாஜம் (Prarthana Samaj) உண்டாவதற்குக் காரணமாயும் இருந்தது. பிரம்ம சமாஜத்தைப் போன்று, பகுத்தறிவுடன் ஒரே கடவுளைத் தொழுவது, சமுதாயச் சீர்திருத்தம் ஆகியவைகளே அதனுடைய நோக்கங்களாகும். வங்காளிகளில் உணர்ச்சி வசப்பட்டவர்கள், மராட்டியர்களில் நடைமுறைக்குகந்த ஊக்கமுள்ள பொது அறிவு உடையவர்கள் இவர்களுக் கிடையே இருந்த வேறுபாடுகள் ஒரே மாதிரியான நிலைமையில் எழுந்த இரண்டு நிறுவனங்களில் தெளிவாகத் தெரிகின்றன.

பரமஹம்ஸ சபா (Paramahamsa Sabha) என்கிற நிறு வனத்தின் அடிப்படையுடன், 1849ஆம் ஆண்டிலேயே, பிரம்ம சமாஜத்தின் செல்வாக்கு, மகாராஷ்டிரத்தில் பரவத் தொடங் கியது. ஆனால், இவ்வியக்கம் நெடுங்காலம் வரையில் நீடிக்கவும் இல்லை; சிறப்புப் பெறவுமில்லை. 1867ஆம் ஆண்டிலேதான், கேசவசந்திர சென்னே பிரார்த்தனை சமாஜ் உண்டாவதற்கு உற்சாகமான முறையில் வழிகாட்டி உதவினர். பெயரிலுள்ள வேறுபாடு, வேண்டுமென்றே செய்யப்பட்டது. ஏனெனில், வங்காளத்திலுள்ள பிரம்ம சமாஜத்தைப் பின் பற்றுகிறவர்களைப்போல அல்லாமல், பிரார்த்தனை சமாஜத்தைப் பின்பற்றுகிறவர்கள், 'பொதுவாய் இருக்கும் இந்து சமயத்திற்கு அப்பாற்பட்ட ஒரு புதிய சமயக் கூட்டத்தைப் பின்பற்றுகிறவர்கள் என்று நினைக்காமல், அதற்குள்ளேயே இருக்கும் ஓர் இயக்கம் என நினைத் தார்கள்.' அவர்கள் பக்தியுடன் கடவுட்கொள்கையை நம்புகிறவர்கள்; நாமதேவர் (Namadev), துக்காராம் (Tukaram), இராமதாஸ் (Ramdas) போன்ற மராட்டிய மகான்களின் பெரிய சமய மரபைப் பின்பற்றுகிறவர்கள். சமய விசாரணையில் ஈடுபடாமல் பல சாதியினரும் சேர்ந்து உண்ணல், பல சாதிகளுக்கிடையே மணம் செய்தல்,

விதவைகளுக்கு மறுமணம் செய்வித்தல், பெண்களின் துன்பத்தையும் தாழ்த்தப்பட்ட மக்களின் துன்பத்தையும் போக்குதல் போன்ற சமுதாயச் சீர்திருத்தங்களில் தங்களுடைய முக்கியக் கவனத்தைச் செலுத்தினர்கள். பெற்ரேர்களால் கைவிடப்பட்ட குழந்தைகளின் புகலிடம் (Foundling Asylum), அநாதைகளின் நிலையம் (Orphanage) என்பவைகளை அவர்கள் பண்டரிபுரத்தில் ஏற்படுத்தினர்கள்; இரவுப்பள்ளிகள், கைம்பெண்களின் நிலையம், தாழ்த்தப்பட்ட மக்களின் சமயக்குழு ஆகியவைகளைப் போன்ற உபயோகமுள்ள மற்ற நிறுவனங்களையும் அவர்கள் ஏற்படுத்தினர்கள். மேற்கிந்தியாவில் சமுதாயச் சீர்திருத்தம் உண்டாவதற்குப் பிரார்த்தனை சமாஜம் நடுநாயகமாய் விளங்கியது. அதன் வெற்றிக்கு முக்கியமான காரணராய் இருந்தவர், **மகாதேவ கோவிந்த ரானடே** என்னும் நீதிபதியே (Justice Mahadev Govinda Ranade) ஆவர். ஆண்ட்ரூஸ் (C. F. Andrews) குறிப்பிட்டபடி, 'இறுதியானதும், பல வழிகளில் நீடித்து நிற்கிறதுமான புதிய சீர்திருத்தத்தின் நோக்கம் இந்தியாவில் பம்பாய் மாகாணத்திலேதான் தொடங்கியது. அவ்வியக்கம் நீதிபதி ரானடேயின் பெயருடன் மிக நெருக்கமாக இணைக்கப் பட்டிருக்கிறது.' பிரார்த்தனை சமாஜத்தின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக, அவர் தம் வாழ்நாளையே அர்ப்பணித்தார். 1861-ல் ஏற்பட்ட விதவைத் திருமணச் சங்கத்தை (Widow Marriage Association) தோற்றுவித்தவர்களுள் அவரும் ஒருவர்; அவரது ஊக்கத்தினலேதான், பிரபலத் **தக்காணக் கல்விச் சங்கம்** (Deccan Education Society) தொடங்கப்பட்டது. இந்தியத் தேசியக் காங்கிரஸின் அடிப்படையில் அவரது செல்வாக்குத் தெரிகிறது. காங்கிரஸின் ஆண்டுக் கூட்டத்துடன், சமுதாய மாநாட்டையும் கூட்டும் பழக்கத்தை அவர் ஆரம்பித்து வைத்தார்.

இரண்டு முக்கியக் கொள்கைகளை நீதிபதி ரானடே தெளிவாக விளக்கினதற்காக, நாம் அவருக்குக் கடமைப் பட்டிருக்கின்ரேம். முதலில், 'சீர்திருத்தவாதி நிறை மனிதனுக்குத் தேவையான சீர்திருத்தங்களை உண்டாக்குவதற்கு முயல வேண்டும்; ஒருபக்கத்தில் மட்டும் சீர்திருத்தம் செய்யக்கூடாது,' என்கிற உண்மையை அவர் வலியுறுத்தினர். 'எவ்விதம் கடவுளை விரும்பும் கொள்கையிலிருந்து மனிதனை விரும்பும் கொள்கையைப் பிரிக்க முடியாதோ, அவ்விதமே, சமுதாயச் சீர்திருத்தத்திலிருந்து சமயத்தைப் பிரிக்க முடியாது,' என்ற கொள்கையை ரானடே கொண்டிருந்தார்.

அதனால், அவருடைய சீர்திருத்த நோக்கம் பலவற்றைத் தழுவியிருந்தது. அவர், 'குறைந்த அளவில் அரசியல் உரிமை இருக்கையில், ஒரு நல்ல சமுதாய முறையை நீ அடைய முடியாது; சமுதாய முறை, பகுத்தறிவு, நியாயம் ஆகியவை அடிப்படையாகக் கொண்டிருந்தால்தான், அரசியல் உரிமையை உபயோகிப்பதற்குத் தகுதி ஏற்படும்; உன் சமுதாய அமைப்புக் குறைபாடு உள்ளதாய் இருந்தால், ஒரு நல்ல பொருளாதார அமைப்பை நீ பெற முடியாது. உன் சமயக்கொள்கைகள், தாழ்ந்து இழிவு உண்டாகும் வகையில் இருந்தால், சமுதாய, பொருளாதார, அரசியற் சூழ்நிலைகளில் நீ வெற்றி பெற முடியாது. இவை ஒன்றை ஒன்று சார்ந்திருப்பவை. இது தற்செயலாக ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியன்று; நமது இயற்கையின் சட்டமாகும்,' என்று கூறினர்.

'இந்தியாவில் இருக்கும் சமுதாயம் என்கிற உடல், வளர்ச்சியைக் காட்டுகிறது; இவ்வுண்மையை ஒதுக்கி வைக்கவும் முடியாது,' என்பதுதான் ரானடே அளித்த இரண்டாவது பெரிய கொள்கை. 'பழமையுடன் இருக்கும் உறவை அறுத்துக்கொள்வதற்கு ஒரு வீரச் சபதம் செய்து கொள்வதும், தன் பகுத்தறிவு எது நியாயமானது, பொருத்தமானது எனச் சொல்லுகிறதோ, அதைச் செய்வதுமே ஒரு சீர்திருத்தவாதி செய்யக்கூடிய வேலையென நம்முள் சிலர் நினைக்கின்றனர். இவ்விதம் நோக்குவதால், நெடுங்காலமாய் இருந்து வரும் பழக்கங்களின் ஆற்றலையும் நெகிழ்வையும், இவர்கள் அலட்சியம் செய்கிறார்கள். உண்மையான சீர்திருத்தவாதி எதையும், புதிதாக ஆரம்பிக்க வேண்டுவதில்லை; முன்பு இருந்தவர்கள் விட்டுச்சென்ற பூர்த்தியடையாத வேலையை முடிப்பதுதான், பெரும்பாலும் இவனுக்கிருக்கும் வேலை,' என்பதைத் துணிந்து சொன்னதால், இப்பொருளைப் பற்றி ரானடே அவர்கள் நன்றாக உணர்ந்திருந்தார் என்பது தெரிகிறது.

இந்தியச் சீர்திருத்தவாதிகளுள் சிலரது தீவிரமான ஆவலுக்கு ரானடேயின் எண்ணங்கள் தக்கசமயத்தில் அளிக்கப்பட்ட எச்சரிக்கையாகும். இந்தியச் சீர்திருத்தவாதிகள், தங்களுடைய கொள்கைகளைப் புதிய முறையில் அமைப்பதற்கு இது மிகவும் உதவியது. ரானடேயைப் பற்றிச் சுருக்கமாகக் கூறியதை, ஆண்டுரூஸ் அவருக்குச் சூட்டிய புகழ்மாலையைக் கொண்டு முடிக்கலாம். முன்பு குறிப்பிட்ட சீர்திருத்தவாதிகளுள் ரானடேயின் பெருநோக்கு-

பெருந்தன்மைக் குணங்களை ராஜாராம் மோகன்ராய், சர் சையது அஹமது கான் (Sir Syad Ahmad Khan) இவ்விருவர்தம் குணங்களோடு ஒப்பிடலாம். ஆக்கச் சார்பான நோக்கம், மேனாட்டு நாகரிகத்தின் கொள்கைகளைப் புரிந்து கொள்ளுதல், அவற்றை இந்திய நிலைமைக்கு ஏற்ற வகையில் பயன்படுத்துதல் ஆகியவற்றில், ரானடே, அவ்விருவரையும்விட, முற்போக்கெண்ணம் கொண்டிருந்தார்.

மேற்கு நாடுகளிலிருந்து பெறப்பட்ட நோக்கங்களின் பயனாகவே பிரம்ம சமாஜமும், பிரார்த்தனை சமாஜமும் தோன்றின. மேனாடுகளின் பகுத்தறிவை இந்தியர்கள் ஏற்றுக்கொண்டார்கள் என்பதையே இது தெரிவிக்கிறது. மற்றும் இரண்டு சீர்திருத்த இயக்கங்கள் இவைகளிலிருந்து குணத்தில் மாறுபட்டிருந்தன; இந்தியாவின் பண்டைக் காலத்திலிருந்து அவை உணர்ச்சியைப் பெற்றன; அதனுடைய தொன்மையான புனித நூல்களிலிருந்து, தங்களுடைய அடிப்படைக் கொள்கைகளை அவை பெற்றன.

## (இ) ஆரிய சமாஜம்

முதலில், ஆரிய சமாஜம் (Arya Samaj), **சுவாமி தயானந்த சரவஸ்தி** (Swami Dayananda Saraswati, 1824–1883) என்பவரால் ஏற்படுத்தப்பட்டது. அவர், நடமாடும் சம்ஸ்கிருதப் பல்கலைக் கழகமாய் இருந்தும், ஆங்கிலக் கல்வியைப் பயின்றாரில்லை. 'வேதகாலத்திற்குத் திரும்புங்கள்,' என்பது தான் அவருடைய பொன்மொழி. அவர் வேதங்களுக்குப் பிறகு சமுதாயத்தில் ஏற்பட்ட பழக்கங்களைக் களைந்தெறிந்து, வேதத்தில் கூறப்பட்டபடி, சமுதாயத்தைத் திருத்தி அமைக்க விரும்பினார். பிற்காலத்தில் எழுந்த புராணங்கள் போன்ற புனிதநூல்களை ஏற்க மறுத்ததுடன், அவை தன்னலம் கருதும் அறியாமை மிகுந்த மனிதர்களால் செய்யப்பட்டவை என்று அறிவிக்கவும் அவர் தயங்கவில்லை. அவருடைய அடிப் படையான குறிக்கோள் ராஜாராம் மோகன்ராய் கொண்டிருந்த குறிக்கோளைப் போன்றதுதான். ஆனால், அவ் விருவருடைய பரந்த நோக்கங்கள் பெரிதளவில் மாறு பட்டிருந்தன. ராஜாவைப்போன்றே தயானந்தரும், ஒரே கடவுளிடம் நம்பிக்கை வைத்து, பல கடவுள் நம்பிக்கை, உருவ வழிபாடு ஆகியவைகளை எதிர்த்தார். அதைத் தவிர, சாதிக்கட்டுப்பாடுகள், இளம்பருவத் திருமணம், கடற்பிரயாணத்தைத் தடுத்தல் போன்றவைகளை அவர் எதிர்த்து, பெண்

கல்வி, விதவைத் திருமணம் ஆகியவைகளை ஆதரித்தார். 'சுத்தி இயக்கத்தை' (Sudhi Movement)—இந்துக்கள் அல்லாதவர்களை இந்து மதத்தில் சேர்க்கும் இயக்கத்தை—அவர் ஆரம்பித்தார். அதிலிருந்து, இந்து சீர்திருத்த இயக்கத்திற்கு அது ஒரு முக்கியக் கூறாய் விளங்கியது. 'தேசிய, சமுதாய, சமய முறைகளில் இந்தியாவை ஒன்றுபடுத்தும் நோக்கத்தைப்' பெறுவதற்காகவே, 'சுத்தி இயக்கம்' ஆரம்பிக்கப்பட்டது. ராஜாராம் மோகன்ராயைப் போல தயானந்தரும், தம்முடைய நோக்கங்களை அச்சிடப்பட்ட நூல்கள் வாயிலாக வெளிப்படுத்தினர். 'சத்தியார்த்த பிரகாஸ்' (Satyartha Prakas) என்ற நூல், அவருடைய நூல்களுள் மிகச் சிறந்தது. இந்நூல், அவருடைய கொள்கைகளை விளக்கி, அவற்றை அடிப்படைக் கொள்கையாக (Sui Generis) அமைத்தது. ராஜாராம் மோகன்ராயைப் போல அல்லாமல், அறிவில் சிறந்தவர்களுக்கு உபதேசிப்பதுடன், பொதுமக்களுக்கும் நேரிடையாகத் தயானந்தர் உபதேசித்தார். இதன் பயனாக, அவரைப் பின்பற்றுகிறவர்களின் எண்ணிக்கை அதிகமாகி, முக்கியமாகப் பஞ்சாபிலும், ஐக்கிய மாகாணத்திலும் (United Province) அவருடைய உபதேசங்கள் நன்கு வேரூன்றின.

ராஜாராம் மோகனருடைய அடிப்படைக்கொள்கையைத் தயானந்தர் பின்பற்றினாலும், முன்னவரிடமிருந்த திறனாய்வு நோக்கம் இவரிடம் இல்லை. 'புதிய காலத்தில் உண்டானது என நினைக்கப்பட்ட எவ்விதமான விஞ்ஞானக் கோட்பாடு அல்லது கொள்கையும், வேதத்திலேயே இருப்பதை நிரூபிக்கலாம்,' என்கிற உறுதியை அவர் கொண்டிருந்தார். தயானந்தரால் விளக்கப்பட்ட வேதத்தில், எல்லா உண்மைகளும் அடங்கியிருக்கின்றன என்கிற பொதுக்கருத்தையே முடிவான ஆராய்ச்சி நமக்குத் தெரிவிக்கின்றது. தயானந்தரால் அளிக்கப்பட்ட விளக்கம், பல காலமாய் இந்து மதத்திற்கு அளிக்கப்பட்ட விளக்கத்திலிருந்தும், மேல் நாட்டவர் புதிய காலத்தில் தரும் விளக்கத்திலிருந்தும் மாறுபட்டிருந்தது. இப்படிப்பட்ட எல்லை வரம்புக்குள் அவர் இருந்தாலும், இந்து சமுதாயத்தில், ஆற்றலுடன் கூடிய ஒரு பெருஞ் சக்தியாய்த் தயானந்தர் திகழ்ந்தார். அவர் பொதுமக்களுக்கு விடுத்த வேண்டுகோள், மிக வெற்றிகரமாகப் பின்பற்றப்பட்டது. சமுதாயம், சமயம், அரசியல் ஆகிய எல்லாச் சீர்திருத்தவாதிகளுக்கும் அது தெளிவு தரக் கூடியதாய் இருந்தது. அவரும் அவருடைய சீடர்களும் செய்த சமுதாயக் கல்விப்பணிகள்,

உறுதியான பயனைக் கொடுத்தன. அவர் மறைந்த பிறகு, லாலா ஹன்ஸ்ராஜ் (Lala Hansraj), பண்டிட் குரு தத்தர் (Pandit Guru Dutt), லாலா லஜபதி ராய் (Lala Lajpat Rai), சுவாமி சிரத்தானந்தர் (Swami Sraddhananda) போன்ற முக்கியச் சீடர்கள், அவருடைய பணிகளைத் தொடர்ந்து நடத்தினார்கள்.

இக்காலப் பகுத்தறிவிலிருந்து ஆரிய சமாஜம் தப்ப இயலவில்லை. ஆங்கிலக் கல்வியின் முக்கியத்துவம், மிகவும் தாராளமான ஒரு திட்டம் உண்டாக்குதல் ஆகியவற்றை ஒப்புக்கொள்ளும் ஒரு பகுதி அதனிடையே வளர்ந்து வந்தது. அவர்களுள் லாலா ஹன்ஸ்ராஜை முக்கியமாகக் குறிப்பிட லாம். அதற்கு ஒரு சின்னமாகத் தயானந்தர் ஆங்கில-வேதக் கல்லூரியை (Dayananda Anglo-Vedic College) அவர் இலாகூரில் உண்டாக்கினார். இதற்கு எதிராக, 1902-ல் ஹரித் துவாரத்தில் உண்டாக்கப்பட்ட மிகப் பிரபலமான குருகுலத்தைக் குறிப்பிடலாம். வேதத்தின் குறிக்கோளை மறுபடியும் புதிய கால வாழ்க்கையில் உண்டாக்குவதற்கு அக்குருகுலம் முயன்றது.

பிரம்ம சமாஜத்துடன் ஓர் உடன்பாடு செய்துகொள் வதற்காக, தயானந்தர் ஆரம்பத்தில் முயன்றார் என்பதையும், அதற்காக, 1869-ல் கல்கத்தாவில் ஒரு மாநாடு நடந்தது என்பதையும் இறுதியாகக் குறிப்பிட வேண்டும். இதன் பயனாக ஒன்றும் ஏற்படவில்லை. 1863-ல் இலாகூரில் ஏற்படுத் தப்பட்ட பிரம்ம சமாஜத்தையும், பஞ்சாபின் பிரம்ம சமாஜ இயக்கத்தையும், இறுதியில் ஆரிய சமாஜம் வெற்றிகொண்டு, தன்னுள் அடக்கியது.

## (ஈ) இராமகிருஷ்ண மிஷன் (சமயக் குழு)

பண்டைக்காலக் கிழக்கு நாடுகள், நவீன மேற்கு நாடுகள் ஆகிய இரு மாபெருஞ் சக்திகளின் இணைப்பாக இராம கிருஷ்ண மிஷன் விளங்குகிறது; சமய சமுதாய இயக்க மாகவும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் குறிப்பிடத்தக்க இயக்கமாகவும் இவ்வியக்கம் இருக்கிறது. இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் (Ramakrishna Paramahamsa, 1836–1886) பெய ரால், இம்மிஷன் வழங்கப்படுகிறது. இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் கல்கத்தாவின் அண்மையில் ஒரு கோயிலில் பூசாரி யாய் இருந்தார். கீழ்நாட்டுக் கல்வியையோ, மேனாட்டுக்

கல்வியையோ அவர் கற்கவில்லை; ஆனால், தனிமையான இடத்தில், தீவிரமான ஆன்மீக வாழ்க்கையை நடத்தினர். எல்லா சமயங்களிலும் இயற்கையாய் அமைந்திருக்கும் உண்மைகளில் அவர் ஆழ்ந்த நம்பிக்கையைக் கொண்டிருந் தார். இந்து சமயப் பிரிவுகள், இஸ்லாம், கிறித்துவமதம் ஆகியவைகளின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி, சமயச் சடங்குகளைச் செய்து, அந்தப் பரிசோதனைகளின் மூலம் தம் நம்பிக்கையை அவர் உறுதிப்படுத்திக்கொண்டார். அவரது பரந்த பொதுத்தன்மை, அனுபூதிநெறி (Mysticism) மதசம்பந்த மான பேரார்வம் ஆகியவைகளால், பெரும்பாலும் கல்கத்தா விலிருந்து வந்த சிறிய எண்ணிக்கையுள்ளவர்கள், அதில் மிக்க ஊக்கம் கொண்டார்கள். தனித்து இருந்த இடத்தில் ஒரு சமய பக்தராய் அவர் வாழ்ந்து மறைந்தார். அவரைப் பற்றி, ஒரு சிலருக்கு மட்டும் தெரியுமேயன்றி, மற்றவர் களுக்குத் தெரியாது. அவர்களுக்குத் தம் கொள்கைகளை எளிய வலிமை பொருந்திய பழமொழிகளின் மூலமாகவும், வியக்கத்தக்க நீதிக்கதைகளின் மூலமாகவும் அவர் விளக்கினர். அவர் மறைவதற்கு முன்பே, அவற்றுள் பெரும் பான்மையானவை சேகரிக்கப்பட்டு வெளியிடப்பட்டன. அவர் மறைவிற்குப் பின்பும், அவருடைய மற்றப்பணிகளைப் பற்றியும், அவருடைய கூற்றைப்பற்றியும் பல நூல்கள் வெளியிடப்பட்டன.

கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் பட்டதாரியும், பிற் காலத்தில் **சுவாமி விவேகானந்தர்** (1863–1902) எனப் புகழப் பட்டவருமான நரேந்திரநாத தத்தர் (Narendranath Dutta) என்பவரே, இராமகிருஷ்ணரின் சீடர்களுள் மிகவும் பிரபல மானவராயும், குருவின் அன்பிற்குப் பாத்திரரானவராயும் திகழ்ந்தார். அவரே, இராமகிருஷ்ணர் விடுத்த செய்தியை இந்தியா முழுவதிலும் பரப்பினர். அவரது கல்வி ஞானம், சொல் வன்மை, சமயப் பேரார்வம், வியக்கத்தகுந்த ஆளுமை ஆகியவைகளால் கவரப்பட்டு, பலர் அவரைப் பின்பற்றினர். அரசர்களும் சாதாரணக் குடியானவர்களும் அவர்களுள் இருந்தார்கள். அவர்களுடைய உதவியாலும், சொல்ல இயலாத இடுக்கண்களை அடைந்த பிறகும், அவர் மிகப் பிரபலமான ‘சமயங்களின் பாராளுமன்றத்தில்’ (Parliament of Religions) கலந்துகொண்டார். அது சிக்காகோ (Chicago) நகரத்தில் 1893-ல் நடந்தது. அதில் கலந்து கொண்ட உடனே அவரை எல்லாரும் போற்றிப் புகழ்ந்தனர். அப்பெருமை பொருந்திய கூட்டத்தில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகள்

அவருக்குப் புகழையும் நண்பர்களையும் தந்தன. அந்நாளி லிருந்து சுவாமி விவேகானந்தரால் விளக்கப்பட்ட இராம கிருஷ்ணரின் உபதேசம் ஓர் உலகச்சக்தியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் பல பாகங் களிலும், இராமகிருஷ்ண மிஷன்களும் மடங்களும் ஏற்படுத்தப் பட்டன. அவ்வெற்றி வீரர், இந்நாட்டிற்குத் திரும்பிய உடன், இந்தியா முழுவதிலும் அவருடைய மிஷன்களும், மடங்களும் ஏற்படுத்தப்பட்டன.

சமய சமுதாயச் சீர்திருத்தங்களை ஏற்படுத்துவதுதான், இராமகிருஷ்ண மிஷனின் முக்கியப் பணியாய் இருக்கிறது; ஆனால், அது பண்டைக்கால இந்தியக் கலாசாரத்திலிருந்து தனது உணர்ச்சியைப் பெறுகிறது. கலப்பற்ற வேதாந்தத் தத்துவத்தை அது தன் கொள்கையாகக் கொண்டிருக்கிறது; மனிதனிடத்தில் இயற்கையாய் இருக்கும் உயர்ந்த ஆன்மிக ஆற்றலை வளர்ப்பதை அது தன் நோக்கமாகக் கொண்டிருக் கிறது; ஆனால், பிற்காலத்தில், இந்து சமயத்தில் ஏற்பட்ட உருவங்களின் வழிபாடு போன்றவைகளின் முக்கியத் துவத்தையும் உபயோகத்தையும் அது ஒப்புக்கொள்கிறது. உயர்ந்த ஆன்மிக வாழ்க்கையுடன் காளி தேவியைத் தொழு வதையும், அதற்கும் மேலாக, உருவங்களின் வழிபாட்டை மனிதனிடம் இருக்கும் உயர்ந்த ஆன்மிகப் பேரார்வத்தை வளர்ப்பதற்கு ஒரு சிறந்த கருவியாக உபயோகிக்கலாம் என்பதையும், இராமகிருஷ்ணர் தம் வாழ்க்கையின் மூலம் விளக்கிக்காட்டினார். ஆனால், இக்கால இந்து சமயத்தி லிருக்கும் குறைபாடுகளை வெளிச்சடங்குகளை உண்மையான உயர்தத்துவங்களாகவும் சின்னங்களை உண்மையான கடவுளாகவும் நினைக்கிற தவறான எண்ணங்களை அவர் கண்டித்தார்.

இராமகிருஷ்ணரால் நடைமுறையில் விளக்கப்பட்ட அம்மிஷனின் மற்றொரு முக்கிய அமிசம், எல்லாச் சமயங் களிலும் இருக்கும் உண்மையை நம்புவதுதான். ‘மாறுபட்ட எல்லாச் சமயங்களின் கொள்கைகளும், ஒரே குறிக்கோளை அடைவதற்கான பலவழிகளே,’ என்பதுதான் அப்பெரிய தலைவரின் சிறந்த கொள்கை. உதாரணமாக, தண்ணீரைப் பல மொழிகள் பல விதமாகக் குறிப்பிட்டாலும், பொருள் ஒன்றாகவே இருப்பதைப்போல, நாம் வணங்கும் அதே உயர்ந்த கடவுளை, அல்லா, ஹரி, கிறிஸ்து, கிருஷ்ணர் என்னும் பல பெயர்களால் வழங்குகிறோம். அக்கடவுள் ஒன்றாகவும்,

பலவாகவும், உருவங்களுடனும், உருவங்கள் இல்லாமலும் இருக்கிருர் ; அவரைப் பிரபஞ்சம் முழுவதிலும் பரவியிருக்கிற ஒரு மாபெருங்கடவுளாகவும், பல சின்னங்களாக் கொண்டிருக்கிற கடவுளாகவும் கருதலாம்,' என அவர் கூறினர். எல்லா மதங்களுக்கும் பொதுவானதும், பரந்த நோக்குள்ளதுமான இக்கொள்கைக்கும், புதிய கால உலகத்தைப் பல பகைக் களங்களாகவும், சமயத்தை அன்பிற்கும் உடன் பிறந்தார் உணர்ச்சிக்கும் இடமாக்காமல் வெறுப்பிற்கும் ஒற்றுமையின்மைக்கும் உரிய சின்னமாகவும் கருதும் பல குறுகிய சமயக்கொள்கைகளுக்கும் இடையே மிகுந்த வேறுபாடு இருக்கிறது.

குறிப்பிடத்தக்க இவ்விரண்டு அமிசங்களேத் தவிர இந்தியாவிலும் இந்தியாவிற்கு வெளியிலும், இம்மிஷன் வெற்றியடைவதற்குப் பல காரணங்கள் இருந்தன. முதலாவதாக, வலியத் தலையிட்டு மதமாற்றம் செய்யும் ஆவல் இதற்கு இல்லை. பிரம்ம சமாஜத்தைப் போலவும் ஒரு தனியான மதப்பிரிவாய் இருக்கும் எண்ணமும் இதற்கு இல்லை. புனிதமான மடாலயமுறையைப் பின்பற்றி, பொது மக்களிடையே சீர்திருத்தக் கொள்கைகளேப் ப்ரப்பி, அதே சமயத்தில் சமுதாய சமயச் சூழ்நிலைகளிலிருந்து அதிக மாறுபாடு அடையாதவாறு செய்வதுதான் இதன் நோக்கமாய் இருந்தது. இரண்டாவதாக, இது; தனது திட்டத்தில் சமுதாயச் சேவையின் கொள்கைகளேயும் சேர்த்துக் கொண்டது; அவற்றைக் கொடைக் குணத்தினல் மட்டும் சேர்த்துக்கொள்ளவில்லை; சமய, ஆன்மிக வாழ்க்கைக்கு இன்றியமையாத நெறியாகவும் கருதியது. பல பள்ளிகளேயும், சிகிச்சை இல்லங்களேயும் இது உண்டாக்கி, மக்களுக்கு உதவியது; பஞ்சம், வெள்ளம் அல்லது மற்றக் கொடுமைகளுக்கு மக்கள் உள்ளானபோது, இது விருப்பத்துடன் தனது உதவியை அளித்தது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானல், இந்தியாவின் லட்சோப லட்சக் கணக்கான ஒடுக்கப்பட்ட மக்களே உயர்த்துவதுதான், இதன் முக்கியக் குறிக்கோளாயிருக்கிறது. விவேகானந்தரிடத்தில் நாட்டுப்பற்றுடைய மனக்கிளர்ச்சியும், ஆன்மிகப்பற்றுடைய மனக்கிளர்ச்சியும் ஒன்று சேர்ந்து, உலகநாடுகளுக்கிடையில் இந்தியா பெற்றிருந்த தகுந்த இடத்தை மறுபடியும் பெறும் நோக்கத்துடன், இந்தியாவின் வீரத்தை உயர்த்தும் ஒரு மேலான அவாவாய் இது மாறியது. இப்போது போரிட்டுக் கொண்டிருக்கும் உலகத்தை ஆன்மிக உபதேசங்களே காப்பாற்ற முடியும்

என்றும், அவற்றை இந்தியாதான் அளிக்கக்கூடியது என்றும், ஆனல் இவ்வித உபதேசத்தை இந்தியா அளிப்பதற்குமுன், மற்ற நாடுகள் மரியாதையளிக்கும் வகையில் தனது நிலையை இந்தியா உயர்த்திக்கொள்ள வேண்டுமென்றும் அவர் கூறியதாக நம்பினர். இவ்விதம் அவர் தேசிய நோக்கையும், சர்வ தேசிய நோக்கையும் பெற்றிருந்ததால், இந்திய அமெரிக்கப் பொது மக்கள் அவரை விரும்பினர்கள்.

இதைத்தவிர, இந்தியாவில் இருக்கும் இந்துக்கள், சுவாமி விவேகானந்தரைப் பயபக்தியுடன் கொண்டாடுவதற்குத் தனியான காரணங்களும் இருந்தன. இந்தியப் பண்பாடு, நாகரிகம் ஆகியவைகளின் உயர்வையும், இந்தியாவின் தொன்மைப் பெருமையையும் எதிர்காலத்தில் அது வைத்திருந்த நம்பிக்கையையும் புதிய காலத்தில் முதன்முறையாக உலகத்தின் முன் அவர் துணிவாக எடுத்துரைத்தார். ஐரோப்பியப் பண்பாடு, நாகரிகம் ஆகியவைகளை இந்தியர்கள் வருத்தம் தெரிவிக்கும் மனப்பான்மையோடும், கீழ்நிலை மனப்பான்மையோடும் நோக்கினர்கள். இதற்கு மாருக, ஒரு புதிய துணிவும், இயற்கையான ஆற்றலின் உணர்வும்; சுவாமி விவேகானந்தரின் பேச்சில் வெளிப்பட்டன. இவற்றுடன், நாட்டுப்பற்றுள்ள அவாவும் சேர்ந்து, இந்திய நாட்டு மறுமலர்ச்சியின் உயர்ந்த நோக்கங்களின் உருவமைப்பாக அவரைச் செய்தன. 'இந்தியாவின் பண்டைக்கால நாகரிகத்தையும், நாட்டுக்குரிய தகுதிகள் இந்தியாவிடம் உண்டு என்கிற உண்மையையும், தமது ஆளுமையால் வெளியிட்டு வெளிநாடுகளின் அங்கீகாரத்தைப் பெற்ற முதல் இந்தியர் அவரே,' என, சர் வேலன்டைன் சிரோல் (Sir Velentine Chirol) என்பவர் கூறுகிருர்.

## 2. தியசாபிகல் சங்கம்

தியசாபிகல் சங்கம், 'மர்மப்பெண்' பிளாவட்ஸ்கியாலும் (Madame H. P. Blavatsky), கர்னல் ஆல்காட்டு (Col. H.S. Olcott) என்பவராலும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் 1875-ல் ஏற்படுத்தப்பட்டது. 1879-ல் அவர்கள் இந்தியாவிற்கு வந்து, சென்னைக்கு அருகிலுள்ள அடையாறு என்னுமிடத்தில் தங்கள் தலைமையிடத்தை 1889-ல் சேர்ந்து, 1893-ல் ஏற்படுத்தினர்கள். தமது நாற்பத்தாரும் வயதில் இந்தியாவில் தங்கிவிட்ட அன்னிபெசன்டு அம்மையாராலேதான் (Mrs. Annie Besant) இவ்வியக்கத்திற்கு உண்மையான வெற்றி கிடைத்தது.

தியசாபிகல் சங்கம், ஆரம்பத்திலிருந்தே, இந்து மறு மலர்ச்சி இயக்கத்துடன் சேர்ந்துகொண்டது. இந்தியாவின் பண்டைக்கால நோக்கங்களையும் நிறுவனங்களையும் மறுபடியும் உண்டாக்கி, புத்துணர்ச்சியைக் கொடுப்பதன் மூலமாகத்தான், அதனுடைய இக்காலப் பிரச்சினைகளைத் தீர்க்க முடியும் என, பெசன்டு அம்மையார் உறுதியாக நம்பினார். அவரது சுய சரிதத்தில் (1893) அவர் பின்வருமாறு கூறுகிறார்: 'பண்டைய சமயங்களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டி ஆற்றல் அளித்து உயர்த்துவதுதான், இந்தியாவின் முதல் வேலையாகும். ஒரு புதிய சுயமரியாதையையும், பழமையில் பெருமையையும், எதிர்காலத்தில் ஒரு நம்பிக்கையையும், நாட்டுப்பற்றுள்ள வாழ்க்கை எனும் ஒரு மாபேரலையையும் இது உண்டாக்கியிருக்கிறது. இதன் பயனாகத் தேசத்தின் புனர் நிருமாணம் ஆரம்பமாகிறது.'

தமது நோக்கத்தை நிறைவேற்றும் முக்கிய சாதனமாக, அவர் மத்திய இந்துப்பள்ளியை (Central Hindu School) வாரணாசியில் ஆரம்பித்தார். அவருடைய பொருளையும் ஊக்கத்தையும் இதற்கு அவர் அளித்தார். இப்பள்ளி படிப் படியாய் ஒரு கல்லூரியாய் வளர்ந்து இறுதியில் 1915-ல் இந்து பல்கலைக் கழகமாய் மாறியது.

தியசாபிகல் சங்கம் இந்தியா முழுவதிலும் பல கிளைகளை நிறுவி, சமுதாய சமயச் சீர்திருத்தத்தில் முக்கியமாகத் தென்னிந்தியாவில் குறிப்பிடத்தக்க ஓர் அமிசமாய் விளங்கியது. பழமைக்குத் திரும்ப நினைக்கும் அதன் முயற்சிகள், பலரால் பிற்போக்கானவை எனக் கருதப்பட்ட வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் ஆதரித்தல், பரம இரகசியமான மறை, புனிதவாக்கு இவைகளால், பலரது பகையை அச்சங்கம் சம்பாதித்துக்கொண்டது. இவ்விதம் இல்லை என்றால், அவர்கள் எல்லாரும் இதைப் பின்பற்றி இருப்பார்கள். இந்திய வாழ்க்கையில் இதற்கு ஏற்பட்ட முக்கியத்துவம், பெசன்டு அம்மையாரின் ஆளுமையால் ஏற்பட்டதே ஒழிய, இவ்வியக்கத்திடம் இயற்கையில் அமைந்திருந்த ஆற்றலால் அன்று!

மேலே கூறப்பட்ட பொதுப்படையான இயக்கங்கள், இந்து சமுதாயத்தில் பெருமாறுதல்களை உண்டாக்கி, தனிப் பட்ட முறையிலும், ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்பு முறை யிலும், சமுதாயச் சீர்திருத்தம் உண்டாக்குவதற்கான

தூண்டுதலை வளர்த்தது. இந்த அத்தியாயத்தில் அவற்றைப் பற்றி விரிவாகக் கூறுதல் இயலாது. அதனால், அவற்றுள் முக்கியமானவற்றை மட்டும் இங்குப் பார்ப்போம். இந்த அத்தியாயத்திலும் பின் அத்தியாயத்திலும், இப்படிப்பட்ட இயக்கங்களின் பிரதிநிதிகளாகிய சிலவற்றைப் பார்ப்போம். தக்காணக் கல்விச் சங்கம் (The Deccan Education Society), ரானடே என்பவரின் தூண்டுதலால் 1884-ல் ஏற்படுத்தப் பட்டது. அப்பொழுது இருந்த கல்விமுறை நாட்டின் சேவைக்குப் பயன்படும் வகையில் இளைஞர்களை உண்டாக் காததால், அதைச் செய்யும் எண்ணத்துடன் இச்சங்கம் தொடங்கப்பட்டது. இச்சங்கத்தின் அங்கத்தினர்கள் பெயரளவில் (முதலில் 75 ரூபாய்) சம்பளத்தைப் பெற்று, குறைந்த அளவு இருபது ஆண்டுகளின் உழைப்பையளிக்க உறுதியளித்தனர். இதனால், அதிக அளவில் கட்டளைகள் (Endowments) இல்லாமலும், நன்கொடைகள் இல்லாமலும், மிகப்பிரபலமான பெர்கூசன் கல்லூரியைப் (Fergusson College) பூனாவிலும், வில்லிங்டன் கல்லூரியைச் (Willingdon College) சங்கிலி (Sangli) எனும் நகரத்திலும், இவற்றுக்கு உதவியாகப் பல ஆரம்பப்பள்ளிகளையும் நிறுவ முடிந்தது. 'இச்சங்கத்தின் ஆயுட்கால அங்கத்தினர்களுள் மிகப்பிரபல மான கோபாலகிருஷ்ண கோகலேயும் (Gopal Krishna Gokhale, 1866–1915) ஒருவர்.'

இந்தியப் பெண்களின் நிலையை உயர்த்தியவர்களுள், பண்டித ஈசுவர சந்திர வித்தியாசாகர் (Pandit Iswar Chandra Vidyasagar) என்பவரின் பெயரும், மலபாரி (Malabari) என்பவரின் பெயரும் குறிப்பிடத்தக்கன. பெண்கள் படும் துன்பத்தைக்கண்டு மனம் நொந்த அவர்கள், பெண்களின் வாழ்க்கையை உயர்த்துவதற்கு வாழ்நாள் முழுவதும் போரிட்டார்கள்; தளராத உழைப்பாலும், கடுமையான கிளர்ச்சியாலும், இந்திய விதவைகளின் மறுமணத்தை ஆதரிக்கும் சட்டத்தை இந்திய அரசாங்கம் செய்யுமாறு தூண்டி அதில் வெற்றி பெற்றார்கள். இதைப் போன்றே மலபாரியின் முயற்சிகளால், சம்மதத்தைக் கொடுக்கும் வயதுச்சட்டம் (Age of Consent Act. 1891) ஏற்பட்டது.

## 3. தேசிய விழிப்பு—இந்தியத் தேசியக் காங்கிரஸ்

தேசிய உணர்ச்சியின் வளர்ச்சியைப் புதிய இந்தியாவின் மிக முக்கிய நிகழ்ச்சியாகக் குறிப்பிடலாம். இந்தியத்

தேசியக் காங்கிரஸ் (The Indian National Congress), முஸ்லீம் லீக் (The Muslim League) போன்ற பல நிறுவனங்களை உண்டாக்கியது. இத்தேசிய விழிப்பு ஏற்படுவதற்குப் பல காரணங்கள் இருந்தன. இந்தியா முழுவதிலும் ஒற்றுமை, தங்களை ஆட்சி செய்வதற்கு மக்களுக்குள்ள உரிமை ஆகிய இவ்விரு அடிப்படையான கருத்துகள் காரணமாக அவ்விழிப்பு ஏற்பட்டது. எல்லாப் பெரிய தேசிய இயக்கங்களையும் போலவே, (பிரெஞ்சுப் புரட்சியைப்போல) இந்த அரசியல் மறுபிறப்பிற்கும், அறிஞர்களின் ஆதரவு இருந்தது. முன் அத்தியாயத்தில், இந்தியாவில் ஆங்கிலக் கல்வியின் வளர்ச்சியைப் பற்றிப் பார்த்தோம். பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஆங்கில அரசியலிலும், இலக்கியத்திலும் பரந்த மனப்பான்மை ஏற்பட்டது என்பதை அறிவுக் கண் கொண்டு உணரலாம். ஆங்கில இலக்கியத்தையும், ஐரோப்பிய வரலாற்றையும் கல்வியைப் பெற்ற இந்தியர்கள் படித்ததால் மக்களாட்சி மனப்பான்மையையும், நாட்டுப் பற்றையும் பெற்றார்கள். இவைகளே, தன்னுடைய அரசியல் குறிக்கோள்கள் என இங்கிலாந்து தேசம், சந்தேகத்திற்கு இடமில்லாதபடி அறிவித்தது. தவிரவும், பரந்த ராஜ தந்திரத்தின் மூலம் இவ்வுணர்ச்சிகளை அவர்கள் வேண்டுமென்றே ஆதரித்தார்கள். இக்கொள்கைகளை இந்தியாவிலும் மற்ற டொமினியன்களிலும் ஆரம்பத்தில் இங்கிலாந்து கடைப்பிடித்தது.

ஆரம்பத்திலிருந்தே இந்தியாவில் தாங்கள் பின் பற்றும் பரந்த கொள்கைகளை ஆங்கில ஆட்சியினர் வெளிப்படையாகவே கூறினர். ‘இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் டொமினியனில் வசிக்கும் சுதேசிகளின் நலத்தையும் மகிழ்ச்சியையும் வளர்ப்பதுதான், இந்நாட்டின் கடமை,’ என, 1813ஆம் ஆண்டின் பட்டயச் சட்டம் உறுதியாகக் கூறியது. 1833ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட பாராளுமன்றக் குழுவால் இது உறுதிப்படுத்தப்பட்டு, மிக விரிவாக எடுத்துரைக்கப்பட்டது. ‘சுதேசி மக்களின் நலனுக்கும், ஐரோப்பிய மக்களின் நலனுக்கும் இடையே போட்டி ஏற்பட்டால், சுதேசி மக்களின் நலனையே கருத்தில் கொள்ள வேண்டும்,’ என்கிற விவாதத்திற்கு இடமில்லாத கொள்கையை அது விதித்தது. கடைசியாக 1858-ல் அரசியாரின் பிரகடனம் வந்தது. ‘நம்முடைய மற்றக் குடிமக்களுக்குக் கட்டாயமாகச் செய்ய

வேண்டிய அதே கடமையை நம் இந்தியப் பிரதேசத்தில் இருக்கும் சுதேசி மக்களுக்கும் செய்யக் கடமைப் பட்டிருக்கிறோம்,' என அது கூறியது.

விக்டோரியா அரசியார் காலத்தில், குடியாட்சிக்குரிய ஓர் அரசியல் அமைப்புக் கனடாத் தேச மக்களுக்குக் கொடுக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து, அதைப்போன்ற சுய ஆட்சி பிற்காலத்தில் மன்றக் காலனிகளுக்கும் கொடுக்கப்பட்டதால், விக்டோரியா அரசியாரின் அறிக்கை, இந்தியர்களுக்கு ஒரு தனி முக்கியத்துவத்தைக் கொடுத்தது.

படித்த இந்தியர்களின் மனத்தில் இக்காரணங்கள் எல்லாம் ஒரு புதிய அவாவை உண்டாக்கின. பரந்த மனப் பான்மையுள்ள ஆங்கில நாட்டின் ராஜ தந்திரிகளிடத்திலும், அவர்களின் நியாயமான, நேர்மையான போக்கிலும், இந்தியர்களுக்கு மிகுந்த நம்பிக்கை ஏற்பட்டது. இந்தியர் களுக்குத் தகுந்த நிலைமை ஏற்பட்டு, அதை நன்றாக எடுத் துரைத்தால், இந்த நியாயமான கோரிக்கைகளைத் தாராள மனப்பான்மையுள்ள ஆங்கில அரசியல்வாதிகள் அவசியம் ஏற்றுக் கொள்வார்கள் என அவர்கள் எண்ணினார்கள்.

அவர்களுடைய திட்டமான முதல் கோரிக்கை, பொதுத் துறைப்பணியாளர் தொகுதியில், உயர்ந்த பதவியில் இந்தியர்களை அதிகமாகச் சேர்க்கவேண்டும் என்பதுதான். பொதுத்துறைப் பணியாளர் தொகுதி, எப்பொழுதுமே, பிரிட்டிஷ் ஆட்சியின் முதுகு எலும்பாய் இருந்து வந்தது. 'கவர்னர்-ஜெனரல் குணத்தைவிட, இந்தியாவை ஆட்சி செய்யும் பணியாளர்களின் குணமும் ஊக்கமுமே மிக முக்கிய மானவை,' என மெக்காலே என்பவர் மக்கள் சபையில் கூறியபோது அவர் உண்மையைத்தான் கூறினார். பொதுத் துறைப் பணியாளர் தொகுதியின் உயர்ந்த பதவிகளில் அதிக எண்ணிக்கையில் நுழைவதுதான், ஆட்சிப் பொறுப்பில் உண்மையான உரிமையான பங்கைப் பெறுவதற்கான முதல் நடவடிக்கை என்பது படித்த இந்தியர்களுக்குக் கண்கூடாய்த் தெரிந்தது.

சமயம், பிறந்த இடம், மரபு வழி, நிறம் இவற்றுள் எக் காரணம் கொண்டும், கம்பெனியின்கீழ் வேலை அல்லது பதவியைப் பெறுவதற்கு இந்தியர்கள் தகுதி உடையவர்கள் என 1833ஆம் ஆண்டுப் பட்டயச் சட்டம் உறுதிமொழி

அளித்தது. 1858ஆம் ஆண்டில் செய்யப்பட்ட அரசியாரின் பிரகடனமும், 1861-ல் ஏற்பட்ட இந்தியப் பொதுத்துறைப் பணியாளர் தொகுதிச் சட்டமும், இதை மறுபடியும் உறுதிப் படுத்தின. இவ்வுறுதி மொழிகள் அளிக்கப்பட்டிருந்த போதிலும், பொதுத்துறைப்பணியாளர் தொகுதியில் இந்தியர்களை அதிகமாகச் சேர்த்துக்கொள்வதில் ஆங்கில அரசாங்கம் காட்டிய தயக்கம் மிக வெளிப்படையாய்த் தெரிந்தது. திரும்பத் திரும்பக் கொடுத்த உறுதி மொழிகளைக் காப்பாற்ற முடியவில்லை என்பதை பிரிட்டிஷ் ராஜதந்திரிகளே ஒப்புக்கொண்டுள்ளார்கள். 'இந்திய அரசாங்கம் இன வேறுபாடு இல்லாமல் நடத்தப்படும் எனக் கூறிய அறிவிப்பு மிக உயர்ந்ததுதான்; ஆனால், இதுவரையில் அது பயனற்ற தாய்த்தான் இருக்கிறது,' என ஹக்டன் பிரபு (Lord Houghton) கூறியிருக்கிறார். இக்கொள்கையை அரசாங்கம் கடைப்பிடிக்க விரும்பவில்லை என்பதைக் கவர்னர்-ஜெனரலாய் இருந்த முதலாம் லிட்டன் பிரபு (Lord Lytton I) என்பவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். 'வாய் மூலமாக இந்தியர்களுக்கு அளிக்கப் பட்ட உறுதிமொழிகளை மனத்தில் உடைத்தெறிவதற்கான எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன,' என்பது இப்பொருளைக் குறித்து எழுதப்பட்ட இரகசிய அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆங்கில ராஜதந்திரிகளின் பரந்த மனப்பான்மையிலும், நியாயமான மனப்பான்மையிலும் நம்பிக்கை வைத்திருந்த ஆங்கிலக் கல்வியைப் பயின்ற இந்தியர்களின் உணர்ச்சிகளை நினைத்துப் பார்ப்பது வெகு சுலபம். பெருத்த ஏமாற்றமும் மன மயக்கத்திலிருந்து முரட்டுத்தனமான விடுதலையும், அதைத் தொடர்ந்து வெறுப்பான மனக்கடுப்பு உணர்ச்சி களும் ஏற்பட்டன. மிகு விரைவிலேயே, அடக்கப்பட்டிருந்த அதிருப்தி, தீவிரக் கிளர்ச்சியாக மாறும் அளவுக்குச் சில நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

இந்த நிகழ்ச்சிகள், சுரேந்திரநாத் பானர்ஜி என்பவரை (Mr. Surendranath Banergea) ஐ. ஸி. எஸ். பதவிக்கு நியமிக்கும் நிகழ்ச்சியுடன் இணைக்கப்பட்டன. தேர்வுப் போட்டியில், அவர் சிறந்த வெற்றியைப் பெற்றாலும், பட்டியலிலிருந்து அவர் பெயரை நீக்கிவிடுவதற்கான முயற்சிகள் நடை பெற்றன. அவர் அரசியாரின் மன்றத்திற்கு (Queen's Bench) அளிக்கப்பட்ட 'செய்க' என்னும் கட்டளைப்படி (Writ of Mandamus) அவர் பெயர் பட்டியலில் சேர்க்கப்பட்டு

ஐ. ஸி. எஸ். பதவிக்கு பானர்ஜி நியமிக்கப்பட்டார்; ஆனால், இப்பதவி தேவையற்றது எனக் கருதப்பட்டதால் அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார்.

ஆங்கில ஆட்சியின் கீழ்ப் பணி புரிவதற்குரிய சந்தர்ப்பம் கொடுக்கப்படாமல் மறுக்கப்பட்டவரே, இந்தியாவில் ஏற்பட்ட மிகப் பெரிய தேசிய இயக்கத்திற்குத் தலைவராய்த் திகழ்ந்தார். அவர் பொது வாழ்க்கையில் ஈடுபட்டு, 1876-ல் கல்கத்தாவின் இந்தியச் சங்கத்தை (Indian Association of Calcutta) உண்டாக்கினார். அச்சங்கத்தைப்பற்றி அவர் கூறியதாவது: 'இச்சங்கம், மாஜினியின் (Mazzini) தூண்டுதலிலிருந்து பெறப்பட்ட 'ஐக்கிய இந்தியா' என்கிற நோக்கத்தின் மீது அமைக்கப்பட்ட, அனைத்திந்திய இயக்கத்திற்கு மையமாக இருக்கவேண்டும்,' என மக்களுக்கு நேரிடையான கோரிக்கைகளை விடுத்து, பொதுமக்கள் அபிப்பிராயத்தை உருவாக்கும் எண்ணத்துடன், படித்த நடுத்தர வகுப்பினரின் நிறுவனமாக அது அமைந்தது. பொதுத்துறைப் பணியாளர் தொகுதித் தேர்வுக்குப் பேரளவான (Maximum) வயது வரம்பு, இருபத்தொன்றிலிருந்து பத்தொன்பதாக 1877-ல் குறைக்கப்பட்டபோது, பானர்ஜிக்கு ஒரு பெரிய சந்தர்ப்பம் கிடைத்தது. மனவேதனையுடன் கூடிய விளைவை அது இந்தியா முழுவதிலும் ஏற்படுத்தியது; இந்தியச் சிவில் பணியாளர் தொகுதிக்கு இந்திய மாணாக்கர்கள் வரக்கூடிய எதிர்கால வாய்ப்பை ஒழிக்கும் எண்ணத்துடன், வேண்டுமென்றே செய்யப்பட்ட முயற்சியென அது கருதப்பட்டது. அந்தப் பிற்போக்கான நடவடிக்கையை எதிர்த்து, இந்தியச் சங்கம் ஒரு தேசிய எதிர்ப்பை உண்டாக்கிற்று. கல்கத்தாவில் ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் கூட்டப்பட்டது; பானர்ஜி ஒரு சூறுவளிப் பிரயாணம் செய்து, ஆக்ரா, லாகூர், அமிர்தசரஸ், மீரட்டு, அலஹாபாது, கான்பூர், லக்னோ, அலிகார், வாரணாசி போன்ற இடங்களில் அதைப் போன்ற கூட்டங்களைக் கூட்டினார். அக்கூட்டங்களின் தன்மையையும் குறிக்கோளையும், பானர்ஜி பின்வருமாறு கூறுகிறார்: 'இக்கிளர்ச்சி ஒரு சாதனந்தான்; வெளிப்படையான தேர்வுப் போட்டிக்கு நியமன வயது வரம்பை அதிகரிப்பதும், ஒரே சமயத்தில் தேர்வுப் போட்டிகளை நடத்துவதுமே இதன் குறிக்கோள்கள்; ஆனால், பொதுத்துறைப் பணியாளர்கள் தொகுதிக் கிளர்ச்சியின் அடிப்படைக் காரணமும், உண்மையான நோக்கமும் குறிக்கோளும் என்னவெனில், இந்திய மக்களிடையே எழுந்த ஒற்றுமை உணர்ச்சி, கட்டுப்பாட்டு உணர்ச்சி ஆகியவைகளே.'

பானர்ஜியின் பிரயாணம் மிகுந்த வெற்றியைக் கொடுத்தது. சர் ஹென்றி காட்டன் (Sri Henry Cotton) என்பவர், புதிய இந்தியா (New India) என்னும் தமது நூலில், இதைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிருர்: 'பஞ்சாபில், வங்காளிகளின் செல்வாக்கு என்கிற எண்ணம் லாரன்ஸ் பிரபு (Lord Lawrence) என்பவருக்கு நம்ப முடியாததாய் இருக்கலாம்......ஆனல், அந்நிகழ்ச்சி ஏற்பட்டது; சென்ற ஆண்டில், ஒரு வங்காளப் பேச்சாளர், ஆங்கில மொழியில் விரிவுரையைச் செய்துகொண்டு வடஇந்தியாவில் பிரயாணம் செய்தார்; அப்பிரயாணம் மிகுந்த வெற்றியைக் கொடுத்தது; இப்பொழுது, சுரேந்திரநாத் பானர்ஜியின் பெயர், டாக்காவில் வளரும் தலைமுறையினர் இடையே ஓர் ஆர்வத்தை உண்டாக்குகிறது; அதைப்போன்ற ஆர்வம் முல்தானிலும், அவர் பெயரைக் கேட்டவுடனே ஏற்படுகிறது.'

பானர்ஜியின் உதவியுடன், இந்தியச் சங்கம் ஆரம்பித்த தேசிய இயக்கத்தின் பயன்கள் உண்மையில் மிகப் பெரியவை. பானர்ஜியின் வார்த்தையில் கூறுவதானல், 'பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் முதன் முறையாக, பல மாறுபட்ட இனங்களையும் சமயங்களையும் கொண்ட இந்தியா, பொதுவான ஓர் ஐக்கிய முயற்சி செய்வதற்காக, ஒரே மேடைக்கு கொண்டு வரப்பட்டது. இன, மொழி, சமுதாய, சமய நிறுவனங்கள் ஆகியவற்றில் நம்மிடையே எவ்வளவு வேறுபாடு இருந்த போதிலும், பொதுவான அரசியற்குறிக்கோளை அடைவதற்காக, இந்தியாவின் மக்கள் ஒன்று சேர முடியும் என்பது மனத்தில் பதியும்படியும், குறிப்பிடத்தக்க வகையிலும் உள்ள வெளிப்படையான பாடத்தை அது தெரிவிக்கிறது.'

பொதுத்துறைப் பணியாளர் தொகுதிக்கிளர்ச்சி முக்கியப் பயிற்சி அனுபவத்தை அளித்தது. இந்த அனுபவம், இறுதியில், இந்தியத் தேசியக் காங்கிரஸ் அமைப்பதில் முடிந்தது. இது மற்ருேர் வழியையும் காட்டியது; நாட்டில் அரசியல் மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதற்கு அதைக் கடைப் பிடிக்காமல் பொதுத்துறை பணியாளர் தொகுயின் பிரச்சினை குறித்த ஒரு கருணை விண்ணப்பம் (Memorial) கல்கத்தாவில் நடந்த கூட்டத்தில் தயாரிக்கப்பட்டு, மற்றப் பொதுக்கூட்டங்களில் ஆமோதிக்கப்பட்டது. இந்தியப் பொதுத்துறை பணியாளர் தொகுதிக்காக நடத்தப்படும் வெளிப்படையான தேர்வுப்போட்டிக்கு நியமன வயது வரம்பைக் குறைக்க கூடாதென்றும், அத்தேர்வை இந்தியாவிலும் இங்கிலாந்திலும்,

ஒரே சமயத்தில் நடத்த வேண்டும் என்றும் கூறுகிற ஒரு வேண்டுகோள் அவ்விண்ணப்பத்தில் இருந்தது. அவ் விண்ணப்பம் மக்கள் சபைக்கு விடுக்கப்பட்டிருக்கிறது. வழக்கப்படி அது அஞ்சல் மூலமாக அனுப்பப்படும். ஆனால், அதற்கு மாறாக லால் மோகன் கோஷ் (Lal Mohan Ghosh)— கல்கத்தாவிலிருந்த பிரபல சட்ட நிபுணர்—இந்தியச் சங்கத்தின் பிரதிநிதியாய் அவ்விண்ணப்பத்தை நேரில் கொடுக்கும்பொருட்டு இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்டார். கோஷ், சொல்வன்மை பொருந்திய சிறந்த பேச்சாளர். அவர் இந்தியாவின் தொல்லைகளைப் பற்றி, பிரிட்டிஷ் மக்கள் நன்கு உணரும்படி செய்தார். அவருடைய நடவடிக்கையைப் பற்றி பானர்ஜியே பின்வருமாறு விவரிக்கிறார்: 'ஜான் பிரைட்டு (John Bright) என்பவரின் தலைமையின்கீழ் ஒரு மாபெருங்கூட்டம் நடத்தப்பட்டது. ஆற்றலுடனும், சொல் வன்மையுடனும் கோஷ் பேசி, எல்லோருடைய போற்றுதலை யும் பெற்றார். அக்கூட்டத்தினால் ஏற்பட்ட பயன் உடனே தெரிந்தது. அது நடந்த இருபத்து நான்கு மணி நேரத்திற் குள்ளேயே, பிற்காலத்தில், சட்டப்படியான பொதுத்துறைப் பணியாளர் தொகுதி (Statutory Civil Service) என வழங்கப் பட்ட ஒரு சட்டத்திற்கு வேண்டிய விதிகள் மக்கள் சபையில் தாக்கல் செய்யப்பட்டன......இவ்வாறு இந்தியாவின் தொல்லைகளை எடுத்துக் கூறுவதற்காக இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்ட இந்தியரின் தூது மிகப் பெரிய வெற்றியை அளித்தது.'

பொதுத்துறைப் பணியாளர் தொகுதிக் கிளர்ச்சிக்குப் பிறகு, படைக்கலச்சட்டம் (Arms Act), லிட்டன் பிரபு என்பவ ருடைய தாய்மொழிப் பத்திரிகைச் சட்டம் (Vernacular Press Act) ஆகியவைகளை எதிர்த்தும் இப்படிப்பட்ட கிளர்ச்சிகள் செய்யப்பட்டன. படைக்கலங்கள் வைத்திருப்பதை வரையறைப்படுத்தியும், தாய்மொழிப்பத்திரிகையைக் கட்டுப் பாடு செய்யும் நோக்கத்துடனும் இவை கொண்டுவரப்பட்டன. இம்மூன்று மசோதாக்களும், தேசிய இந்தியாவின் வளர்ச்சியைத் தடுக்கும் கொள்கையின் ஒரு பாகமெனக் கருதப்பட்டன. இந்தியநாட்டுச் செயலாளராய் இருந்த சாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) ஆட்சியின் பிற்போக்கான தன்மையைத்தான் அவை காட்டுகின்றன. 'பிற்போக்கான ஆட்சியாளரே, பெரும்பாலும், மாபெரும் பொது இயக்கங்கள் உண்டாக்குகின்றனர்,' என்கிற உண்மையை வரலாறு நமக்குக் கூறுகிறது. இது இந்தியாலும் உண்மையாயிற்று. இம்மூன்று

புகழற்ற சட்டங்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட கிளர்ச்சி, இந்தியாவின் அரசியல் வாழ்க்கைக்கு ஓர் உருவத்தைக் கொடுத்து, அதனுடைய ஆற்றலையும் மறைந்திருக்கும் திறமையையும் அது உணரும்படி செய்தது. மிகு விரைவில், வெறுப்பைத் தந்த இச்சட்டங்களை நீக்கும் சாதாரணப் பிரச்சினையாக அது இல்லை. தேசிய உணர்ச்சி படிப்படியாய் வளர்ந்து வந்தது. அரசியல் இந்தியாவின் பார்வையில் ஒரு மேலான நோக்கம் தெரிந்தது. உயர்ந்த பதவிகளில் உரிய பங்கை இந்தியர்கள் பெறுவது மட்டும் போதாது, இறுதியில், முழு ஆட்சியையும் பொதுமக்களால் விரும்பப்படும் மேற்பார்வையின் கீழ்க் கொண்டுவர வேண்டும். ஆகையால், பிரதிநிதித்துவ நிறுவனங்களைப் பெறுவதற்கான திட்டமான கோரிக்கைகளைச் செய்யவேண்டும் என்னும் எண்ணங்களும் வளர்ந்தன.

இப்புதிய குறிக்கோளை அடைவதற்கு, நிலைத்து நிற்கும் அகில இந்திய நிறுவனம் ஒன்று தேவைப்பட்டது. இல்பர்ட்டு மசோதாவின் மீது எழுந்த வாக்குவாதத்தினால், இத்தேவை சுலபமாகப் பூர்த்தி செய்யப்பட்டது. வைசிராய் ஆலோசனை மன்றத்தின் சட்ட அங்கத்தினரான இல்பர்ட்டு (Ilbert) என்பவரால் 1883-ல் இம்மசோதாத் தயாரிக்கப்பட்டது. மாவட்டங்களில் இருக்கும் ஐரோப்பியர்கள் தங்கள் இனத்தைச் சேர்ந்த நீதிபதிகளால் மட்டும் இதுவரையில் விசாரிக்கப்பட்டு வந்தார்கள். அந்தச் சலுகையை நீக்கி விடுவதற்காக இம்மசோதாக் கொண்டுவரப்பட்டது. ஆங்கில இந்திய சமுதாயத்தினர் இம்மசோதாவை எதிர்த்து, இந்தியாவிலும் இங்கிலாந்திலும் கிளர்ச்சி செய்தனர். அவர்கள் பாதுகாப்புச் சங்கம் (Defence Association) அமைத்து, இந்தியா முழுவதிலும் அதன் கிளைகளை உண்டாக்கினார்கள்; ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் ரூபாய் வரையிலும் வசூல் செய்தார்கள். இவ்வியக்கத்திற்கு எதிரான ஓர் இயக்கத்தை உண்டாக்கும்படி படித்த இந்தியர்களை அது தூண்டியது. இறுதியில் அரசாங்கம் இம்மசோதாவை வாபஸ் பெற்று, இதற்குப் பதிலாக ஒரு மிதமான மசோதாவைக் கொணர்ந்து, அதன்படி, செஷன்ஸ் நீதிமன்றத்தில் ஐரோப்பியர்களை விசாரணை செய்யும் அதிகாரம் நீதிபதிகளுக்கும் மாவட்ட மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கும் அளிக்கப்பட்டு, அவர்கள் இந்தியர்களாய் இருக்கலாம் எனவும் அது கூறியது. இல்பர்ட்டு மசோதாவிற்கு எதிராக நடைபெற்ற கிளர்ச்சியின் வெற்றி, 'படித்த இந்தியர்களின் மனத்தில் கோபத்தையும், உயர்வு

மனப்பான்மையையும் உரமூட்டியது. ஆனால், ஒன்று சேர்வதால் ஏற்படும் நன்மையையும், ஒரு நிறுவனத்தால் ஏற்படும் மதிப்பையும் அது தெளிவாகக் காட்டியது. இந்த அனுபவ அறிவைப் படித்த இந்தியர்கள் மறக்கவில்லை. முன்பு செய்ததைப் போலவே, சுரேந்திரநாதர் தலைமையை ஏற்று, ஓர் ஆண்டிற்குள்ளேயே அகில இந்தியத் தேசிய நிதி (All India National Fund) ஆரம்பிக்கப்பட்டது; இந்தியாவின் எல்லாப் பாகங்களிலுமிருந்து வந்த பிரதிநிதிகள் அடங்கிய இந்திய தேசிய மாநாடு (Indian National Conference) கல்கத்தாவில் (1883) கூடியது.

அதே ஆண்டில், ஆலன் ஆக்டேவியன் ஹியூம் (Allan Actavian Hume) என்கிற ஓய்வு பெற்ற அதிகாரி, கல்கத்தாப் பல்கலைக் கழகப் பட்டதாரிகளுக்கு வெளிப்படையான ஒரு கடிதம் எழுதினர். இந்திய மக்களின் மனப்பான்மை, நல்லொழுக்கம், சமுதாயம், அரசியல் ஆகியவற்றுக்குப் புத்துயிர் கொடுப்பதற்காக ஒரு சங்கத்தைத் தோற்றுவிக்குமாறு அவர்களை அக்கடிதத்தில் வற்புறுத்தினர். இப்படிப்பட்ட நிறுவனத்திற்கு அதிகாரிகளின் ஆதரவையும் அவர் பெற்ருர். மக்களின் உண்மையான விருப்பங்களைத் தெரிந்துகொள்வதில் மிகுந்த துன்பத்தைத் தாம் அடைந்ததாகவும், பொறுப்புள்ள ஏதேனும் ஒரு நிறுவனம் இருந்தால், அதன் மூலம் இந்தியப் பொதுமக்களின் சிறந்த அபிப்பிராயத்தை அரசாங்கம் அறிந்துகொள்வதற்கு உதவியாய் இருக்குமென்றும் இப்படிப்பட்ட நிறுவனத்தை உண்டாக்குவது பொதுமக்களுக்கு உதவியாய் இருக்கும் என்றும், கவர்னர்-ஜெனரலாய் இருந்த டப்ரின் பிரபு (Lord Dufferin) கூறினர்.

முக்கியமான இந்தியர் சிலரின் ஆதரவுடன், தமது திட்டத்தைச் செயற்படுத்துவதில், ஹியூம் வெற்றி பெற்ருர். அதன்படி வங்காளச் சட்ட நிபுணரான பானர்ஜி என்பவரின் தலைமையின்கீழ் 1885ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் வாரத்தில், ‘முதல் இந்தியத் தேசிய காங்கிரஸ்’, பம்பாயில் கூடியது. அதே சமயத்தில் இந்திய தேசிய மாநாட்டின் இரண்டாவது கூட்டக் குழு, கல்கத்தாவில் நடந்தது. இரண்டு இயக்கங்களும், சுதந்தரமாகவும் ஒரே சமயத்திலும் நடந்தன என்பதும், இவை இரண்டையும் நடத்தியவர்களுக்கு ஒருவரைப்பற்றி மற்றவருக்குக் கூட்டம் நடக்கும் வரையிலும் தெரியாது என்பதும் தெரிகின்றன. இரண்டு நிறுவனங்களும் ஒரே

வழியைப் பின்பற்றி, ஒரே திட்டத்தைப் பெற்றிருந்ததால், இந்தியாவின் வெவ்வேறான இரண்டு இடங்களில், இதைப் போன்ற இரண்டு சங்கங்கள் தனித்தனியாக இயங்குவது விரும்பத்தக்கதன்று என்பது தெரிகிறது. தேசிய ஒற்றுமையின் உணர்ச்சி வளர்ந்து வருவதற்கு இது ஒரு குறிப்பிடத்தக்க சான்றாகும்; அதனால், இந்தியத் தேசிய மாநாடு, இந்தியத் தேசியக் காங்கிரஸுடன் வெகு எளிதாக இணைந்துவிட்டது.

முதல் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கூட்டத்தில் எழுபது பிரதிநிதிகளே கலந்துகொண்டார்கள்; ஏனெனில், முன்பு குறிப்பிட்டபடி சுரேந்திரநாதர் உட்பட முக்கியத் தலைவர் பலர் இதில் கலந்துகொள்ள இயலவில்லை. அதே சமயத்தில், கல்கத்தாவில் நடந்த இந்தியத் தேசிய மாநாட்டில் அவர்கள் கலந்துகொண்டார்கள். அதிலிருந்து பல ஆண்டுகள் வரை ஒவ்வோர் ஆண்டிலும் கிறிஸ்துமஸ் வாரத்தில், இந்தியாவில் இருக்கும் ஏதேனும் ஒரு முக்கிய நகரத்தில் காங்கிரஸ் கூடியது. அதன் இரண்டாவது மூன்றாவது கூட்டங்கள், முறையே கல்கத்தாவிலும் சென்னையிலும் நடந்தன. எல்லா இடங்களிலும், உள்ளூர்ப் பொதுமக்களிடையே மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்து, படிப்படியாக இந்தியாவின் பல பாகங்களிலுமிருந்து அதிகமான பிரதிநிதிகள் அதில் கலந்து கொண்டார்கள். ஹியூம் விடுத்த அறிக்கையின் ஆரம்பத்தில் கூறப்பட்ட குறிக்கோளை மாநாடு மேலான முறையில் நிறை வேற்றியது. அக்குறிக்கோளைக் கீழே கூறப்பட்டுள்ள வார்த்தைகளால் அவர் விளக்குகிறார்:

'தேசியக் குறிக்கோளுக்காகப் பாடுபடும் உண்மையான எல்லா ஊழியர்களும், ஒருவரை ஒருவர் நேரிடையாக அறிந்து கொள்வதற்கும், மறு ஆண்டில் எடுத்துக்கொள்ளவிருக்கும் அரசியல் நடவடிக்கைகளை விவாதித்து முடிவு செய்வதற்கும் உதவியாய் இருப்பதுதான் இதன் நோக்கம்; மறைமுகமாக, இம்மாநாடு சுதேச மக்களுடைய பாராளுமன்றத்தின் வித்தாகவும் இருக்கும். இது சரியானபடி நடத்தப்பட்டால், ஒரு சில ஆண்டுகளில், எவ்விதமான பிரதிநிதித்துவ நிறுவனங்களைப் பெறுவதற்கும் இந்தியா தகுதியற்றது என்கிற வாதத்திற்குப் பதில் சொல்ல முடியாத வாதமாக இது விளங்கும்.'

பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதிலும், அரசாங்கக் கொள்கையைக் குறை கூறுவதும் சீர்திருத்தங்களைக்

கோருவதுமே காங்கிரஸின் முக்கிய வேலையாய் இருந்தது. அதனுடைய நோக்கங்கள், தீர்மானங்களாக நிறைவேற்றப் பட்டு, அரசாங்கத்தின் ஆழ்ந்த ஆலோசனைக்கு அனுப்பப் பட்டன.

திடுக்கிடத்தக்க வகையில், இந்நாட்டில் இருக்கும் வறுமையை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவந்து அதைப்பற்றி முறையான விசாரணை செய்து அதைப் போக்க வேண்டும் என்றும் முறையிட்டது. படைக்கலங்கள் சட்டத்தையும் வேறு பல ஆட்சி மசோதாவையும், முக்கிய மாக ஆயத்துறை, உப்புவரி ஆகியவைகளையும் அது குறை கூறியது.

சீர்திருத்தம் சம்பந்தப்பட்ட வரையில், பின் வரும் குறிப்பிட்ட நடவடிக்கைகளைக் காங்கிரஸ் முக்கியமாக வற்புறுத்தியது :

(1) மத்திய, மாகாண ஆட்சிகளில், பிரதிநிதித்துவ ஆலோசனை மன்றங்கள் மூலம் சுய ஆட்சியை வளர்த்தல்.

(2) இந்திய ஆலோசனை மன்றத்தை நீக்குதல்.

(3) பொதுப்படையான கல்வியையும், தொழில் நுட்பக் கல்வியையும் பரப்புதல்.

(4) இராணுவச் செலவையும், இந்தியர்களுக்குக் கொடுக்கப்படும் இராணுவப் பயிற்சியையும் குறைத்தல்.

(5) குற்றச்சட்ட நீதியின் ஆட்சியிலிருந்து நீதி சம்பந்தப் பட்ட அலுவல்களையும், நிருவாகம் சம்பந்தப்பட்ட அலுவல் களையும் பிரித்தல்.

(6) அரசினர் பணியில் உயர்ந்த பதவிகளுக்கு அதிக மான இந்தியர்களை முக்கியமாக, ஐ. ஸி. எஸ். தேர்வுப் போட்டியை இந்தியாவிலும், இங்கிலாந்திலும் நடத்துவதன் மூலம் நியமித்தல்.

அரசாங்கத்தைக் குறை கூறுவதில் மிகுந்த பெருந் தன்மையையும், அடக்கத்தையும், காங்கிரஸ் காட்டியது. தளராத விசுவாசத்தை ஆங்கில அரசருக்கு அளிப்பதாக அது உறுதி கூறியது; பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளின் நியாய மனப் பான்மையிலும், பரந்த மனப்பான்மையிலும் எல்லையில்லாத நம்பிக்கையை அது வைத்திருந்தது. இந்தியர்களின்

கோரிக்கைகளில் இயற்கையாய் உள்ள நியாயத்தை உணரும்படி, அவர்களைத் தூண்டும் முறையிலேயே அதன் முழு முயற்சியும் இருந்தது.

இந்தியத் தொழிலுக்குத் தூண்டுதல் அளிப்பதற்காகக் காங்கிரஸ் கூட்டத்துடன், ஒரு தொழிற்கண்காட்சியும், 1896-ல் நடத்தப்பட்டது. ஒப்புக்கொள்ளப்பட்ட சமுதாயத் தீங்குகளைப் பொது மக்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்காகவும், அவற்றை நீக்குவதற்கான வழிகளைக் காண்பதற்காகவும், ஒரு சமுதாய மாநாடும், அதனுடன் சேர்த்து நடத்தப்பட்டது.

ஆரம்பத்தில் அரசாங்கம் காங்கிரஸ் இயக்கத்தை ஆதரவுடன் நோக்கிற்று; அது வெறுப்பில்லாமல் இருந்தது. அரசாங்க அதிகாரிகள், காங்கிரஸின் முதல் கூட்டத்திற் கலந்துகொண்டதோடு, அதனுடைய விவாதங்களிலும் கலந்து கொண்டார்கள். கவர்னர்-ஜெனரல் (டப்ரின் பிரபு) கல்கத்தாவில் (1886) அளித்த தோட்ட விருந்திற்கும், சென்னையின் கவர்னர் (1887) அளித்த விருந்திற்கும், காங்கிரஸின் அங்கத்தினர்கள் அழைக்கப்பட்டார்கள்.

ஆனால், மிகு விரைவிலேயே, அதிகாரஉலகம் தன் கொள்கைகளை மாற்றிக்கொண்டது. கல்கத்தாவில் செயின்டு ஆண்டுரூஸிற்காகக் (St. Andrews) கொடுக்கப்பட்ட விருந்தில், ஓய்வு பெறும் சமயத்தில் இருந்த டப்ரின் பிரபு இந்தியத் தேசியக் காங்கிரஸின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் தாம் அங்கீகரிக்கவில்லை என அறிவித்தார்; படித்த மக்களை 'உருப்பெருக்கியின் மூலம் காணக்கூடிய சிறுபான்மையினர்' (Microscopic minority) எனவும் அவர் வருணித்தார். பெரிய அதிகாரிகளும் அவரைப் பின்பற்றினார்கள்; காங்கிரஸ் இயக்கத்திலிருந்து அரசாங்க அதிகாரிகள், படிப்படியாக ஒதுங்கி நின்றார்கள்.

படித்தவர் மிக மிகச் சிறிய அளவில் உள்ள சிறு பான்மையோராய் இருப்பதால், இந்திய மக்களின் நோக்கங்களை எடுத்துக் கூறுவதற்கு அவர்களுக்கு எவ்விதமான உரிமையுமில்லை என்கிற மனப்பான்மையைத்தான், காங்கிரஸ் சம்பந்தப்பட்ட வரையில் அரசாங்கம் கொண்டிருந்தது. இந்த விவாதத்திற்குக் காங்கிரஸ் அளித்த பதிலிலேதான், பிரதிநிதித்துவத் தன்மைக்கு அது உரிமை கோரிய

முக்கியமான காரணம் அமைந்திருந்தது. 1896-ல், கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில், வரவேற்புக் குழுவின் தலைவர் என்ற முறையில், சர் ரமேஷ் சந்திர மித்திரா (Sir Ramesh Chandra Mitra) என்பவரின் உரையில், அந்த உரிமை நன்ருகச் சுருக்கிக் கூறப்பட்டுள்ளது.

'இந்நாட்டின் அறிவையும் மனச்சாட்சியையும், படித்த சமுதாயம் பிரதிபலிக்கிறது; படிப்பற்ற மக்களின் சட்டப் படியான பிரதிநிதியாகவும், அவர்களுடைய நலன்களைப் பேணும் இயற்கையான பொறுப்பாளியாகவும் இது இருக் கிறது. இதற்குமாருன எண்ணத்தைக் கொள்வது அரசாங்கப் பணியில் இருக்கும் அயல்நாட்டைச் சேர்ந்த அதிகாரிக்கு மக்களின் தேவைகளைக் குறித்து இந்நாட்டில் இருக்கும் படித்த மக்களைவிட அதிகமாகத் தெரியும் என்பதை எதிர்பார்ப்பதாகும். உழைப்பவர்களை அறிஞர்கள் ஆள வேண்டுமென்பது எல்லாக் காலத்திலும் இருந்தது என்பது உண்மைதான்; இந்தத் துரதிருஷ்டமான நாட்டில் மட்டும், இயற்கையாய் உண்டான இந்த ஏற்பாடு, மாற்றப்பட்டிருக் கிறது என்று நினைக்க முடியுமா?'

காங்கிரஸின் தீர்மானங்களை அரசாங்கம் ஆதரிக்கவில்லை என்பதில் எவ்வித வியப்பும் இல்லை. ஹியூம் கூறியபடி, 'அரசாங்கத்திற்குப் போதிக்கத் தேசியக் காங்கிரஸ் விரும்பியது; ஆனுல், அப்படிப் போதிக்கப்படுவதற்கு அரசாங்கம் மறுத்தது. அரசாங்கத்தின் மனப்பான்மையைக் குறித்து ஏமாற்றமடைந்து, இந்தியாவிலும் இங்கிலாந்திலும் பொதுமக்களின் அபிப்பிராயத்தைத் திரட்டி, அரசாங்கத்தை வற்புறுத்துவதற்குக் காங்கிரஸ் முடிவு செய்தது. சட்டப் படியான கிளர்ச்சி எனப் பொது மக்களால் கூறப்பட்ட ஒரு திட்டம் அச்சமயத்திலிருந்து காங்கிரஸின் முக்கிய ஆயுதமாய் விளங்கியது. இந்தியாவில் கூட்டங்களைக் கூட்டுவதற்கான ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இதைத்தவிர, அக்குறிக் கோளுடன் ஒரு நிலையம் 1888-ல் இலண்டனில் உண்டாக்கப் பட்டது. இங்கிலாந்தின் பல பாகங்களிலும் விரிவுரைகளை ஆற்றுவதற்கு இது ஏற்பாடு செய்தது; இந்தியாவின் கருத்தைப் பொதுமக்கள் அறிந்துகொள்வதற்குப் பல சிறிய நூல்களையும் வழங்கியது. மிகுவிரைவிலேயே அந்நிலையத் திற்குப் பதிலாக இந்தியத் தேசியக் காங்கிரஸின் பிரிட்டிஷ் குழு (British Committee of the Indian National Congress) ஏற்படுத்தப்பட்டது; '**இந்தியா**' என வழங்கப்பட்ட ஒரு வாராந்தரச் செய்தித்தாளையும் அது வெளியிட்டது.

இங்கிலாந்தில் நடத்தப்பட்ட கிளர்ச்சி மிக்க பயனை அளித்தது. **சார்லஸ் பிராட்லாப்** (Charles Bradlaugh) என்கிற பாராளுமன்றத்தின் அங்கத்தினர், 1889-ல் பம்பாயில் நடந்த காங்கிரஸின் ஐந்தாவது கூட்டத்தில் கலந்துகொண்டார்; இந்தியத் தலைவர்களைக் கலந்து ஆலோசித்த பிறகு, சட்ட மன்றத்தைச் சீர்திருத்துவதற்கும், விரிவாக்குவதற்கும், ஒரு மசோதாவைத் தயாரித்தார்; 1890-ல் மக்கள் சபையில் இதைக் கொண்டு வந்தார். இதைத் தடுப்பதற்காக, அரசாங்கம் ஒரு மசோதாவைக் கொண்டு வந்து, 1892-ல் அதை நிறைவேற்றியது. இவ்விதம், 1892ஆம் ஆண்டின் இந்தியக் கவுன்சில் சட்டம் (பக். 353), காங்கிரசுக்கு ஒரு மறைமுகமான வெற்றியாய் இருந்தது.

காங்கிரஸின் மற்றக் கோரிக்கைகள் சம்பந்தப்பட்ட வரையில், அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை. ஆண்டு தோறும் ஒரேவிதமான தீர்மானங்களைக் காங்கிரஸ் நிறை வேற்றியது; ஆனால், அரசாங்கத்திடமிருந்து எவ்விதப் பலனும் ஏற்படவில்லை. இதனால், நம்பிக்கையற்ற உணர்ச்சி ஏற்பட்டு, படிப்படியாக அரசாங்கத்தை எதிர்க்கும் மனப் பான்மை வளர்ந்தது. ஒரு பகுதி, காங்கிரஸின் திட்டம் பயனற்றது என எண்ணவும் ஆரம்பித்தது. ஒவ்வோர் ஆண்டும் அரசாங்கத்திற்கு மிகப் பணிவான முறையில் விண்ணப்பங்கள் செய்வதையும், அவற்றை அரசாங்கம் முறையற்ற விதத்தில் ஒதுக்கித் தள்ளுவதையும் கண்டு அவர்கள் இகழ்ந்து கூறினார்கள். சீர்திருத்தங்களைப் பேச்சினால் பெற இயலாது எனவும், செயல்களால்தான் பெற இயலும் எனவும் அவர்கள் நம்பினார்கள். இப்பகுதியின் தலைவர், பால கங்காதர திலகர் (Bal Gangadhar Tilak). அவர் பிரபல பேஷ்வாக்களின் குலத்தைச் சேர்ந்த மராட்டிய அந்தணர்.

இந்தியாவின் பல பாகங்களில் இருந்த மக்களைவிட, மராட்டியர்கள் தேசத்திற்குப் புத்துயிர் கொடுக்கும் ஓர் இயக்கத்தில் சேருவதற்குத் தனிப்பட்ட காரணங்கள் இருந்தன. மிகவும் அண்மையிலேதான் அவர்கள் தங்களுடைய சுதந்தரத்தை இழந்தார்கள். அதனால், புதிய உணர்ச்சியை வளர்ப்பதற்கு ஒரு தகுந்த இடமாக, மராட்டிய நாடு விளங்கியதில் ஒருவித வியப்பும் இல்லை. வரலாற்றில் புகழ் பெற்ற இந்தியாவின் பழம்பெருமையை எடுத்துரைத்து,

இந்திய மக்களிடையே ஆற்றல் வாய்ந்த தேசிய உணர்ச்சியை உண்டாக்கத் திலகர் முயன்றார். சமூக விஷயங்களில் அதிகாரிகள் தலையிடுவதைத் தடுப்பதற்காக, அவர் ஓர் எதிர்ப்பியக்கத்தை உண்டாக்கினார். சிவாஜியின் நினைவைக் கொண்டாடுவதற்காக, ஆண்டு விழாக்களை அவர் கொண்டாடினார்; கேசரி (Kesari) என்னும் தமது செய்தித்தாளின் மூலம், தமக்குத் தாமே உதவி செய்தல், தேசியப் புத்துணர்ச்சி ஆகிய புதிய அரசியற் கொள்கைகளை அவர் பொது மக்களுக்கு உபதேசித்தார். திலகருடைய பேச்சுகளும் கட்டுரைகளும், தீவிரக் கொள்கையுடைய பிரிவினர் வளர்வதற்குக் காரணமாய் இருந்தன எனப் பொதுவாக நம்பப் படுகிறது. இப்பிரிவு மிகு விரைவிலேயே, காங்கிரஸின் ஆற்றல் வாய்ந்த ஒரு பகுதியாய் விளங்கியது.

காங்கிரஸின் இயக்கத்திற்கு இந்திய மக்கள் தொகையிலுள்ள எல்லாப் பிரிவினரும், சமூகத்தினரும், ஒத்த ஆர்வத்தை முதலில் காட்டவில்லை. குறிப்பிடத்தக்க முஸ்லீம் தலைவர் சிலர் ஆண்டுதோறும் நடக்கும் அதன் விவாதத்தில் பங்கு கொண்டனர்; சில சந்தர்ப்பங்களில், அது முஸ்லீம் தலைவரையும் பெற்றிருந்தது. ஆயினும், முஸ்லீம்களுள் பெரும்பகுதியினர், ஆரம்பத்திலிருந்தே காங்கிரஸிடம் அனுதாபமற்ற மனப்பான்மையைக் கொண்டிருந்தனர். ஆனால், பொதுவாக முஸ்லீம்கள் காங்கிரஸுக்குப் பகைவர்களாய் இல்லாவிட்டாலும் அதைக்குறித்து அக்கறையில்லாமல் இருந்தார்கள், 1896-ல் காங்கிரஸுக்குத் தலைமை வகித்த சயானி (Mr. Sayani) என்பவர், 'இந்தியாவிலுள்ள எல்லா முஸ்லீம்களும் காங்கிரஸின் இயக்கத்திற்கு எதிரிகளாய் உள்ளார்கள் என்று சிலர் கற்பனை செய்கின்றனர்; இது உண்மையன்று. உண்மையில் அவர்களுள் பெரும் பகுதியினருக்குக் காங்கிரஸின் இயக்கம் என்ன என்பதே தெரியாது,' என உண்மையைக் கூறினார்.

இம்மாறுபாட்டிற்கு வேறு பல அடிப்படைக் காரணங்களும் இருந்தன. ராஜாராம் மோகன்ராய், ராஜ் நாராயண் போஸ் (Raj Narayan Bose), ஹரீஸ் முக்கர்ஜி (Haris Mukherji), தெலாங் (Telang), ரானடே போன்றவர்களின் தலைமையின் கீழ், இந்து சமுதாயம், மேல்நாட்டுக் கல்வியையும் கலாசாரத்தையும் பெறுவதற்குக் காட்டிய ஆவலையும் ஆர்வத்தையும் முஸ்லீம்கள் காட்டவில்லை. பல காலமாகப் பழக்கப்பட்டிருந்த பழைய கல்வி முறையையே அவர்கள்

விரும்பினார்கள். பிரிட்டிஷ் ஆட்சி சம்பந்தமாக அவர்களது கொள்கையும் வேறு விதமாய் இருந்தது. இந்தியாவின் பெரும்பாகத்தின்மீது முன்பு அவர்கள் செலுத்திய அரசியல் ஆதிக்கத்தைக் குறித்து அவர்கள் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார்கள்; சிடுசிடுப்பான கோபத்தை அவர்கள் ஆங்கிலேயரிடம் கொண்டிருந்தார்கள். அதனால், தீவிரமான **'வஹ்ஹாபி இயக்கத்'**தையும் (Wahhabi Movement), 1857-59 ஆம் ஆண்டின் பெருங்கலகத்தையும் அவர்கள் இயற்கையாக ஆதரித்தார்கள்; அதை அனுதாபத்துடன் நோக்கினார்கள். மிகு ஆரம்ப நிலையிலேயே, 'பிரித்து ஆட்சி செய்' (Divide and Rule) என்னும் கொள்கை மூலம், இந்த நிலைமையைப் பயன்படுத்திக்கொள்ள ஆங்கிலேயர்கள் முயன்றார்கள் என்பதை அறிய வியப்புண்டாகிறது. 'இந்த இனம் (முஸ்லீம்கள்) நமக்கு அடிப்படையிலேயே பகையாய் இருக்கிறது என்கிற நம்பிக்கையை நான் ஏற்றுக்கொள்ள வேண்டியுளது. அதனால், இந்துக்களுடன் ஒத்துப் போவதே நமது உண்மையான கொள்கையாக இருக்கவேண்டும்,' என்று எல்லன்பரோ பிரபு 1843-ல் எழுதியிருந்தார். இந்துக்களிடம் தேசிய உணர்ச்சி வளர்ந்து, அது படிப்படியாக ஆங்கிலேயர்களின் மனத்தை மாற்றி, முஸ்லீம்களுக்கு அவர்கள் ஆதரவு அளிக்கும் வரையிலும் இக்கொள்கை சில காலத்திற்கு வெற்றிகரமான முறையில் பின் பற்றப்பட்டு வந்தது.

பிரிட்டிஷ் ஆட்சியாளரின் போக்கில் ஏற்பட்ட இந்த மாறுதலும் சர் சையது அஹமது தலைவராகி அவர்களின் கொள்கைகளிலும் நடவடிக்கைகளிலும் புதிய திருப்பத்தை உண்டாக்கியதும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தன. மேல்நாட்டுப் படிப்பில் இந்துக்களைவிட முஸ்லீம்கள் மிகப் பின் தங்கி இருந்தார்கள் என்கிற உண்மையும், அதனால் நாட்டில் உள்ள உயர்பதவிகளைத் தங்களுக்குத் தனி உரிமையாக்கிக் கொண்டார்கள் என்பதும் அவர் மனத்தில் நன்கு பதிந்திருந்தன. அதனால், முஸ்லீம்களிடையே ஆங்கில மொழியைப் பரப்புவதற்காக அவர் பாடுபட்டார். 1875-ல் அவர் ஒரு பள்ளியை நிறுவினார். வெகு சீக்கிரத்திலேயே அது அலிகாரிலுள்ள **முகம்மதிய ஆங்கிலக் கீழ்த்திசைக் கல்லூரியாய்** (Muhammadam Anglo-Oriental College) மாறியது. அவருடைய முயற்சிகள் மிகுந்த வெற்றியை விளைத்தன. முஸ்லீம்களுக்கிடையில் உயர்தரக் கல்வியையும் புதிய காலப் பண்பாட்டையும் வளர்ப்பதற்கு இக்கல்லூரி செய்த சேவையைப்போல

எந்த ஒரு நிறுவனமும், இவ்வளவு சேவையை எந்தச் சமுதாயத்திற்கும் செய்யவில்லை என்பது உண்மை; வெறும் புகழ்ச்சியன்று.

சர் சையது அஹமது என்பவர், தீவிரமான தேச பக்தரும், தேசியவாதியுமாவர். இல்பர்ட்டு மசோதாவையும், சிவில் பணியாளர் தொகுதிக்கு ஒரே சமயத்தில் தேர்வை நடத்த வேண்டுமென்கிறதை ஆதரித்து நடத்தப்பட்ட கிளர்ச்சியையும் அவர் ஆதரித்தார். இந்தியாவிலிருக்கும் இந்தியர்களும் முஸ்லீம்களும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்களே என்கிற கொள்கையை அவர் கொண்டிருந்தார். 'அவர்கள் இந்தியாவின் இரண்டு கண்கள். ஒரு கண்ணுக்குச் செய்த தீங்கு மற்றொன்றிற்கும் செய்த தீங்காகும். மனத்திலும் ஆன்மாவிலும் ஒன்று சேர்வதற்கு நாம் முயலவேண்டும்; ஒருமையுடன் செயலாற்ற வேண்டும். ஒன்றுபட்டால், நாம் ஒருவரை ஒருவர் ஆதரிக்கலாம். இல்லையானால்; ஒருவருக் கெதிராக ஒருவருக்கு ஏற்பட்ட விளைவினால், இருவருக்குமே அழிவும் வீழ்ச்சியும் ஏற்படும்,' என அவர் கூறினார். 'ஆட்சி புரியும் இனத்துடன் சமத்துவம் பெறுமல் இருக்கும் வரையிலும் தங்கள் சொந்த நாட்டின் ஆட்சியில் கலந்து கொள்ளாதவரையிலும், எந்நாட்டு மக்களும், புகழையும் மதிப்பையும் பெற இயலாது,' எனத் தமது நோக்கத்தை அவர் மேலும் கூறினார். இவ்வளவு தாராளமான நோக்கங் களைக் கொண்டிருந்தபோதிலும், காங்கிரஸின் இயக்கத்தைச் சர் சையது அஹமது, ஆரம்பத்திலிருந்தே எதிர்க்கவேண்டு மென எதிர்த்து வந்தார். முஸ்லீம் சமுதாயம் அதிலிருந்து விலகியிருக்க வேண்டுமென்று அவர் வற்புறுத்தினர்; சிவில் பணியாளர் தொகுதிக்கு ஒரே சமயத்தில் தேர்வு நடத்த வேண்டும் என்கிற கோரிக்கை உட்பட, காங்கிரஸின் எல்லா நோக்கங்களையும் அவர் எதிர்த்தார். தேர்வைப்பற்றிய காங்கிரஸின் கோரிக்கையை அவரே முன்பு ஒரு தரம் ஆதரித்தார் என்பது குறிப்பிடத் தக்கது. அரசியல் பொருள் களைப்பற்றி விவாதிப்பதால் முஸ்லீம்களுக்கு ஒரு பயனும் இல்லை என்ற காரணத்தினாலும், கல்விதான் அவர்களுக்கு முன்னேற்றத்தைக் கொடுக்கக் கூடிய ஒரே சாதனம் என்ற காரணத்தாலும் கல்வி சம்பந்தப்பட்ட காங்கிரஸ் (Educational Congress) என்கிற ஒரு போட்டி நிறுவனத்தை, 1886-ல் அவர் உண்டாக்கினர். காங்கிரஸை எதிர்ப்பதற்காக வேறு இரண்டு சங்கங்களையும் அவர் உண்டாக்கினர். ஐக்கிய இந்தியர்களின் தேசபக்தியுள்ள சங்கம் (United Indian Patriotic Association)

என்கிற முதலாவது சங்கத்தை 1888-ல் அவர் ஏற்படுத்தினார். அதில் இந்துக்களும் முஸ்லீம்களும் அங்கத்தினர்களாய் இருந்தார்கள்; ஆனால், 1893-ல் ஏற்படுத்தப்பட்ட இரண்டாவது சங்கம், 'மேல் இந்தியாவின் முகம்மதிய ஆங்கிலக் கீழ்நாட்டுப் பாதுகாப்புச் சங்கம்' (Muhammadan Anglo-Oriental Defence Association of Upper India) என்னும் பெயரைப் பெற்று முஸ்லீம்கள் ஆங்கிலேயர்கள் ஆகியவர்களை மட்டும் அங்கத்தினர்களாக அது சேர்த்துக்கொண்டது.

சர் சையது அஹமதுவின் மனப்பான்மையில் ஏற்பட்ட மாறுதலுக்கு ஆங்கிலேயர்கள் பின்பற்றிவந்த 'பிரித்து ஆளும் கொள்கை' ஓரளவுக்குக் காரணமாய் இருக்கலாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அக்கொள்கை, இந்துக்களிடம் அப்பொழுது பின்பற்றப்பட்டது. 1883 முதல் 1899 வரை அலிகாரிலுள்ள முகம்மதிய ஆங்கிலக் கீழ்த்திசைக் கல்லூரிக்கு முதல்வராய் இருந்த திரு. பெக்கு (Mr. Beck) என்பவர், அக்கொள்கையை விளக்கிக் கூறும் ஒரு பெரிய நிபுணராய் விளங்கினார். தேசிய இயக்கத்திலிருந்து சர் சையது அஹமது என்பவரை விலக்கி வைக்கவும், இந்துக்களிடமிருந்து ஒதுங்கியிருக்கும்படி முஸ்லீம்களைத் தூண்டவும், பிரிட்டிஷ் ஆட்சியின் பாதுகாப்பின்கீழ் அவர்களைக் கொண்டு வரவும், இந்த நீண்ட காலத்தில் பெக்கு என்பவர், ஓயாத ஆவலுடனும், இடைவிடாத முயற்சியுடனும் உழைத்தார். பெக்கின் முயற்சிகள் வெற்றிகரமாய் இருந்தாலும், அவைகளே சர் சையது அஹமது காங்கிரசை எதிர்ப்பதற்கு முக்கியமான காரணங்கள் என நினைக்க வேண்டுவதில்லை. ஆங்கிலக் கல்விதான் சமுதாயத்திற்கு மிகவும் அவசியமானது என்றும், அதன் ஆற்றலை அரசியலுக்குத் திருப்புவது அறிவீனம் என்றும் ஓர் உண்மையான நம்பிக்கையை உடையவர் அவர். மக்கள் ஆட்சி ஏற்பட வேண்டும் என்கிற காங்கிரஸின் கோரிக்கையில், முஸ்லீம்களின் நோக்கத்திற்குப் பெருந்தீங்கை உண்டாக்கும் சிலவற்றை அவர் கண்டு பிடித்தார் என்பதும் உண்மையாய் இருக்கலாம். இந்திய மக்கள் தொகையில் முஸ்லீம்கள் நான்கில் ஒரு பங்காய் இருந்ததால் காங்கிரஸ் தலைவர்களின் நோக்கமான மக்களாட்சியில் மிகப் பெரிய சமுதாயம், மிகச் சிறிய சமுதாயத்தின் நலன்களை ஒதுக்கித் தள்ள இயலும் என்கிற பயத்தை, சர் சையது அஹமது என்பவர் வெளிப்படையாகவே தெரிவித்தார். அவருக்குப் பிறகு வந்த பல முஸ்லீம் தலைவர்களும் இவ்வெண்ணத்தைக் கொண்டிருந்ததால்,

அவர்களுடைய கொள்கைகளும் நடவடிக்கைகளும் மாறின. சர் சையது அஹமது 1898-லும் திரு. பெக்கு என்பவர் 1899-லும் இறந்தனர்; ஆனாலும், அவர்களுடைய கொள்கை பின்பற்றப்பட்டு, பிற்கால ஆண்டுகளில் முஸ்லீம் அரசியலின் பின்னணியாய் விளங்கியது. பிற்காலத்தைப்போல, அப்பொழுதுங்கூடச் சில முக்கிய முஸ்லீம் தலைவர்கள் சில சமயம் பரந்த நோக்கங்களைக் கொண்டு, தேசியக் கொள்கையைக் கடைப்பிடித்து, காங்கிரசைத் தீவிரமாக ஆதரிப்பவர்களாய் இருந்தாலும், அவர்கள் தங்கள் சமுதாயத்தைத் தங்கள் கொள்கைக்கு மாற்ற முடியாமல், சில சமயங்களில் பழைய கொள்கையையே பின்பற்றும்படி நேரிட்டது. சர் சையது அஹமது அவர்களால் முதன்முதலில் வெளிப்படையாகக் கூறப்பட்டதும், பெக்கு என்பவராலும் அவருக்குப் பின் வந்தவர்களாலும் பிரசாரத்தின் மூலமாக மிக அதிகமாகப் பரப்பப்பட்டதும், முஸ்லீம் அரசியலின் பற்பல நிலைமைகளில் ஊக்குவிக்கப்பட்டதுமான 'பெரும்பான்மைக் கட்சியினரின் ஆட்சி' என்கிற பேரச்சம்பற்றியும், முஸ்லீம்களை நியமனம் செய்வதற்கான கோரிக்கைகளையும், சலுகைகளுடன் கூடிய தனி வாக்காளர் தொகுதியைப் (Separate Electorate) பற்றியும், கடைசியாகப் பாக்கிஸ்தானைப் பற்றியும் பின்வரும் அத்தியாயங்களில் விவரிக்கப்படும்.

## 4. வாணிகமும் தொழிலும்

### (அ) வாணிகம்

இந்தியாவின் அயல் நாட்டு வாணிகம் எவ்விதம் ஐரோப்பியர்களின் கைகளுக்கு—முக்கியமாக ஆங்கிலேயர்களின் கைகளுக்கு—மாறியது என்பதைப் பற்றி முன்பே குறிப்பிட்டிருந்தோம். கிழக்கிந்தியக் கம்பெனியின் வாணிகத் தனி உரிமை, 1813-ல் ஒழிக்கப்பட்டு, இந்திய வாணிகத்தில் எல்லா ஐரோப்பியர்களும் சமமாகப் பாவிக்கப்பட்டாலும், பத்தொன்பதாம் நூற்றாண்டு முடியும் வரையிலும் ஆங்கிலேயரே இந்திய வாணிகத்தில் தனி உரிமையை நடைமுறையில் பெற்றிருந்தனர். ஆங்கிலேயரின் கடலாதிக்கமும் இந்தியாவில் அவர்களுக்கு இருந்த அரசியல் ஆதிக்கமும் இதற்குக் காரணமாய் இருந்தாலும், வரலாறு சம்பந்தப்பட்ட வேறு பல காரணங்களும் இருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலேதான், ஜெர்மனியும் ஜப்பானும் இந்திய வர்த்தகத்தில் ஆங்கிலேயருக்கு இருந்த தனிச் சலுகையில் தலையிட ஆரம்பித்தன.

சூயஸ் கால்வாய் கப்பல் போக்குவரத்திற்குத் திறக்கப் பட்டவுடன் அயல்நாட்டுக் கடல்வாணிகம், மிகவும் அதிக அளவில் பெருகியது. 1855ஆம் ஆண்டிற்கும், 1860ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் இந்திய வாணிகத்தின் ஒவ்வோர் ஆண்டின் சராசரி மதிப்பு ஐம்பது லட்ச ரூபா யாய் இருந்தது. 1859-ல் சூயஸ் கால்வாய் திறக்கப்பட்டது. அவ்வாண்டிலிருந்து ஐந்து வருட காலத்தில், ஆண்டு தோறும் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் சராசரி மதிப்பு, ஏறக்குறையத் தொண்ணூறு கோடி ரூபாயாய் இருந்தது. 1900-ல், இந்தச் சராசரி மதிப்பு, இருநூறு கோடிக்கும் அதிகமாய் இருந்தது; 1928–1929 ல் இது அறுநூறு கோடிக்கும் அதிகமாய் இருந்தது.

ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களும், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களும் மாறின. தொழிற்சாலைகளில் முற்றுப் பெற்ற பொருள்களை ஏற்றுமதி செய்வதற்குப் பதிலாக, சணல், கோதுமை, பருத்தி, எண்ணெய் வித்துகள், தேயிலை முதலியவைகளை இந்தியா ஏற்றுமதி செய்து, ஐரோப்பாவில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை (இவை களைப் பற்றிப் பின்பு குறிப்பிடப்படும்) இந்தியா இறக்குமதி செய்தது.

பெரிய அளவில் செய்யப்பட்ட அயல் நாட்டு வாணிகத் தால், உள்நாட்டு வாணிகமும் பெருகியது. ஆங்கில ஆட்சி யால் உண்டாக்கப்பட்ட நெடுங்கால அமைதி, உள்நாட்டுப் போக்குவரத்தின் மீது விதிக்கப்பட்ட தொல்லை தரும் தீர்வையைப் படிப்படியாக நீக்குதல், போக்குவரத்துச் செய்தித் தொடர்பில் ஏற்பட்ட வளர்ச்சி ஆகியவைகளால் இது எளிதாக்கப்பட்டது.

1836ஆம் ஆண்டிற்கும், 1844ஆம் ஆண்டிற்கும் இடையில் உள்ள காலத்தில், போக்குவரவின் மீது விதிக்கப்பட்ட தீர்வை, படிப்படியாக மாகாணங்களில் நீக்கப்பட்டு, 1848ஆம் ஆண்டில், மாகாணங்களுக்கிடையில் செய்யப்பட்ட போக்குவரத்தின் மீது விதிக்கப்பட்ட தீர்வையும் நீக்கப்பட்டது.

இருப்புப்பாதை, நீராவிக்கப்பல், கால்வாய்கள், தந்தி, புதை கம்பிகள் (Cables) ஆகியவை மூலமாகச் செய்யப்பட்ட போக்குவரத்தில் ஏற்பட்ட வளர்ச்சி, 1858ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் பெரும்பாலும் ஏற்பட்டது. இது இந்திய

வாணிகத்தைப் புரட்சிகரமாக மாற்றியது. பெருங்கலகம் ஏற்பட்ட காலம் வரையிலும், கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய இடங்களைச் சுற்றிலும் ஒரு சில மைல்களில் இருந்த இடங்களைத் தவிர, இந்தியாவின் மற்ற இடங்களில் இருந்த மக்கள் இருப்புப்பாதையைப் பற்றி ஒரு சிறிதும் அறியவில்லை. ஆனால், பெருங்கலகத்தில் ஏற்பட்ட பேரிடர் காரணமாக, விரைவான போக்குவரத்தின் உபயோகத்தை அரசாங்கம் அறியலாயிற்று. 1871ஆம் ஆண்டிற்குள் பல மாகாணங்களை இணைக்கவும், ஒவ்வொரு மாகாணத்தின் பின்னிலத்தையும் (Hinter Land) அதன் துறைமுகத்துடன் சேர்க்கவும் உதவியாய் இருப்பதற்குத் தகுந்த இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டன. 1851-ல் தந்திக் கம்பிகள் அமைக்கப்பட்டன; 1854-ல் மலிவான தபாற்கட்டண வீதங்களுடன் கூடிய ஆற்றல் வாய்ந்த அஞ்சல் முறை உண்டாக்கப் பட்டது. பெருங்கலகத்திற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்புதான், நீராவிக்கப்பல்கள், கங்கைநதியில் முதன் முறையாகச் செலுத்தப்பட்டன. சாலைகள், கால்வாய்கள் சம்பந்தப் பட்ட வரையில், 1854–1855-ல் பொது இயல் பணித்துறையை (Public Works Department) டல்ஹௌசி பிரபு ஏற்படுத்தும் வரையிலும், குறிப்பிடத்தக்க எவ்வித முன்னேற்றமும் செய்யப்படவில்லை. இறுதியாக, 1865ஆம் ஆண்டிலேதான், இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே தந்தி இணைப்பு ஏற்பட்டது.

## (ஆ) தொழில்

இந்தியத் தொழிலும் வாணிகமும் அழிவுற்றதைப்பற்றி, முன் ஓர் அத்தியாயத்தில் நாம் பார்த்தோம். மேற்கு நாடுகளிலிருந்து புதியனவாகவும் மலிவாகவும் வந்த இயந்திரங்களால் செய்யப்பட்ட பொருள்கள், இந்தியர்களின் விருப்பத்தையும் பழக்கங்களையும் மாற்றின. இந்தியாவின் பழைய உற்பத்திப் பொருள்கள் நீக்கப்பட்டு, அயல் நாட்டு இறக்குமதிப் பொருள்கள் ஆதரிக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியில், இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் பட்டியலைப் பொருளாதார, சமுதாய நோக்கத்துடன் பார்த்தால், அவை மிகவும் வியப்பாக இருக்கும். பட்டுத் துணிகளும், கம்பளித் துணிகளும், தோலும், தோலினால் செய்யப்பட்ட பொருள்களும், மரத்தினால் செய்யப்பட்ட அலமாரி நாற்காலி மேஜை வகைகளும், கடிகாரங்களும், கைக்கடிகாரங்களும், மட்பாண்டங்

களும் பீங்கான் பாண்டங்களும், கண்ணாடியும் கண்ணாடியால் செய்யப்பட்ட பொருள்களும், காகிதமும், ஓட்டு அட்டைகளும், எழுது பொருள்களும், குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்களும், போட்டி விளையாட்டிற்கு வேண்டிய பொருள்களும், நறுமணப் பொருள்களும், சிகரெட்டுகளும், வண்டிகளும், போக்குவரத்து வாகனங்களும், மிக அண்மையில் சைக்கிள்கள், மோட்டார்-சைக்கிள்கள், மோட்டார் கார்கள் போன்ற ஆடம்பரப் பொருள்களும். இறக்குமதிப் பொருள்களாய் இருந்தன. இவற்றுடன், ஒவ்வொரு வீட்டிற்கும் அவசியமான தீப்பெட்டிகள், தையல் இயந்திரங்கள், குடைகள், சவுக்காரம் (சோப்பு), மலிவான கண்ணாடி பீங்கான் பொருள்கள், பேனாக்கள், பேனா முட்கள், துத்தநாகம், எனாமல் பூசப்பட்ட இரும்பு வகைகள், மின்சாரக் கைவிளக்குகள் (Torches), மண்ணெண்ணெய் போன்ற சாமான்கள் ஆகியவற்றை மேற்குறிப்பிட்டவைகளுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவ்விரண்டு பட்டியல்களும். இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தையும் கொடுக்கவில்லை. இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள், புதிய விருப்பத்தையும் புதிய பழக்கங்களையும் தெரிவிக்கின்றன. நேர்த்தியான கம்பளம், பட்டு, பருத்தித் துணிகள், மணிவெண்கலப் பொருள்கள் போன்றவைகளை உண்டாக்கும் இந்தியத் தொழில்கள் அழிவதற்கு இவை காரணமாய் இருந்தன. இவற்றை இறக்குமதி செய்யாவிட்டால், இப்பொழுதுங்கூட இவை செழிப்பாய் இருந்திருக்கும்.

இவ்விதம் மெதுவாகவும் உறுதியாகவும் அயல் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள், இந்தியச் சந்தைகளுக்குக் கொண்டு வந்து நிரப்பப்பட்டன. அதனால், இந்தியாவின் பழைய தொழில்கள் இந்தியப் பொருளாதாரத்தில் பெரும்பங்கைப்பெற இயலவில்லை.

மேல் நாடுகளால் உண்டாக்கப்பட்ட திடீர் அதிர்ச்சியிலிருந்து படிப்படியாக இந்தியா விடுபட்டது. மிக்க நாகரிகமும் அறிவும் பெற்ற இந்தியர்களைப்போன்ற இனத்தார், மரத்தை வெட்டுதல், தண்ணீர் இறைத்தல் போன்ற முக்கியமற்ற வேலைகளை இந்தத் தொழிலுலகத்தில் நெடுங்காலத்திற்குச் செய்துகொண்டிருக்க இயலாது. புதிய வழிகளைப் பின்பற்றித் தொழிற்சாலைகள் படிப்படியாக ஏற்படுத்தப்பட்டன. 1870-ல் இதனுடைய சாதகமான விளைவு இறக்குமதி, ஏற்றுமதி ஆகியவைகளில் தெளிவாய்த் தெரிந்தது.

இதன்படி, இந்தியாவின் ஏற்றுமதிப் பொருள்களில் இந் நாட்டுப் பொறி செய்பொருள்களின் (Manufactured goods) விகிதாச்சாரம், 1879-ல் எட்டிலிருந்து 1892-ல் பதினுருகவும், 1907–1908-ல் இருபத்திரண்டாகவும் உயர்ந்தது. அதே சமயத்தில், இந்தியாவின் இறக்குமதிப் பொருள்களில், பொறி செய் பொருள்களின் விகிதாச்சாரம், 1879-ல் 65 சதவிகிதத்தி லிருந்து, 1892-ல் 57 சதவிகிதமாகவும் 1907-ல் 53 சதவிகித மாகவும் குறைந்தது.

இந்தியாவின் கட்டமைந்த தொழில்களில் (Organised Industries) பருத்தி, சணல், இரும்பு, எஃகு (Steel), காகிதம், தோல் பதனிடுதல், தோல் ஆகியவற்றை மிக முக்கியத் தொழில்களாகக் குறிப்பிடலாம். பத்தொன்பதாம் நூற்ருண்டு வரையில் இப்பண்டங்களின் மொத்த வாணிகத் துடன் இத்தொழில்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை ஒப்பிடுகையில், அவற்றின் முன்னேற்றம் மிகக் குறைவாவே இருந்தது. இப்படியிருந்த பொழுதும், ஆரம்பம் மிக நன்ருய் இருந்தது. அதற்குச் சிறப்பான எதிர்காலம் இருந்தது. இத்தொழிற்சாலைகளை இந்தியர்கள் மட்டும் நிருவகிக்கவில்லை என்பதையும், சிலவற்றை ஐரோப்பியர் நிருவகித்தனர் என்பதையும் குறிப்பிட வேண்டும்.

இந்தியாவில் இப்புதிய தொழில்களில் ஏற்பட்ட ஊக்கத்தின் தன்மையையும் அளவையும் பருத்தி ஆலைகளின் வரலாற்றில் காணலாம். 1818-ல் கல்கத்தாவில் நிறுவப்பட்ட ஆலை போன்ற ஒரு சில தனி நிகழ்ச்சியைத்தவிர, இத் தொழில், முதன்முதல் பம்பாயை மையமாகக் கொண்டே வளர்ந்தது. 1854-லேதான், முதலாவது ஆலை ஏற்படுத்தப் பட்டது. 1877ஆம் ஆண்டிற்குப்பிறகு, நாகப்பூர், அஹமதா பாது, ஷோலாப்பூர் போன்ற பருத்தி விளையும் இடங்களிலும் மற்ற இடங்களிலும் பல பருத்தி ஆலைகள் ஏற்படுத்தப்பட்டன. 1905-ல் உண்டான சுதேசி இயக்கம், இத்தொழிலுக்குத் தூண்டுதலையளித்தது. அதிலிருந்து வங்காளத்திலும் இந்தியாவின் மற்றப்பாகங்களிலும் பல ஆலைகள் ஏற்படுத்தப் பட்டன.

மற்றவைகளைப் போல, வளர்ச்சியடையாத இத் தொழிலும், மிகுந்த இடுக்கண்களை எதிர்த்தே முன்னேற்றத்தைக் காண வேண்டியிருந்தது. மேற்கு நாட்டவரால் உறுதியாகக் கைப்பற்றப்பட்ட சந்தையில் ஓர்

இடத்தைப் பெறுவதற்கு இத்தொழில் போராட வேண்டி இருந்தது. மேல்நாட்டு உற்பத்தியாளர்களின் நெடுங்காலப் பரிபக்குவ அனுபவத்துடனும் வரையறையற்ற மூலதனத்துடனும் இத்தொழில் போட்டியிட வேண்டியிருந்தது. பொருத்தமற்ற இப்போட்டியில், அரசாங்கத்தின் ஆதரவு கிடைக்குமென்ற நம்பிக்கையும் இதற்கு இல்லை. அதற்கு மாருக, அரசாங்கத்தின் நேரிடையான பகையை இது முதலில் சமாளிக்க வேண்டியிருந்தது எனப் பல நிகழ்ச்சிகள் விளக்குகின்றன. இந்திய ஆலைகளின் வளர்ச்சியையும் வெற்றியையும் கண்டு, லங்காஷையர் உற்பத்தியாளர்கள் மிகுந்த கலக்கம் கொண்டார்கள். அவர்களுடைய வற்புறுத்தலினுல் இந்தியத் தொழிலுக்குப் பாதுகாப்பாய் அமைந்த இறக்குமதித் தீர்வையை ஆங்கில உற்பத்தியாளர்கள் செலுத்த வேண்டுவதில்லை என இந்திய அரசாங்கம் அறிவித்தது. பணமுடை ஏற்பட்டதால், இறக்குமதித் தீர்வை மறுபடியும் விதிக்கப்பட்டது. லங்காஷையர் உற்பத்தியாளர்களைச் சமாதானப்படுத்தும் முறையில், பம்பாயில் உற்பத்தியாகும் பருத்தித் துணிகளின்மீது அவர்கள் கொடுக்கும் இறக்குமதித் தீர்வைக்குச் சமமான ஆயத்தீர்வை விதிக்கப்பட்டது. இந்தியாவுக்கு ஏற்பட்ட துரதிருஷ்டம் காரணமாக, பதினெட்டாம் நூற்ருண்டில், இங்கிலாந்து கடைப்பிடித்த பாதுகாப்புக் கொள்கைக்கும், பத்தொன்பதாம் நூற்ருண்டின் தடையில்லா வாணிகக் (Free Trade) கொள்கைக்கும், இந்தியா பலியாக நேரிட்டது. மாறுபட்ட இக்கொள்கைகள், இங்கிலாந்திற்குச் சாதகமாயும், இந்தியாவிற்குப் பாதகமாயும் இருந்தன. இவ்வித இடுக்கண்களால், இந்தியத் தொழில் மிக வேகமாக வளர்ச்சியடைய இயலவில்லை.

# 5. அரசியல் உறவுகள் (1906–1937)

## 1. வடமேற்கு எல்லைப்புறம்

வடமேற்கு எல்லைப்புறத்தின் துயரளிக்கும் பிரச்சினையைப் பற்றிக் கர்சான் பிரபு (Lord Curzon) மிகத் தீவிரமாக ஆலோசித்தார்; 1899ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில் இந்தியாவிற்கு வந்த உடனே ஏறத்தாழ 10,000 பிரிட்டிஷ் துருப்புகள், பிரிட்டிஷ் எல்லைக்கு அப்பால், நெடுந்தூரத்தில் இருப்பதைக் கண்டார். இப்புதிய வைசிராய் மலைப் பிரதேசங்கள் சம்பந்தப்பட்ட வரையிலும், 'பின் வாங்குதல் ஓரிடத்தில் திரட்டுதல்' எனக் கூறப்பட்ட கொள்கையைக் கடைப்பிடித்தார். சித்திராலை (Chitral) வைத்திருப்பதையும், அந்நகரத்திலிருந்து பெஷாவர் வரையிலும் பாதை அமைக்கப் பட்டதையும் அவர் ஆதரித்தார்; ஆனால், மற்றவைகளில் 'முற்போக்கு' வாதிகளின் கொள்கையை அவர் ஏற்கவில்லை. அவரது கட்டளைப்படி, கைபர்க் கணவாய், குர்ரம் பள்ளத் தாக்கு (Kurram Valley), வாஜிரிஸ்தான் (Waziristan) போன்ற மலைவாசிகளின் பிரதேசங்களிலிருந்து ஏராளமான பிரிட்டிஷ் துருப்புகள் பின்வாங்கின; ஆனால், சக்தாரா (Chakdarra), மலகண்டு (Malakand), தர்காய் (Dargai) ஆகிய இடங்கள் வைத்துக்கொள்ளப்பட்டு, அரண் செய்யப்பட்டன. பிரிட்டிஷ் துருப்புகள் பின்வாங்கிய இடத்தில் மலைச்சாதியினர் உள்ள படை ஏற்படுத்தப்பட்டு, பிரிட்டிஷ் அதிகாரிகள் அல்லது இராணுவப் போலீசின் கீழ் வைக்கப்பட்டது. பிரிட்டிஷ் துருப்புகள் பிரிட்டிஷ் எல்லைக்குள் திரட்டப்பட்டன; மலகண்டிற்கு அடிவாரத்திலுள்ள தர்காய் வரையிலும், கைபர்க்கணவாயின் முகப்பிலுள்ள ஜாம்ரட் (Jamrud) வரையிலும், குர்ரம் பள்ளத்தாக்கின் வாயில் இருந்த தல் (Thal) வரையிலும் மிக முக்கிய இருப்புப்பாதைகள் அமைக்கப் பட்டன. அதே சமயத்தில், மலைவாசிகளுக்கு இறக்குமதி

செய்யப்படும் ஆயுதங்களை ஒழுங்குபடுத்தி வரம்பு செய்து, முக்கிய மலைச் சாதியினருக்குக் குறிப்பிட்ட காலங்களில் படிச்செலவுகளை அளித்து அமைதியைப் பாதுகாத்துக் குற்றங்களைத் தடுக்குமாறு அவர்களைக் கர்சான் பிரபு ஊக்குவித்தார்.

பஞ்சாப் அதிகாரிகளின் மிகுந்த எதிர்ப்புக்கிடையில், 1901ஆம் ஆண்டில் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைக் கர்சான் பிரபு ஏற்படுத்தியதை அவர் கொள்கையின் மற்றொரு பகுதியெனக் கொள்ளலாம். இதற்கு முன்பு வடமேற்கு எல்லையின் மாவட்டங்கள் பஞ்சாபிலிருந்த ஒரு லெப்டினென்டு கவர்னரின் ஆட்சியில் இருந்தன; இந்திய அரசாங்கத்தின் மறைமுகமான கட்டுப்பாடு மட்டுமே அதற்கு இருந்தது. 40,000 சதுர மைல் வரை பரவியிருக்கும் இப்புது எல்லைப்புற மாவட்டத்தில், மலகண்டு, குர்ரம், கைபர், டோச்சி (Tochi), வணு (Wana), சிந்து நதிக்கு அப்பாலிருந்த பஞ்சாபின் மாவட்டங்களில் டேரா காஜி கான் மாவட்டத்தைத் தவிர மற்ற எல்லா மாவட்டங்களும் இதில் சேர்க்கப்பட்டன; டேரா காஜி கான் மாவட்டம், பஞ்சாப் அரசாங்கத்தின்கீழ் இருந்தது. இந்திய அரசாங்கத்திற்கு நேரிடையாகப் பொறுப்புள்ள ஒரு தலைமை ஆணையாளரின்கீழ் இது வைக்கப்பட்டது. வடமேற்கு மாகாணங்கள் என முன்பு வழங்கிய பெயரை மாற்றி, 'ஆக்ரா அயோத்தியின் ஐக்கிய மாகாணங்கள்' என வழங்கப்பட்டது.

வடமேற்கு எல்லைப்புறத்தில் கர்சான் பிரபு ஏற்படுத்திய சிவில், இராணுவச் சீர்திருத்தங்களால், அமைதி நிலவியது; இதற்குமுன் அப்பிரதேசம் கடுமையான போரால் அவதிப்பட்டது; எல்லைப்புறப் போர்களால் ஏற்பட்ட அதிகமான செலவையும், ஓர் அளவுக்கு இவை குறைத்தன. இப்படி இருந்தாலும், 1900–1902ஆம் ஆண்டுகளில் மசூதுகளைத் (Mahsuds) தடுத்து நிறுத்துவதும், 1908--1909ஆம் ஆண்டில் ஏற்பட்ட மோமண்டுகள் (Mohmands), ஜக்காகேல் (Zakka Khel) ஆகியவர்களின் கலகங்களை அடக்குவதும் அவசியமாயின. ஆனல், அவர் பதவியிலிருந்த ஏழாண்டு காலத்தில் வடமேற்கு எல்லைப்புற இராணுவ நடவடிக்கை காரணமாக, 2,48,000 பவுன்களை மட்டுமே செலவு செய்தார் என்றும், 1894–1898ஆம் ஆண்டுகளில், 45,84,000 பவுன்கள் அதே நடவடிக்கைகளுக்காகச் செலவழிக்கப்பட்டன என்றும், கர்சான் பிரபு பெருமையுடன் கூறியுள்ளார்.

இப்படியிருந்த போதிலும், எல்லையின் பிரச்சினையைத் தீர்ப்பதற்குக் கர்சான் பிரபுவால் இயலவில்லை. மலைச் சாதியினரிடையே தீவிரமாகப் பரவியிருந்த அமைதியற்ற உணர்ச்சியை அவர் திட்டங்களால் தடுக்க இயலவில்லை; நீதி, வருமானம் ஆகியவைகள் சம்பந்தப்பட்ட நிருவாக இடர்கள் தொடர்ந்து, ஆட்சி நிலைநாட்டப்பட்ட மாவட்டங்களுக்கும் மலைப்பிரதேசங்களுக்கும் துன்பத்தைத் தந்தன. அவரது திட்டத்தின் தூண்கள் எனக் கருதப்பட்டவை, 1914–18ஆம் ஆண்டுகளில் உண்டான பெரிய போர்க் (Great War) குழப்பத்தால் சிதறுண்டன. மாறிய சூழ்நிலைக்குத் தகுந்தவாறு, மிகக் கடுமையான கொள்கையை வடமேற்கு மாகாணத்தில் அமுல் செய்வதற்கு இந்திய அரசாங்கம் முடிவு செய்தது; அதன்படி, முக்கிய இடங்களில் காவல் நிலையங்களை வைத்திருத்தல், நாட்டின் பல பாகங்களையும் இணைப்பதற்குப் பாதைகளை அமைத்தல், மலைப்பிரதேசங்களைக் காவல் செய்வதற்கு நாட்டுப்படைக்குப் பதிலாக இராணுவப் படைகளை அனுப்புதல், மலைவாசிகளிடம் நாகரிகத்தைப் பரப்புவதற்கு முயற்சி செய்தல் போன்றவைகள் செய்யப்பட்டன. இந்தியத் தேசிய இயக்கத்தின் செல்வாக்கு, மலைச்சாதியினர் விரும்பாத சமூக, கல்விச் சீர்திருத்தங்களைப் புகுத்துவதற்கு அரசாங்கம் செய்த முயற்சிகள் ஆகியவைகளினால் இப்பிரச்சினை மேலும் சிக்கலாகியது. 1919ஆம் ஆண்டில் நடந்த வாஜிரிகளின் எழுச்சி, 1925ஆம் ஆண்டில் ஏற்பட்ட மசூதுகளின் கலகம், 1930–1931ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட வாஜிரிகள், மோமண்டுகள், ஆப்ரிதிகள் ஆகியவர்களின் மிகப் பெரிய புரட்சி, 1933ஆம் ஆண்டில் உண்டான மோமண்டுகளின் கலகம், 1936–1937ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட தோரி கேல்களின் புரட்சி, ஆகியவைகளைப் போன்ற எல்லைக் கலகங்களை அடக்குவதற்கு மிகப் பெரிய இராணுவ ஏற்பாடுகளை இந்திய அரசாங்கம் அண்மைக்காலத்தில் செய்ய நேரிட்டது.

## 2. ஆப்கானிஸ்தானத்துடனும் பாரசீகத்துடனும் ஆங்கிலேயரின் உறவுகள்

### (அ) ஆப்கானிஸ்தானம்

பாரசீக வளைகுடா, மத்திய ஆசியா ஆகிய இடங்களில் உண்டான ரஷ்யாவின் அரசியல், வாணிக, கட்டட நடவடிக்கை

கள் 1914–18ஆம் ஆண்டுகளின் போரின்போது, காபூலிலிருந்த ஜெர்மன், ஆஸ்திரிய துருக்கித் தூதுகோஷ்டிகளின் சூழ்ச்சிகள் ஆகியவைகளினால், இந்திய அரசாங்கத்திற்கும், ஆப்கானிய நாட்டிற்குமிடையே நிலவிய உறவு மிகப் பாதிக்கப்பட்டது, 1901ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்களில் பிரிட்டிஷ் அரசுடன் ஒரு நட்புடன்படிக்கையைச் செய்து கொண்ட அப்துர் ரஹ்மான் என்கிற அமீர் இறந்த உடனே அவருக்கு வாரிசான ஹபிபுல்லாவோடு உடன்படிக்கையைப் புதுப்பிப்பதில் கர்சான்பிரபுவுக்குச் சிறிது துன்பம் நேர்ந்தது. அவ்வுடன்படிக்கை இரண்டு நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட ஓர் உடன்படிக்கை ஆதலால், அமீர் இறந்தவுடனே அதைப் புதுப்பிக்க அவசியமில்லை என ஹபிபுல்லா வாதாடினார்; ஆனால், கர்சான் பிரபு, அவ்வுடன்படிக்கை இரு மனிதர்களுக் கிடையே ஏற்பட்டது எனக்கூறி, அது புதுப்பிக்கப்பட வேண்டும் என வற்புறுத்தினார். சில ஆண்டுகள் வரையிலும் இந்திய அரசாங்கத்திடம் எவ்விதக் கடிதப்போக்கு வரத்தையும் அமீர் ஹபிபுல்லா வைத்துக்கொள்ளவில்லை; உதவித்தொகையை ஏற்க மறுத்து, ‘மேன்மை தங்கிய அரசர்’ என்கிற பட்டத்தை அவர் வைத்துக்கொண்டார். ரஷ்யாவின் ஆங்கில எதிர்ப்பு நடவடிக்கைகளே சந்தேகமில்லாமல் அப்படிச் செய்யும்படி அவரைத் தூண்டின. இந்தியாவில் கர்சான் பிரபு இல்லாத சமயத்தில், தற்காலிக வைசிராயாய் இருந்த அம்த்ஹில் பிரபு (Lord Ampthill) 1904ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்களில், சர்லூயிடேன் (Sir Louis Dane) என்பவரின் தலைமையின்கீழ் ஒரு தூதுக்குழுவைக் காபூலுக்கு அனுப்பினார். 1905ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்களில் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது; அதன்படி, பிரிட்டிஷ் அரசரங்கத் திற்கும் அப்துர் ரஹ்மானுக்கும் இடையில் ஏற்பட்ட எல்லா ஏற்பாடுகளும் புதுப்பிக்கப்பட்டன; அமீர் ஹபிபுல்லா உரிமை கொண்டாடிய ‘மேன்மை தங்கிய அரசர்’ என்கிற பட்டத்தை அவர் வைத்துக்கொள்ளலாம் என ஆங்கிலேயர் ஒப்புக்கொண்டனர்.

இரண்டு ஆண்டுகளுக்குப்பிறகு, 1907ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்களில், ஆங்கில-ரஷ்ய உடன்படிக்கை கையெழுத்திடப் பட்டபின் நிலைமை தலைகீழாய் மாறியது. அதன்படி ரஷ்யாவின் செல்வாக்கு மண்டலத்திற்கு வெளியே இருக்கும் நாடாக ஆப்கானிஸ்தான் கருதப்படும் என ரஷ்யா ஒப்புக் கொண்டது; மேலும், இவ்வுடன்படிக்கை மூலம், இங்கிலாந் திற்கும் ரஷ்யாவிற்கும் அந்நாட்டில் சரிசமமான வாணிகச்

சலுகைகள் கிடைக்கும். 'இரு பெரிய அண்டை நாடுகள் ஒன்று சேர்வதை, இயற்கையான சந்தேகத்துடன்' அந்நாட்டு அமீர் நோக்கியதால், அவ்வுடன்படிக்கையின் விதிகளை ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஆனால், இதை யாரும் பொருட் படுத்தவில்லை; ஏனெனில், உடன்படிக்கைப்படி நடப்பதாக ரஷ்யா உறுதி கூறியது. இதிலிருந்து ஹபிபுல்லா தனியே ஒதுங்கி நின்றார்; ஆனால், முதல் உலகப்போரின்போதும் பகைவர்கள் தூண்டிய போதும், உறுதியான நடுவு நிலைமைக் கொள்கையைப் பின்பற்றி, இங்கிலாந்திற்கு அரிய சேவை களைப் புரிந்தார்.

ஐரோப்பிய வல்லரசுகளின் கூட்டம் ஆப்கானி ஸ்தானத்தில் மேற்கு நாகரிகத்தைப் புகுத்தச் செய்த முயற்சி களும், அந்நாட்டின் இஸ்லாமியச் சக்திகளின் ஒற்றுமை உணர்ச்சிக்கு ஆக்கமளித்தன; ரஷ்யாவில் 1917ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஜார் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர் இவை மிக வலுவடைந்தன; இவ்வீழ்ச்சியின் பயனாக, ஆங்கில-ரஷ்ய உறவும் மறைந்தது. ஐரோப்பிய ஒழுக்கங்களையும் வழக்கங் களையும் தம் நாட்டில் புகுத்த முயற்சி செய்ததனால், ஹபிபுல்லாவை ஆப்கானிஸ்தானத்திலிருந்த வைதிகர்களும் பிரிட்டிஷ் எதிர்ப்பாளர்களும் வெறுத்தார்கள். 1919ஆம் ஆண்டு, பிப்பிரவரித் திங்கள், 20ஆம் நாள் அவர் படுகொலை செய்யப்பட்டார்.

ஆட்சியைக் கைப்பற்றுவதற்காகச் சிறிய அளவில் போர் நிகழ்ந்தது; படுகொலை செய்யப்பட்ட அமீருக்கு மைந்தரான அமனுல்லா, அதில் வெற்றி பெற்றார். உள்நாட்டுப் பிரச்சினைகள் காரணமாகவும், போர்க்கட்சியின் செல்வாக்குக் காரணமாகவும், ஆங்கிலேயரின்மீது போர் தொடுப்பதற்கு அமனுல்லா முடிவு செய்தார். இவ்விதம், மூன்றாம் ஆங்கில-ஆப்கானியப்போர் (1919, ஏப்ரல்-மே) ஆரம்பமானது. ஆகாய விமானங்கள், கம்பியில்லாத்தந்தி, பெரிய வெடி குண்டுகள் ஆகியவைகளை பிரிட்டிஷ்-இந்தியப்படை உபயோகித்து, பத்து நாள்களுக்குள் ஆப்கானியப் படையை முறியடித்தது. ஜலாலாபாது, காபூல் ஆகியவைகளின்மீது குண்டு வீசப் பட்டது. மே மாதம் 14ஆம் தேதியன்று, போர் நிறுத்தத்தை ஆப்கானியர் கேட்டனர்; 1919ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள், 8ஆம் நாளன்று, ஓர் உடன்படிக்கை ராவல்பிண்டியில் கையெழுத்தாயிற்று; 1921ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், 22ஆம் நாள் செய்யப்பட்ட மற்றோர் உடன்படிக்கை இதை

அங்கீகரித்தது. இவ்வுடன்படிக்கைகளின்படி, படைக் கலங்களும் வெடிமருந்துகளும் இந்தியா வழியாகக்கொண்டு வரப்படுவது தடுக்கப்பட்டது; காலஞ்சென்ற அமீருக்கு உதவித்தொகை மூலம் ஆங்கிலேயர்கள் கொடுக்கவேண்டிய பணம், பறிமுதல் செய்யப்பட்டது; புதிய அமீருக்குப் புதிய உதவித்தொகை எதுவும் கொடுக்கப்படவில்லை. ஆனால், ஆப்கானிஸ்தானத்தில் அயல்நாட்டு விவகாரங்களைக் கட்டுப் படுத்தும் விருப்பம் தங்களுக்கு இல்லை என பிரிட்டிஷ் அரசாங்கம் கூறியது. இரு கட்சிகளும், ஒன்றன் சுதந்தரத்தை மற்றொன்று மதித்து நடக்கும் என அவை ஒப்புக்கொண்டன. இனிமேல், பிரிட்டிஷ் அமைச்சர் ஒருவர் காபூலில் தங்கி இருப்பார்; அமீரின் அமைச்சர்களுள் ஒருவர், அவருடைய பிரதிநிதியாய் இலண்டனில் தங்கியிருப்பார். சிறிய குழப்பங்கள், ஆப்கானிஸ்தானத்தில் போல்ஷ்விக்குகளின் நடவடிக்கைகள் ஆகியவைகள் இருந்தபோதுங்கூட, ஆங்கில-ஆப்கானிய உறவுகள், அதிலிருந்து சுமுகமாகவே இருந்தன.

ஆனால், வெகு சீக்கிரத்திலேயே, ஓர் உள்நாட்டுப் போர் ஆப்கானிஸ்தானத்தில் ஏற்பட்டது. 1928ஆம் ஆண்டின் கோடை காலத்தில், தமது ஐரோப்பியப் பிரயாணத்திலிருந்து திரும்பியதும், சீர்திருத்த ஆவலைக் கொண்டிருந்த அமீர் அமனுல்லா, சமூக, கல்வி, சட்ட சம்பந்தமாகச் சில உள் நாட்டுச் சீர்திருத்தங்களைப் புகுத்த முயன்றார்; ஆனால், அவைகளை அவர் நாட்டிலுள்ள பழமை விரும்பிகள் ஏற்கவில்லை. அவர்களது அதிருப்தி காரணமாக, 1929ஆம் ஆண்டு, மே மாதத்தில் ஓர் உள்நாட்டுப்போர் நிகழ்ந்தது; அதனால், அமனுல்லா தம் அரச பதவியைத் துறக்க நேரிட்டது; இப்பதவியை, பாச்சை-இ-சாக்கோ (Bachai-i-Saqqao) என்கிற துணிவுச் செயல் வீரர் பெற்றார். அப் போரின் பொழுது ஏற்பட்ட அமளி காரணமாக, மற்ற நாடுகளிடமிருந்து காபூலுக்குப் போக்குவரத்துச் செய்ய இயலாமல் போய்விட்டது; ஆயினும், ஏராளமான பிரிட்டிஷ் இந்திய மக்களையும் பல அயல்நாட்டினர்களையும், இறுதியாக, 1929ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 25ஆம் தேதி, தூதுவர் அலுவலகத்தையும் வெளியே கொண்டு செல்வதில், இராயல் விமானப்படை வெற்றி பெற்றது. இந்திய அரசாங்கம், ஆப்கானிய உள்நாட்டுப் போரின் போக்கை மிக்க கவலையுடன் நோக்கினும், 'கவனத் துடன் கூடிய தலையிடாக்' கொள்கையை அது பின் பற்றியது. முகம்மது நாதிர் ஷா, படிப்படியாக அமைதியை

ஏற்படுத்தினர்; பழைய அரச வமிசத்தைச் சேர்ந்த அவர், வெளியேற்றப்பட்ட அமீரின் சிறந்த அதிகாரியாவர். அவர் பொது மக்களால் அமீராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். உலக அனுபவத்தைப் பெற்ற அவர், அம்னுல்லாவின் சீர்திருத்தக் கொள்கைகளைப் பின்பற்ற விரும்பினர்; ஆனல், அச் சீர்திருத்தங்களை மிக்க கவனத்துடனும் திறமையுடனும் படிப் படியாக ஏற்படுத்தினர். இந்தியாவுக்கும் ஆப்கானிஸ்தானத் திற்கும் இடையே இருந்த உறவு, மறுபடியும் திருப்திகரமாய் இருந்தது. ஆனல், இந்நிகழ்ச்சிகளின் போக்கு, வருந்தத்தக்க விதத்தில் தடை செய்யப்பட்டது; ஏனெனில், 1933ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 8ஆம் தேதி, பொருமைகொண்ட தனிப்பட்ட வெறியன் ஒருவனல், நாதிர் ஷா அரசர் படுகொலை செய்யப்பட்டார். அவருக்கு மைந்தரான முகம்மது ஜாகிர் (Muhammad Zahir) அமைதியாய்ச் சிங்காதனமேறி, தம் தகப்பனரின் கொள்கைகளை விவேகத்துடன் பின்பற்றலானர்.

## (ஆ) பாரசீகம்

அரசியல், வாணிகக் காரணங்களினல் மத்தியக் கிழக்கில்-முக்கியமாகப் பாரசீக வளைகுடாவில்—கிரேட்பிரிட்டனுக்கு மிக முக்கிய நலன்கள் இருந்தன; இவைகளை அந்நாடு மிக்க பொறுமையுடன் பாதுகாத்து வந்தது. ஆனல், பிரான்ஸ், ரஷ்யா, ஜெர்மனி, துருக்கி போன்ற மற்ற வல்லரசுகள், பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதி ஆண்டுகளில், பாரசீக வளைகுடாவில் பிரிட்டனுக்கு மட்டும் இருந்த செல்வாக்கை எதிர்த்து, அவ்விடத்தில் தங்களுடைய ஆதிக்கத்தை நிறுவ முயன்றன. வடக்குப் பாரசீகத்தில் ஏற்பட்ட ரஷ்ய ஊடுருவல் காரணமாக, இங்கிலாந்து மிக்க அச்சங் கொண்டது. இந்திய அரசாங்கம், இந்நாடுகளின் உரிமைகளைக் கடுமையாய் எதிர்த்து, இவற்றின் முயற்சிகளைப் பயனற்றவை ஆக்கிற்று. 'பாரசீக வளைகுடாவில், கப்பல் தளம், அல்லது கோட்டையுடன் கூடிய காவல் நிலையத்தை மற்ற வல்லரசுகள் ஏற்படுத்துவது பிரிட்டிஷ் நலன்களுக்கு மிக்க பாதகமான செய்கையெனத் தயக்கமில்லாமல் நான் கூறுவேன் ; நம்மிடம் உள்ள எல்லா வழிகளையும் உபயோகப் படுத்தி, நாம் அதை அவசியம் எதிர்க்கத்தான் வேண்டும்,' என பிரிட்டனின் அயல்நாட்டுக் காரியதரிசியாரான லேன்ஸ் டௌன் பிரபு, பிரபுகள் சபையில், 1903ஆம் ஆண்டு, மே மாதம், 5ஆம்நாள் அறிவித்தார்.

பாரசீக வளைகுடாவில் பிரிட்டிஷ்காரர்களுக்கெதிராக இச்செல்வாக்கைத் தடுத்து நிறுத்துவதற்கான முதலாவது உறுதியான நடவடிக்கை, கர்சான் பிரபுவால் எடுத்துக் கொள்ளப்பட்டது; அவர் 1903ஆம் ஆண்டில் பாரசீக வளைகுடாவிற்குச் சென்று, பல நடவடிக்கைகள் மூலம் பிரிட்டிஷ் நலன்களைப் பாதுகாக்க முயன்றார்; துறைமுகங்களில் கான்சலேட்டுகளை (Consulates) ஏற்படுத்துதல், உள்நாட்டில் வாணிக நிலையங்களை ஏற்படுத்துதல், சர் பிரடெரிக்கு கோல்ட்ஸ்மித்து என்பவரால் 1872ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட எல்லைகளை வரையறுக்கும் வேலைகளை முடிப்பதற்காக, சர் ஹென்றி மக்மோஹன் தலைமையில் 1903-1905ஆம் ஆண்டுகளில் ஏற்படுத்தப்பட்ட ஷெயிஸ்தான் குழு (Saistan Mission), குவெட்டாவிலிருந்து நுஷ்கி (Nushki) வரையில் இருப்புப்பாதை அமைக்கும் திட்டம், நுஷ்கியிலிருந்து எல்லைப்புறக் காவல் நிலையமான ராபட் கிலா (Rabat Kila) வரையிலும் பாதையை அமைத்தல், அப்பாதை வழியாகத் தபால் இலாக்காவை ஏற்படுத்துதல், சுங்கத் தீர்வைகளையும் (Customs), சுங்க வரிகளையும் (Tariff) திருத்தி அமைத்தல், போன்றவை அவர் பின்பற்றிய சில நடவடிக்கைகள்.

மக்கள் ஆதரிக்கும் அரசியல் அமைப்பை விரும்பும் சக்திகள் அரச வமிசம் விரும்பும் தனி வல்லாட்சி ஆகியவைகளின் மோதல்களால், பாரசீகத்தில் கடுமையான நாட்டுக்குழப்பங்கள் உண்டாயின. இங்கிலாந்தும் ரஷ்யாவும் பாரசீகப் பிரதேசத்தில் ஆதிக்க மண்டலங்களை அமைதியான ஏற்பாட்டின் மூலம் தீர்மானிக்க உறுதிகொண்டு, 1907ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 31ஆம் தேதி, ஆங்கில ரஷ்ய உடன்பாட்டில் கையெழுத்திட்டன; இதன்படி பாரசீகத்தின் அரசியல் சுதந்தரத்தையும் ஒருமைப்பாட்டையும் மதிக்க வேண்டுமென இரு கட்சிகளும் ஒப்புக்கொண்டன. பாரசீகத்தின் வடக்கில், ஒரு ரஷ்ய ஆதிக்க மண்டலமும், தென் கிழக்கு மாகாணங்களில் பிரிட்டிஷ் ஆதிக்க மண்டலமும் வரையறுக்கப்பட்டன. ஒரு வல்லரசு மற்றொரு வல்லரசின் ஆதிக்க மண்டலத்தில், 'அதற்காவது அல்லது அதன் மக்களுக்காவது, இருப்புப் பாதை, பாங்கித் தொழில், தந்தி, பாதை, வாகனம், இன்சூரன்ஸ் சம்பந்தப்பட்ட அரசியல் வாணிகச் சலுகைகளைப் பெற முயல்வதில்லை எனவும், அந்நாட்டில் அவ்வல்லரசு அப்படிப்பட்ட சலுகைகளைப்

பெறுவதை மற்ற வல்லரசு தடைசெய்யக் கூடாதெனவும் ஒவ்வொரு வல்லரசும் ஒப்புக்கொண்டது.

மிக ஆபத்தான 1907-1910ஆம் ஆண்டுகளில், இங்கிலாந்திற்கும் ரஷ்யாவிற்கும் இடையே அதிக சச்சரவு ஏற்படாமல் தடுப்பதற்கு இவ்வுடன்படிக்கை உதவியாயிருந்தது என்பதில் ஐயமில்லை. அந்த ஆபத்தான காலத்தில், பாரசீகத்தில் பெருங்குழப்பம் ஏற்பட்டதனால், அதில் தலையிட்டுத் தன் நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள எந்த வல்லரசுக்கும் விருப்பம் இருந்திருக்கும். ஆனால், அவ்வுடன்படிக்கையையும் பலர் குறை கூறினர். சைக்ஸ் (Sykes) என்பார் கூறியபடி, அது 'பாரசிகர்களுக்குப் பெரிய குற்றமாகத் தென்பட்டது.' அவர்களுடைய தலைவிதியைப் பாதிக்கும் புதிய உடன்படிக்கை அவர்களைக் கலந்து பேசாமலே செய்யப்பட்டது. அவ்வுடன்படிக்கையைப் பற்றி லோவாட் பிரேஸர் (Lovat Fraser) கூறியவற்றில் பெரிய உண்மை உண்டு; 'மற்ற இனங்களின் மரபுரிமையை மேற்கு வல்லரசுகள் கையாளும் விதத்தில் குறை கூறும்படியாக எவையோ சில இருக்கின்றன,' என அவர் கூறினார். அவ்வுடன்படிக்கையினால் ரஷ்யா, இங்கிலாந்தைவிட அதிகமான ஆதாயத்தைப் பெற்றது எனச் சிலர் நினைக்கின்றனர். முன்னதன் ஆதிக்க மண்டலம், பாரசீகத்தின் அரைப்பாகத்திற்குமேல் பரவி இருந்தபோது, பின்னதன் ஆதிக்க மண்டலம், மிகக் குறைவாகவே இருந்தது. ஆனால், ஒரு விஷயத்தை இங்கிலாந்து தள்ளிவிட இயலாது. இதற்கு முன்பே அமைதியாகப் பின் வாங்கிச் செல்ல முடியாத அளவுக்குப் பாரசீகத்தின் வட பாகத்தில் ரஷ்யா அதிகமாக ஊடுருவிச் சென்றுவிட்டது; ஆகையால், இதை மனத்தில் கொண்டு, சர். ஜே. டி. ரீஸ் (Sir J. D. Rees) என்பவர் கூறியதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்; 'அப்பொழுதிருந்த ஒப்புக்கொள்ளப்பட்ட நிலைமையின்படி, கிரேட் பிரிட்டன் அதிக ஆதாயங்களை விட்டுவிடவில்லை,' என அவர் கூறினார்.

1914–18ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்த போரின் போது, உள்நாட்டுக் குழப்பங்கள் தொடர்ந்து இருந்தமையால் பாரசீகத்தின் நிலை மிகப் பரிதாபகரமாய் இருந்தது; அதனால், உறுதியான நடுவு நிலைமைக்கொள்கை பின்பற்றப்படுமென அது அறிவித்தது; ஆனால், ஜெர்மனி, தனக்காகவும் அல்லது ஜெர்மனியின் முன்னோடியாகவும் (Avant Courier) திகழ முயன்ற துருக்கி ஆகிய நாடுகளை ஆதரித்து உலகப்போரில்

பாரசீகத்தைச் சிக்க வைப்பதற்காக அந்நாட்டிலும், ஆப்கானிஸ்தானத்திலும், இந்திய எல்லைகளிலும் அந்நாடுகள் குழப்பத்தை உண்டாக்கி, கிரேட் பிரிட்டனுக்கும் ரஷ்யாவுக்கும் தொல்லை கொடுத்தன. இதனால், பாரசீக வளைகுடாவில், கிரேட் பிரிட்டன் தீவிர நடவடிக்கைகளை எடுக்க நேரிட்டது. இப்படியிருந்தும், பாரசீகத்துடன் அது கொண்டிருந்த நட்பு இணக்கமாகவே இருந்தது.

## 3. வடகிழக்கு எல்லைப்புறம்

### (அ) திபெத்தும், வடவெல்லையிலிருந்த நாடுகளும்

பெயரளவுக்குச் சீனாவின் மேலரசு உரிமையை ஏற்றுக் கொண்டாலும், நடைமுறையில் திபெத்து ஒரு சுதந்தரமான சமயச் சார்புள்ள ஆட்சி முறையைப் பெற்ற நாடு; லாசாவின் (Lhasa) தலாய் லாமா (Dalai Lama), ஷிகாட்சே (Shigatse) விற்கு அருகிலுள்ள தாசில் ஹன்போ (Thasilhunpo) எனும் பிரபல புத்தமடத்தில் வசித்த தாஷி லாமா (Thashi Lama) ஆகியவர்களால் இந்நாடு ஆட்சி செய்யப்பட்டது. அரசியல் அதிகாரங்கள் தலாய் லாமாவிடம் இருந்தன. அவர் சிறிய வராய் இருக்கும்போது, அவ்வதிகாரங்கள் ஒரு குழுவிடம் இருக்கும்.

திபெத்துடன் உறவு கொள்வதற்காக, 1774ஆம் ஆண்டிலேயே பல முயற்சிகள் செய்யப்பட்டன. ஷிகாட் சேயிலிருந்த தாஷி லாமாவிடம் தூது செல்வதற்காக போகில் (Bogle) என்பவரை வாரன் ஹேஸ்டிங்ஸ் அனுப்பினார். அந்நாட்டில், வாணிகச் சலுகைகளைப் பெறுவதுதான் அக்குழுவின் முக்கிய நோக்கம். ஆனால், பிற்காலத்தில் தங்கள் நாட்டுடன் பிரிட்டிஷ்காரர்கள் கொண்டிருக்கும் உறவைத் திபெத்தியர்கள் வெறுத்தார்கள். ‘காரணமற்ற தாக்குதலைப்’ பாதுகாக்கப்பட்ட சிக்கிம் (Sikhim) நாட்டின் மீது திபெத்தியர்கள் 1887ஆம் ஆண்டில் தொடுத்தார்கள். ஆனால், மறுவருடத்தில் ஜெனரல் கிரஹாம் அவர்களை விரட்டி யடித்தார். 1880ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஆங்கிலேய-சீனர்கள் உடன்பாட்டின் விதிகளைத் திபெத்தியர்கள் விருப்பமில்லாமல் ஏற்றுக்கொண்டார்கள்; சிக்கிம்-திபெத்து எல்லை, சில வாணிகச் சலுகைகள் ஆகியவைகளைப் பற்றியே அவ்விதிகள் கூறின; அவை 1893ஆம் ஆண்டில் மிகத் தெளிவாகக் கூறப் பட்டன.

இந்தியாவிற்குக் கர்சான் பிரபு வந்தவுடனே, திபெத்துடன் ஆங்கிலேயர் கொண்டிருந்த உறவு 'மிக மந்தமாய்' இருப்பதை உணர்ந்தார். இரு காரணங்களால், இப்பிரச்சினை மிகச் சிக்கலாகியது. ஒரு பக்கத்தில், தம் இளமைப் பருவத்தைக் கடந்துவிட்ட தலாய் லாமா, டோர்ஜீப் (Dorjieff) என்கிற ரஷ்ய நாட்டைச் சேர்ந்த பௌத்தரைத் தமக்கு ஆசிரியராய்க் கொண்டிருந்தார்; அவரது உதவியுடன், திடீர்ப் புரட்சி (Coup d'etat) செய்து அரசப் பிரதிநிதியின் ஆட்சியைக் கவிழ்த்து, அவ்வரசைக் கைப்பற்றிக்கொண்டார்; தாம் உறுதி வாய்ந்த அரசர் என்பதையும் காட்ட முயன்றார். மறு பக்கத்தில், சீனாவின் ஆதிபத்திய உரிமையை எடுத்தெறிந்துவிட்டு, அதற்குப் பதிலாக ரஷ்யாவின் நட்பைப் பெறத் திபெத்தியர் விரும்பினர். திபெத்தியத் தூதுக் குழுக்களை ரஷ்யாவிற்கு, 1898, 1900, 1901ஆம் ஆண்டுகளில் டோர்ஜீபுக்கு நடத்திச் சென்றார்; ரஷ்யாவுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு, திபெத்தை ரஷ்யாவின் பாதுகாப்பில் அவர் வைத்துவிட்டார் எனப் புரளிகள் பரவின. இப்புரளிகளை ரஷ்யா அதிகார பூர்வமாக மறுத்தது; இத்தூதுக் குழுக்களின் நோக்கம் சமய சம்பந்தமானவைகளே என, செயின்டு பீட்டர்ஸ்பர்கு (St. Petersburg) என்னுமிடத்திலிருந்த பிரிட்டிஷ் தூதுவரிடம் உறுதி மொழி அளித்தது. ஆனால், ரஷ்யத் திட்டத்தைப் பற்றி இங்கிலாந்து கொண்டிருந்த சந்தேகத்தை இது நீக்கவில்லை. உண்மையில், மத்திய ஆசியாவில், இங்கிலாந்திற்கும் ரஷ்யாவிற்குமிடையே நெடுங்காலமாய் இருந்துவரும் போட்டியின் ஒரு கட்டமாகவே, பிரிட்டனின் திபெத்தியக் கொள்கை திகழ்ந்தது.

இவ்விதம் ஏற்பட்ட நிலைமையைத் தடுப்பதற்காக, ஒரு தூதுக்குழுவை இராணுவப் பாதுகாப்புடன் திபெத்து நாட்டிற்கு அனுப்பக் கர்சான் பிரபு 1903ஆம் ஆண்டில் முடிவு செய்தார்; இராணுவப் பாதுகாப்பை, இங்கிலாந்து அரசு, மிக்க தயக்கத்துடனே அனுமதித்தது. அதன்படி, கர்னல் யங்ஹஸ்பெண்டு (Colonel Younghusband) தலைமையில் ஒரு தூதுக்குழு திபெத்திற்குப் புறப்பட்டது. திபெத்தியர்களின் பல சிறிய எதிர்ப்புகளுக்குப் பிறகு, 1904ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 3ஆம் தேதியன்று அது லாஸாவை அடைந்தது. இறுதியில் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி, கியான்ட்சே (Giyantse), கார்டோக் (Gartok), யாதுங் (Yatung) என்னும் இடங்களில் வாணிக நிலையங்களை ஏற்படுத்த அனுமதிப்பதற்கும், இருபத்தைந்து லட்ச ரூபாய்களை நஷ்ட

ஈடாகக் கொடுப்பதற்கும், தற்காலிக உறுதி மொழியாகச் சும்பிப் பள்ளத்தாக்கை (Chumbi Valley) ஆங்கிலேயர்கள் மூன்று ஆண்டுகளுக்கு எடுத்துக்கொள்வதற்கும், திபெத்தியர் ஒப்புக்கொண்டனர். 1906ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில், இங்கிலாந்தும் சீனுவும் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டன; அதன்படி முன்னது திபெத்தை இணைத்துக் கொள்வதில்லை என்றும், அதன் உள்நாட்டு ஆட்சியில் தலையிடுவதில்லை என்றும் உறுதி மொழி அளித்தது. மற்ற எந்த அயல் நாட்டு வல்லரசையும், திபெத்தின் உள்நாட்டு ஆட்சியில் தலையிடுவதற்கும் பிரதேச ஒருமைப்பாட்டைக் குலைப்பதற்கும் விடுவதில்லை எனப் பின்னது உறுதி மொழி அளித்தது. மேலும், அவ்வாணிக நிலையங்களைத் தந்தி மூலம் இந்தியாவுடன் இணைக்கும் அதிகாரம் இங்கிலாந்திற்குக் கொடுக்கப் பட்டது; 1890ஆம் ஆண்டின் உடன்படிக்கை விதிகளும், 1893ஆம் ஆண்டின் வாணிக விதிகளும் அமுலில் இருப்பது அறிவிக்கப்பட்டது. நஷ்ட ஈட்டைச் சீன அரசாங்கம் மூன்று ஆண்டுகளில் கொடுத்துவிட்டதால் சும்பிப் பள்ளத்தாக்கை விட்டு ஆங்கிலேயர் வெளியேறினர்.

யங்ஹஸ்பெண்டின் தூதால், எவ்வித முக்கிய அரசியல் விளைவுகளும் ஏற்படவில்லை. மூன்று வாணிக நிலையங்கள் திறக்கப்பட்டதும், கியான்ட்சேயில் ஒரு பிரிட்டிஷ் வாணிகப் பிரதிநிதியை நியமித்ததுமே அதனுடைய நேரிடையான விளைவுகள். 'லாசாவைத் திறந்து காட்டியதாக' யங்ஹஸ்பெண்டு பெரிதும் புகழப்பட்டார்; ஆனால், பண்டைக் காலத்திலும், இடைக்காலத்திலும் சமயத் தூதுக்குழுக்கள் வங்காளத்திலிருந்து திபெத்திற்குச் சென்றன என்பதையும், யங்ஹஸ்பெண்டு செல்வதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே, பிரபல அறிஞரும், நாடு கண்டுபிடிப்பவருமான, ராய் பஹதூர் சரத் சந்திர தாஸ், சி.ஐ.இ. (Rai Bahadur Sarat Chandra Das, C.I.E.) என்பவர், தெரியாததைப் பற்றிய பயமின்றி, உயிருக்கு ஆபத்து இருந்துங்கூடத் தடுக்கப்பட்ட தலாய் லாமாவின் நாட்டிற்குச் சென்றிருக்கிறார்.

1907ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஆங்கிலேய ரஷ்ய உடன் படிக்கையின்படி, சீனு மூலமாகத் திபெத்துடன் அரசியல் உறவு கொள்ள இங்கிலாந்தும் ரஷ்யாவும் ஒப்புக்கொண்டன. இது வரையிலும் திபெத்தின்மீது கொண்ட சீனுவின் மேலாட்சி உரிமை, ஒரு சாதாரண அரசியலமைப்புச் சம்பந்தப்பட்ட கட்டுக்கதையாய்த்தான் இருந்தது; ஆனால், இப்பொழுது,

அது வெளிப்படையாக உறுதிப்படுத்தப்பட்டது; அதனால், இயலும் அளவுக்கு அதை உண்மையானதென்று காட்டுவதற்குச் சீனா முயன்றது; அதனால், சீனத் துருப்புகள், திபெத்தில் புகுந்தன; அதைக் கண்டு பயந்த தலாய் லாமா, டார்ஜீலிங்கில் தஞ்சமடைந்தார். இந்திய அரசாங்கம் இதைப் பற்றிக் கூறியதால் சீன அரசாங்கத்தின் இக்கொள்கைக்கு எதிராக பிரிட்டிஷ் அரசாங்கம், தன் கடுமையான எதிர்ப்பைத் தெரிவித்தது. இந்திய அரசாங்கம் பின் பற்றிய இக்கொள்கையினாலும், உள் நாட்டுப் புரட்சி காரணமாகச் சீனாவில் குழப்பமேற்பட்டதனாலும், சீனர்களின் முயற்சிகளை எதிர்ப்பதற்குத் திபெத்தியர்களுக்கு அதிக ஊக்கம் பிறந்தது; இறுதியில் 1918ஆம் ஆண்டில், சீன மேலாட்சியின் கடைசிச் சின்னத்தையும் உதறித் தள்ளிவிட்டு, திபெத்துச் சுதந்தர நடாகியது.

1917ஆம் ஆண்டில் ஏற்பட்ட புரட்சிக்குப் பின் ரஷ்யாவில் உண்டான மாறுதல்களும், சீனாவில் அதிகமாகி வந்த குழப்பங்களும், திபெத்து நாட்டிலிருந்த ஆங்கிலேயரின் நலன்களுக்கு அயல் நாட்டினரால் ஆபத்து நேருமோ என இந்திய அரசாங்கம் கொண்டிருந்த கவலையைத் தீர்த்தன; அதிலிருந்து பிரிட்டனும் திபெத்தும், சுமுகமான உறவைத் தங்களுக்குள் ஏற்படுத்திக்கொண்டன. அரசியல் இலாக்காவைச் சேர்ந்த ஸ்ரீ ஜே. பி. கௌல்டு (Mr. J. B. Gould, I. C. S.) என்பவரின் தலைமையில் ஒரு பிரிட்டிஷ் நல்லெண்ணக்குழு 1936–1937ஆம் ஆண்டின் குளிர் காலத்தில் திபெத்திற்குச் சென்றது. திபெத்து அரசாங்க முக்கிய அதிகாரிகளுடனும், திபெத்திய மக்களுடனும் நட்புறவை அக்குழு ஏற்படுத்தியது; அல்லது புதுப்பித்தது.

இந்தியாவின் வட எல்லைகளிலிருக்கும் நேப்பாளம், சிக்கிம், பூட்டான் ஆகிய நாடுகளுடனும், சுமுகமான உறவு நீடித்தது. திபெத்து நாட்டில் ஏற்பட்ட சீன நடவடிக்கைகளை எதிர்ப்பதற்காக பூடான் நாட்டுடன் கொண்டிருந்த உறவை உறுதிப்படுத்துவதற்கு, அந்நாட்டுக்குக் கொடுக்கப்பட்டுவந்த ஐம்பதினாயிரம் ரூபாய் ஆண்டு உதவித் தொகையை, ஒரு லட்சமாக இந்திய அரசாங்கம் 1930ஆம் ஆண்டில் உயர்த்தியது; அதைத் தவிர பூட்டானின் அயல் நாட்டு விவகாரங்களில் உதவி செய்வதாகவும், உறுதி மொழி அளித்தது; இதன் பிறகு, பூட்டான், சிக்கிம் நாடுகளின் உரிமைகளையும் நலன்களையும் இந்திய அரசாங்கம் பாதுகாக்கும் எனச் சீனாவுக்கு அதிகார பூர்வமாக அறிவித்தது.

## (ஆ) அஸ்ஸாமும் பர்மாவும்

1905ஆம் ஆண்டில், வங்காளம் பிரிக்கப்பட்டவுடன், சுர்மாப் பள்ளத்தாக்கு (Surma Valley), பழைய வங்காள மாகாணத்தின் பதினைந்து மாவட்டங்கள் ஆகியவைகளைக் கொண்ட கீழ் வங்காளமும் அஸ்ஸாமும் சேர்ந்த புதிய மாகாணம் உண்டாக்கப்பட்டது. ஆனால், 1912-ல் இத்திட்டம் கைவிடப்பட்டதால், அஸ்ஸாம் மறுபடியும் தனி ஆட்சிப் பகுதியாகச் செய்யப்பட்டது. அஸ்ஸாமின் எல்லைப்புற மக்களான, டாப்ளாஸ் (Daflas), மிரிஸ் (Miris), அபோர்ஸ் (Abors) என்பவர்களுள், அபோர்ஸ் என்பவர்களே பிரிட்டிஷ் ஆட்சிக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். 1913-ல், மின்யோங், அபோர்ஸ் (Minyong, Abors) என்பவர்கள், திரு. வில்லியம்ஸன் (Mr. Williamson), டாக்டர் கிரெகோர்சன் (Dr. Gregorson) என்பவர்களைக் கொலை செய்ததற்குப் பிறகு, வடகிழக்கு எல்லையிலுள்ள அபோர்த் தேசமான திகாங் பள்ளத்தாக்கிற்கு (Dihang Valley) அவர்களை அடக்கும் எண்ணத்துடன் ஒரு படை அனுப்பப்பட்டது. அப்படை வெற்றி பெற்றதால், நட்புறவு தூதுக்குழுக்கள், மிரிப் பகுதிக்கும் (Miri country), மிஷ்மிப் பகுதிக்கும் (Mishmi country) அனுப்பப்பட்டன. பர்மா எல்லையிலுள்ள சைனாவின் யுன்னான் (Yunnan) மாகாண எல்லை சரிவர வரையறுக்கப் படாததால், பர்மாவின் பிரதேசத்திற்குள் சிறிய படையெடுப்பு நேரலாமென்று பிரிட்டிஷ் ஆட்சி அஞ்சியதால், அந்த எல்லைகள் மிக்க கவனத்துடன் பாதுகாக்கப்பட்டன. பர்மா, சைனாவின் மாகாணமான யுன்னான் ஆகியவற்றிற்கு இடையே உள்ள எல்லையை வரையறுக்கும் நோக்கத்துடன் சைனாவிற்கும் கிரேட் பிரிட்டனுக்கும் பேச்சு வார்த்தைகள் தொடங்கி, எல்லைக் கமிஷன் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அது பிரபல சுவிஸ் எஞ்சினியரான கர்னல் இசெலினைத் (Colonel F. Iselin) தலைவராகவும், பிரிட்டிஷ், சைனா ஆகியவைகளின் கமிஷனர்களையும் கொண்ட இக்கமிஷன், 1935, 1936ஆம் ஆண்டுகளில் இதைப்பற்றி விசாரித்து, 1937-ல், ஏகோபித்த அறிக்கையைச் சமர்ப்பித்தது, அவ்வறிக்கை, பர்மாவுக்கும் யுன்னானுக்கும் இடையேயிருந்த எல்லையை உறுதியாக வரையறுத்தது.

# 6. அரசியலமைப்பு மாற்றங்கள் (1906-1937)

## 1. வெள்ளை மாளிகையும் இந்திய அரசாங்கமும்

இந்தியக் காரியதரிசியார் மூலம், பிரிட்டிஷ் பாராளு மன்றம், இந்திய அரசாங்கத்தின்மீது செலுத்திய அதிகாரம் உறுதியான முறையில் நிலை நிறுத்தப்பட்டது. கர்சானைப் போன்ற ஆற்றல் வாய்ந்தவர்களையும், தாய்நாட்டு அரசாங்கம் தனது மேலுரிமையால் தள்ளிவைத்தது. மேற் பார்வை செய்யும் அதிகாரத்தையும், கட்டளையிடும் அதிகாரத்தையும், இந்தியக் காரியதரிசியாராய் இருந்த மார்லி பிரபு (Lord Marley) மிகத் தீவிரமாக வற்புறுத்திக் கூறினர்; அவருக்கு முன் இருந்தவர்களைவிட, அவர் இந்திய ஆட்சியில் அதிகமாகவும் நேரிடையாகவும் பங்குகொண்டார். 1918ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில், எடின்பரோ ரெவ்யூ (Edinburgh Review) என்னும் பத்திரிகையில், திரு. லோவட் பிரேஸர் (Mr. Lovat Fraser) என்பவர், 'வெள்ளை மாளிகையி லிருந்தவர்களுள் மார்லே பிரபுவே, அவரது நற்குணம் எப்படி இருந்தபோதிலும், உண்மையிலேயே மிக்க சர்வாதி காரத் தன்மையையுடைய அரசியலமைப்புக்குட்படாத இந்தியக் காரியதரிசியாராவார்,' எனக் கூறியுள்ளார். ஆனல், கவர்னர்-ஜெனரல் இந்தியாவிலிருந்ததால், அவரது பழைய 'விருப்பப்படி செய்யும் அதிகாரம்' முழுவதும் மறையவில்லை.

இந்நூற்றுண்டின் ஆரம்ப ஆண்டுகளில், இந்திய அரசாங் கத்தில் சில மாறுதல்களை—முக்கியமாக, இந்தியக் கவுன்ஸில் ஒழிக்கப்படவேண்டும் என்பதை—ஸ்ரீ கோகலே உட்பட, இந்தியர் பலர் கோரினர். பெருந்தன்மையுள்ள இந்தியர் இருவர், மார்லி பிரபுவின் கவுன்ஸிலின் அங்கத் தினராய் 1907ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டனர். உள்நாட்டு

ஆட்சியை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்காக 1919ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட ஒரு கமிட்டி, இந்தியக் கவுன்ஸிலை முற்றும் ஒழிக்க வேண்டுமென்று சிபாரிசு செய்தது; முன்னாள் இந்தியக் காரியதரிசியாராய் இருந்த கிரீவ் பிரபு (Lord Crewe) தலைவராயும், பேராசிரியர் ஏ. பி. கீத்தும் (Prof. A. B. Keith), ஸ்ரீ பி. என். பாசுவும் (Mr. B. N. Basu), மற்றும் பலரும் இக்கமிட்டியின் அங்கத்தினர்களாயும் இருந்தார்கள். ஆனால், இந்தச் சிபாரிசைப் பாராளுமன்றத்தின் கூட்டுக் கமிட்டி (Joint Committee) ஏற்கவில்லை. நுண்ணிய விவரங்களில் சில மாறுதல்களை இக்கமிட்டி ஆதரித்தது; இவை 1919ஆம் ஆண்டின் சட்டத்தில்[1] சேர்க்கப்பட்டன. கவுன்ஸிலில் ஏற்படும் எல்லா காலியிடங்களை, முன்புள்ளபடியே, இந்தியக் காரியதரிசியாரே நிரப்பலாம்; ஆனால், அதிலிருந்து அதன் அங்கத்தினர்களின் தொகை எட்டுக்குக் குறையாமலும், பன்னிரண்டிற்கு மேற்படாமலும் இருக்கவேண்டும்; அதில் பாதிப்பேர்கள், பத்து ஆண்டுக்குக் குறையாமல் இந்தியாவில் வசித்திருக்க வேண்டும்; அல்லது, பணி புரிந்திருக்கவேண்டும். மேலும், அவர்கள் அண்மையிலேதான் இந்தியாவை விட்டு வந்தவர்களாயும் இருக்க வேண்டும். அவர்கள் பதவி வகித்த காலம் ஏழு ஆண்டுகளிலிருந்து ஐந்தாண்டாகக் குறைக்கப் பட்டது. கவுன்ஸிலின் பெரும்பான்மையோரின் இசைவு கீழ்க்காண்பவைகளுக்கு மட்டுமே வேண்டும்:

(1) இந்திய வருமானத்தின் எப்பகுதியையும் அளித்தல் அல்லது ஒதுக்குதல், (2) ஒப்பந்தங்களைச் செய்தல், (3) சிவில் செர்வீஸ் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை ஒழுங்குபடுத்துவதற்கு வேண்டிய சட்டங்களைச் செய்தல்.

இக்கவுன்ஸில், இந்தியக் காரியதரிசியாருக்குத் தெளிவாகக் கீழ்ப்படிந்துதான் இருந்தது; இக்கவுன்ஸில் சம்பந்தப்பட்ட வரையிலன்றி, இந்திய அரசு சம்பந்தப்பட்ட வரையிலுங்கூட முக்கியமாகப் பேரரசு அல்லது இராணுவப் பிரச்சினைகள், அயல் நாட்டு உறவுகள், ஐரோப்பிய பிரிட்டிஷ் மக்களின் உரிமைகள், குடியுரிமைப் பேற்றுச் சட்டம், பொதுக்கடன், சுங்கங்கள், நாணயம், கப்பல் வாணிகம் முதலியவற்றில் அவர் பெற்றிருந்த தம் விருப்ப அதிகாரம்

1. இந்தப் பகுதியில் குறிப்பிட்டுள்ள 1919ஆம் ஆண்டின் சட்டத்திற்கும், 1935ஆம் ஆண்டின் சட்டத்திற்கும் 2ஆம் பகுதியைப் பார்க்க.

(Discretionary Powers) அவரிடமே விடப்பட்டது. 'மாற்றப் பட்ட துறைகள்' (Transfered subjects) மீதுதான் அவருடைய அதிகாரம் வரையறுக்கப்பட்டது. 1919ஆம் ஆண்டிற்குமுன், இந்தியக்காரியதரிசியாரின் சம்பளமும், அவர் இலாக்காவின் செலவுகளும் இந்தியாவின் வருமானத்திலிருந்து கொடுக்கப் பட்டன. இதனால், பிரிட்டிஷ் நிதிமந்திரியார் சமர்ப்பித்த வரவு-செலவுத் திட்டத்தைக் குறை கூறுவது போல, இந்திய வரவு-செலவுத் திட்டத்தைக் குறைகூற இயலவில்லை. இந்தியக் காரியதரிசியாரைப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவருவதற்காக, 'இந்தியக் காரியதரிசியாரின் சம்பளத்தைப் பாராளுமன்றம் ஒதுக்கிய பணத்திலிருந்து கொடுக்க வேண்டும்; அவருடைய உதவிக் காரியதரிசிகளின் சம்பளங்களையும், அல்லது அவருடைய இலாக்காவின் எவ்விதச் செலவுகளையும், பாராளுமன்றம் ஒதுக்கிய பணத்தி லிருந்து கொடுக்கலாம்,' என 1919ஆம் ஆண்டின் சட்டம் கூறியது. சபைகளுக்குக் கொண்டு வரப்படும் இந்தியா சம்பந்தமான பிரச்சினைகள், விதிகள், சட்டங்கள் ஆகியவை களைப் பரிசிலனை செய்வதற்காக, பாராளுமன்றத்தின் இரு சபைகளும் சேர்ந்த ஒரு கூட்டுக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. இவ்விதமாக, பிரிட்டிஷ் இந்தியாவின்மீது பாராளுமன்றத் திற்கு இருந்த அதிகாரம், மறைமுகமாக உறுதியாகியது.

இந்தியக் காரியதரிசியாரின் சட்ட சம்பந்தமான நிலையை, 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் மாற்றியது. அதன்படி, 'பிரிட்டிஷ் இந்தியா, அல்லது இந்தியாவின் பிரதேசங்கள் சம்பந்தப்பட்டவரையில், எல்லா உரிமைகளும் அதிகாரமும், அல்லது அதிகார வரம்பும்' ஆங்கில அரசரிடத் திலேதான் இருக்கும். மேன்மைதங்கிய அரசரின் சார்பாக நிருவாக அதிகாரத்தை உபயோகப்படுத்தும் கவர்னர்-ஜெனரல் அல்லது மாகாணக் கவர்னர் தம் விருப்பப்படி நடக்கும்போது, இந்தியக் காரியதரிசியின் பொதுக்கட்டுப் பாட்டின்கீழ் இருப்பர்; பிரிட்டிஷ் மந்திரி சபையின் அங்கத் தினராய் இருக்கும் இந்தியக் காரியதரிசியார், இந்தியா சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களுக்கும், பாராளுமன்றத் திற்குப் பொறுப்பானவர். சுருக்கமாக, இந்தியக் காரிய தரிசியாரின் அதிகாரம் மாறுமல் இருந்தது; சில மாகாணங் களில், சுய ஆட்சி ஏற்படுத்தியதாலும், பெடரேஷன் ஒப்புக் கொள்ளப்பட்டால், மத்தியில் ஒரு சிறிது பொறுப்பு மக்கள் பிரதிநிதிகளுக்குக் கொடுக்கப்படுவதாலும், அவர் அதிகாரங்கள் சிறிது குறைந்தன. 'இந்திய நிருவாகத்தின்

உச்சியில், அதனுடைய பாதுகாவலராக' அவர் தொடர்ந்து வந்தார். 1935ஆம் ஆண்டில் குறிப்பிட்டபடி, இந்திய கவுன்ஸில், 1937ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், முதல் தேதியிலிருந்து நீக்கப்பட்டது; அதற்குப் பதிலாக, மூவருக்குக் குறையாத ஆனால், அறுவருக்கு மேற்படாத எண்ணிக்கையில் உள்ள ஆலோசகர்களின் குழு, இந்தியக் காரியதரிசியாருக்குக் கொடுக்கப்பட்டது; அவர்களுள் பாதிப்பேர், அரசருக்குக் கீழே பத்து ஆண்டுகளுக்கு இந்தியாவில் சேவை புரிந்திருக்க வேண்டும்; மேலும், அவர்கள் இந்தியாவில் வேலையை விட்ட பிறகு, இரண்டு ஆண்டுகளுக்குள் நியமிக்கப்பட்டவர்களாகவும் இருக்க வேண்டும். இந்தியக் காரியதரிசியார், தம் ஆலோசகர்களை மொத்தமாகவோ அல்லது தனித் தனியாகவோ ஆலோசனை கேட்பதற்கும், அல்லது அவர்களைப் புறக்கணிப்பதற்கும், அவருக்கு முழு உரிமை உண்டு; அரசரின்கீழ் உள்ள செர்வஸ்கள் சம்பந்தமாக, அவருக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்களை அவர் உபயோகிக்கலாம்; ஆனால், இதற்குக் கூட்டத்திற்கு வந்திருந்த அங்கத்தினருள் பாதிப் பேருக்குக் குறையாமல் ஆதரவளிக்க வேண்டும்; இதைப் போன்ற சில பிரத்தியேகமான பிரச்சினைகளைத் தவிர, மற்றவைகளில் அவர், அவர்களுடைய ஆலோசனைப்படி நடக்கலாம்; அல்லது நடப்பதற்கு மறுக்கலாம்.

இந்தியாவின் மத்திய மாகாண அரசுகளின் ஏஜென்ஸி வேலையை (Agency work) இந்தியக் காரியதரிசியாரிடமிருந்து பிரித்து, அவருடைய வேலைகளைக் குறைப்பதற்காக, ஹைகமிஷனரின் அலுவலகத்தை, 1919ஆம் ஆண்டின் சட்டம் ஏற்படுத்தியது; 1920ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 13ஆம் தேதி ஏற்படுத்தப்பட்ட கவுன்ஸிலின் கட்டளைப்படி (Order in Council) அது ஏற்படுத்தப்பட்டது. அவர் இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப்படுவார்; அவர் இந்திய அரசுக்கே முக்கியமாகப் பொறுப்புள்ளவர்; அவரது சம்பளம் இந்திய வருமானத்திலிருந்து கொடுக்கப்படும். இந்திய அரசாங்கத்திற்கு வேண்டிய சாமான்களை வாங்குதல், வாணிக சம்பந்தமான தகவல்களைக் கொடுத்தல், இந்திய வாணிகத்தின் நலன்களை உயர்த்துதல், இங்கிலாந்தில் இருக்கும் இந்திய மாணவர்களின் கல்வியைக் கவனித்தல், இந்தியா சம்பந்தப்பட்ட தகவல்களைக் கேட்பவர்களுக்கு அளித்தல் போன்றவைகளே, அவருடைய கடமைகள். சர்வதேச மாநாடுகளில் அவர் இந்தியப் பிரதிநிதியாயும் இருந்தார். 1935ஆம் ஆண்டு சட்டப்படி, கவர்னர்-ஜெனரல் தமது 'சொந்த

முடிவின்படி' ஹைகமிஷனரைக் கட்டுப்படுத்தலாம்; கவர்னர்-ஜெனரல் உத்தரவின் பேரில் ஒரு மாகாணத்திற்காக, பெடரேஷனில் சேர்ந்த சமஸ்தானத்திற்காக, அல்லது பர்மாவிற்காக அவர் பிரதிநிதியாக நடக்கலாம்.

## 2. இந்திய அரசாங்கம்

கர்சான் பிரபுவின் ஆற்றல் வாய்ந்த ஆட்சி, இந்தியத் தேசியத்தின் சக்திகளைத் தடுப்பதற்குப் பதிலாக, அரசியலில் முன்னேற்றம் காண்பதற்கான ஆவலை, இந்தியர்களிடத்திலே தோற்றுவித்தது; சில இடங்களில் இது மிகத் தீவிரமான வகையில் வெளிப்படையாய்த் தெரிந்தது. சட்டத்தை நிலை நிறுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்ததுடன், சில அரசியலமைப்பு மாற்றங்களைச் செய்வதற்கும் அரசாங்கம் திட்டமிட்டது. 1909ஆம் ஆண்டின் மின்டோ-மார்லி சீர்திருத்தங்களில் இவை சேர்க்கப்பட்டன. பொதுப்பிரச்சினையைத் தீர்ப்பதற்குத் தகுதிவாய்ந்த இந்தியர்கள் அதிக அளவில் அரசாங்கத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்று இந்தச் சீர்திருத்தங்கள் கூறின. இவ்விதம் கவர்னர்-ஜெனரலின் நிருவாக சபையில் நடைமுறையில் இந்திய அங்கத்தினருக்காக ஓர் இடம் ஒதுக்கப்பட்டது. கவர்னர்-ஜெனரலின் நிருவாக சபையில் முதல் இந்தியச் சட்ட அங்கத்தினராக நியமிக்கப்படும் பெருமை சத்தியேந்திர பிரசன்ன சின்ஹா (Satyendra Prasanna Sinha, பின்னர் ரெய்ப்பூரின் முதல் சின்ஹாப் பிரபு)வுக்குக் கிடைத்தது. சென்னை, பம்பாய்க் கவர்னர்களின் நிருவாக சபைகளின் அங்கத்தினர் நால்வராய் அதிகரிக்கப்பட்டனர். 1909ஆம் ஆண்டில் வங்காளத்திற்கு ஒரு நிருவாகசபை கொடுக்கப்பட்டது; 1912ஆம் ஆண்டில் பீஹாரும் ஒரிஸ்ஸாவும் தனித்தனி மாகாணமாக்கப்பட்டபோது, அதற்கும் ஒரு நிருவாகசபை அந்த ஆண்டில் கொடுக்கப்பட்டது. ஆனால், மூன்றாண்டுகளுக்குப் பிறகு ஐக்கிய மாகாணங்களுக்கு அப்படிப்பட்ட ஒரு திட்டம் வேண்டுமெனக் கோரியபோது, அக்கோரிக்கை புறக்கணிக்கப்பட்டது. மாகாண நிருவாக சபைகளில் இந்தியர்களை நியமிக்கவேண்டுமென்று 1909ஆம் ஆண்டின் சட்டம் குறிப்பாகத் தெரிவிக்காவிட்டாலும், அவ்வித அங்கத்தினர்களைச் சேர்க்கும் பழக்கம் உண்டாயிற்று என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்; வங்காளத்தின் நிருவாக சபையில் அங்கத்தினராக ராஜா கிஷோரி லால் கோஸ்வாமி (Raja Kishori Lal Goswami) என்பவர் நியமிக்கப்பட்டார்.

சட்டசபைகளின் அமைப்பிலும் வேலைகளிலும் முக்கிய மாறுதல்களை 1909ஆம் ஆண்டின் சட்டம் புகுத்தியதுதான், அதனுடைய குறிப்பிடத்தக்க முக்கிய அமிசம். மத்தியச் சட்ட சபையில் அதிகமாக நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களின் எண்ணிக்கை, பதினாறிலிருந்து அதிக பட்சமாக அறுபது வரையில் அதிகரிக்கப்பட்டது. அவர்களுள் இருபத்தெண்மருக்கு அதிகமல்லாத அங்கத்தினர் அதிகாரிகளாய் இருப்பர். குறிப்பிட்ட சில சமூகங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக அதிகாரிகள் அல்லாத மூவரை நியமிக்கக் கவர்னர்-ஜெனரலுக்கு உரிமையுண்டு; மேலும் இரண்டு இடங்களுக்கு நியமிக்கும் உரிமையும் அவரிடம் இருந்தது. மீதியிருக்கும் இருபத்தேழு இடங்கள், அதிகாரிகளல்லாத, தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்டு நிரப்பப்படும்; ஏழு மாகாணங்களில் நிலக்கிழார்கள் (Land Owners), ஐந்து மாகாணங்களில் முகம்மதியர்கள், கல்கத்தாவிலும், பம்பாயிலுமிருந்த இரு வணிகர்களின் சங்கம் போன்ற சில பிரத்தியேகமான தொகுதிகள் மூலம் அவர்களுள் சிலர் தேர்ந்தெடுக்கப்படுவர்; அவர்களுள் பதின்மூன்று பேர்களை ஒன்பது மாகாணச் சட்டசபைகளில் இருக்கும் அதிகாரிகள் அல்லாத அங்கத்தினர்கள் தேர்ந்தெடுப்பார்கள். இவ்விதம் மத்திய சட்டசபையில் அதிகாரிகளின் எண்ணிக்கை சற்று அதிகமாய் இருந்தது. 'மேன்மை தங்கிய அரசாங்கத்திற்கும், பேரரசுப் பாராளுமன்றத்திற்கும், கவர்னர் ஜெனரலின் கவுன்ஸில் செய்கிற — எப்பொழுதும் செய்ய வேண்டிய — அரசியலமைப்புச் சம்பந்தமான சில கடமைகளை நிலையாகவும் தொடர்ச்சியாகவும் செய்வதற்கு வேண்டிய அதிகாரத்தைப் பெறும் வகையில், கவர்னர்–ஜெனரலுடைய சபையின் சட்டம் இயற்றும் நடத்தையும், நிருவாக நடத்தையும் இருக்க வேண்டும் என மார்லி பிரபு தெளிவாகக் கூறினர். பெரிய மாகாணங்களில் இருந்த சட்டசபைகளில் அதிகப்படியாய் இருந்த அங்கத்தினர்களின் எண்ணிக்கையின் உச்சவரம்பு, ஐம்பதாகச் செய்யப்பட்டது. அதிகாரிகளையும், நியமிக்கப்பட்ட அதிகாரிகள் அல்லாத அங்கத்தினர்களையும் சேர்த்தால், அவர்களது எண்ணிக்கை தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைவிடச் சிறிது அதிகமாக இருக்கும்படி இது அமைக்கப்பட்டது; ஆனால், வங்காளத்தில் மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அதிகமாய் இருந்தார்கள். அதிகப்படியான அதிகாரிகள் அல்லாத இவ்வங்கத்தினர்கள், ஸ்தல ஸ்தாபனங்கள், நிலக்கிழார்கள், வாணிகசபைகள், பல்கலைக் கழகங்கள் போன்றவைகளின் தொகுதிகளால் தேர்ந்

தெடுக்கப்படுவார்கள். முஸ்லீம் வாக்காளர்களின் ஓட்டுகள் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களே அவர்களுக்குத் தனியாகப் பிரதிநிதித்துவம் வகிக்க வேண்டும் என முகம்மதியர்களின் சமுதாயம் விடுத்த கோரிக்கையை ஏற்றுக் கொண்டதால், வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவக் கொள்கையை 1909ஆம் ஆண்டின் சீர்திருத்தங்கள் ஏற்படுத்தின; இது 'இந்தியத் தேர்தல் தொகுதி முறை திருத்தப்படும் ஒவ்வொரு சமயமும், ஒரு முக்கியப் பிரச்சினையாகவும், வாதத்திற்கிடமான பொருளாகவும் விளங்குகிறது,' என இந்தியச் சட்டக் கமிஷன் (Indian Statutory Commission) 1929ஆம் ஆண்டில் கூறியது.

சட்டசபைகளின் வேலைகள் சம்பந்தப்பட்ட வரையில், 1909ஆம் ஆண்டின் சட்டப்படி, வரவு-செலவுத் திட்டத்தை முடிவாகத் தீர்மானிக்கும் முன்பு, அவை அதைப்பற்றி விவாதம் செய்யலாம்; தீர்மானங்களைக் கொண்டு வரலாம்; மேலும், சில பொதுவான பிரச்சினைகளைப் பற்றியும், அவை விவாதிக்கலாம்; தீர்மானம் கொண்டு வரலாம். அவற்றின் தீர்மானங்கள் அரசாங்க நிருவாகத்தின் சிபாரிசுகளாகக் கருதப்பட்டு, அமுல் செய்யப்படவேண்டும்; சபையின் தலைவராய் இருக்கும் அரசாங்கத்தின் தலைவர், தம் விருப்பப்படி அவற்றுள் எதையும் புறக்கணிக்கலாம். இராணுவம், அயல் நாட்டு உறவுகள், இந்திய சமஸ்தானங்கள், மற்றும் பல சில்லறைப் பொருள்களைப் பற்றிய எவ்விதத் தீர்மானத்தையும் அவை செய்யக்கூடாது.

'மார்லி-மின்டோ சீர்திருத்தங்கள், பிரதிநிதித்துவ ஆட்சியைப் புகுத்துவதில் ஒரு முக்கிய அடிச்சுவட்டைக் குறித்தாலும், பாராளுமன்ற அரசாங்கத்தை அவை இந்தியாவுக்குக் கொடுக்கவில்லை. பாராளுமன்ற முறை நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ இந்தியாவில் ஏற்படுவதற்கு இச்சீர்திருத்தங்கள் காரணமாய் இருந்தன எனக் கூறப்படுமானால் அதற்கு நான் ஒருவன் மட்டும் காரணமாய் இருக்க இயலாது,' என, 1908ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 17ஆம் தேதி பிரபுகள் சபையில் மார்லி பிரபு கூறியபோது, இதை அவர் வெளிப்படையாகவே ஒப்புக்கொண்டார். உண்மையில், வெள்ளை மாளிகைக்கு முழுப்பொறுப்புள்ள வகையிலேதான் இந்திய அரசாங்கம் நடத்தப்பட்டு வந்தது. அதிகாரிகள் அல்லாதவர்கள் பொறுப்புள்ள விதமாக நடக்க முடியவில்லை. ஏனெனில்,

அவர்களுடைய பேச்சினால், அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளை மாற்ற இயலாது. இந்திய அரசியல் சீர்திருத் தங்களைப்பற்றிய அறிக்கையை (Report on Indian Constitutional Reforms) தயாரித்தவர்கள், 1918ஆம் ஆண்டில் கூறியபடி, 'இந்தியாவின் அரசியல் பிரச்சினைகளை 1909ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களைத் தீர்க்கவில்லை; தீர்க்கவும் முடியாது...மக்கள் ஆட்சிக்குச் சுவையாக இருப்பது அவர் களுக்குக் கொடுக்கப்படும் பொறுப்புதான். இப்போதுள்ள சபைகளுக்கு அச்சுவை முழுவதும் தேவையாய் இருக்கிறது. மறைமுகமான தேர்தலும், தனியான வகுப்புவாரிப் பிரதிநிதித்துவமும் தெளிவாகத் தீமையானவையே.

இந்திய மக்கள் எதிர்பார்த்த அளவுக்கு, மார்லி-மின்டோ சீர்திருத்தங்கள் இல்லை; அதனால், அவர்களுடைய அதிருப்தியும் குறையாமல் இருந்தது. இந்தச் சீர்த்திருத் தங்கள் புகுத்தப்பட்ட ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு, முதலாவது உலகப் போர் தொடங்கியது; அச்சமயத்தில், தங்கள் உரிமைகளை அவர்கள் தீவிரமாக வற்புறுத்தினார்கள்; திரு. ஜி. கே. கோகலே என்பவரால் ஒரு திட்டமும், தேசியக் காங்கிரசும் முஸ்லீம்லீகும் ஒன்று சேர்ந்து உருவாக்கிய ஒரு திட்டமும் ஆக இரு திட்டங்கள் சமர்ப்பிக்கப்பட்டன. அரசியல் சீர்திருத்தங்களைப் பெறுவதற்காகப் பரந்த அளவில் உள்ள இந்தியர்களின் கோரிக்கைகளைத் திருப்தி செய்வதற்கும், போரின்பொழுது கிரேட்பிரிட்டனுக்கு அவர்கள் செய்த விசுவாசமான சேவைகளை ஏற்றுக் கொள்ளும் வகையிலும், இந்தியக் காரியதரிசியாராய் இருந்த மிஸ்டர் எட்வின் மான்டேகு (Mr. Edwin Montague) 1917ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 17ஆம் தேதி, காமன்ஸ் சபையில் பின்வரும் பிரபல அறிக்கையை வெளியிட்டார்:

'பிரிட்டிஷ் பேரரசின் முழுப்பாகமாய் உள்ள இந்தியாவில் பொறுப்புள்ள ஆட்சியைப் படிப்படியாக ஏற்படுத்தும் நோக்கத்துடன் ஆட்சியின் ஒவ்வொரு பிரிவிலும் அதிகப் படியான இந்தியர்களைச் சேர்த்துக்கொள்வதும் சுய ஆட்சி நிறுவனங்களைப் படிப்படியாக வளர்ப்பதுமே மன்னர் அரசாங்கத்தின் கொள்கை. இதை இந்திய அரசாங்கமும் முழுமனத்துடன் ஏற்றுக்கொள்கிறது.'

1917ஆம் ஆண்டு, நவம்பர் மாத ஆரம்பத்தில், அவர் இந்தியாவுக்கு வந்தார்; விரிவாகப் பிரயாணம் செய்து

பொது மக்களின் கருத்தை அறிந்துகொண்ட பிறகு, மான்டேகு–செம்ஸ்போர்டு அறிக்கை[1] என வழங்கப்பட்ட இந்திய அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றிய அறிக்கையை (Report on Indian Constitutional Reforms) 1918ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதத்தில் வெளியிட்டார். இந்த அறிக்கைதான், 1919ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டத்தின் அடிப்படையாய் விளங்கியது ; 1921ஆம் ஆண்டின் ஆரம்பத்தில், இச் சட்டம் அமுலுக்கு வந்தது.

மத்திய, மாநில அரசுகளின் பணிகளை (Functions) முடிந்த அளவுக்கு இச்சட்டம் தெளிவாகப் பிரிவினை செய்தது. பாதுகாப்பு, அரசியல், அயல் நாட்டு விவகாரங்கள், முக்கிய ரயில்வேக்களும் மற்ற இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த போக்குவரத்துகளும், தபால் தந்தி செலாவணியும் நாணய வகையும், பொதுக்கடன், வாணிகம், சிவில், கிரிமினல் சட்டமும் நடைமுறையும், மதசம்பந்தமான நிருவாகம், அனைத்திந்திய செர்வீஸ்கள், சில ஆராய்ச்சி ஸ்தாபனங்கள், மாகாணப் பட்டியலில் குறிப்பிடப்படாத எல்லாப் பொருள்கள் ஆகியவை சம்பந்தமான கடமைகள் மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டன. உள்நாட்டுச் சட்டமும் அமைதியும் நீதி பரிபாலனமும், சிறைச்சாலைகளின் நிருவாகமும், நீர்ப்பாசனம், காடுகள், தொழிற்சாலைகளைப் பார்வையிடுதல், பஞ்ச நிவாரணம், நிலவரி நிருவாகம், ஸ்தல ஸ்தாபன ஆட்சி, கல்வி, மருத்துவத்துறை, வாழ்க்கை நல ஏற்பாடுகளும் பொதுச் சுகாதாரமும், மராமத்து வேலைகள், வேளாண்மை, தொழிற்சாலைகளின் அபிவிருத்தி, ஆயத்தீர்வை, கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவை சம்பந்தமான கடமைகளை மாகாண அரசுகள் செய்ய வேண்டும். வருமான வழிகளும், வருவாய்த் தலைப்புகளுங்கூட, மத்திய மாநில அரசுகளுக்கு இடையே நிருணயம் செய்யப்பட்டன.

1919ஆம் ஆண்டின் சட்டம் இங்கிலாந்து அரசாங்கத்தின் மீது ஏற்படுத்திய விளைவுகளைப் பற்றி நாம் முன்பே கூறியிருக்கிறோம். இந்திய அரசாங்கத்தை அது எவ்வாறு

1. மிஸ்டர் மான்டேகு, கவர்னர்-ஜெனரலாய் இருந்த செம்ஸ்போர்டு பிரபு ஆகியவர்களின் கையெழுத்துகள் இந்த அறிக்கையில் காணப்பட்டன. ஆனால், முழுச்செயல் நடத்தையில் முக்கியமல்லாத ஊசலாடும் பாகத்தையே கவர்னர்-ஜெனரல் பெற்றிருந்தார் என்பது மிஸ்டர் மான்டேகுவின் இந்திய நாட்டுக் குறிப்பிலிருந்து தெரிகிறது.

திருத்தியது என்பதை இப்பொழுது பார்ப்போம். மத்திய அரசாங்கத்தில் இரட்டை ஆட்சியை (Diarchy) அது ஏற்படுத்தவில்லை; கவர்னர்-ஜெனரல் முன்பு இருந்ததைப் போலவே, இந்தியக் காரியதரிசியாருக்கும் பாராளுமன்றத்திற்கும் பொறுப்பாளராய் இருந்தாரே தவிர, இந்தியச் சட்டசபைக்குப் பொறுப்பாளராய் இல்லை. நிருவாக சபை விரிவுபடுத்தப்பட்டது. சட்டத்தில் இல்லாவிட்டாலும், 1921ஆம் ஆண்டிற்குப் பிறகு நடைமுறையில் தகுதி வாய்ந்த இந்தியர் மூவர், அதற்கு நியமிக்கப்பட்டனர். சின்ஹா பிரபுவுக்குப் பின், சர் ஆலி இமாம் (Sir Ali Imam) என்பவர் சட்ட அங்கத்தினரானார், ஆனால், அவருக்குப் பின் வந்த இந்திய அங்கத்தினரான சர் சங்கரன் நாயருக்கு (Sir Sankaran Nair) கல்வி இலாக்கா மட்டுந்தான் கொடுக்கப் பட்டது. 1920ஆம் ஆண்டிற்குப் பின், சிறப்பு வாய்ந்த இந்திய வழக்கறிஞர் சிலர் சட்ட அங்கத்தினராய் இருந்தனர். பிரிட்டிஷ் கருவூலத்தைச் சேர்ந்தவர்களிலிருந்து நிதி அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.



கவுன்சில், அசெம்பிளிக்கட்டடம், டில்லி.

மத்திய சட்டசபை முழுவதும் இரு சபைகளாக மாற்றியமைக்கப்பட்டது. அவை, ராஜ்யசபை (Council of State), சட்டசபை (Legislative Assembly) என வழங்கப்பட்டன. நிருவாக சபையின் அங்கத்தினர்கள், கவர்னர்-ஜெனரலின் நியமனத்தின்பேரில், இரண்டு சட்டசபைகளுள் ஏதாவது ஒன்றின் அங்கத்தினராகலாம். ராஜ்யசபை அல்லது மேல்

சபை சரிபார்க்கும் நிறுவனமாய்த் திகழ்ந்தது. அதில் 60 பேருக்கு மேற்படாத அங்கத்தினர் இருப்பர். அவர்களுள் 34 அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்படுவர். அதிகாரிகள் 30 பேருக்கு மேல் அதில் இருக்கக்கூடாது. சட்டசபை அல்லது மக்களால் பெரிதும் விரும்பப்படும் கீழ்ச்சபையில் அங்கத்தினர் 140 பேர் இருப்பர். பின்பு அந்த எண்ணிக்கை 145ஆக அதிகரிக்கப்பட்டது. அவர்களுள் 105 பேர் தேர்ந்தெடுக்கப்படுவர். நியமிக்கப்பட்ட அதிகாரிகள் 26 பேர்; நியமிக்கப்பட்ட அதிகாரிகள் அல்லாதவர் 14 பேர். இரு சபைகளுக்கும் நேரிடைத்தேர்தல் நடத்தப்படும். அதிக உடைமைத் தகுதி என்ற அடிப்படையிலேதான் வாக்குரிமை வழங்கப்பட்டது; மேற்சபையைவிடக் கீழ்ச்சபைக்குச் சற்று விரிவான தகுதி இருந்தது. ராஜயசபை ஐந்து ஆண்டுவரையிலும், சட்டசபை மூன்று ஆண்டுவரையிலும் நீடிக்கும். ஆனால், இரண்டுள் ஒன்றைக் கலைக்கும் அதிகாரம், அல்லது, சில பிரத்தியேகச் சூழ்நிலையில் அதை நீடிக்கும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலுக்கு உண்டு. இரு சபைகளின் அதிகாரங்களும் ஒரே மாதிரியானவை. ஆனால், பணக்கோரிக்கைகள், கீழ்ச்சபையிலே தான் சமர்ப்பிக்கப்பட்டன. இரு சபைகளுக்கும் இடையே சிக்கல் நிலை (Deadlock) ஏற்பட்டால், கவர்னர்-ஜெனரல் கூட்டு அமர்வுக்கு ஏற்பாடு செய்யலாம். ராஜ்யசபைக்குத் தலைவர் ஒருவர் உண்டு. அச்சபையின் அங்கத்தினர் ஒருவரைக் கவர்னர்-ஜெனரல் தலைவராக நியமிக்கலாம். சட்டசபைக்குத் தலைவர் ஒருவரும், உதவித்தலைவரும் உண்டு. கவர்னர்-ஜெனரல் முதல் நான்கு ஆண்டுகளுக்குத் தலைவரை நியமிப்பார். அதன் பிறகு அச்சபையே தன் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்.

மத்தியச் சட்டசபையின் அதிகாரங்கள், கொள்கைப்படி மிகவும் அதிகமாக்கப்பட்டன. மத்திய, மாநில அரசுகளுக்கு இடையே உள்ள பணிகள் வரையறுக்கப்பட்டாலும், பிரிட்டிஷ் இந்தியா முழுவதற்கும் சட்டங்களை இயற்றும் உரிமை மத்தியச் சட்டசபைக்கு உண்டு. சில பொருள்கள்[1] சம்பந்தப்

1. மாகாணத் தலைப்பை ஒழுங்குபடுத்துதல் அல்லது மாகாணச் சட்டசபையால் நிறைவேற்றப்பட்ட சட்டத்தை இரத்து செய்தல் அல்லது திருத்துதல் ஆகியவைகளைக் குறிக்கோளாகக் கொண்ட மசோதா; கவர்னர்-ஜெனரலால் நிறைவேற்றப்பட்ட சட்டத்தை அல்லது அவசரச் சட்டத்தை இரத்து செய்தல் அல்லது திருத்துதல்; இந்தியாவின் பொதுக்கடன் அல்லது பொது வருமானம், பிரிட்டிஷ் மக்களின் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களின் மதம், அரசரின் இராணுவம், கப்பல் ஆகாயப் படைகளின் எப்பாகத்தின் கட்டுப்பாடு, அயல் நாடுகளுடன் அல்லது சமஸ்தானங்களுடன் இந்திய அரசு கொண்டிருக்கும் உறவு.

பட்ட மசோதாக்களுக்குக் கவர்னர்-ஜெனரல் முன் அனுமதி தேவை என்கிற ஒரே தடைதான் அதற்கு உண்டு.

மேலும், கவர்னர்-ஜெனரலால் சிபாரிசு செய்யப்பட்ட ஒரு மசோதாவை இரு சபைகளுள் ஒன்று புறக்கணித்தாலும் அல்லது திருப்தியற்ற வகையில் திருத்தினாலும், முதலில் கொண்டுவரப்பட்ட மசோதா, பிரிட்டிஷ் இந்தியாவின் பாது காப்பிற்கும் அமைதிக்கும் மிக அவசியமானது என உறுதி கூறுவதற்குக் கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு. நெருக்கடிக் காலத்தில், அவசரச் சட்டங்களைச் செய்வதற்கு அவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. அச்சட்டங்கள் முதல் ஆறுமாதங்கள் வரையில் செல்லுபடியானாலும், தேவைப்பட்டால், அவற்றைச் சட்டமாகச் செய்யமுடியும். இவ்விதம் கவர்னர்-ஜெனரல், 'இந்தியச் சட்டசபையில் மேம்பட்டவராய் இல்லாவிட்டாலும், முக்கியமானவராய் இருக்கிறார். நிதி சம்பந்தப்பட்ட வரையில் மத்தியச் சட்ட சபைக்குச் சில அதிகாரங்கள் இருந்தாலும், குறிப்பிட்ட சில தடைகளும் உண்டு. வட்டி சம்பந்தமான கடன் கழிவு நிதிக் கட்டணங்கள் (Sinking Fund Charges on Loans) அரசியல் சம்பந்தப்பட்ட, சமயத்தொடர்பான பாதுகாப்புச் செலவுகள் எனக் கவர்னர்-ஜெனரலால் குறிக்கப்பட்டவை, அரசரின் அல்லது கவுன்சிலோடு கூடிய இந்தியக் காரியதரிசியாரின் அதிகாரத்தால் நியமிக்கப்பட்டவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளங்கள் அல்லது ஓய்வு-ஊதியங்கள் போன்றவைகளைச் சட்டசபையின் அங்கீகாரத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டுவது இல்லை; ஆனால், இதற்கு அரசாங்கத்தின் ஒதுக்கீடு மட்டும் போதுமானது. மேலும், பிரிட்டிஷ் இந்தியாவின் அல்லது அதனுடைய எந்த ஒரு பகுதியின் பாதுகாப்பிற்கும் அமைதிக்கும் அவசியம் என அவர் கருதும் எந்தச் செலவையும் நெருக்கடிக் காலத்தில் உண்மையானதெனக் கூறுவதற்குக் கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு. இவ்விதம் சட்டமியற்றுதல், நீதி ஆகியவைகளின் மீது சட்டசபைக்குள்ள அதிகாரம் பெரிதும் வரையறுக்கப்பட்டது.

ரெகுலேஷன் மாகாணங்களான (Regulation Provinces) வங்காளம், பம்பாய், சென்னை ஆகிய மாகாணங்களுக்கும், அவையல்லாத (Non-Regulation) மாகாணங்களான பஞ்சாப், அஸ்ஸாம் முதலியவைகளுக்கும் இடையே இருந்த வித்தியாசத்தை 1919ஆம் ஆண்டுச் சட்டம் ஒழித்துவிட்டது. 1923ஆம் ஆண்டில் சேர்க்கப்பட்ட பர்மா, 1932ஆம்

ஆண்டில் சேர்க்கப்பட்ட வடமேற்கு எல்லைப்புற மாகாணம் ஆகியவைகளைச் சேர்த்து உள்ள பத்து மாகாணங்களும், கவர்னர்களுடைய மாகாணங்களாகிவிட்டன; ஒவ்வொன்றும், மன்னரால் நியமிக்கப்பட்ட கவர்னரின் கீழ் இருந்தது. ஏராளமான அதிகாரங்களையும் உரிமைகளையும் பெற்ற ஒரு மாகாணத்தின் கவர்னர், அம்மாகாணத்தில் உண்மையான தலைமை அதிகாரியாய் இருந்தார். மாகாண நிருவாகத்தில் இரட்டையாட்சி அல்லது இரண்டு ஆட்சிகளை இச்சட்டம் புகுத்தியது. கவர்னருக்கும் அவரது நிருவாக சபைக்கும் 'ஒதுக்கிய துறை'[1] (Reserved Subjects) மீது அதிகாரம் இருந்தது. இதன் நிருவாகம் சம்பந்தப்பட்ட வரையில், கவர்னர்-ஜெனரலுக்கும், வெள்ளை மாளிகைக்குமே அவர் பொறுப்பாளரே ஒழிய, சட்டசபைக்குப் பொறுப்பாளரல்லர். கவர்னருக்கு உதவியாக இருக்கும் அவருடைய மந்திரிகளுக்கு 'மாற்றப்பட்ட துறைகள்'[2] கொடுக்கப்பட்டன. மாகாணச் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களிலிருந்து இம்மந்திரிகள் கவர்னரால் நியமிக்கப்படுவார்கள். இம்மந்திரிகளின் எண்ணிக்கை, மாகாணத்திற்கு மாகாணம் வேறுபட்டும், ஒரே மாகாணத்தில் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு விதமாகவும் இருந்தது. கிரேட் பிரிட்டன், கனடா போன்ற நாடுகளில் கொள்கைப்படி இருப்பது போன்று, மாகாண மந்திரிகளும், கவர்னர் விரும்புகிற வரையிலுந்தான் பதவியில் நீடிப்பார்கள். இவ்விரு நாடுகளிலும் வழக்காறு, நடைமுறை ஆகியவைகளின் படி, சட்டசபைக்குப் பொறுப்பாளரான மந்திரிகள் என்ற கொள்கை ஏற்படுத்தப்பட்டது என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். மந்திரிகள் சட்டசபையின் நம்பிக்கைக்குப் பாத்திரர்களாய் இருக்க வேண்டும் எனக் கூறப்பட்டது. ஆனால், சபைக்கான அவர்களது பொறுப்பு, நீக்க முடியாத நிருவாகம் என்ற அளவுக்கு ஒழுக்கத்தைக் கெடுப்பதற்கே உதவியாய் இருந்தது. மேலும், மாற்றப்பட்ட துறைகளிலும் தலையிடக் கவர்னருக்கு ஏராளமான அதிகாரங்கள் உண்டு.

1. போலீஸ், நீதியும் சிறைச்சாலைகளும், நீர்ப்பாசனம், காடுகள் (பம்பாய், பர்மாவைத் தவிர), பஞ்ச நிவாரணம், நிலவரி நிருவாகம், தொழிற்சாலைகளைப் பார்வையிடுதல்.

2. ஸ்தல ஸ்தாபன சுய ஆட்சி, கல்வி (ஐரோப்பியர்களின் கல்வியைத் தவிர), பொதுச் சுகாதாரம், வாழ்க்கை நல ஏற்பாடுகள், மருத்துவ நிருவாகம், மராமத்து வேலைகள், வேளாண்மை, ஆயத்தீர்வை, கூட்டுறவு சங்கங்கள், தொழிற்சாலைகளின் வளர்ச்சி.

பல மாகாணங்களில் ஒரு சட்டசபை மட்டும் இருந்தது. ஒவ்வொரு மாகாணச் சபையின் அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட்டது. வங்காளத்தில் 139 (பின்னர் 140 ஆகத் திருத்தப்பட்டது), சென்னையில் 127 (132), ஐ.ஐ.மா. 123, பம்பாயில் 111 (114), பீஹாரிலும் ஒரிஸ்ஸாவிலும் 103, பஞ்சாபில் 93 (94), மத்திய மாகாணங்களில் 70 (73), அஸ்ஸாமில் 50 (53). அங்கத்தினர்களுள் 70 சதவிகிதம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களுள் 20 சதவிகிதத்திற்குமேல் அதிகாரிகள் இருத்தல் கூடாது. நிலக்கிழார்கள், வணிகர்களின் சங்கங்கள், பல்கலைக் கழகங்கள் ஆகியவைகளின் தொகுதிகளும், முகம்மதியர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், இந்தியக் கிறிஸ்தவர்கள், பஞ்சாபில் இருக்கும் சீக்கியர்கள் ஆகிய சமுதாயத்தினருக்கும் அவர்களுடைய வாக்காளர் மூலம், தனித்தனியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. முதல் நான்கு ஆண்டுகள் வரையிலும் ஒரு மாகாணத்தின் கவர்னர், அம்மாகாணச் சட்டசபையின் தலைவரை நியமிப்பார். அதன்பிறகு, தங்களுக்குத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் சலுகை சட்டசபைகளுக்கு வழங்கப்பட்டது. ஒவ்வொரு மாகாணச் சட்டசபையும், அம்மாகாணம் சம்பந்தப்பட்ட எல்லாப் பொருள்கள் சம்பந்தமாகவும் மசோதாவைக் கொண்டு வரலாம். மாற்றப்பட்ட துறைகள் சம்பந்தமான எச்சட்டமும் அதன் அனுமதியில்லாமல் இயற்ற முடியாது; அம்மாகாணத்தின் பாதுகாப்பையும் அனுமதியையும் பாதுகாக்கும் பிரத்தியேகப் பொறுப்பு அவருக்கு இருப்பதால், ஒதுக்கிய துறைகள் சம்பந்தப்பட்ட ஒரு மசோதா அவசியம் எனக் கவர்னர் கூறினால், சட்டசபையின் சம்மதமின்றியே அதைச் சட்டமாக்க முடியும். மேலும், சில மசோதாக்களைக் கொண்டுவருவதற்குக் கவர்னர்-ஜெனரலின் முன் அனுமதி தேவை. நிதி சம்பந்தப்பட்ட வரையில், எதிர்பார்க்கப்படும் வரவு செலவு சம்பந்தமான பட்ஜெட்டு, சில இனங்களைத்[1] தவிர்த்து, பணக்கோரிக்கை உருவில், சட்டசபையின் முன்பு

1. மத்திய அரசுக்கு மாகாண அரசு தன் பங்கைச் செலுத்துதல்; வட்டியும், கடன்கள் சம்பந்தமாகக் கடன் கழிவு நிதிக்குச் செலுத்தப்படும் கட்டணங்களும்; மன்னரின் அல்லது இந்தியக் காரியதரிசியாரின் அங்கீகாரத்தின்மீது, அல்லது அவர்களால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளின் சம்பளங்கள் அல்லது ஓய்வு ஊதியங்கள் அல்லது செலவுகள் ஆகியவற்றின் தொகை, சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வைக்க வேண்டுமென அச்சட்டம் கூறியது. மாற்றப்பட்ட முறைகள் சம்பந்தமாக, எந்த கோரிக்கையையும் குறைப்ப தற்கும் மறுப்பதற்கும் சட்டசபைக்கு உரிமை உண்டு. ஆனால், ஒதுக்கிய துறைகள் சம்பந்தமான எந்தக் கோரிக்கையையும், சட்டசபை ஏற்க மறுத்தாலோ, அல்லது குறைக்க முயன்றாலோ, முதல் மசோதாவில் இருப்பது, அவரது பொறுப்பை நிறைவேற்றுவதற்கு அவசியம் என உறுதி மொழியளிப்பதற்குக் கவர்னருக்கு உரிமை உண்டு. இவ்விதம் சட்டமியற்றுவதிலும், நிதியிலும், ஒதுக்கிய துறைகளின் மீது சட்டசபைக்குள்ள அதிகாரம் தெளிவாக வரையறுக்கப் பட்டது.

நிருவாகத்தின் ஒரு சிறு பகுதி மீதுதான் மக்களின் பிரதிநிதிகளுக்கு உண்மையான பொறுப்பை 1919ஆம் ஆண்டின் இந்தியச் சட்டம் கொடுத்தது என்பதில் சந்தேகம் இல்லை; உண்மையில், அது ஒரு ஜனநாயகச் சட்டமா எனப் பார்க்கும்போது, மத்திய, மாநில அரசுகள் சம்பந்தப்பட்ட வரையில், அதில் சில குறைபாடுகள் தெரிகின்றன. இருந்த போதிலும், அரசியல் சீர்திருத்தங்களின் முக்கியப் பகுதியாக அதனைக் கொள்ளவேண்டும், டொமினியன் அந்தஸ்து மட்டும் அன்றி, பொறுப்பாட்சிதான், இந்தியாவின் அரசியல் வளர்ச்சியின் குறிக்கோளாகும் என, பிரிட்டிஷ் அரசாங்கம் முதன் முறையாக அதிகார பூர்வமாக அறிவித்தது. 1908ஆம் ஆண்டிலேயே மார்லி பிரபுவால் மறுக்கப்பட்ட பிரிட்டிஷ் முறைப்படியுள்ள பாராளுமன்றத்திற்கு உட்பட்ட அரசாங்கத்தையே பின்னது கூறுகின்றது எனப் பொருள் கொள்ளலாம். பரந்த வாக்குரிமையின்மீது முதன் முறையாக உண்டாக்கப்பட்ட நேரிடைத் தேர்தல், ஒரு முக்கியச் சலுகைதான். மேலும், இது அரசியல் பயிற்சி பெறுவதற்கும் அரசாங்கத்தின் நடவடிக்கையின்மீது தன் செல்வாக்கை உபயோகிப்பதற்கும் ஒரு முக்கியச் சந்தர்ப்பத்தை அளிக் கிறது. புதிய அரசியல் அமுலுக்கு வந்த பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, பாராளுமன்றத்தின் அனுமதியுடன் ஒரு விசாரணைக் கமிஷன் ஏற்படுத்தவேண்டும் என்றும், வேண்டும் அளவு ஆராய்ந்த பிறகு, பொறுப்பாட்சியை மேலும் விரிவுபடுத்த வேண்டுமா அல்லது குறைக்க வேண்டுமா என்பதைப்பற்றி அக்கமிஷன் தன் அறிக்கையை சமர்ப்பிப்ப தற்கும், இச்சட்டம் வழி செய்கிறது.

இந்தியர்களின் தேசிய விருப்பங்களை 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்கள் நிறைவேற்றவில்லை ; சுதந்தரத்திற்கான தேசியப் போராட்டத்தை அவை எவ்விதம் பாதித்தன என்பதைப்பற்றி 9ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. அரசியல் முன்னேற்றம் பெறுவதற்கான இந்தியர்களின் கோரிக்கை படிப்படியாகத் தீவிரமாகியது. அதனால், சீர் திருத்தங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பதைத் தெரிவிப்பதற்காக, சர் ஜான் சைமன் (Sir John Simon) தலைமையில், 1919ஆம் ஆண்டுச் சட்டத்தில் குறிப்பிட்ட காலத்திற்கும் முன்பாகவே, சட்டப்படியான ஒரு கமிஷனைக் காலஞ்சென்ற பிர்க்கன் ஹெட் பிரபு (Lord Birken Head) இந்தியக் காரியதரிசியாராய் இருந்த மிஸ்டர் பால்ட்வின் (Mr. Baldwin) என்பவருடைய அரசாங்கம் நியமித்தது. அக் கமிஷனில் இருந்த அங்கத்தினர் எழுவரும் ஆங்கிலேயராய் இருந்ததால், அது பம்பாய்க்கு 1928ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 3ஆம் தேதி வந்ததும், காங்கிரஸ்காரர்களும், மிதவாதிகளும் முஸ்லீம் சமுதாயத்தைச் சேர்ந்த முக்கியமான பகுதியினரும், அதைப் பகிஷ்கரித்தனர். காங்கிரஸ்காரர் அதற்குப் பல காரணங்களைக் கூறினர். வெளி நாட்டு அதிகாரத்தின் மூலம் நியமிக்கப்பட்ட ஒரு கமிஷனின் சிபாரிசு களின்மீது செய்யப்பட்ட அரசியல் மாற்றங்களைப் பெறுவது, சுயஆட்சிக் கொள்கைக்கு உகந்தது அன்று என அவர்கள் கூறினார்கள். இந்தியாவில் கடினமான சூழ்நிலை இருந்ததால், 1920ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு பதவிக்கு வந்த தொழிற்கட்சியின பிரதமரான சர் ராம்சே மெக்டொனல்டு (Sir Ramsay Macdonald) என்பவருக்கு சர் ஜான் சைமன், 1929ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 16ஆம் தேதி ஒரு கடிதம் எழுதினார் ; இறுதியான முடிவுகளைச் செய்வதற்கு முன்பு, பிரிட்டிஷ் இந்தியா, இந்திய சமஸ் தானங்கள் ஆகிய இரண்டின் பிரதிநிதிகளையும், அவரது கமிஷன் அறிக்கையை வெளியிட்ட பிறகு, அழைப்பதன் அவசியத்தைப் பற்றி அவர் அதில் ஆலோசனை கூறியிருந்தார். இந்த ஆலோசனையை, பிரிட்டிஷ் மந்திரிசபை ஏற்றுக்கொண்டது ; 'இந்தியா அரசியல் முன்னேற்றத்தின் இயற்கையான பிரச்சினை டொமினியன் அந்தஸ்தை அடைவதுதான்,' எனவும் சைமன் கமிஷன் தன் அறிக்கையைச் சமர்ப்பித்த பிறகு ஒரு வட்டமேசை மாநாடு இலண்டனில் கூட்டப்படும் எனவும் கூறும் ஒரு முக்கிய அறிக்கையைக் கவர்னர்-ஜெனரலாய் இருந்த இர்வின் பிரபு (Lord Irvin) 1929ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 31ஆம் தேதி வெளியிட்டார்.

1930ஆம் ஆண்டு, மே மாதத்தில், சைமன் கமிஷனின் அறிக்கை வெளியிடப்பட்டது. சுருக்கமாகக் கூற வேண்டுமானல், மாகாணங்களில் முழுப் பொறுப்புள்ள அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்று அது ஆலோசனை கூறியது. போலீஸ், நீதி ஆகியவைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரமுங்கூடச் சட்டசபைக்குப் பொறுப்பாளராயுள்ள மந்திரிகளுக்கு மாற்றப்பட வேண்டுமென்று அது ஆலோசனை கூறியது. பரவலான வாக்காளர் என்ற அடிப்படை மீது சட்டசபைகளை ஏற்படுத்த வேண்டும் எனவும், அதிகாரிகளின் கட்சி முழுமையாக எடுக்கப்பட வேண்டும் எனவும் மத்திய அரசாங்கத்தில் பிரிட்டிஷ் அதிகாரமும் கட்டுப்பாடும் முழுமையாக நீடிக்க வேண்டும் எனவும் அது ஆலோசனை கூறியது. அண்மையில் முழுமையாக ஏற்படுத்துவது முடியாது எனக் கருதினுலும், சுதேச மன்னர்கள் அடங்கிய அகில இந்திய பெடரேஷன் திட்டத்தை அது கருத்தில்கொண்டு, இந்திய சமஸ்தானங்களுடன் ஏற்படும் உறவு வளர்ச்சியின் முக்கியத்துவத்தையும் குறிப்பிட்டது. ஆனுல், அக்கமிஷனின் சிபாரிசுகள் அனைத்தையும், இந்தியத் தேசிய வாதிகள் நிராகரித்தார்கள். இந்திய அரசியல் பிரச்சினையைப் பற்றி ஆராய்வதற்காக, சர் தேஜ் பஹதூர் சாப்ரூ, திரு. சீனிவாச சாஸ்திரியார், திரு. சி. ஒய். சிந்தாமணி, டாக்டர் பி. ஆர் அம்பேத்கார், சர் முகம்மது ஷபி போன்ற முக்கியமான இந்தியர் சிலர் உட்பட 57 பிரதிநிதிகளை, பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்தும், 16 பிரதிநிதிகளை இந்திய சமஸ்தானங்களிலிருந்தும், 16 பிரதிநிதிகளை மூன்று பிரிட்டிஷ் கட்சிகளிலிருந்தும் கொண்ட ஒரு வட்டமேசை மாநாட்டை இலண்டனில் பிரிட்டிஷ் அரசாங்கம் கூட்டியது. அம்மாநாட்டின் முதற்கூட்டம் 1930ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 12ஆம் தேதி முதல், 1931ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 19ஆம் தேதி வரையில் நடந்தது. மத்திய அரசாங்கத்திற்குப் பொறுப்பு அளிப்பதாக இருந்தால், திட்டமிடப்படும் பெடரேஷனில் சேரத் தங்களுக்கு விருப்பந்தான் என்று சுதேச மன்னர்கள் தெரிவித்தார்கள். முதற்கூட்டத்தில் காங்கிரஸ் கலந்துகொள்ளாவிட்டாலும், அதன் தனிப் பிரதிநிதியாக, இரண்டாம் கூட்டத்தில் (1931ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 7ஆம் தேதியிலிருந்து, டிசம்பர் மாதம் முதல் தேதி வரை) காந்திஜி கலந்துகொண்டார். ஆனுல், அவர் விரும்பியதைப் பெற இயலவில்லை. இம்மாநாட்டின் மூன்ருவது கூட்டத்தில், முன் கலந்துகொண்டவர்களைவிடக் குறைந்த எண்ணிக்கையுள்ள பிரதிநிதிகளே கலந்துகொண்டார்கள்.

1937ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 17ஆம் தேதியிலிருந்து டிசம்பர் மாதம் 24ஆம் தேதி வரையிலும் அக்கூட்டம் நடைபெற்றது.

இம்மாநாடுகள் விவாதித்த விவாதங்களின் பயனாக, இந்திய அரசியலுக்கான சீர்திருத்தத் திட்டங்களை பிரிட்டிஷ் அரசாங்கம் உண்டாக்கியது. இவை 1933ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில் வெளியிடப்பட்ட வெள்ளை அறிக்கையில் சேர்க்கப்பட்டன. இந்திய ஆலோசனையாளர்களின் உதவியுடன் 1936ஆம் ஆண்டில் இந்திய வைசிராயாய் இருந்த லின்லித்கோ பிரபுவால் (Lord Linlithgow) தலைமை தாங்கப்பட்ட, பாராளுமன்றத்தின் இரு சபைகளையும் சேர்ந்த ஒரு கூட்டுக் கமிட்டி, வெள்ளை அறிக்கையை ஆராய்ந்தது. அது சில திருத்தங்களைக் கூறி, வெள்ளை அறிக்கையின் திட்டத்தை அங்கீகரித்தது; தன் அறிக்கையை 1934ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் அளித்தது. அக்கமிட்டியின் அறிக்கையை அடிப்படையாகக்கொண்டு ஒரு மசோதா தயாரிக்கப்பட்டது; 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் எனக் கூறப்பட்ட அச்சட்டம், பாராளுமன்றத்தில் கொண்டுவரப்பட்டு, ஒரு சில திருத்தங்களுடன், 1935ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 2ஆம் தேதி சட்டமாகியது.

1935ஆம் ஆண்டின் சட்டம் இரு முக்கியக் கொள்கைகளைக் கொண்டது. (1) கவர்னர்களின் மாகாணங்கள், தலைமை ஆணையாளர்களின் மாகாணங்கள், சமஷ்டியில் சேரும் இந்திய சமஸ்தானங்கள் ஆகியவைகளைக் கொண்ட அகில இந்திய சமஷ்டி, (2) ஒவ்வொரு கவர்னருடைய மாகாணத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைக்குப் பொறுப்பான அரசாங்கம் உள்ள மாகாணச் சுய ஆட்சி இந்தியக் காரியதரிசியாரும், இந்திய அரசாங்கமும், மாகாணங்களும் இது வரையிலும் செய்து வந்த எல்லாப் பணிகளையும் மன்னர் ஏற்றுக்கொண்டு, அவை மத்திய அரசாங்கத்திற்கு ஒரு புறத்திலும், மாகாண அரசாங்கங்களுக்கு மறுபுறத்திலும் பிரித்துக்கொடுக்கப்பட்டன. இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில், மேலாட்சியின் பணிகளையும் அதிகாரங்களையும் இனிமேல் இந்திய அரசாங்கம் உபயோகிக்காது. ஆனால், 'மன்னருடைய அப்பணிகளைச் செய்வதற்காக நியமிக்கப்பட்ட மன்னரின் பிரதிநிதி' செய்வார். பொதுவாக, அவசியமாக இல்லாவிட்டாலும், இப்பதவியைக் கவர்னர்-ஜெனரலே வகித்து வந்தார்;

மன்னரின் பிரதிநிதி என்ற முறையிலேதான் இதை வகித்தாரே தவிர, சமஷ்டி அரசாங்கத்தின் தலைவர் என்ற முறையில் அன்று. மேலும், அயல் நாட்டு விவகாரம், மத சம்பந்தமான விவகாரங்கள், பாதுகாப்புப் போன்றவைகள், இந்தியச் சட்டசபையின் அதிகாரத்திலிருந்து விலக்கப் பட்டிருந்ததால், அவைகளைக் கவர்னர்-ஜெனரலே வகித்து வந்தார். வெள்ளை மாளிகை மட்டுந்தான் அவரை மேற் பார்வை செய்து, வேண்டிய கட்டளைகளைப் பிறப்பிக்கும். மந்திரிகளின் கட்டுப்பாட்டிற்கு மாற்றப்பட்ட பணிகள் சம்பந்தமாகச் சில விசேஷ அதிகாரங்கள், கவர்னர்-ஜெனரலுக்கும், மாகாணங்களின் கவர்னர்களுக்கும் கொடுக்கப்பட்டன. இவை சம்பந்தப்பட்ட வரையில் பாராளு மன்றத்திற்கே இவர்கள் பொறுப்பாளர்கள். இவ்விதம் இந்தியாவின் அரசியல் அமைப்பு நிலை, புதிய சட்டப்படியும், சார்பு நாட்டைப் (Dependency) போன்றதுதான். ஆனால், அது, 'படிப்படியாக, டொமினியனை நோக்கி ஈர்க்கப்படுகிறது.'

சமஸ்தானங்கள், 'சுதந்தர' நாடுகளாய் இருப்பதால், அவற்றைக் கூட்டாட்சியில் சேரும்படி வற்புறுத்த முடியாது. இதில் சேர விரும்பும் ஒவ்வொரு சமஸ்தானமும், அதன் மன்னரின் மூலமாகக் கூட்டரசில் சேரும் ஒப்பந்தத்தைச் (Instrument of Accession) செய்துகொள்ள வேண்டும். இந்தச் சமஸ்தானம் கூட்டாட்சியில் சேருவதற்முன் இதனை மன்னர் ஏற்றுக்கொள்ள வேண்டும். இரண்டு நிபந்தனைகள் பூர்த்தி யான பிறகுதான் இக்கூட்டாட்சி, மன்னரால் அறிவிக்கப் படும். (1) பாராளுமன்றத்தின் ஒவ்வொரு சபையும், அரச ருக்குச் சமர்ப்பிப்பதற்காக அதை ஆதரித்து ஒரு தீர்மானம் செய்ய வேண்டும்; (2) கூட்டாட்சிச் சட்டசபையின் மேல் சபைக்கு ஐம்பத்திரண்டு அங்கத்தினர்களைத் தேர்ந் தெடுக்கும் உரிமை பெற்ற சமஸ்தானங்களும் சமஸ்தானங் களின் மொத்த மக்கள் தொகையில் பாதிக்குக் குறையாமல் இருக்கும் மக்கள் தொகையைப் பெற்ற சமஸ்தானங்களும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

கூட்டாட்சியைப்பற்றிக் கூறும் சட்டத்தின் அப்பாகம், எப்பொழுதும் அமுல் செய்யப்பட்டதால், அதை விரிவாகப் பார்க்க வேண்டிய அவசியமில்லை; சுருக்கமாக, அதன் விதி களைப்பற்றிக் கூறுவோம். இரண்டு பாகங்களைக்கொண்டு, இரட்டையாட்சித் தன்மையுடன் விளங்கிய 'கூட்டாட்சி நிருவாகத்தை' இச்சட்டம் அமைத்தது. 'மாற்றப்பட்ட

'இலாக்காக்களை' (Transfered Departments) இவற்றுள் ஒன்று கவனித்து வரும். இது சட்டசபைக்குப் பொறுப்பாய் இருக்கும். மற்றொன்று கவர்னர்-ஜெனரலின் தனிப்பட்ட அதிகாரத்தின்கீழ் இருக்கும் அயல் நாட்டு விவகாரம், பாது காப்புப் போன்ற பிரத்தியேகமாக ஒதுக்கிய இலாக்காக்களை அது மேற்பார்வை செய்யும்; இவைகளை மேற் பார்வை செய்யும் கவர்னர்-ஜெனரல், பிரிட்டிஷ் பாராளு மன்றத்திற்கே பொறுப்பாளர். மந்திரிகளுக்குக் கொடுக்கப் பட்ட பணிகளிலும் தலையிடுவதற்குப் பிரத்தியேகமான அதிகாரங்கள், பொறுப்புகள், அவருடைய தனிப்பட்ட அதிகாரத்தின்கீழ் நடப்பதற்குரிய தமது விருப்ப அதிகாரம் ஆகியவைகள் கவர்னர்-ஜெனரலுக்குக் கொடுக்கப்பட்டன.

கூட்டாட்சியின் சட்டசபையில் இரு சபைகள் இருக்கும். அவற்றுள் 'கீழ்ச்சபை' எனப்படும் சட்டசபை அல்லது கூட்டாட்சியின் சட்டசபையும், 'மேற்சட்டசபை' அல்லது ராஜ்ய சபையும் இருக்கும். கீழ்ச்சட்டசபையில், பிரிட்டிஷ் இந்தியாவின் 250 பிரதிநிதிகளும் 125க்கு மேற்படாத சமஸ் தானங்களின் பிரதிநிதிகளும் இருப்பார்கள். கூட்டாட்சிச் சட்டசபையின் அங்கத்தினர்கள், மக்கள் தொகுதியால் தேர்ந்தெடுக்கப்படமாட்டார்கள்; ஆனல், மாகாணங்களி லிருக்கும் சட்டசபைகளின் அங்கத்தினர்களாலேதான் தேர்ந் தெடுக்கப்படுவார்கள். இந்த மறைமுகத் தேர்தலிலும், பொது (இந்து), முஸ்லீம், சீக்கிய இடங்களுக்கு, இச் சமுதாயத்தின் பிரதிநிதிகளாக மாகாணச் சட்டசபைகளில் இருப்பவர்கள் மூலமாகத்தான் நியமிக்க வேண்டும்; ஒவ்வொரு சமுதாயத்திற்கும் குறிப்பிடப்பட்டுள்ள இடங் களுக்காக, அவர்கள் தனியாக வாக்களிப்பார்கள். ராஜ்ய சபை அல்லது மேற்சபையில், 156 பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளும், 104க்கு மேற்படாத கூட்டாட்சியில் சேரும் சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும் இருப்பார்கள். சமஸ் தானங்களின் பிரதிநிதிகளைச் சம்பந்தப்பட்ட சமஸ்தானங் களின் மன்னர்கள் நியமிப்பார்கள். பிரிட்டிஷ் இந்திய அங்கத் தினர்களுள் அறுவரைச் சிறுபான்மை வகுப்பினர், தாழ்த்தப் பட்ட வகுப்பினர், பெண்டிர் ஆகியவர்களுக்குப் பிரதி நிதித்துவம் அளிக்கும் வகையில் கவர்னர்-ஜெனரல் நியமிப் பார்; மற்றவர்கள், நேரிடையாக, சிலவற்றில் மறைமுகமாக, உயர்ந்த வாக்குரிமையுடன், வகுப்புவாரியாக உள்ள தொகுதிகள் மூலம் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். ராஜ்ய சபை ஒரு நிரந்தர சபையாய் இருக்கும்; அதைக் கலைக்க முடியாது.

அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஒன்பது ஆண்டுகளுக்கு மேல் பதவியில் இருக்க முடியாது; மொத்த அங்கத்தினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர், மூன்றாண்டுக்கொருமுறை பதவியை இழப்பர். முக்கியமற்ற சில நுணுக்கங்களைத் தவிர்த்து, இரண்டு சபைகளின் அதிகாரங்களும், நிதி விஷயங்களிற்கூட, ஒரே தன்மை வாய்ந்தனவாய் இருக்கும்.

மாகாண அரசாங்கங்களின் தன்மையும் உருவமும், 1935ஆம் ஆண்டின் சட்டத்தால் மிகவும் மாறிவிட்டன. மாகாணங்களை மறுபடியும் மாற்றி அமைப்பதற்கு அது வழி செய்தது; இரண்டு புதிய மாகாணங்கள் உண்டாக்கப் பட்டன; ஒன்று பம்பாயிலிருந்து பிரிக்கப்பட்ட சிந்து மாகாணம். பழைய பீஹார், ஒரிஸ்ஸா மாகாணத்தின் ஒரு பகுதி, மத்திய மாகாணங்களின் ஒரு பகுதி, சென்னை மாகாணத்தின் ஒரு பகுதி ஆகியவைகளைக் கொண்டு மற்றொரு மாகாணம் உருவாக்கப்பட்டது. ஓரியர்கள் அதிகமாய் இருந்த இம்மாகாணம், ஒரிஸ்ஸா என வழங்கப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து பர்மா பிரிக்கப்பட்டது. ஏடனும் இந்தியாவிலிருந்து பிரிந்தது. மொத்தத்தில், பதினொரு கவர்னர் மாகாணங்களும், ஆறு தலைமை ஆணையாளர் மாகாணங்களும் அச்சமயம் இருந்தன. தலைமை ஆணையாளர் மாகாணங்கள், கவர்னர்-ஜெனரலால், தலைமை ஆணையாளர் மூலமாக நிருவாகம் செய்யப்பட்டன. அவரைத் தம் விருப்பப்படி கவர்னர்-ஜெனரல் நியமிப்பார்.

கவர்னர்களின் மாகாணங்களில் இரட்டை ஆட்சி ஒழிக்கப் பட்டு, மாகாணச் சுய ஆட்சி நிறுவப்பட்டது. இச்சட்டப்படி, கவர்னர், மன்னரின் பிரதிநிதியாகவும், மாகாண நிருவாகத்தின் தலைவராகவும் இருப்பார். சட்டத்தால் கொடுக்கப்பட்ட மாகாண அரசாங்கத்தின் எல்லாப் பணி களையும் (சட்டம் அமைதி போன்றவைகளைத் தவிர) செய் வதில் அவருக்கு உதவி புரிவதற்கும், ஆலோசனை கூறுவதற்கும் உதவியாக அவருக்கு ஒரு மந்திரி சபை அளிக்கப்பட்டிருக்கிறது. சட்டம், அமைதி போன்றவைகளில் அவருக்குப் பிரத்தியேகமான பொறுப்பும், விருப்பப்படி நடக்கும் உரிமையும் இருந்தன. உள்ளூர்ச் சட்டசபையில் இருக்கும்[1] அங்கத்தினர்களிலிருந்தே பொதுவாக மந்திரிகள்,

1. 1919 ஆம் ஆண்டின் சட்டப்படி, தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபையின் அங்கத்தினர்களிலிருந்து மந்திரிகள் நியமிக்கப்படுவார்கள். ஆனால், 1935ஆம் ஆண்டு சட்டப்படி, மேற்சபைக்கு நியமிக்கப்பட்ட அங்கத்தினர் ஒருவர் மந்திரியாக நியமிக்கப்படலாம்.

கவர்னரால் நியமிக்கப்படுவார்கள். அவர்கள் சட்ட சபைக்குப் பொறுப்பாளர்களாய் இருப்பார்கள். சிறுபான்மையோரின் நலன்களைக் கருத்திற்கொண்டு, மந்திரி சபையைக் கவர்னர் அமைக்கவேண்டும். மந்திரிகள் பதவியில் இருக்கும்போது அவர்களுடைய சம்பளங்கள் மாறமாட்டா.

மன்னரின் பிரதிநிதியாகக் கவர்னரும், ஒன்று அல்லது இரண்டு சபையும், மாகாணச் சட்டசபையில் இருந்தனர். சென்னை, பம்பாய், வங்காளம் ஐக்கிய மாகாணங்கள், பீஹார், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்களில், மேற்சட்டசபை, கீழ்ச் சட்டசபை என இருசபைகள் உண்டு; மற்ற மாகாணங்களான பஞ்சாப், மத்திய மாகாணங்களும் பீராரும், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், ஒரிஸ்ஸா, சிந்து ஆகிய மாகாணங்களில் சட்டசபை எனப்படும் ஒரே சபைதான் இருந்தது. சட்டசபை அல்லது கீழ்ச்சபையில் 50 முதல் 250 வரை அங்கத்தினர்கள் இருந்தார்கள்; அவர் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டவர். இச்சபையின் காலம் ஐந்து ஆண்டு. ஆனால், அதற்கு முன்பே இது கவர்னரால் கலைக்கப்படலாம். சட்டசபையின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பது, ஒவ்வொரு மாகாணத்திலும் வாக்காளர் தொகுதி, வகுப்பு நலன்கள் ஆகியவைகளின் அடிப்படையில் இருக்கும். 1932ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 4ஆம் தேதி கொடுக்கப்பட்ட வகுப்புத் தீர்ப்பு (Communal Award), 1932ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம், 25ஆம் தேதியன்று, பூனா உடன்படிக்கையால் திருத்தப்பட்டது; இதன்படிதான் வாக்காளர் தொகுதி அமையும். பிரத்தியேக நலன்களின் பிரதிநிதிகளைத் தவிர, பொதுவில் இருந்து சில இடங்கள் 'ஷெட்யூல்ட் வகுப்பாருக்கு' அதாவது, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்று கூறப்படுகிறவர்களுக்கு ஒதுக்கப்பட்டன. இந்திய மக்கள் தொகையில் 10 சதவிகிதத்தினர், ஓட்டுரிமைகளை இச்சட்டத்தால் பெற்றனர்; 1919ஆம் ஆண்டின் சட்டத்தால் பெற்றதைவிட அதிகமானவர்கள் இச் சட்டத்தின் மூலம் வாக்குரிமை பெற்றார்கள். லெஜிஸ்லேட்டிவ் கவுன்சில் அல்லது மேற்சபை, ஒரு நிரந்தர நிறுவனமாகும்; அதைக் கலைக்க முடியாது; ஆனால், மூன்றில் ஒரு பங்கினர், மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை பதவியில் இருந்து நீங்குவர். சட்டசபையின் வகுப்பு அடிப்படையே, இதிலும் பின்பற்றப்பட்டது. இரண்டு சபைகளின் அதிகாரங்களும் ஒரே தன்மை வாய்ந்தவை. அரசாங்கத்திற்குச் சில மானியங்களை வழங்குதல், பணமசோதாவைக் கொண்டு

வருதல் ஆகியவைகளில் மட்டுந்தான் சிறிது வேறுபாடு இருக்கிறது; இவற்றைச் சட்டசபையிலேதான் கொண்டுவர இயலும். இரண்டு சபைகளுக்குமிடையில், ஒரு மசோதாவைப் பற்றிக் கருத்து வேறுபாடு ஏற்பட்டால், இரண்டு சபைகளின் கூட்டு அமர்வுக்கு ஏற்பாடு செய்து, பெரும்பான்மையினரான அங்கத்தினரின் கருத்துக்குத் தக்கவாறு முடிவு செய்யும் அதிகாரம் கவர்னருக்கு உண்டு.

கவர்னருக்குச் சில விசேஷ அதிகாரங்கள் உண்டு. அவர் சில குறிப்பிட்ட நிலைமைகளில், சட்டசபை நிறைவேற்றிய மசோதாக்களை ஒப்புக்கொள்ள மறுக்கலாம். சட்டசபையின் கூட்டம் நடக்காத போது, உடனடியான நடவடிக்கை எடுக்கக் கூடிய சூழ்நிலை உள்ளது என அவர் நினைத்தால், அவசரச் சட்டங்களை இயற்ற அவருக்கு அதிகாரமுண்டு; மேலும், சில பொருள்களைப் பற்றியும் அவசரச் சட்டங்களை இயற்ற அவருக்கு அதிகாரமுண்டு. மாகாணச் சட்டசபை இயற்றிய சட்டத்தைப் போன்ற ஆற்றல் இந்த அவசரச் சட்டங்களுக்கும் குறிப்பிட்ட காலம் வரைக்கும் உண்டு. மேலும், சில நிலைமைகளில், கவர்னருடைய சட்டங்கள் எனப்படுபவைகளை, உடனேயாவது அல்லது அவர் விரும்பினால் சட்டசபையைக் கலந்து ஆலோசித்தாவது பிறப்பிப்பதற்குக் கவர்னருக்கு உரிமை உண்டு. மற்றும், அரசியலமைப்பு இயந்திரம் இயங்க முடியாமல் நின்றுவிடும்போது, பிரகடனத்தில் குறிப்பிட்ட அளவுக்குள்ள அவருடைய பணிகளை அவர் விருப்பப்படி செய்யக்கூடும் எனக் கவர்னர் ஒரு பிரகடனத்தின் மூலம் அறிவிக்கலாம். கவர்னர்-ஜெனரல், பிரிட்டிஷ் பாராளு மன்றம் ஆகியவைகளின் கட்டளைப்படியும் மேற்பார்வையின் கீழும் இந்த அதிகாரங்களைக் கவர்னர் உபயோகிப்பார். இவ்விதமாக 1935ஆம் ஆண்டின் சட்டம், பொதுத்துறை ஆட்சியில் அதிக அளவுக்கு, மாகாணங்களுக்குச் சுய ஆட்சியை அளித்தது; உண்மையான பொறுப்பாட்சியைக் கவர்னரின் விசேஷ அதிகாரங்கள் கட்டுப்பாடு செய்கின்றன எனக் கருதப்பட்டது. மாகாண அரசாங்கங்களைப் பற்றிய அரசியல் அமைப்பின் விதிகள், 1937ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், முதலாம் தேதி அமுலுக்கு வந்தது. 1937ஆம் ஆண்டு, ஜுலை மாதத்தில் பெரும்பான்மைக் கவர்னர் மாகாணங்களில் மந்திரி சபைகளைக் காங்கிரஸ் அமைத்து, 1939ஆம் ஆண்டின் கடைசி மாதம் வரையில் பதவியில் இருந்தது.

## 3. இந்திய சமஸ்தானங்கள்

இந்நாட்டிலிருந்த சமஸ்தானங்களால், இந்திய அரசியலமைப்புப் பிரச்சினைகள், இந்திய அரசியல் வாழ்க்கையின் முக்கியக் கூறாய் இருந்தன. கர்சான் பிரபுவும், இரண்டாம் மின்டோ பிரபுவும், இரண்டாம் ஹார்டிஞ்சு பிரபுவும் சமஸ்தானங்களின் மீதிருந்த பிரிட்டிஷ் மேலாதிக்கத்தை மிகத் தெளிவாக வற்புறுத்தினார்கள்; ஆனால், இரண்டாம் மின்டோ பிரபுவும் இரண்டாம் ஹார்டிஞ்சு பிரபுவும் முறையே வங்காளப் பிரிவினைக்குப்பின் இந்தியாவில் ஏற்பட்ட குழப்பமான அரசியல் நிலைமை காரணமாகவும், 1914–18ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட போரின் துன்பங்கள் காரணமாகவும், இணக்கமான ஒரு கொள்கையைச் சமஸ்தானங்களிடத்தில் பின்பற்றி, அதிகமான ஒத்துழைப்பை அவற்றிடமிருந்து பெற முயன்றனர். 'பேரரசு ஆட்சி எனப்படும் பெரிய கடமையைச் செய்வதில், கூட்டாளிகளாகவும், உதவி செய்கிறவர்களாகவும் இந்திய மன்னர்கள் விளங்கினார்கள்,' என இரண்டாம் ஹார்டிஞ்சு பிரபு, 1916ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 26ஆம் தேதி நடந்த ஜோத்பூர் மஹாராஜாவின் அதிகார நியமனச் சடங்கின்போது கூறினார்.

பின்னர் இக்கொள்கை இரண்டு விதமாக வெளிப்பட்டது. டப்ரின் பிரபு (1884–1888) காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட இம்பீரியல் செர்வீஸ் துருப்புகளை (Imperial Service Troops)–சமஸ்தானங்களால் வைத்துக்கொள்ளப்பட்டு, பிரிட்டிஷ் அதிகாரிகளால் பயிற்சி அளிக்கப்பட்டவைகளை—அபிவிருத்தி செய்தல் அவற்றுள் ஒன்று. இத்துருப்புகள் பிரிட்டிஷ் பேரரசுக்குச் சிறந்த சேவையை முக்கியமாக முதலாவது உலகப் போரின் போது செய்தன. பல சமஸ்தானங்களின் பிரதிநிதிகளைக்கொண்ட ஓர் ஆலோசனை நிறுவனத்தின் வளர்ச்சி, அவற்றுள் மற்றொன்று. லிட்டன் பிரபுவும், கர்சான் பிரபுவும், இரண்டாம் மின்டோ பிரபுவும், இரண்டாம் ஹார்டிஞ்சு பிரபுவும், இப்படிப்பட்ட ஒரு நிறுவனத்தை நிறுவுவதற்கு இதற்கு முன்பு முயன்றனர்; அதனுடைய முக்கியத்துவத்தை, முதலாம் உலகப் போரின் போது செம்ஸ்போர்டு பிரபு உணர்ந்தார். இப்படிப்பட்ட ஒரு நிறுவனத்தை நிறுவ வேண்டும் என்று மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை உறுதியான சிபாரிசுகளைச் செய்தது; அதனால், 1921ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 8ஆம் தேதி, அரசாது பிரகடனத்தின் மூலம், இங்கிலாந்து மன்னரால், 'அரசர்கள்

சங்கம்' உண்டாக்கப்பட்டது. அரசர்கள் சங்கம் ஓர் ஆலோசனைச் சபையே தவிர, நிருவாக சபையன்று; பற்பல விதமான சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் அதில் அங்கம் வகித்தார்கள்; வைசிராயே அதன் தலைவர்; அதற்கு ஒரு சான்சலரும் (Chancellor) உண்டு. அவர்களை அங்கத்தினர்களிலிருந்து ஆண்டுக்கொரு முறை தேர்ந்தெடுப்பார்கள். பிரிட்டிஷ் இந்தியா, இந்தியச் சமஸ்தானங்கள் ஆகியவைகளுக்குப் பொதுவான பிரச்சினைகளையும், சமஸ்தானங்களின் பிரதேசங்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளையும் அதனுடைய காரியக் கமிட்டியுடன், வைசிராய் ஆலோசிக்கலாம். இந்திய சமஸ்தானங்களின் உள்நாட்டுப் பிரச்சினைகள், அவற்றின் அரசர்கள், இங்கிலாந்து மன்னருடன் அவை கொண்டிருக்கும் உறவுகள் ஆகியவைகளில் தலையிடவோ, அன்றி அவற்றுக்கிருக்கும் உரிமைகளிலும் வேலைகளிலும் எவ்விதத்திலும் தலையிடவோ, அன்றி அவர்களின் செயல் சுதந்தரத்தைத் தடுக்கவோ, அச்சங்கத்திற்கு உரிமை இல்லை.

அதே சமயத்தில், மேலாட்சியின் வளர்ச்சியையும், சமஸ்தானங்களின் உள்நாட்டுப் பிரச்சினைகளில் தலையிடும் உரிமையையும், அச் சமஸ்தானங்களின் மன்னர்கள் விரும்பவில்லை; இந்திய அரசாங்கம் படிப்படியாக இந்தியர்களால் நடத்தப்பட்டதால், இவற்றைப் பற்றிப் பேசும்போது அவர்கள் எளிதில் சினங்கொண்டார்கள். சுங்கவரிகளை உருவாக்குவதிலும் வசூலிப்பதிலும் தங்களுக்கும் பங்கு இருக்க வேண்டுமென அவர்கள் கோரினார்கள். அதனால், சர் ஹார்கோர்ட் பட்லர் (Sir Harcourt Butler)[1] என்பவரின் தலைமையின்கீழ் அவரது பெயரால் **'பட்லர் கமிட்டி'** என மக்களால் வழங்கப்பட்ட இந்திய சமஸ்தானங்களின் கமிட்டியை இந்தியக் காரியதரிசியார் 1927ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் ஏற்படுத்தினர். மேலாட்சிக்கும் இந்திய சமஸ்தானங்களுக்குமிடையே உள்ள உறவுகளை ஆராயவும், பிரிட்டிஷ் இந்தியா, இந்திய சமஸ்தானங்கள் ஆகியவற்றுக்கிடையே உள்ள பொருளாதார, நிதி உறவுகளை ஒழுங்கு செய்வதற்கான சிபாரிசுகளைச் செய்யவுமே அக்கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. 1929ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் அது

1. ஐக்கிய மாகாணத்திற்கும் பர்மாவுக்கும் அடுத்தடுத்து முன்பு கவர்னராய் இருந்தவர்; அதற்கு முன்பு, கவர்னர்-ஜெனரலின் சபையில் ஓர் அங்கத்தினர்.

தன் அறிக்கையை வெளியிட்டது. 'மேலாட்சிக்கும் சுதேச மன்னர்களுக்குமிடையே வரலாற்றுத் தன்மையுள்ள உறவுகள் இருப்பதால் பின்னவர்களை அவர்களுடைய விருப்பம் இல்லாமல் இந்திய அரசாங்கத்துடன் பிணைக்கக் கூடாது,' என்கிற மிக உறுதியான கருத்தை மற்றச் சிபாரிசுகளுடன் அது வெளியிட்டது. காலத்திற்குத் தகுந்த விதத்தில் அந்த அறிக்கை இல்லை என்றும், 'இந்தியாவின் இரு பகுதிகளுக்கிடையே இருக்கும் உறவை இணக்கமாகவும் திருப்தியாகவும் அது செய்யவில்லை,' என்றும் அவ்வறிக்கை கண்டிக்கப்பட்டது.

ஆனால், இரு பக்கங்களிலும் நிதானத்துடன் இருந்தவர்கள், பிரிட்டிஷ் இந்தியா, இந்திய சமஸ்தானங்கள் ஆகியவைகளுக்கிடையே நெருங்கிய உறவு ஒரு கூட்டாட்சியின் மூலம் ஏற்படுவதன் அவசியத்தை உணர்ந்தார்கள். ஏனெனில், இரண்டும் பல வழியில் ஒன்றோடு ஒன்று நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. 1928ஆம் ஆண்டில் ஏற்பட்ட நேரு கமிட்டியும் (The Nehru Committee) சட்டபூர்வமான இந்தியக் கமிஷனும் (Indian Statutory Commission), இந்நோக்கத்தை வலியுறுத்திக் கூறின. திட்டத்திலுள்ள கூட்டாட்சியில் சமஸ்தானங்கள் சேருவதற்கு 1935ஆம் ஆண்டின் சட்டம் எவ்விதம் வழி செய்கிறது என்பதை நாம் முன்பே குறித்துள்ளோம்.

# 7. உள்நாட்டு ஆட்சியும் பொது நிலைமையும் (1906–1938)

## 1. பொதுவான மதிப்புரை

கர்சான் பிரபுவால் செய்யப்பட்ட வங்காளப் பிரிவினையைத் தொடர்ந்து ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சி, புரட்சித் தன்மை பெற்றது. இதனால் காங்கிரசிலிருந்த தீவிர வாதிகளின் கைகள் வலுத்தன. பிரிவினையை எதிர்ப்பதற் காக அயல் நாட்டுப் பண்டங்களின் பகிஷ்கார இயக்கம் வளர்ந்தது. மேலும், சில வகைப்பட்ட அதிகாரிகளை ஒழித்துக் கட்டுவதற்காகவும், முடியுமானால், ஆயுதப் புரட்சியைத் தோற்றுவிக்கவும், படைக்கலங்களைச் சேகரிக்கவும், வெடி குண்டுகளைத் தயாரிக்கவும் உரிய குறிக்கோள்களுடன், இரகசியச் சங்கங்கள் இந்தியா முழுவதிலும் ஏற்பட்டன. வங்காளத்தில் மட்டுமன்றி, பஞ்சாப், சென்னை போன்ற அதிக தூரத்தில் இருக்கும் மாகாணங்களிலும், ஆபத்தான அமைதியின்மை பொதுவாகக் காணப்பட்டது. அதை அடக்குவதற்காகக் கடுமையான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்தது. மக்கள் இயக்கங்களின் மீதும், பத்திரிகைகளின் மீதும், பொதுக்கூட்டங்களின் மீதும் கடுமை யான தடைகளை ஏற்படுத்தும் சட்டங்கள் இயற்றப்பட்டன. முக்கியத் தலைவர் சிலர், விசாரணையின்றி நாடுகடத்தப் பட்டனர். மற்றவர்கள் தூக்கிலிடப்பட்டார்கள்; அல்லது ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார்கள். மற்றும் ஏராள மானவர்கள்—திலகரைப் போன்ற பிரபலத் தலைவர்கள் உட்பட — பலவிதச் சிறைத்தண்டனைகளுக்காளானார்கள். ஆனால், இத்தீவிர நடவடிக்கைகளினால், கொலையையும் பலாத் காரத்தையும் அடக்க முடியவில்லை; இறுதியில், கர்சான் பிரபுவின் திட்டத்தைத் திருத்துவதென்று அரசாங்கம் முடிவு செய்தது. 1911ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 25ஆம் தேதி,

இதைப் பற்றி இந்திய அரசாங்கம் அனுப்பிய செய்தி, பிரிவினையால் ஏற்பட்ட வெறுப்புணர்ச்சியை எடுத்துக் காட்டியது. வங்காளம், கிழக்கு வங்காளம் ஆகிய இரு மாகாணங்களின் சட்டசபையிலும், மற்றவர்கள் அதிகமாய் இருப்பதைக் காணும் வங்காளிகளின் உண்மையான மனக் குறையையும், முகம்மதியர்களுக்கும் இந்துக்களுக்குமிடையே வளரும் பகைமை உணர்ச்சி நாட்டின் பல பாகங்களில் நாளுக்குநாள் அதிகமாவதையும் அது வெளிப்படையாக ஒப்புக்கொண்டது.

ஐந்தாம் ஜார்ஜ் அரசர் சிங்காதனமேறியதைத் தொடர்ந்து, அரசரும் அரசியாரும் டில்லிக்கு வந்து, 1911ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் ஒரு **தர்பாரை** (Durbar) நடத்தினார்கள். அரசர், இரண்டு முக்கிய அறிக்கைகளைத் **தர்பாரில்** வெளியிட்டார். ஒன்று, ஒரு கவர்னருக்குக் கீழே வங்காள மாகாணத்தை ஏற்படுத்துதல், பீஹார், ஒரிஸ்ஸா, சோட்டா 'நாகப்பூர் (Chota Nagpur) ஆகியவை அதிலிருந்து பிரிக்கப்பட்டு, லெப்டினென்டு—கவர்னரின்கீழ் ஒரு மாகாண மாக்கப்பட்டது; அஸ்ஸாம் மறுபடியும், ஒரு தலைமை-ஆணையாளர் மாகாணம் ஆக்கப்பட்டது. (இவையிரண்டும் பின்னர்க் கவர்னரின்கீழ் விடப்பட்டன.) மற்றொன்று, இந்தியாவின் தலைநகரைக் கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றுவது. வைசிராயாயிருந்த ஹார்டிஞ்சு பிரபு, இந்த நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்ததற்காகக் கடுமையாகக் கண்டிக்கப்பட்டார்; ஆனால், அவருடைய கொள்கை சரியானது எனக் காலம் கூறியது. தீவிரவாதிகளின் பலாத்காரச் செயல்கள் முற்றிலும் அடக்கப்படாவிட்டாலும், பொது நிலைமையில் மிக்க அபிவிருத்தி ஏற்பட்டது; ஆங்கிலேயர்களுக் கெதிரான வெறுப்புணர்ச்சி குறையத் தொடங்கியது.

மூன்று ஆண்டுகளுக்கும் குறைவான காலத்திற் குள்ளாகவே இது நன்றாகத் தெரிந்தது; ஏனெனில், 1914ஆம் ஆண்டில் ஆரம்பமான முதல் உலகப்போர் இந்தியர்களின் விசுவாசத்தைக் கடுமையான சோதனைக்குள்ளாக்கியது; இச்சோதனையில் இந்தியா வெற்றியடைந்து, பிரிட்டனுடைய நன்றியறிதலையும் உலகத்தின் பெருமதிப்பையும் பெற்றது. இந்தியமக்களும் மன்னர்களும் தங்களிடமிருந்த செல்வங்களை இந்திய அரசாங்கத்திற்கு வாரிவழங்கினார்கள். ஐரோப்பா, ஆப்பிரிக்கா, மேற்கு ஆசியா ஆகிய நாடுகளின் போர்க் களங்களில் இந்திய வீரர்கள் பங்கு கொண்டு, வீரத்துடன்

போர் புரிந்து, வாகை சூடினார்கள். போர் ஆரம்பித்த ஒரு சில மாதங்களுக்குள்ளாகவே, ஏறத்தாழ 3,00,000 பேர்கள், கடல் கடந்து, சென்று பல்வேறு முனைகளில் போரிட்டார்கள்.

'சிறிய படைக்கலங்களுக்கான 70,000,000 துப்பாக்கிக் குண்டுகளையும், நவீன ரகத்தைச் சேர்ந்த 60,000 துப்பாக்கிகளையும், 550க்கும் மேற்பட்ட பீரங்கிகளையும் இந்தியா இங்கிலாந்திற்குக் கொடுத்து உதவியது. போர் நடந்த சமயத்தில், 800,000க்கும் அதிகமான போர்த் துருப்புகளும், துருப்புகள் அல்லாத 4,00,000 பேர்களும் (Non-Combatants) எவ்விதக் கட்டாயமும் இன்றியே படையில் சேர்த்தார்கள். இவற்றுக்கீடாக, ஏராளமான பொருள்களையும் இந்தியா கொடுத்துஉதவியது. வெடி மருந்துகளுடன், பருத்தி, சணல், இரும்பு, எஃகு, இரும்புக்கனி, மாங்கனீஸ், மைக்கா, வெடியுப்பு, ரப்பர், தோல்கள், பெட்ரோலியம், தேயிலை, கோதுமை ஆகியவைகளையும், நேசநாடுகளுக்கு இந்தியா கொடுத்து உதவியது. இயன்ற அளவுக்குப் பணவுதவியையும் இந்தியா செய்தது. இந்தியத் துருப்புகள், இந்நாட்டு எல்லைக்கு அப்பால் சென்று போரிட்டாலும், அவற்றிற்குப் பொதுவாகச் செலவாகும் தொகையையும் இந்தியாவே கொடுத்தது. அச் செலவு ஆண்டுக்கு 20 மில்லியன் முதல் 30 மில்லியன் பவுன்கள்வரை இருந்தது. 3,00,000 பேர்களைக் கொண்ட மிகுதியான ஒரு படைக்கு ஆகும் செலவையும் அது ஏற்றுக் கொண்டது; 1,00,000,000 ஸ்டர்லிங் பவுன்களையும், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு நன்கொடையாக வழங்கியது. இவ்விதம் ஏராளமான பொருள்களைக் கொடுத்ததால், மிகக் கடுமையான செலவாணித் துன்பத்தில் இந்தியா சிக்கிப் பல ஆண்டுகள்வரை துன்பப்பட நேர்ந்தது.

இந்தியா புரிந்த தாராளமான சேவையை இங்கிலாந்து ஒப்புக்கொண்டது. 1919ஆம் ஆண்டில் செய்யப்பட்ட அரசியல் அமைப்பின் சீர்திருத்தங்களைத் தவிர, போர் மந்திரி சபையிலும், பேரரசின் மாநாடுகளிலும், இந்தியர்கள் அனுமதிக்கப்பட்டார்கள். மிஸ்டர் எஸ். பி. சின்ஹா, பிரபுவாக்கப்பட்டு, துணை இந்தியக் காரியதரிசியாராய் நியமிக்கப்பட்டார். இராணுவத்திலிருக்கும் மன்னரின் கமிஷனும் இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஒரு பிராந்தியப் படையும் (Territorial Force) பல்கலைக் கழகப் பயிற்சிப் படையும் (University Training Corps) ஆரம்பிக்கப்பட்டன. உலக நாடுகளின் லீகு (League of Nations) ஏற்பட்டபோது, அதில் அடிப்படையில் அதிகமாக இந்தியா இடம் பெற்றது.

## 2. ஸ்தலச் சுய-ஆட்சி

ரிப்பன் பிரபுவின் நோக்கம் எதுவாய் இருந்த போதிலும், ஸ்தலச் சுய ஆட்சியில் அவர் புகுத்திய சீர்திருத்தங்களால், அவ்வாட்சியை அதிகாரிகளின் கட்டுப்பாட்டிலிருந்து விடுவிக்க முடியவில்லை; 1929ஆம் ஆண்டில் இந்தியச் சட்ட பூர்வக் கமிஷன் கூறியபடி, 'ஸ்தல மக்களின் விருப்பத்திற்கு உகந்த ஒரு திட்டத்தை ஏற்படுத்துவதற்கான எவ்வித உண்மையான முயற்சியும் செய்யப்படவில்லை.' இந்தக் குறைபாடுகளை, மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை வெளிப்படையாக ஏற்றுக்கொள்கிறது; செம்ஸ்போர்டு பிரபுவின் அரசாங்கம், 1918ஆம் ஆண்டு, மே மாதம், 16ஆம் தேதியன்று ஒரு தீர்மானத்தை வெளியிட்டது: 'அவசியமற்ற அரசாங்கத்தின் கட்டுப்பாட்டைப் படிப்படியாக நீக்கும் கொள்கையும், அரசாங்கம், ஸ்தல ஸ்தாபனங்கள் ஆகியவற்றுக்குத் தகுந்தவாறு அதிகார வரம்பை ஏற்படுத்தும் கொள்கையும்' அதில் அறிவிக்கப்பட்டன. இந்த ஸ்தாபனங்களை இயன்ற அளவுக்கு பிரதிநிதித்துவம் வாய்ந்தனவாகச் செய்யவும், வரி விதித்தல், வரவு செலவு திட்டம், வேலைகளுக்கான அனுமதி ஆகியவை சம்பந்தப்பட்ட அவசியமில்லாத கட்டுப்பாட்டை நீக்கவும், வாக்குரிமை பெறும் தகுதியை இயன்ற அளவுக்குக் குறைக்கவும், நியமிக்கப்பட்ட தலைவர்களுக்குப் பதிலாக அதிகாரிகள் அல்லாதவர்களைத் தேர்ந்தெடுக்கவும் தீர்மானிக்கப்பட்டது. ஒன்றுபட்ட கிராம வாழ்க்கையை வளர்ப்பதன் முக்கியத்துவத்தை இத்தீர்மானம் வலியுறுத்திக் கூறியது.

1921ஆம் ஆண்டில், ஸ்தலச் சுய-ஆட்சி, மந்திரிகளின் பொறுப்பில் இருந்த மாற்றப்பட்ட துறை ஆகியது. நகரசபைகளுக்கும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் அதிகப்படியான அதிகாரங்களும், பணிகளும் கொடுக்கப்பட்டன; அதிகாரக் கட்டுப்பாட்டிலிருந்து இயலும் அளவுக்கு விடுவிக்கப்பட்டன. விரிவான வாக்காளர் தொகுதிக்கு அவை பொறுப்பேற்றன; தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களையும் பெற்றன. சில தனிப்பட்ட நிலைமைகளில் திறமை வாய்ந்தவர்களின் உதவி தேவைப்பட்ட போதுதான், தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படாமல், நியமிக்கப்பட்டார்கள். ஸ்தல ஸ்தாபனங்களின் முன்னேற்றத்திற்காக மாகாண அரசாங்கங்கள் அதிக ஆர்வத்துடனும், விருப்பத்துடனும் பல முயற்சிகளை எடுத்தன; இக்கால நிலைமைக்குத் தகுந்தவாறு, நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள நிறுவனங்களின் தன்மையை

மாற்றி அமைப்பதற்காகப் பல சட்டங்களையும் அவ்வரசுகள் இயற்றின. எல்லாவற்றிலும், ஸ்தல ஸ்தாபனங்கள் திருப்திகரமாக இயங்கவில்லை என்பது உண்மைதான். ஆனால், சுய-ஆட்சிக்கு மக்கள் தகுதியற்றவர்கள் என்ற காரணத்தை இதற்குக் கூறமுடியாது; ஆனால், மத்தியக் கமிட்டி (Central Committee) சரியாகக் கூறியதுபோல, 'அதிகாரிகளின் பாதுகாப்பிலிருந்து முழுச்சுதந்தரத்திற்குத் திடீரென்று மாற்றப்பட்டதால் உண்டான தடுக்க இயலாத விளைவுதான்' அதற்குக் காரணமாகும்.

புதிய காலத்தில் உள்ள ஸ்தலச் சுய-ஆட்சியின் குறிப்பிடத்தக்க அம்சம், பம்பாய், கல்கத்தா, லக்னோ, அலஹாபாது, கான்பூர், இரங்கூன் போன்ற முக்கிய நகரங்களிலுள்ள அபிவிருத்தி டிரஸ்டு நிறுவனந்தான். ஸ்தல வாழ்க்கை நல ஏற்பாடுகளை அபிவிருத்தி செய்யச் சில முக்கியமான நடவடிக்கைகளை இவை எடுத்துக்கொண்டிருக்கின்றன.

## 3. பொதுத்துறைப் பணிகள்

பொதுப்பணித் துறைகளில் தங்களுக்கு அதிக பங்கு தரப்பட வேண்டுமென்று, இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில், இந்தியர்கள் கிளர்ச்சி செய்தார்கள். இஸ்லிங்டன் பிரபுவை (Lord Islington) தலைவராகக்கொண்ட, இந்தியப் பொதுப் பணித்துறை சம்பந்தமான ஒரு ராயல் கமிஷன், 1912ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதத்தில் நியமிக்கப்பட்டது. காலஞ்சென்ற திரு. ஜி. கே. கோக்கலே, ரொனல்டுஷே பிரபு—பின்னர் ஜெட்லண்டு பிரபு—(Lord Ronaldshay, later Lord Zetland), சர் வேலன்டைன் சிரோல் (Sir Valentine Chirol), மிஸ்டர் ராம்ஸே மெக்டொனல்டு (Mr. Ramsay Macdonald), மிஸ்டர் ஹெர்பர்ட்டு பிஷர் (Mr. Herbert Fisher)—பின்பு ஆக்ஸ்போர்டிலிருந்த புதுக் கல்லூரியின் பாதுகாவலர், சர் அப்துர் ரஹீம் (Sir Abdur Rahim) என்பவர்கள் அக்கமிஷன் அங்கத்தினர்களுள் சிலர். முதலாவது உலகப் போர் தொடக்கத்தினால், இக்கமிஷனுடைய அறிக்கை வெளியிடப்படாமல், 1917ஆம் ஆண்டு வரையிலும் தள்ளி வைக்கப்பட்டது. இலண்டனில் நடக்கும் தேர்வு மூலம் ஐ. ஸி. எஸ். பணிக்கு நியமிக்கப்படும் இந்தியர்களைத் தவிர, சுப்பீரியர் சிவில் செர்வீஸின் (Superior Civil Service) இடங்களில் 25 சதவிகிதத்தை இந்தியர்களைக்

கொண்டு நிரப்பவேண்டும் என்றும், அவர்களுள் சிலரை நேரிடையாகவும், கீழ்ப்பணிகளில் உள்ளவர்களுள் பதவி உயர்வு செய்வதன் மூலமாகச் சிலரையும் நியமிக்கலாம் என அது ஆலோசனை கூறியது. இத்திட்டத்தை வெற்றிகரமாக நடத்தும் பொருட்டு, சிவிலியன் அதிகாரிகளைச் சேர்ப்பதற்காக, இந்தியாவில் தேர்வு நடத்த வேண்டுமென்று அது சிபாரிசு செய்தது; இவ்விதம் அரை நூற்றாண்டுக்கு மேலாக இந்தியர்கள் கோரியதை வேறு உருவத்தில் இது வழங்கியது.

இந்தியச் சிவில் செர்வீஸை இந்திய மயமாக்கவேண்டும் என்ற பிரச்சினையின் மீது, மான்டேகு–செம்ஸ்போர்டு அறிக்கையை ஆக்கியவர்கள், இஸ்லிங்டன் கமிஷனைவிட மிகத் தாராளமான அனுதாபமுள்ள நோக்கத்தைக் கொண்டிருந்தார்கள். பின் வருபவைகளை அவர்கள் தீர்மானித்தார்கள் :

(1) '33 சதவிகிதம் உள்ள மேலான பணிகளுக்கு வேண்டிய ஆள்களை இந்தியாவில் தேர்ந்தெடுக்க வேண்டும். இச்சதவிகிதத்தை ஆண்டுக்கு $1\frac{1}{2}$ சதவிகிதமாக அதிகப்படுத்த வேண்டும். இதை ஒரு கமிஷன் மாற்றும் வரையில் நீடிக்க வேண்டும். (2) நியமனங்களிலுள்ள இன வேறுபாடுகள் எல்லாம் நீக்கப்படவேண்டும். (3) இந்தியர்களையும், ஐரோப்பியர்களையும் இங்கிலாந்தில் எடுக்கக்கூடிய எல்லாப் பொதுத்துறைப் பணிகளுக்கும், இந்தியாவில் நியமிக்கும் ஒரு திட்டம் வேண்டும்.

மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையின்படி இந்தியர்களைச் சேர்ப்பது, நான்கு ஆண்டுகள் வரையில் நடந்தது. ஆனால், அதற்குள்ளாகவே, மேலான பணிகளில் சேவை செய்தவர்கள், அப்பணி இந்தியமயமானதைக் கண்டு நிலைகுலைந்தார்கள். அதனால், மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையின் சிபாரிசைப் பின்பற்றி, கவுன்சிலுடன் கூடிய இந்தியக் காரியதரிசியார், ஒரு திட்டத்தை ஏற்படுத்தினர் ; அதன்படி, 1920ஆம் ஆண்டு ஜனவரி மாதம், முதல் தேதிக்கு முன்பு நியமனத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அகில இந்திய அதிகாரிகள், இந்திய அரசாங்கத்தின் கீழ் நிரந்தரமாக நியமிக்கப்படாவிட்டால், அவர்களுடைய செர்வீஸின் காலம் முடியும் முன்பே, ஓய்வு பெற அனுமதிக்கப்படுவார்கள் ; அவர்கள் சேவை செய்த காலத்திற்குத் தகுந்தபடி அவர்களுக்கு ஓய்வு ஊதியம் அளிக்கப்படும்.

ஆனல், அப்பணிகளைப் பற்றிய சில தொல்லைகள் நீடித்தன; இதைப் போக்குவதற்காக, பேரன்ஹாமின் லீ பிரபு (Lord Lee of Farenham) என்பவரின் தலைமையின் கீழ், ஓர் இராயல் கமிஷன், 1923ஆம் ஆண்டு, ஜூன் மாதம் நியமிக்கப் பட்டது. 1924ஆம் ஆண்டில், லீ கமிஷன் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. அதன் சிபாரிசுகளில் பெரும்பாலனவற்றை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, அவற்றை அமுல் செய்தது. இந்தியச் சிவில் செர்வீஸ், இந்தியப் போலீஸ் செர்வீஸ், எஞ்சினியர்களின் செர்வீஸைச் சேர்ந்த நீர்ப் பாசனப் பகுதி, இந்திய பாரஸ்டு செர்வீஸ் ஆகியவைகளைச் சேர்ந்த அகில இந்திய அதிகாரிகளைக் கவுன்சிலுடன் கூடிய இந்தியக் காரியதரிசியாரே நியமித்து மேற்பார்வை செய்யவேண்டும் என்றும், மாற்றப்பட்ட துறைகளில், மருத்துவப் பணியைத் தவிர, மற்ற எல்லாப் பணிகளும், மாகாண அரசுகளின் மேற் பார்வையில் இருக்கவேண்டும் என்றும், மருத்துவப்பணிக்கு இந்திய இராணுவத்தின் மருத்துவ இலாக்காவிலிருந்து அதிகாரிகள் சிலரைப்பெற்று, அவர்களைச் சிவில் மருத்துவத் துறைக்கு ஒவ்வொரு மாகாணமும் நியமிக்கவேண்டும் என்றும், அக்கமிஷன் சிபாரிசு செய்தது. இந்தியக் காரியதரிசியால் கட்டுப்பாடு செய்யப்பட்ட பணிகளை இந்திய மயமாக்குவதைப் பற்றி, அக்கமிஷன் பின் வருமாறு சிபாரிசு செய்தது: அவர்களுள் 20 சதவிகிதம் உள்ள அதிகாரிகள், மாகாணச் சிவில் செர்வீஸிலிருந்து பதவி உயர்வு மூலம் நியமிக்கவேண்டும்; மீதியுள்ள 80 சதவிகிதத்திற்குப் பாதி ஆங்கிலேயர்களும், பாதி இந்தியர்களும் சேர்க்கப்பட வேண்டும். இக்கொள்கையைப் பின்பற்றிஞல், 1939ஆம் ஆண்டில், சுப்பீரியர் சிவில் செர்வீஸ் பதவிகளில், ஐரோப்பியர் களும், இந்தியர்களும் சமமாய் இருப்பார்கள் என, அது கணக்கிட்டுக் கூறியது. ஆனல், இக்கணக்குத் தவருனது; 1939ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் முதல் தேதி சுப்பீரியர் சிவில் செர்வீஸ் பதவிகளில் 643 இந்தியர்களும் 715 ஐரோப்பியர்களும் இருக்க வேண்டும் என, சைமன் கமிஷன் குறிப்பிட்டது. 1919ஆம் ஆண்டு சட்டத்தில் குறிப்பிட்டபடி பப்ளிக் செர்வீஸ் கமிஷனை உடனே ஏற்படுத்த வேண்டுமென்று லீ கமிஷன் சிபாரிசு செய்தது. முழு நேர அங்கத்தினர் ஐவரைக் கொண்ட அக்கமிஷன், 1925ஆம் ஆண்டில் நியமிக்கப் பட்டது. மேலும், 1922ஆம் ஆண்டிற்குப் பின், இந்தியச் சிவில் செர்வீஸ் அதிகாரிகளுள் சிலர், இந்தியாவில் ஒவ்வோர் ஆண்டும் நடத்தப்பட்ட தேர்வுப் போட்டியின் முடிவைக் கொண்டு சேர்க்கப்பட்டனர்.

1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் பத்தாம் பாகம், மாகாணங்கள், தீர்மானிக்கப்பட்ட கூட்டாட்சி ஆகியவைகளைச் சேர்ந்த சிவில், இராணுவ அதிகாரிகளின் உரிமைகள், மதிப்பு நிலை ஆகியவைகளை விளக்குகிறது; சம்பளம், பதவி உயர்வு, ஓய்வு நாள் ஊதியம் போன்றவைகள் சம்பந்தமாக அவர்களுக்கு இருக்கும் சலுகைகள் பாதுகாக்கப்படும் என இது உறுதிமொழி அளித்தது. ஒரு பெடரல் பப்ளிக் சௌர்வீஸ் கமிஷனும், மாகாணப் பப்ளிக் சௌர்வீஸ் கமிஷன்களும் ஏற்படுத்த வேண்டும் என்றும் இது கூறியது; 'ஒரு தொகுதிக்கு ஒரு கமிஷனே போதுமானது,' என இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாகாணங்கள் ஏற்றுக்கொள்ளலாம்; 'அல்லது எல்லா மாகாணங்களும் ஒரு கமிஷனையே உபயோகப் படுத்தலாம்.' இக்கமிஷனின் பணிகள் வெற்று ஆலோசனைகளே. இவை பெயர்களை மட்டுமே சிபாரிசு செய்யலாம். இவைகளைச் சிலவற்றிலாவது, மந்திரிகள் ஏற்கலாம் அல்லது புறக்கணிக்கலாம்.

## 4. நீதி மன்றம்

1861ஆம் ஆண்டில், கல்கத்தா, சென்னை, பம்பாய் என்னும் இடங்களில் உயர்நீதி மன்றங்கள் ஏற்பட்டன. இதற்கு முன்பு இருந்த சுப்ரீம் கோர்ட்டுகளும், சாதர் கோர்ட்டுகளும் (Sadar Courts) இம் மன்றங்களில் சேர்க்கப் பட்டன. உயர்நீதி மன்றங்களிலுள்ள நீதிபதிகளுள், குறைந்த பட்சம் மூன்றில் ஒரு பகுதியினரை இந்தியாவிலுள்ள மன்னரின் சிவில் சௌர்வீஸ்களிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டும். மற்ற மூன்றில் ஒரு பகுதியினரை இங்கிலாந்தின் பாரிஸ்டர்கள் அல்லது ஸ்காட்லாந்தின் அட்வோகேட்டுகள் ஆகியவர்களிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டும். மீதியிருப்ப வர்களை, உயர்நீதி மன்றப் பிளீடர்கள் (Pleaders) அல்லது கீழ் நீதிமன்றத்தைச் சேர்ந்த அதிகாரிகள் ஆகியவர்களி லிருந்து தேர்ந்தெடுக்கலாம். இங்கிலாந்தின் பாரிஸ்டர்கள் அல்லது ஸ்காட்லாந்தின் அட்வோகேட்டுகள் ஆகியவர் களிலிருந்துதான் உயர்நீதி மன்றங்களின் பிரதம நீதிபதிகளை நியமிக்கவேண்டும். 1911ஆம் ஆண்டின் இந்திய உயர்நீதி மன்றங்களின் சட்டப்படி (Indian High Courts Act) பாட்னு, இலாகூர், இரங்கூன் ஆகிய இடங்களில், உயர்நீதி மன்றங்கள் ஏற்பட்டன. சிவில் அதிகாரிகள் நீதிபதிகளாய் இருப்பதை நீக்கவேண்டும் என இந்தியப் பொது மக்கள் கோரினர்கள்.

ஆனால், 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் கூறப்பட்ட ஏற்பாடு, இந்தக் கோரிக்கையை நிறைவேற்ற வில்லை. பழைய விகிதாசார முறையை இது நீக்கியது. நீதி பதிகள், வாய்ப்புப்படி, இம்மூன்று வகுப்பிலிருந்தும், ஆனால், 'பழைய விகிதாசாரப்படி அல்லாமல்' நியமிக்கப்படுவார்கள்; இவ்விதம் இந்தியச் சிவில் செர்வீஸைச் சேர்ந்தவர்களுக்கு முன்பு இருந்ததைவிட அதிகமான அனுகூலத்தை இச்சட்டம் அளித்தது. மேலும், பிரதம நீதிபதிகள், பாரிஸ்டர்கள், அட்வோகேட்டுகள் ஆகியவர்களுளிருந்துதான் தேர்ந் தெடுப்பார்கள் என்ற பழைய சட்டத்தை மாற்றி, அவர்களை உயர்நீதி மன்றத்தின் பிளீடர்கள் அல்லது இந்தியச் சிவில் செர்வீஸ் அதிகாரிகள் ஆகியவர்களுளிருந்து தேர்ந்தெடுக்க லாம் என அது கூறியது.

தீர்மானிக்கப்பட்ட கூட்டாட்சியினால், மற்றொரு மாறுதல் நீதிமன்றங்களில் அவசியமாயிற்று. 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் 200ஆம், 203ஆம் சட்டங்கள் ஒரு பெடரல் கோர்ட்டு ஏற்படுவதற்கு வழி செய்தன; அது பொதுவாக டில்லியில் இருக்கும்; அதில் ஒரு பிரதம நீதி பதியும், அறுவருக்கு மேற்படாத சாதாரண நீதிபதிகளும் (Puisne Judges) இருப்பார்கள். நீதிபதிகளை மன்னர் நியமிப்பார்; அவர்கள் அறுபத்தைந்து வயது வரையிலும் பதவியில் இருப்பார்கள். ஒரு மாகாணத்திற்கும் மற்றொரு மாகாணத்திற்கும், அல்லது ஒரு மாகாணத்திற்கும் கூட்டாட்சியில் சேர்ந்த ஒரு சமஸ்தானத்திற்கும், அல்லது ஒரு மாகாணத்திற்கும் கூட்டாட்சியின் அதிகாரங்களுக்கும், அரசியல் அமைப்புச் சம்பந்தமான தகராறுகள் எழுந்தால், அவற்றைப்பற்றி முதலில் விசாரித்துத் தீர்ப்பளிக்க, பெடரல் கோர்ட்டுக்கு உரிமையுண்டு. உயர்நீதி மன்றங்களிலிருந்து வரும் அப்பீலையும் அது ஏற்கலாம்; ஆனால், அவ்வழக்குகள் இந்திய அரசாங்கத்தின் சட்டம், அல்லது அதன் அதிகாரத்தின்கீழ்ச் செய்யப்பட்ட கவுன்சிலின் கட்டளை ஆகியவைகளை விளக்கிப் பொருள் கூறும் சட்டத்தின் அடிப் படைப் பிரச்சினை என அதில் உயர்நீதி மன்றம், உறுதி கூற வேண்டும்.

1937ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், முதல் தேதி பெடரல் நீதிமன்றம் ஏற்பட்டது.

## 5. போலீசும் சிறைச்சாலைகளும்

1861ஆம் ஆண்டின் போலீஸ் சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட போலீஸின் அமைப்பு, நடைமுறையில் பல குறைபாடுகளை எடுத்துக்காட்டியது. ஏனெனில், சட்டத்தையும் அமைதியையும் பாதுகாக்கும் பொறுப்பு, பயிற்சியளிக்கப் படாத, பொறுப்பில்லாதவர்களிடம் விடப்பட்டதுதான் அதற்கு முக்கிய காரணமாகும். போலீஸ் ஆட்சி முறையை ஆராய்வதற்காக, 1902ஆம் ஆண்டில் ஒரு போலீஸ் கமிஷன் (Police Commission) நியமிக்கப்பட்டது. போலீஸ் நிறுவனத்தின் பல பிரிவுகளையும் பற்றி விரிவான சிபாரிசுகளை இக்கமிஷன் செய்தது. இவைகளைச் சில நுண்ணிய விவரங்கள் சம்பந்தமான மாறுதல்களுடன் அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. 'நிபுணத்துவமும் தொழில் திறமையும்' வாய்ந்த குற்றங்களை ஆராய்வதற்காக, ஒவ்வொரு மாகாணத்திலும், 'குற்ற இயல் ஆராய்ச்சி இலாக்கா' (Criminal Investigation Department) என வழங்கப்பட்ட தனிப்பயிற்சியுடைய போலீஸ் நிலையங்களை இக்கமிஷன் ஏற்படுத்தியது. மாகாணங்களுக்கிடையில் இணைப்பை ஏற்படுத்துவதற்கான வேலைகளைச் செய்யவும், எல்லா மாகாணங்களையும் சேர்ந்த குற்ற இயல் ஆராய்ச்சி இலாக்காக்களிடமிருந்து தகவல்களைச் சேகரிக்கவும், இந்திய அரசாங்கத்தின் உள்நாட்டுத்துறையின்கீழ் ஒரு மத்தியக் குற்ற ஆராய்ச்சிப் பணிமனை (Central Intelligence Bureau) ஏற்படுத்தப்பட்டது.

உறுதியாகக் கூறவேண்டுமானால், இந்திய அல்லது அகில இந்திய போலீஸ் ஏற்படவில்லை எனலாம். 1861ஆம் ஆண்டின் சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட்ட போலீஸ், சம்பந்தப்பட்ட மாகாணத்தால் நிர்வகிக்கப்பட்ட ஒரு மாகாண நிறுவனமே தவிர, மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருப்பது அன்று. இன்ஸ்பெக்டர்-ஜெனரல் ஆப் போலீஸ் என்பவர் போலீஸ் நிறுவனத்தின் தலைவராக ஒவ்வொரு மாகாணத்திலும் நியமிக்கப்பட்டார்; அதன்மீது, அவர் பொதுவான மேற்பார்வையைச் செய்தார். டெபுடி-இன்ஸ்பெக்டர் ஜெனரல்களுக்கு மாகாணப் பகுதிகளின் நிருவாகம் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மாவட்டப் போலீஸ் சூப்பரின்டென்டு நியமிக்கப்பட்டார்; அவருக்குக் கீழே போலீஸ் இன்ஸ்பெக்டர்களும், சப் இன்ஸ்பெக்டர்களும், கான்ஸ்டேபில்களும், சப்-டிவிஷன்களுக்கும், தாணுக்களுக்கும் (Thanas) பொறுப்புள்ளவர்களாக

நியமிக்கப்பட்டார்கள். கிராமங்களில் **சௌக்கிதார்கள்** (Chaukidars) அல்லது காவற்காரர்களை நியமிக்கச் சட்டத்தில் வழிசெய்யப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு உதவிச் சம்பளம் இல்லை. ஆனால், இவர்கள் கிராமத்தில் வசிப்பவர்களிடமிருந்து மேல் வரும்படியைப் பெறலாம்; அல்லது, வரியில்லாமல், நிலத்தைப் பெறலாம். அல்லது, அரசாங்கத்திடமிருந்து சிறு தொகைகளைப் பெறலாம். போலீஸ் கமிஷனரின் அதிகாரத்தின்கீழ் ஒன்றாக இணைக்கப்பட்ட ஒரு போலீஸ் படை, கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய மாகாணத் தலைநகர்களில் வைக்கப்பட்டது; கமிஷனர், மாகாண இன்ஸ்பெக்டர்-ஜெனராலுக்குக் கட்டுப்பட்டவர் அல்லர்; ஆனால், அரசாங்கத்தின் நேரிடையான கட்டுப்பாட்டிற்குள் இருப்பவர்; சட்டம், அமைதி, இலாக்கா சம்பந்தமான பயிற்சி, திறமை ஆகியவைகளுக்கு இவர் பொறுப்பாளராய் இருப்பார்.

போலீஸ் நிறுவனத்திற்கு முற்றிலும் மாற்றி அமைப்பதற்கான சீர்திருத்தங்கள் அவசியமாய் இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. போலீஸ் அதிகாரிகளின் 'மனவுறுதி, அறிவுக் கூர்மை' ஆகியவைகளை அதிகரிப்பதே முக்கியத் தேவையாய் இருக்கிறது; இதனால், தங்கள் விருப்பப்படி அதிகாரத்தைச் செலுத்த அவர்களால் இயலும். அண்மை ஆண்டுகளில், கல்வியறிவு பெற்ற பல போலீஸ் கான்ஸ்டபிள்களைச் சேர்த்ததும், உள்ளூர்ப் பாதுகாப்பிற்கு ஹோம் கார்டுகளை (Home Guards) நியமிப்பதும் நல்ல ஏற்பாடுகளே.

புதிய கால இந்தியாவில், சிறைச்சாலைகளின் நிருவாகம், 1894ஆம் ஆண்டின் இந்தியச் சிறைச்சாலைகளின் சட்டப்படியும், அதைப்பின்பற்றி, இந்திய அரசாங்கமும் மாகாண அரசுகளும் ஏற்படுத்திய விதிகளாலும் செய்யப்படுகிறது. 'மத்திய, மாவட்ட, சப்ஸிடியரி' எனப்படும் மூவகை சிறைச்சாலைகள் உண்டு. ஒவ்வொரு மாகாணத்திலும், சிறைச்சாலைகளின் இன்ஸ்பெக்டர்–ஜெனரல் என்பவரின்கீழ், சிறைச்சாலை இலாக்கா இயங்கும்; சிறைச்சாலை அனுபவமுள்ள இந்திய மருத்துவப் பணியைச் (Indian Medical Service) சேர்ந்த ஒருவரே பொதுவாக இப்பதவிக்கு நியமிக்கப்படுவார். சூப்பரின்டென்டுகளுக்குக் கீழ் மத்தியச் சிறைச்சாலைகள் இருக்கும்; அவரும் இந்திய மருத்துவப் பணியைச் சேர்ந்தவராகவே இருப்பார்; பெரிய மத்தியச் சிறைச்சாலைகளில் அவருக்கு உதவியாக டெபுடி சூப்பரின்டென்டுகள்

இருவர் இருப்பர். சிவில் சர்ஜனுக்குக் கீழ், மாவட்டச் சிறைச்சாலை இருக்கும்; அவருக்கு உதவியாக, ஜெயிலர்களும், துணைஜெயிலர்களும், உதவி ஜெயிலர்களும், வார்டர்களும் இருப்பார்கள். 1899ஆம் ஆண்டு முதல் கல்வி இலாக்காவால் நடத்தப்பட்ட இளைஞர் சீர்திருத்தப்பள்ளிகள், பெரிய நகரங்களில் உள்ளன.

சிறைச்சாலை நிருவாகத்தைச் சீர்திருத்தும் நோக்கத்துடன், ஒரு சிறைச்சாலைக் கமிட்டியை, 1919ஆம் ஆண்டில், இந்திய அரசாங்கம் நியமித்தது. இக்கமிட்டி இந்தியச் சிறைச்சாலை நிருவாகத்தைப்பற்றி விரிவாக ஆராய்ந்து, 'இப்பொழுதுள்ள சிறைச்சாலையின் இடவசதியை அபிவிருத்தி செய்து அதிகரிப்பது, திறமையான வார்டர்களைச் சேர்ப்பது, கைதிகளுக்குக் கல்வி அளிப்பது, அரசாங்கங்களின் நுகர்வு இலாக்காக்களின் (Consusming departments) தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகச் சிறைச்சாலைத் தொழிற்சாலைகளை அபிவிருத்தி செய்வது, ஆகியவற்றின் அவசியத்தை' அது வற்புறுத்திக் கூறியது. சிவில் குற்றவாளிகளையும், கிரிமினல் குற்றவாளிகளையும் தனியாகப் பிரித்து வைத்தலையும், குழந்தைகளுக்கான நீதி மன்றங்களையும் (Childrens Courts) குறிப்பிட்டு, இம்முறையின் சீர்திருத்தத் தன்மையைக் குறிப்பிட்டுக் கூறியது. இச்சிபாரிசுகளை முடிந்த அளவுக்குப் பின்பற்ற, மாகாண அரசுகள் முயன்றன.

1919ஆம் ஆண்டின் சட்டப்படி, சிறைச்சாலைகளின் நிருவாகம் மாகாண அரசுகளுக்குக் கொடுக்கப்பட்டது; ஆனால், அவைகளைப்பற்றிய அகில இந்தியச் சட்டங்களைச் செய்யும் உரிமை மத்திய அரசுக்கு உண்டு. 1937ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், முதல் தேதி, மாகாணச் சுய ஆட்சி புகுத்தப்பட்டதும், சிறைச்சாலை நிருவாகம், மாகாணத் துறையாகச் செய்யப்பட்டது. இவைகளைப்பற்றிய சட்டம் இயற்றும் உரிமையும், மாகாண அரசுகளுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், கைதிகளையும், குற்றவாளிகளையும், ஒரு யூனிட்டிலிருந்து (unit) மற்றொன்றுக்கு மாற்றுவது சம்பந்தமான சட்டங்களைச் செய்யும் அதிகாரம், மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் உண்டு.

## 6. இராணுவ அமைப்பும் பாதுகாப்பும்

கர்சான் பிரபு வைசிராயாய் இருந்தபோது, இராணுவ நிருவாகத்தில் ஒரு முக்கிய மாற்றம் ஏற்பட்டது. அது

வரையில் படை முதல்வர், கவர்னர்-ஜெனரலின் நிருவாகச் சபையில் சிறப்பு அங்கத்தினராய் இருந்தார். ஆனல், 'இராணுவ சம்பந்தமான எல்லாப் பிரச்சினைகளின்மீதும், வைசிராய்க்கு உதவுவதற்காக, அரசியல் அமைப்புப்படி ஏற்படுத்தப்பட்ட ஆலோசகர் ஒருவர்' இச்சபையில் இராணுவ அங்கத்தினராய் இருந்தார். தம்மைவிடக் கீழ்ப்பதவியில் இருக்கும் அதிகாரியாகிய இராணுவ அங்கத்தினர் மூலமாகத்தான் தம்முடைய தீர்மானங்களையும் திட்டங்களையும் படை முதல்வர் இச்சபையில் கொண்டு வரவேண்டும். 1902ஆம் ஆண்டு, நவம்பர் மாதம் முதல் இந்தியாவின் படை முதல்வராய் இருந்த கிட்சினர் பிரபு, இத்திட்டத்தை 'இராணுவ வழு' (military solecism) என்றும், மேலும் இதனல் அதிகச் செலவும் காலதாமதமும் ஏற்படும் என்றும் குறை கூறினர். இராணுவ அங்கத்தினர் பதவியை நீக்க வேண்டுமென வாதிட்டு, இந்திய அரசாங்கத்தின் ஒரே ஆலோசகராகப் படை முதல்வரைச் செய்வதற்கு இவர் முயன்ருர். இராணுவம், சிவில் அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டிருக்கவேண்டும் என்ற காரணத்தைக்கூறி, அத்திட்டத்தைக் கர்சான் பிரபு எதிர்த்தார். இந்த விவாதத்தால் 1905ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தில், வைசிராய் இராஜிஞமா செய்யவேண்டியிருந்தது. பிரிட்டிஷ் மந்திரிசபை கிட்சினர் பிரபுவுக்குச் சார்பாக முடிவு செய்து, ஒரு சமரசத் திட்டத்தை உண்டாக்கியது; சிறிது காலத்திற்குள்ளாகவே, இத்திட்டம் சரிவர இயங்கவில்லை; அதனல், இது நீக்கப்பட்டது. 1909ஆம் ஆண்டிற்குப் பின் படை முதல்வரே இந்திய அரசாங்கத்தின் இராணுவ ஆலோசகராய்த் திகழ்ந்தார்; ஆனல், கர்சான் பிரபுவின் கொள்கையே நியாயமானது எனவும் நேர்மையானது எனவும், சட்ட வல்லுநர் (Publicists) பலர் கருதினர். கவுன்சிலுடன் கூடிய கவர்னர்-ஜெனரலே, இராணுவ நிருவாகத்தில், படை முதல்வருக்கு மேல் உள்ள அதிகாரி; இந்தியாவின் பாதுகாப்புச் சம்பந்தமாக, இந்திக் காரியதரிசியாரின் கட்டளைகளை நிறைவேற்றும் பொறுப்பு இவருக்கு உண்டு. மன்னரின் மந்திரிகளுள் ஒருவர் என்ற முறையில், இந்தியக் காரியதரிசியாருக்கு மிகுந்த பொறுப்பும் அதிகாரமும் இப்பிரச்சினையில் உண்டு.

புதிய கால இந்திய அரசியலில், மிகத் தீவிரமாக விவாதிக்கப்படும் பிரச்சினைகளுள் ஒன்று, இந்தியப் பாதுகாப்பைப் பற்றிய பிரச்சினைதான். இந்தியத் தேசிய இயக்கம் வளர்ச்சியடைந்தும், பாதுகாப்பு நிருவாகத்தின் மீதும்

தங்களுக்கு அதிகாரம் இருக்கவேண்டுமென, இந்திய மக்கள் கோரினார்கள்; இராணுவச் செலவு மிகவும் அதிகம் என அரசியல் தலைவர்கள் அடிக்கடி குறை கூறினார்கள். இப்பணத்தை 'நாட்டின் அபிவிருத்தி'த் திட்டங்களுக்குத் திருப்ப வேண்டும் எனவும், அவர்கள் வாதிட்டார்கள். மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை, முதல் உலகப் போரின் போது இந்திய இராணுவத்தின் சிறந்த விசுவாசமுள்ள சேவைகளைப் பெரிதும் புகழ்ந்து, அதை மேலும் இந்திய மயமாக்க வேண்டும் என்ற 'பிரச்சினையைத் தீர்க்கும் அவசியத்தை' வற்புறுத்தியது. இந்திய இராணுவத்தின் மீதுள்ள கட்டுப்பாட்டை மந்திரிகளுக்கு மாற்ற வேண்டும் என நேரு அறிக்கை (The Nehru Report) கூறியது. அப்பொழுதிருந்த இந்திய இராணுவ அதிகாரிகளுக்குத் தலைவரான மேஜர் ஜெனரல் (பின்னர் ஜெனரல்) சர் ஆண்டுரூ ஸ்கீன் (Sir Andrew Skeen) என்பவரைத் தலைவராகக்கொண்டு, 1925ஆம் ஆண்டு, ஜூன் மாதம் ஸ்கீன் கமிட்டி நியமிக்கப்பட்டது. இது **இந்திய சாண்ட்ஹர்ஸ்ட் கமிட்டி** (Indian Sandhurst Committee) எனப் பொதுவாகக் கூறப்பட்டது; இக்கமிட்டியின் அறிக்கை 1923ஆம் ஆண்டில், அப்பொழுது இந்திய இராணுவத்தின் படை முதல்வராய் இருந்த ராலின்சன் பிரபுவால் (Lord Rawlinson) வெளியிடப்பட்டது; 'எட்டு யூனிட்டுகள் திட்டத்தை ஒழிக்க வேண்டும்' என்றும், 1933ஆம் ஆண்டிற்குள் இந்திய 'சாண்ட்ஹர்ஸ்டை' ஏற்படுத்த வேண்டும் என்றும், அக்கமிட்டி சிபாரிசு செய்தது. இச்சிபாரிசுகள் முழுமையாக அமுல் செய்யப்படவில்லை. இந்தியச் சட்ட பூர்வக் கமிஷன் (Indian Statutory Commission), தேசீயப் பாதுகாப்பு என்கிற 'முக்கியப் பிரச்சினையை'ப் பல கோணங்களிலிருந்தும் ஆராய்ந்து, மூன்று காரணங்களுக்காக—எல்லைப் பாதுகாப்பு, உள்நாட்டுப் பாதுகாப்பு, இந்திய சமஸ்தானங்களுக்குச் செய்ய வேண்டிய கடமை—பிரிட்டிஷ் துருப்புகள் இந்திய இராணுவத்தில் இருப்பது அவசியம் என வலியுறுத்திக் கூறியது. 'பிரிட்டிஷ் துருப்புகளைக்கொண்ட ஒரு படையைக் கட்டுப்பாடு செய்யும் அதிகாரத்தை இந்திய சட்டசபைக்கு மாற்றிக்கொடுக்க முடியாது,' என்றும், 'இந்தியாவில் இருக்கும் இராணுவம் புரியும் பணியை உதவியில்லாமல் செய்யக்கூடிய ஆற்றல் வாய்ந்த இந்தியர்களையே முழுதும் கொண்ட இந்திய இராணுவப் படையை உண்டாக்கி, அபிவிருத்தி செய்வது உண்மையிலேயே தாமதமான ஒரு காரியந்தான்,' எனவும் அது கூறியது. 1935ஆம் ஆண்டின்

சட்டத்தில், இந்தியப் பாதுகாப்பைப் பற்றி எவ்விதப் ‘பெரிய மாற்றமும்’ செய்யப்படவில்லை.

இராணுவ அமைப்புச் சம்பந்தப்பட்டவரையில், 1904ஆம் ஆண்டில், கிட்சினர் பிரபுவால் ஏற்படுத்தப்பட்ட ‘கமாண்டு முறை’யை (Command System) 1907ஆம் ஆண்டில், அவரே நீக்கிவிட்டார்; அதன் பிறகு, இந்திய இராணுவம் வட பிரிவு தென் பிரிவு என இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. 1914–18ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட போரினால், இத்திட்டத்தின் குறைகள் தெரியலாயின; அதனால், போர் முடிந்த பிறகு, அது மறுபடியும் மாற்றி அமைக்கப்பட்டது. போரில் எல்லாப் பிரிவுகளையும் சேர்ந்த இந்தியத் துருப்புகள் சிறந்த சேவை புரிந்தன என்பது நோக்கத் தகுந்தது. இந்தியப் பிரதேசம் நான்கு கமாண்டுகளாகவும், ஒவ்வொரு கமாண்டும், 14 டிஸ்டிரிக்டுகளாகவும் (districts), ஒவ்வொரு டிஸ்டிரிக்டும் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள சில பிரிகேட் கமாண்டுகளாகவும் (Brigade command) பிரிக்கப்பட்டன. இவற்றுள் ஒன்றான மேற்குக் கமாண்டு, 1938ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், முதலாம் தேதியன்று நீக்கப்பட்டது.

1939ஆம் ஆண்டில் இந்தியப் பாதுகாப்புப் படை பிரிட்டிஷ் இராணுவ யூனிட்டுகள் சேர்ந்த நிரந்தரப் படையையும் (Regular Army), துணைப்படையையும் (Auxiliary Force), பெற்றிருந்தது. ஐரோப்பிய பிரிட்டிஷ் குடிமக்கள் மட்டுமே இதில் அங்கத்தினராகலாம்; பிராந்தியப் படையில் (Territorial Force), மாகாணப் பட்டாலியன்கள், நகர யூனிட்டுகள், பல்கலைக் கழகப் பயிற்சித் துணைப்படை என மூன்று முக்கியப் பகுதிகள் இருந்தன; 1932ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்திலிருந்து இராயல் விமானப்படையும், இராயல் இந்திய மரைனும் (Royal Indian Marine), 1934ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்திலிருந்து இராயல் இந்தியக் கப்பற்படை (Royal Indian Navy) என வழங்கப்பட்டன. முன்பு இம்பீரியல் செர்வீஸ் துருப்புகள் என வழங்கப்பட்ட இந்திய சமஸ்தானப் படைகள்கூட இந்தியாவில் இருந்தன; சமஸ்தான, சேவைக்காக, அப்படை சுதேச மன்னர்களால் ஆரம்பிக்கப்பட்டு, நிருவகிக்கப்பட்டது.

மன்னரின் கமிஷனைப் பெற்றவர்கள் (King’s Commission), வைசிராய் கமிஷனைப் பெற்றவர்கள் (Viceroy’s Commission) என இரு வகையான அதிகாரிகள், இந்திய இராணுவத்தில்

இருந்தார்கள். பின்னவர் எல்லாரும் இந்தியர். அவர்களுக்கு வரையறுக்கப்பட்ட மதிப்பு நிலையும் அதிகாரமுமே இருந்தன. மன்னருடைய கமிஷன்கள் சம்பந்தப்பட்ட வரையில், 1918 ஆம் ஆண்டிலிருந்தே இந்தியர்கள் மூன்று விதத்தில் தகுதி வாய்ந்தவர்களாகச் செய்யப்பட்டார்கள். (அ) ஸாண்ட் ஹர்ஸ்டிலுள்ள இராயல் மிலிட்டெரி காலேஜிலும் டேராடூனிலுள்ள இந்திய மிலிட்டெரி அக்காடெமியிலும் (1932ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் திறக்கப்பட்டது) படைத்துறைப் பள்ளி மாணவர்கள் (Cadets) என்ற தகுதியைப் பெற்றிருத்தல், (ஆ) திறமை வாய்ந்த இந்திய அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்தல், அல்லது ரெஜிமென்டுகளிலுள்ள சிறிய பதவியுள்ள கமிஷன் பெறுதவர்களுக்குப் பதவி உயர்வு அளித்தல், (இ) அதிக வயது அல்லது கல்வியறிவின்மை காரணமாக இப்பதவிகளுக்குத் தகுதியில்லாத அதிகாரிகளுக்குக் கௌரவ மன்னர் கமிஷன்களை வழங்குதல், எல்லாப் பிரிவுகளையும் சேர்ந்த ஒரு டிவிஷனையும் (Division) ஒரு குதிரைப்படை பிரிகேடையும் (Cavalry Brigade) இந்தியமயமாக்கும் நோக்கத்தை அரசாங்கம் 1932ஆம் ஆண்டில் அறிவித்தது. 1934ஆம் ஆண்டின் இலையுதிர் காலக் கூட்டத்தின் போது, மத்தியச் சட்ட சபை நிறைவேற்றிய இந்திய இராணுவ (திருத்த)ச் சட்டம் இந்திய இராணுவத்தை இந்தியமயமாக்கும் திட்டத்தில் ஒரு முக்கியக் கட்டத்தைக் குறிக்கிறது. இந்தச் சட்டத்தின்படி, இந்திய மிலிட்டெரி அக்காடெமியிலிருந்து கமிஷன் பெற்றவர்கள், சட்டப்படி, சமமான அந்தஸ்தைப் பெறுவார்கள். 'இந்தியக் கமிஷனைப் பெற்ற அதிகாரிகள்' (Indian Commissioned Officers) என அவர்கள் வழங்கப்படுவார்கள்.

இந்தியப் பாதுகாப்புப்படைகளின் ஆயுதங்களையும் அமைப்பையும், புதிய கால நிலைமைக்கு ஏற்றவாறு மாற்றி அமைப்பதற்கு வேண்டிய முக்கிய நடவடிக்கைகள் பின் ஆண்டுகளில் எடுக்கப்பட்டன. 1939ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதத்தில், சேட்பீல்ட் கமிட்டியின் (Chatfield Committee) சிபாரிசுகள் வெளியிடப்பட்டன. இவற்றின்படி, தேவையான சீர்திருத்தங்களைச் செய்வதற்காக யுனைட்டெட் கிங்டம் (இங்கிலாந்து) முப்பத்து மூன்றரைக் கோடி ரூபாயை நன்கொடை அளிப்பதற்கான வழி இதில் செய்யப்பட்டது; மேலும் பதினொன்றே முக்கால் கோடி ரூபாயையும் வட்டியில்லாமல் கடனாகக் கொடுக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. பிரிட்டிஷ் துருப்புகள் 25 சதவிகிதம் குறைக்கப்படும்.

இராணுவம் கீழ்க்காணும் அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டும்: அதாவது, எல்லைப்பாதுகாப்பு, உள்நாட்டுப் பாதுகாப்பு, கடற்கரைப்பாதுகாப்பு, பொதுவான வீரர்கள் சேமப்படை (General Reserve), சிறிய டாங்குகள், கவசப் படைக்காரர்கள், மோட்டார்களைக் கொண்ட துரிதமான போக்குவரத்துகள் ஆகியவைகளைப் பெறுவதற்கான வழி செய்யப்பட்டது. பீரங்கிப் படைகளுக்கு வாகனங்களும் சிறந்த பீரங்கிகளும் கொடுக்கப்படவேண்டும் எனவும் அது கூறியது. குண்டு வீசும் விமானங்கள் விமானப்படையில் இருக்க வேண்டும்; கடற்கரையைப் பாதுகாப்பதற்கும், இராணுவத்துடன் ஒத்துழைப்பதற்கும் விமானப்படை உதவ வேண்டும். நவீனக் கப்பல்களைக்கொண்டு இராயல் இந்தியக் கடற்படையை அதிகரிக்க வேண்டும். தளவாடத் தொழிற் சாலைகளை மாற்றி அமைத்து, விரிவுபடுத்த வேண்டும்.

## 7. நிதி நிருவாகம்

இந்தியாவில் நிதி அதிகாரத்தைப் பன்முகப்படுத்துவது சம்பந்தமாக, முக்கிய நடவடிக்கைகளை முதலிலே எடுத்த பெருமை, மேயோ பிரபுவின் அரசாங்கத்தையே சேரும்; போலீஸ், சிறைச்சாலைகள், கல்வி, மருத்துவப் பணிகள் போன்ற குறிப்பிட்ட சில பணிகளை நிருவகிப்பதற்காகத் தீர்மானிக்கப்பட்ட உதவித் தொகையை அது மாகாண அரசுகளுக்கு வழங்கியது; சில நிதி விதிகளின் கீழ், அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வருமானங்களைத் தங்கள் விருப்பப்படி ஒதுக்கவும், அதிகப்படியான செலவை ஈடுகட்டச் சிக்கனம் செய்வதற்கும் அல்லது அவசியமானல் புதிய வரிகளை விதிக்கவும் மாகாண அரசுகளுக்கு அது அதிகாரம் வழங்கியது. இது சம்பந்தமான அடுத்த முக்கிய நடவடிக்கை 1877ஆம் ஆண்டில் லிட்டன் பிரபுவின் காலத்தில் எடுக்கப் பட்டது; அப்பொழுது, நாம் முன்பு பார்த்தது போன்ற சில முக்கிய வருமான இனங்கள் மாகாணங்களுக்குக் கொடுக்கப் பட்டன; அதே சமயத்தில், நிலவரி, பொது நிருவாகம், சட்டம், நீதி ஆகியவைகளின் செலவுகளும், மாகாணங்களின் பொறுப்பாகச் செய்யப்பட்டன. இதைப்போன்ற ஏற்பாடுகள் 1882ஆம் ஆண்டிலும், 1897ஆம் ஆண்டிலும் செய்யப்பட்டன. ஆனல், எதிலும் கொள்கையை மாற்றவில்லை.

1904ஆம் ஆண்டில், 'நிலையான ஏற்பாடுகள் போன்ற திட்டம்' ஏற்படுத்தப்பட்டதால் இக்கொள்கை மாறியது.

இதன்படி, மாகாண அரசுகளுக்குக் கொடுக்கப்பட்ட வருவாய்களின் ஒப்படைப்புகள் உறுதியான முறையில் நிரந்தரமாக்கப்பட்டவை; விசேஷச் சூழ்நிலைகளில் தவிர, மற்றப்படி அவைகள் மத்திய அரசாங்கத்தால் மாற்றப்படமாட்டா. சிறிது காலத்திற்குப் பிறகு பஞ்ச இன்சூரன்ஸ் திட்டம் கொண்டு வரப்பட்டபோது மாகாணங்களுக்கு மேலும் சில ஆதாயங்கள் கிட்டின; இதன்படி, குறிப்பிட்ட ஒரு தொகையை இந்திய அரசாங்கம் மாகாண அரசுகளுக்குக் கொடுத்தது. பஞ்சம் ஏற்படும் போது, தங்கள் பணத்தைச் செலவு செய்யாமல் மாகாண அரசுகள் இதை உபயோகிக்கலாம். 1917ஆம் ஆண்டில், பஞ்ச நிவாரணச் செலவு, பகுபட்ட இனமாகச் (divided head) செய்யப்பட்டது; இதனால் மத்திய அரசும் 'மாநில அரசுகளும் மூன்றுக்கு ஒன்று என்னும் விகிதத்தில் அச்செலவுகளைக் கொடுக்க வேண்டும்.

1908ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட, இந்தியாவில் அதிகாரத்தைப் பன்முகப்படுத்துவதற்கான இராயல் கமிஷன் (Royal Commission on Decentralisation in India), மத்திய, மாநில அரசுகளுக்கிடையே இருந்த நிதி உறவு சம்பந்தமாக எவ்விதத் தீவிரமான மாற்றத்தையும் செய்யவில்லை. ஆனால், 1912ஆம் ஆண்டில், ஹார்டிஞ்சு பிரபுவின் அரசாங்கம், நிதி ஏற்பாடுகளை நிரந்தரமாக்கியது, மாகாணங்களின் நிரந்தர ஒப்படைப்புகளைக் குறைத்தது; வளரும் வருவாய்களில் மாநிலங்களுக்கான பங்கை அதிகப்படுத்தியது. மாகாண அரசுகளின் நிதி அதிகாரங்களின்மீது விதிக்கப்பட்ட தடைகள், மிகக் கண்டிப்பானவையாய் இருந்தன. அப்பொழுதிருந்த நிதி சம்பந்தப்பட்ட ஏற்பாடுகள் எவ்விதம் 'மாகாணங்கள் தேர்வு உரிமையளிப்பதற்குத் தடையாய்' இருக்கின்றன என்பதை மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை குறிப்பட்டுக் கூறியது; மேலும், நிதியைப் பரந்த விதத்தில் பங்கீடு செய்ய வேண்டும் எனவும் ஆலோசனை கூறியது. அதனால், நிதி உறவுகள் கமிட்டி (Financial Relations Committee) எனக் கூறப்பட்ட ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. ஐக்கிய மாகாணத்தின் லெப்டினென்டு கவர்னராயும், கவர்னர்-ஜெனரல் நிருவாக சபையின் நிதி அங்கத்தினராயும் இருந்த மெஸ்டன் பிரபு (Lord Meston) இக்கமிட்டியின் தலைவரானார். இக்கமிட்டியினது சிபாரிசின்படி அமைக்கப்பட்ட திட்ட அமைப்பு பாராளுமன்றத்தின் கூட்டுப் பொறுக்குக் கமிட்டி செய்த சிறிய மாறுதல்களுடன், 'மெஸ்டன் தீர்ப்பு' (Meston Award) எனக் கூறப்பட்டது.

முடிந்த அளவு, பகுபட்ட இனவருவாய்களை இது கொடுக்க வில்லை. மத்திய மாநில அரசுகளுக்கிடையே உள்ள நிதி உறவுகளைத் தெளிவாகவும் நிரந்தரமாகவும் செய்வதற்கு நிலவரி, ஆயத்தீர்வை, நீர்ப்பாசனம், காடுகள், நீதி மன்ற ஸ்டாம்புகளும் ரிஜிஸ்டிரேஷன் கூலியும், கனிப்பொருள்கள் போன்ற சில வருமான இனங்களை அது மாகாணங்களுக்குக் கொடுத்தது; அதே சமயத்தில் சுங்கவரி, வருமானவரி, ரயில்வே வருமானம், தபால், தந்தி, உப்பும் அபினியும், மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டன. பகுபட்ட இனங்களை முழுதும் நீக்க முடியவில்லை; வருமான வரியி லிருந்து அதிகமாகக் கிடைக்கும் வருமானத்தில் சில பங்கை மாகாண அரசுகள் பெற வேண்டும் என அது கூறியது. மத்தியப் பற்றுக் குறையைத் (deficit) தீர்ப்பதற்காக மாகாண அரசாங்கங்கள் கொடுக்க வேண்டிய தொகையும், உறுதியாக நிருணயிக்கப்பட்டது. அவற்றின் மொத்தத் தொகை பத்துக் கோடிக்கும் சிறிது குறைவான தொகை தான். பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்கள் எதுவும் செலுத்த வேண்டுவதில்லை. இவ்விதம் பங்காகக் கொடுக்க வேண்டி யிருந்ததை மாகாணங்கள் எதிர்த்தன; அதனால், அவை படிப் படியாகக் குறைக்கப்பட்டு, இறுதியாக, 1928–1929ஆம் ஆண்டின் வரவு செலவு திட்டம் சமர்ப்பிக்கப்பட்ட போது முற்றிலும் நீக்கப்பட்டன.

தீர்மானிக்கப்பட்ட கூட்டாட்சி அரசியலமைப்பை ஏற்படுத்துவதற்காக முயற்சிகள் நடந்ததால், மத்திய மாநில அரசுகளுக்கிடையே நிதிப்பங்கீடுபற்றிய முக்கியப் பிரச்சினையும் எழுந்தது; அவற்றை இந்தியச் சட்டபூர்வக் கமிஷனும், (லேட்டன் அறிக்கை Layton Report), பீல் பிரபு (Lord Peel) தலைமையில், கூட்டாட்சி அமைப்புக் கமிட்டியின் சப்–கமிட்டியும், எஸ்டஸி பெர்ஸி பிரபுவின் (Lord Eustace Percy) தலைமையில் கூட்டாட்சி நிதிக்கமிட்டியும் ஆலோ சித்தன. மேற்குறிப்பிட்ட நிறுவனங்களின் அறிக்கையை ஆதாரமாகக்கொண்டு, 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம், கலப்பான நிதி ஏற்பாட்டைச் செய்து, வருமான இனங்கள், 'கூட்டாட்சிப்பட்டியல், மாகாணப்பட்டியல்' என இரண்டுவிதமாகப் பிரிக்கப்பட்டன. பின்காணும் வரிகளைக் கூட்டாட்சி விதித்து, வசூலிக்கும்: (1) விவசாய நிலங்களைத் தவிர மற்ற உடைமையை வாரிசாகப் பெறுவது சம்பந்தமான வரிகள், (2) மாற்று உண்டியல்கள் (bills of exchange), செக்குகள் (cheques), புரோநோட்டுகள் (Promissory notes),

கப்பல் ரசீதுகள் (Bills of lading), பற்றுத்திருமுகங்கள் (letters of credit), இன்சூரன்ஸ் கொள்கைகள், பதிவானதாக இருப்பதற்கு எழுத்து மூலமான உரிமைகளும் ரசீதுகளும், (3) ரயில் அல்லது மனிதர்கள்மீது விதிக்கப்படும் முடிவிட வரிகள், (4) ரயில் பயணக் கூலியின்மீதும் சரக்குக்கூலியின் மீதும் விதிக்கப்படும் வரிகள், (5) கார்ப்பொரேஷன் வரிகள் (அதாவது கம்பெனிகளின் இலாபத்தின்மீது விதிக்கப்படும் வரி தவிர), வருமானங்களின் மீது விதிக்கப்படும் வரிகள், (6) உப்பு உற்பத்தித் தீர்வையும் ஏற்றுமதி வரியும்.

வருமான வரி, சணல் ஏற்றுமதி வரி போன்ற இவ்வரிகளால் கிட்டக்கூடிய நிகர வருமானம், குறிப்பிட்ட சில நிலைமைகளில், மாகாணங்களுக்கும், அவ்வரிகள் வசூலிக்கப்பட்ட கூட்டாட்சியில் சேர்ந்த சமஸ்தானங்களுக்கும் பங்கிடப்பட வேண்டும். இவ்வரிகளின் மீதும் சர்சார்ஜை விதிக்கும் உரிமையும், இதைக் கூட்டாட்சியின் செலவுகளுக்கு எடுத்துக் கொள்ளும் உரிமையும் பெடரல் சட்டசபைக்கு உண்டு. மத்திய, மாநில அரசுகளுக்கிடையே நிதி ஏற்பாட்டின் நிபந்தனைகளை ஏற்படுத்துவதற்காக, சர் ஆட்டோ நீமியர் (Sir Otto Niemeyer) என்கிற ஒரு நிதி நிபுணரை, இந்தியக் காரியதரிசியார் நியமித்தார். 1936ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் வெளியிடப்பட்ட அவரது அறிக்கை ஏற்கப்பட்டது. அதனுடைய முக்கியச் சிபாரிசுகள் பின்வருமாறு: (1) 1937ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம், முதல் தேதி புதிய அரசியலமைப்பை ஆரம்பிக்கும் போது, மாகாணங்கள் போதிய நிதி வசதிகளுடன் இருப்பதற்காகச் சில மாகாணங்களுக்கு ரொக்கப்பண உதவி அளிக்க வேண்டும். (2) 1936ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம், முதல் தேதிக்கு முன் அடைந்த கடன்களைத் தள்ளுபடி செய்து, சில மாகாணங்களுக்கு உதவ வேண்டும். (3) சணல் வரியில், பன்னிரண்டரைச் சதவிகிதத்தைச் சணல் உற்பத்தி செய்யும் மாகாணங்களுக்குக் கொடுக்க வேண்டும். (4) சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, மாகாணச் சுய ஆட்சி ஆரம்பமான ஐந்து ஆண்டுகளிலிருந்து, வருமான வரியிற்பாதியை, மாநில அரசுகளுக்குக் கொடுக்கவேண்டும். இந்திய நிதி பற்றிய அடிப்படைப் பிரச்சினையை இத்திட்டம் திருப்திகரமாகத் தீர்க்கவில்லை; ஏனெனில், அவர்களின் உதவிக்கோ, அல்லது அவைகளை உறுதியாகச் செய்வதற்கோ, இத்திட்டம் வேண்டிய பணத்தை வழங்கவில்லை. உறுதியான நிதி நிலையைப் பெறுவதற்காக, 1934ஆம் ஆண்டில் ரிசர்வ் பாங்குச்

சட்டம் நிறைவேற்றப்பட்டது. 1935ஆம் ஆண்டில் இப்பாங்கு தன் வேலையைத் தொடங்கியது.

நிலவரிதான், மாகாணங்களின் முக்கிய வருமான இனம். அது, ஓரளவுக்கு நிலவரியாகவும், ஓரளவுக்கு நிலவாரமாகவும் உள்ளது. அண்மையில், அதைச் சட்டசபையின் உறுதியான கட்டுப்பாட்டின் கீழ்க்கொண்டு வரப் பல முயற்சிகள் செய்யப் பட்டன; மாகாணச் சுய-ஆட்சி ஆரம்பமானதிலிருந்து மாகாணங்களிலுள்ள புதிய சட்டசபைகள், நிலவரி நிருவாகத்தைத் திருத்தி அமைப்பதற்காக, அதிக கவனம் செலுத்தி வருகின்றன. ஜமீந்தாரி முறையை ஒழித்துக்கட்ட வேண்டும் என்றும், சோஷியலிஸ்டுகள் கோரினர்கள்; மாகாணங்களிலுள்ள சில புதிய அரசாங்கங்களும் அதை அமுல் செய்ய விரும்புகின்றன.

## 8. தொடர்பு வசதிகளும் மராமத்து வேலைகளும்

### (அ) ரயில்வேக்கள்

புதிய உறுதிமொழித் திட்டப்படி (New Guarantee System) (1879-1900), சம்பந்தப்பட்ட கம்பெனிகளுடன் செய்து கொண்ட ஒப்பந்தக் காலம் முடிவடைந்தவுடன், ரயில்வேக்களின் பெரும்பாகம் அரசாங்கத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டது. அல்லது விலைக்கு வாங்கிக்கொள்ளப் பட்டது. ஆனால், 1905ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட ரயில்வே போர்டு மூலமாக அரசாங்கம் செய்யும் மேற் பார்வைக்குட்பட்டு, ரயில்வேக்களின் நிருவாகம் கம்பெனி களிடமே விடப்பட்டது. முதல் உலகப்போர் ஆரம்பமாவதற்கு முன்னிருந்த பதினைந்து ஆண்டு காலத்தில் ரயில்வேக்களின் வளர்ச்சி துரிதமாக ஏற்பட்டு, அவற்ருல் இலாபமும் கிட்டியது. ஆனால், 1914ஆம் ஆண்டிற்கும் 1921ஆம் ஆண்டிற்கும் இடைப் பட்ட காலத்தில், வருமானம் குன்றியது. ஓர் அளவுக்கு அவற்றின் மீது ஏற்பட்ட போர்க்கால நெருக்கடியும், ஓர் அளவுக்கு ஆண்டு திட்டப்படி செய்யும் மூலதனச் செலவின் குறைவும் அதற்குக் காரணமாகும்.

ரயில்வேக்களின் நிருவாகத்தைப் பற்றி ஆராயவும், அவற்றை மேலும் அபிவிருத்தி செய்யத் தேவையான திட்டங்களைச் சிபாரிசு செய்யவும், காலஞ்சென்ற சர் வில்லியம் அக்வொர்த் (Late Sir Willam Acworth) தலைமையில்

ஒரு கமிட்டி, 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்ட பிறகு, ஏற்பட்டது. ரயில்வேக்களை அபிவிருத்தி செய்வதற்காக ஒவ்வோர் ஐந்து ஆண்டுகளிலும் 150 கோடி ரூபாய் செலவு செய்யவேண்டுமென்று, அக்கமிட்டி சிபாரிசு செய்தது; அதன் பெரும் பகுதி அறிக்கை, ரயில்வேக்களின் நிருவாகத்தை அரசாங்கம் ஏற்பதையும், புதிய ரயில் பாதைகள் அரசாங்க ஏஜென்ஸி மூலம் அமைக்கப்படுவதையும் ஆதரித்தது. ஒரு புதிய தொடர்பு இலாக்காவை ஏற்படுத்துவதையும், ரயில்வே போர்டுகளைத் திருத்தி அமைப்பதையும், ரயில்வேக் கட்டணங்கள் சம்பந்தமாக ஒரு நீதிமன்றத்தை அமைப்பதையும், பொது பட்ஜெட்டிலிருந்து ரயில்வே பட்ஜெட்டைப் பிரிப்பதையும் அது சிபாரிசு செய்தது. ரயில்வேக்களைக் கம்பெனி நிருவாகம் செய்வதை இந்தியப் பொது மக்கள் எப்பொழுதும் எதிர்த்தே வந்திருக்கிறார்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும். ஏனெனில், கம்பெனியின் நிருவாகம் மூலம் கிடைக்கும் இலாபம், நாட்டை விட்டுப் போகிறது என்பதுடன், இந்தியத் தேசிய நலன்களைக் குறித்து அவை இரக்கம்கொள்ளவில்லை என்றும் நினைக்கப்பட்டதும் அதற்கு மற்றொரு காரணமாகும். கம்பெனியின் நிருவாகத்தை நீக்குவது சம்பந்தமான பெரும்பான்மையான சிபாரிசுகளை இந்திய அரசாங்கம் உறுதியுடன் ஏற்க மறுத்தாலும், இந்திய மக்களின் கருத்து நெருக்கியதால், இறுதியில் கீழ்க்காணும் ரயில்வேக்களின் நிருவாகத்தை அது எடுத்துக்கொள்ள நேரிட்டது. கிழக்கிந்திய ரயில்வே, (1925ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், முதல் தேதி) 'தி கிரேட் இண்டியன் பெனின்சுலார் ரயில்வே' (1925ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 30ஆம் தேதி), பர்மா ரயில்வே (1929ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், முதல் தேதி), தெற்குப் பஞ்சாப் ரயில்வே (1930ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், முதல் தேதி) புதிய ரயில் பாதைகளை அமைக்கும் வேலையை அரசாங்கமே எடுத்துக் கொண்டது. ரயில்வே போர்டும், திருத்தி அமைக்கப்பட்டது. 1936ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட ரயில்வே போர்டில், தலைவராய் இருக்கும் சீப்கமிஷனரும், நிதி சம்பந்தப்பட்ட கமிஷனரும், மற்ற அங்கத்தினர் மூவரும் இருந்தனர். 1926ஆம் ஆண்டில் கட்டணங்களின் ஆலோசனைக் கமிட்டி ஏற்பட்டது. 1927ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், முதல் தேதி ரயில்வே போர்டின் மத்தியப் பிரசாரச் செயலகம் உண்டாக்கப்பட்டது. அக்வொர்த்துக் கமிட்டியின் சிபாரிசுப்படி, 1926ஆம் ஆண்டிலிருந்து ரயில்வே நிதி, பொது வரவு செலவு திட்டத்திலிருந்து பிரிக்கப்பட்டது.

## (ஆ) சாலைகள்

அதிகாரத்தைப் படிப்படியாக பன்முகப்படுத்தியதும், ஸ்தலச் சுய-ஆட்சியின் வளர்ச்சியும், சாலைகளின் அபிவிருத்திக்குப் பெரிதும் ஊக்கமளித்தன. ரயில்-சாலை போக்குவரத்தை இணைப்பதன் அவசியத்தைப்பற்றி, அண்மைக் காலங்களில் அதிக கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது. இப் பிரச்சினையைப்பற்றி, 1933ஆம் ஆண்டு சிம்லாவில் பிரத்தியேகமாகக் கூட்டப்பட்ட சாலை-ரயில் மாநாட்டில் விவாதிக்கப்பட்டது. இந்தியாவின் சாலைப் பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதற்காக ஒரு பிரத்தியேக 'சாலை அபிவிருத்திக் கமிட்டி' ஏற்படுத்தப்பட்டது. அதன் சிபாரிசுப்படி, மோட்டார் ஸ்பிரிட்டின் மீது விதிக்கப்பட்ட இறக்குமதி, ஆயத்தீர்வைகள், 1929ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில் ஒரு காலனுக்கு நாலணுவிலிருந்து ஆறணுவாக உயர்த்தப்பட்டது. இதிலிருந்து அதிகமாகக் கிடைக்கும் வரி, சாலை அபிவிருத்தியின் செலவுக்காக ஒதுக்கப்பட்டது; அடுத்த ஏப்பிரல் மாதத்தில் சாலை சம்பந்தமான நிரந்தரக் குழு, இந்தியச் சட்டசபையில் ஏற்பட்டது; அகில இந்தியச் சாலை மாநாடுகள் அவ்வப்போது கூட்டப்படுகின்றன.

## (இ) நீர்ப் போக்கு வரவு

ரயில்வேக்கள் அமைக்கப்பட்டதால், நீர்ப் போக்குவரவின் முக்கியத்துவம் அதிகரித்தது. இந்தியாவின் நீர்ப் போக்கு வரவை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம்: அவை வட இந்திய ஆறுகளின் அமைப்பால் எளிதாக்கப்படுகிற உள்நாட்டு நீர்ப்போக்கு வரவும், இந்தியாவின் பரந்த கடற்கரையில் நடக்கும் கடற்கரைப் போக்கு வரவும் ஆகும். ரயில்வேயின் நெருக்கடியைப் போக்கவும், சிறிதளவு போக்குவரவின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும் ரயில்வே, நீர்வழி ஆகியவற்றின் நிருவாகத்தை இணைப்பான தாக்குவதன் அவசியத்தைத் தொழிற்சாலைக் கமிஷன் 1918ஆம் ஆண்டில் வற்புறுத்தியது. இந்தியக் கப்பல் வியாபாரமும், கப்பல் கட்டும் தொழில்களின் நிலைமையும், பலகாரணங்களினுல் திருப்தியற்ற முறையில் இருந்தன. இந்தியக் கடல் வியாபாரத்தை அபிவிருத்தி செய்யும் அவசியத்தை எல்லாரும் உணர்ந்தனர்; கடல் வியாபாரக் கமிட்டியின் (1923) சிபாரிசின்படி, ஐ. எம். எம். டி. எஸ்.

டப்பரின் (I. M. M. T. S. Dufferin) என்கிற ஒரு பயிற்சிக் கப்பலை, இந்திய அரசாங்கம், இந்தியப் படைப் பள்ளி மாணவர்களுக்குக் கொடுத்தது.

## (ஈ) நீர்ப்பாசனம்

இந்தியாவைப் போன்ற விவசாய நாட்டில், நீர்ப்பாசன வேலைகள் பிரத்தியேக முக்கியத்துவம் வாய்ந்தவை. ஏனெனில், இங்கே தான் பருவகாலம் முழுவதிலும் சமமில்லாமல் மழை பெய்கிறது. அதனால், சில சமயங்களில் மழை பெய்யாமல் போகலாம்; அல்லது மிகக் குறைவாகப் பெய்யலாம். 1896ஆம் ஆண்டிலும், 1901ஆம் ஆண்டிலும் உண்டான பஞ்சங்கள், பாதுகாக்கப்பட்ட நீர்ப்பாசன வேலைகளின் தேவையையும், முக்கியத்துவத்தையும் உணர்த்தின. 1901ஆம் ஆண்டில் ஒரு நீர்ப்பாசனக் கமிஷனைக் கர்சான் பிரபு நியமித்தார்; அது தன் அறிக்கையை 1903ஆம் ஆண்டில் வெளியிட்டது. அந்தக் கமிஷனின் சிபாரிசுகளினால், அரசாங்கத்தின் நீர்ப்பாசனக் கொள்கையில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகியது. தக்காணப் பிரதேசங்களான பம்பாய், சென்னை, மத்திய மாகாணங்கள், பண்டல்கண்டு ஆகியவைகளுக்காக, உற்பத்தி செய்யக் கூடிய முக்கியமாகப் பாதுகாக்கப்பட்ட நீர்ப்பாசன வேலைகளின் வாய்ப்புகளை விரிவுபடுத்துவதன் அவசியத்தை முக்கிய சிபாரிசாகவும் இத்துடன் வேறு பல சிபாரிசுகளையும் அது செய்தது. 30,00,00,000 பவுன்கள் மதிப்பீட்டுச் செலவில் $6\frac{1}{2}$ மில்லியன் ஏக்கராவைப் பாசன வசதியுள்ள பிரதேசங்களுடன் அடுத்த இருபது ஆண்டுகளில் சேர்ப்பதற்குத் தோராயமான ஒரு நீர்ப்பாசனத் திட்டத்தை அது உருவாக்கியது.

இந்தியாவில் மூன்று விதமான நீர்ப்பாசன வசதிகள் உண்டு. அவை, கிணறுகள், ஏரிகள், கால்வாய்கள் என்பன. கால்வாய்கள் மூன்று வகைப்படும்; (அ) என்றும் தண்ணீர் ஓடுகிற கால்வாய்கள், (ஆ) வெள்ளப் பெருக்கின்போது தண்ணீர் ஓடும் கால்வாய், (இ) நீர்த்தேக்க வேலைகள். 1921 ஆம் ஆண்டிலிருந்து நீர்ப்பாசனவேலைகள் இரு முக்கியத் தலைப்பின் கீழ்ப் பிரிக்கப்பட்டன. அவை பயன் தருபவை களும் பயன் தாராதவைகளுமாம். மூன்றாவது பிரிவும் உள்ளது; மூலதனமற்ற வேலைகளின் மூலம் நீர் பாய்ச்சப் படும் பிரதேசத்தை அது குறிக்கிறது.

1919ஆம் ஆண்டு சீர்திருத்தங்களுக்குப்பின், நீர்ப்பாசனம், மாகாணத்துறையாகிவிட்டது. மாகாண அரசுகள், நீர்ப்பாசன வேலைகளைப் பற்றி அதிக நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டன; இதைக் குறித்துப் பல முக்கியமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன: (1) பஞ்சாபில் சட்லெஜ் பள்ளத்தாக்குத் திட்டம், 1933ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டது; (2) சிந்துவில் சுக்கூர் நீர்த்தேக்கம் (Sukkur Barrage), 1932ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டது; (3) காவேரி நீர்த்தேக்கமும் மேட்டூர்த் திட்டமும், 1934ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டன; (4) நைஜாம் சாகர்த் திட்டம், 1934ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டது; (5) ஐக்கிய மாகாணத்தில் சாரதா அயோத்திக் கால்வாய்கள்; (6) பம்பாயில் லாயிட் அணைக்கட்டு, 1926ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டது. இது உலகத்திலுள்ள பெரிய கல் கட்டடங்களுள் ஒன்றாகும்.

## 9. வேளாண்மை, நாட்டுப்புரத்தில் கடன் பட்டுள்ளவர்களும் நாட்டுப்புற புனரமைப்பும் கூட்டுறவு இயக்கமும்

### (அ) வேளாண்மை

1880ஆம் ஆண்டு பஞ்சக் கமிஷனின் சிபாரிசுகளின் பயனாக, பல மாகாணங்களில் விவசாய இலாக்காக்கள் ஏற்படுத்தப்பட்டன. இம்பீரியல் மாகாண அரசுகளுக்கு ஆலோசனை கூறுவதற்காக, 'இன்ஸ்பெக்டர் ஜெனரல்-ஆப்-அக்ரிகல்சர்' என்கிற அதிகாரி, 1901ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டார். இப்பதவி 1912ஆம் ஆண்டில் நீக்கப்பட்டது. இதன் வேலைகள், பூசாவிலிருந்த விவசாய ஆராய்ச்சி நிலையத்தின் டைரெக்டருக்கு (Director of the Agricultural Research Institute at Pusa) மாற்றப்பட்டது; இந்த டைரெக்டர், 1929ஆம் ஆண்டு வரையிலும், இந்திய அரசாங்கத்தின் விவசாய ஆலோசகராய் இருந்தார். இப்பொழுதுள்ள விவசாய இலாக்கா, கர்சான் பிரபுவால் ஏற்படுத்தப்பட்டது; 1903ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட அறிக்கையின்படி, 1905ஆம் ஆண்டில் இவ்விலாக்காவின் புனர் நிருமாணம் ஆரம்பமானது. உயர்ந்த விவசாயப் பயிற்சியைத் தருவதற்காக, ஒரு கல்லூரியுடன் பூசா ஆராய்ச்சி நிலையம், 1903ல் ஏற்படுத்தப்பட்டது. மாகாண அரசுகள், ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்வதற்கும், இந்திய அரசாங்கத்திற்குத்



By Courtesy of Indian Railways Bureau, 57 Haymarket, London

கக்கூர் நீர்த்தேக்கம்

தேவையான சிபாரிசுகளைச் செய்வதற்கும், அகில இந்திய விவசாய செர்வீஸ் 1906ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. 1908ஆம் ஆண்டில், பூனாவில் ஒரு விவசாயக் கல்லூரி ஏற்படுத்தப்பட்டது; பின் ஆண்டுகளில், இதைப் போன்ற கல்லூரிகள் கான்பூர், நாகப்பூர், லையால்பூர் (Lyallpur) கோயம்புத்தூர், மாண்டலே (Mandalay) ஆகிய நகரங்களில் ஏற்பட்டது.

1919ஆம் ஆண்டு சீர்திருத்தங்களை ஏற்படுத்தியபோது, விவசாயம், மாற்றப்பட்ட துறையாகி, மந்திரியின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தது; ஆயினும், மத்திய ஆராய்ச்சி நிறுவனங்கள், செடிகொடிகள், மிருகங்கள் ஆகியவைகளுக்கு ஏற்படும் சில நோய்கள், கொள்ளை நோய்கள் சம்பந்தமான சில பிரச்சினைகள் ஆகியவைகளை மட்டும், இந்திய அரசாங்கமே தன்னிடம் வைத்துக்கொண்டது. இந்தியாவிலுள்ள விவசாய நிலைமையை, விவசாயத்திற்கான ராயல் கமிஷன் (லின்லித்கோ கமிஷன்) அதிகார பூர்வமாக மறுபடியும் ஆராய்ந்து, 1928ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்டது. விவசாய இலாக்காக்கள் செய்த வேலையைச் சரியென ஏற்றுக்கொண்டு, எதிர்கால வேலைகளுக்கு இருக்கும் ஏராளமான வாய்ப்புகளை அது வற்புறுத்தி, விவசாயத்தின் பல்வேறு பிரச்சினைகளைப் பற்றிய விரிவான சிபாரிசுகளைச் செய்தது. அதன் சிபாரிசின்படி, 1929ஆம் ஆண்டு, ஜூலை மாதத்தில் ஒரு முக்கிய நடவடிக்கை எடுக்கப்பட்டு, விவசாய ஆராய்ச்சிக்கான இம்பீரியல் கவுன்சில் (Imperial Council for Agricultural Research) உண்டாக்கப்பட்டது. இந்தியாவில், விலங்கு நோய் உட்பட, விவசாய ஆராய்ச்சியைப் பெருக்குவதும், நடத்துவதும், ஒன்று சேர்ப்பதுமே இந்நிறுவனத்தின் முக்கியப் பணிகள். மாகாண அரசு ஆக்கச்சார்பான விவசாயக் கொள்கைகளைப் பின் பற்றுவதற்கு உதவியாய் இருக்கும் வகையில் அதற்கு வேண்டிய தகவல்களைக் கொடுப்பதற்காக ஒவ்வொரு மாகாணத்திலும், பொருளாதாரத்தைப் பற்றி விசாரணை செய்யும் மாகாணபோர்டு (Provincial Board of Economic Enquiry) நிறுவ வேண்டுமென்று, மத்திய பாங்குத் தொழில் பற்றிய விசாரணைக் கமிட்டி (The Central Banking Enquiry Committee, 1931) சிபாரசு செய்தது. இந்தியாவில் ஏற்பட்ட விவசாய ஆராய்ச்சி வேலைகளின் முன்னேற்றத்தைப் பற்றிப் பின்னர்ப் பரிசீலனை செய்த சர் ஜான் ரஸ்ஸலும் (Sir John Russell), ஆர். ரைட்டும் (R. Wright) ஆராய்ச்சியாளருக்கும் விவசாயிக்கும் இடையில் நெருங்கிய தொடர்பு

ஏற்படுத்துவதற்கான முக்கியச் சிபாரிசுகளைத் தங்களுடைய அறிக்கையில் கூறியுள்ளார்கள். விவசாய ஆராய்ச்சிக்காக ஏற்படுத்தப்பட்ட இம்பீரியல் கவுன்சிலின் சப்கமிட்டி அவைகளை ஆராய்ந்தது. பாங்குச் செலாவணியைப் பெறுவதற்கும், விவசாயப் பொருள்களை விற்பதற்கும் வேண்டிய சிறந்த வசதிகளை விவசாயிகளுக்குச் செய்து கொடுத்து, அவர்களுக்கு மேலும் உதவி செய்வதற்குத் தனக்குள்ள நோக்கத்தை அரசாங்கம் அறிவித்தது. விவசாய ஆராய்ச்சிக்கான இம்பீரியல் கவுன்சிலின் கட்டுப்பாட்டின் கீழ், ஒரு மத்திய விற்பனைப்பகுதி ஆரம்பிக்கப்பட்டது. பற்பல மாகாணங்களிலுள்ள விற்பனை அதிகாரிகளுடன் இது ஒத்துழைத்தது.

## (ஆ) கிராமக்கடன் சுமையும் கிராமச் சீரமைப்பும்

புதிய கால இந்தியாவின் விவசாயத்துடன் பிணைக்கப்பட்டிருப்பது, கிராம மக்களின் கடன் சுமை என்கிற கடுமையான பிரச்சினைதான். மத்திய பாங்கித் தொழில் விசாரணைக் கமிட்டி 1931ஆம் ஆண்டில் குறிப்பிட்டபடி, பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் மொத்த விவசாயக் கடன் சுமை 900 கோடி ரூபாயாய் இருந்தது. ஏராளமான வட்டி விகிதத்தில் வாங்கப்பட்ட கிராமக் கடனில் பெரும்பாகமும், பயன் தராதவைகள் அல்ல. இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்காக, அரசாங்கம் அவ்வப்போது சில நடவடிக்கைகளை எடுத்தது. கடுவட்டிக் கடன்கள் சட்டம், (The Usurious Loans Act) 1918ஆம் ஆண்டில் ஒன்று சேர்க்கப்பட்டுத் திருத்தப்பட்டது; சட்டபூர்வமாக வாங்கப்படும் வட்டிப் பணத்தின் உச்ச அளவை இது ஏற்படுத்தியது. விவசாயத்தைப் பற்றிய இராயல் கமிஷன், கடன் கொடுப்பதை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று சிபாரிசு செய்தது; கடன் கொடுப்பவர்களுக்கு அனுமதிப் பத்திரம் அளிக்க வேண்டும் என, சில மாகாண பாங்கித் தொழில் விசாரணைக்கமிட்டி சிபாரிசு செய்தது. நிலம் கைமாறுவதைத் தடுப்பதற்காக நிலவுரிமை மாற்றச் சட்டங்கள் (Land Alienation Acts) இயற்றப்பட்டன. உதாரணமாக, விவசாயிகளிடமிருந்து விவசாயிகள் அல்லாதார் நிலத்தை வாங்குவதையும், அல்லது இருபது ஆண்டுகளுக்கு மேலாக நிலத்தை அடமானத்திற்கு எடுத்துக் கொள்வதையும், பஞ்சாப் நில உரிமை மாற்றச் சட்டம் தடை செய்தது.

அண்மைக் காலங்களில் கிராமச் சீரமைப்பைக் குறித்து, அரசாங்கமும் காங்கிரசும் அதிக கவனம் செலுத்தி வருகின்றன. மிஸ்டர் எப். எல். பிரையன், ஐ. ஸி. எஸ். (Mr. F. L. Brayne, I. C. S.) என்பவர், கிராமச் சீரமைப்புக் கமிஷனராய் இருந்தபோது பஞ்சாபிலுள்ள குர்கான் மாவட்டத்தில் கிராம முன்னேற்றத்திற்கான ஒரு பரிசோதனையை நடத்தினார். வங்காளத்திலும் இதைப்போன்ற ஒன்று நடத்தப்பட்டது. மத்திய மாகாணங்களிலும் பீஹாரிலும், ஸ்தலஸ்தாபன ஆட்சி இவ்விதவேலைகளை 1929ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்திலிருந்து மேற்கொண்டன. 1933ஆம் ஆண்டின் பிற்பகுதியில், அப்பொழுது பம்பாய்க் கவர்னராய் இருந்த மேன்மை தங்கிய சர் பிரடெரிக் சைக்ஸ் (His Excellency Sir Frederick Sykes) என்பவர், ஒரு விரிவான கிராமச் சீரமைப்புத் திட்டத்தை ஆரம்பித்துவைத்தார்; அதன் வேலைகள் மாவட்டக் கலெக்டர்களின் தலைமையில் மாவட்டக் கமிட்டிகளால் செய்யப்பட்டன. கிராமச் சீரமைப்பு வேலைகளில் இந்திய அரசாங்கமும் அதிக கவனம் செலுத்தி, 1935–1936ஆம் ஆண்டில், இரண்டு கோடிக்கும் அதிகமான ரூபாயை இவ்வேலைகளுக்காகக் கொடுத்தது. கிராமக் கடன் சுமையாகிய பிரச்சினையைத் தீர்ப்பதற்கு இந்தியாவின் கூட்டுறவு இயக்கமும் முயல்கிறது.

## (இ) கூட்டுறவு இயக்கம்

இந்தியாவில் கூட்டுறவுக் கடன் சங்கங்களை ஏற்படுத்த வேண்டுமென்று பிரிடெரிக்கு நிக்கல்சன் (Frederick Nicholson) என்ற சென்னைச் சிவில் அதிகாரி ஒருவர் சென்னை அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட தமது அறிக்கையில் குறிப்பாகக் கூறியிருந்தார். இந்தியாவில் விவசாயப் பாங்குகளை ஏற்படுத்தும் பிரச்சினையைப் பற்றிப் பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டியை இந்திய அரசாங்கம், 1901ஆம் ஆண்டில் நியமித்தது; அக்கமிட்டி தன் அறிக்கையைச் சமர்ப்பித்த பிறகு, 1904ஆம் ஆண்டில், இம்பீரியல் சட்டசபை, கூட்டுறவுக் கடன் சங்கங்களின் சட்டத்தை நிறைவேற்றியது, நகர கிராமக் கடன் சங்கங்களை ஏற்படுத்துவதற்கு அது வழி செய்தது. இவ்விதம், 1904ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 24ஆம் தேதி, இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் ஆரம்பமாகியது. ஒரு சில ஆண்டுகளுக்குள்ளாகவே, ஒவ்வொரு மாகாணத்திலும் இவ்வியக்கம் குறிப்பிடத்தக்க

முன்னேற்றத்தை அடைந்தது. 1912ஆம் ஆண்டின் திருத்தச் சட்டத்தின் மூலம் புதிய ஊக்கத்தை இது பெற்றது; கடன் கொடாத சங்கங்கள், மத்திய நிதி உதவும் சங்கங்கள், யூனியன்கள் ஆகியவைகளை இச்சட்டம் அங்கீகரித்தது. கூட்டுறவு நிதியை அமைப்பதற்காகச் சில முக்கியமான சிபாரிசுகளை மெக்லாகன் கமிட்டி (Maclagan Committee, 1914–1915) செய்தது. 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களுக்கு பிறகு, கூட்டுறவு, மாகாணத் துறையாய் மாறியது; அதனால் 1912ஆம் ஆண்டின் சட்டத்தைத் தங்களது தேவைகளுக்கேற்ற விதத்தில் மாற்றிக்கொள்ள மாகாண அரசுகளுக்கு முடிந்தது. கூட்டுறவு இயக்கத்தின் நிதி அமைப்பில், மூன்று பாகங்கள் உள்ளன: அவை (i) விவசாயக்கடன் சங்கம், (ii) மத்திய நிதி உதவும் ஏஜென்ஸிகள், (iii) மாகாணக் கூட்டுறவு பாங்கிகள், நீண்ட காலக்கடன் மூலம், விவசாயிகளின் பழைய கடன் களைத் தீர்க்கும் பிரச்சினையால், சில மாகாணங்களில், நில அடைமான பாங்கு (Land Mortgage Bank) எனப்படும் தனிரக பாங்குகள் ஏற்பட்டன. ஓரளவுக்கு விவசாயப் பொருள் களின் விலையில் வீழ்ச்சியாலும் பொதுவான பொருளாதார நலிவாலும் ஓரளவுக்கு அதன் நடத்தையில் உள்ள சில குறை பாடுகள் காரணமாகவும், அண்மை ஆண்டுகளில் கூட்டுறவு இயக்கம் ஒரு நெருக்கடியான நிலையைக் கடக்க வேண்டி யிருந்தது. வங்காளம், சென்னை, பம்பாய், பஞ்சாப், ஐ. மா., பீஹார் போன்ற சில மாகாணங்களிலும், சில சமஸ்தானங் களிலும் இருக்கும் மத்திய தர வகுப்பாரிடையே உள்ள வேலையின்மையைப் போன்றுதான் (இதைப்பற்றி, தனியாக நியமிக்கப்பட்ட கமிட்டிகள் மூலம் விசாரணை செய்யப்பட்டது; இவைகளில் மிக முக்கியமானது சாப்ரு கமிட்டி; 1935ஆம் ஆண்டில் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது.) இந்திய மக்களின் வறுமையும், கடன் சுமையும், மேற்கூறியவை செய்யப்பட்ட பிறகுங்கூட, இந்தியப் பொருளாதார வாழ்க்கையின் திகைப்பூட்டத்தக்க பிரச்சினைகளாய் இருந்து வருகின்றன. இவ்வேலைகளின் தன்மை, மிகப் பெரிய தாகவும் குழப்பமுள்ளதாகவும் இருப்பது உண்மையானாலும், இப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பது மிக இன்றியமையாத தாகும்.

## 10. பஞ்ச நிவாரணம்

முன்பு குறித்துள்ளபடி சர் ரிச்சர்ட் ஸ்ட்ராச்சி (Sir Richard Strachey) என்பவருடைய தலைமையின்கீழ் 1880ஆம் ஆண்டில்

அமைக்கப்பட்ட பஞ்சக்கமிஷன், இந்தியாவிற்கான பஞ்ச நிவாரணக் கொள்கை பற்றிய முக்கியச் சிபாரிசுகளைச் செய்தது. அதன் பின்பு 1896–7ஆம் ஆண்டிலும், மறுபடியும் 1899–1900ஆம் ஆண்டிலும் ஏற்பட்ட பஞ்சங்களைப்பற்றியும், இவ்விரண்டு சந்தர்ப்பங்களிலும் ஏற்படுத்தப்பட்ட கமிஷன்களைப் பற்றியும், நாம் முன்பே குறித்திருக்கிறோம். சர் ஆன்டனி மெக்டானல் (Sir Antony Macdonnell) என்பவரைத் தலைவராகக் கொண்ட இறுதிக்கமிஷன், 1901ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்டு, 'மனவுறுதியைக் கொடுக்கும் திறமை அல்லது மக்களைக் கவனித்தல், அதாவது பஞ்சத்தின் சின்னம் காணப்பட்ட உடனே கடன்களாலும் மற்ற வழிகளாலும் மக்களுக்கு உதவுதல், தகுந்த சமயத்திலும் தாராளமாகவும் தக்காவிக் கடன்களை வழங்குதல், நிலவரியை நிறுத்திவைத்தல், ஏற்படவிருக்கிற துன்பத்தின் சின்னங்களைக் கவனத்துடன் நோக்குதல், தனிப்பட்டவர்களின் உதவியைப் பெற ஏற்பாடு செய்தல், அதிகாரிகள் அல்லாதவர்களின் ஆதரவைப் பெறுதல்' ஆகியவைகளின் அவசியத்தை அது வற்புறுத்திக் கூறியது. அதனுடைய சிபாரிசுகளை அடிப்படையாகக் கொண்டுதான் இப்பொழுதிருக்கும் பஞ்ச நிவாரணக் கொள்கை உருவாக்கப்பட்டது. பஞ்சநிவாரண அமைப்பின் வளர்ச்சியுடன், ரயில்வே, நீர்ப்பாசன வேலைகள், விவசாயத்தையும், தொழிற்சாலைகளையும் அபிவிருத்தி செய்தல் மூலம், பஞ்சத்தைத் தடுக்கும் கொள்கையையும் வளர்த்தது. 1919ஆம் ஆண்டு, இந்திய அரசாங்கச்சட்டப்படி ஏற்பட்ட நிதி அதிகாரத்தைப் பன்முகப் படுத்தும் விதிகளின்படி, ஒவ்வொரு மாகாண அரசாங்கமும் (இப்பொழுது இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டிருக்கும் பர்மா, அஸ்ஸாம் தவிர) அதனுடைய வருமானத்திலிருந்து குறிப்பிட்ட ஒரு தொகையைப் பஞ்சத்திற்காகும் செலவிற்காக ஒவ்வோர் ஆண்டும் கொடுக்க வேண்டும். மாகாண வருமானங்களிலிருந்து இவ்விதம் ஆண்டுதோறும் பெறும் ஒப்படைப்புகளைப் பஞ்ச நிவாரணத்திற்கு மட்டுமே செலவு செய்யலாம்; 'பஞ்சம்' என்கிற வார்த்தை, வரட்சி அல்லது இயற்கையான இடையூறு ஆகியவைகளால் ஏற்படும் பஞ்சத்தையும் குறிக்கும்; ஆனால், இதற்காகச் செலவு செய்யப்படாத பணத்தைப் பஞ்ச நிவாரண நிதியில் (Famine Relief Fund) சேர்த்து அதை அதிகரிக்க வேண்டும். 1935ஆம் ஆண்டு அரசியலமைப்புத் திட்டப்படி, பஞ்ச நிவாரணச் செலவு முழுவதும் ஒரு மாகாணத் துறையாகச்

செய்யப்பட்டாலும், முன்போலவே பஞ்ச நிவாரண நிதிக்கு மாகாணங்கள் தங்களது பங்கை ஆண்டுதோறும் செலுத்த வேண்டும்.

## 11. வாணிகமும் தொழிலும், வருமான மாற்றங்களும் தொழிலாளர்களும்

### (அ) வாணிகம்

1869ஆம் ஆண்டிற்குப்பின், சூயஸ் கால்வாய் போக்கு வரத்திற்குத் திறந்துவிடப்பட்ட பிறகு, சமாதானம், அமைதி ஆகியவைகள் ஏற்பட்டதாலும், போக்குவரவு சாதனங்களின் அபிவிருத்தியினாலும், தடையில்லா வாணிகக்கொள்கை பின்பற்றப்பட்டதாலும், உள்நாட்டுச் சுங்கச் சுவர்கள், உள்நாட்டில் அனுப்பப்படும் பொருள்களின்மீது விதிக்கப் பட்ட வரிகள் ஆகியவை மறைந்ததாலும், இந்திய அயல் நாட்டு வாணிகம் வெகு வேகமாக அதிகரித்ததைப்பற்றி நாம் முன்னமே பார்த்தோம். இந்திய மார்க்கெட்டில், மேம்பட்ட நிலையை நெடுங்காலமாகவே கிரேட்பிரிட்டன் பெற்றிருந்தது. ஆனால், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குப்பின், ஜெர்மனி, அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகள், இந்திய வியாபாரத்தில் அதற்குப் போட்டியாக வர ஆரம்பித்தன; அதனால், அதன் அளவு பொதுவாக அதிகரித்தது. 1914–18ஆம் ஆண்டுகளின் போரினால், இவ்வாணிகத்தின் அளவு—முக்கிய மாக இறக்குமதி வாணிகம்—தாற்காலிகமாகக் குறைந்தது. போர் முடிந்த பிறகு, அனுகூலமான சில காரணங்களால், மற்ற நாடுகளில் இருந்ததைப் போலவே, இந்தியாவிலும் வாணிக நிலையும் திடீரென்று அதிகரித்தது; இதைத் தொடர்ந்து மறுபடியும், வாணிக மந்தம் ஏற்பட்டது. அது தாற்காலிகமாக மாறினாலும், உலகம் முழுவதிலும் பொருளாதார மந்தம் பொதுவாக ஏற்பட்டதால், இந்திய வாணிகமும் கடுமையான முறையில் குன்றியது. 1932, 1933ஆம் ஆண்டில், 136 கோடி ரூபாய் மதிப்புள்ள ஏற்றுமதி வாணிகம் குறைந்தது; 1933–34ஆம் ஆண்டில், ஏற்றுமதி வாணிகம், மிகக் குறைந்த அளவுக்கு அதாவது, 117 கோடி ரூபாய்க்கு வந்தது. சீக்கிரமே நிலைமை சிறிது அபிவிருத்தி அடைந்தது. 1934–1935ஆம் ஆண்டில், ஏற்றுமதி வாணிகத்தின் மதிப்பு, 155 கோடி ரூபாயாகவும், இறக்குமதி வாணிகம் 135 கோடி ரூபாயாகவும் அதிகரித்தன. உலக வாணிகம்,



உலக உற்பத்தி, 1937–1938ஆம் ஆண்டின் உலக விலை, அளவு ஆகியவைகளில் பழைய நிலையை மீண்டும் பெற்று, இந்தியா உச்சநிலையை அடைந்தது என 1939ஆம் ஆண்டில், இந்திய அரசாங்கத்தின் பொருளாதார ஆலோசகரின் அறிக்கை கூறியது. ஆனால், 1938–39ஆம் ஆண்டின் கடல் கடந்த இந்திய வாணிகத்தில், வாணிகச் சரக்கின் மொத்த அளவு, 1937–38ஆம் ஆண்டுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகக் குறைவாய் இருக்கிறது.

இந்திய வாணிகம் பகிர்ந்தளிக்கப்பட்ட தன்மையிலும், அண்மைக் காலங்களில் மாறுதல்கள் உண்டாயின. 1914-18ஆம் ஆண்டுகளுக்கு முன்பு, இந்திய அயல்நாட்டு வாணிகம், இங்கிலாந்திலிருந்து மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கு மாற்றப்பட்டது மிகத் தெளிவாகத் தெரிந்தது. போரின்போது, ஏற்றுமதி வாணிகத்தின் பெரும் பகுதியையும் இங்கிலாந்தே பெற்றது; ஆனால், இறக்குமதி வாணிகம் சம்பந்தப்பட்ட வரையில், அது குறைந்துவிட்டது. அமெரிக்கா, ஜப்பான், மத்திய ஐரோப்பிய நாடுகள் இவற்றின் கடுமையான போட்டிதான் இதற்குக் காரணம். இறக்குமதி வாணிகத்தில் இங்கிலாந்தின் பங்கு, 1913–1914ஆம் ஆண்டில் 64 சதவிகிதம் இருந்தபோது 1934–1935 ஆண்டில் 40.6 சதவிகிதமே இருந்தது. அதன் பிறகு அந்நிலைமை சிறிது சாதகமாய் மாறியது; இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்வது சம்பந்தமாகச் செய்யப்பட்ட ஒட்டாவாச் சலுகைகள் (Ottawa preferences) இங்கிலாந்திற்கே மிக்க ஆதாயமாய் இருந்தன. இந்தியாவின் வெளிநாட்டு வாணிகத்தைத் தவிர, கடலோர வாணிகமும், உள்நாட்டு வாணிகமும், இந்நாட்டின் உட்புற வாணிகத்தைச் சேர்ந்தவை. பர்மாவுடன் செய்யப்படும் கடலோர வாணிகம் மிக முக்கியமானது.

வாணிகத் தகவல் (Commercial Intelligence) பற்றிய விஷயம் அதிகமாகக் கவனிக்கப்பட்டது. வாணிகத் தகவல், புள்ளி விவரங்கள் இலாக்காவைத் (1922ஆம் ஆண்டிலிருந்து வேலை செய்து வருவது) தவிர, இலண்டனிலும், ஹாம்பர்கிலும் (Hamburg) இந்திய வாணிகக் கமிஷனர்கள் இருக்கின்றார்கள். ஐரோப்பிய, இந்திய வணிக மன்றங்கள் (Chamber of Commerce) போன்ற அதிகாரிகள் அல்லாத நிறுவனங்களும், வாணிகத்தை அபிவிருத்தி செய்வதற்காக மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றன.

## (ஆ) தொழில்

பஞ்சப் பிரச்சினையைத் தீர்க்கும் வழிகளுள் ஒன்றாக இந்தியாவைத் தொழில் மயமாக்கும் அவசியத்தை 1880ஆம் ஆண்டிலும், 1901ஆம் ஆண்டிலும் ஏற்படுத்தப்பட்ட பஞ்சக் கமிஷன் வற்புறுத்தியது. தொழிற்சாலைகளைப் பற்றி அரசாங்கம் கொண்டிருந்த அக்கறையில்லாத மனப்பான்மை, கர்சான் பிரபு காலத்திலேதான் சிறிது மாறத் தொடங்கியது; அவருடைய முயற்சியின் பயனாகத்தான் பேரரசின் வாணிக, தொழிற்சாலை இலாக்கா (Imperial Department of Commerce and Industries) 1905ஆம் ஆண்டில் உண்டாயிற்று. இந்தியாவின் தொழில் மறு மலர்ச்சிக்குச் சுதேசி (Swadeshi) இயக்கமும், மிக்க ஊக்கத்தைக் கொடுத்தது. ஆனால், மறுபடியும் அரசாங்கம் தலையிடாமை (laissez-faire) என்கிற பழமைக் கொள்கையை 1910ஆம் ஆண்டில் பின்பற்ற ஆரம்பித்தது; அச்சமயத்தில் இந்தியக் காரியதரிசியாராய் இருந்த மார்லே பிரபு, மாகாண வாணிக இலாக்காவை ஏற்படுத்துவதற்கும் விரும்பாமல், தொழிற்சாலைகளை அபிவிருத்தி செய்வதற்கான முயற்சிகளைத் துணிவிழக்கச் செய்யும் வகையில் இந்திய அரசாங்கத்திற்கு ஒரு செய்தியை அனுப்பினர்.

1914–18ஆம் ஆண்டுகளின் போர், இந்தியாவின் தொழில் வறுமையை மிகவும் தெளிவாகக் காட்டியதோடல்லாமல், தொழிற்சாலைகளை ஏற்படுத்துவதன் முக்கியத்துவம் பொருளாதார ரீதியிலும், இராணுவ ரீதியிலும், அவசியம் என்பதை இந்திய அரசாங்கத்திற்கு உணர்த்தியது. நாட்டின் பாதுகாப்பிற்கான விதிகளை இந்திய அரசாங்கம் வெளியிட்ட பிறகு, 1917ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதத்தில் இராணுவத் தளவாடங்களின் போர்டை ஏற்படுத்தியது; எல்லாவித அளிப்புகளையும் (Supplies) கட்டுப்பாடு செய்வதற்கும் இந்தியாவின் வசதிகளை உபயோகிப்பதற்கும், இவ்விதிகள், நிருவாகத்திற்கு அதிகாரம் அளிக்கின்றன. விலைப்பொருள்களைக் கட்டுப்பாடு செய்வதும் அரசாங்கத்திற்கு வேண்டிய பண்டங்களையும் போருக்கு வேண்டிய தளவாடங்களையும் உற்பத்தி செய்வதுமே இப்போர்டின் முக்கியப் பணியாய் இருந்தாலும், வேண்டிய தகவல்களையும் ஆலோசனையையும் அளித்தல், சில இந்திய நிறுவனங்களுக்குப் பொருள்களுக்கான உத்தரவு கொடுத்தல் போன்ற

பல வழிகளாலும், இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு அதிக ஊக்கத்தை அது மறைமுகமாக அளித்தது.

இந்தியப் பொதுமக்களின் கோரிக்கைகளுக்கிணங்கத் தொழில் வளர்ச்சியின் சாத்தியக் கூறுகளை ஆராயவும், வாணிகம் தொழில்கள் சம்பந்தமாக, புதிய வழிகளை இந்திய மூலதனத்திற்குக் காட்டுவதற்காகவும், அரசாங்கம் எவ்விதம் தொழிற்சாலைகளை ஊக்கப்படுத்தலாம் என்பதற்கான வழிகளைக் கூறுவதற்கு அரசாங்கம் ஒரு தொழிற் கமிஷனை 1916ஆம் ஆண்டில் நியமித்தது. தொழிற்கமிஷன் (Industrial Commission) தனது அறிக்கையை 1918ஆம் ஆண்டில் சமர்ப்பித்தது; 'தொழிற்பிரச்சினைகளில் ஆற்றலுடன் தலையிடும் ஒரு கொள்கையை' ஆரம்பத்தில் பேரரசு, மாகாணத் தொழில் இலாக்காக்களை ஏற்படுத்துதல், விஞ்ஞான தொழில் நுட்பமான பணிகளை ஏற்படுத்துதல், தொழில், தொழில் நுட்பக் கல்விகளுக்கு வேண்டிய அதிகமான வசதிகளுக்கு வழி செய்தல், தொழிற்சாலைகளுக்கு வேண்டிய தொழில் நுட்ப நிதி உதவிகளைச் செய்தல், பண்டங்களை வாங்கும் கொள்கையை மாற்றுதல், தொழில் கூட்டுறவை ஆதரித்தல், போக்கு வரவு சாதனங்களின் வசதிகளையும் சரக்குக் கூலிகளின் வசதிகளையும் மேம்பாடு செய்தல் ஆகியவைகளை அரசாங்கத்திற்கு அது சிபாரிசு செய்தது. இவ்விதச் சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, அவற்றை நடைமுறையில் பின் பற்றுவதற்காக ஓரளவு முயன்றது. சீர்திருத்தங்களுக்குப் பிறகு 'தொழில்' மாற்றப் பட்ட துறையாய் மாறியது. இந்தியத் தொழில்களின் தலைவிதி, அரசாங்கத்தின் சுங்க வரிக்கொள்கையுடன் இறுகப் பிணைக்கப்பட்டிருக்கிறது. இவற்றைப் பற்றிச் சுருக்கமாக ஆராய்வோம்.

## (இ) வருமான மாற்றங்கள்

1914–18ஆம் ஆண்டின்போது தொழில்களுக்குக் கொடுக்கப்பட்ட ஊக்கம், தற்காலிகமானதுதான். அது முடிந்தவுடன், அயல் நாடுகளின் போட்டி மறுபடியும் ஏற்பட்டதால், இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டுவதன் அவசியம் உணரப்பட்டது. உண்மையில் இப்போர் ஏற்படுவதற்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பாகவே, சுங்கவரிக் கொள்கையை மாற்றவேண்டுமென்று இந்தியப் பொதுமக்கள் கோரினர்கள். போர் முடிந்த பிறகு,

அக்கோரிக்கை மறுபடியும் எழுப்பப்பட்டது. தொழிற்கமிஷன் இப்பிரச்சினையைப் பற்றி ஆராயக்கூடாதென விதிக்கப் பட்டாலும், தனது சுங்கக் கொள்கையைத்தானே தீர்மானிக்க வேண்டும் என்ற இந்தியாவின் உரிமையை மான்டேகு-செம்ஸ் போர்டு அறிக்கை ஆதரித்தது. இந்திய மசோதாவின் கூட்டுப் பொறுக்குக் கமிட்டி, வருமான சுய ஆட்சியை இந்தியா விற்குத் தரவேண்டுமென்று சிபாரிசு செய்தது. முழு வருமானச் சுய ஆட்சி வேண்டுமென்று, 1921ஆம் ஆண்டில் சட்டசபையில் நிறைவேறிய ஒரு தீர்மானத்திற்குப் பதில் அளிக்கும் வகையில், 1921ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 30ஆம் தேதியன்று இந்தியக் காரியதரிசியார் ஒரு செய்தியை அனுப்பினர்; அதில் அக்கொள்கையை அவர் ஏற்றுக் கொண்டார். அக்கொள்கையின் தன்மையை ஆராய்வதற்காக அதே வருடத்தில் ஒரு வருமானக் கமிஷன் ஏற்படுத்தப் பட்டது. 'தேர்ந்தெடுத்த பாதுகாப்புக் (Discriminate Protection) கொள்கையைப் பின்பற்ற வேண்டும்' என்று அக் கமிஷன் சிபாரிசு செய்தது; இதனால், பாதுகாப்பைக்கோரும் சம்பந்தப்பட்ட தொழில்களின் உரிமைகளை ஒரு காப்புவரி போர்டு (A Tariff Board) நிருணயிக்கும். இந்தச் சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, 1923ஆம் ஆண்டு, ஜூலை மாதத்தில் ஒரு காப்புவரி போர்டை நியமித்தது. அரசாங்கத்தின் உத்தரவின்படி, பல தொழில்களின் உரிமையை போர்டு ஆராய்ந்தது; இதனால், இரும்பு, எஃகு, பருத்தி, காகிதம், சர்க்கரை, உப்பு, தீக்குச்சி போன்ற பல வகையான தொழில்களுக்குப் பாதுகாப்புத் தரப்பட்டது. பிறகு பல சட்டங்கள் மூலம் சுங்க வரியில் சில முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டன; 1932ஆம் ஆண்டின் இந்தியச் சுங்கவரி (ஒட்டாவா வாணிக ஒப்பந்தம்) திருத்தச் சட்டந்தான் அச்சட்டங்களுள் மிக முக்கியமானது. 1932ஆம் ஆண்டு, ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் ஒட்டாவா நகரில் நடந்த பேரரசுப் பொருளாதார மாநாட்டில் (Imperial Economic Conference) இங்கிலாந்து மன்னரின் அரசாங்கத்திற்கும், இந்திய அரசாங்கத்திற்குமிடையில் ஏற்பட்ட வணிக ஒப்பந்தத்தின்படி, சுங்கத்தீர்வையின் மாறுதல்களை இச் சட்டம் அமுல் செய்தது. 1933 ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் முதல் தேதி அமுலுக்கு வந்த இவ்வொப்பந்தங்களின்படி, இங்கிலாந்திலிருந்து அல்லது பிரிட்டிஷ் காலனியிலிருந்து இந்தியாவிற்கு இறக்குமதி செய்யப்படும் சில பொருள்களின் மீது சில சலுகைகளை கொடுப்பதற்கான வழிகளை இது ஏற்

படுத்தியது. பண்டித ஜவஹர்லால் நேரு தமது 'சுயசரிதையில்' (Autobiography) கூறியுள்ளபடி, இந்தியாவின் 'பரந்த நலன்களை'ப் பலி கொடுத்து இந்தியாவுடன் நடத்தப்பட்ட இங்கிலாந்தின் வாணிகம் இலாபம் பெறுவதற்குத்தான் அவை உதவியாய் இருந்தன என இந்திய அரசியல் வாதிகளுள் சிலரும், வணிகர் சிலரும் கருதுகின்றனர்.

## (ஈ) தொழிலாளர்கள்

புதியகால வாழ்க்கை நிலைமையில், தொழிலாளர்களின் வாழ்க்கையை ஒழுங்கு செய்தல் என்பது, இந்தியாவில் அரசாங்கம் செய்யவேண்டிய இன்றியமையாத கடமைகளுள் ஒன்றாகிவிட்டது. லங்காஷையர் (Lancashire), டண்டீ (Dundee) ஆகிய நகரங்களிலிருந்த வணிகர்களின் கிளர்ச்சி காரணமாக, 1908ஆம் ஆண்டில் ஒரு தொழிற்சாலைக் கமிஷன் ஏற்பட்டது; பலவிதத் தொழிற்சாலைகளிலுமிருந்த நிலைமைகளை இக் கமிஷன் கவனத்துடன் ஆராய்ந்து சில முக்கிய நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்தது. இவற்றை அரசாங்கம் முற்றும் ஏற்றுக்கொண்டு, இறுதியாக இவற்றை அடிப் படையாகக் கொண்டு 1911ஆம் ஆண்டின் தொழிற்சாலைச் சட்டத்தை (Factory Act) இயற்றியது. சிறுவர்களும் பெண்களும் செய்யும் வேலை மணி நேரத்தை முறையே ஏழு, பதினொன்று என இச்சட்டம் வரையறை செய்தது; எல்லாத் தொழிற்சாலைகளிலும், நடுப்பகலில் அரை மணி ஓய்வு நேரம் கட்டாயமாகக் கொடுக்க வேண்டுமென்றும் கூறியது. சிறுவர்களுக்கான பழைய வயது வரம்பு (ஒன்பதிலிருந்து பதினான்கு வரை) அப்படியே வைத்துக்கொள்ளப்பட்டது. ஆனால், அவர்களின் வயது உண்மையானது என நற்சாட்சிப் பத்திரம் பெறுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. முக்கியமாக நெசவுத் தொழிலில் வேலை செய்யும் நேரம் சிறுவர்களுக்கு ஆறு மணியாகவும், வயது வந்த ஆடவர் களுக்குப் பன்னிரண்டு மணியாகவும் வரையறுக்கப்பட்டது. தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளரின் உடல் நலம், பாதுகாப்புச் சம்பந்தமாகச் சில புதிய ஏற்பாடுகள் செய்யப் பட்டன. 1919ஆம் ஆண்டிற்குப் பின் ஏற்பட்ட தொழிலாளர் கிளர்ச்சியின் பயனாக, இந்தியாவிலிருந்த தொழிலாளர்களின் நிலைமையில் மேலும், பல மாற்றங்களைச் செய்வது அவசிய மாயிற்று; இவற்றுக்கு வேண்டிய ஊக்கம், இச்சமயத்தில், நாட்டிற்கு வெளியேயிருந்துதான் முக்கியமாகக் கிடைத்தது. வாஷிங்டனில் (1921) நடந்த அகில உலகத் தொழிலாளர்

மாநாட்டின் மூல உடன்படிக்கைகளும், மூலச் சிபாரிசுகளும் சீர்திருத்தப்பட்ட இந்தியச் சட்டசபையில் கொண்டு வரப் பட்டு, 1922ஆம் ஆண்டில் அவை சட்டமாயின. இப்புதிய சட்டம் தொழிற்சாலையின் விளக்கத்தைப் பரவலாக்கியது; நெசவு ஆலைகளுக்கும், அவையல்லாத மற்ற ஆலைகளுக்கும் இடையே இருந்த பழைய வித்தியாசத்தை இது நீக்கியது. குழந்தைத் தொழிலாளியின் குறைந்த பட்ச வயதை ஒன்பதிலிருந்து பன்னிரண்டாகவும், அதிகப் பட்ச வயதைப் பதினான்கிலிருந்து பதினைந்தாகவும் இது உயர்த்தியது. ஒரு நாளைக்கு ஆறுமணி நேரத்திற்கு மேல் சிறுவர்களிடம் வேலை வாங்கக் கூடாது எனவும், கட்டாய ஓய்வு நேரத்தையும் இது குறிப்பிட்டது; வயது வந்தவர்களின் வேலை நேரத்தை ஒரு நாளைக்குப் பதினொரு மணியாகவும், ஒரு வாரத்திற்கு அறுபது மணியாகவும் கட்டுப்படுத்தி, ஆறுமணி நேரத்திற்குப் பிறகு ஒரு மணி நேர ஓய்வையும் முறையான வாராந்தர ஓய்வு நாளையும் கட்டாயமாகக் கொடுக்க வேண்டுமெனவும் இது கூறியது, மிகை நேர வேலைக்குத்தர வேண்டிய தொகையைப் பற்றிய ஒழுங்கு விதிகளையும் இது செய்தது. ஆனால், இச் சட்டத்தின் விதிகள், தொழிற்சாலைகளுக்கு மட்டுந்தான் பயன் படுத்தப்பட்டன. ஆனால், கைத்தொழில் உழைப்பாளிகளுக்குப் பயன்படுத்தவில்லை. வேலை செய்யும் சூழ்நிலையை மேம்படச் செய்வதற்காக இச்சட்டம் 1923ஆம் ஆண்டிலும், 1926ஆம் ஆண்டிலும், திருத்தப்பட்டது. 1923ஆம் ஆண்டில் வேலையாள் நட்ட ஈட்டுச் சட்டம் (Workmen's Compensation Act) நிறை வேறியது. பல வகையைச் சேர்ந்த தொழிற்சாலைகளில் உழைப்பவர்களுக்கு ஏற்படும் சில வித ஊறுபாடு அல்லது மரணம் ஆகியவற்றுக்கான நட்ட ஈட்டையும் இச்சட்டம் குறிப்பிட்டது.

ஆனால், இச்சட்டம் ஒரு சில ஆண்டில் இயங்கியபோது, இதிலுள்ள குறைகள் தெரியலாயின; அதே சமயத்தில், தொழிற்குழப்பம், தொழிலாளர் இயக்கத்தின் செல்வாக்கு, உலக நாடுகள் லீகின் தொடக்கத்திலிருந்துள்ள அங்கத்தினர் என்ற முறையில் ஜெனிவாவில் இருந்த உலகத் தொழி லாளர்கள் நிறுவனத்துடன் இந்தியாவின் ஒத்துழைப்பு ஆகியவைகளால், பல சீர்திருத்தங்களுக்கான திட்டங்களை ஏற்படுத்தியது. 'பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள தொழிற்சாலை நிறுவனங்கள், தோட்டங்கள் ஆகியவைகளில் இருக்கும் வேலை யாள்களின் நிலைமையையும், உழைப்பாளிகளின் உடல் நலம், திறமை, வாழ்க்கைநிலை ஆகியவைகளையும்; வேலையளிப்போ

னுக்கும் வேலையாளுக்குமிடையே நிலவும் உறவை ஆராய்வதற்கும், அறிக்கையை வெளியிடுவதற்கும், சிபாரிசுகளைச் செய்வதற்கும், காலஞ்சென்ற ரைட் ஹானரபிள் ஜே. எச். ஒயிட்லி (late Rt. Hon. J· H. Whitley) என்பவரின் தலைமையில், இந்தியத் தொழிலாளர்களுக்கான ஒரு ராயல் கமிஷனை, மேன்மை தங்கிய அரசர்-பேரரசர் மூலம், இந்திய அரசாங்கம், 1929ஆம் ஆண்டின் மத்தியில் அறிவித்தது. இந்தியாவில் உள்ள உழைப்பாளிகளின் சட்டங்களையும், வேலை நிலைமையையும், இந்த ராயல் கமிஷன் விரிவாக ஆராய்ந்து, 1931ஆம் ஆண்டு, ஜூலை மாதத்தில் வெளியிடப்பட்ட அறிக்கையில் தொடர்ச்சியாகப் பல சிபாரிசுகளைச் செய்தது. இந்தச் சிபாரிசுகளை இங்கே சுருக்கிக் கூறுவதும் இயலாத காரியம். இவற்றைப் பின்பற்றி மத்திய, மாநில அரசுகள் தகுந்த நடவடிக்கைகளை எடுத்தன. அப்படிப்பட்ட உழைப்பாளிகளின் சட்ட சம்பந்தமாக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளுள், பின் வருவனவே முக்கியமானவை : 1933ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட வேலையாள் நட்ட ஈட்டுச் சட்டத் திருத்தம், 1923ஆம் ஆண்டு சட்டத்தின் நோக்கத்தை மேலும் விரிவுபடுத்தியது. 1934ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்ட இந்தியத் தொழில்கள் சட்டம், தொழிற்சாலைகளில் வேலை செய்யும் வேலையாள்களின் வேலை நேரம், சுகாதாரம், மற்றும் பல நிலைமைகள் சம்பந்தமாக முன்பு செய்யப்பட்ட தொழிற்சாலைச் சட்டங்களின் விதிகளை விரிவுபடுத்தியது. 1936ஆம் ஆண்டின் கூலிகளைச் செலுத்தும் சட்டம், உழைப்பாளிகளுக்குக் கூலி கொடுப்பதை ஒழுங்குபடுத்துகிறது; 1937ஆம் ஆண்டின் சி. பி. ஒழுங்குபடுத்தாத தொழிற்சாலைகளின் சட்டம், சிறுவர்கள் உழைப்பையும் பெண்கள் உழைப்பையும் ஒழுங்குபடுத்தி, 1934ஆம் ஆண்டின் சட்டம் பயன்படுத்தாத தொழிற்சாலைகளில் வேலை செய்யும் உழைப்பாளிகளின் பொதுநலத்திற்கான விதிகளைச் செய்தது; 'எல்லாப் பருவங்களிலும் இயங்கும்' தொழிற்சாலைகளின் வேலை நேரம், ஒரு நாளைக்குப் பத்து மணியாகவும், ஒரு வாரத்திற்கு ஐம்பது மணியாகவும் வரையறுக்கப்பட்டது. தொழிற்சாலைச் சட்டங்களைப் பின்பற்றுவதற்காகத் தொழிற்சாலை இன்ஸ்பெக்டர்கள், ஒவ்வொரு மாகாணத்திலும் நியமிக்கப்பட்டார்கள். ஒய். எம். சி. எ. சமூக சேவைச் சங்கங்கள், தாழ்த்தப்பட்ட வகுப்புகளின் மிஷன் சங்கம் ஆகியவைகளால் சில சமயத்தில் நடத்தப்படும் பொது நல வேலைகள் மூலமாகத் தொழிலாளர்களின் நிலைமை மேம்படுத்துவதற்காக முயற்சிகள் செய்யப்பட்டன. சீர்திருத்தப்படி உண்டான ஆட்சி அமைப்பின் கீழ்,

பல வகைகளில், தொழிலாளர்களின் நிலையை அபிவிருத்தி செய்யக் காங்கிரஸ் மந்திரி சபைகள் முயற்சி செய்தன; தொழில் நிறுவனங்களில் உள்ள தொழிலாளர்களின் நிலையை ஆராய்ந்து, அதை மேம்பாடு செய்வதற்கான சிபாரிசுகளைச் செய்வதற்காக, பம்பாய் நெசவுத் தொழிலாளர்கள் விசாரணைக் கமிட்டி (1937ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில், நியமிக்கப்பட்டது), கான்பூர்த் தொழிலாளர்கள் விசாரணைக் கமிட்டி (1937ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் நியமிக்கப் பட்டது), மத்திய மாகாணங்கள் நெசவுத் தொழிலாளர் விசாரணைக் கமிட்டி (1938ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதத்தில், நியமிக்கப்பட்டது), பீஹார் தொழிலாளர் விசாரணைக் கமிட்டி (1938ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில், நியமிக்கப்பட்டது) ஆகியவைகளை அம்மந்திரி சபைகள் நியமித்தன. மத்திய மாநிலச் சட்டசபைகளில் தொழிலாளர்களுக்குப் பிரதிநிதுத்துவம் அளிக்கும் பிரச்சினை மிக முக்கியத்துவம் அடைந்தது; இவற்றைச் சில கமிட்டிகள் ஆராய்ந்தன. 1935ஆம் ஆண்டில் சர் லாரி ஹேம்மண்ட் (Sir Lawrie Hammond) என்பவரைத் தலைவராகக் கொண்ட இந்தியத் தேர்தலை வரையறுக்கும் கமிட்டி (Indian Delimitation Committee), 1936ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதத்தில் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. பதிவு செய்யப்பட்ட தொழிற் சங்கங்கள் அடிப்படையில், பெடரல் சட்டசபைக்கும், மாகாணச் சட்டசபைகளுக்கும் தொழிலாளர்களின் பிரதி நிதிகளை அனுப்புவதற்கான சில தொகுதிகளை ஏற்படுத்தும் திட்டத்தை இது சிபாரிசு செய்தது.

தொழிலாளர்களின் நன்மைக்காகச் செய்யப்பட்ட அரசாங்கச் சட்டங்களையும், தரும சிந்தனையாளர்களின் நடவடிக்கைகளையும் தவிர, புதிய இந்தியாவில், தொழிலாளர் களின் இயக்கத்தினுல் ஏற்பட்ட செல்வாக்கையும் நாம் கவனிக்க வேண்டும். முதல் உலகப் போரைத் தொடர்ந்து ஏற்பட்ட பொதுவான விழிப்பும், வருந்தத்தக்க வாழ்க்கை நிலைமைகளுக்கு முக்கியக் காரணமாயிருந்த வாழ்க்கைத் தேவைகளின் அதிக விலையும் மாருத கூலியும் காரண மாகத்தான் இவ்வியக்கம் உண்டானது. 1918ஆம் ஆண்டில் மிஸ்டர் பீ. பி. வாடியா (Mr. B. P. Wadia) என்பவரால் ஏற்படுத்தப்பட்ட சென்னைத் தொழிற்சங்க யூனியனை முதல் தொழிற்சங்கம் என உண்மையான பொருளில் கொள்ள லாம். நிறுவனத்தின் மதிப்பையும், வேலை நிறுத்தத்தின் பயனையும், வெகு சீக்கிரத்திலேயே தொழிலாளர் உணர்ந்து

கொண்டனர். 1920ஆம் ஆண்டில், முதலாவது அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸை, மிஸ்டர் நாராயண் மல்ஹர் ஜோஷி (Mr. Narayan Malhar Joshi) என்பவர் ஆரம்பித்தார், பெரும்பாலான தொழிற்சாலை இடங்களில் தொழிற்சங்கங்கள் ஏற்பட்டன; அடிக்கடி வேலை நிறுத்தங்களும் உண்டாயின. தொழிற்சங்கங்களின் நடவடிக்கைகள், ஓரளவுக்கு, 1926ஆம் ஆண்டின் இந்தியத் தொழிற்சங்கங்கள் சட்டத்தினால், சட்டப்படியாக்கப்பட்டன. இச்சட்டத்தைப்பற்றி, முக்கியமாக, தொழிற்சங்கங்களின் நடவடிக்கைகளின் மீதும் அதன் தலைவர்களின் மீதும் விதிக்கப் பட்ட கட்டுப்பாடுகளைப்பற்றி, மறுபடியும் பரிசீலனை செய்ய வேண்டுமென்று ராயல் கமிஷன் சிபாரிசு செய்தது. உழைப்பாளிகளிடமிருந்த கல்வியறிவின்மை, திறமையுள்ள தலைமை இல்லாமை, இந்திய உழைப்பாளிகளின் விவசாய நோக்கம், அதனிடமிருந்த பல வகைத் தன்மை ஆகியவை களால், தொழிற்சங்கங்களின் முன்னேற்றம் மிகப்பாதிக்கப் பட்டாலும், தொழிற்சங்க இயக்கம் வளர்ச்சியடைந்தே வந்தது. தொழிற்சங்கக் காங்கிரஸைக் கம்யூனிஸ்டுகள் கைப்பற்ற முயன்றதால், அதன் தலைவர்களிடையே, 1929ஆம் ஆண்டில் ஒரு பிளவு ஏற்பட்டது. மிஸ்டர். எம். என். ஜோஷியின் தலைமையிலிருந்த மிதவாதத் தொழிற்சங்க வாதிகள் காங்கிரஸிலிருந்து பிரிந்து சென்று, இந்தியத் தொழிற்சங்கப் பெடரேஷன் (Indian Trades Union Federation) என்கிற ஒரு புதிய நிறுவனத்தை ஆரம்பித்தார்கள். 1931 ஆம் ஆண்டில் மேலும் ஒரு பிளவு ஏற்பட்டது. எல்லா நிறுவனங்களையும் ஒரு மத்திய அமைப்பின் கீழ்க் கொண்டு வந்து, இந்தியத் தொழிலாளர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கான முயற்சிகள் செய்யப்பட்டன; ஆனால், அவை வெற்றியடையவில்லை. 1938ஆம் ஆண்டில் ஒன்று சேர்க்கப்பட்ட தொழிற்சங்கக் காங்கிரஸில் இருந்த மொத்த அங்கத்தினர்களின் தொகை, 3,54,500 ஆகவும், இணைக்கப் பட்ட சங்கங்களின் தொகை, 191 ஆகவும் இருந்தன.

## 12. சமூக, சமயச் சீர்திருத்தங்கள்

இந்தியாவில் புதிய காலத்தின் வருகையைத் தெரிவித்த கலாசார மறுமலர்ச்சி, இருபதாம் நூற்றாண்டின் முதற் பாதியில் மிக்க ஆற்றலுடன் விளங்கியது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் உண்டான பிரம்மசமாஜம், பிரார்த்தனை சமாஜம், ஆரிய

சமாஜம், தக்காணக் கல்விச் சங்கம், பிரம்மஞான சபை, ராமகிருஷ்ண மிஷன் என்பனவற்றின் நடவடிக்கைகளைப் பற்றி முன்பே நாம் பார்த்திருக்கிறோம். மக்களின் உயர்வுக்காக, இம்முயற்சிகள் இருபதாம் நூற்றாண்டிலும் தொடர்ந்து நடந்து வந்தன.

தக்காணக் கல்விச் சங்கத்தில் இருபது ஆண்டுக்காலம் சேவை செய்தபிறகு, இந்திய ஊழியர்கள் சங்கம் (Servants of India Society) என்ற அதைவிடப் பிரபலமான ஒரு நிறுவனத்தை 1905ஆம் ஆண்டில், கோகலே ஏற்படுத்தினார். 'இந்தியாவில் பணி புரிவதற்காகத் தேசீய சமயப் பரப்பாளர்களுக்குப் பயிற்சி அளித்தல், அரசியலமைப்புக்குட்பட்ட எல்லா வழிகளாலும் இந்திய மக்களின் உண்மையான நலன்களைப் பேணுதல்' ஆகியவைகளே, அச்சங்கத்தின் குறிக்கோள்கள். நாட்டின் நலத்திற்காக, சமய உணர்ச்சியுடன், தங்கள் வாழ்க்கையைத் தியாகம் செய்வதற்குத் தயாராகி இருப்பவர்களே அதில் அங்கத்தினராகச் சேரலாம். அரசியல், கல்வி, பொருளாதாரம், சமூகம் போன்ற குறிப்பிட்ட நடவடிக்கைகளைச் செய்வதற்காக அச்சங்கம் ஏற்படவில்லை. ஆனால், தாய் நாட்டிற்குச் சிலவகைப் பணிகளைப் புரிவதற்கான பயிற்சியையும் சாதனங்களையும் கொண்ட ஒரு மக்கள் குழுவே அச்சங்கம்.

'அப்படிப்பட்ட அங்கத்தினர்கள், எதிர்காலத்தில் பள்ளிகளையோ, பத்திரிகைகளையோ, சட்டசபைகளையோ, கூட்டுறவு சங்கங்களையோ, சேரிப்பணிகளையோ, இவற்றைப் போன்ற பிறவற்றையோ ஏற்று நடத்துவதா என்பது முக்கியமன்று; ஆனால், எந்த ஒரு வேலையையும், அதன் நோக்கம் சிறந்ததென நினைத்து, ஒரு கட்சி அல்லது ஒரு வகுப்பு அல்லது ஒரு சங்கம் அல்லது எல்லாவற்றிற்கும் இறுதியாகச் சொந்த நலம் ஆகியவைகளைப் பெருக்கிக் கொள்வதற்காக அல்லாமல், அவ்வேலைக்காகவே, அதை ஏற்றுக்கொள்வதுதான்—அப்படிப்பட்ட எவ்வித வேலைக்கும் உரிய இன்றியமையாத சிறப்புப் பண்புதான்—முக்கியமானது.'

கோகலேயும், 1915ஆம் ஆண்டில் அவர் இறந்த பிறகு அவருக்குப் பின் அச்சங்கத் தலைவராயமைந்த சீனிவாச சாஸ்திரியும், முக்கியமாக அரசியலிலேயே தம் முழுக் கவனத்தையும் செலுத்தி அப்பாதையில் இணையற்ற தனிச்

சிறப்பை எய்தினர். அங்கத்தினருள் வேறு சிலர் வேறு விதமான வேலைகளைக் கவனித்து, தனிப்பட்ட நிறுவனங்களை உண்டாக்கினர். அவர்களுள் மூவருடைய நடவடிக்கைகளை நாம் கவனிப்போம்:

(i) அவர்களுள் ஒருவரான நாராயண் மல்ஹர் ஜோஷி (Narayan Malhar Joshi) என்பவர், 1911ஆம் ஆண்டில், சமூக சேவைச் சங்கத்தைப் பம்பாயில் உண்டாக்கினார்; 'சிறந்ததும் நியாயமானதுமான வாழ்க்கையையும் வேலையையும் மக்களுக்குப் பெற்றுத் தருவதே' அதன் குறிக்கோள். 'பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே, வயது வந்தவர் 760 பேருக்காக, 17 இரவுப் பள்ளிகளையும், ஆலைகளில் பாதிநேரம் வேலை செய்பவர்களுக்காகச் சம்பளமற்ற மூன்று பகற் பள்ளிகளையும், ஒவ்வொரு நாளும் சராசரி 200 பேர் படிக்கக் கூடிய 11 நூலகங்களையும் படிப்பகங்களையும், குழந்தை களுக்கான இரு பகற்பள்ளிகளையும் அவர்கள் நடத்தினார்கள். நூற்றுக்கும் மேற்பட்ட கூட்டுறவுச் சங்கங்களை அவர்கள் ஏற்படுத்தினார்கள்; போலீஸ் மன்றத்தின் ஏஜெண்டு வேலையை அவர்கள் செய்தார்கள்; கல்வியறிவில்லாதவர் களுக்குச் சட்ட ஆலோசனை கூறி, அவர்களுடைய மனுவையும் எழுதினார்கள்; சேரி வாழ் குழந்தைகள் நல்ல காற்றைப் பெற வேண்டுமென்பதற்காகப் பல இடங்களுக்கும் அவர்களை அழைத்துச் சென்றார்கள்; ஆறு விளையாடும் இடங்களையும்; மூன்று நாடக அரங்குகளையும், உழைப்பாளி வகுப்பினர்களின் பொழுது போக்கிற்காக, அவர்கள் கட்டிக்கொடுத்தார்கள், சுகாதார வேலையைச் செய்தார்கள்; ஒவ்வோர் ஆண்டிலும், ஏறத்தாழ 20,000 பிணியாளர்களுக்கு மருந்து வழங்குமிடங்கள் மூன்று மூலமாக மருத்துவ உதவியை அளித்தார்கள்; சிறுவர்கள் சங்கங்களையும், சாரணர்கள் துணைப்படைகளையும் ஆரம்பித்தார்கள்.'

அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசை, திரு. ஜோஷி என்பவர், 1920ஆம் ஆண்டில் ஏற்படுத்தினார்; இந்தியத் தொழிலாளர்' இயக்கத்தின் தலைசிறந்த பிரதிநிதி என அவர் எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டார், 1929ஆம் ஆண்டு வரையிலும், தொழிலாளர் இயக்கத்தை மிக்கத் திறமையுடன் நடத்தி வந்தார். அவ்வாண்டில் அகில இந்திய பெடரேஷனை (திரு. ஜோஷியால் ஏற்படுத்தப்பட்டது.) மாஸ்கோவுடன் சேர்க்கவேண்டுமென்று, தொழிற் சங்கக் காங்கிரஸின் ஆண்டுக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

கம்யூனிஸச் சார்பை எதிர்த்து ஜோஷியும் அவர் ஆதரவாளர்களும் அக்கூட்டத்தை விட்டகன்றூர்கள்.

(ii) ஹிருதய நாத் குன்ஸ்ரு (Hriday Nath Kunzru) என்பவர், இந்திய ஊழியர் சங்கத்தின் மற்றோர் அங்கத்தினர், சேவா சமிதியை (Seva Samiti) 1914ஆம் ஆண்டில் உண்டாக்கினர். கல்வி, வாழ்க்கை நலங்கள், உடற்பயிற்சி ஆகியவைகளை வளர்ப்பதுடன், சந்தைகள், பஞ்சங்கள், வெள்ளங்கள், கொள்ளை நோய்கள் போன்றவை ஏற்படும் சமயங்களிலும், முக்கியமாகக் கும்பமேளாவைப் போன்ற சமயத் திருவிழாக்களின் போதும், சமூக சேவையை இந் நிறுவனம் செய்கிறது.

(iii) ஸ்ரீ ராம் பாஜ்பாய் (Sri Ram Bajpai) என்பவர், சிறுவர்களின் சாரணர் சங்கச் சேவா சமிதியை ஏற்படுத்தினர். உலக முழுவதும் பரவியிருக்கும் பேடன் பவல் (Baden-Powell) என்பவருடைய அமைப்பைப் பின்பற்றி, 1914ஆம் ஆண்டில் இது அமைக்கப்பட்டது. பேடன் பவலின் நிறுவனம் அச் சமயத்தில் இந்தியர்களைச் சேர்த்துக்கொள்ள மறுத்தது. பேடன் பவல் பிரபு இந்தியாவிற்கு வந்த பிறகு, நிறபேதத்தை நீக்கிவிட்டாலும், பாஜ்பாயின் நிறுவனம் தனது தனித் தன்மையைக் காப்பாற்றிக்கொள்ள முடிவு செய்தது; ஏனெனில், இந்தியாவில் சிறுவர்கள் சாரணர் இயக்கத்தை முழுவதும் இந்திய மயமாக்க வேண்டும் என்பதுதான் அதன் நோக்கம்.

இந்தியத் தேசிய வாழ்க்கையை உருவாக்குவதில், இந்திய ஊழியர்களின் சங்கம் மேற்கொண்ட பங்கைத் தெளிவாகத் தெரிவிப்பதற்கு அதைச் சேர்ந்த புகழ் பெற்ற அங்கத்தினர் ஐவரின் சேவைகளே போதுமானவை.

இந்திய ஊழியர் சங்கம் மூன்று பத்திரிகைகளை நடத்தியது: அவை, மிஸ்டர் எஸ். ஜி. வாஸ் (Mr. S. G. Vaze) என்பவரை ஆசிரியராகக்கொண்ட இந்திய ஊழியன் (The Servant of India) என்கிற ஆங்கில வாராந்தரப் பத்திரிகையும், மிஸ்டர் லீமாயி (Mr. Limaye) என்பவரை ஆசிரியராகக் கொண்ட பழைய மராத்திய தினப்பத்திரிகையான 'ஞான் பிரகாஷ்' (Dnyan Prakash); ஹீதவாதம் (Hitawad) எனப் படும் ஒரு வாராந்தரப் பத்திரிகையுமாம்.

பார்ஸிகள், சீக்கியர்கள் போன்ற இந்தியாவின் சிறுபான்மை வகுப்பினர்களுங்கூட, இச்சீர்திருத்த அலைகளால் அதிகமாக வசப்படுத்தப்பட்டார்கள். பொராம்ஜி எம். மலபாரி, என்ற பார்ஸி சீர்திருத்தவாதி, இந்தியப் பெண்கள், குழந்தைகள், கல்வி, பத்திரிக்கைத் தொழில் ஆகியவைகளுக்காகச் சிறந்த தொண்டுகளை ஆற்றியுள்ளார். இதற்காகப் பார்ஸி சமூகம், அவருக்கு மிகக் கடமைப்பட்டிருக்கிறது. பேராசிரியர் ஜாக்ஸன் (Professor Jackson) என்கிற பிரபல ஜொராஸ்திரியப் புலவரின் கீழ், அமெரிக்காவின் கொலம்பியாப் பல்கலைக் கழகத்தில் பயின்றவரான தலா (Dhala) என்கிற பெயருடைய ஒரு பார்ஸித் துறவியாரின் முயற்சியால் 1910ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட ஜொராஸ்திரியர்கள் மாநாடு, அச்சமூகத்தாருக்குச், சிறந்த சேவைகளை ஆற்றியுள்ளது. அமிர்தசரஸில் தலைமை அலுவலகத்தைப் பெற்று, நாட்டின் பல பாகங்களிலும் பல கிளைகளைக்கொண்டு, சமூகத்திலும் கலாசாரத்திலும் மிதமான சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும் எனக்கோரும் தலைமைக் கால்சாத் திவானும் (The Chief Khalsa Diwan), அமிர்தசரஸிலுள்ள கால்ஸாக் கல்லூரியும், சீக்கியர்கள் விழிப்பிற்குச் சிறந்த சான்றுகளாகும்.

அலிகார் இயக்க வரலாற்றைப் பற்றி முன்பே நாம் கூறினோம். பெரும்பாலும் இவ்வியக்கம் மூலமாகவே, இந்தியாவின் இஸ்லாமியர்கள் ஒரு புதிய வாழ்க்கையைத் தொடங்கினார்கள். இப் 'புதிய இஸ்லாமை' (New Islam) விளக்கிக் கூறியவர்களுள் மௌல்வி சிராக் ஆலி (Maulavi Chiragh Ali), ரைட் ஹானரபிள் சையது அமீர் ஆலி (Rt. Hon. Syed Amir Ali), சர் ஷேக் முகம்மது இக்பால் (Sir Shaikh Muhammad Iqbal), பேராசிரியர் எஸ். குதாபக்ஷ் (Prof. S. Khudabakhsh), பேராசிரியர் எ. எம். மௌல்வி (Prof. A. M. Maulvi) என்பவர்கள் மிக முக்கியமானவர்கள். பல அஞ்சுமான்கள் (Anjumans) அல்லது சங்கங்களும் ஆற்றலுள்ள ஒரு பத்திரிகையும் முஸ்லீம் சமுதாயத்திற்குச் சேவை செய்வதற்காக எழுந்தன. 'தீர்க்கதரிசியைப் பின்பற்றுகிறவர்களுக்கு உண்மையான—புனிதத் தன்மை கெடாத—இஸ்லாமிய நம்பிக்கையைக் கொடுப்பதற்காக'க் காதியனின் மிர்ஜா குலாம் அஹமது (Mirza Ghulam Ahmad of Qadian) என்பவரால் பஞ்சாபிலுள்ள குருதாஸ்பூர் (Gurudaspur) மாவட்டத்தில் ஆரம்பிக்கப்பட்ட அஹமதியர்களின் இயக்

கத்தைப் (The Ahmadiya Movement) பின்பற்றுகிறவர்கள் உலகத்தின் பல பாகங்களிலும் உள்ளார்கள்.

நாட்டில் ஏற்பட்ட பொதுவான விழிப்புக் காரணமாக, இந்திய சமுதாயத்தின் பல வகுப்பாரிடையிலும் சீர்திருத்த உணர்ச்சி பரவி, அவர்களுடைய நோக்கங்கள், பழக்கங்கள், வழக்கங்கள் ஆகியவற்றை மிக மாற்றியது. இந்தியச் சமுதாய வாழ்க்கையில், குறிப்பிடத்தக்க பெருமாறுதல், பெண்களின் நிலைமையிலேதான் ஏற்பட்டது. பெண்கள் பர்தாக்களைக் (Purdah) கைவிட்டுக் கல்வி கற்றலுடன், சமூக அரசியல் பிரச்சினைகளிலும் தீவிரப் பங்கு கொண்டு, குடிமக்கள் எனத் தங்களுக்குரிய உரிமைகளையும் கோரினார்கள். பெரும்பாலும் இரமாபாய் இரானடே (Ramabai Ranade) என்பவரால், இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்ட பெண்கள் இயக்கம், 'ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பு நம்ப முடியாதது என்று நினைக்கும் அளவுக்கு மிக்க வேகத்துடனும் விரிவாகவும் வளர்ந்தது.'

வயது வருவதற்கு முன்பே திருமணத்தை முடிக்கும் கொடுமையைச் சட்டத்தின் மூலம் நீக்குவதற்காக, அரசாங்கமும் சீர்திருத்தவாதிகளும் பல முயற்சிகளைச் செய்தார்கள். குழந்தைத் திருமணத் தடைச் சட்டம் (Infant Marriage Prevention Act), பரோடாவின் கெயிக்வார் (Gaikwar of Baroda) என்பவரால் 1901ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது. குறைந்த பட்சக் கலியாண வயதைப் பெண்டிர்க்குப் பன்னிரண்டாகவும் ஆடவர்களுக்குப் பதினாறாகவும், இச் சட்டம் விதித்தது. திருமணச் சீர்திருத்தங்களின் பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதற்காக, 1928ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில், சம்மதம் கொடுக்கும் வயதுக் கமிட்டி (The Age of Consent Committee) சிம்லாவில் கூடியது. இதன் அறிக்கை வெளிவந்த பிறகு, ராய் சாஹிப் ஹர்பிலாஸ் சாரதாவின் (Rai Sahib Harbilas Sarada) குழந்தைத் திருமணச் சட்டம் (Child Marriage Act) 1930ஆம் ஆண்டில் நிறைவேறியது. பழமைப் பற்றுடையவர்களிடமிருந்து இச்சட்டத்திற்கு மிகுந்த எதிர்ப்பு ஏற்பட்டு, நடைமுறையில் அதிகப் பயனைத் தரவில்லை. குறிப்பிடத்தக்க இந்தியச் சமுதாயச் சீர்திருத்தவாதிகள் பலரது ஆதரவைப் பெற்ற கைம்பெண்கள் மறுமண இயக்கமும் சில வகையில் முன்னேறியது; இன்றைக்கும் விதவைத் திருமணம் நடந்தாலும், பத்திரிகைகளின் கவனத்தை ஈர்க்கும் அளவுக்கு அவ்வளவு அருமையான

நிகழ்ச்சியாய் இருக்கிறது. மைசூரிலுள்ள மகாராணியின் பள்ளி, ஆரிய சமாஜம், பஞ்சாபின் புனித சங்கம், லக்னோவிலுள்ள இந்து விதவை சீர்திருத்தச் சங்கம் (Hindu Widow Reform League) ஆகியவைகளால், விதவைகளின் துன்பங்களைத் தீர்ப்பதற்கான சிறந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

பெண்களுங்கூடத் தங்களது துன்ப வாழ்க்கையை எல்லா வழிகளாலும் போக்குவதற்கு ஆவலுடன் பல முயற்சிகளைச் செய்தார்கள். பல கிளைகளைக் கொண்ட பெண்களின் இந்தியச் சங்கம், 1923ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது; சென்னையில், குழந்தைகள் இல்லம் (Children's Home) ஒன்றை அது ஆரம்பித்தது. 1924ஆம் ஆண்டில், குடும்பக்கட்டுப் பாட்டுச் சங்கம் ஒன்று, பம்பாயில் ஆரம்பிக்கப்பட்டது; 'நவயுகம்' (புதிய காலம்) என்கிற பத்திரிகை, இவ் வியக்கத்தின் குறிக்கோளுக்காகச் சேவை செய்ய முன் வந்தது. 1924ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் பெல்காமில் நடத்தப்பட்ட இந்தியத் தேசிய மாநாட்டிற்கு வந்திருந்த 6000 அங்கத்தினர்களுள் 1000 பேர் பெண்டிர். இந்தியத் தேசியக் காங்கிரஸின் ஆண்டுக் கூட்டத்தின் தலைவராய்ப் பிரபல இந்தியப் புலமைச் செல்வியாரான சரோஜினி நாயுடு (Nee Chatterjee) 1925ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் தேர்ந் தெடுக்கப்பட்டார். சென்னையில் தொடங்கப்பட்ட பெண் களின் இந்தியச் சங்கம், பெண்களின் முன்னேற்றத்திற்காகப் பல வழிகளிலும் சிறந்த சேவைகளைச் செய்தது. அரசாங்கத்தால் அமுல் செய்யப்பட்ட 'ஒழுக்கமற்ற வாணிகத் தடைச் சட்டத்'தில் (Immoral Traffic Act) உள்ள மீட்பு வேலைக்கான பகுதி சரிவர இயங்குவதற்காக மீட்பு நிலையம் (Rescue Home) ஒன்றை 1934ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 24ஆம் தேதி அது திறந்தது. 1914ஆம் ஆண்டிலிருந்து நடந்த அகில இந்திய முஸ்லீம் பெண்கள் மாநாட்டுக் கூட்டத்தைக் கவனிக்கும்போது, இச்சீர்திருத்த உணர்ச்சி முஸ்லீம் பெண்களிடையேயும் பரவியது என்பதைக் காணலாம். 1919ஆம் ஆண்டில் லாகூரில் நடத்தப்பட்ட அகில இந்திய முஸ்லீம் பெண்களின் மாநாட்டில், பலதார மணம் எதிர்க்கப்பட்டது. 1929ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட அகில இந்தியப் பெண்கள் மாநாட்டு ஆண்டுக் கூட்டத்தில் மேன்மை பொருந்திய பேராசிரியரான போபால் பீகம் தலைமை தாங்கினர்; அவர் நாட்டுப் பெண்களுக்காகப் பல சமூகக் கல்விச் சீர்திருத்தங்களைப் புகுத்தினர். கல்வி சமூகக் குறை

பாடுகளை நீக்குதல் சம்பந்தமான அதிக வசதிகளுக்காகப் பெண்களுக்குள்ள நியாயமான உரிமைகளை ஒவ்வோர் ஆண்டுக் கூட்டத்தின்போதும், அகில இந்தியப் பெண்கள் மாநாடு,1926ஆம் ஆண்டிலிருந்து வற்புறுத்தியது.

1917ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 18ஆம் தேதியன்று சென்னையில், மிஸ்டர் மான்டேகுவைச் சந்திப்பதற்காகப் புகழ் பெற்ற அகில இந்தியப் பெண்களின் பிரதிநிதிகள் வந்த நாளிலிருந்து, பெண்கள் வாக்குரிமை இயக்கம் அடைந்த வெற்றியைக்கொண்டு, பெண்களிடத்தில் வளர்ந்த அரசியல் உணர்ச்சியைப் பார்க்கலாம். இந்தியப் பெண்களுக்கு வாக்குரிமையை விரிவுபடுத்துவதற்கு ஆதரவாக, 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்க மசோதாவின் கூட்டுப் பொறுக்குக் கமிட்டியின் முன்பு, அன்னிபெஸன்டு அம்மையாரும், சரோஜினி நாயுடு அம்மையாரும், ஹரபாய் டாட்டா அம்மையாரும் (Mrs. Harabai Tata) சாட்சியம் அளித்தனர். இலண்டனில் நடந்த வட்டமேசை மாநாட்டில் இந்தியப் பெண்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம், பெண்களுக்கு இது வரையில் கொடுக்கப்படாத அரசியல் உரிமைகளை இந்தியப் பெண்களுக்குக் கொடுத்தது. கூட்டாட்சியின் மேல் சபையில் பிரிட்டிஷ், இந்தியாவிற்கு ஒதுக்கப்பட்ட 156 மொத்த ஸ்தானங்களுள் பெண்களுக்கு ஆறும், கூட்டாட்சிக் கீழ்ச் சபையில் உள்ள 250 ஸ்தானங்களில் பெண்களுக்கு ஒன்பதும் ஒதுக்கப்பட்டன. மாகாணச் சட்டசபை சம்பந்தப்பட்ட வரையில், பெண்களுக்குக் கீழ்க்காணுமாறு ஒதுக்கப்பட்டன:

சென்னையில் எட்டு, பம்பாயில் ஆறு, வங்காளத்தில் ஐந்து, ஐக்கிய மாகாணங்களில் ஆறு, பஞ்சாபில் நான்கு, பீஹாரில் நான்கு, மத்திய மாகாணங்களிலும் பீராரிலும் மூன்று, அஸ்ஸாமில் ஒன்று, ஒரிஸ்ஸாவில் இரண்டு, சிந்துவில் இரண்டு. வாக்குரிமைத் தகுதி சம்பந்தமாக அவர்களுக்கு இருந்த தகுதிகள் தாராளமாக்கப்பட்டன; இப்படிச் செய்யப் பட்டதால், 6 மில்லியன் பெண்கள் (1919ஆம் ஆண்டு சட்டப்படி 3,15,000 பெண்களுக்கே வாக்குரிமை கிடைத்தது) வாக்குரிமை பெற்றார்கள்; அதே சமயத்தில் 29 மில்லியன் ஆடவர் வாக்குரிமை பெற்றனர்.

பெண்களிடத்தில் கல்வி பரவியதுடன், ஏழைகளுக்கும் பிணியாளர்களுக்கும், துன்பத்தில் உழலுபவர்களுக்கும்

சேவை செய்வதற்காக, இந்தியப் பெண் ஊழியர்களுக்குப் பயிற்சியளிப்பதற்கான முயற்சிகளும் செய்யப்பட்டன. 1909ஆம் ஆண்டில், காலஞ்சென்ற இரமாபாய் ரானடே அம்மையார், காலஞ்சென்ற திரு. ஜி. கே. தேவதார் (Mr. G. K. Devadhar) போன்ற ஒரு சில பெருமாட்டிகளாலும் பண்பாளர்களாலும் ஏற்படுத்தப்பட்டு, நாட்டின் பல பாகங்களிலும் கிளைகளைப் பெற்ற பூனா சேவா சதனம், சிறந்த பணிகளை 'முக்கியமாக நர்சுகளுக்கும் மருத்துவச்சிகளுக்கும் பயிற்சி அளித்தல், தாய்மை, குழந்தைகள் நலம் ஆகியவைகளை மேம்படுத்துதல், விதவைகளுக்கு வேலையைப் பெற்றுத்தருதல்' போன்ற பணிகளை அது செய்துள்ளது. காலஞ்சென்ற மிஸ்டர். பி. எம். மலபாரியும், மிஸ்டர் தயாராம் கிதுமாலும் (Mr. Dayaram Gidumal), 1908ஆம் ஆண்டு, ஜுலை மாதத்தில் ஆரம்பித்த **'சேவாசதன சங்கம்'** எனப்படும் மற்றொரு நிறுவனமும், இதைப் போன்ற பணியைச் செய்தது. இந்நோக்கங்களுடனேயே பணிபுரிவதற்காக, பல முக்கிய நிறுவனங்களை வைசிராய்கள் பலரின் மனைவிமார் ஏற்படுத்தினர். 1885ஆம் ஆண்டில் டப்பரின் சீமாட்டியால் ஆரம்பிக்கப்பட்ட இந்தியப் பெண்களுக்கு மருத்துவ உதவியைப் பெண்கள் மூலமாகக் கொடுப்பதற்கான தேசிய சங்கம், பின்னர்ப் பன்னிரண்டு மாகாணக் கிளைகளையும், ஏராளமான ஸ்தலக் கமிட்டிகளையும் பெற்றிருந்தது; 'பெண்களை டாக்டர்களாகவும், மருத்துவமனை உதவியாள்களாகவும், நர்சுகளாகவும், மருத்துவச்சிகளாகவும் செய்வதற்கான பயிற்சி அளிப்பதும், மருந்துகொடுக்கும் இடங்கள், மருத்துவச்சாலைப் பிரிவுகள், மருத்துவமனைகள் ஆகியவைகளை ஏற்படுத்துவதுமே அதன் நோக்கம். அச்சங்கத்தின் ஒரு பாகமாக இந்தியாவிற்கான பெண்களின் மருத்துவப்பணி, 1914ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. மருத்துவச்சிகளுக்கும் பயிற்சி அளிப்பதற்காக, 1903ஆம் ஆண்டில், கர்சான் சீமாட்டியால் விக்டோரியா நினைவு உதவித் தொகை நிதி ஏற்படுத்தப்பட்டது. 1916ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 17ஆம் தேதி, ஹார்டிஞ்சு பிரபுவால் டில்லியில் திறக்கப்பட்ட 'ஹார்டிஞ்சு சீமாட்டி மருத்துவக் கல்லூரி' இந்தியப் பெண்களுக்கு மருத்துவ விஞ்ஞானத்தை அளிக்கிறது. இந்தியச் செஞ்சிலுவைச் சங்கத்துடன் சேர்ந்து பணியாற்றும் தாய்மை, சேய் நலப் பணி மன்றம் (Maternity and Child Welfare Bureau) ஊழியர்கள் வேலைக்காகப் பெண்களுக்குப் பயிற்சி அளித்துச் சிறந்த சேவையைச் செய்துள்ளது. கல்கத்தாவிலுள்ள **'சித்தரஞ்சன் சேவா சதன்'** எனப்படும் மருத்துவமனை,

இவ்வகையில் சிறந்த பணியை ஆற்றியுள்ளது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நிலையில் படிப்படியாக மாறுதல்களை உண்டாக்கியதுதான், புதிய காலச் சமுதாய வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கிய அமிசம்; இவர்கள், இந்தியப் பெண்களைப் போன்று, 'நீண்டகாலத் தூக்கத்திற்குப் பின்னர் விழித்து ஒரு புதிய உணர்ச்சி விழிப்புள்ள நிலைமையை' அடைந்திருக்கிறார்கள். கிறித்துவ சங்கங்கள் பல, இராம கிருஷ்ண மிஷன்கள், முக்கியமாக, ஆரியசமாஜம் போன்றவை, இவ்வழியில் சிறந்த மக்கட்பணிகளைச் செய்துள்ளன; ஆரிய சமாஜம், 'சுத்தி' (Suddhi) வழி மூலம், அதாவது மற்ற மதங்களுக்கு மாற்றப்பட்டவர்களை மறுபடியும் இந்து மதத்திற்கு மாற்றுதல் அல்லது இந்துக்களாக மாற்றுதல் போன்ற வழிகள் மூலம், சிறந்த சேவையைச் செய்துள்ளது. 'தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் சமுதாய ஆன்மிக நிலைகளை' மேம்படுத்தும் நோக்கத்துடன், 1906ஆம் ஆண்டில், பம்பாயில் தொடங்கப்பட்ட தாழ்த்தப்பட்ட வகுப்புகளின் சமயப்பரப்புச் சங்கம், தனது வேலையை உண்மையுடன் செய்தது. இந்தியாவிலுள்ள பில்களும் (Bhils) மற்றுமுள்ள ஆதி வாசிகளும் ஆகியவர்களின் நிலையை மேம்படுத்துவதற்காக, மிஸ்டர் அமிர்தலால் விட்டல் தாஸ் தக்கர் (Mr. Amirtlal Vithaldas Thakkar) என்பவரால், 1922ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட 'பில் சேவா மண்டல்' சிறந்த சேவைகளைச் செய்திருக்கிறது. இவ்விதச் சமூகப் பணியில், மகாத்துமா காந்தியால் ஆரம்பிக்கப்பட்ட **'ஹரிஜன்'** இயக்கத்தின் செல்வாக்கு மிகவும் சக்தி வாய்ந்தது. உண்மையில், இன்றைய இளைஞர்கள், சமூக சேவையின் தேவைகளை நன்கு அறிந்துகொண்டிருக்கிறார்கள். இதைச் சிறுவர்கள் சாரண சங்கங்கள், இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம், செயின்டு ஜான் ஆம்புலன்ஸ் சங்கங்கள், சேவா சமிதி சிறுவர்கள் சாரணச் சங்கங்கள், மிஸ்டர் குருசதே தத்தா ஐ. ஸி. எஸ். (Mr. Gurusaday Datta, I.C.S.) அவர்களின் தலைமையின் கீழ் ஆரம்பிக்கப்பட்ட **'விரதசாரி சங்கம்'** (Vratachari Association) ஆகியவைகளில் அங்கத்தினர்களாகச் சிறுவர்கள் சேர்ந்துள்ளதைக்கொண்டு தெரிந்துகொள்ளலாம்.

## 13. கல்வி, கலாசார மறுமலர்ச்சி முன்னேற்றம்

இந்நாட்டுக் கல்வியின் நோக்கங்கள், கல்வி நிறுவனங்கள், ஆகியவைகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்களைச் செய்யாமல், புதிய கால இந்தியாவில் பொதுவான விழிப்புணர்ச்சி ஏற்

பட்டிருக்க முடியாது. பத்தொன்பதாம் நூற்றுண்டில், இந்தியாவில் பலவித முயற்சிகள் செய்யப்பட்டதால், பல நன்மைகள் ஏற்பட்டன; அவற்றைவிட அதிகமாக இந் நூற்றுண்டில் ஏற்பட்டன. மற்றவைகளைப் போலவே, இதிலும், கர்சான் பிரபு வைசிராயாய் இருந்த காலம், வரலாற்றுத் திருப்பு மையமாய் உள்ளது. இந்தியப் பல்கலைக் கழகங் களின் நிலைமைகள் எதிர்கால வாய்ப்புகள் ஆகியவைகளை ஆராய்வதற்கும், அவற்றின் அமைப்பு, வேலைகள், படிப்பினைத் தரம் ஆகியவைகளை மேம்படுத்துவதற்கான நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்வதற்கும், ஒரு பல்கலைக் கமிஷனை, அவர் 1902ஆம் ஆண்டு, ஜனவரி மாதத்தில் ஏற் படுத்தினர். வைசிராய் நிருவாக சபையின் சட்ட அங்கத்தினரான மிஸ்டர் (பின்னர் சர்) தாமஸ் ராலி (Mr. afterwards Sir-Thomas Raleigh) என்பவர் அக் கமிஷனுக்குத் தலைமை தாங்கினர். அப்பொழுது நைஜாம் டொமினியன்களில் கல்வித்துறை இயக்குனராய் இருந்த மிஸ்டர் சையது ஹுசேன் பில்கிராமி, (Mr. Syed Husain Bilgrami), கல்கத்தா உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாயிருந்த மிஸ்டர் (பின்னர் சர்) குருதாஸ் பானர்ஜி, ஆகிய பிரபல இந்தியர் இருவரும், அதன் அங்கத்தினராய் இருந்தனர். 1904ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் அதன் அறிக்கை வெளி யிடப்பட்டது; 1904ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பல்கலைக் கழகங்களின் சட்டத்தில், அதன் சிபாரிசுகள் இடம் பெற்றன. செனேட்டர்களின் எண்ணிக்கையும், சிண்டிகேட்டின் அங்கத் தினர்கள் எண்ணிகையும் வரையறை செய்தும் செனேட்டில் நியமிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தியும் கல்வி நிறுவனங்களின் மீது அரசாங்கக் கட்டுப்பாட்டை அதிகப்படுத்தும் நோக்கத்துடனே தான் இச்சட்டம் கொண்டு வரப்பட்டது. ஒவ்வொரு பல்கலைக் கழகத்திற்கும், பிரதேச எல்லையை அது வகுத்தது; புதிய கல்லூரிகளை இணைப்ப தற்காக மிகக் கடுமையான நிபந்தனைகளை அது விதித்தது; பல்கலைக் கழகம் ஒழுங்கான முறை மூலம் கல்லூரிகளைக் கண்காணிப்புச் செய்வதற்கான .வழிகளை அது வகுத்தது. இப்படிப்பட்ட அதிகாரவர்க்கத்தில் விரிவான திட்டத்திற்குப் பல இடங்களிலிருந்தும் எதிர்ப்புக் கிளம்பியது. ஆனல், அதே சமயத்தில் மாணவர்களுக்குக் கல்வி புகட்டுதல், பேராசிரியர் களையும் விரிவுரையாளர்களையும் நியமித்தல், பரிசோதனைச் சாலைகள், அரும்பொருட்காட்சிச்சாலை (Museum) ஆகியவை களுக்குத் தேவையான சாதனங்களை அமைத்தல் போன்ற

பல்கலைக் கழகத்தின் மேன்மையான பணிகளையும் இச்சட்டம் அங்கீகரித்தது. இதனுடைய தாராளமான விதிகளை அப்பொழுது கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராய் இருந்த காலஞ்சென்ற சர் அஸுட்டோஷ் முக்கர்ஜி (Sir. Asutosh Mookerjee) எதிர்த்தாலும், கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் கல்வி புகட்டும் பகுதியைத் திறப்பதற்கு அவ் விதிகளை அவர் உபயோகித்துக் கொண்டார்; வங்காளத்தில் மாத்திரமன்றி, நாட்டின் பல பாகங்களிலும் உயர்தரக் கல்வியைப் பரப்புவதற்காக, இப்பகுதி சிறந்த சேவையைச் செய்துள்ளது.

1910ஆம் ஆண்டில், இந்திய அரசாங்கத்தில் ஒரு கல்வி இலாக்கா ஏற்படுத்தப்பட்டது. அதற்கென ஒரு தனியான அலுவலகமும், அதற்குப் பிரதிநிதியாக, நிருவாகசபையில் அங்கத்தினர் ஒருவரும் ஏற்பட்டனர். சர் ஹார்கோர்ட்டு பட்லர் (Sir Harcourt Butler) என்பவர் அதன் முதல் அங்கத்தினர். இந்திய அரசாங்கம் 1913ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 21ஆம் தேதி இயற்றிய தீர்மானம், கல்வியின் முன்னேற்றத்திற்கான சில நடவடிக்கைகளை எடுத்துக்கூறி, கல்வி கற்பிக்கும் பல்கலைக் கழகங்களையும், மாணவர்கள் வசிக்கத்தக்க பல்கலைக் கழகங்களையும் ஏற் படுத்த வேண்டுமென்று சிபாரிசு செய்தது. 1914-18ஆம் ஆண்டுகளில் நடந்த போர் காரணத்தாலும், மற்றக் காரணங் களாலும், அதில் கூறப்பட்ட கல்வி அபிவிருத்திகளைப் பெரும் பான்மையாக நிறைவேற்ற முடியவில்லை. பாட்னு, லக்னே, அலிகார், வாரணசி, ஆகிரா, டில்லி, நாகப்பூர், வால்டேர், டாக்கா, மைசூர், ஹைதராபாது, சிதம்பரம், திருவனந்தபுரம், இரங்கூன் போன்ற பலவிடங்களில், நாம் இப்பொழுது ஆராயும் காலத்தில் புதிய பல்கலைக் கழகங்கள் ஏற்படுவதற்கு, வகுப்பு உணர்ச்சியும் மாகாணப் பற்றும் பெரிதும் காரணமாய் இருந்தன. சர். ஆர். ஜி. பண்டார்காரை (Sir R. G. Bhandarkar) முதல்வேந்தராகக் கொண்டு, தொண்டோ கேசவ கார்வே (Dhondo Keshav Karve) என்பவரால், 1916ஆம் ஆண்டில், பூனைவில், இந்தியப் பெண்களின் பல்கலைக் கழகம் ஆரம்பிக்கப்பட்டது. போல்பூரைச் (Bolpur) சேர்ந்த சாந்தி நிகேதனில், இரவீந்திரநாத தாகூரால் ஆரம்பிக்கப்பட்ட **'விஸ்வ பாரதி'** (1921) தனிச்சிறப்பு வாய்ந்த கல்வி நிறுவன மாகும்; அதன் பரந்த நோக்கத்தால், அது புகழ் பெற்ற நிறுவனமாகும். கிழக்கும் மேற்கும், இந்தியாவின் பழமையும்

புதுமையும் சிறப்பாகக் கலந்திருப்பதை அவ்விடத்திற் காண்கிறோம்.

கல்வியின் முன்னேற்றத்தைக் குறித்துப் பற்பல கமிஷன்களும், கமிட்டிகளும், தொடர்ந்து ஆராய்ந்து வந்தன. இவற்றின் சில சிபாரிசுகளை அரசாங்கம் நடைமுறைக்குக் கொணர்ந்தது. இவை பின் வருவன: சர் அஷுட்டோஷ் முக்கர்ஜியை முக்கிய அங்கத்தினராகவும், டாக்டர் (பின்னர் சர்) மைக்கேல் சேட்லரை (Dr. afterwards Sir Michael Sadler) தலைவராகவும் கொண்ட கல்கத்தாப் பல்கலைக் கழக கமிஷன்; இதன் அறிக்கை, 1919ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தில் வெளியிடப்பட்டது. சர் பிலிப் ஹார்டோகு (Sir Philip Hartog) என்பவரின் தலைமையில் நியமிக்கப்பட்ட இந்தியச் சட்ட பூர்வக் கமிஷனின் துணைக்கமிட்டி; இது 1929ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்டது. ஆக்ஸ்போர்டிலுள்ள பேலியல் கல்லூரியின் தலைவரான, டாக்டர் எ. டி. லிண்ட்ஸே (Dr. A. D. Lindsay) என்பவரைத் தலைவராகக்கொண்ட லிண்ட்ஸே கமிஷன்; இது 1929ஆம் ஆண்டில், அகில உலக மிஷனரி சபையால் நியமிக்கப்பட்டது. இக்கமிஷன், 1930–31 ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு விஜயம் செய்து, 1931ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்டது. 1934ஆம் ஆண்டில் ஐக்கிய மாகாணங்களின் அரசாங்கத்தால் ரைட் ஹானரபிள் சர் தேஜ் பஹதூர் சாப்ரு (Rt. Hon. Sir Tej Bahadur Sapru) தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. இதன் தலைவரின் பெயரால் 'சாப்ரு கமிட்டி' எனப் பொது மக்களால் வழங்கப்பட்ட வேலையின்மைக் கமிட்டி, ஐக்கிய மாகாணத்தில் ஏற்பட்டது. இதன் அறிக்கை 1936ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

கல்வியின் முன்னேற்றத்தைப் பற்றிப் பொதுவாகவும், தேவையானால், மாற்றங்களைப் பற்றித் தீர்மானிப்பதற்கும், மூன்று முக்கிய நிறுவனங்கள் உள்ளன. இந்திய அரசாங்கத்தின் கல்விக்கமிஷனர் தலைமையில் முதன்முதலாக 1920ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட மத்தியக் கல்வி ஆலோசனை சபை (Central Advisory Board of Education), இன்ச்கேப் பிரபுவின் (Lord Inchcape) தலைமையில் ஏற்பட்ட இந்திய ஆட்குறைப்புக் கமிட்டியின் சிபாரிசின்பேரில், ஒரு சிக்கன நடவடிக்கையாக, 1923ஆம் ஆண்டில் நீக்கப்பட்டு, 1935ஆம் ஆண்டில் மறுபடியும் உண்டாக்கப்பட்டது. அதிலிருந்து இக்காலக் கல்வி முறையின் மேல் நிலை,

இரண்டாம் நிலை, ஆரம்ப நிலை ஆகிய எல்லாக் கட்டங்களிலும் உள்ள கல்வி சம்பந்தப்பட்ட அல்லது தொழில் சம்பந்தப்பட்ட எல்லா வகைகளையும் சீர்திருத்தம் செய்வதுபற்றிய பல சிபாரிசுகளை அது செய்தது. 1924ஆம் ஆண்டு, மே மாதத்தில் இந்திய அரசாங்கத்தால் சிம்லாவில் கூட்டப்பட்ட பல்கலைக் கழகங்களின் மாநாட்டுச் சிபாரிசுகளின்படி, 1925ஆம் ஆண்டில் இந்தியப் பல்கலைக் கழகங்களுக்கிடையே ஒரு போர்டு ஏற்பட்டது; பல்கலைக் கழகங்களின் இன்றைய பிரச்சினைகளைப் பற்றிய தகவல்களைச் சேகரித்து, அதைப் பற்றி ஆராயும் பயனுள்ள சேவையை அதிலிருந்து அது செய்துவருகிறது. 1923ஆம் ஆண்டில் சிக்கன நடவடிக்கையாக நீக்கப்பட்ட இந்தியாவின் கல்விச் செயலகம், 'பற்பல மாகாணங்களிலும் உள்ள கல்விப் பிரச்சினைகள் சம்பந்தப் பட்ட இலக்கியங்களைச் சேகரித்துப் பரவச் செய்யும் முக்கிய வேலைக்காக' மறுபடியும் இந்திய அரசாங்கத்தால் 1937ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது.

1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களும், அவற்றுடன் சேர்க்கப்பட்ட 1935ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களும், மாகாணங்களிலுள்ள கல்வியைக் கல்வி மந்திரியின் கட்டுப்பாட்டில் வைத்தன. இரண்டாவதுநிலைப்பள்ளியிலும் ஆரம்பநிலைப்பள்ளியிலும் பயிலும் மாணவர்களின் எண்ணிக்கை, ஐயமற அதிகரித்தது. 1935-1936ஆம் ஆண்டில், பள்ளிக்குச் செல்லும் வயதுடைய 51 சதவிகிதம் உள்ள ஆண் பிள்ளைகளும், 17 சதவிகிதம் உள்ள பெண் பிள்ளைகளும், பள்ளியில் பயின்றூர்கள். அதே சமயத்தில், இரண்டாம் நிலை, முதல் நிலைக் கல்வியில் மிகுந்த 'தேக்கமும்', 'பாழாக்குதலும்' உண்டு என்பதும் உண்மை தான். மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்தியாவின் கல்வி நிலை திருப்திகரமாய் இல்லை. இன்றைய இந்தியாவின் முக்கியப் பிரச்சினைகளுள் ஒன்று கட்டாய, சம்பளமற்ற, ஆரம்பக்கல்வியைப் புகுத்துவதுதான். 1911ஆம் ஆண்டிலேயே, இக்குறிக்கோளுக்காக இம்பீரியல் சட்ட சபையில் மேன்மை தங்கிய மிஸ்டர் ஜி. கே. கோக்கலே ஒரு மசோதாவைக் கொணர்ந்தார். பிற்காலத்தில் இப்பிரச்சினை மிகு முக்கியத்துவம் அடைந்தது. இந்நடவடிக்கை எடுப்பதன் அவசியத்தைக் குறித்து, எல்லாக் கட்சியையும் சேர்ந்த இந்தியத் தலைவர்களும், அடிக்கடி அரசாங்கத்தை வற்புறுத்தினுர்கள். படிப்பின்மையைப் போக்குவதற்காகச் சில முயற்சிகள் செய்யப்பட்டன. இதன்படி, ஆரம்பக்கல்விச் சட்டங்களை எட்டு மாகாணங்கள் நிறைவேற்றின. 'ஸ்தல

ஸ்தாபன ஆட்சி விரும்பினால், கட்டாயக் கல்வியைப் புகுத்துவதற்கான அதிகாரத்தை' அச்சட்டம் அவற்றுக்குக் கொடுத்தது. முதியோர்கள் எழுதவும் படிக்கவும் தெரிந்து கொள்வதற்காக, முதியோர் கல்வி இயக்கத்தை ஒரு மாகாணத்தின் கல்வி மந்திரியார் ஆரம்பித்து வைத்தார். இரண்டாம் நிலைக் கல்வியில், தொழிற் கல்வியையும் கற்றுக் கொடுப்பதற்கான திட்டங்களும் ஆலோசிக்கப்பட்டன.

தேசிய விழிப்புக்காரணமாகக் கல்வி நிலையங்களில் போதனா மொழியின் பிரச்சினை மிக்க கவனத்துடன் ஆராயப் பட்டது. அப்பொழுது கல்வி அங்கத்தினராய் இருந்த சர் சங்கரன் நாயர் தலைமையில், 1917ஆம் ஆண்டில் சிம்லாவில் கூடிய பிரதிநிதிகள் மாநாட்டில் அயல் நாட்டு மொழியாய் உள்ள ஆங்கிலத்தின் நிலைமையைப் பற்றியும், அது பொதுப் பள்ளிகளில் போதனா மொழியாக இருப்பதைப் பற்றியும் விவாதிக்கப்பட்டது. அதனுடைய முடிவுகள் தீர்மான மானவை அல்ல. ஆனால், இக்கால மாகாண மொழிகளைப் பள்ளியிலும், சில இடங்களில் கல்லூரிகளிலும், போதனா மொழியாகச் செய்வது படிப்படியாய் அதிகரித்தது. இந்தியா முழுவதற்கும் ஒரு பொது லிபியை ஏற்படுத்துவதற்கும், கல்வி அறிஞர் சிலர் நினைத்தனர். இத்துறையில் முன்னோடி யாய் விளங்கக்கூடிய வேலையை மிஸ்டர் எ. லத்தீப், ஐ. ஸி. எஸ் (Mr. A. Latiff, I. C. S.) என்பவர், உருது லிபியை ரோமன் எழுத்துகளால் எழுதுவதன் மூலம் செய்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெண் கல்விக்காகப் பல முயற்சிகள் தொடங்கப்பட்டாலும், இந்த நூற்றாண்டிலேதான் அது அதிகமாக முன்னேறியது என்பதைக்காண வியப் பாகவே இருக்கும்; இவை அரசாங்கத்தின் முயற்சிகளாலும், பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், இந்திய ஊழியர்கள் சங்கம் போன்ற பல சீர்திருத்த சமாஜங்களாலும் சங்கங்களாலுமே ஏற்பட்டன. பெண் பிள்ளைகளுக்காக மட்டும் சில கல்லூரிகள் ஏற்பட்டன. சில மாகாணங்களில், ஆணும் பெண்ணும் சேர்ந்து படிக்கும் முறை முன்னேற்றம் அடைந்தது; உதாரண மாக, சென்னையிலும் அஸ்ஸாமிலும் பெண் பிள்ளைகளுக்கென நிறுவப்பட்ட நிலையங்களில் படிப்பதைவிட அதிகமான பெண்கள் ஆண்பிள்ளைகள் நிலையங்களில் படித்தார்கள். ஆண்பிள்ளைகளும், பெண்பிள்ளைகளும் சேர்ந்து படிக்கும் முறையே ஒரு மென்மையான பிரச்சினை; அதை மிக்க திறமை யுடன் கையாள வேண்டும். பேராசிரியர் கார்வே என்பவரால்

1916ஆம் ஆண்டில் பூனாவில் ஆரம்பிக்கப்பட்ட இந்தியப் பெண்கள் பல்கலைக் கழகம், 1936-ல் பம்பாய்க்கு மாற்றப் பட்டு, சிறந்த பணிகளைப் புரிந்துள்ளது. நெடுங்காலமாகவே பெண்கள் கல்விக்குத் தடையாய் இருந்த வழக்கங்களும் துவேஷமும் வேகமாக மறைந்து வருகின்றன; இதற்கு ஆதரவாக ஆற்றலுள்ள பொது மக்கள் கருத்தும் உருவாகி உள்ளது. இப்படி இருந்தாலும், பெண்களுக்குத் தேவையான கல்வி முறையைப்பற்றிக் கல்வி அறிஞர்களிடத்திலும், கருத்து வேறுபாடுகள் உள்ளன. கல்விச் சீர்திருத்தங்கள் பற்றிய மிக்க பயனுள்ள பணியை அகில இந்தியப் பெண்கள் மாநாடு செய்துள்ளது. இச்சங்கம், ஆண்டுக்கொரு முறை மாநாடு நடத்தியும், இதில் இணைக்கப்பட்ட மாநாடுகளை நாட்டின் பல பாகங்களில் நடத்தியும் வருகிறது. இம்மாநாட்டின் விளைவாக அகில இந்தியப் பெண்கள் கல்வி நிதிச் சங்கம் ஒன்று ஏற்பட்டது. மத்திய ஆசிரியர்கள் பயிற்சிக் கல்லூரியை ஏற்படுத்துவதற்கான சாத்தியக் கூறுகளை ஆராய்வதற்காக, ஒரு பிரத்தியேகக் கமிட்டியை 1930ஆம் ஆண்டில் இச்சங்கம் ஏற்படுத்தியது. 'உள நூலுக் குரிய ஆராய்ச்சியினால் இப்பொழுதுள்ள மாகாணக் கல்லூரி களின் வேலையை ஒன்று சேர்த்து முற்றும் புதிய வழியில்' ஒரு புதிய கல்லூரியை ஏற்படுத்துவதற்கான அக்கமிட்டியின் சிபாரிசுகள், அச்சங்கத்தால் ஏற்கப்பட்டு, அதனால் புது டில்லியில் இர்வின் சீமாட்டி கல்லூரி அமைக்கப்பட்டது. உயர்நிலைப்பள்ளியில், மனையியல் ஆசிரியராய்ப் பணியாற்ற விரும்புகிறவர்களுக்கு மூன்று ஆண்டு ஆசிரியப் பயிற்சியை இக்கல்லூரி அளிக்கிறது.

வெளி உலகத்துடன் உள்ள தொடர்பின் வளர்ச்சி, பழைய கலாசாரச் செல்வங்களை மறுபடியும் கொண்டு வருவதற்கான ஆவலுள்ள மிக விருப்பம், பொதுவாழ்வு நலம், பொதுத் துயரம் ஆகிய பிரச்சினைகளைப் பற்றிய சிந்தனை, போன்ற பல காரணங்களால் இந்தியர்களின் எண்ணம் அதிகமாக இயக்கப்பட்டு, அதனால் ஒரு விரிவான கலாசார மறுமலர்ச்சி உண்டாகியது; புதிய கால இலக்கியங்களிலும் கலைகளிலும் இவற்றின் செல்வாக்கைக் காணலாம். உண்மையில், வங்காளி, ஒரியா, இந்தி, உருது, மராத்தி போன்ற இந்தியப் பிரதேச இலக்கியங்களுக்கு, இது ஒரு புதிய காலம் எனக் கருதலாம்; ஒவ்வொன்றிலும் கீழ் நாட்டுக் கொள்கைகளும், மேல்நாட்டுக்கொள்கைகளும் இணக்கமாக ஒன்று சேர்ந்திருப்பதைக் காணலாம். கதை,

நாடகம், கவிதை, கட்டுரை ஆகிய இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிலும், தலைசிறந்த படைப்புகள் சென்ற நூறு ஆண்டுகளாக உண்டாக்கப்பட்டன. புதியகால வங்காள இலக்கியத்தில், ஈஸ்வர குப்தா, மதுசூதன தத்தர் (Madusudan Dutt), பங்கிம் சந்திர சட்டர்ஜி, இரவீந்திரநாத தாகூர் போன்றவர்களின் செல்வாக்கும் சேவையும் இணையற்றவை. வங்காள இலக்கியத்திற்கு ஸ்ரீயுத சரத் சந்திர சட்டர்ஜியின் (Shreejut Sarat Chandra Chatterjee) சேவையும் பெரிதும் குறிப்பிடத்தக்கது. அவருடைய நவீனங்கள் புதிய கால வங்காளச் சமூகத்தையும், அதன் நிறைவுகளையும் குறைவுகளையும், துன்பங்களையும் இன்பங்களையும்—நமக்கு விருவிருப்பான முறையில் காட்டுகிறது; இவ்விதம், நமது சமூக வாழ்க்கையைச் சீர்திருத்த விரும்புகிறவர்களின் சிந்தனைக்கு மிக்க வேலைகளைக் கொடுக்கிறது. மதுசூதன் தத்தர், தீனபந்து மித்திரா, கிரீஷ் சந்திர கோஷ், டி. எல். ராய், அமிர்தலால் பாஸு போன்றவர்களின் எழுத்தோவியங்களால், நாடகம் சிறப்புப் பெற்றது. தலை சிறந்த வாழ்க்கை வரலாறுகளும், சுய சரிதைகளும் இக்காலத்தில் உண்டாயின; வங்காள இலக்கிய வரலாற்றைத் திருத்தி அமைப்பதற்கான சிறந்த முயற்சிகளும் செய்யப்பட்டன; இதற்குக் காலஞ்சென்ற சர் அஷுடோஷ் முக்கர்ஜியே சிறந்த ஆதரவு அளித்தார். மறைந்த வங்காள இலக்கியச் செல்வங்களை மறுபடியும் கொண்டுவருவதற்குரிய சிறந்த சேவையை '**வங்கிய சாகித்திய பரீஷத்**' (Vangiya Sahitya Parishad) செய்து வருகிறது. ஆங்கிலப் பாடல்களை எழுதுவதிலும் இந்தியர் சிலர் சிறந்து விளங்குகின்றனர். இத்துறையில், தோரு தத்தர் (Toru Dutta), ஸ்ரீமதி சரோஜினி நாயுடு போன்றவர்களின் பெயர்களைச் சிறப்பாகக் குறிப்பிடுதல் வேண்டும்.

உருது, இந்தி, ஒரியா இலக்கியங்களும், முன்னேற்றம் அடைவதற்கான அறிகுறிகளைப் புலப்படுத்துகின்றன. பஞ்சாப்பைச் சேர்ந்த சர் முகம்மது இஃபால் என்பவருடைய எழுத்தோவியங்கள், உருது இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய காலத்தையே உண்டாக்கின. இந்தி இலக்கியத்தை மேம்படச் செய்வதற்கான பெரிய இயக்கம் ஒன்று இப்பொழுது நடந்து வருகிறது.

இந்தியக் கலாசார மறுமலர்ச்சியில் குறிப்பிடத்தக்க ஒன்று ஆராய்ச்சி மனப்பான்மைதான்; இந்நாட்டின் பழைய

வரலாற்றையும் வரலாற்றுச் சின்னங்களையும் கற்று உணர்வதில் இவ்வாராய்ச்சி மனப்பான்மையைக் காண்கின்றோம். வங்காளத்தின் ஆசியா சங்கம் 1784ஆம் ஆண்டில் ஏற்பட்டதிலிருந்து, ஏராளமான ஐரோப்பிய இந்திய அறிஞர்கள் இக் கல்விப் பிரிவைப்பற்றி ஆவலுடன் ஆராய்ந்து வருகிறார்கள்; அவர்களது உழைப்பு, வியத்தகு பயன்களை அளித்துள்ளது. வரலாற்றுச் சின்னங்களையும் எஞ்சியிருப்பவைகளையும் பாதுகாக்கவும், பழைய வரலாறு சம்பந்தமான இடங்களை அகழ்ந்தெடுப்பதன் மீதும், பழங்கலைப் பொருள்களை விற்பனை செய்வதன் மீதும் அரசாங்கக் கட்டுப்பாட்டை உண்டாக்கவும், கர்சான் பிரபு வைசிராயாய் இருந்த காலத்தில் இயற்றப்பட்ட தொன்மையான சின்னங்களைப் பாதுகாக்கும் சட்டம், ஆராய்ச்சி செய்வதற்கு மிகுந்த ஊக்கத்தை அளித்தது. இந்திய அரசாங்கத்தின் பழம்பொருள் ஆய்வு இலாக்காவின் தலைமையின் கீழும், வேறு பல நிறுவனங்களின் கீழும், பயனுள்ள விஞ்ஞானக் கண்டு பிடிப்புகள் வரலாற்று இடங்களில் செய்யப்பட்டுள்ளன; இவை இந்தியாவின் ஆரம்பக் கால வரலாற்றைப்பற்றிய பல பழைய நோக்கங்களைப் பெரிய அளவில் திருத்தின. சிந்துவிலுள்ள மொகஞ்சதாரோ, பஞ்சாபிலுள்ள ஹரப்பா, தக்ஷசீலம், பீஹாரிலுள்ள பாடலி புத்திரம், நளந்தா, வங்காளத்திலுள்ள பஹர்பூர், மஹாஸ்தான், பாங்காட், போபால் சமஸ்தானத்திலுள்ள சாஞ்சி, வாரணாசிக்கருகிலுள்ள சாரநாத்து, சென்னை மாகாணத்திலுள்ள நாகார்ஜுன கொண்டாப் போன்றவைகளை முக்கியமாகக் குறிப்பிடுதல் வேண்டும். ஆராய்ச்சிக்கும் கல்விக்கும் ஏற்ற இடங்களாக, அரும்பொருட்காட்சிச் சாலைகளைப் பல இடங்களிலும் ஏற்படுத்தி அபிவிருத்தி செய்வதற்காக அதிக கவனம் செலுத்தப்பட்டது. மேலும், அதிகாரிகள், அதிகாரிகள் அல்லாதவர்கள் ஆகியவர்களின் முயற்சிகளின் பலனாக, வெளியே கொண்டுவரப்பட்ட பல கல்வெட்டுகள் சம்பந்தமான பொருள்கள், இந்தியாவின் பல வமிசங்களின் காலத்தையும் வரலாற்றையும் பற்றிய பயனுள்ள குறிப்புகளை அளித்தன. சில இந்தியப் பல்கலைக் கழகங்கள்—குறிப்பாக, கல்கத்தா, டாக்கா, வாரணாசி, சென்னைப் பல்கலைக் கழகங்கள்—அகில இந்தியக் கீழ்த்திசை மாநாடு, இந்திய வரலாற்றுக் காங்கிரஸ், பந்தார்கார் கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனம், பூனாவிலுள்ள பாரத இதிகாச சமோத்தக மண்டலம், இந்திய வரலாற்றுப் பத்திரங்கள் கமிஷன், வங்கிய சாஹித்திய பரீஷத் போன்ற நிறுவனங்களும், இந்திய வரலாற்றையும் பழம்பொருட்

சின்னங்களையும் விஞ்ஞான முறையில் ஆராய்வதற்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுத்து வருகின்றன.

விஞ்ஞானம், தத்துவம், அரசியல் ஆகியவைகளைக் கற்பதிலும், இந்தியர்கள் இந்நூற்றுண்டில் சிறந்து விளங்கினார்கள். சர் ஜே. ஸி. போஸ், சர் பி. ஸி. ரே, சர் சி. வி. இராமன், டாக்டர் மேகநாத ஸாகா போன்றவர்களின் அரிய கண்டுபிடிப்புகளும், சோட்டா நாகப்பூரின்



விக்டோரியா மெமோரியல், கல்கத்தா

ராவ்பஹதூர் எஸ். சி. ராய் என்பவருடைய கடினமான-ஆனால் பயனுள்ள-மானிடவர்க்கத்தின் பழங்கால வரலாறு சம்பந்தமான கல்வியும், அவர்களுக்கு உலகப்புகழை அளித்துள்ளன. இந்திய விலங்கியல் சம்பந்தமானவைகளை மதிப்பிடும் நிறுவனம், இந்தியத் தாவர இயல் சம்பந்தமானவைகளை மதிப்பிடும் நிறுவனம், இந்தியப் புவி அமைப்பு இயல் சம்பந்தமான நிறுவனம், ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி மாதத்தில் கூடும் இந்திய விஞ்ஞானக் காங்கிரஸ் போன்ற விஞ்ஞான மதிப்பீடுகளால், இந்தியாவில் விஞ்ஞான ஆராய்ச்சி சிறந்த முறையில் ஊக்கப்படுத்தப்படுகிறது. சர் பி. என். சீல் (Sir B. N. Seel), சர் எஸ். இராதாகிருஷ்ணன் போன்ற ஆசிரியர்கள் ஊட்டிய உணர்ச்சியால், தத்துவக் கல்வியும் பயிலப்பட்டு வருகிறது. அரசியற்கலையைக் கற்றுக்

கொடுப்பதில், இந்தியப் பல்கலைக் கழகங்கள் அதிகக் கவனம் எடுத்துக்கொண்டிருக்கின்றன ; பொதுவாக 'அரசியல், சமூக விஞ்ஞானங்களையும், குறிப்பாக இந்திய அரசியல், சமூகப் பிரச்சினைகளையும் எல்லாவிதத்திலும் முறையாகப் பயிலுவதை அபிவிருத்தி செய்வதற்காக' 1917ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 30ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்ட அரசியல், சமூக விஞ்ஞானங்களைப் பயிலுவதற்கான இந்திய நிறுவனம், சிறந்த பணிகளைப் புரிந்துள்ளது.

ஓவியம், இசை போன்ற அருங்கலைகளை ரசிப்பதற்கும் அபிவிருத்தி செய்வதற்கும் மறுமலர்ச்சி உணர்ச்சி காரணமாய் இருந்தது. டாக்டர் அபீந்திரநாத தாகூர் என்பவர், ஓவியர் பலருக்குக் கற்பித்து, உணர்ச்சியை ஊட்டினார்; வங்காளத்தின் நந்தலால் போஸ், பஞ்சாபின் அப்துர் ரஹ்மான் சகாடாய், உகில் குடும்பத்தைச் சேர்ந்த அங்கத்தினர் சிலர், இக் காலத்தில் வாழ்ந்த பிரபல ஓவியர்கள். மேல் நாடுகளின் முறையையும் இந்தியாவில் அப்பொழுதிருந்த நிலைமைகளையும் உபயோகப்படுத்தி, ஒரு புதிய பாணியை ஏற்படுத்தப் பம்பாய் ஓவியப் பள்ளி முயன்றது. கல்கத்தா அரசாங்க ஓவியப் பள்ளியின் முதல்வராய்ச் சில ஆண்டுகள் வரையிலும் இருந்து, 1907ஆம் ஆண்டில் இந்தியாவை விட்டுச்சென்ற மிஸ்டர் இ. பி. ஹேவெல் (Mr. E. B. Havell) என்பவருக்கும், இந்தியக் கலையின் மேன்மையையும் புகழையும் பரப்புவதற்குப் பெரும்பணிகளைப் புரிந்த டாக்டர் ஏ. கே. குமாரசாமிக்கும், இந்தியாவில் எழுந்த அருங்கலை மறுமலர்ச்சி மிகக் கடமைப்பட்டிருக்கிறது. ஓவியத்தைப் போலவே, சிற்பக்கலையும் மறுமலர்ச்சியடைந்தது. இக்கால இந்தியச் சிற்பக்கலையை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்: (i) இந்திய சமஸ்தானங்களில்—குறிப்பாக ராஜபுதனத்தில்—காணப்படும் இந்நாடு சம்பந்தப்பட்ட இந்தியத் 'தலைமையான அமைப்பு', (ii) மேற்கு முறைகளைப் பின்பற்றி அமைக்கப்படுவது. அண்மை ஆண்டுகளில் பழைய கட்டடப் பாணிகளை மறுபடியும் உண்டாக்குவதற்கான முயற்சிகள் நடைபெற்றன. இசையைப் பேணி வளர்ப்பதற்கான புதிய உணர்ச்சி நம் நாட்டில் காணப்படுகிறது. இசையை இரசிக்கச் செய்வதற்கான முயற்சிகளைப் பெரும்பாலும் தாகூர் குடும்பத்தினர்கள் செய்து வருகின்றார்கள் ; கல்கத்தா, பம்பாய், பூனா, பரோடாப் போன்ற பல இடங்களில், வாய்ப்பாட்டுகளாலும், இசைக்கருவிகளாலும், இந்திய இசையை விஞ்ஞான முறையில் பயில்வதற்கும், இசைப்பதற்கும் பல புதிய

பள்ளிகள் திறக்கப்பட்டுள்ளன. இந்நாட்டு நடனங்களையும் நாடகங்களையும் மறுபடியும் புதுப்பிக்க உண்மையான முயற்சிகள் செய்யப்படுகின்றன. அஸ்ஸாமின் '**பிராசீன் காமரூபி நிரித்ய சங்கா**' (Prachin Kamarupi Nritya Sangha) என்னும் சங்கம், அம்மாகாணத்திற்கே உரிய நடனங்களைச் சிறுமிகளுக்கும் சிறுவர்களுக்கும் போதிக்க முயல்கிறது. கதக்களியை மறுபடியும் புதுப்பிக்கவும் மேம்படுத்தவும் தென்னிந்தியாவில் முயற்சிகள் செய்யப்படுகின்றன. இரவீந்திரநாத தாகூரின் விஸ்வ பாரதியும், திருவாங்கூர்ப் பல்கலைக் கழகமும், கேரளத்தின் **கலா மண்டலமும்** இத் துறையில் சிறந்த பணியை ஆற்றி வருகின்றன.

# 8. இந்தியா—இரண்டாவது உலகப்போருக்கு முன்னும் பின்னும்

## 1. போருக்கு இந்தியாவின் உதவிகள்

1939ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 2ஆம் தேதி ஜெர்மனியின்மீது பிரிட்டன் போர் தொடுத்தபோது, அப்போர் உலகப் போராய் மாறியதால், அதில் இந்தியாவும் ஈடுபட நேரிட்டது. பிரிட்டன், இந்தியாவிலிருந்த ஏராள மான வளங்களைப் போரில் உபயோகப்படுத்துவதற்கு விரும் பியது. பின்பு, இந்தியாவின் எல்லைக்கருகிலும் போர் பரவிய தால், இந்தியாவின் முக்கியத்துவம் அதிகரித்தது.

இந்தியாவின் இரண்டு பேரரசியற் கட்சிகளான காங் கிரசும், முஸ்லிம் லீகும், பின்னர்க் கூறப்படும் காரணங்களால் அரசாங்கத்தின் போர் முயற்சிக்குத் தமது ஆதரவைத் தர மறுத்தன. ஆயினும், சுதேச மன்னர்கள் அரசாங்கத்திற்கு உறுதுணையாய் இருந்தார்கள். இதனால், வலுக்கட்டாய மில்லாமல், சுதேச சமஸ்தானங்களிலிருந்து இராணுவத்திற்கு ஆள் திரட்ட முடிந்தது. போரின் போக்கைக் குறித்து விரிவாகக் கூறுவது அவசியமில்லை. 1940ஆம் ஆண்டின் கோடை காலம், நேசநாடுகளுக்குக் (Allies) கடுமையான ஒரு சோதனைக் காலமாய் இருந்தது என்பதை மட்டும் கூறுவது போதுமானது. நார்வே, டென்மார்க்கு என்னும் நாடுகள் முதலிலும், பெல்ஜியம், ஹாலண்டு, பிரான்சு போன்ற நாடுகள் அதன் பிறகும் விரோதிகளால் மிகு விரைவாகக் கைப்பற்றப்பட்டன. பிரிட்டனின் வீழ்ச்சியும் எதிர்பார்க்கப் பட்டது; ஆனால், இராயல் விமானப்படை (Royal Air Force), எண்ணிக்கையில் அதிகமாயிருந்த ஜெர்மானிய விமானங்களை மிக்க வீரத்துடன் தாக்கி, இங்கிலாந்தின்மீது படையெடுப் பதற்கு ஜெர்மனி வகுத்திருந்த திட்டத்தைக் கைவிடும்படி

செய்தது. ஜெர்மனிக்கு ஆதரவாக, இத்தாலி போரில் இறங்கியது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் 'உயிர் நாடி'யாய் (Life-line) விளங்கிய சூயஸ் கால்வாய்க்கு ஏற்பட்ட பேராபத்தாகக் கருதப்பட்டது. விரோதிகள் எகிப்து நாட்டைக் கைப்பற்றி, பிறகு இந்தியாவைத் தாக்குவதும் சாத்தியமானதே எனக் கருதப்பட்டது. 'பிரிட்டிஷ் ஐக்கிய நாட்டுடன் உள்ள செய்திப் போக்கு வரத்துத் துண்டிக்கப்படுமானால், இந்தியக் காரியதரிசியாருக்குள்ள சில அதிகாரங்களைக் கவர்னர்-ஜெனரலுக்குக் கொடுக்கும் இந்தியா-பர்மாச் சட்டம் (அவசரக்கால விதிகளின்படி) ஒன்று, ஜூன் மாத மத்தியில் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது.

கிரேட் பிரிட்டனுடைய வரலாற்றிலேயே மிகச் சோதனையானதும் அபாயமானதுமான அச்சமயத்தில், இந்தியா ஏராளமான மக்களையும் பொருளையும் இங்கிலாந்திற்குக் கொடுத்து உதவியது. நேசநாடுகளுக்கு வெற்றி ஏற்படும் வரையில், ஆப்பிரிக்கா, மத்தியக் கிழக்கு நாடுகள் ஆகியவற்றில் இருந்த எதிரிகளை எதிர்த்து இந்தியத் துருப்புகள் பரம்பரை வீரத்துடன் போராடின. ஆப்பிரிக்காவிலிருந்த இத்தாலிய சாம்ராஜ்யத்தை அழிப்பதில், குறிப்பிடத்தக்க அரிய சேவையை இந்தியத் துருப்புகள் செய்திருப்பதாக 1941ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் வைசிராய் கூறியுள்ளார். 1945ஆம் ஆண்டு, மே மாதத்தில் அச்சு நாடுகள் (Axis) தோற்கடிக்கப்பட்டு, ஐரோப்பா விடுதலை அடையும்வரையில் நேச நாடுகளுக்கு மிகச் சிறந்த உதவியை இந்திய வீரர்கள் ஆற்றியுள்ளார்கள். நேச நாடுகள் வெற்றி பெறுவதற்காகப் பலவகையிலும் ஏராளமான உதவியைப் புரிந்து, இந்தியா மிக்க புகழை அடைந்தது. இத்தாலியில் நேச நாடுகளின் சேனைகளுக்குத் தலைவராக அமெரிக்கத் தளபதியான லெப்டினென்டு ஜெனரல் மார்க்குக் கிளார்க்கு (Lieut General Mark Clark) என்பவர், கீழ்க்காணும் புகழ்மாலையை இந்தியத் துருப்புகளுக்குச் சூட்டியுள்ளார்:

'போரில் இந்தியத் துருப்புகளின் சாதனைகள் பெரிதும் குறிப்பிடத் தக்கவை. தற்காப்பிற்கு மிகச் சிறந்த நிலப் பகுதிகளில், உறுதியுடன் நின்ற பகைவர்களுக்கெதிராக, மிகப் பயங்கரமான போரில் அவை மிகு வெற்றிகரமாக ஈடுபட்டன. அவர்களை நீண்ட நேரம் தடுத்து நிறுத்துவதற்கும் அவர்களின் போர் உறுதியைக் குலைப்பதற்கும் இடப்பட்ட தடைகள் வெற்றி பெறவில்லை. காசினோவைக் (Cassino)

கைப்பற்றுவதற்கான போர், ரோம் நகரையும், ஆர்னோச் (Arno) சமவெளியையும் கைப்பற்றுவதற்கான போர், பிளாரன்ஸ் (Florence) விடுதலைப்போர், கோதிக்கு அரணைச் (Gothic Line) சீர் குலைக்கும் போர் ஆகிய போர்களும் நான்காவது, எட்டாவது, பத்தாவது இந்தியப் படைப் பகுதிகளும் என்றும் ஒன்று சேர்த்தே எண்ணப்படும். இச்சிறந்த மூன்று இந்தியப்படைப் பிரிவுகளைச் சேர்ந்த தீரமிக்க வீரர்களை நான் வணங்குகிறேன்!'[1]

எட்டாவது படையின் தளபதியான ஜெனரல் லீஸ் (General Leese) என்பவரும், இந்தியாவின் சேனாதிபதியான, ஜெனரல் சர் கிளாட் ஆக்கின்லெக் (General Sir Claude Auchinleck) என்பவரும் இந்திய வீரர்களை மிகவும் புகழ்ந்துள்ளனர்.[2]

ஜப்பானியர்களின் தாக்குதலை எதிர்த்து நின்றதிலும், இந்திய எல்லையில், அவர்கள் கைப்பற்றிய பிரதேசங்களி லிருந்து அவர்களை விரட்டியடிப்பதிலும், இந்தியத் துருப்புகள் சிறந்த பணியைப் புரிந்திருக்கின்றன. தென்கிழக்கு ஆசியாவில் இருந்த ஜப்பானியப் படைகளை முறியடித்த பிரபலமான 14ஆம் படையின் தளபதியான வில்லியம் ஸ்லிம் (William Slim) என்பவர், இப்பெரிய போரில், இந்தியர்கள் புரிந்த சிறந்த சேவைக்குச் சான்றாய் விளங்குகிறார்; 'நமது இராணுவத்தளமாய் இந்தியா விளங்கியது; நமக்கு வேண்டியவைகளில் முக்காற்பாகம், இந்நாட்டிலிருந்துதான் கிடைத்தது. இந்தியாவில் கிடைத்தவைகளில் மிகச் சிறந்தது இந்திய இராணுவந்தான். உண்மையில் பர்மாவில் நடத்தப் பட்ட போர், இந்திய இராணுவத்தின் போராய்த்தான் திகழ்ந்தது. பெரும்பான்மையான போர்த் துருப்புகளும் போக்கு வரத்தைப் பாதுகாத்த எல்லாத் துருப்புகளும் இந்திய இராணுவத்தைச் சேர்ந்த துருப்புகளே. அவை மிகச் சிறப்பாகப் பணியாற்றின. நம் இராணுவத்திற்கு வேண்டிய புதிய படைகளை, இந்தியாவும் பயிற்சி அளித்து அனுப்பியது,' என அவர் 1946ல் கூறியுள்ளார்.[3]

1. The Indian Annual Register, 1945, Vol. II, p. 284.
2. The Statesman, Nov. 7. 1944.
3. Asiatic Review, April, 1946.

போருக்குமுன், இந்தியப் படையில் 1,82,000 பேர் இருந்தனர். கட்டாயமில்லாமல், படைக்கு ஆள்களைச் சேர்த்த போதிலும், 1945ஆம் ஆண்டின் மத்தியில், 20,00,000க்கு மேற் பட்ட வீரர்கள் இந்தியப் படையில் இருந்தார்கள். இப்போரில் பாதிக்கப்பட்ட இந்தியத் துருப்புகள், 1,80,000. இவர்களுள் 'ஆறில் ஒரு பகுதியினர் கொல்லப்பட்டனர். அதனுடன் வியாபாரக் கப்பல்களில் பணி புரிந்த 6,500 பேர்கள் இறந்து விட்டார்கள். அல்லது காணப்படவில்லை.' இதைத் தவிர, குண்டுகள் வீசப்பட்டதால், 4000 பேர் பாதிக்கப்பட்டனர். அதிகப்படியான மக்கள் பாதிக்கப்பட்டிருக்கக்கூடும். ஆனால், சில சமயத்தில் 82,000[1] பேர்கொண்ட சிவில் பாதுகாப்புப்படை (Civil Defence Corps) செய்த மாபெருஞ் சேவையால், பலர் காப்பாற்றப்பட்டனர்.

இங்கிலாந்து அரசரால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள், (King's Commissioned Officers), வைசிராயால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள் (Viceroy's Commissioned Officers) உட்பட, அதிகாரிகள் பிரிவிற்கு வேண்டிய அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். போருக்கு முன்பு 200 பயிற்சியாளர்களை டேராடூனிலுள்ள (Dehra Dun) இந்திய இராணுவப் பள்ளி தேர்ந்தெடுத்தது; ஆனால், போருக்குப் பின், 600 பயிற்சியாளர் களைச் சேர்த்துக்கொள்வதற்கு அப்பள்ளி வகை செய்தது; அதைத் தவிர, அதிகாரிகளைப் பயிற்றுவிக்கும் பள்ளிகள் (Officers Training School) பலவும் ஏற்பட்டன. போர் ஆரம்பமானபோது, 400 இந்திய அதிகாரிகளே இருந்த போதிலும், அது முடியும்போது, இந்தியாவில் நியமிக்கப் பட்டவர்களும், அரசரால் நியமிக்கப்பட்டவர்களும் சேர்ந்து, 10,000 பேருக்கு அதிகமான அதிகாரிகள் இருந்தார்கள். படையை ஒழுங்குபடுத்தவும், சிறந்த பயிற்சிப் பள்ளிகள் ஏராளமாகத் தொடங்கப்பட்டன. இந்தியப் பீரங்கிப்படையும் (Indian Artillery) மிகவும் விரிவு படுத்தப்பட்டது. 1943ஆம் ஆண்டு, மே மாதம் முதல் தேதி உண்டாக்கப்பட்ட இந்திய எலெக்டிரிக், மெக்கானிக்கல் எஞ்சினியர்களின் படைப்பகுதி (Corps of Indian Electrical and Mechanical Engineers) இந்திய இராணுவத்தின் நுணுக்கமான ஆயுதங்களைப் பழுது பார்ப்

1. For this section see (1) Statistics relating to India's War effort Government of India Publication, Feb. 1947. (2) The Indian Annual Register, 1945, Vol. I, p 277-296.

பதிலும், பாதுகாப்பதிலும், சீர்படுத்துவதிலும், மிக்க உதவியைச் செய்தது; 1922-ல் ஏற்படுத்தப்பட்ட இந்திய சைகைச் செய்தி அனுப்பும் படைப்பகுதியும் (Indian Signal Corps) போரின்போது விரிவுபடுத்தப்பட்டுச் சிறந்த சேவையைச் செய்தது; 1943-ல் உண்டாக்கப்பட்ட இந்திய இராணுவத்தின் மருத்துவப் படைப்பகுதியும் (Indian Army Medical Corps) சிறந்த சேவை செய்தது. துருப்புகளும், தொழில் நுட்பம் தெரிந்தவர்களும் செய்து வந்த வேலைகளை ஏற்றுக்கொண்டு அவர்களைப் போர் முனைக்கு அனுப்பும் பொருட்டு அமைக்கப்பட்ட பெண்களின் துணைப்படைப் பகுதி (Women's Auxiliary Corps) 10,000 பெண்களுடன் மிகச்சிறந்த சேவையை ஆற்றியுள்ளது. போர் ஆரம்பமானபோது, 1200 அதிகாரிகளையும், கடற்படையினரையும் கொண்டிருந்த இராயல் இந்தியக் கடற்படை, 30,000 பேர்களைக்கொண்ட படையாய்ப் பெருகி, சிறந்த சேவைகளையும் துணிகரம் மிக்க செயல்களையும் புரிந்திருக்கிறது. இந்திய விமானப்படையில் (1932-ல் ஆரம்பிக்கப்பட்டு, பிறகு இராயல் இந்திய விமானப் படையென வழங்கப்பட்டது) இருந்த வீரர்களின் எண்ணிக்கை, 200லிருந்து 27,000க்கு அதிகரிக்கப்பட்டு, போர் விமானங்கள், குண்டு வீசும் விமானங்கள் போன்ற இக்கால விமானங்கள் அதில் சேர்க்கப்பட்டு, 1942ஆம் ஆண்டு முதல், பர்மாப் போர்முனையில் மிகத் தீரமாகப் போரிட்டது. படைக்கலங்கள், வெடி மருந்துகள், ஆயுதங்கள் போன்ற பலவிதமான போர்ச் சாதனங்களை நேசநாடுகளுக்கு அதிக அளவில் இந்தியா வழங்கியது. டாட்டா இரும்பு, எஃகு கம்பெனி (Tata Iron and Steel Company), வங்காளத்தின் எஃகு கார்ப்பொரேஷன் (Steel Corparation of Bengal) என்பவைகள் எஃகு உற்பத்தியை அதிகப்படுத்தி, போர் முயற்சிகளுக்கு உறுதுணையாய் நின்றதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். இந்தியக் கப்பல் கட்டும் தளங்கள் (Indian Shipyards), 1,00,000 டன்கள் எடையுள்ள 2000 சிறிய கப்பல்களைப் போர் நடந்தபோது கட்டியது. ஏராளமான இந்திய ரயில்வே வாகன்கள், மத்தியக் கிழக்கிற்கு அனுப்பப்பட்டன.

இந்திய சுதேச சமஸ்தானங்களும் ஏராளமான உதவியைத் தாராளமாகச் செய்தன. இந்தியப் போர்ப் படைக்கு 3,75,000க்கும் மேற்பட்டவர்களைப் புதியவர்களாகச் சேர்ப்பதில் உதவின; அதைத் தவிர, தொழில் நுட்ப வேலைகளுக்கான ஆள்களையும், எஃகு, போர்வைகள், பலவிதக்

கம்பளி ஆடைகள், பாரசூட்டு (Parachute) செய்வதற்கான பட்டு நாடாத் துணிகள் (Webbing cloth), இரப்பர்ப் பொருள்கள் போன்ற முக்கியப் பொருள்களையும் கொடுத்து உதவின. ரூபாய் 65,000,000க்கும் மேற்பட்ட பண உதவியை அவை செய்தன. வைசிராய் நிதிக்குச் சேர்ந்த மொத்தப் பணத்தில், ஏறக்குறையப் பாதிப்பணம், அவைகளிடமிருந்து வந்ததே.

## 2. அமைதி ஏற்படுத்தும் பணியில் இந்தியா பங்கு கொள்ளல்

நேச நாடுகள் வெற்றி பெறும்பொருட்டு, ஏராளமான உதவிகளைச் செய்த பிறகு அவதியுற்ற மனிதகுலத்தின் பிரச்சினைகளுக்கு முடிவு காண்பதிலும், தன் உண்மையான ஆர்வத்தை இந்தியா காட்டியது; இக்காரணத்தினால், சர்வ தேசப் பாதுகாப்பையும் அமைதியையும் உண்டாக்கும் பொருட்டு ஏற்பட்ட நிறுவனங்களுடன் இந்தியா தொடர்பு கொண்டது. ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் முக்கிய உறுப்புகளுடனும் (Principal Organs) குறிப்பிட்ட வேலைகளுக்கென உண்டாக்கப்பட்ட நிலையங்களுடனும் (Specialised Agencies), இந்தியா ஒத்துழைத்தது. இந்தியப் பிரதிநிதிகளுள் ஒருவர், ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் சமூக, பொருளாதார மன்றத்தின் தலைவராகி, இடர் மிகுந்த ஆரம்பக் காலத்தில் அரிய உதவியை ஆற்றியுள்ளார். ஐக்கிய நாடுகளின் கல்வி, விஞ்ஞான, கலாசார நிறுவனத்தின் வேலைகளிலும், இந்தியப் பிரதிநிதிகள் கலந்துகொண்டு சிறந்த சேவையைச் செய்துள்ளார்கள்.

1946ஆம் ஆண்டில் நடந்த ஐ.நா.வின் கூட்டத்தில் எழுந்த சில முக்கியமான பிரச்சினைகளில் ஒரு சுயேச்சையான கொள்கையை இந்தியப் பிரதிநிதிகள் பின்பற்றினார்கள். தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் கொடுமைக்காளாகும் விதத்தைக் குறித்து ஐ. நா. விசாரணை செய்ய வேண்டும் என்ற தீர்மானத்தை இங்கிலாந்தும் அமெரிக்காவும் (U.S.A.) எதிர்த்தபோதும், இந்தியப் பிரதிநிதிகளின் தளராத முயற்சியால் அத்தீர்மானம் வெற்றி பெற்றது. ஐக்கிய நாடுகளின் தர்மகர்த்தா சபையால் (Trusteeship Council) மேற்பார்வை செய்யப்பட்ட நாட்டிலிருந்த மக்கள், அரசியலில் பின் தங்கி இருந்ததால், அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்கு

இந்தியா தொடர்ந்து முயற்சி செய்தது, ஆனால், 1947லேதான் நேரிடையாகச் சம்பந்தப்பட்ட இரண்டு பிரச்சினைகளில், அதாவது, பாதுகாப்புச் சபைக்கான தேர்தலிலும் தென்னாப்பிரிக்காவுடன் ஏற்பட்ட தகராற்றிலும், இந்தியா தான் நினைத்தபடி வெற்றி பெற இயலவில்லை. ஆயினும், ஐக்கிய நாடுகளின் வேலைகளில் மிக்க சிரத்தையுடன் இந்தியா பணி ஆற்றியது. அமெரிக்கா, இங்கிலாந்து தலைமையின் கீழ் ஒரு வல்லரசுப் பிரிவும், ரஷ்யாத் தலைமையின்கீழ் ஒரு வல்லரசுப் பிரிவுமாக, இரண்டு உலக வல்லரசுப் பிரிவுகள் ஏற்பட்டு, அவைகளிடையே மனக்கசப்பு உண்டானபோது, எப் பிரிவிலும் கூட்டுச் சேராக் கொள்கையை இந்தியா அறிவித்தது. தூதுவர்கள் (Ambassadors) முதல், கான்சல்கள் (Consuls), கமிஷனர்கள் (Commissioners) வரை உள்ள பல தரப்பட்ட அரசியல் தூதுவர்களை அயல் நாடுகளுக்கு இந்தியா அனுப்பியுள்ளது. இதைப் போன்றே அயல் நாடுகளும், தங்களுடைய தூதுவர்களையும் மற்றவர்களையும் இந்தியாவிற்கு அனுப்பியுள்ளன.

சமாதான உறவு மாநாடு (Pacific Relations Conference, 1934–44,) உலகத் தொழிற் சங்க மாநாடு (The World-Trade Union Conference, February, 1945), காமன்வெல்த் உறவு மாநாடு (The Commonwealth Relations Conference, February-March, 1945,) உலகத் தொழிற் சங்கக் காங்கிரஸ் (World Trade Union Congress, September, 1945), சுதந்தரமற்ற மக்களின் மாநாடு (Subject Peoples Conference, London, October, 1945), ஜெனிவாவில் நடந்த சர்வதேசத் தொழிலாளர் மாநாடு (The International Labour Conference at Geneva, July, 1947) போன்ற பல சர்வதேச மாநாடுகளில் இந்தியா பங்கு கொண்டதுடன், ஆசிய உறவுகள் மாநாட்டையும் (Asian Relations Conference, New Delhi, 23rd March—2nd April, 1947) நடத்தியுள்ளது. பிரதிநிதிகள் குழு, தூதுக்குழு ஆகியவைகளை அயல்நாடுகளுடன் பரிமாறிக்கொண்டு, அந்நாடுகளுடன் பல்வேறு ஒப்பந்தங்களையும் செய்துகொண்டது. இந்தியாவின் மீது விருப்பங்கொண்ட பல சங்கங்கள், அயல் நாடுகளில் ஏற்படலாயின ; வாஷிங்டனில் அலுவலகத்தைக்கொண்டு, 1943ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 25ஆம் தேதி ஆரம்பிக்கப் பட்ட இந்திய சுதந்திரத்திற்கான தேசீயக் குழுவையும் (The National Committee of India's Freedom), 1943ஆம் ஆண்டு அக்டோபரில் ஏற்படுத்தப்பட்ட ஆஸ்திரேலியர்களின் இந்திய சங்கத்தையும் (Australians Indian Association), 1944-ல்

டெஹ்ரானில் உண்டாக்கப்பட்ட இந்திய இரானியக் கலாசார சங்கத்தையும் (Indo-Iranian Cultural Society, Tehran) உதாரணமாகக் குறிப்பிடலாம்.

## 3. போருக்குப்பின் உண்டான பொருளாதார நிலைமைகள்

### (அ) தொழில்களின் வளர்ச்சி

இரண்டாவது உலகப் போரானது, இந்திய சமூக, பொருளாதார நிலைமைகளில் பல முக்கிய விளைவுகளை ஏற்படுத்தியது. பொருளாதார வாழ்க்கை, பலவிதத்திலும் பாதிக்கப்பட்டது; போர் நின்றவுடனே, பல புதிய சக்திகளும், விழிப்புணர்ச்சிகளும், சமூக கலாசார வாழ்க்கையில் ஏற்பட்டன; அவைகளைப் புதிய நிலைக்குத் தகுந்தவாறு மாற்றி அமைத்து ஒழுங்குபடுத்துவதுபோன்ற பல முக்கியப் பிரச்சினைகளை இந்தியா சமாளிக்க வேண்டியிருந்தது. ஒரு புதிய சமுதாய அமைப்பை அப்போர் ஏற்படுத்தியதாகக் கருத வேண்டும்.

இந்தியாவிலும், காமன் வெல்த்தின் பல பாகங்களிலும் போர்ச் சாமான்களுக்கு ஏற்பட்ட தேவைகள், இறக்குமதிக் கட்டுப்பாடுகள், அரசாங்கம் பல தொழில்களுக்குக் காட்டிய ஆதரவு போன்ற பல சிறந்த சூழ்நிலைகளால், சணல், தீப்பெட்டி, கோதுமைமாவு ஆகியவைகளைத் தவிர, மற்ற எல்லாத் தொழிலிலும் ஏராளமான உற்பத்தி ஏற்பட்டது. சணல் உற்பத்தியில் சுணக்கம் ஏற்பட்டதற்குத் தேவையின்மைதான் காரணம். கச்சாப் பொருள்கள் கிடைக்காததனால், தீப்பெட்டி உற்பத்தி குறைந்தது. கோதுமை மிகுதியாய் விளைந்தாலும், அதை மாவு ஆலைகளுக்குச் சரிவர வினியோகிக்காததால், கோதுமை மாவின் உற்பத்தி குறைந்தது. அதிகமாக உண்டாக்கப்பட்ட பொருள்களுள் பெட்ரோலும், மின் சக்தியும் முதன்மையானவை. தொழிலாளர்கள் குறைவாய் இருந்ததால், நிலக்கரி, இரும்பு ஆகியவைகளின் அதிக உற்பத்தி தடைபட்டது. இந்தியக் கப்பல் கட்டும் தொழில், எதிர்பார்த்த அளவுக்குத் திருப்திகரமாய் இல்லாவிட்டாலும், 1940ஆம் ஆண்டில் விசாகப்பட்டினத்தில், ஏற்படுத்தப்பட்ட கப்பல் கட்டும் துறை, இரண்டு ஆண்டுக்கும் குறைவான காலத்தில் 4000க்கும்

அதிகமான கப்பல்களைப் பழுதுபார்த்தது என்பதைக் குறிப்பிடவேண்டும். பொருளாதாரம், இராணுவ முக்கியத் துவம் போன்ற நிலைமைகளைக் கருத்தில்கொண்டு, இந்தியக் கப்பல் தொழிலைத் திட்டமிட்டு வளர்க்க வேண்டும் எனக் கப்பல் தொழிலை ஆராய்ந்து அதைத் திருத்தி அமைப்பதற்காக ஏற்பட்ட உட்குழு, சிபாரிசு செய்தது.

## (ஆ) பொருளாதாரத் திட்டமிடுதல்

புதிய காலத்தின் சிக்கலான பிரச்சினைகளும், இரண்டாம் உலகப் போரும் சேர்ந்து, மற்றத் தேசங்களில் உண்டாக்கியதைப் போலவே, இந்தியாவிலும் பொருளாதார வாழ்க்கையின் முழு அமைப்பையும், திட்டமிட்ட வழியில் திருத்தி அமைப்பதற்கு ஏகோபித்த தூண்டுதலை உண்டாக்கியது.

இந்தியத் தேசியக் காங்கிரசின் தூண்டுதலால், **பண்டித ஜவஹர்லால் நேருவின்** தலைமையில், ஒரு தேசியத் திட்டக்குழு (National Planning Committee). 1938ஆம் ஆண்டின் இறுதியில் ஏற்படுத்தப்பட்டது. அதில் பதினைந்து அங்கத்தினர் இருந்தனர்; அவர்களுடன் மாகாண அரசாங்கங்களின் பிரதி நிதிகளும், இதில் பங்குகொள்ள விரும்பும் சுதேச சமஸ் தானங்களின் பிரதிநிதிகளும் அதில் இருந்தார்கள். ஆனால், போர் ஆரம்பித்த பிறகு அரசியல் நிலைமை மாறியதாலும், காங்கிரஸ் மந்திரி சபைகளின் ராஜிநாமாவினாலும், அக்குழுச் செயலற்று இருந்தது; 1945ஆம் ஆண்டு, செப்டெம்பர் வரையிலும் இந்நிலை நீடித்தது. பம்பாய்த் திட்டம் (Bombay Plan), மக்கள் திட்டம் (The people plan), காந்தீயத் திட்டம் (The Gandhian plan) ஆகியவற்றைத் தவிர, மாகாணத் திட்டங்கள் (Provincial plans), மத்திய அரசாங்கத் துறை களின் திட்டங்கள் (Plans of Departments of Central Government) பெருந் தொழில்களுக்கான திட்டங்கள் (Plans for Major Industries), சுதேச சமஸ்தானங்களின் திட்டங்கள் (The plans of Indian States) போன்ற திட்டங்கள், பொருளாதார நிலையைத் திருத்தி அமைப்பதற்கு உருவாக்கப்பட்டன. பொதுவாகக் கூறின், நாட்டின் வளங்களை இயலும் வரையில் உபயோகப்படுத்தி, தேசீயச் செல்வத்தை எல்லாருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுப்பதன் மூலம் 'மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதும் எல்லாருக்கும்

உபயோகமான வேலை வாய்ப்புகளைத் தேடித் தருவதுமே' திட்டத்தின் முக்கியக் குறிக்கோள்களாகும். 1941ஆம் ஆண்டு, ஜூன் மாதம் ஆரம்பத்தில், போருக்குப் பின் புனர் நிருமாணக் குழுவை (Post-War Reconstruction Committee) இந்திய அரசாங்கம் ஏற்படுத்தியது. 1946ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 26ஆம் தேதி ஓர் ஆலோசனைத் திட்டக் குழுவை (Advisory Planning Board) ஏற்படுத்தியுள்ளதாக அது அறிவித்தது. 'மாநிலங்களானாலும், சமஸ்தானங்களானாலும், ஒரு பொதுத் திட்டப்படி வேலை செய்ய ஒப்புக் கொண்டால்தான், பெரிய தொழிற்சாலைகள் நன்கு வளர முடியும்,' என அக்குழுவானது தன் கருத்தை 1947ஆம் ஆண்டு, ஜனவரி மாதத்தில் தன் அறிக்கையில் வற்புறுத்திக் கூறியுள்ளது. ஆனால், பல காரணங்களினால், தொழில் நிலைமை திருப்தியற்ற விதத்திலேயே தொடர்ந்து வந்தது; தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் இடையில் நல்லுறவு இல்லாதிருந்ததும் ஒரு காரணம் ஆகும்.

## (இ) தொழிலாளர்கள்

இப்போர், இந்தியத் தொழிலாளர்களை மிகவும் பாதித்தது. வாழ்க்கைச் செலவு (cost of living) என்றும் இல்லாதபடி அதிகரித்தது. பொருளாதார நிலைமைகள் சீர்கேடுற்றமையால், நிலைமையைச் சீர்திருத்த வேண்டும் என்கிற கூக்குரல் எழுந்தது; கூலிகளை அதிகரிப்பது மூலமாகவும், பஞ்சப்படியையும் போனஸ் பணத்தையும் கொடுப்பது மூலமாகவும், ஓய்வு ஊதியங்கள், பிராவிடென்டு பண்டு (Provident Funds) போன்றவைகளை நிறுவி, சிறந்த முறையில் பணத்தைக் கொடுப்பது போன்ற முறைகளினாலுமேதான் அந்நிலைமையைச் சீர்திருத்த முடியும்.

இந்நாட்டுச் சாதாரணத் தொழிலாளியின் அவல நிலையைப் போக்கும் பொறுப்பு அரசாங்கத்தைச் சார்ந்தது என்கிற எண்ணம் இக்காலத்தில் வளரலாயிற்று; இதனால், பல முக்கியத் தொழிற் சட்டங்கள் உண்டாயின. 1946ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதத்தில் நிறைவேற்றப்பட்டு, ஆகஸ்டு மாதம் முதல் தேதி அமுலுக்குக் கொண்டுவரப்பட்ட பண்டக சாலைகளைத் திருத்தும் சட்டம் (Factories Amendment Act) வாரத்திற்கு 54 மணி நேரம் வேலை செய்வதை 48 மணி நேர மாகவும், தொடர்ந்து அல்லது சில பருவங்களில் மட்டும் நடத்தக்கூடிய தொழில்களில், 60 மணி நேர வேலை செய்வதை

50 மணி நேரமாகவும் குறைத்தது. ஒரு நாளின் அதிகபட்ச உழைப்பு நேரம் முறையே 9, 10 மணியாக இருக்க வேண்டு மென்று அது நிருணயித்தது. தொடர்ச்சியாய் நடக்கும் தொழிலிலும் சில பருவங்களில் மட்டும் நடக்கும் தொழிலிலும் செய்கின்ற அதிகநேர (Overtime) வேலைக்கு இரட்டிப்புக் கூலிப் பணத்தைக் கொடுக்கவேண்டும் என்று இச்சட்டம் கூறியுள்ளது. பிரிட்டிஷ் இந்தியாவில் இருக்கும் தொழிற் சாலைகளில், நூற்றுவரும், நூற்றுவருக்கு மேற்பட்ட தொழிலாளர்களும் வேலை செய்தால், அவற்றின் முதலாளிகள், வேலை நிபந்தனைகளைத் தெளிவாக விளக்கி, ஒவ்வொரு தொழிலுக்கும் தகுந்தவாறு, மத்திய அரசாங்கம் அல்லது மாகாண அரசாங்கம் ஆகியவற்றுல் நியமிக்கப்பட்ட அதிகாரிகளைக் கொண்டு, அந்நிபந்தனைகளை உண்மையென நற்சாட்சிப் பத்திரம் பெறவேண்டுமென, 1946ஆம் ஆண்டு செய்யப்பட்ட தொழிற்சாலைகளில் வேலைக்கமர்த்தும் நிரந்தரக்கட்டளைகள் (Industrial Employment Standing Orders) சட்டம் கூறுகிறது. மாதம் 400 ரூபாய் வரையிலும் அதிக பட்சமாகச் சம்பாதிக்கும் தொழிலாளர்கள், வேலையின் பொழுது காயம் பட்டால், அதற்கு நஷ்டஈடு கொடுக்கவும், ரூ. 300க்கும் 400க்கும் இடையில் சம்பாதிப்பவர்களுக்குக் கொடுக்க வேண்டிய நஷ்டஈட்டின் அளவையும், 1946ஆம் ஆண்டில் உண்டாக்கப்பட்டு 1947ஆம் ஆண்டில் திருத்தப் பட்ட தொழிலாளர் நஷ்ட ஈட்டுச் சட்டம் (Workmen's Compensation Act) கூறுகிறது. தொழிலுறவுகள், சமூக இன்சூரன்ஸ், தொழிலாளர்கள் வேலை செய்யும் நிலையை மேம்பாடு செய்தல் போன்றவைகள் சம்பந்தமாகச் சில முக்கியச் சட்டங்களை, இந்தியத் தேசீய அரசாங்கம் நிறைவேற்றியது. தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையில் சிறந்த உறவை ஏற்படுத்துவதில் தங்களுக்குள்ள பொறுப்புகளை மாகாண அரசாங்கங்களும் உணர்ந்தன ; உதாரணமாக, 1946ஆம் ஆண்டு செய்யப்பட்ட பம்பாய்த் தொழில் உறவுகள் சட்டத்தைக் (Bombay Industrial Relations Act) குறிப்பிடலாம் ; இச்சட்டம் தொழிலாளர்களுக்கான நீதி மன்றங்களை ஏற்படுத்தியும், தொழிற்சாலைகளில் தொழிலாளர்களும் முதலாளிகளும் கொண்ட பல குழுக்களை நியமித்தும், தொழிலாளர்களின் தகராறுகளை வெகு சீக்கிரத் திலேயே தீர்த்து வைத்தது. தொழில் உறவுகளைச் சீர்படுத்து வதற்காக மேலும் பல முக்கிய நடவடிக்கைகளை மத்திய, மாநில அரசாங்கங்கள் எடுத்துக்கொண்டன. 1947ஆம் ஆண்டில் நடந்த ஒரு மாநாட்டில் முதலாளிகள், தொழிலாளர்

கள், அரசாங்கம் ஆகியவர்களின் சார்பில் பங்கெடுத்துக் கொண்ட பிரதிநிதிகள் தொழில் நல்லுறவைப் பாதுகாத்துத் தொழிற்சாலைகளை மூடுதல், வேலை நிறுத்தம் செய்தல், உற்பத்தியைக் குறைத்தல் போன்றவைகளை மூன்று ஆண்டிற்குச் செய்வதில்லை என்கிற ஏகோபித்த முடிவுகளை அவர்கள் எடுத்தார்கள். நியாயம் வழங்குதல் சமரசக் குழுக்களின் சிபாரிசுகள் ஆகியவற்றின் மூலம் சிறந்த தொழில் உறவு உண்டாக்கப்பட்டது. உதாரணமாக, வங்கத்திலும் பீஹாரிலும் உள்ள நிலக்கரிப் பிரதேசங்களில் ஏற்பட்ட தகராறுகளை விசாரிப்பதற்காக 1947ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட சமரசக் குழுவின் சிபாரிசுகள், 'நிலக்கரிச் சுரங்கத்தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட" ஒரு புதிய தீர்ப்பு என மிகவும் புகழப்பட்டன. முன்பு உதாசீனம் செய்யப்பட்ட ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த தொழிலாளர்களின் நிலையை உயர்த்துவதற்காக, இச்சட்டம் வழி வகை செய்கிறது.

தொழிலாளர்களின் இயக்கங்கள் வலுவடைவதற்கும் தொழிற் சங்கம் மேலும் வளர்வதற்கும், இப்போர் உதவியாய் இருந்தது. இந்தியத் தொழிற் சங்கங்களின் பெடரேஷன் (Indian Traders Union Federation) தேசியத் தொழிற் சங்கங்களின் பெடரேஷனுடன் (National Traders Union Federation) ஐக்கியமாகிவிட்டது. 1946ல், தேசியத் தொழிற் சங்கக் காங்கிரசுடன் (All Indian Trade Union Congress) இணைந்துவிட்டது. ஆனால், இந்தியத் தொழிலாளர்களிடையே பிளவு உண்டாகி, அதனால் இந்தியத் தொழிலாளர்களின் பெடரேஷன் (Indian Federation of Labour) என்கிற ஒரு புதிய அமைப்பு 1941-ல் ஏற்பட்டது. இந்தியத் தேசியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் (Indian National Trade Uuion Congress) என்ற புதிய நிறுவனமும், 1947ஆம் ஆண்டில் ஏற்பட்டது. காந்தியத் தத்துவத்தை ஆதாரமாகக்கொண்டு, வேலை நிறுத்தம் செய்யாமல், பேச்சு வார்த்தைகள், சமரசம் மூல மாகத் தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொள்ளுதல், அவ் வழிகள் வெற்றிபெறவில்லை என்றால், நியாயத் தீர்ப்பு அல்லது நடுவுநிலை விசாரணை மூலம் தீர்த்துக்கொள்ளுதல் எனும் கொள்கையை அது கடைப்பிடித்தது. 577 சங்கங்களை உள்ளடக்கிய 19 தொழிற் பிரிவுகளைக் கொண்ட இந்நிறுவனம், வெகு சீக்கிரத்திலேயே தேசிய வாழ்க்கையில் ஒரு பேரியக்க மாய்த் திகழ்ந்தது. ஆனால், இப்படி இருந்துங்கூட, இந்தியத்

தொழிலாளர் உலகத்தில் அதிகக் குழப்பமும் கிளர்ச்சியும் நிலவி வருகின்றன.

## (ஈ) பொதுமக்கள் அனுபவித்த தொல்லைகள்

என்றும் வருந்தத் தக்க நிலையிலிருந்த இந்தியப் பொது மக்கள், போருக்கு முன்னும் பின்னும் மிக அவதியுறும்படி நேரிட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம் தனது ஸ்டர்லிங் பத்திரங் களைக் காகிதப் பணக்காப்பு நிதிக்கு (Paper Currency Reserve) வழங்கி, தனக்கு வேண்டிய பண்டங்களை இந்தியாவிலிருந்து தொடர்ந்து வாங்கிக் கொண்டிருந்தமையால் பண வீக்கம் ஏற்பட்டு, பண்டங்களின் விலை ஏறியது. அத்தியாவசியப் பொருள்களான உணவு தானியங்களும் துணியும் மிகக் குறை வாய்க் கிடைத்தன. 'போருக்கு முன்பு 45 மில்லியன் டன்கள் எடையுள்ள உணவு தானியங்கள் மக்களுக்குக் கிடைத்தன. போரின் முற்பாதியில், அவை 43 மில்லியன் டன்களாகக் குறைந்துவிட்டன. மேலும், போருக்கு முன்பு 6000 மில்லியன் கெஜம் துணி கிடைத்தது; ஆனால், 1942-ல், 3700 மில்லியன் கெஜம் துணியே கிடைத்தது. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுங்கூட, 5000 மில்லியன் கெஜங்களுக்கு அதிகமாகக் கிடைக்கவில்லை.'

தேசியத் திட்டக் குழுவினால் (National Planning Committee) ஏற்படுத்தப்பட்ட தொழிலாளர்களுக்கான உதவிக்குழு (Sub-Committee on Labour), தன் அறிக்கையில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறது: ஒவ்வொரு நகரத்திலும், ஒவ்வொரு மாகாணத்திலும் பங்கீட்டுமுறை அமுல் செய்யப்பட்டது. உணவு, மண்ணெண்ணெய், சர்க்கரை போன்ற முக்கியப் பொருள்களை அரசாங்கமே வாங்கிக் கட்டுப்பாட்டுடன் விநியோகம் செய்து விலைகளையும் கட்டுப்படுத்தியது. எனினும், விலைகள் ஏறிய வண்ணமே இருந்தன. கள்ளச் சந்தைகள் பெருகிய வண்ணம் இருந்தன. எல்லா வகுப்பு களிலும் ஆடவர்களிடமும் பெண்களிடமும் இலஞ்சம் எல்லை யின்றித் தாண்டவமாடியது. 1943-ல் ஏற்பட்டு மக்களுக்கு எல்லையற்ற துன்பத்தைக் கொடுத்த வங்காளப் பஞ்சம் போரின் நேரிடையான விளைவுகளால் ஏற்பட்டது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், 'ஆட்சியிலுள்ளவர்களின் அக்கறை யின்மை, முன் யோசனை இல்லாமை' ஆகியவைகளாலும் சில அதிகாரிகளின் அளவு கடந்த பேராசையினாலும், அந்நிலைமை மிக மோசமடைந்தது. சர் ஜான் உட்ஹெட் (Sir John Woodhead)

என்பவரின் தலைமையின் கீழ் நிறுவப்பட்ட பஞ்ச விசாரணைக் கமிஷன் (Famine Inquiry Commission) 1945ஆம் ஆண்டு, மே மாதத்தில் வெளியிட்டுள்ள அறிக்கையில் பின் வருமாறு கூறியுள்ளது: 'வங்காளப் பஞ்சத்தைப் பற்றியும் அதன் காரணங்களைப்பற்றியும் செய்யப்பட்ட விசாரணை எங்களுக்கு மிக்க வேதனையை அளித்தது. இந்தத் துயர்மிக்க நிகழ்ச்சி அடிக்கடி மனத்தில் தோன்றி எங்களைத் துன்பத்தில் ஆழ்த்தியது.' வங்காளத்தின் ஒன்றரை மில்லியன் ஏழை மக்கள் இப்பஞ்சம் ஏற்படுவதற்குக் காரணமாக இல்லாவிட்டாலும், அதற்குப் பலியானார்கள். சமூகமும் அதனைச் சேர்ந்த அங்கங்களும் தங்களுடைய வலுவற்ற அங்கத்தினர்களைப் பாதுகாக்கத் தவறிவிட்டன. உண்மையில் நேர்மையின் தோல்வி, சமுதாயத்தின் அழிவு, ஏன், ஆட்சியின் வீழ்ச்சியுங்கூட அவ்விடத்தில் ஏற்பட்டது எனக் கூறலாம். இத்தகைய கொடுந்துன்பத்திற்கு இரையான வங்காளம் புத்துயிர் பெறுவதற்கு நெடுங்காலமாயிற்று.

## (உ) வேளாண்மை

இந்திய விவசாயிகளும் சாதாரணத் துய்ப்பாளர்களும் பொருளாதாரக் கட்டுப்பாடுகளின் தோல்வியினாலும் கொள்ளை லாபம் அடித்தல் மிகப் பெரும்பான்மையாகப் பரவியிருக்கிற இலஞ்சம் ஆகியவைகளினாலும், மிக்க துன்பமடைந்தார்கள். ஆனால், அதே சமயத்தில் பெரிய விவசாயிகள் தங்களிடமிருந்ததை அதிக விலைக்கு விற்று, மிக்க பயனடைந்தார்கள். விவசாயப் பொருள்களின் உற்பத்தி, பங்கிடுதல் ஆகியவைகளைத் திட்டமிடுதல், ஒன்றுக்கொன்று தொலைவிலுள்ள உபரி உற்பத்திப் பிரதேசங்களையும் பற்றாக்குறைப் பிரதேசங்களையும் இணைத்துப் போக்குவரத்திற்கான வழி வகை செய்தல், வேண்டிய அளவு உணவு தானியங்களைக் கையிருப்பாக வைத்திருத்தல், உற்பத்தி விலையையும் விற்கும் விலையையும் கட்டுப்பாடு செய்தல், அவற்றின் ஏற்றுமதி இறக்குமதி ஆகியவைகளை ஒழுங்குபடுத்துதல் போன்ற பிரச்சினைகளே அவை. விவசாயப் பொருளாதாரத்தைப் பொறுத்த வரையில் இரண்டாம் உலகப் போரின்போது எண்ணற்ற பிரச்சினைகள் எழுந்தன. விவசாயத்தின் நிலையை உயர்த்தவும், பொது மக்களின் அவல நிலையைப் போக்கவும், சிறந்த ஒரு விவசாயத் திட்டத்தை ஏற்படுத்தி, அதன்மூலம் ஏராளமான

உற்பத்தியும் செழிப்பும் ஏற்படுமென மத்திய மாநில அரசாங்கங்கள் உறுதியளித்தன.

## (ஊ) கூட்டுறவு

இப்படிப்பட்ட பொதுவான வளர்ச்சியை உண்டாக்கும் முக்கியப் பொறுப்பைக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்றுக் கொண்டன. மத்திய மாநிலக் கூட்டுறவு பாங்குகளின் எண்ணிக்கை 614 ஆகவும், அவற்றின் அங்கத்தினர்கள் எண்ணிக்கை 2,26,000 ஆகவும், 1945–46 ஆம் ஆண்டில் இருந்தன. 1944–45ஆம் ஆண்டில் 60 லட்சம் ரூபாயாய் இருந்த முதலீடு, 1945–46ஆம் ஆண்டில் 69.97 லட்சம் ரூபாயாக உயர்ந்தது. 1944–45ஆம் ஆண்டில், 1,36,354 ஆக இருந்த விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை, 1946ஆம் ஆண்டில் 1,46,958 ஆகவும், அவற்றின் அங்கத்தினர் களின் எண்ணிக்கை 50,13,000லிருந்து 55,01,000 ஆகவும் அதிகமாயின. ஜனநாயக முறையில் இயங்கும் மத்திய மாநில ஆட்சிகளில் அவை மிகப் பயனுள்ள முறையில் இயங்கும் என எதிர்பார்க்கப்பட்டது.

## (எ) வாணிகம்

இரண்டாம் உலகப் போரானது, இந்திய வாணிகத்தை மிகப் பாதித்ததுமன்றி, பல மாறுதல்களையும் ஏற்படுத்தியது. ஐரோப்பா, ஜப்பான், ஜப்பானால் கைப்பற்றப்பட்ட பல அண்மைத் தேசங்கள் ஆகியவற்றுடன் நடத்தப்பட்ட இந்திய வாணிகத்தை இப்போர் நிறுத்தியதுமல்லாமல், பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளுடன் செய்யப்பட்ட வாணிகத்தையும் மிகப் பாதித்தது. 1938-39ஆம் வருடத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், 1942–43ஆம் ஆண்டில் ஏற்றுமதியில் 38 சதவிகிதமும், இறக்குமதியில் 70 சதவிகிதமும் குறைந்தன.[1] ஆயினும், 1943–44ஆம் ஆண்டின் வியாபார நிலையை அதன் முந்திய ஆண்டுடன்[2] ஒப்பிட்டுப் பார்க்கையில், மிக்க முன்னேற்றம் இருக்கிறது. போரின்பொழுது ஏற்றுமதி வர்த்தகத்தின் இயல்பும் மாறியது. கச்சாப் பொருள்களின் ஏற்றுமதி குறைந்தது. பொறி வழிப்பண்டங்களின் ஏற்றுமதி

1. Eastern Economist, July 30, 1943, p. 365.
2. Review of the Trade of India in 1943-44, p. 55.

அதிகமாயிற்று. '1938ஆம் ஆண்டில் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களில், பொறிவழிப் பண்டங்களும், கச்சாப் பொருள்களும், உணவுப் பொருள்களும், முறையே 30·5, 44·3, 23·5 சதவிகிதம் இருந்தன. ஆனல், 1944ஆம் ஆண்டில் பொறிவழிப் பண்டங்களும், கச்சாப் பொருள்களும் முறையே 51·5, 24·7, 22·5 சதவிகிதம் இருந்தன. மேலே குறிப்பிட்டவைகளில் அரசாங்கத்தின் தரப்பில் இறக்குமதி செய்யப்பட்ட உணவு தானியங்கள் போன்றவைகளும், அரசாங்கத் தளவாடங்கள் (Stores), இரயில்வேச் சாமான்கள் போன்றவைகளின் இறக்குமதியும் சேர்க்கப்படவில்லை.[1] இறக்குமதியைவிட ஏற்றுமதியே அதிகமானதால், 1945ஆம் ஆண்டில் 481·9 கோடி ரூபாயாய் இருந்த இந்தியாவின் மொத்த வாணிகம், 1946ஆம் ஆண்டில், 566·2 கோடி ரூபாயாய் உயர்ந்தது. இந்தியாவின் இறக்குமதி வாணிகமும், சீக்கிரத்திலேயே அதிகமாகி, போருக்கு முன்னிருந்த நிலையை அடைந்தது. 1944ஆம் ஆண்டில் 31·9 சதவீதமாய் இருந்த உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் இறக்குமதியும், 1946ஆம் ஆண்டில் 55·4 சதவீதமாய் அதிகரித்தது. ஆனல், சில காரணங்களால் 1947ஆம் ஆண்டு, மே, ஜூலை மாதங்களில் இறக்குமதியைக் கட்டுப்படுத்தும் சில உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. விவசாயப் பண்டங்களில் பற்றுக்குறை இருந்தமையாலும், 'அவற்றின் துய்ப்பு அதிகரித்தமையாலும்'[2] போருக்கு முன் இருந்த நிலையை இந்திய ஏற்றுமதி வாணிகம் உடனடியாக அடைய முடியவில்லை. பல நாடுகளுடன் செய்யப்பட்டு வந்த தனியார் வாணிகமும், போரின்பொழுது நிறுத்தப்பட்டு, போர் முடிந்த பிறகு, மறுபடியும் ஆரம்பிக்கப்பட்டது. போர் ஆரம்பமானதிலிருந்து 1945ஆம் ஆண்டு வரையில், பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளுடன் செய்யப்பட்ட வாணிகத்தில் சாதக வாணிகக் கொடுப்பல் நிலையிலேயே (favourable balance of trade) இந்தியா இருந்ததை இந்திய வாணிகத்தில் ஏற்பட்ட முக்கிய மாறுதல்களுள் ஒன்ருகக் கொள்ளலாம்; ஆனல், 1946-ல் பாதக வாணிகக் கொடுப்பல் நிலை (adverse balance) ஏற்பட்டது. ஐக்கிய அமெரிக்க நாட்டுடன் செய்யப்பட்ட இறக்குமதியின் மதிப்பும், ஏற்றுமதியின் மதிப்பும் அதிகமாயின. பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பு, 1938-39 ஆம் ஆண்டில், 8856 லட்ச

1. Eastern Economics, June 28, 1946, p. 1073.
2. Eastern Economist, November 7, 1947.

மாகவும், 1945–46ஆம் ஆண்டில் 101,83 லட்சமாகவும் அதிகரித்தபோது, அதே காலத்தில், இந்நாட்டில் இறக்குமதி செய்யப்பட்ட அமெரிக்கப் பண்டங்களின் மதிப்பு, 978 லட்சத்திலிருந்து, 6740 லட்சமாக உயர்ந்ததைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.[1] 1945ஆம் ஆண்டில் ஐக்கிய அமெரிக்காவுடன் ஏற்பட்ட வாணிகத்தில் பாதக வாணிகக் கொடுப்பல் நிலை இருந்தாலும், 1946ஆம் ஆண்டில், அது இந்தியாவுக்கு அனுகூலமாக மாற்றப்பட்டுவிட்டது.[2] 1945ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இந்திய சுங்க வரிக் குழு (Indian Tariff Board) பாதுகாப்பைக் கோரிய பல தொழில்கள் சம்பந்தமாகச் சில சிபாரிசுகளைச் செய்தாலும், அவை உடனே நிறைவேற்றப்படவில்லை. ஜெனிவா வாணிக மாநாட்டில் (Geneva Trade Conference) 1947ஆம் ஆண்டில் இந்தியா கலந்துகொண்டதால், இந்தியாவின் வெளிநாட்டு வாணிகம் மிகப் பாதிக்கப்பட்டது. அம்மாநாட்டில், பல முக்கியப் பொருளாதார ஒப்பந்தங்கள் உருவாகின[3].

## 4. கல்வியும் சமுதாய முன்னேற்றமும்

இந்திய நாடு முன்னேற வேண்டுமானால், கல்வித் திட்டத்தைத் திருத்தி அமைப்பது அவசியமென்று எல்லாரும் ஒப்புக்கொண்டனர். மக்களுள் எல்லாப் பகுதியினரிடத்தும் சரியான கல்வித் திட்டத்தைப் பரப்புவதன் மூலந்தான் புதிதாக உண்டான ஜனநாயகத்தையும் தேசிய உணர்ச்சியையும் வளர்த்துப் பாதுகாக்க முடியும். 1931ஆம் ஆண்டிற்கும், 1941ஆம் ஆண்டிற்கும் இடையில் கல்வி கற்றவர்களின் சதவிகிதம் 8முதல் சுமார் 12 வரைதான் அதிகரித்தது என்பதைக் குறிப்பிட வேண்டும். கல்வி நிலையங்கள் அதிகரிக்கப்பட்டு, கல்வி சம்பந்தமான புதிய நடவடிக்கைகள் சென்ற சில ஆண்டுகளில் எடுக்கப்பட்டாலும், எழுத்தறிவற்றவர்கள் இந்நாட்டிற்கு ஒரு மாபெரும் பிரச்சினையாகவே இருந்து வருகின்றார்கள்.

இந்திய அரசாங்கத்தின் வேண்டுகோளின்படி, மத்தியக் கல்வி ஆலோசனைக் குழு (Central Advisory Board of Education),

1. Eastern Economist, January 5, 1947.
2. Ibid., November 7, 1947.
3. Ibid., January 2, 1948.

கல்வி சம்பந்தப்பட்ட எல்லாப் பிரிவுகளையும் பற்றி ஏற்படுத்தக் கூடிய கல்விச் சீரமைப்புத் திட்டத்தைப் போருக்குப்பின் 1944ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் சமர்ப்பித்தது. ஆறு முதல் பதினொன்கு வயதுக்குட்பட்ட எல்லா ஆண், பெண் குழந்தைகளுக்கும் கட்டாய இலவசக் கல்வி முறையைப் புகுத்தியதோடல்லாமல், ஆறு வயதுக்குட்பட்ட பத்து லட்சம் குழந்தைகளுக்கான குழந்தைப் பள்ளிகளையும் (Nursery Schools), வகுப்புகளையும் ஏற்படுத்தும் திட்டமொன்றும், அதன் ஆலோசனையில் இருந்தது. பல வகுப்பு மாணவர்களுக்கும், பல தகுதிகளைப் பெற்ற மாணவர்களுக்கும் அவர்கள் ஆர்வத்திற்குத் தகுந்தவாறு, பல வகையான தொழில் நுட்பக் கல்வியையும் (Technical Education), தொழில் வாய்ப்புக்கல்வியையும் (Vocational Education) போதிக்கும் இடைநிலைப் பள்ளிகளை ஏற்படுத்தவும் அது சிபாரிசு செய்தது. தகுதியை வெளிப்படுத்திய மாணவர்களின் கல்விக்கு வறுமை தடையாய் இல்லாதிருக்கும் பொருட்டு அவர்களுக்கு இலவசக் கல்வி, கல்வி உதவித் தொகை, உணவுக்கான உதவித்தொகை (Maintenance Grant) போன்ற தாராளமான பண உதவிகளைக் கொடுத்து ஆதரிப்பதன் அவசியத்தை அது வலியுறுத்திக் கூறியது. இதற்குத் தகுந்தவாறு பல்கலைக் கழகங்களிலும், பல்கலைக் கழகங்களுக்குச் சமமான பலவிதத் தொழிலுக்குரிய நிலையங்களிலும், பல விதத் தொழில் நுட்ப நிலையங்களிலும், உயர்தரக் கல்வியைப் புகட்டுவதற்குரிய சிறந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டுவதன் அவசியத்தையும் அது வலியுறுத்தியது. 'இந்தியாவில் பெருகி வரும் தொழில், பொருளாதாரம், விவசாயம் ஆகியவைகளுக்குத் தேவையான ஆராய்ச்சியாளர்கள், நிருவாக அதிகாரிகள், திறன் மிக்க கைத்தொழில் நிபுணர்கள் (Craftsmen) ஆகியவர்களைப் பெறுவதற்காகத் தொழில் நுட்ப, வாணிக, கலைக்கல்வியைக் கற்பிப்பதற்கு இப்பொழுதுள்ள சாதனங்களை அதிகரிப்பதன் அவசியத்தையும் அக்குழு வற்புறுத்தியுள்ளது. கல்வித் துறையின் உட்பிரிவுகளான கலாசாரம், பொழுது போக்கு ஆகியவைகளுக்கு மிகுந்த வசதிகளைச் செய்து கொடுத்து, 'தனிப்பட்ட பண்புகளை மாணவர்கள் வளர்ப்பதற்கும் வழி செய்யப்பட வேண்டும்,' என்றும் அது கூறியது. 'நல்லொழுக்க அடிப்படையற்ற கல்வித்திட்டம், இறுதியில் பயன்படாது,' என்பதை அறிந்து, உடற்பயிற்சி, உள்ளப் பயிற்சி, ஒழுக்கப் பயிற்சி ஆகியவைகளைத் தெளிவாக இணைத்து, அவற்றின் மூலம் கல்வியின் எல்லா நிலைகளிலும்

பயிலும் மாணவர்களுக்கு நன்னடத்தைகளை உருவாக்குவதன் முக்கியத்துவத்தையும் அது உணர்த்தியது. சிறந்த இலட்சியக் கல்வி முறை ஒன்றைத் திட்டமிடுதல் தனது குறிக்கோள் அன்று என்றும், ஆனால், மற்ற நாகரிக நாடுகளுக்கு இணையாக இந்தியாவை உருவாக்குவதற்குக் குறைந்த பட்சக் கல்வித் திட்டத்தை உண்டாக்குவதுதான் தன் குறிக்கோள் என்றும் அக்குழுத் தெளிவாகக் கூறியது; கல்விக்குப் பொறுப்பாய் உள்ள பல அதிகாரிகளும், தாங்கள் வேலைபார்க்கும் பிரதேசங்களின் தேவைகளுக்குத் தகுந்தவாறு விரிவான திட்டங்களைத் தயாரிக்க வேண்டுமென்றும், அது யோசனை கூறியுள்ளது.

மத்திய, மாநில அரசாங்கங்களும், ஆரம்ப, இடைநிலை, பல்கலைக் கழகக்கல்வி, உடற்பயிற்சிக் கல்வி, ஊனமுள்ளவர்களின் கல்வி, தொழில் (தொழில் நுட்ப, விவசாய, வாணிகக்) கல்வி ஆகியவைகளை வளர்க்கும் பல திட்டங்களைச் சீக்கிரத்திலேயே எடுத்துக்கொண்டனர். பள்ளிப்படிப்புடன் கைத்தொழில் பயிற்சியையும் அளிக்கும் வார்தாத் திட்ட அடிப்படைக் கல்வியை (Wardha System of Basic Education), புதிதாக ஏற்பட்ட பல மாநில அரசாங்கங்கள், பல இடங்களிலும், படிப்படியாக ஏற்படுத்தின. பல்கலைக் கழகக் கல்வியைப் போதிப்பதற்கு ஆங்கிலத்திற்குப் பதிலாக வேறு மொழியை உபயோகப்படுத்தும் யோசனையும் கூறப்பட்டது; பல்கலைக் கழகத் துணை வேந்தர் பலரும், மத்தியக் கல்வி அமைச்சரும் கூடிய ஒரு மாநாட்டில் இதைப் பற்றி விவாதிக்கப்பட்டது. இந்த இடைக்காலத்தில் ஆங்கிலமே குறிப்பிட்ட காலம் வரையிலும் தொடர்ந்து இருக்க வேண்டுமென்றும், அதற்குப் பிறகு, ஆங்கிலத்திற்குப் பதிலாகப் பிரதேச மொழியையோ அல்லது மாநில மொழியையோ படிப்படியாகப் புகுத்தலாம் என்றும், அது ஏகமனதான அபிப்பிராயத்தை வெளியிட்டது.

ஆடவர்களைப் போலவே, பெண்டிருக்கும், அதே கல்வியைப் புகட்ட வேண்டும் என்றும் சொல்லும் அளவுக்குப் பெண்களின் கல்வியைப் பெருக்க வேண்டுவதன் அவசியத்தை மத்திய ஆலோசனைக் குழு, 1944ஆம் ஆண்டில் மிக வலியுறுத்தியது. குழந்தைகளின் கல்வியில் பெண்களுக்குள்ள சிறந்த பங்கை ஏற்றுக்கொண்டு, ஆரம்பப்பள்ளிக்கு முந்திய நிலையில் இருக்கும் குழந்தைப் பள்ளிகளிலெல்லாம் பெண்களே ஆசிரியர்களாக இருக்க வேண்டும் என்றும், ஆரம்ப

ஆதாரப் பள்ளிகளில் (Junior Basic Schools) குறைந்தது ஐந்தில் மூன்று பங்கும், உயர்நிலை ஆதாரப் பள்ளிகளில் (Senior Basic Schools) குறைந்தது பாதிப்பேர் பெண்களாகவே இருக்கவேண்டுமென்றும் அக்குழு சிபாரிசு செய்தது. ஆண்களுடன் சரி சமமாக வேலை செய்வதற்குப் பெண்களுக்கும் மிகுதியான சந்தர்ப்பங்கள் உண்டாயின; இதற்கு முன்பே பெண்டிருள் பலர், வாழ்க்கையின் பல துறைகளிலும் சிறந்தவர்களாய் விளங்கினார்கள். திருமதி இராதாபாய் சுப்பராயன் என்பவர், 1938ஆம் ஆண்டில், மத்திய மேல்சபையில் (Council of State) முதல் பெண் அங்கத்தினராயும், 1943ஆம் ஆண்டில், ரேணுகா ரே (Mrs. Renuka Ray) என்பவர் மத்தியச் சட்டசபையில் (Central Legislative Assembly) முதற்பெண் அங்கத்தினராயும் அமர்ந்தனர். ஐக்கிய நாடுகள், 'ஐக்கிய நாடுகளின் கல்வி, விஞ்ஞான, கலாசார நிறுவனம்' (யுனெஸ்கோ-Unesco) போன்ற பல சர்வதேச சங்கங்களில் நம் நாட்டின் பிரதிநிதியாய் திருமதி விஜயலட்சுமி பண்டிதர், திருமதி ராஜகுமாரி அமர்தகௌரி போன்ற தலைவியர்கள் சென்று, சிறந்த பணியைப் புரிந்திருக்கின்றார்கள் என்பது இந்தியாவுக்கு மிக்க பெருமைதரும் நிகழ்ச்சியாகும். பெண் உரிமைச் சாசனத்தை (Charter of Women's Rights) அகில இந்தியப் பெண்டிர் மாநாடு (All India Women's Conference), அரசியல் நிருணய சபைக்கு (Constituent Assembly) அனுப்பியது; எல்லாருக்கும் வாக்குரிமையை அளிக்கும் ஒரு விதியைப் புதிய இந்திய அரசியலமைப்பில் சேர்க்கவும், மத்திய மாநில அரசாங்கங்களிலும், சமூகப்பணி அமைச்சர் அவையை (Social Service Ministry) ஏற்படுத்தும் கோரிக்கைகளுமே, அதில் முக்கியமானவைகள்.

ஐக்கிய மாகாணத்திற்கு, சரோஜினி நாயுடுவை (Sarojini Naidu) கவர்னராக நியமித்தும், விஜயலட்சுமி பண்டிதரை மாஸ்கோவிலும் (Mascow) வாஷிங்டனிலும் (Washington) தூதுவராய் நியமித்தும், அமிர்தகௌரியை மத்திய மந்திரி சபையில் அமைச்சராய் நியமித்தும், சுதந்தர இந்தியா தன் பெண் குலத்தைக் கௌரவித்தது.

# 9. சுதந்தரப் போராட்டம்

## 1. தேசீயத்தின் வளர்ச்சி (1905–1916)

தேசிய இயக்கத்தின் வளர்ச்சிதான், இந்திய வரலாற்றில் இந்நூற்றுண்டின் முற்பாதியில் நடந்த மிகவும் முக்கிய நிகழ்ச்சியாகும். 4ஆம் அத்தியாயம் 3ஆம் பிரிவில், இவ் வியக்கத்தின் முதல் கட்டத்தைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாம் கட்டம் 1905ஆம் ஆண்டில் ஆரம்பமாகிறது. காங்கிரஸ் முதல் இருபது ஆண்டுகளில், தொடர்ச்சியாகப் பலவிதத் தீர்மானங்களை நிறைவேற்றிய போதிலும், அரசாங்கம் அதைப்பற்றிக் கவனிக்காமல் இருந்துவிட்டது; 1892ஆம் ஆண்டில் செய்யப்பட்ட இந்தியக் கவுன்சில்களின் சட்டம் (Indian Councils Act), காங்கிரசின் முயற்சியால் ஏற்பட்ட முக்கியப் பயனெனக் கருதலாம். இப்படி எவ்விதக் குறிப்பிடத்தக்க வெற்றியையும் காங்கிரஸ் பெருததால், அதிலிருந்த தீவிரவாதிகளின் கை ஓங்கியது; அதனுல், அவர்கள் மிக்க பலமடைந்து, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு எதிராக உறுதியான நடவடிக்கைகளை எடுக்கக் கோரினுர்கள். ரஷ்யாவை, 1904-5ஆம் ஆண்டில் தோற்கடித்து, ஜப்பான் அடைந்த மாபெரும் வெற்றியினுல் இப்புதிய உணர்ச்சி பலப் பட்டு, மக்கள் விரும்பாத நடவடிக்கையை அதாவது, வங்காளப் பிரிவினையை முன்பு குறித்தவாறு கர்சான் பிரபு (Lord Curzon) உண்டாக்கியதால், அவ்வுணர்ச்சி மிகத் தீவிரம் அடைந்தது. ஆட்சியின் திறமையை அதிகமாக்குதல் என்ற பெயரால், ஒன்றுபட்டிருந்த வங்காளிகளின் உறவு அறுக்கப் பட்டதால், அரசியலில் முன்னேற்றமடைந்திருந்த வங்காள அறிஞர்களின் பலம் மிகக் குறைந்தது. இதனுல், வங்காள மாகாணம், இரண்டு தனித்தனியான மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டது; இரண்டிலும், வங்காளிகளைவிட மற்றவர்கள் அதிக எண்ணிக்கையில் இருந்ததால் சமய விரோத

உணர்ச்சிகள் தூண்டப்பட்டு, அதனால், சமய சமுதாய உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்ட உண்மையான தேசீய உணர்ச்சியின் வளர்ச்சி தடைப்பட்டது. இந்து, முஸ்லீம் தலைவர்களைக் கொண்ட தேசீய வாதிகளின் உறுதியான எதிர்ப்பிருந்தும், வங்காளம் பிரிவினை செய்யப்பட்டது; இதனால், அவர்களுடைய எதிர்ப்புக் கடுமையாகி, அரசியல் இயக்கத்தில் ஒரு புதிய திருப்பம் உண்டாயிற்று.

சுரேந்திரநாத் பானர்ஜி (Surendranath Banerjee), பிபின் சந்திரபால் (Bepinchandra Pal), எ. ரசூல் (A. Rasul), அஸ்வினி குமார் தத்தா (Aswini Kumar Datta) அரவிந்த கோஷ் (Arabinda Ghosh) போன்ற தலைவர்களின் தலைமையின் கீழ், இவ்வியக்கம்; வங்காளத்திலும் அதற்கு வெளியிலும், காட்டுத் தீயைப் போன்று, மிக வேகமாய்ப் பரவியது. 1905ஆம் ஆண்டில், காங்கிரசுக்குத் தலைமை வகித்த கோகலே என்பவர், நிலைமையை நன்கு உணர்ந்து பின் வருமாறு கூறியிருக்கிறார் :

'பிரிவினையினால், வங்காளத்தில் மக்களிடையே ஏற்பட்ட இம்மாபெருணர்ச்சி நம் தேசீய வளர்ச்சியின் வரலாற்றிலேயே ஒரு முக்கியப் பகுதியாய் விளங்கும்... உண்மையான தேசீய உணர்வு இம்மாநிலம் முழுவதிலும் பரவியிருக்கிறது...கொடுமையான, கட்டுப்பாடற்ற அதிகார வர்க்கத்தின் (Bureaucracy) அடக்கு முறைக்கெதிராக வீரத்துடன் நின்ற வங்காளத்தைக் கண்டு அகில இந்தியாவும் ஆச்சரியத்தினால் மகிழ்ச்சி அடைந்திருக்கிறது. பரிவுக் குறிக்கோள் ஆகியவற்றால் உந்தப்பட்டு, நாட்டின் எல்லா மக்களும் ஒன்று சேர்வதற்கு இவ்வியக்கம் உதவியதால், வங்காளம் அடைந்த துன்பங்கள் வீண் போகவில்லை.'

வங்காளிகள் அரசாங்கத்தை வெளிப்படையாகவே எதிர்த்தார்கள் ; பிரிட்டிஷ் பொருள்களின் பகிஷ்காரம், சுதேசி (நம் நாட்டுப் பொருள்களை உபயோகித்தல்), தேசீயக் கல்வியைப் பரப்புதல் போன்ற அரசியல் ஆயுதங்களைக் கொண்டு, அரசாங்கத்தைப் பணிய வைக்க முயன்றனர். 1906-ல் கூடிய காங்கிரஸ் இத்திட்டங்களை ஆதரித்ததுடன் 'சுய ஆட்சியுடன் இயங்கும் பிரிட்டிஷ் காலனிகளைப் போன்ற ஆட்சி முறையைத் தலைவர் ஒரே வார்த்தையில் 'சுய ராஜ்யம்' எனச் சுருக்கமாகக் கூறியதைத் தனது குறிக்கோள் என வரலாற்றிலேயே முதன்முறையாகக் காங்கிரஸ் அறிவித்தது.

இம்மாற்றங்களில் பிரதிபலித்த இப்புதிய உணர்ச்சிகள் அடங்கிய தீர்மானத்தைத் திலகர், பிபின் சந்திரபால், லஜபதி ராய் போன்ற 'தீவிரவாதிகளின்' (extremists) தலைவர்கள் கொண்டு வந்தார்கள். ஆனால், 'மிதவாதிகளின்' (Moderates) தலைவர்களான சுரேந்திரநாத் பானர்ஜி, பெரோஜ் ஷா மேதா (Pheroze Shah Mehta), கோகலே போன்றவர்கள், இதை ஆதரிக்காததால், 1907ஆம் ஆண்டில் சூரத்தில் (Surat) கூடிய காங்கிரஸில் இரு கட்சியினருக்கும் இடையே வெளிப் படையான பிளவு ஏற்பட்டது. இதனால், தீவிரவாதிகளின் பகுதி, ஒன்பது ஆண்டுகள் வரையிலும் காங்கிரசை விட்டு விலகியே இருந்தது.

இம்முக்கியமான காலத்தில் பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டன. வங்காளத்தை அழிக்க நினைத்த கர்சான் பிரபுவினுடைய திட்டமும், 'புதிய தேசீயத்தின் (New Nationalism) தீர்க்க தரிசிகள்' என்று தம்மை வர்ணித்துக்கொண்ட படித்த இந்திய வகுப்பினரின் உரிமைகளை அவர் உதாசீனம் செய்ததும், தக்க பலனை அளித்தன. டாக்காவில் (Dacca) இருந்த நவாபு சலிமுல்லா (Nawab Salimulla) என்பவர், 'முஸ்லீம் லீகு' (Muslim League) என வழங்கப்பட்ட முஸ்லீம் களின் நிரந்தர அரசியல் நிறுவனம் ஒன்றை, 1906ஆம் ஆண்டில் ஏற்படுத்தினர்; அந்நிறுவனம் வங்காளப் பிரி வினையை ஆதரித்து, பிரிட்டிஷ் பொருள்களின் பகிஷ்காரத்தை எதிர்த்தது. அரசாங்கம் அடக்குமுறையைக் கையாண்டது. வங்காளத்தில் ஏராளமான மக்களும் அதை ஆதரித்த மற்ற மாகாணத் தலைவர்களும், திலகர் உட்பட, விசாரணை செய்யப் பட்டு, சிறையில் அடைக்கப்பட்டார்கள்; 1818-ல் ஏற்பட்ட பழைய சட்டப்படி, அவர்களுள் சிலர் விசாரணையின்றி நாடு கடத்தப்பட்டனர். அமைதியாக மறியல் (Pickets) செய்தவர்கள் பிரம்பால் அடிக்கப்பட்டுச் சிறைக்கு அனுப்பப் பட்டார்கள்; போலீஸ்காரர்கள் லத்தி (Lathi) என்கிற குண்டாந்தடியால் மக்களை அடித்து விரட்டிக் கூட்டங்கள் நடைபெற முடியாதபடி செய்தார்கள்; மக்களின் கிளர்ச்சிகள் மிகக் கொடுமையான முறையில் அடக்கப்பட்டன. ஆனால், இம்முறைகளால் தேசீய இயக்கத்தின் வளர்ச்சியைத் தடை செய்ய இயலவில்லை. எதிர் மாருக, அதிகாரிகளைக் கொன்று, அரசாங்கத்தைப் பயமுறுத்தும் இரகசியச் சதி செய்வதற்கு அவை வழி வகுத்தன. கல்கத்தாவிற்கு வெளியே, வெடி குண்டுகள் இரகசியமாகத் தயாரிக்கப்பட்டன; 'குழப்பவாதி களின் இயக்கம்' (Anarchist Movement) எனக் கூறப்பட்ட

அவ்வியக்கம், இந்திய அரசியலில் ஒரு புதிய நிகழ்ச்சியாய் விளங்கியது.

அடக்குமுறைக் கொள்கையினால் தன் எண்ணம் ஈடேருமற் போகவே, மின்டோ–மார்லி சீர்திருத்தங்களை (Minto-Morley Reforms) 1909ஆம் ஆண்டில் வழங்கியும், இரண்டு ஆண்டுகளுக்குப் பின் வங்காளப் பிரிவினையை மாற்றியும், 'மிதவாதிகளைத் தன் பக்கத்திற்கு இழுப்பதற்கு' அரசாங்கம் முயற்சி செய்தது. உடனே மிதவாதிகள் பேரானந்தம் அடைந்தார்கள். ஆனால், 1909ஆம் ஆண்டின் சீர்திருத்தத்தின் சில பகுதிகளை முக்கியமாக முஸ்லீம்களுக்காக ஏற்படுத்தப்பட்ட தனித் தேர்தல் தொகுதிகளை (Electorates) அவர்களுள் பலர் வெறுத்தனர். உண்மையில் பிரித்தாளும் (Divide and Rule) இக்கொள்கை, மிதவாதிகள், அரசாங்கத்தைக் கைவிட்டு, 1916ஆம் ஆண்டில் லக்னேவில் (Lucknow) நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் தீவிரவாதிகளுடன் ஒன்று சேர்வதற்கு வசதியாய் இருந்தது.

தனித் தேர்தல் தொகுதியைப் புகுத்தியதே, சுவையுள்ள வரலாருகும். காங்கிரஸ் இயக்கத்திற்கு எதிராக, முஸ்லீம்களைத் தம் பக்கம் இழுப்பதற்காக, மின்டோ பிரபுவாகிய புதிய வைசிராயால் கையாளப்பட்ட ஏற்பாடே தனித்தேர்தல் தொகுதி.[1]

1. மின்டோ சீமாட்டியின்படி (Countess of Minto) தனித்தேர்தல் தொகுதி முறைகள், கோகலே என்பவரால், பிரேரேபிக்கப்பட்டன. ஆனால், அவரது இக் கூற்றுக்கு ஆதாரமாக, அவர் எதையும் கொடுக்கவில்லை. கீழே கொடுக்கப்பட்டுள்ள கோகலே பேச்சின் சுருக்கம், அவருடைய உண்மையான நோக்கத்தைப் புலப்படுத்துகிறது :

'இந்த விஷயத்தில், கோகலே தம்முடைய நிலையை மிக வெளிப்படையாகக் கூறியுள்ளார். முக்கியச் சிறுபான்மையினருக்கான (Minorities) தனித்தேர்தல் தொகுதியை, அவர் என்றுமே ஆதரித்திருக்கிருர் ; ஆனால், அச் சமுதாயங்கள் அனைத்திற்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கும் தனித் தேர்தல் தொகுதிகளை அவர் ஆதரிக்கவில்லை ; பொதுத் தேர்தலில் குறைவாகப் பிரதிநிதித்துவம் பெறும் சமுதாயத்திற்கு நீதி வழங்கும் முறையிலே தான் தனித் தேர்தல் தொகுதியை அமையவேண்டும் என அவர் எண்ணினர்; அவசியம் நேர்ந்தபோது இம்முறை, முஸ்லீம்களல்லாத, மற்றச் சிறுபான்மையினருக்கும் அளிக்கப்படவேண்டுமென்று அவர் விரும்பினர். பொது வாழ்வின் சிறந்த நோக்கங்களை முன்னிட்டும், அவர்களுடைய நாட்டின் எதிர்காலத்தை முன்னிட்டும், சமய, இனவேறுபாடின்றி எல்லாச் சமுதாய மக்களும் பிரதேச அடிப்படையில், தேர்தலில் கலந்துகொள்ள வேண்டும்; அதன் பிறகு, பொதுத் தேர்தலில் தம் பங்கைவிடக் குறைவாகப் பெற்ற முக்கியச் சிறுபான்மையினருக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கும் வகையில், பிரத்தியேகமான துணைத்தேர்தல்கள், தனித்தொகுதியுடன் நடத்தப்படவேண்டும் என்பதுதான் அவர் கொள்கை.' (Speeches of Gopala Krishna Gokhale, Natesan & Co., 1138.

பிரிட்டிஷ் அரசாங்கத்தால் தூண்டப்படாவிட்டாலும், அதன் அதிகாரிகளால் தூண்டப்பட்ட ஒரு முஸ்லீம் தூதுக்குழு, முஸ்லீம்கள் ஒரு தனிப்பட்ட சமுதாயம் என்பதற்காகப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்றும், மேலும் அவர்களுடைய நிலைமையை எண்ணிக்கையைக்கொண்டு அளவிடக் கூடாதென்றும், ஆனால், அச் சமுதாயத்தின் அரசியல் முக்கியத்துவத்தையும், பேரரசுக்கு அது ஆற்றியுள்ள சேவையையும் கொண்டு அதை மதிப்பிடவேண்டும் என்றும் அது கோரியது. மின்டோ பிரபு, இவ்விரண்டையும் ஒப்புக் கொண்டார்; '62 மில்லியன் மக்களைத் தேசத் துரோக எதிர்ப்பாளர்களிடமிருந்து பிரிப்பதற்கு இச்சட்டம் உபயோகப்படும்,' என்று, பிரிட்டிஷ் அதிகாரவர்க்கம், பேரானந்தம் அடைந்ததாக, மின்டோவின் மனைவியாருடைய 1906ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், முதல் தேதி நாட்குறிப்பில் காணப்படுகிறது. லிபரல் கட்சியைச் சேர்ந்த ராஜ தந்திரியாரான மார்லி பிரபு என்பவர்கூட, 'தனித் தேர்தல் தொகுதி முறையையும், பண (Weightage) முறையையும் கொண்ட உன்னத ஏற்பாட்டை ஆதரித்தார்; இதனால், இந்தியத் தேசியமே மிகப் பாதிக்கப்பட்டது.

பின்னாட்களில், பிரிட்டனின் பிரதம மந்திரியாரான ராம்ஸே மெக்டொனால்டு (Ramsay Macdonald) நிலைமையை நன்குணர்ந்து பின் வருமாறு கூறினார்: 'ஆங்கிலோ இந்திய அதிகாரிகள் சிலரால் முகம்மதியத் தலைவர்கள் தூண்டப்பட்டுள்ளார்கள்; இவ்வதிகாரிகள், சிம்லாவிலும், இலண்டனிலும் திரைமறைவிலிருந்து வேலை செய்தார்கள்; பொறாமையால் தூண்டப்பட்டு, முஸ்லீம்களுக்குத் தனிச் சலுகையைக் காட்டி, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே, வேற்றுமையை வளர்த்தார்கள்.'

1906ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட முஸ்லீம் லீகு, முதன் முதலில், 'புதிய தேசியத்திற்குப்' பதிலாகச் சமயப் பிணைப்பை வற்புறுத்தும் சில முஸ்லீம்களின் நிறுவனமாய் இருந்தது. முதலில் விலகி இருக்கும் மனப்பான்மையை அது கொண்டிருந்தது. ஆனால், அதன் எண்ணிக்கை அதிகமானவுடனே, நாட்டில் நிலவிய தேசிய உணர்ச்சியை அதுவும் ஏற்றுக்கொண்டது. 1913-ல் 'பேரரசுக்குள் இருக்கும் சுய ஆட்சியை'த் தனது குறிக்கோளாக அது ஏற்றுக்கொண்டது. துருக்கி, பிரிட்டன் ஆகிய நாடுகளுக்கிடையே ஏற்பட்ட போரினால், பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரியான உணர்ச்சி, பெரும்பான்மையான முஸ்லீம்களிடத்தில் தோன்றி, லீகும்

காங்கிரசும் ஒத்துழைப்பதற்கான வழியை உண்டாக்கியது. காங்கிரசும் லீகும் தங்கள் கூட்டங்களை லக்னோவில், 1916ஆம் ஆண்டில் நடத்தி, பிரபலமான 'லக்னோ உடன்படிக்கை'யை (Lucknow Pact) ஏற்றுக்கொண்டன ; இதன்படி, தனித்தேர்தல் தொகுதியைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது; டொமினியின் அந்தஸ்தை (Dominion Status) அடிப்படையாகக் கொண்டு ஓர் அரசியல் அமைப்பை இரண்டு நிறுவனங்களும் சேர்ந்து உருவாக்கின.

காங்கிரசின் இருபகுதியினராய் இருந்த மிதவாதிகளும், தீவிர வாதிகளும் ஒன்று சேர்ந்த நிகழ்ச்சியும், இந்தியாவின் பொதுக்குறிக் கோளுக்காகக் காங்கிரசும் லீகும் ஒத்துழைத்த நிகழ்ச்சியும் 1916 ஆம் ஆண்டில் ஏற்பட்டன; அவ்வருட ஏப்ரல் மாதத்தில் லோகமான்ய திலகரால் நிறுவப்பட்ட ஒன்றும், அதன்பின் ஐந்து மாதங்களுக்குப் பிறகு அன்னிபெசன்டு (Annie Besant) அம்மையாரால் தொடங்கப்பட்ட மற்றொன்றுமாக, இரு ஹோம்ரூல் லீகுகள் (Home Rule Leagues) தொடங்கப்பட்டன. காங்கிரஸ் லீகு திட்டப்படி யுள்ள அரசியல் சீர்திருத்தங்களுக்கு ஆதரவாகத் தீவிரப் பிரசாரம் செய்வதில் இவ்விரு நிறுவனங்களும் ஒத்துழைத்தன.

## 2. ஒத்துழையாமையும் சட்ட மறுப்பு இயக்கமும் (1917–1934)

காங்கிரசுக்கும், முஸ்லீம் லீகிற்கும் நட்பு உறவை ஏற்படுத்திய 1914–18ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட போர், இந்தியர்களுக்கு மற்றும் பல வழிகளிலும் உபயோகமாய் இருந்தது. போரின் பல முக்கியக் கட்டங்களில், இந்தியச் சிப்பாய்கள், சிறந்த சேவைகளைப் போரசுக்கு ஆற்றி யுள்ளனர். இவ்வுண்மையை ஏற்றுக்கொண்டு, பிர்க்கன்ஹெட் பிரபு (Lord Birkenhead), பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்: 'இந்தியாவின் உதவி இல்லாவிடில், இப்போர் அதிகமாக நீடித்திருக்கும்; இந்நாட்டின் உதவி இல்லாவிடில், இப்போர் வெற்றிகரமான முடிவுக்கு வந்திருக்குமா என்பதே, உண்மையில் ஐயத்தைத் தரக்கூடியதுதான்.' இந்தியாவிற்கு அரசியல் சீர்திருத்தங்களை வழங்கி, அதன் உதவிக்குக் கைம்மாறு செய்ய வேண்டுமென்பதை இங்கிலாந்து உணர்ந்தது ; ஏனெனில், சுதந்தரமற்ற மக்களுக்குச் சுய

ஆட்சியை வழங்கி, இவ்வுலகத்தில் குடியரசைப் பாதுகாப்பதுதான், போரின்போது வெளிப்படையாக ஒப்புக்கொண்ட குறிக்கோள்களுள் ஒன்று. இதைத் தவிர, ரஷ்யப்புரட்சி ஜார் ஆட்சியின் (Tsarist Regime) வீழ்ச்சி ஆகியவை கற்பித்த பாடங்கள், பிரிட்டிஷ் அரசியல்வாதிகளுள் ஒரு பகுதியினர் மனத்தில் மாறுதலை ஏற்படுத்தின. இக்காரணங்களால், 1917ஆம் ஆண்டின் பிரபல அறிக்கையும் முன்பே குறிக்கப்பட்டுள்ள 1919ஆம் ஆண்டின் அரசியல் அமைப்பும் ஏற்பட்டன.

மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை (Montagu-Chelmsford Report) வெளியீட்டின் விளைவாக, காங்கிரசில் பிளவு ஏற்பட்டது. காங்கிரசின் ஒரு தனிக் கூட்டத்தில் இவ்வறிக்கை விவாதிக்கப்பட்டு, இது தேவைக்குக் குறைந்ததாகவும், ஏமாற்றம் அளிப்பதாகவும், திருப்தியற்றதாகவும் இருப்பதாகக் கூறி, கண்டிக்கப்பட்டது. அதனால், மிதவாதக் கட்சியைச் சேர்ந்த பெரும்பாலார், காங்கிரசை விட்டு விலகி, பின்பு இந்தியன் லிபரல் பெடரேஷன் (Indian Liberal Federation) என்ற கட்சியை ஏற்படுத்தினர். இச்சீர்திருத்தங்களை நடத்திப் பார்ப்பதற்கு மகாத்துமா காந்தி முதலில் இணங்கினார். காங்கிரஸ், 1919ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில், இதை ஆதரிக்க முடிவு செய்தது. ஆனால், ஓர் ஆண்டு முடியும் முன்பே, அவர் தமது முடிவை மாற்றிக்கொண்டார். கல்கத்தாவில் 1920ஆம் ஆண்டில் கூடிய பிரத்தியேக மாநாட்டில், அவருடைய தூண்டுதலினால், காங்கிரஸ் பிரபல ஒத்துழையாமைத் தீர்மானத்தை நிறைவேற்றியது; அரசாங்கப் பட்டங்களைத் துறத்தல், சட்டசபைகள், நீதிமன்றங்கள், அரசாங்கத்தின் கல்வி நிலையங்கள் ஆகியவைகளைப் பகிஷ்கரித்து (Boycott), பிறகு வரிகொடா இயக்கம் நடத்துவது போன்றவைகளை அது சிபாரிசு செய்தது. மேலும், சுயராஜ்யத்தை (சுயஆட்சி) நேர்மையான, சமாதான வழிகளின் மூலம் பெறுவதே இந்தியத் தேசியக் காங்கிரசின் குறிக்கோள் எனக் கூறப்பட்டது. 'சட்டப்படியான வழிகள்' என்பதற்குப் பதிலாக, 'நேர்மையான சமாதான வழிகள்' என்கிற சொற்கள் உபயோகிக்கப்பட்டன; சுயராஜ்யம் என்பதற்கு, 'இயலுமானால் பேரரசுக்குள் சுய ஆட்சி' என்றும், 'அவசியமானால், அதற்குக் கீழ்ப்படாத சுய ஆட்சி' என்றும் பொருள் கொள்ளப்பட்டது.

இப்புதிய கொள்கையை மக்கள் மிக்க உற்சாகத்துடன் வரவேற்று, ஆதரித்தார்கள். பிரிட்டிஷ் எழுத்தாளர் ஒருவர்

குறிப்பிட்டபடி, காந்திஜி 'இந்தத் தேசிய இயக்கத்தைப் புரட்சிகரமான இயக்கமாக மாற்றியதுமல்லாமல், இதை மக்கள் இயக்கமாகவும் மாற்றினூர். சட்டப்படியான கிளர்ச்சி என்கிற பழைய வழியைக் காங்கிரஸ் விட்டுவிட்டது; மக்கள் விரும்பியளிக்கும் ஆதரவு என்ற பரந்த அடிப்படையின்மீது இது எழுப்பப்பட்டது. அக்காலத்தில் ஏற்பட்ட சில நிகழ்ச்சிகள், இப்பெரிய மாற்றம் உண்டாவதற்கு மிகவும் உதவியாய் இருந்தன; அவற்றுள் இரண்டை—அதாவது, பஞ்சாபின் அட்டூழியத்தையும் கிலாபத்துக் கிளர்ச்சியையும் (Khilafat agitation)—முக்கியமாகக் குறிப்பிடலாம்.

ரௌலட்டுச் சட்டங்கள் (Rawlat Acts) எனப்படும், புதிய அடக்குமுறைச் சட்டங்களை அரசாங்கம் 1919ஆம் ஆண்டில் நிறைவேற்றியது; ரௌலட்டு என்கிற பெயரையுடைய ஒருவர் தலைவராய் இருந்த குழுவின் அறிக்கைப்படி இச்சட்டங்கள் தயாரிக்கப்பட்டதால் இவை அப்பெயரைப் பெற்றன. வழக்கு நடத்தப்படும் முறையைப் பின்பற்றுமல் விசாரணையின்றியே கைதிகளைச் சிறையிலடைப்பது போன்ற அசாதாரணமான அடக்குமுறை அதிகாரங்கள், போர்க் காலத்தில் அரசாங்கத்திற்குத் தரப்பட்டன; அவ்வதிகாரங்களைச் சமாதான காலத்திலும் நீடிப்பதற்கு இச்சட்டங்கள் வழி வகுத்தன. இவற்றைக் கண்டிப்பதற்காகக் காந்திஜி, ஒரு சாத்துவிக சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கினூர்; இதனால், 'மிகப் பெரிய ஆர்ப்பாட்டங்கள், கதவடைப்புகள், குழப்பம், கலகம் முதலியன, நாட்டின் பல பாகங்களிலும் பரவின.' அரசாங்கத்தினர், மிகக் கடுமையான முறைகளைக் கொண்டு இவ்வியக்கத்தை அடக்கினர்; அமிர்தசரசு நகரத்தில் சுற்றிலும் தடுக்கப்பட்டிருந்த 'ஜாலியன் வாலாபாக்' என்னுமிடத்தில், தடை செய்யப்பட்ட கூட்டத்தை அந்நகர மக்கள் நடத்தியது சம்பந்தமாக ஏற்பட்ட நிகழ்ச்சிதான், அரசாங்கத்தின்மீது மாபெரும் பழியை ஏற்படுத்தியது. வெளியே போவதற்கு முடியாத நிலையிலிருந்த ஒரு சாதாரண கூட்டத்தின் மீது, 1600 தோட்டாக்களை ஜெனரல் டயர் (General Dyer) என்பவரின் தலைமையின்கீழ் இருந்த துருப்புகள் சுட்டன. 'இதனால், 379 மக்கள் உயிரிழந்தார்கள்; 1200 பேர் காயமடைந்தனர்,' என்று அரசாங்கத்தரப்பிலேயும் கூறப்பட்டது. பஞ்சாப் முழுவதிலும், இராணுவச் சட்டம் அமுல் செய்யப்பட்டது; சுடுதல், தூக்கிலிடுதல், ஆகாயத்திலிருந்து குண்டுகளை வீசுதல், மிகக் கடுமையான தண்டனைகளை நீதிமன்றங்கள் விதித்தல் போன்ற கொடுமைகள் இப்பயங்கர

ஆட்சியின்போது இழைக்கப்பட்டன என்பது, பின்னர்ச் செய்யப்பட்ட விசாரணைகள் மூலம் தெரிய வந்தது.

துருக்கியைப் பணிய வைப்பதில், இங்கிலாந்து எடுத்துக் கொண்ட முயற்சியும் முதல் உலகப் போரின்போது துருக்கி சாம்ராஜ்யம் அழிக்கப்பட்ட நிகழ்ச்சியும் சேர்ந்து, முஸ்லீம் களின் சமய உணர்ச்சியையும் பழமை உணர்ச்சியையும் புண்படுத்தி, கோபமூட்டியது; அதனால், அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக நடக்க நேர்ந்தது. முகம்மது அலி, ஷௌகத் அலி (Shaukat Ali) ஆகிய இரு சகோதரர்களும், மௌலானா அபுல் கலாம் ஆஜாத்தும், கிலாபத்து இயக்கம் எனக் கூறப்பட்ட ஒரு மாபெரு முஸ்லீம் இயக்கத்தைத் தொடங்கினர்.

தொழிலாளர்களிடையேயும், அமைதியின்மை நிலவி வந்தது. 1919ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் ஏற்பட்ட பம்பாய் மில்களின் கதவடைப்பினால், 1,25,000க்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டார்கள்; 1920ஆம் ஆண்டின் முதல் ஆறு மாதங்களில், 200க்கும் குறையாத கதவடைப்பு களினால், 15 லக்ஷம் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டார்கள். பஞ்சாபின் அட்டூழியத்தைக் கண்டு, நாடு முழுவதுமே கொதித்தெழுந்தது; 'இந்துக்களையும் முகம்மதியர்களையும் ஒன்றாக இணைப்பதற்கு, நூறு ஆண்டு காலத்திலும் கிட்டாத ஓர் அரிய வாய்ப்பு, கிலாபத் இயக்கத்தில் இருப்பதைக் காந்திஜி கண்டார். அதனால், முழு மனத்துடன், கிலாபத்து இயக்கத்தை அவர் ஆதரித்தார்; இதனால், என்றுமில்லாதபடி இந்துக்களும், முஸ்லீம்களும் சகோதர பாவத்துடன் இருந்தார்கள்,' என்று அரசாங்க வெளியீட்டில் குறிக்கப் பட்டுள்ளது.

சுதந்தரத்திற்கான இத்தேசியப் போராட்டத்திற்கு அதிக ஊக்கம் அளிக்கும் வகையில், ஐக்கிய மக்களின் இயக்கத்தைத் திருப்பிவிடவேண்டுமெனக் காந்திஜி முடிவு செய்தார். மேலே குறிப்பிட்டபடி சாத்துவிக, ஒத்துழை யாமை (Non-Violent, Non-co-operation) இயக்கமாக இது உருவெடுத்தது. 1920ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதத்தில், கல்கத்தாவிற்கூடிய பிரத்தியேகமான காங்கிரஸ் மாநாட்டில், எதிர்ப்பிருந்துங்கூட, இவ்வியக்கம் ஆதரிக்கப்பட்டது; 1920ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் நாகப்பூரில் நடந்த ஆண்டு மாநாட்டிலும், இவ்வியக்கம் ஏகமனதாக மறுபடியும் உறுதிப்படுத்தப்பட்டது.

இந்திய இயக்கத்திற்கு நாடு முழுவதிலும் நல்ல ஆதரவு இருந்தது. 1920ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் சட்ட சபைகளுக்கு நடத்தப்பட்ட தேர்தலில் மூன்றில் இரண்டு, பங்கு வாக்காளர்கள் கலந்து கொள்ளவில்லை; ஏராளமான மாணவர்கள், தங்களுடைய பள்ளிகளிலிருந்தும், கல்லூரி களிலிருந்தும் வெளியேறினார்கள். தேசபந்து சி. ஆர். தாஸ், பண்டித மோத்திலால் நேரு போன்ற சிறந்த மேதைகள் தொழிலை உதறித்தள்ளினார்கள். நெருப்பை வளர்த்து அதில் இங்கிலாந்தின் துணிகளைத் தீக்கிரையாக்குவது, இவ்வியக் கத்தின் முக்கியக் கொள்கை; அரசாங்கத்திற் கெதிரான, சட்டமறுப்பு உணர்ச்சியும், சாத்துவிக எதிர்ப்புணர்ச்சியும், எல்லா இடங்களிலும் காணப்பட்டன. ஏறக்குறைய 30,000 அரசியற் கைதிகள் சிறைகளில் இருந்ததால், மக்களுக்குச் சிறைக்குப் போவதில் இருந்த அச்சம் நீங்கி, சிறைவாசம், புகழின் சின்னமாகக் கருதப்பட்டது. வேல்ஸ் இளவரசரை (Prince of Wales) இந்தியாவிற்கு வரவழைத்து, மக்களின் விசுவாச உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பும் பயனற்ற நம்பிக்கையை அரசாங்கம் கொண்டிருந்தது. ஆனால், இளவரசர் பம்பாயில் வந்திறங்கிய நாளில், இந்தியா முழுவதிலும் ஹர்த்தால் (hartal) பின்பற்றப்பட்டது; இந்தியாவின் மாகாணத் தலைநகரங்களுக்கு அவர் வருகை தந்த போது, பெரும்பாலும் அவர் சென்ற வீதிகளில் வரவேற் பளிப்பதற்கு மக்கள் முன் வரவில்லை.

இவ்விதம் 1921ஆம் ஆண்டு, சுதந்தரத்திற்கான இந்தியப் போராட்ட வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கிய நிகழ்ச்சி யாய் விளங்கியது. சாத்துவிக, ஒத்துழையாமைத் திட்டத்தைத் தொடர்ந்து தீவிரமாக நடத்தவும், சட்ட மறுப்பு இயக்கத்திற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவும் தனக்குள்ள உறுதியை அஹமதாபாத்தில் (1921 டிசம்பர்) நடத்தப்பட்ட ஆண்டு மாநாட்டில் காங்கிரஸ் வெளியிட்டது.

தேசீய இயக்கத்தைத் தலைமைதாங்கி நடத்துவதற்கு வேண்டிய முழு அதிகாரத்தையும் காங்கிரஸ், மகாத்துமா காந்திக்குக் கொடுத்தது. மக்களிடத்தில் பேரார்வம் ஏற்பட்டதால், மிகப் பெரிய அளவில் மக்கள் இயக்கம் நடைபெறும் என ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், 87,000 மக்களைக் கொண்ட ஒரு சிறிய மாவட்டமான பர்தோலியில் (Bardoli) மட்டும் அவ்வியக்கத்தை நடத்து வதற்குக் காந்திஜி முடிவு செய்தார். உ. பி. யில் கோரக்பூருக்கு

அருகில் உள்ள ஒரு சிறிய கிராமமாகிய சௌரி-சௌரா (Chauri Chaura) என்னுமிடத்தில் மக்கள் கூட்டம், மூர்க்கத் தனமான தாக்குதலில் இறங்கியதால், இவ்விடத்திலும் அவ் வியக்கம் நிறுத்தப்பட்டது; அத்தாக்குதலின் விளைவாக, ஒரு காவல் நிலையம் (Police Station) கொளுத்தப்பட்டு, இருபத் திரண்டு போலீஸ்காரர் கொல்லப்பட்டனர். காந்திஜியின் முடிவைக் கண்டு, நாடு முழுவதும் திடுக்கிட்டது. ஆனால், அம்முடிவை, 1922ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 12ஆம் தேதியில் கூடிய காங்கிரஸ் செயற்குழு ஆதரித்தது. அது காரணமாக, தேசிய இயக்கத்தின் சில நடவடிக்கைகள் பல ஆண்டுகள் வரையிலும் நிறுத்தப்பட்டன.

சி. ஆர். தாஸ் (C. R. Das), மோத்திலால் நேரு என்பவர் களின் தலைமையின் கீழிருந்த காங்கிரசின் ஒரு பகுதியினர், ஒரு புதிய கொள்கையைப் பின் பற்றினர்; சுயராஜ்யக் கட்சியை ஆரம்பித்தனர். உள்ளே இருந்துகொண்டு ‘ஒரே மாதிரியான உறுதியான தொடர்ச்சியான தடைகளை’ உண்டாக்கி, அதனால் அச்சீர்திருத்தங்களைப் பயனற்ற வையாகச் செய்யும் நோக்கத்துடன், சட்டசபைக்கு நடந்த தேர்தலில் அக்கட்சியினர் கலந்துகொண்டனர். இக் கொள்கையால் சில வெற்றிகள் கிட்டினாலும், அவர்களுடைய முக்கியக் குறிக்கோள் நிறைவேறவில்லை.

மக்கள் இயக்கம் நிறுத்தப்பட்டதால், தோல்வி மனப் பான்மை ஏற்பட்டு, அதனால், இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இடையே இருந்த நல்லுறவு பெரிதும் பாதிக்கப் பட்டது. அவர்களை ஒன்று சேர்த்து வைப்பதற்கான எவ் விதப் பொதுத் திட்டமும் தீட்டப்படவில்லை; கெமால் பாஷா (Kemal Pasha) தலைமையில், மதச்சார்பற்ற அரசாங்கம் (Secularist State) துருக்கியில் ஏற்பட்டதால், கிலாபத்து இயக்கத்திற்கு அவசியமில்லாமற் போய்விட்டது. இரண்டு சமூகங்களுக்கிடையே வெறுப்பை வளர்ப்பதில் நாட்டங் கொண்ட சிலராலும் வேறு பல காரணங்களாலும், இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்று சேர இயலவில்லை. 1923ஆம் ஆண்டில், வகுப்பு வாதக் கலகங்கள் (Communal riots) தொடர்ந்து ஏற்பட்டன. அவை ஒரு சில ஆண்டுகளில் மட்டும் ஏற்படாமல், தொடர்ந்து நடந்து, இந்திய அரசியல் வாழ்க்கையில் ஏற்படும் சர்வசாதாரண நிகழ்ச்சியாக்கப்பட்டு விட்டன. வகுப்பு வாத வெறுப்பினாலேதான், சுயராஜ்யக் கட்சி, தன் குறிக்கோளில் வெற்றிபெற இயலவில்லை. முஸ்லீம்

லீகு வலுவடைந்து சர் சையது அஹமது (Sir Syed Ahmed) என்பவருடைய பழைய கொள்கைகளைப் பின்பற்றியது. விட்டுக்கொடுக்கவியலாத தேசியக் குறிக்கோளைக் கொண்ட காங்கிரஸ், வகுப்பு வாதப் பிரச்சினையின் முழு அளவையும் தன்மையையும் சீர்தூக்கிப் பார்க்கவில்லை. மகாத்துமாவை விட்டுப் பிரிந்து சென்ற சில கிலாபத்துத் தலைவர்கள் முஸ்லீம் லீகில் சேர்ந்து அதைப் பலமடையச் செய்தார்கள். முஸ்லீம் லீகின் ஆற்றலையும் தகுதியையும் காங்கிரஸ் சரியாக மதிப்பிட வில்லை. தீவிரவாதிகளுக்கு எதிராக, மிதவாதிகளைத் தன் பக்கம் இழுப்பதற்கு பிரிட்டிஷ் ஆட்சி முயற்சி செய்தது போல, லீகிற்கு எதிராக, முஸ்லீம் தேசியவாதிகளைத் தன் பக்கம் இழுப்பதற்குக் காங்கிரஸ் முயன்றது. இரண்டிற்கும் ஒரே மாதிரியான பலனே கிடைத்தது; ஏனெனில், காலக் கிரமத்தில், எதிரியின் மாபெரும் வெற்றியைத் தடுத்து நிறுத்த இயலாத அளவுக்கு இரண்டும் செயலற்றுப் போயின.

சைமன் கமிஷன் (Simon Commission) பகிஷ்காரத்தின் மூலம் பற்பல சமூகங்களும், அரசியற் கட்சிகளும், ஒன்று சேர்வதற்குரிய வாய்ப்பு ஏற்பட்டது. காங்கிரஸ், முஸ்லீம் லீகு, லிபரல்பெடரேஷன், 1920ஆம் ஆண்டிற்குப் பிறகு காங்கிரசை விட்டுப் பிரிந்த மிதவாதிகளின் நிறுவனம் ஆகியவை ஒன்று சேர்ந்து, இந்திய அரசியலமைப்பை உரு வாக்கும் பணியில் ஈடுபட்டன. 1928ஆம் ஆண்டின் இறுதியில் கூடிய சர்வகட்சி மாநாடு, முஸ்லீம்களின் சார்பாகத் திரு. ஜின்னு விடுத்த கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ள மறுத்தது. அதனல், காங்கிரசின் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளாத, முஸ்லீம்களுடன் அவர் சேர்ந்துவிட்டார்; 1929ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், முதலாம் தேதியன்று அகில இந்திய முஸ்லீம் மாநாட்டை நடத்தி, முஸ்லீம்களின் உரிமை களைக் கொண்ட ஓர் அறிக்கையை வெளியிட்டது. பின்னர் அதே ஆண்டில், திரு. ஜின்னு விடுத்த பிரபலமான பதினுன்கு கோரிக்கைகளுக்கு, இவையே அடிப்படையாய் விளங்கின.

1927ஆம் ஆண்டில், சென்னையில் கூடிய மாநாட்டில், முழுத் தேசியச் சுதந்தரமே, காங்கிரசின் குறிக்கோள் என அறிவிக்கப்பட்டது. ஆனல், 1929ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், 31ஆம் தேதிக்குள், டொமினியன் அந்தஸ்து அளிக்கப் பட்டால், அதை ஏற்றுக்கொள்வதென்று, சர்வகட்சி மாநாட்டாலும், பின்பு காங்கிரசாலும், ஒப்புக்கொள்ளப் பட்டது. இவ்விதம் கொடுக்கப்படாவிடில், தனது

குறிக்கோளான முழுச் சுதந்தரத்தையும் பெறுவதற்கு முயலப்படும் எனக் காங்கிரஸ் முடிவு செய்தது; இதனுடன், சாத்துவிக, ஒத்துழையாமையையும் வரி கொடா இயக்கத்தையும் பின்பற்றவும் தீர்மானித்தது.

'டொமினியன் அந்தஸ்தை அடைவதுதான், இந்திய அரசியலமைப்பின் இயற்கையான முடிவாய் இருக்க முடியும்,' எனக் காங்கிரஸ் கோரிக்கைகளுக்குப் பதில் அளிக்கும் வகையில், இர்வின் பிரபு (Lord Irwin) என்னும் வைசிராய், 1929ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 31ஆம் தேதி அறிவித்தார்; சைமன் கமிஷனுடைய சிபாரிசுகளை விவாதிப்பதற்காக, எல்லாக் கட்சிகளையும் கொண்ட ஒரு வட்ட மேஜை மாநாடு இலண்டனில் நடத்தப்படும் என் அவர் மேலும் அறிவித்தார். இவை காங்கிரசின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்யாததால், 1929ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் லாகூரில் கூடிய காங்கிரஸ் மாநாட்டில், முழுச் சுதந்தரமே அதன் குறிக்கோள் என அறிவிக்கப்பட்டது ; மேலும், சட்ட சபைகளையும் வட்டமேஜை மாநாட்டையும் பகிஷ்கரிக்கவும், அது தீர்மானித்தது ; சட்டமறுப்புத் திட்டத்தைத் தொடங்குவதற்கான நடவடிக்கைகளையும் எடுத்தது. 1929ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 31ஆம் தேதி நள்ளிரவில், காங்கிரசின் தலைவரான பண்டித ஜவஹர்லால் நேரு, இந்தியாவின் தேசியக் கொடியைப் பறக்கவிட்டார். 1930ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 26ஆம் தேதி, இந்தியா முழுவதும், சுதந்தர தினம் கொண்டாடப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும், இவ்விதச் சுதந்தர தினம் குறிப்பிட்ட நாளில் கொண்டாடப்பட்டது; சுதந்தரத்திற்கான இந்தியப் போராட்ட வரலாற்றில், அந் நாள் ஒரு முக்கிய நாளாய் விளங்கியது.

மேற்கிந்தியாவில் உள்ள தண்டி (Dandi) என்னுமிடத்திற்கு யாத்திரை சென்று, உப்புச்சட்ட விதிகளுக்கு எதிராகக் கடற்கரையில் உப்பைக் காய்ச்சி, சட்டமறுப்பு இயக்கத்தை ஏப்ரல்,6ஆம் தேதி காந்திஜி தொடங்கினர். மாபெரும் மக்கள் இயக்கம் ஏற்படுவதற்கு இது வழிகாட்டியாய் அமைந்தது; பெருங்கதவடைப்புகள், பிரிட்டிஷ் பண்டங்களின் பகிஷ்காரம், சிட்டகாங்கில் இருந்த ஆயுதச்சாலையின்மீது செய்யப்பட்ட தாக்குதல், பல இடங்களில் 'போட்டி' அரசாங்கங்களை அமைத்தல் போன்ற பயங்கர நிகழ்ச்சிகள் அவ்வியக்கத்தின் போது ஏற்பட்டன. கடுமையான அடக்குமுறைகளை அரசாங்கம் மேற்கொண்டது. அரசாங்கக் கணக்குப்படி, ஓர்

ஆண்டுக்கும் குறைந்த காலத்தில் 29 முறை துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டு, அதனால், 103 பேர் கொல்லப் பட்டனர்; 420 பேர் காயமடைந்தனர்; 60,000 பேர் சிறையில் இடப்பட்டனர். அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்ட அடக்கு முறைகள் மூலம், ஆடவரும் பெண்டிரும் இரக்கமற்ற முறையில் அடித்துத் துன்புறுத்தப்பட்டனர்.

பிரிட்டிஷ் சமூகம், இந்தியர்களின் வேலை நிறுத்தத் தினாலும், பகிஷ்காரத்தினாலும் பெரிதும் பாதிக்கப்பட்டது. இவ்வியக்கத்தை வலிமைகொண்டு அடக்க முடியாததால், சமரச வழிகளை அரசாங்கம் பின்பற்றத் தொடங்கியது. காங்கிரஸ் பிரதிநிதிகள் இல்லாமல், 1930ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் கூடிய வட்டமேஜை மாநாடு, 1931ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 2ஆம் தேதிக்குத் தள்ளிவைக்கப்பட்டது; மார்ச்சு மாதம், 4ஆம் தேதி, மிகப் பிரபலமான காந்தி-இர்வின் உடன்படிக்கை ஏற்பட்டது. இதன்படி, சட்டமறுப்பு இயக்கத்தைக் கைவிடவும், வட்டமேஜை மாநாட்டில் பங்கு கொள்ளவும், காங்கிரஸ் ஒப்புக்கொண்டது; அரசாங்கமும், அடக்குமுறைச் சட்டங்களை வாபஸ் பெற்று, பலவந்தமான செயல்களில் ஈடுபட்டவர்களைத் தவிர்த்து, மற்ற அரசியல் கைதிகளை விடுதலை செய்தது.

வட்டமேஜை மாநாட்டின் கூட்டத்திற்கு (1931ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 7ஆம் தேதி முதல் டிசம்பர் முதல் தேதிவரை) காங்கிரசின் பிரதிநிதியாகக் காந்திஜி தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், வகுப்புப் பிரச்சினை, தீர்வு காண முடியாத பிரச்சினையாய்த் தென்பட்டது; இந்தியத் தலைவர்களுக்குள் ஒருவித முடிவும் ஏற்படாததால், பிரதம மந்திரியாரான ராம்ஸே மெக்டொனல்டு (Mr. Ramsay Macdonald) என்பவர், பிரபல வகுப்பு வாதத்தீர்ப்பை (Communal Award) அறிவித்தார். 1931ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 28ஆம் தேதி, இந்தியாவிற்குத் திரும்பிய காந்திஜி, அரசாங்கத்தின் அடக்குமுறைகள் முழுமூச்சுடன் இயங்கு வதைக் கண்டார். வைசிராயைப் பேட்டி காண்பதற்கான அவரது வேண்டுகோள் நிராகரிக்கப்பட்டது ; 1932ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், முதல் தேதியிற்கூடிய காங்கிரஸ் செயற்குழு, சட்டமறுப்பு இயக்கத்தையும், பிரிட்டிஷ் பொருள்களின் பகிஷ்காரத்தையும் மறுபடியும் தொடங்குவதற்குத் தீர்மானித்தது. ஜனவரி மாதம், 4ஆம் தேதி, காந்திஜி கைது செய்யப்பட்டார். காங்கிரஸ் ஒரு சட்ட விரோதமான

நிறுவனம் என அரசாங்கம் அறிவித்து, பல அடக்குமுறைச் சட்டங்களைக் கொணர்ந்தது. அவை பகிரங்கமாக மீறப் பட்டன; அதனால், எதிர்ப்பு இயக்கத்தை அடக்குவதற்காகக் கடுமையான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்தது. காங்கிரசின் அறிக்கைப்படி, 1933ஆம் ஆண்டு, மார்ச்சு மாத இறுதி வரையில், 1,20,000 பேர் கைது செய்யப்பட்டனர்; பரவலான பலவந்தங்கள், பலாத்காரச் செயல்கள், துப்பாக்கி யால் சுடுதல், அடித்தல், தண்டனை அளிக்கும் பொருட்டுச் செய்யப்பட்ட படையெடுப்புகள், கிராமங்களின்மீது மொத்த மாக விதிக்கப்பட்ட அபராதங்கள் (Collective fines), கிராம மக்களின் நிலங்களையும் சொத்துகளையும் கைப்பற்றுதல் போன்றவை அச்சமயத்தில் ஏற்பட்டன என்று, 1933ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட, இந்தியாவுக்குத் தூதுக்குழுவின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்விதத் துன்பமயமான சூழ்நிலையிலேதான், பிரிட்டிஷ் அரசாங்கமும் தன்னுடைய அரசியல் திட்டங்களை வெளி யிட்டது. ராம்ஸே மெக்டொனல்டு அளித்த வகுப்புத் தீர்ப்புப் படி, ஒடுக்கப்பட்ட, வகுப்பினர்களுக்குத் தனிவாக்காளர் தொகுதி உண்டாக்கப்பட்டது; இச்சமயத்தில் சிறையில் இருந்த காந்திஜி, இதைக் கண்டு மனங்கொதித்து, உண்ணா விரதத்தை மேற்கொண்டார். இதன் பயனாகப் பூனா உடன் படிக்கை ஏற்பட்டது; இவ்வுடன்படிக்கையின்படி, தாழ்த்தப் பட்ட மக்களுக்கெனச் சட்ட சபையில் ஒதுக்கப்பட்டிருந்த இடங்களின் எண்ணிக்கை இரட்டிப்பாக்கப்பட்டது; முதலில் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கொடுக்கப்பட்ட பட்டியலிலிருந்து, வேண்டிய நபர்கள், ஒரு பொதுக் கூட்டுத் தொகுதி மூலம் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

## 3. இறுதிக்கட்டம் (1935–1947)

சட்டமறுப்பு இயக்கம், 1934ஆம் ஆண்டு, மே மாதம் வரையில் நடத்தப்பட்டு, அதன் பிறகு காங்கிரசால் கைவிடப் பட்டது. முன்பு குறித்தவாறு 1935ஆம் ஆண்டு சட்டத்தால் உண்டாக்கப்பட்ட சீர்திருத்தங்களை நடத்திப் பார்ப்பது என்கிற முடிவை, 1922ஆம் ஆண்டில் செய்தவாறு, மறுபடியும் காங்கிரஸ் செய்தது. பொதுத் தொகுதிகள் அல்லது இந்துக்கள் அதிகமாய் இருந்த தொகுதிகள் சம்பந்தப்பட்ட வரையில் 1937ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் நடத்தப்பட்ட தேர்தலில், காங்கிரஸ் வெற்றி மாலை சூடியது. ஒவ்வொரு

மாகாணத்திலும் கலப்பு மந்திரி சபைகளை அமைப்பதற்கு முஸ்லீம் லீகு விரும்பியது; ஆனால், தன் கொள்கையை ஒப்புக் கொள்ளாத எந்தக் கட்சியையும், மந்திரி சபையில் சேர்த்துக் கொள்வதில்லை என்று கூறி காங்கிரஸ் மறுத்தது. இம் முடிவினால், காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இடையே இருந்த பிளவு அதிகரித்தது; இந்தியா ஒரு நாடு அன்று[1] என்கிற கொள்கையை உறுதியாக எதிர்த்தவரும், இது வரையில் காங்கிரசின் குறிக்கோளை அனுதாபத்துடன் நோக்கியவருமான திரு. ஜின்னா, 'காங்கிரஸ் ஆட்சியில் நேர்மையையோ அல்லது நியாயத்தையோ முஸ்லீம்கள் எதிர்பார்க்க இயலாது,' என வெளிப்படையாக அறிவித்தார். இப்பொழுதுள்ள பெரும்பாலாரான முஸ்லீம்களும் இவ்வித நோக்கத்தையே பெற்றிருக்கிறார்கள். திரு. ஜின்னா முஸ்லீம் சமூகத்தின் ஒப்பற்ற தலைவராய்த் திகழ்ந்தார்; அதனால், அவர் ஆண்டுதோறும் லீகின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப் பட்டார்; இந்தியா முழுவதிலுமிருந்த பெரும்பாலாரான முஸ்லீம்கள், லீகை ஆதரிக்கத் தொடங்கினார்கள்.

இந்தியாவிலிருந்த பதினொரு மாகாணங்களுள் ஏழில்,[2] காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கப்பட்டது. அச்சபையின் ஆட்சி மிகச் சிறந்த முறையில் அமைந்ததால், காங்கிரஸ் மிக்க விரைவிலேயே மாபெரும் புகழைப் பெற்றது; 1936ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் அரை மில்லியனாய் இருந்த அதன் அங்கத்தினர்களின் தொகை, 1939ஆம் ஆண்டு இறுதியில், ஐந்து மில்லியன்களாய்ப் பெருகியது. ஆனால், மிகு விரை விலேயே ஓர் 'இடச்சாரிக் கட்சியும்' (Left wing) காங் கிரசுக்குள் வளர்ந்தது; தலைவர் பதவிக்குக் காந்திஜியால் நியமிக்கப்பட்டவர், இடச்சாரிக் கட்சியின் தலைவரான **சுபாஷ் சந்திர போஸ்** என்பவரால் தோற்கடிக்கப்பட்ட போதுதான், அக்கட்சியின் மாபேராற்றல் தெரிய வந்தது. இறுதியில், மிதவாதிகளின் தலையீட்டினால், சுபாஷ் சந்திர போஸ், ராஜிநாமாச் செய்ய வேண்டி ஏற்பட்டது; 'பார்வர்டு பிளாக்' (Forward Block) என்கிற புதுக்கட்சியை அவர் தொடங்கினார்; இப்படி வெளிப்படையாய் ஏற்பட்ட பிளவினால், காங்கிரசின் ஆற்றலும் புகழும் மிகக் குன்றின.

1. Modern Review, Oct. 1925, P. 462.

2. இதில் சிந்து மாகாணம் சேர்க்கப்படவில்லை; அதில் இருந்த மந்திரிகளும் பெரும்பான்மையான சட்டசபை அங்கத்தினர்களும், காங்கிரஸ் பெரும்பான்மையாய் உள்ள மாகாணமாய் அது மாறியது.

எனினும், சீர்திருத்தங்களை மிக வெற்றிகரமான முறையில் காங்கிரஸ் நடத்திக்காட்டியது; 1939ஆம் ஆண்டில் இரண்டாம் உலகப் போர் ஆரம்பமாகும் வரையில் அரசியல் நிலைமை அமைதியாகவே இருந்தது; சம்மதமில்லாமல், போரில் இந்தியா இழுக்கப்பட்டுவிட்டது எனக் காங்கிரஸ் குறை கூறியது. ஏகாதிபத்திய முறையில் நடத்தப்படும் இப் போருக்குத் தனது ஒத்துழைப்பைக் கொடுப்பதற்கில்லை எனக் காங்கிரசின் செயற்குழு உறுதியாய் அறிவித்தது. 'ஏகாதிபத்தியத்தை அழிப்பதும், இந்தியாவைச் சுதந்தர நாடெனப் பாவிப்பதும், போரின் குறிக்கோள்களா?' என, பிரிட்டிஷ் அரசாங்கத்தை அக்குழுக் கேட்டது. எவ்விதத் திருப்திகரமான பதிலும் கிட்டாமையால் 1939ஆம் ஆண்டு அக்டோபர்-நவம்பரில் எல்லாக் காங்கிரஸ் மந்திரி சபைகளும் ராஜிநாமாச் செய்தன. மத்தியில் குறைந்த பட்சம் ஒரு தாற்காலிகத் தேசிய அரசாங்கமாவது (Provisional National Government) அமைக்கப்பட்டால், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் போர் முயற்சிக்குத் தனது ஆதரவைத் தந்து ஒத்துழைப்ப தாகப் பலமுறை காங்கிரஸ் கூறியது. அரசாங்கம் கொடுக்கக் கூடிய அதிகப் பட்சமான சலுகைகள், 1940ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 8ஆம் தேதி வெளியிடப்பட்ட வைசிராய் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்கு அவர் மறுத்தார்; ஏனெனில், 'இந்தியத் தேசிய வாழ்வில் உள்ள பெரிய ஆற்றல் வாய்ந்த சத்திகள், தேசிய அரசாங்கத்தை அமைப்பதற்குக் காங்கிரசுக்கு உள்ள உரிமையை ஏற்றுக்கொள்ளவில்லை; இச்சத்திகள், முஸ்லீம் களையே குறிக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பின் காண்பவைகளை ஏற்படுத்த முன் வந்தார்: (1) போர் முடிந்த பிறகு இந்தியாவிற்கு ஒரு புதிய அரசியலமைப்பை ஏற்படுத்துவதற்காகப் பிரதிநிதிகள் சபை ஒன்றை அமைப்பது; (2) அதிகப்படியான இந்திய அங்கத்தினர்களை நியமித்து, வைசிராயின் நிருவாகச் சபையை விரிவு படுத்துதல்; (3) பிரிட்டிஷ் இந்தியா, இந்திய சமஸ்தானங்கள் ஆகியவைகளின் பிரதிநிதிகளைக்கொண்ட ஒரு 'போர் ஆலோசனைச் சபை'யை (War Advisory Council) ஏற்படுத்துதல்.

ஆகஸ்டு மாதச் சலுகைகள் (August Offers) காங்கிரசுக்குத் திருப்தியாய் இல்லை; அதனால், மகாத்துமா காந்தியின் தலைமையில், தனி நபரின் சட்ட மறுப்பு இயக்கத்தை 1940ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் காங்கிரஸ் ஆரம்பித்தது.

இவ்விதக் குழப்பநிலை (Deadlock) ஒன்றரை ஆண்டுகள் வரையிலும் நீடித்தது. மலேயாவைக் கைப்பற்றி, பர்மாவில் வெகுவேகமாக ஜப்பானியர்கள் முன்னேறிக்கொண்டிருந்த சமயத்தில், பிரிட்டிஷ் அரசாங்கம், சமரச மனப்பான்மையைக் காட்டியது. 1942ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 8ஆம் தேதியில் இரங்கூன் வீழ்ச்சியுற்றது; மூன்று நாள்களுக்குப் பிறகு, பிரிட்டிஷ் மந்திரி சபையில் அங்கத்தினராய் இருக்கும் சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் (Sir Stafford Cripps) என்பார் இந்தியாவிற்கு அனுப்பப்படுவார் என அறிவிக்கப்பட்டது. ஆகஸ்டு மாதச் சலுகைகளையே கிரிப்ஸும் கொடுக்க முன் வந்தார். 'போருக்குப் பின், டொமினியன் அந்தஸ்தும், அரசியல் நிருணயச் சபையும் கொடுக்கப்படும்,' என உறுதி மொழி அளித்தார்; ஆனால், உடனடியாக மாறுதல்கள் இந்திய அரசாங்கத்தில் செய்யப்படும் என்கிற நம்பிக்கையை அவர் கொடுக்கவில்லை. காங்கிரசும், முஸ்லீம் லீகும், அவருடைய சலுகைகளை ஏற்க மறுத்தன; இதனால், கிரிப்ஸ் தூது (1942, மார்ச்சு-ஏப்ரல்) இறுதியில் தோல்வியடைந்தது.

இப்பேச்சு வார்த்தைகளின்போது, முஸ்லீம் லீகின் ஆதரவைப் பெறுவதற்குக் காங்கிரசால் இயலவில்லை. ஒரே வகையான நாடு என்ற கொள்கையின் மீது உண்டாக்கப்படும் ஜனநாயகத் திட்டமான பாராளுமன்ற அரசாங்கமும், மக்களை எண்ணிப் பார்க்கும் முறையும் இந்தியாவில் நடக்க முடியாது என திரு. ஜின்னு வாதித்தார். சிறுபான்மையினருக்குக் கொடுக்கப்பட்ட பாதுகாப்புகளாவது, தனித்தொகுதி முறையாவது, முஸ்லீம்களை மத்தியிலிருக்கும் காங்கிரஸ் ஆட்சியில் (Raj) இருந்து காப்பாற்ற முடியாது என வெளிப் படையாகவே, தம் நோக்கங்களை அவர் எடுத்துரைத்தார். மாகாணங்களிலிருந்து காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜிநாமாச் செய்தபோது, விடுதலை-நன்றியறிவிக்கும் தினத்தை இந்தியா முழுவதிலும், முஸ்லீம் லீகு கொண்டாடியது.

இந்துக்களும் முஸ்லீம்களும் தனித்தனியான நாட்டினர்கள் என்றும், 'இருவருக்கும் பொதுவான தாய் நாட்டின் அரசாங்கத்தில், அவர்கள் பங்குபெற வேண்டும்,' என்றும் திரு. ஜின்னு 1940ஆம் ஆண்டு, ஜனவரி மாதத்தில் கூறினர். மூன்று மாதங்களுக்குப் பிறகு, லாகூரில் கூடிய முஸ்லீம் லீகு மாநாட்டில் (1940, மார்ச்சு) முஸ்லீம் இனத்த வருக்கு ஒரு தனியான சுதந்தரநாடு தேவை என, அவர்

அறிவித்தார். வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், பாக்கிஸ்தான் அல்லது பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம் அல்லது ஆப்கானிய மாகாணம், காஷ்மீரம், சிந்து, பலுச்சிஸ்தான்[1] ஆகியவைகளை ஒரு கூட்டரசாகக்கொண்ட ஒரு சுதந்தர நாட்டை அவர் கோரினார்.

வட்டமேஜை மாநாடு நடந்தபோதுதான், பாக்கிஸ்தான் ஏற்படுத்தும் திட்டம், முஸ்லீம் வாலிபர் சிலரால் பிரபலப் படுத்தப்பட்டது; ஆனால், அதை ஆதரிக்க எவரும் முன் வரவில்லை; 'இது ஒரு மாணவனின் திட்டம்' (A Student's Scheme), எனவும், 'விசித்திரமானது; நடவாதது' எனவும், முஸ்லீம் தலைவர்கள் கூறினார்கள். இரண்டொரு முஸ்லீம் மாகாணங்களைக் கொண்ட பாக்கிஸ்தானையும், இந்தியா வின் மற்றப் பகுதிகளையும் இணைத்து, ஒரு சமஷ்டி அரசாங்கத்தை ஏற்படுத்தும் சர் முகம்மது இஃபாலின் (Sir Muhammad Iqbal) திட்டம் 1930ஆம் ஆண்டில் முதன் முதல் வெளியிடப்பட்டது. 1939ஆம் ஆண்டில் மறுபடியும் விவாதிக்கப்பட்டது. ஆனால், இத்திட்டத்தைக் கூடப் பெரும் பாலார் ஒப்புக்கொள்ளவில்லை.[2] பாக்கிஸ்தான் என்கிற சுதந்தர தேசத்தை ஏற்படுத்தும் யோசனை திரு. ஜின்னாவால் மறுபடியும் ஆதரிக்கப்பட்டு, 1940ஆம் ஆண்டில், முஸ்லீம் லீகால் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்நாளிலிருந்து, பாக்கிஸ்தான் பிரச்சினையின் மீது, காங்கிரசுக்கும் லீகிற்கும் இடையே, சமரசம் செய்து வைப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகள் யாவும் வீணாயின. காங்கிரசின் கோரிக்கையான தேசிய அரசாங்கத்தை முஸ்லீம்கள் எதிர்க்கிறார்கள் என்று காரணம் காட்டி, அதை மறுப்பதற்கு அரசாங்கத்திற்கு ஒருசந்தர்ப்பம் கிட்டியது.

1. பாக்கிஸ்தான் என்கிற பெயர் (முதலில் பாக்கிஸ்தான்) 'புனித நாடு' (Sacred Land) என்ற பொருளைக் கொடுக்கிறது. முதல் நான்கு மாகாணப் பெயர்களின் முதல் எழுத்தையும் இறுதியில் கூறப்பட்ட பெயரில் இருக்கும் கடைசி எழுத்தையும் கொண்டு உண்டாக்கப்பட்டதுதான் பாக்கிஸ்தான் என்ற பெயர். (R. Coupland, The Constitutional Problem of India, Part II, p. 199.)

2. சில மாகாணங்களில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே தொடர்ந்து இருந்து வந்த பூசல்களையும் பொறாமைகளையும் நீக்குவதற்காக வடகிழக்கிலும், வடமேற்கிலும் முஸ்லீம் மாகாணங்களை அமைக்கலாம் என, லாலா லஜபதி ராய் (Lala Lajpat Rai) 1925ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்திற்கு முன்பு கூறியிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது (Mod. Rev. 1925, p. 489.)

மாபெரு மக்கள் போராட்டத்தை, மிகப் பரந்த அளவில் ஆரம்பிப்பதற்குச் சாதகமான ஒரு தீர்மானத்தை 1942ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 8ஆம் தேதி, இந்திய காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றியது. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் காங்கிரஸ் செய்யவில்லை என்றாலும் அதை உடனே தடுப்பதற்கு அரசாங்கம் முடிவு செய்தது. ஆகஸ்டு மாதம் 9ஆம் தேதி விடியற்காலையிலேயே, எல்லாக் காங்கிரஸ் தலைவர்களும் கைது செய்யப்பட்டு, காங்கிரஸ் ஒரு சட்டவிரோதமான நிறுவனம் என அறிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட ஒரு நிறுவனமும் தலைவர்களும் இல்லாததால், தந்திக்கம்பிகளை அறுத்தல், ரயில் பாதைகளுக்கும் நிலையங்களுக்கும் சேதம் விளைவித்தல் போன்ற பலாத்காரக் கலகங்கள், தாக்குதல்கள், பரவலான குழப்பங்கள் போன்றவை இந்தியாவின் பல பாகங்களிலும், மிக விரிந்த அளவில் ஏற்பட்டன. ஆகாய விமானத்திலிருந்து சுடுதல் உட்பட, பல கடுமையான அடக்கு முறைகளை அரசாங்கம் கையாண்டது. அதிகாரிகளின் மதிப்பீட்டின்படி, 1942ஆம் ஆண்டின் கடைசி ஐந்து மாதங்களில், போலீஸ் அல்லது இராணுவம் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததால், 940 பேர் கொல்லப்பட்டனர்; 1630 பேர் காயமடைந்தனர்; இவர்களைத் தவிர 60,000க்கும் அதிகமான மக்கள் கைது செய்யப்பட்டார்கள்; 18,000 பேர்கள், விசாரணையின்றிக் காவலில் வைக்கப்பட்டார்கள்.

இவ்வித அடக்குமுறைச் சட்டங்களால் இந்தியாவில் ஏற்பட்ட குழப்பங்கள் பெரிதும் குறைந்த போதிலும் சீக்கிரத்திலேயே மற்றொரு ஆபத்தை பிரிட்டிஷ் ஆட்சி எதிர் நோக்க வேண்டியிருந்தது. 1941ஆம் ஆண்டில் இந்தியாவிலிருந்து தப்பி ஓடிய சுபாஷ் சந்திர போஸ், ஜெர்மனியுடனும் ஜப்பானுடனும் உறவு வைத்துக்கொண்டார். மலேயாத் தீபகற்பகத்தை ஜப்பானியர்கள் கைப்பற்றியபோது, ஏராளமான இந்தியத் துருப்புகள், அவர்களால் கைது செய்யப்பட்டன. நேத்தாஜி (தலைவர்) என வழங்கப்பட்ட போஸ், ஜப்பான் நாட்டு அரசருடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, இந்தியத் துருப்புகளைக்கொண்டு அஜாத் ஹிந்த் பௌஸ் (Azad Hind Fouz) அல்லது 'இந்திய தேசிய இராணுவம்' என்ற பெயரில் ஒரு படையை அமைத்தார். சுதந்தர இந்தியாவின் அரசாங்கத்தை அவர் சிங்கப்பூரில் அமைத்தார்; 1943ஆம் ஆண்டில் அவருடைய துருப்புகள், ஜப்பானிய இராணுவத்துடன் முன்னேறி, இந்திய எல்லை வரையிலும் வந்தன.

உடல் நலக் குறைவால், 1944ஆம் ஆண்டு, மே மாதம், 6ஆம் தேதி காந்திஜி சிறையினின்றும் விடுதலை செய்யப்பட்டார். திரு. ஜின்னாவுடன் அவர் தொடர்ந்து பேச்சு வார்த்தைகளை நடத்தியுங்கூட, எவ்வித ஒப்பந்தமும் ஏற்படவில்லை. லின்லித்கோ பிரபுவிற்குப் பிறகு 1943ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் கவர்னர்-ஜெனரலாய்ப் பதவி ஏற்ற வேவல் பிரபு (Lord Wavell), 1945ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில் இலண்டனுக்குச் சென்று, சில திட்டங்களுடன் இந்தியாவிற்குத் திரும்பினார்; அதன்படி அவருடைய மன்றத்தின் அங்கத்தினர்களுள் வைசிராய், தலைமைத் தளபதி ஆகியவர்களைத் தவிர மற்ற எல்லா அங்கத்தினர்களும், இந்தியர்களாய் இருக்கவேண்டும்; முஸ்லீம்களும், உயர்குல இந்துக்கள் எனக் கூறப்பட்ட இந்துக்களும் சமம் என்ற அடிப்படையில், இந்திய அரசியற் கட்சிகளின் தலைவர்களுளிருந்து அவ்வங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக, 1945ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 25ஆம் தேதியன்று, சிம்லாவில் ஒரு மாநாட்டைக் கூட்டினார்; காங்கிரசும் லீகும் எவ்வித ஒப்பந்தத்திற்கும் வர முடியாததால், அம்மாநாடு முரிந்தது.

இதற்குப்பின், சிறிது காலத்திற்குள்ளாகவே பிரிட்டனில் தொழிற்கட்சி (Labour Party) பதவிக்கு வந்தது. இந்தியாவிலிருந்த அரசியல் மந்த நிலைமையைப் போக்குவதற்காகப் புதிய பிரிட்டிஷ் அரசாங்கம் முழுமனத்துடன் கூடிய முயற்சியைச் செய்தது. மத்திய மாநிலக் கவுன்சில்களுக்குப் புதிய தேர்தல்களை நடத்தவும், தேர்தல் முடிந்த உடனே, வைசிராயின் நிருவாக சபையை மாற்றி அமைத்து மார்ச்சு மாதத் திட்டப்படி அதில் இந்திய அங்கத்தினர்களைச் சேர்க்கவும், வெகு சீக்கிரத்திலேயே அரசியலை நிருணயிக்க உதவும் குழுவின் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யவும், அவ்வரசாங்கம் முடிவு செய்தது. 1946ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் நடந்த தேர்தல்களில், பொது ஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில் காங்கிரசும் முஸ்லீம் ஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில் முஸ்லீம் லீகும் வெற்றி மாலை சூடின.

ஜப்பான் தோற்கடிக்கப்பட்ட பிறகு, போஸால் அமைக்கப்பட்ட இந்தியத் தேசிய இராணுவம், பிரிட்டிஷ் துருப்புகளிடத்தில் சரணடைந்தது; அந்த இராணுவத்தைச் சேர்ந்த பல அதிகாரிகள், இராஜத்துரோகக் குற்றத்திற்காக, இந்தியாவில் விசாரிக்கப்பட்டார்கள். இந்த அவசியமற்ற

நடவடிக்கையை அரசாங்கம் எடுக்காமல் இருந்திருக்கலாம்; இந்த விசாரணையின் மூலம், அந்நிறுவனத்தைப் பற்றிய முழுத்தகவல்களும் இந்தியமக்களுக்குக் கிடைத்தன; அதற்கு முன்பு, அதைப்பற்றி ஒரு சிறிதே அவர்களுக்குத் தெரியும். இவ்விசாரணையினால், இந்தியா முழுவதிலும், ஒரு பேருணர்ச்சி ஏற்பட்டு, பல நகரங்களில், அதற்கெதிரான ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்பட்டன. 1946ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 18ஆம் தேதியன்று, இராயல் இந்தியக் கடற்படையைச் சேர்ந்த வீரர்கள் வெளிப்படையாகவே கலகஞ் செய்தார்கள்; சில நாள்கள் வரையிலும், அக்கலகம் அடங்கவில்லை.

மந்திரிசபையைச் சேர்ந்த மூன்று அங்கத்தினர்கள் இந்தியாவிற்கு வருவார்கள் என்று பிப்பிரவரி மாதம், 19ஆம் தேதி பிரிட்டிஷ் பிரதம மந்திரியார் அறிவித்தார்; இந்தியாவில் முழுச் சுய ஆட்சியை மிகு விரைவிலேயே ஏற்படுத்த இந்தியத்தலைவர்களுடன் கூடிப் பேசுவதற்காகவே அவர்கள் விஜயம் செய்வார்கள் என அறிவிக்கப்பட்டது. பிறகு மார்ச்சு மாதம், 15ஆம் தேதி, 'இந்தியர்கள் விரும்பினால், அரசியல் வளர்ச்சியின் மூலம் முழுச் சுதந்தரத்தையும் பெறலாம்,' என, அவர் குறிப்பிட்டார். 1946ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில் மந்திரிசபைத் தூதுக்குழு (Cabinet Mission) இந்தியாவிற்கு வந்து, காங்கிரஸ், லீகின் தலைவர்களைப் பல முறை சந்தித்துப் பேசியது. அவர்களுக்குள் எவ்வித ஒப்பந்தமும் ஏற்படாததால், 1946ஆம் ஆண்டு, மே மாதம், 16ஆம் தேதி, அத் தூதுக் குழு, ஓர் அறிக்கையை வெளியிட்டது; எதிர்கால இந்திய அரசாங்கத்தைப் பற்றிய தனது நோக்கத்தை அறிவித்து, விரிவான அரசியலமைப்பை ஏற்படுத்துவதற்குரிய நடைமுறைகளையும் அது குறிப்பிட்டது.

இந்திய சமஸ்தானங்கள் உட்பட, இந்தியா முழுவதற்கும் ஒரு சமஷ்டி அரசாங்கத்தை மந்திரிசபைத் தூதுக்குழு சிபாரிசு செய்தது. அதன்படி, அயல்நாட்டு விவகாரங்கள், பாதுகாப்பு, போக்கு வரவு ஆகியவை சமஷ்டி அரசாங்கத்திற்கும் மற்ற அதிகாரங்கள் மாகாணங்களுக்கும் சமஸ்தானங்களுக்கும் கொடுக்கப்படும். பிரிட்டிஷ் இந்தியா மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படவேண்டும். ஒரு பகுதி, பஞ்சாப் வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து, பலுச்சிஸ்தான் ஆகியவற்றைக் கொண்டிருக்கும்; இரண்டாம் பகுதியில், வங்காளமும், அஸ்ஸாமும் இருக்கும்; மற்ற மாகாணங்கள் மூன்ருவது பகுதியில்

இருக்கும். 296 அங்கத்தினர்களைக்கொண்ட அரசியல் நிருணய சபை சமஷ்டி அரசியலமைப்பை ஏற்படுத்தும். வகுப்புத் திட்டத்தை அடிப்படையாகக்கொண்டு, மாநிலக் கீழ்ச் சட்ட சபைகளாலும், சமஷ்டியில் சேர்ந்துவிட்ட சமஸ்தானங்களின் பிரதிநிதிகளாலும், அந்த அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் படுவார்கள்; அதே சமயத்தில், மூன்று வித மாநிலப் பகுதிகளின் பிரதிநிதிகள் தனித்தனியாகக் கூடி, ஒவ்வொரு பகுதியிலும் உள்ள மாநிலத்திற்கான அரசியல் அமைப்பை ஏற்படுத்துவார்கள். புதிய அரசியலமைப்பின்படி, மேற் சட்ட சபைக்கு முதல் தேர்தல் நடந்த பிறகு, சமஷ்டி அரசாங்கத்தில் சேராமல் இருப்பதற்கு வேண்டிய உரிமை ஒவ்வொரு மாகாணத்திற்கும் கொடுக்கப்பட்டது. பல கட்சிகளின் தலைவர்களுளிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்டு, வைசிராய் நிருவாக சபையை மாற்றி அமைத்து, இடைக்காலத் தேசிய அரசாங்கத்தை (Interim National Government) ஏற்படுத்த வேண்டுமென்று, மந்திரி சபைத் தூதுக்குழு மேலும் சிபாரிசு செய்தது.

மந்திரி சபைத் தூதுக்குழுவின் திட்டங்களை முஸ்லீம் லீகு, ஜூன் மாதம், 6ஆம் தேதியன்று ஒப்புக்கொண்டது; அதே சமயத்தில், முழுச் சுதந்தரமுள்ள பாக்கிஸ்தான் என்னும் குறிக்கோளைப் பெறுவதுதான், இந்திய முஸ்லீம்களின் மாற்ற முடியாத நோக்கம் என வற்புறுத்திக் கூறினர். இடைக்கால அரசாங்கத்திற்கான திட்டங்களைக் காங்கிரஸ் ஒப்புக்கொள்ளவில்லை; ஆனால், அரசியல் அமைப்பை உண்டாக்குவதற்காக, அரசியல் நிருணய சபையில் பங்குபெற ஒப்புக்கொண்டது. ஜூன் மாதம், 29ஆம் தேதி மந்திரிசபைத் தூதுக்குழு, இந்தியாவை விட்டுப் புறப்பட்டது.

இடைக்கால அரசாங்கத்தில் காங்கிரஸ் சேராவிட்டாலும், அதை வைசிராய் ஏற்படுத்த வேண்டும் என்று, முஸ்லீம் லீகு கோரிக்கை விட்டது. இதைச் செய்ய வைசிராய் மறுத்து விட்டார்; ஏனெனில், மந்திரிசபை தூதுக் குழுவின் திட்டத்தை ஏற்றுக்கொண்ட எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த அரசாங்கமாய் இருக்க வேண்டுமென்று, முன்பே அவர் கூறியிருந்தார். மந்திரி சபைத் தூதுக் குழுவின் திட்டத்திற்கு விளக்கம் கொடுப்பதிலும், காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகிற்கும் இடையே பல வேறுபாடுகள் இருந்தன.

கடுமையான விவாதத்திற்குப் பிறகு மந்திரி சபைத் தூதுக் குழுவின் திட்டத்தை ஒப்புக்கொள்வதில்லை என முஸ்

லீம் லீகு தீர்மானித்தது. அதன் பிறகு, வைசிராய் தாம் முன்பு அறிவித்தபடி, நிர்வாக சபையை லீகின் பிரதிநிதிகள் இல்லாமல் மாற்றி அமைத்தார். காங்கிரசுக்குக் கிடைத்த இவ்வெற்றி, பிரிவு மனப்பான்மைகொண்ட முஸ்லீம்களிடையே பெருத்த கொந்தளிப்பை ஏற்படுத்தியது; 1946ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 16ஆம் தேதியை 'நேரிடைப் போராட்ட' (Direct Action) நாளாக, முஸ்லீம் லீகு குறித்தது. அந்த நாளில் லீகை ஆதரிக்கும் சிலர், அமைதியான ஆர்ப்பாட்டங்களோடு திருப்தி அடைந்தபோது, கல்கத்தாவிலிருந்த ஒரு போக்கிரிக் கூட்டம், வெறிச் செயலில் இறங்கியது. இந்துக்களுள் பலர் கொல்லப்பட்டனர்; அவர்களுடைய வீடுகளும், கடைகளும் சூறையாடப்பட்டன; தீயிடப்பட்டன. உடனே இந்துக்களும், முஸ்லீம்களைத் தாக்கிப் பழி வாங்கினர்கள்; மிக மோசமான வகுப்பு வாதக் கலகங்கள், கல்கத்தாவின் தெருக்களில் பல நாட்கள் வரை நடந்தன. புதிய கால இந்தியாவின் முக்கிய நகரத்தின் நற்பெயரை மாசு படுத்தும் இக்கொடிய பலாத்காரத்தை நிறுத்துவதற்கு, லீகு மந்திரி சபையாவது, அல்லது சட்டத்திற்கும் அமைதிக்கும் இறுதிப் பொறுப்பேற்றுள்ள வைசிராயாவது, எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

செப்டெம்பர் மாதம், 2ஆம் தேதியன்று பண்டித ஜவஹர்லால் நேருவும், அவர் தோழர்களும், வைசிராய் நிருவாக சபையின் அங்கத்தினர்களாய்ப் பதவிப் பிரமாணம் செய்தார்கள். இதற்குப் பிறகு, நவகாளி (Noakhali) மாவட்டத்தைச் சேர்ந்த பல கிராமங்களிலும், அருகிலிருந்த கோமில்லா (Comilla)ப் பகுதியிலும் வசித்த இந்துக்கள் மற்ற வகுப்பைச் சேர்ந்த, ஆயுதந்தரித்த கூட்டத்தால் தாக்கப்பட்டு, பேரவதியுற்றுர்கள். இதனுல் பீஹாரில் இருந்தவர்கள் தூண்டப்பட்டுப் பழிக்குப்பழி வாங்கினர்கள்; பீஹாரிலிருந்த முஸ்லீம்கள், இந்துக்களால் தாக்கப்பட்டார்கள். பண்டித நேரு பீஹாருக்குச் சென்றுர்; அங்கிருந்த காங்கிரஸ் மந்திரிசபை, குழப்பங்களை அடக்குவதற்காகக் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டது.

வைசிராயின் நிருவாக சபை நேருவின் தலைமையின்கீழ், ஒரு மந்திரி சபை போல இயங்கி, இந்திய அரசாங்கத்தின் போக்கையும் நோக்கையும் பெரிதும் மாற்றியது. ஏறக்குறைய அதிகாரத்தை இழந்த நிலையிலிருந்த வேவல் பிரபு, சமூக சமத்துவம்' என்னும் பெயரால், லீகின் அங்கத்தினர்

களை நிருவாக சபையில் நுழைத்து, காங்கிரசின் அதிகாரத்தைச் சமப்படுத்த நினைத்தார். அரசியல் நிருணய சபையில் சேருவதற்கு லீகு ஒப்புக்கொண்டதென்று, அவர் பண்டித நேருவுக்கு அறிவித்து, லீகின் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொண்டு, நிருவாக சபையை மாற்றி அமைத்தார். 'மொத்தப் பொறுப்பு' (Collective responsibility) என்கிற நோக்கத்தை, லீகின் அங்கத்தினர்கள் வெளிப்படையாகவே எதிர்த்தார்கள்; புதிதாகப் புகுத்தப்பட்ட இவ்வங்கத்தினர்களால், சபையில் ஒற்றுமை உணர்ச்சி அழிந்தது. இதைவிட மோசமானது லீகு அரசியல் நிர்ணய சபையில் சேராததுதான்; அது சேருவதாக என்றும் ஒப்புக்கொள்ளவில்லை என்னும் திடுக்கிடும் செய்தியைத் திரு. ஜின்னு வெளியிட்டார். இவ்விழி நிலைக்கு வைசிராய் கொண்டுவரப்பட்டார்; இதை மாற்றுவதற்கு, பிரிட்டிஷ் அரசாங்கமும் முயலவில்லை; முஸ்லீம் லீகு அரசியல் நிருணய சபையில் சேராவிட்டால், முஸ்லீம்கள் அதிகமாக உள்ள மாகாணங்கள் சம்பந்தமாக, அச்சபை செய்த முடிவுகளை, பிரிட்டிஷ் அரசாங்கம், அம்மாகாணங்களில் அமுல் செய்யாது என டிசம்பர் மாதம் 6ஆம் தேதியன்று அது அறிவித்தது. இப்படியிருந்த போதிலும், அரசியல் நிருணயசபை, லீகின் அங்கத்தினர்கள் இல்லாமல், 1946ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 9ஆம் தேதி கூடியது. பாபு இராஜேந்திர பிரசாது, தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அரசியலமைப்பின் பல பாகங்களையும் உருவாக்குவதற்குப் பல குழுக்கள் நியமிக்கப் பட்டன.

இந்தப் போக்கு, 1947ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 20ஆம் தேதி, பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு முக்கியக் கொள்கையை வெளியிடும் வரையில் நிலவியது. 1948ஆம் ஆண்டு, ஜூன் மாத அளவில், இந்தியாவை விட்டு வெளியேற விரும்பும் தன் நோக்கத்தை அது அறிவித்தது; பிரிட்டிஷ் ஆட்சியை இந்தியர்களுக்கு மாற்றிக் கொடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்காக, மவுன்ட்பேட்டன் பிரபுவை (Lord Mountbatten) இந்திய வைசிராயாக அது நியமித்தது.

முஸ்லீம் லீகைச் சேர்ந்தவர்களைத் தவிர்த்து, இந்தியாவிலிருந்த அனைவரும், இவ்வறிக்கையை மிக்க ஆர்வத்துடன் வரவேற்றனர்; மறுபடியும் 'நேரடிப் போராட்டத்தை' ஆரம்பிக்க லீகு முயன்றது. அதனுல் பஞ்சாப் முழுவதும் கலகங்கள் தோன்றி, உடனே வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திற்கும் பரவியது; கொள்ளையடித்தல், தீயிடுதல், கொலை,

பலாத்காரம் போன்றவை அப்பிரதேசங்களில் பரந்த அளவில் நடந்தன. தொடர்ச்சியாக ஏற்பட்ட இந்த வகுப்பு வாதக் கலவரங்களினால், துரதிருஷ்டமான பல பின் விளைவுகள் உண்டாயின. ஐக்கிய இந்தியாவை ஏற்படுத்த உறுதியுடன் நின்ற இந்துக்களும் சீக்கியர்களும், அப்படி ஏற்படுத்த முடியாது என்கிற முடிவுக்குப் படிப்படியாக வர நேரிட்டது; அரசியல் நிருணய சபையில் சேர முஸ்லீம்களுக்கு விருப்பமில்லாவிட்டால், பஞ்சாபையும் வங்காளத்தையும் தனியாகப் பிரித்துவிட வேண்டுமென்று அவர்கள் கோரினார்கள்.

1947ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 24ஆம் தேதியன்று மவுன்ட்பேட்டன் பிரபு பதவி ஏற்றார்; ஜூன் மாதம், 3ஆம் தேதி ஒரு பிரபல அறிக்கையை வெளியிட்டார்; அதில் அதிகாரத்தை பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர்களுக்கு மாற்றுவதற்கான ஏற்பாடுகளைக் குறிப்பிட்டிருந்தார். இப்புதிய திட்டத்தின் அல்லது கொள்கையின் முக்கிய விவகாரங்களைக் கீழ்க்காணுமாறு சுருக்கிக் கூறலாம்.

1. முஸ்லிம்கள் பெரும்பான்மையினராய் இருக்கும் பிரதேசங்கள் ஒரு தனி டொமினியனாக இருக்க விரும்பினால், அது அனுமதிக்கப்பட வேண்டும்; இக்குறிக்கோளுக்காக, ஒரு புதிய அரசியல் நிருணய சபை ஏற்படுத்தப்படும். ஆனால், வங்காளம், பஞ்சாபு சட்டசபைகளில் இந்துக்கள் பெரும்பான்மையினராய் இருக்கும் மாவட்டங்களின் பிரதிநிதிகள் விரும்பினால், அம்மாகாணங்கள் பிரிவினை செய்யப்படும்.

2. வடமேற்கு எல்லை மாகாணம் பாக்கிஸ்தானுடன் சேர விரும்புகிறதா, விரும்பவில்லையா என்பதை அறிவதற்கு அங்கு ஒரு வாக்காளர் முடிவிற்கு விடுதல் (Referendum) நடத்தப்படும்.

3. சில்ஹெட் (Sylhet) மாவட்ட மக்களின் நோக்கத்தை வாக்காளர் முடிவு மூலம் அறிந்த பிறகு, அது, வங்காள முஸ்லீம் பகுதியுடன் சேர்க்கப்படும்.

4. வங்காளத்திலும் பஞ்சாபிலும் உள்ள இந்து முஸ்லீம் மாகாணங்களின் எல்லைகளை வரையறை செய்வதற்காக ஓர் எல்லைக் கமிஷன் நிறுவப்படும்.

5. டொமினியன் அந்தஸ்தை இந்தியாவிற்கு (அல்லது இரண்டு டொமினியன்களுக்கு, பிரிவினை முடிவு செய்யப்பட்டால்) வழங்குவதற்காகப் பாராளுமன்றத்தின்

இப்போதைய கூட்டத்தில், ஒரு சட்டம் கொண்டு வரப்படும்; ஆனால், இச்சட்டம், அரசியல் நிருணய சபையின் (அல்லது சபைகளின்) இறுதி முடிவுக்குப் பாதகமில்லாத வழியில் இருக்கும்.

இம்முக்கிய அறிக்கையைப் பற்றி, பொது மக்கள் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தார்கள். மற்ற இனத்தைச் சார்ந்த தேசிய வாதிகளும், இந்தியாவைத் துண்டாடுவதைக் கண்டு வருந்தினார்கள். திரு. ஜின்னா கூறியபடி, 'உச்சி வெட்டப்பட்டதும், செல்லரிக்கப்பட்டதுமான பாக்கிஸ்தான்,' லீகைச் சேர்ந்த முஸ்லீம்களுக்கு முழுத்திருப்தியையும் கொடுக்கவில்லை.

இந்தியப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் புதிய திட்டந்தான் அச்சமயத்திற்கு மிகச் சிறந்தது எனப் பொதுவான அபிப்பிராயம் நிலவியது. அதனால், காங்கிரசும் லீகும் அதை ஏற்றுக்கொண்டன; பிரிட்டிஷ் அரசாங்கம் சர் சிரில் ரேட்கிளிப் (Sir Cyrill Radcliff) என்பவரைத் தலைவராகக் கொண்ட இரு கமிஷன்களை ஏற்படுத்தியது; அக்கமிஷன்கள், வங்காளத்தையும் பஞ்சாபையும் பிரிவினை செய்தன.

இந்தியச் சுதந்தர மசோதா, எவ்விதக் கருத்து வேறுபாடு மில்லாமல், பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில், 1947ஆம் ஆண்டு, ஜுலை மாதம், முதல் தேதி நிறைவேறியது; 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 15ஆம் தேதியன்று அதிகார மாற்றம் ஏறபடவேண்டுமென்று அச்சட்டம் கூறியது. அதன்படி, ஆகஸ்டு மாதம், 14, 15ஆம் தேதி நடுநசியில் அரசியல் நிர்ணய சபையின் சிறப்புக் கூட்டம் டில்லியில் நடந்தது. பிரிட்டிஷ் காமன்வெல்த்தில இந்தியா சுதந்தர நாடாய் இருக்கும் என அது முறைப்படி கூறியது; புதிய இந்திய டொமினியனுக்கு, மவுன்ட்பேட்டன் பிரபுவை முதற் கவர்னர்-ஜெனரலாக அச்சபை நியமித்தது.

பாக்கிஸ்தானின் முதற் கவர்னர்-ஜெனரலாக, திரு. ஜின்னா தேர்ந்தெடுக்கப்பட்டு, அங்கு அரசியல் நிருணய சபையை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக நீண்ட நாளாக நடத்தப்பட்ட தேசியப் போராட்டம், 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 15ஆம் தேதியன்று முடிவுற்றது; இந்நாள், இந்திய வரலாற்றிலே ஒரு பொனனாள். இந்திய மக்களின் மனத்தில், இந்நாள் என்றும் பசுமரத்தாணி போன்று பதிந்து இருக்கும்.

# பிற்சேர்க்கை

## I. புதிய இந்தியாவில் இந்திய சமஸ்தானங்களின் நிலை

சுதந்தர இந்தியாவில், இந்திய சமஸ்தானங்களின் நிலையைப் பற்றி மந்திரி சபை தூதுக்குழு, முன்னறிந்து கூறியது. 1946ஆம் ஆண்டு, மே மாதம், 16ஆம் தேதி வெளியிட்ட அறிக்கையில், பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது: 'பிரிட்டிஷ் இந்தியா சுதந்தரமடைந்த பிறகு காமன் வெல்துக்குள் இருந்தாலும், அல்லது அதற்கு வெளியே இருந்தாலும், இந்திய சமஸ்தான மன்னர்களுக்கும், பிரிட்டிஷ் அரசருக்கும் இடையே நிலவிய உறவு நீடித்திருக்க முடியாது என்பது மிகத் தெளிவானது. மேலாதிக்கத்தை (Paramountcy) பிரிட்டிஷ் அரசர் தம்மிடம் வைத்துக்கொள்ளவோ, அன்றி அதைப் புதிய அரசாங்கத்திற்கு மாற்றிக் கொடுக்கவோ, முடியாது; அதே சமயத்தில் இந்தியாவின் புதிய ஏற்பாட்டிற்குத் தங்கள் ஆதரவையும் ஒத்துழைப்பையும் தர, இந்திய சமஸ்தானங்கள் தயாராகவும் விருப்பத்துடனும் இருக்கின்றன. புதிய அரசியல் அமைப்பை ஏற்படுத்தும்போது, அவை எவ்வாறு ஒத்துழைக்கும் என்பதைப் பற்றிப் பேசி முடிவு செய்ய வேண்டும்; அவ்வொத்துழைப்பு எல்லாச் சமஸ்தானங்களுக்கும் ஒரே விதமாக இருக்க முடியாது.'

மந்திரி சபைத் தூதுக் குழு பின் வருபவைகளைச் சிபாரிசு செய்தது: (1) பிரிட்டிஷ் இந்தியாவும், சமஸ்தானங்களும் சேர்ந்த இந்தியக் கூட்டாட்சி உண்டாக வேண்டும்; அது பின் காண்பவைகளுக்குப் பொறுப்பாக இருக்க வேண்டும்: 'அயல் நாட்டு விவகாரம், தற்காப்பு, போக்குவரவு. மேற் குறித்தவைகளுக்கு வேண்டிய நிதியைத் திரட்டுவதற்கு வேண்டிய

அதிகாரங்களும் அதற்கு இருக்க வேண்டும். (2) கூட்டாட்சிக்குக் கொடுத்தது போக மீதி இருக்கும் அதிகாரங்கள் சமஸ்தானங்களிடமே இருக்க வேண்டும்.'

1946ஆம் ஆண்டு, மே மாதம், 22ஆம் தேதி, சமஸ்தான மன்னர்களின் சங்கத் தலைவருக்கு அளித்த **சமஸ்தானங்களின் உடன்படிக்கைகள், மேலாதிக்கம் பற்றிய அறிக்கைப் பத்திரத்தில்** (Memorandum on States Treaties and Paramountcy) சமஸ்தானங்களின் நிலையைப் பற்றி மந்திரி சபைத் தூதுக்குழு, மேலும் விளக்கியுள்ளது: 'முழுச் சுய ஆட்சியைப் பெற்ற அல்லது சுதந்தரமுள்ள அரசாங்கம் அல்லது அரசாங்கங்கள் ஏற்படும் பொழுது, மேன்மை தங்கிய அரசரின் அரசாங்கம், மேலாதிக்க அதிகாரத்தைச் செலுத்தாது. பிரிட்டிஷ் அரசருடன் செய்துகொண்ட உடன்படிக்கை மூலம், சமஸ்தானங்கள் விட்டுக் கொடுத்த உரிமைகள் இனி இருக்க முடியாது; மேலாதிக்கம் செலுத்திய அரசுக்கு, சமஸ்தானங்கள் கொடுத்த உரிமைகள், மறுபடியும் அவைகளையே வந்தடையும். ஒரு பக்கத்தில் சமஸ்தானங்களும், மறு பக்கத்தில் பிரிட்டிஷ் அரசர் பிரிட்டிஷ் இந்தியா ஆகிய இரு கட்சியினருக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தப்படி உண்டான அரசியல் ஏற்பாடுகளுமாக முடிவுறும். பிரிட்டிஷ் இந்தியாவிற்குப் பிறகு ஏற்படும் அரசாங்கம் அல்லது அரசாங்கங்கள் ஆகியவற்றுடன் ஒரு சமஸ்டி அரசாங்கத்தில் சேர்வதற்கான உடன்படிக்கையைச் சமஸ்தானங்கள் செய்துகொள்ளலாம்; இப்படிச் செய்யவில்லை என்றால், அவ்வரசு அல்லது அவ்வரசுகளுடன் குறிப்பிட்ட அரசியல் ஏற்பாடுகளைச் சமஸ்தானங்கள் செய்துகொள்ளலாம்.'

இந்தியச் சமஸ்தான மன்னர்கள், மந்திரி சபைத் தூதுக்குழுவின் திட்டத்தை ஏற்றுக்கொண்டார்கள். 1947ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 29ஆம் தேதி மன்னர்கள் சங்கத்தின் நிரந்தரக்குழு (Standing Committee) நிறைவேற்றிய தீர்மானத்தில், அவர்கள் நோக்கம் காணக்கிடக்கிறது:

(1) பேச்சு வார்த்தை மூலமாகத்தான், சமஸ்தானங்கள் கூட்டாட்சியில் சேர முடியும்; இதைப் பற்றி, இறுதி முடிவு எடுக்கும் உரிமை ஒவ்வொரு சமஸ்தானத்தினிடமும் இருக்கும்.........அரசியலமைப்பின் முழு உருவமும் தெரிந்த பிறகுதான், இவ்வித முடிவை எடுக்க வேண்டும்.

(2) மேலாட்சிக்குச் சமஸ்தானங்கள் விட்டுக் கொடுத்த அதிகாரங்கள், மறுபடியும் சமஸ்தானங்களையே வந்தடையும். இதனால், கூட்டாட்சியின் அதிகாரப் பட்டியல் சம்பந்தப்பட்ட வரையில் சமஸ்தானங்களால் கொடுக்கப்பட்ட அல்லது ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களைத்தான் ஏற்படப்போகும் இந்தியக் கூட்டாட்சி, சமஸ்தானங்களின்மீது செலுத்தும். கூட்டாட்சிக்கு ஒப்படைத்த அதிகாரங்களைத் தவிர்த்து, ஒவ்வொரு சமஸ்தானமும், அதனுடைய ஆதிபத்திய உரிமை, மற்ற உரிமைகள், அதிகாரங்கள் ஆகியவைகளைத் தன்னிடமே வைத்திருக்கும். கூட்டாட்சிக்குக் கொடுக்கும் அதிகாரங்களைச் சமஸ்தானங்கள் வெளிப்படையாக ஒப்புக்கொண்டாலன்றி, மற்றப்படி கூட்டாட்சிக்கு அவ்வதிகாரங்கள் கொடுக்கப் பட்டன என்றோ, இயற்கையாக உள்ளன என்றோ, வெளிப் படையாகச் சொல்லாமல் குறிப்பாகச் சொல்லப்பட்டிருக் கின்றன என்றோ கூறுதற்கு இடமே இல்லை.

3. சமஸ்தானத்தின் அரசியலமைப்பு, அதன் முழுத் தன்மை (Territorial integrity), சமஸ்தானத்தின் சட்ட, பழக்க வழக்கப்படி இப்போது பதவி வகிக்கும் அரச பரம்பரையின் வாரிசு ஆகிய எவற்றிலும், கூட்டாட்சியாவது அல்லது அதைச் சேர்ந்த பாகமாவது தலையிட முடியாது.

ஐக்கிய இந்தியா அடிப்படையின்மீது உண்டாக்கப்பட்ட முதல் திட்டத்திற்குச் சம்மதம் அளித்த திருவாங்கூர், ஹைதராபாது போன்ற சில பெரிய சமஸ்தானங்கள் இந்தியப் பிரிவினையின் திட்டம் வெளியானதும், அதை ஏற்க முடியாது எனக் கூறின. மாறிய சூழ்நிலையில், தங்களுடைய சுதந் தரத்தை வெளியிடவும், தமக்கு உரிமையுள்ளது என அவை நினைத்தன; ஆதிபத்திய உரிமையுள்ள நாடுகள் என்ற முறை யில், ஒன்று, மற்றொன்றுடன் உடன்படிக்கைகள் செய்து கொள்ளப் போவதாகவும் அவை கூறின. இப்புதிய நோக் கத்தை முஸ்லீம் லீகு தலைவர் ஆதரித்தார். ஆனால், காங் கிரஸ் தலைவர்களும், மற்ற முக்கிய அரசியல் தலைவர்களும் இதை ஆதரிக்கவில்லை. 'தன் சுதந்தரத்தைப் பறைசாற்றி, இந்தியாவின் மற்றப் பகுதியிடமிருந்து பிரிந்து தனித்து வாழ, எந்தச் சமஸ்தானத்தையும் அனுமதிக்க முடியாது,' என, 1947ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 15ஆம் தேதி கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி தீர்மானித்தது. 'இந்த அறிவிப்பு, இந்தியாவின் பல்லாயிரக் கணக்கான சுதந்தர மக்களுக் கெதிராகச் செய்யப்பட்ட போர் அறிவிப்புக்குச் சமமாகும்,'

என மகாத்துமா காந்தி கருதினுர். 'எந்த வெளி நாடாவது, அல்லது எப்படிப்பட்ட வெளி நாடாவது, இவ்விதச் சுதந் தரத்தை ஒப்புக்கொண்டால், அது விரோதச் செய்கை யாகக் கருதப்படும்,' எனப் பண்டித நேரு அறிவித்தார். மந்திரி சபைத் தூதுக்குழு மேலதிகாரம் முடிவுறுவதைப் பற்றிக் கூறிய அறிக்கையில், பிரிட்டிஷ் அரசியற் சட்டப் படியும், சர்வதேசச் சட்டப்படியும் சில பிழைகள் இருக் கின்றன என்று, 1947ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 17ஆம் தேதி விடுத்த ஓர் அறிக்கையில் டாக்டர்-அம்பேத்கார் (Dr. Ambedkar) கூறியுள்ளார். 'சமஸ்தானங்களின் ஆதிபத்திய உரிமை அவற்றின் நிலேயைப் பொறுத்துதான் இருக்கிறது; ஆனுல், இந்தியா டொமினியனுய் இருந்தால், இச்சமஸ் தானங்கள் பிரிட்டிஷ் அரசரின் மேலாதிக்கத்தின்கீழ் இருக் கும்; அல்லது இந்தியா சுதந்தர நாடானுல், பிரிட்டிஷ் அரச ருக்கு வாரிசாக இருக்கும் அரசின் மேலாதிக்கத்தின்கீழ் அவை இருக்கும்; எந்நிலேயிலும், அச்சமஸ்தானங்கள் சுதந் தரத்துடன் இருக்க முடியாது,' என்பதுதான் அவரது கருத்து.

'மத்திய அரசுக்கும், சமஸ்தானங்களுக்குமிடையே எழும் பிரச்சினேகளேத் தீர்ப்பதற்காக' 1947ஆம் ஆண்டு, ஜூலே மாதம், 5ஆம் தேதி உண்டான சமஸ்தான இலாக்கா வைச் **சர்தார் பட்டேல்** ஏற்ருர். அவரும், மவுன்ட்பேட்டன் பிரபுவும் கூறிய அறிவுரைகளேப் பின்பற்றி, நுழைவுப் பத்தி ரத்தில் (Instrument of Accession) உள்ளபடி இந்தியக் கூட் டாட்சியில் சேருவதற்கு ஒரு சில சமஸ்தானங்களேத் தவிர மற்றெல்லாச் சமஸ்தானங்களும், ஜூலே மாதம், 25ஆம் தேதி முடிவு செய்தன ; சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் அடங்கிய அரசியல் நிருணயசபை, ஓர் அரசியல் அமைப்பைத் தயா ரித்து வெளியிடும் வரையில், பாதுகாப்பு, அயல் நாட்டு விவகாரங்கள், போக்குவரத்துகள், இவைகளேச் சேர்ந் தவைகள் சம்பந்தப்பட்டவைகளேப்பற்றிக் கூட்டாட்சியில் சேரும் சமஸ்தானங்களுக்காக டொமினியன் பாராளு மன்றமே சட்டமியற்றும்.

இந்திய டொமினியன் அரசாங்கம், சமஸ்தானங்கள் சம்பந்தமாகப் பின்பற்றிய கொள்கை, பெரும்பாலனவற்றில் வெற்றியையே கொடுத்தது. இரண்டு வழிகளின் மூலம், அவற்றின் உறவுகள் தீர்மானிக்கப்பட்டன. சிறிய சமஸ்தா னங்களே மத்திய அரசாங்கத்தால் ஆட்சி செய்யப்படும் பகுதி யுடன் இணேத்தல், அல்லது, அருகில் இருக்கும் மாகாண

ஆட்சிகளுடன் இணைத்தல் என்பது ஒரு வழி; கிழக்கிந்தியாவி லிருந்த சமஸ்தானங்கள் ஒரிஸ்ஸா மாகாணத்துடனும், தக்காண குஜராத்துச் சமஸ்தானங்கள் பம்பாய் மாகாணத் துடனும் சேர்க்கப்பட்டதை உதாரணமாகக் குறிப்பிடலாம். பல சமஸ்தானங்களை இணைத்து, ஒரு பெரிய ஆட்சிப் பகுதியை உண்டாக்குவது, மற்றொரு வழி; மச்சிய ஐக்கிய சமஸ்தானம் (United State of Matsya, 1948ஆம் வருடம், மார்ச்சு மாதம், 18ஆம் தேதி), (சௌராஷ்டிர) கத்தியவாரின் ஐக்கிய சமஸ்தானம் (United State of Kathiawar, 1948, பிப்ரவரி; 18ஆம் தேதி), இராஜஸ்தான் ஐக்கிய சமஸ்தானம் (The United State of Rajasthan, 1948ஆம் ஆண்டு, மார்ச்சு, 25ஆம் தேதி, ஏப்பிரல், 18ஆம் தேதி), விந்தியப் பிரதேசத்தின் ஐக்கிய சமஸ்தானம் (The United State of Vindhya Pradesh, 1948, ஏப்பிரல், 4ஆம் தேதி), குவாலியர், இந்தூர், மால்வா ஐக்கிய சமஸ்தானங்கள் (Madhya Bharat Union, மத்திய பாரத் யூனியன், 1948, மே, 28ஆம் தேதி), பாட்டியாலா, கிழக்குப் பஞ்சாபு சமஸ்தானங்களின் யூனியன் (The Patiala and East Punjab States Union, 1948, ஜூலை, 15ஆம் தேதி) ஆகியவைகளை உதாரணமாகக் குறிப்பிடலாம், கட்சு (Cutch) சமஸ்தானம், ஹிமாசல் பிரதேஷ் (Himachal Pradesh) என்கிற, 21 சமஸ்தானங்களைக் கொண்ட யூனியன் ஆகிய இரு பகுதிகளும் சேர்ந்த 19,061 சதுர மைல்கள் உள்ள ஒரு பிர தேசத்தின் ஆட்சி, மத்திய அரசாங்கத்தின்கீழ் வந்தது.

சில சிறிய சமஸ்தானங்களும், பெரிய சமஸ்தானங்களும், மேலே கூறப்பட்ட வழிகளை ஒப்புக்கொள்ளவில்லை. இவ்விதப் பெரிய சமஸ்தானங்கள் சம்பந்தமாக இந்திய யூனியன் அர சாங்கம் பின்பற்றும் கொள்கையை, 1948ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 15ஆம் தேதி, டொமினியன் பாராளுமன்றத்தில் சர்தார் பட்டேலின் சார்பாகப் பேசிய ஸ்ரீ என். வி. காட்கில் என்பவர் (Nr. N. V. Gadgil, Indian Minister for Works), பின் வருமாறு விளக்கினர்: 'அவைகளைக் கட்டாயப்படுத்தியோ, அல்லது பயமுறுத்தியோ சேர்ப்பது அல்லது இணைப்பது, எங்கள் விருப்பம் அன்று. அவை தனியான சுதந்தரப் பிர தேசங்களாய் இருக்க விரும்பினல், அப்படியே இருக்கலாம்; ஆனல், இச்சமஸ்தானங்களின் மன்னர்களோ, அன்றி மக் களோ, அருகில் உள்ள மாகாணங்களில் இணைவதற்கும் அல்லது அருகில் உள்ள சமஸ்தானங்களுடன் சேர்ந்து ஓர் யூனியன் அமைப்பதற்கும் தாமாகவே முன்வந்தால், அதை இந்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்ளும். தனிப்பகுதிகளாக

இருக்க விரும்பும் இந்தச் சமஸ்தானங்களில் முழுச்சுய ஆட்சியைப் பெறுவதற்காக, மக்கள், மன்னர்களை வற்புறுத்துவார்கள் என்பது வெள்ளிடை மலை. மக்கள் விரும்புவதைக் கொடுக்க மறுக்கும் எண்ணத்தைக் கைவிட்டு, அவர்களுக்கு வேண்டிய சலுகைகளைக் கொடுத்து, அவர்களின் அன்பையும் நல்லெண்ணத்தையும் தொடர்ந்து பெறுவதற்கு மன்னர்கள் முயல்வார்கள் என நான் எதிர்பார்க்கிறேன்......அவற்றைப் பற்றிய எங்கள் கொள்கைகள் மாறா. மன்னர்களும் மக்களும் விரும்புகிற வரையில், அச்சமஸ்தானங்கள் தனிப்பட இயங்கலாம்.'

அரசாங்கத்தின் அடிப்படையை மாற்றி அமைக்கும் வேலையுடன் சமஸ்தானங்களின் உள்நாட்டு ஆட்சியை மாற்றி அமைக்கும் வேலையும் மக்களிடம் மன்னர்கள் கொண்டிருந்த மனப்பான்மை, கொள்கை ஆகியவற்றைத் திருத்தி அமைக்கும் வேலையும் எடுத்துக்கொள்ளப்பட்டன. பொருளாதார நிலைமையைச் சீர்படுத்தும் முயற்சிகளை, ஒவ்வொரு சமஸ்தானமும் எடுத்துக்கொண்டது; 1948ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் இந்திய அரசாங்கம் வெளியிட்ட **சமஸ்தானங்களைப் பற்றிய வெள்ளை அறிக்கையில்** (White Paper on Indian States) கூறியுள்ளபடி, 'முழுச்சுய ஆட்சியை வழங்குவதற்குத் தங்களுக்குள்ள விருப்பத்தைப் பெரும்பாலும் எல்லாச் சமஸ்தானங்களும் தெரிவித்தன; அவற்றுள் பெரும்பாலனவற்றில் அதிகாரம் மக்களுக்கு மாற்றப்பட்டுவிட்டது.' 'இச்சமஸ்தானங்களில் இரத்தம் சிந்தாப் புரட்சி உண்டாயிற்று; சுதந்தரத்தினால் வெளியான ஜனநாயகச் சக்திகளின் இயக்கம் காரணமாகவும், காலத்திற்குத் தகுந்தவகையில் மன்னர்களும், தங்களுடைய நாட்டுப்பற்றைத் தங்கள் செய்கைகளில், காட்டியது காரணமாகவுமே, இம்மாற்றம் சுலபமாக ஏற்பட முடிந்தது,' என, மேலும் அவ்வறிக்கை கூறுகிறது.

ஜுனகாத் (Junagadh) சமஸ்தானமும் அதன் அருகில் இருந்த சில சமஸ்தானங்களும் (சௌராஷ்டிர) கத்தியவார் ஐக்கிய சமஸ்தானத்தில் சேர்ந்தன (1948 டிசம்பர் 31ஆம் தேதி); மயூர்பஞ்ஜ் (Mayurbhanj) ஒரிஸ்ஸாவுடனும், கோலாப்பூர் பம்பாய் மாநிலத்துடனும், ராம்பூர் (Rampur) வாரணசி (Benares) உ. பி.யுடனும், கொச்சி திருவாங்கூருடனும் சேர்ந்தன. 'மிகப்பெரிய ராஜஸ்தான் யூனியன் (Greater Rajasthan Union) என்கிற இந்திய சமஸ்தானங்களின் மிகப் பெரிய யூனியனும், இந்தியாவின் மிகப் பெரிய அரசியல் ஆட்சிப்

பகுதியும், 1949ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 30ஆம் தேதி உண்டாயின. 1,20,000 சதுர மைல்களைக் கொண்ட இந்த யூனியனில் தொன்மையான இராசபுதன நாடுகள் 15 சேர்ந்தன; அவற்றின் மக்கள் தொகை 13 மில்லியன்கள்: அவற்றின் ஆண்டு வருமானமோ, சுமார் 10 கோடி ரூபாய். பரோடா (Baroda) என்கிற பெரிய சமஸ்தானம், 1949ஆம் ஆண்டு, மே மாதம், முதல் தேதி, பம்பாய் மாகாணத்துடன் சேர்ந்தது; போபால் (Bhopal), கூச் பீஹார் (Cooch Bihar), திரிபுரா (Tripura), மணிப்பூர் (Manipur) என்பவை மத்திய ஆட்சியின்கீழ் வந்தன. இவ்விதம் 1949ஆம் ஆண்டு, நவம்பர் மாதம் முடியுமுன்பே, ஹைதராபாது, காஷ்மீரம் ஆகிய இரண்டு சமஸ்தானங்களைத் தவிர, மற்ற எல்லா இந்திய சமஸ்தானங்களின் இணைப்பும் முடிவுற்றது.

## 1. ஹைதராபாது

இந்தியாவின் மிகப் பெரிய சமஸ்தானமான ஹைதராபாதின் நிலை மிகவும் விசித்திரமாய் இருந்தது; ஏனெனில், அங்குப் பெரும்பாலார் இந்துக்களாயும் அவர்களை ஆளும் அரசர் முஸ்லீமாயும் இருந்தார்கள். அதனால், அதனுடன் ஓர் உடன்படிக்கை செய்வதில் பல சிக்கலான பிரச்சினைகள் எழுந்தன. 1947ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 29ஆம் தேதி ஹைதராபாது, இந்திய யூனியனுடன் தற்காலிக ஏற்பாட்டைச் செய்துகொண்டது. அதன்படி, 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம், 15ஆம் தேதிக்கு முன்னிருந்த உறவே ஓர் ஆண்டுக்கு நீடிக்கும்.

சுதந்தர நாடு என்கிற ஹைதராபாதின் நிலையை இக்கால ஒப்பந்தம் எவ்விதத்திலும் பாதிக்கவில்லை; அதன் மேலாதிக்கம், 'இறுதியாகக் குழிதோண்டிப் புதைக்கப்பட்டது,' என்கிற அபிப்பிராயத்தை மஜ்லிஸ் இத்தெஹாட்-உல்-முஸ்லிமின் (Majlis Ittehad-ul-Muslimin) என்கிற நிறுவனத்தின் தலைவரான சையத் காஸிம் ரஜ்வி (Syed Kassim Razvi) வெளியிட்டார். ஆனால், ஹைதராபாது சுதந்தரமாய் இருந்தால், பாதுகாப்பு, உள்நாட்டுப் பாதுகாப்பு, பொருளாதாரம் ஆகியவைகளை நோக்குங்கால், இந்தியா மிக்க பேரபாயத்திற்கு உள்ளாகும் என்பதை இந்திய அரசு உணர்ந்தது. 'மற்றொரு நாட்டின் மத்தியில், முற்றிலும் நிலத்தால் சூழப்பட்ட ஒரு நாட்டைச் சுதந்தரமாக்கும் திட்டத்தை என்றும் கேள்விப்பட்டதில்லை,' என ஹைதராபாது பற்றிய வெள்ளையறிக்கையில் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்தியாவுக்கும் ஹைதராபாதுக்குமிடையே இருந்த இந்த அடிப்படை வேற்றுமையைத் தவிர, புதிதாக ஏற்பட்ட சில உள்நாட்டு, வெளி நாட்டுக் காரணங்களால், இந்நிலை மேலும் சிக்கலாகியது. மஜிலிஸ் இத்தெஹாட்-உல்-முஸ்லிமின் நிறுவனமும் காஜிம் ரஜ்வியைத் தலைவராகக் கொண்ட ரஜாக்கர்களும் (Razakars) அச்சம்ஸ்தானத்திற்குள் மிகுந்த அட்டூழியங்களைப் புரிந்தார்கள். சென்னை, மத்திய மாகாணம் பம்பாய் ஆகிய மாகாணங்களின் எல்லையிலும் அவர்கள் வாலாட்டத் தொடங்கினார்கள். இதனால், அமைதியும் ஒற்றுமையும் தொடர்ந்து பாதிக்கப்பட்டன. இந்நிகழ்ச்சிகள் பொறுப்புள்ள இந்திய மக்களின் மனத்தில் மிக்க கவலையை உண்டாக்கியது.

1948ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் முதல் ஹைதராபாதுக்கும் இந்திய யூனியனுக்குமிடையே நடந்த எல்லாப் பேச்சு வார்த்தைகளும் பயனற்றுப்போய்விட்டன. ஹைதராபாது, இந்திய யூனியனில் சேருவதற்காக, இந்திய அரசின் சார்பில் கவர்னர்-ஜெனரல் விடுத்த கோரிக்கையையும், அச்சமஸ்தானத்தில் பொறுப்பான ஆட்சியை ஏற்படுத்தும்படி இந்திய அரசு விடுத்த கோரிக்கையையும், நைஜாமின் அரசாங்கம் நிராகரித்தது. 1948ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் பேச்சுவார்த்தைகளின் இறுதிக் கட்டத்தின்போது, ஓர் ஒப்பந்தத்திட்டம் உருவாகியது. 1948ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 18ஆம் தேதி, மவுண்ட்பேட்டன் பிரபு இந்தியாவை விட்டுப் புறப்பட்டார்; புறப்படுவதற்கு மூன்று நாள்களுக்கு முன்பு, ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி, நைஜாமுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார்; ஆனால், அது பயனளிக்கவில்லை.

ஒப்பந்தத்தை ஏற்க ஹைதராபாது அரசு மறுத்ததால், இந்திய அரசு அந்நாட்டின்மீது பொருளாதார நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தியது. இதனால் எவ்விதப் பயனும் விளையவில்லை. இந்திய டொமினியனில் சேருவதை விரும்பாத சில சக்திகள், அச்சமஸ்தானத்தில் மிக முக்கியப் பதவிகளில் இருந்துகொண்டு, சமஸ்தானப் படையை அதிகரித்தல், தாற்காலிகப் படையைத் திரட்டுதல், துணிச்சலான சில வெளிநாட்டாரின் உதவியுடன் வெளிநாடுகளிலிருந்து ஆயுதங்களையும் வெடிமருந்து பொருள்களையும் கள்ளத்தனமாகக் கடத்துதல் போன்ற சில போர் நடவடிக்கைகளைச் செய்தன. இவற்றைத் தவிர, ஹைதராபாது சமஸ்தானத்திலும் இந்திய யூனியன்

எல்லையிலும், ரஜாக்கர்கள் இழைத்த கொடுமை அதிக மாகியது ; அதனால், சட்டமும் அமைதியும் மிகப் பாதிக்கப் பட்டன. அதனால், ரஜாக்கர்களின் படையை உடனே கலைக்கு மாறு இந்திய அரசாங்கம் மறுபடியும் கோரியது ; மேலும், நடைமுறை ஒப்பந்தப்படி (Standstill Agreement) செகந்தரா பாதில் நிறுத்தப்பட்டு, அவ்வருட ஆரம்பத்தில் வாபஸ் வாங்கப்பட்ட இந்தியத் துருப்புகள், மறுபடியும் அங்குச் செல்வதற்கு அனுமதிக்க வேண்டும் எனவும் கோரியது. இதற்கு முன்பே, ஹைதராபாது இந்தியாவிற்கு எதிராக, ஐக்கிய நாடுகள் சபைக்கு மனுச்செய்து கொண்டது; அதனால், இந்திய அரசின் கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. சட்டத்தையும் அமைதியையும் ஏற்படுத்துவதற்கு உரிய நடவடிக்கைகளை எடுக்கத் தனக்கு உரிமை உண்டென்று, செப்டெம்பர் மாதம், 11ஆம் தேதி நைஜாம் அரசாங்கத்திற்கு எழுதிய இறுதிக் கடிதத்தில் இந்திய அரசு அறிவித்தது.

செப்டெம்பர் மாதம், 13ஆம் தேதி இந்திய இராணுவத் தினர், ஹைதராபாதுக்குள் பிரவேசித்தனர். இது 'போர் நடவடிக்கை அன்று' என்றும், 'அச்சமஸ்தானத்தில் அமைதி யையும் ஒழுங்கையும் நிலவச் செய்வதற்கும், அதைச் சார்ந் துள்ள இந்தியப் பிரதேசத்தில் பாதுகாப்பை ஏற்படுத்து வதற்காகவும் எடுக்கப்பட்ட போலீஸ் நடவடிக்கைதான்' என்றும், இந்திய அரசு அறிவித்தது. 1948ஆம் ஆண்டு, செப் டெம்பர் மாதம், 18ஆம் தேதி ஹைதராபாது சமஸ்தானப் படைகளின் தளபதியான மேஜர்-ஜெனரல் எல் எட்ரூஸ் (Major-General El Edroos) என்பவர், இந்திய இராணுவத்தின் முதற்கவசப்படைப் பிரிவின் (First Armoured Division) தளபதி யான மேஜர்-ஜெனரல் ஜெ. என். சௌத்ரி (Major-General J. N. Chaudhury) என்பவரிடம் நைஜாமின் சார்பாகச் சரணடைந்தார். காஸிம் ரஜ்வி, கைது செய்யப்பட்டு, அவ ருடைய ரஜாக்கர் நிறுவனம் அழிக்கப்பட்டது. பாதுகாப்புச் சபையிடம் (Security Council) இந்தியாவிற்கு எதிராக மனுச் செய்துகொண்ட லெயிக் அலி (Laik Ali) மந்திரிசபை, செப் டெம்பர் மாதம், 17ஆம் தேதியன்று ராஜிநாமாச் செய்தது ; பாதுகாப்புச் சபைக்குச் செய்துகொண்ட ஹைதராபாதின் வழக்கைத் தாம் வாபஸ் பெறுவதாகவும், ராஜிநாமாச் செய்த மந்திரி சபையால் அனுப்பப்பட்ட தூதுக்குழு, அவரை யாவது அவர் சமஸ்தானத்தையாவது பிரதி பலிக்கவில்லை எனவும், செப்டெம்பர், 22ஆம் தேதி அச்சபைக்குக் கம்பி யில்லாத் தந்தி மூலம் நைஜாம் அறிவித்தார்.

ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டுவதுதான் தலையாய பணி எனக் கருதிய இந்திய அரசு, ஹைதராபாதின் பிரச்சினைகளைக் கவனிப்பதற்காக, மேஜர்-ஜெனரல் ஜே. என். சௌத்ரியை இராணுவக் கவர்னராக நியமித்தது; அவருக்கு உதவியாக, சிவில் அதிகாரிகளும் இருந்தார்கள். புதிய நிலையை ஏற்றுக்கொண்டு முழு ஒத்துழைப்பையும் கொடுப்பதற்கு நைஜாம் முன் வந்தார். அரசாங்கத்தின் ஆற்றலுள்ள நடவடிக்கைகள் மூலம், ஒழுங்கும் அமைதியும் படிப்படியாய் உண்டாயின. 1950ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 26ஆம் தேதி ஹைதராபாது இந்திய யூனியனில் சேர்ந்தது. 1956ஆம் ஆண்டில் செய்யப்பட்ட மாகாணச் சீர்திருத்தங்களின் விளைவாக ஹைதராபாது ஒரு தனிச் சமஸ்தானம் என்கிற நிலையை இழந்தது. இதைப்பற்றிப் பின்னர் விரிவாக விளக்கப்படும்.

## 2. காஷ்மீரம்

ஹைதராபாதின் பிரச்சினை முடியும் தறுவாயில் இருந்தபோது ஜம்மு, காஷ்மீர் சமஸ்தானத்தின் நிலைமை மிக மோசமடைந்தது. இந்திய உபகண்டத்தின் வடக்கில் இருக்கும் இச்சமஸ்தானம் 84,471 சதுரமைல் பரப்புடையது. வடகிழக்கில் திபெத்து நாடும், வடக்கில் சைனாவைச் சேர்ந்த துருக்கிஸ்தானமும் (சிங்கியாங்–Sinkiang), வடமேற்கில் சோவியத் குடியரசின் துருக்கிஸ்தானமும், ஆப்கானிஸ்தானமும் இருக்கின்றன. இதன் மேற்கு எல்லையில் பாக்கிஸ்தான் இருக்கிறது; தெற்கில் பாக்கிஸ்தானமும், இந்திய டொமினியனும் இருக்கின்றன. 1941-ல் எடுக்கப்பட்ட குடிக்கணக்குப் (Census) படி, இச்சமஸ்தானத்தின் மொத்த மக்கள் தொகை 40,21,615; அதில் 77.11 சதவிகிதம் முஸ்லீம்கள்; 20.12 சதவிகிதம் இந்துக்கள்; 2.77 சதவிகிதம் சீக்கியர்களும் புத்தர்களும் இருக்கின்றார்கள். இச்சமஸ்தானம், பாக்கிஸ்தானைச் சேர்ந்தாற்போல இருப்பதாலும், முஸ்லீம்கள் பெரும்பான்மையோராய் இருப்பதாலும், இதைத் தன் ஆட்சிக்குள் கொண்டுவரப் பாக்கிஸ்தான் மிக்க ஆவலோடு இருந்தது.

இந்தியப் பிரிவினைக்குப் பின், பாக்கிஸ்தான் வழியாகவும் அதன் பிரதேசத்திலிருந்தும் வந்த மலைவாசிகள், ஜம்மு, காஷ்மீர் சமஸ்தானத்தை அடிக்கடி தாக்கினார்கள். அக்கொள்ளைக்காரர்கள், ஜீலம் பள்ளத்தாக்குப் பாதை வரையில் வெகுவேகமாய் முன்னேறி, ஸ்ரீநகரையும் கைப்பற்ற எண்ணினார்கள்; இச்சமயத்திலேதான் ஜம்மு காஷ்மீர அரசு, இந்திய

டொமினியனின் உதவியை நாடியது. அக்டோபர் மாதம், 26ஆம் தேதியன்று, காஷ்மீர் மகாராஜா சட்டப்படி, இந்திய யூனியனில் சேர்ந்தார்; அச்சமஸ்தான மக்களின் அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரமான அகில ஜம்மு, காஷ்மீர்த் தேசிய மாநாடு என்னும் நிறுவனத்தின் தலைவரான ஷேக்முகமது அப்துல்லா (Skeik Muhammad Abdullah) வும் இச்செயலை முழு மனத்துடன் ஆதரித்தார். இவ்விணைப்பை ஒரு தாற்காலிக நடவடிக்கை என ஒப்புக்கொண்டு. 'பிளபிசைட்டு அல்லது குடி ஒப்பம் மூலம், காஷ்மீரத்தின் எதிர்காலத்திற்கு தீர்வு காணலாம்' என்கிற நோக்கத்தை இந்திய அரசு வெளி யிட்டது.

இந்தியத் துருப்புகளின் முதற்பகுதி, 1947ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 27ஆம் தேதி காலை, விமானமூலம் காஷ்மீரை அடைந்தது. அக்டோபர், 31ஆம் தேதி, ஷேக்கு முகம்மது அப்துல்லா தலைமையில் ஓர் இடைக்கால அவசரக் கால அரசாங்கம் (Emergency Administration) உண்டாகியது; இந்திய வீரர்களின் உதவியுடன், இவ்வரசாங்கம், மலைவாசி களின் தாக்குதலை மிக வெற்றிகரமாக எதிர்த்தது; இப்புதிய அரசாங்கத்தை எதிர்க்கும், ஆஜாத் காஷ்மீர் அரசு (Azad Kashmir Government) எனும் நிறுவனத்தைப் பாக்கிஸ்தான் அரசு ஊக்குவித்து ஆதரித்ததாக நம்பப்படுகிறது. டிசம்பர் மாதம், 31ஆம் தேதி, இந்திய அரசு ஐக்கிய நாடுகளின் பாது காப்புச் சபைக்கு இந்திய யூனியன் ஒரு விண்ணப்பத்தை அனுப்பியது; (ஓர் அங்கத்தினராய் இருக்கும் நாடான) பாக்கிஸ்தான், இவ்விதமான உதவிகளைக் கொடுப்பது, இந்தியாவிற்கு எதிரான ஆக்கிரமிப்புச் செயல் என்றும், 'ஆகவே, பாக்கிஸ்தான் அதை உடனே நிறுத்துமாறு அச்சபை கோர வேண்டும்,' என்றும் அதில் கண்டிருந்தது. ஐக்கிய நாடு களின் ஐந்து மாதச் சமரச முயற்சிகள் வீணான பிறகு, அவ் விடத்திற்குச் சென்று நிலைமையை ஆராய்வதற்காக ஒரு கமிஷனை அச்சபை நியமித்தது. இக்கமிஷன் 1948ஆம் ஆண்டு, ஜூலை மாதத்தில் இந்தியாவை அடைந்தது. 1948ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 13ஆம் தேதி இந்தியாவுக்கும் பாக்கிஸ் தானுக்குமிடையே ஒரு 'போர்-நிறுத்த' ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்று தன் அபிப்பிராயத்தைக் கூறியது. இதை இந்திய யூனியன் ஏற்றுக்கொண்டது; ஆனால், அக்கமிஷன் ஏற்றுக்கொள்ள முடியாத சில நிபந்தனைகள் இல்லாமல் போர்-நிறுத்தத் தீர்மானத்தை ஒப்புக்கொள்ள முடியாது எனப் பாக்கிஸ்தான் அரசு அறிவித்தது. காஷ்மீர்ப் பிர

தேசத்தில் தன் துருப்புகள் இருப்பதாகப் பாக்கிஸ்தான் அரசு ஒப்புக்கொண்டது; அதனால், இரண்டு டொமினியன்களின் உறவும் மிகப் பாதிக்கப்பட்டது. அதிருஷ்டவசமாக நற்புத்தி ஏற்பட்டு, 1949ஆம் ஆண்டு, ஜனவரிமாதம், முதல் தேதி நள்ளிரவு வருவதற்கு ஒரு நிமிடத்திற்குமுன்பு, இந்திய யூனியன் பாக்கிஸ்தான் ஆகிய இரண்டு அரசுகளும் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் ஒரு 'போர்-நிறுத்த' ஒப்பந்தம் உண்டாயிற்று; போரும் நின்றது; குடி ஒப்பத்தை நடத்தும் அதிகாரியாக, அட்மிரல் நிமிட்ஸ் (Admiral Nimitz) என்பவரை ஐ. நா. நியமித்தது. ஜம்மு, காஷ்மீர் சமஸ்தானத்தின் எதிர்காலம், திருப்தியான நிலை ஏற்பட்ட பிறகு, குடி ஒப்பம் மூலம் அறியப் படும் என எதிர்பார்க்கப்பட்டது.

'ஜம்மு காஷ்மீர் சமஸ்தானத்தைப்பற்றி இரண்டு அரசுகளுக்குமிடையே எழுந்த தகராற்றைச் சீக்கிரமாகவும் நிரந்தரமாகவும் தீர்த்து வைப்பதற்காகச் சம்பந்தப்பட்ட கட்சிகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்கு ஐ. நா. கமிஷனுக்குப் பதிலாக, சர் ஓவன் டிக்சன் (Sir Owen Dixon) என்பவரை, ஐ. நா. பிரதிநிதியாகப் பாதுகாப்புச் சபை, 1950ஆம் வருடம், ஏப்ரல் மாதத்தில் நியமித்தது. ஆனால், அவருடைய முயற்சிகள் வெற்றியை அளிக்கவில்லை. தம்மை விடுவிக்க வேண்டும் என அவர் கோரியதால், டாக்டர்-பிராங்க் கிரஹாம் (Dr. Frank Graham) என்பவரை, ஐ. நா. பிரதிநிதியாகப் பாதுகாப்புச் சபை, 1951ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 30ஆம் தேதி நியமித்தது. அவருடைய முயற்சிகளும் பயன் அளிக்கவில்லை.

ஜம்மு, காஷ்மீர் சமஸ்தானத்திற்கு ஓர் அரசியல் நிருணய சபை 1951ஆம் ஆண்டில் கூடியது. இந்தியாவுடன் அச்சமஸ்தானம் இணைந்ததை அரசியல் நிருணய சபை ஆமோதித்து, 1954ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதத்தில் ஒரு தீர்மானம் நிறை வேற்றியது; ஜம்மு, காஷ்மீர் சமஸ்தானத்தை இந்திய யூனியனின் ஒரு பகுதி என அறிவித்து அதற்கான ஓர் அரசியல் திட்டத்தையும், 1956ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் அச்சபை உருவாக்கியது. 1957ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 26ஆம் தேதி புது அரசியல் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டவுடன், அரசியல் நிருணய சபை கலைக்கப்பட்டது. 1957ஆம் ஆண்டு, ஜூலை மாதம், 26ஆம் தேதி பக்ஷி குலாம் முகம்மது (Bakhsi Ghulam Mohammad) என்பவர், ஜம்மு, காஷ்மீரின் பிரதம மந்திரியாராகப் பதவி ஏற்றார். ஜம்மு,

காஷ்மீரின் சாதர்-இ-ரியாசத்தாக (Sadar-i-Riyasat) யுவராஜ் கரன்சிங், (Yuvaraj Karan Singh) என்பவர், மற்றுமொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார். இதற்கு இரண்டு நாள்களுக்கு முன்புதான், காஷ்மீரில் அப்பொழுது இருக்கும் நிலையை நீடிக்க வேண்டும் எனப் பாதுகாப்புச்சபை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. காஷ்மீரின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ஐக்கிய நாடுகள் இராணுவத்தை அங்கு அனுப்ப வேண்டும் என, பிரிட்டன், ஆஸ்திரேலியா, கியூபா, அமெரிக்கா ஆகிய நான்கு நாடுகளும் சேர்ந்து பாதுகாப்புச் சபையில் கொணர்ந்த ஒரு தீர்மானத்தை, 1957ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 20ஆம் தேதியன்று ரஷ்யா, தனது மறுப்பாணை (Veto) அதிகாரத்தை உபயோகப்படுத்தி அது நிறைவேருமல் தடுத்துவிட்டது. ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த கன்னர் ஜாரிங் (Gunnar Jarring) என்பவர், பாதுகாப்புச் சபையின் தலைவராய் இருந்தார்; காஷ்மீர்த் தகராற்றைத் தீர்ப்பதற்காக, அவர் அங்குச் சென்று அதைக் கவனித்து, 1957ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 36ஆம் தேதிக்குள் தமது அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டுமென்று கோரப்பட்டார். ஆனல், அவரது முயற்சியும் வெற்றி பெறவில்லை. கிரஹாம் கமிஷனை மறுபடியும் அனுப்ப வேண்டுமென்ற பாதுகாப்புச் சபையின் தீர்மானமும் தோல்வியையே அடைந்தது.

பத்து ஆண்டுகள் ஆகியுங்கூட, காஷ்மீர்ப் பிரச்சினையைப் பாதுகாப்புச் சபை தீர்க்க முடியவில்லை. சரியான சூழ்நிலை ஏற்படாததாலும், அச்சமஸ்தானத்தின் ஒரு பாகத்தைப் பாக்கிஸ்தான் இன்னும் தன் ஆக்கிரமிப்பில் வைத்திருப்பதாலும், இந்திய அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையில், மக்கள் கருத்தை அறிவதற்கான ‘பிளபிசைட்’ (Plebicite) என்னும் பிரச்சினைக்கே இடமில்லை. இந்தியாவுடன் ஏற்பட்ட இணைப்பு இறுதியானதென ஜம்மு, காஷ்மீர் அரசியல் நிருணய சபை அறிவித்த செய்தி மிக முக்கியத்துவம் வாய்ந்தது என்பது நோக்கத் தகுந்தது.

## II. இந்திய அரசியல் அமைப்பு

1946ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 9ஆம் தேதியன்று கூடிய அரசியல் நிருணய சபை, தன் வேலையை முடிப்பதற்கு மூன்று ஆண்டுகள் ஆயின; புது அரசியல் அமைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டு, 1949ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 26ஆம் தேதி பிரசிடென்டு டாக்டர் இராஜேந்திர பிரசாது அதில் கையொப்பமிட்டார். சுதந்தர தினத்தின் இருபதாம் நினைவு ஆண்டின் தினமான 1950ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 26ஆம் தேதி அது அமுலுக்கு வந்தது. அப்பெரிய தஸ்தாவேஜில் (document) 270 பக்கங்கள் இருக்கின்றன; அதனுடைய முக்கிய விதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

### (அ) இந்திய யூனியன்

1. இந்தியா எனப்படும் பாரதம், ஒரு சுதந்தர ஜனநாயகக் குடியரசும்[1] ராஜ்யங்களின் யூனியனும் ஆகும். இந்த ராஜ்யங்கள் நான்கு வகைப்படும், அவையாவன:

(அ) அஸ்ஸாம், பீஹார், பம்பாய், மத்தியப் பிரதேசம் (மத்திய மாகாணமும் பீஹாரும்), சென்னை, ஒரிஸ்ஸா, பஞ்சாபு (கி. பஞ்சாபு), ஐக்கிய மாகாணங்கள்,[2] மேற்கு வங்காளம்.

1. ஆனால், இன்றும் காமன்வெல்து நாடுகளில் இது ஓர் அங்கமாய் இருக்கிறது. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டு, 1949ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 16ஆம் தேதி அரசரின் கையொப்பம் பெற்ற (பின்னர் ஏற்பட்ட விதியின்படி) இந்தியச்சட்டந்தான் (India [Consequential Provision] Act), இன்றைய இந்தியாவின் நிலையை நிருணயிக்கிறது. இச்சட்டம், இந்தியாவை ஒரு குடியரசு நாடென ஒப்புக்கொண்டதுடன், பிரிட்டிஷ் சட்டப்படி இந்தியர்கள் இப்போது அனுபவிக்கும் எல்லா உரிமைகளையும் சலுகைகளையும் கொடுக்கிறது.

2. இம்மாகாணத்தின் பெயர், 'உத்தரப்பிரதேசம்' என 1950ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் மாற்றப்பட்டது.

(ஆ) ஹைதராபாது, ஜம்முவும் காஷ்மீரும், மத்திய பாரதம், மைசூர், பாட்டியாலாவும் கிழக்குப் பஞ்சாபு சமஸ்தானங்களின் யூனியனும், ராஜஸ்தான், சௌராஷ்டிரம், திருவாங்கூர், கொச்சி, விந்தியப் பிரதேசம்.

(இ) ஆஜ்மீர், போபால், பிலாஸ்பூர், குடகு, டில்லி, ஹிமாசல பிரதேசம், கட்சு, மணிப்பூர், திரிபுரா.

(ஈ) அந்தமான், நிக்கோபார்த் தீவுகள்.

முதல் பிரிவில், பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாணங்கள் இருக்கின்றன; இரண்டாம் பிரிவிலும், மூன்ரும் பிரிவிலும், தனியாக இருப்பதும் அல்லது கூட்டாட்சியில் சேர்ந்ததுமான பழைய இந்திய சமஸ்தானங்கள் இருக்கின்றன; ஆஜ்மீர்—மீர்வாரா, குடகு, டில்லி ஆகிய (மத்திய ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட) மூன்று சீப் கமிஷனர் பிரதேசங்களும் இதனுடன் இருக்கின்றன.

## (ஆ) அடிப்படை உரிமைகள்

2. பொது மக்கள் பாதுகாப்பிற்கும் நன்னெறிக்கும் குந்தகம் ஏற்படாத வகையில், பேச்சுரிமை, எழுத்துரிமை, அமைதியாகக் கூடும் உரிமை, மனச்சான்றுரிமை, வழிபாட்டுரிமை ஆகியவைகள் எல்லாக் குடி மக்களுக்கும் கொடுக்கப்படும் என, இவ்வரசியல் அமைப்பு உறுதி கூறுகிறது.

3. சமய, இன, சாதி, பால், பிறப்பிட வேறுபாடின்றி எல்லாக் குடி மக்களும், சட்டத்தின் முன் சமமாகக் கருதப்படுவார்கள்; எவ்விதக் குறைபாடுகளும் நேரிடாதபடி, அவர்கள் பாதுகாக்கப்படுவார்கள்.

'தீண்டாமை' ஒழிக்கப்பட்டது; அதை எவ்வழியிலும் பின்பற்றக்கூடாது.

4. சட்டப்படி அல்லாமல், வேறு எவ்விதத்திலும், ஒருவருடைய உயிர், சொத்து, உரிமை, ஆகியவை கவரப்படமாட்டா. மூன்று மாதங்கள், அல்லது அதிகமான காலத்திற்கு ஒருவரைக் காப்புச் சிறையிடுவதற்கு இச்சட்டம் வகை செய்யலாம்; ஆனால், ஓர் ஆலோசனைச் சபையின் சிபாரிசு

அல்லது, பாராளுமன்றத்தின் சட்டம் ஆகியவைகளினால் மட்டுமே இதைச் செய்ய இயலும்.

சொத்துகளைக் கட்டாயமாக எடுத்துக்கொள்வதற்கு ஏற்பாடு செய்யும் சட்டம் அதற்கு நஷ்ட ஈடு வழங்குவதற்கும் வழிவகையைச் செய்ய வேண்டும்.

## (இ) யூனியன் அரசாங்கம்

5. யூனியனின் நிருவாக அதிகாரம், இந்தியக் குடியரசு தலைவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது; (அ) பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள், (ஆ) ராஜ்ய சட்டசபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் ஆகியவர்களைக் கொண்ட ஒரு தேர்தல் குழு (Electoral College) இவரை ஐந்து ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கும்.

6. இந்தியாவிற்குத் துணைத்தலைவர் ஒருவரும் உண்டு. பாராளுமன்றத்தின் இரு சபைகளைச் சேர்ந்த அங்கத்தினர்களும் ஓர் இடத்திற்கூடி, அவரை ஐந்து ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுப்பார்கள்.

7. பிரதம மந்திரியாருடன் கூடிய ஒரு மந்திரிசபை குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை கூறி உதவி புரியும். பிரதம மந்திரியார் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவார்; பிரதம மந்திரியாரின் ஆலோசனையுடன் மற்ற மந்திரிகள், தலைவரால் நியமிக்கப்படுவார்கள். மந்திரி சபை கூட்டாக மக்கள் சபைக்குப் பொறுப்பானது.

8. யூனியனுக்கும் ஒரு பாராளுமன்றம் உண்டு. இதில் தலைவரும், ராஜ்யசபை, மக்கள் சபை என இரு சபைகளும் உண்டு.

9. ராஜ்ய சபையில் (Council of States): (1) 238 பேருக்கு மேற்படாத ராஜ்யங்களின் பிரதிநிதிகள் இருப்பார்கள்; ராஜ்ய சட்ட சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் இவர்களைத் தேர்ந்தெடுப்பார்கள். (2) இலக்கியம், விஞ்ஞானம், கலை, சமூக சேவை ஆகிய துறைகளில் சிறந்த அறிவு அல்லது தகுந்த அனுபவம் உள்ள 12 பேர்களைக் குடியரசு தலைவர் நியமிப்பார்.

10. மக்கள் சபையில் (House of the People) 500க்கும் மேற்படாத அங்கத்தினர்கள் இருப்பார்கள்; ராஜ்யங்களில் உள்ள வாக்காளர்கள் இவர்களை நேரிடையாகத் தேர்ந்தெடுப்பார்கள். 7,50,000 மக்களுக்கு ஒருவருக்குக் குறையாத அங்கத்தினரையும், 5,00,000 மக்களுக்கு ஒருவருக்கு மேற்படாத அங்கத்தினரையும் தேர்ந்தெடுக்கும் வகையில் நாடு, பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

11. ராஜ்ய சபை என்றும் கலைக்கப்படமாட்டாது; ஆனால், மூன்றில் ஒரு பங்கு அங்கத்தினர் இரண்டு ஆண்டு காலம் முடிவடைந்ததும், தமது பதவியை இழப்பர். மக்கள் சபை, இடையில் கலைக்கப்படாமலிருந்தால், ஐந்து ஆண்டுகள் இருக்கும். இரண்டு சபைகளும், ஆண்டிற்கு இரு முறையாவது கூட வேண்டும்.

12. இந்தியக் குடியரசின் துணைத்தலைவர், ராஜ்ய சபைக்குப் பதவியற்ற தலைவராய் (Ex-Officio Chairman) இருப்பார்; இச்சபை ஒரு துணைத் தலைவரையும் தேர்ந்து எடுக்கும். மக்கள்சபை, சபாநாயகரையும் தேர்ந்தெடுக்கும். இரண்டு சபைகளிலும் உள்ள இந்த அதிகாரிகளும் அங்கத்தினர்களும், பாராளுமன்றம் குறிப்பிட்ட சம்பளமும் படிச்செலவும் (allowance) பெறுவார்கள்.

13. பண மசோதா, மக்கள் சபையிலேதான் முதலில் கொண்டு வரப்படவேண்டும்; ராஜ்ய சபை ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், அது மக்கள் சபையால் நிறைவேற்றப்படும். மற்ற மசோதாக்கள், பாராளுமன்றத்தின் எச்சபையிலும் கொண்டு வரலாம்; இரண்டு சபைகளும் ஒப்புக்கொண்டால்தான் அது நிறைவேறியதாக ஏற்றுக்கொள்ளப்படும்; கருத்து வேற்றுமை ஏற்பட்டால், இரண்டு சபைகளும் ஒரே இடத்தில் கூடி, பெரும்பான்மை வாக்குகளால் அதை நிறைவேற்ற வேண்டும்.

14. குடியரசுத் தலைவரின் கையொப்பத்தைப் பெற்றுதான், ஒரு மசோத்ா, சட்டமாக முடியும்; சில சமயங்களில், அவர் கையெழுத்திடாமல், தம் குறிப்புகளுடன் அதைத் திருப்பி அனுப்பலாம்; ஆனால், மறுபடியும் அம்மசோதா நிறைவேற்றப்படுமானால், அவர் கையெழுத்திடத்தான் வேண்டும்.

15. இந்தியாவின் தலைமை நீதிபதியைக்கொண்ட ஒரு தலைமை உயர்நீதி மன்றம் உண்டு; இதில் எழுவருக்கு மேற்படாத நீதிபதிகளும் இருப்பார்கள். பாராளுமன்றம் ஒரு சட்டத்தின் மூலம் நீதிபதிகளின் தொகையை அதிகரிக்கலாம். ராஜ்யங்களுக்கிடையே ஏற்படும் தகராறுகளிலும், இந்திய அரசாங்கத்திற்கும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ராஜ்யத்திற்கும் இடையே ஏற்படும் தகராறுகளிலும், இது தீர்ப்பளிக்கும். ராஜ்யத்திலுள்ள உயர்நீதி மன்றங்களின் தீர்ப்பை எதிர்த்துத் தலைமை உயர்நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்து கொள்ளலாம். தலைமை உயர்நீதி மன்ற (அல்லது ராஜ்யத்திலுள்ள உயர்நீதி மன்ற) நீதிபதியைப் பதவியிலிருந்து நீக்க முடியாது; பாராளுமன்றத்தின் இருசபைகளுக்கும் வந்திருந்த அங்கத்தினர்களுள் பெரும்பான்மையாக மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாமல், குறிப்பிட்ட நீதிபதியை நீக்க வேண்டுமென்று விரும்பி வாக்களித்தால்தான் அந்நீதிபதியை விலக்க இயலும்.

## (ஈ) ராஜ்யங்கள் (அ-வகை)

16. ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு கவர்னர் உண்டு; அவரைக் குடியரசு தலைவர் ஐந்து ஆண்டு காலத்திற்கு நியமிப்பார்; தலைவர் விரும்பும் வரையில், கவர்னர் பதவியில் நீடிப்பார்.

17. முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட ஒரு மந்திரி சபை ஒவ்வொரு ராஜ்யத்திலும் உண்டு; அச்சபை, கவர்னருக்கு ஆலோசனை கூறி உதவி புரியும். முதலமைச்சரைக் கவர்னர் நியமிப்பார்; முதலமைச்சரின் ஆலோசனையின் பேரில், மற்ற மந்திரிகளையும் கவர்னர் நியமிப்பார். ராஜ்ய சட்டசபைக்கு, மந்திரி சபை கூட்டாகப் பொறுப்பேற்கும்.

18. கவர்னரைக் கொண்ட சட்ட சபை, ஒவ்வொரு ராஜ்யத்திலும் இருக்கும். மேல்சபை (Legislative Council) எனக் கூறப்படும் மற்றுமொரு சபை, பீஹார், பம்பாய், சென்னை, பஞ்சாபு, ஐக்கிய மாகாணங்கள், மேற்கு வங்காளம் ஆகிய ராஜ்யங்களில் இருக்கும்.

19. 7,50,00 மக்களுக்கு ஒருவருக்கு மேற்படாத அங்கத்தினர் என்ற அளவில், நேரிடைத் தேர்தல் மூலம் சட்டசபை அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

20. மேற்சபை அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை, சட்டசபை அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கையில் நான்கில் ஒரு பாகத்திற்குமேல் இருக்கக்கூடாது. இவர்களுள் மூன்றில் ஒரு பகுதியினரை, முனிசிபாலிட்டிகள், ஜில்லா போர்டுகள் போன்ற பல ஸ்தல ஸ்தாபனங்கள் தேர்ந்தெடுக்கும்; பன்னிரண்டில் ஒரு பகுதியினரை மூன்றுண்டு தகுதி பெற்ற பட்டதாரிகள் தேர்ந்தெடுப்பார்கள். பன்னிரண்டில் ஒரு பகுதியினரை மூன்றுண்டு தகுதி பெற்ற ஆசிரியர்கள் தேர்ந்தெடுப்பார்கள்; மூன்றில் ஒரு பகுதியினரைச் சட்டசபை அங்கத்தினர்கள் தேர்ந்தெடுப்பார்கள். மற்ற அங்கத்தினர்களைக் கவர்னர் நியமிப்பார்; இவர்கள், இலக்கியம், விஞ்ஞானம், கலை, கூட்டுறவு இயக்கம், சமூகசேவை ஆகியவைகளில் சிறந்த ஞானமும் தகுந்த அனுபவமும் பெற்றவர்களாய் இருப்பார்கள்.

21. 11ஆம் பிரிவில் குறிப்பிட்டுள்ள ராஜ்யசபை, மக்கள் சபை ஆகியவைகளின் கால அளவுதான், முறையே, மேல் சபை, சட்டசபை ஆகியவைகளின் கால அளவாகும்.

22. ஒவ்வொரு சட்டசபையும், தன் அங்கத்தினர் இருவரைச் சபாநாயகர், உதவி சபாநாயகர் எனத் தேர்ந்தெடுக்கும். ஒவ்வொரு மேற் சபையும், தன் அங்கத்தினர் இருவரைத் தலைவர், துணைத் தலைவர் எனத் தேர்ந்தெடுக்கும். இவ்விரண்டு சபையையும் சேர்ந்த அதிகாரிகளும் அங்கத்தினர்களும், அவர்கள் சட்டசபை நிருணயித்தபடி, சம்பளங்களையும் படிச் செலவையும் பெறுவார்கள்.

23. பண மசோதா, சட்டசபையிலேதான் முதலில் கொண்டுவரப்படும்; மேல் சபை அதை எதிர்த்தாலும், அது சட்டசபையால் நிறைவேற்றப்படும். மற்ற மசோதாக்கள், எச்சபையிலும் முதலில் கொண்டு வரலாம்; இரு சபைகளும் ஒப்புக்கொண்டால்தான், அம்மசோதா நிறைவேறியதாகக் கொள்ளப்படும். கருத்து வேற்றுமை ஏற்படின், சட்டசபை இரண்டாம்முறை நிறைவேற்றினல், மேல்சபையின் அங்கீகாரமின்றியே, அது சட்டமாகிவிடும்.

24. கையெழுத்திடுவதிலும் அல்லது கையெழுத்திடாமல் இருப்பதற்கும் குடியரசு தலைவருக்குள்ள அதிகாரமே, சட்டசபை நிறைவேற்றிய மசோதாக்கள் சம்பந்தப்பட்ட வரையில், கவர்னருக்கும் உண்டு (14ஆம் பாராவைப் பார்க்க). ஆனல்,

குடியரசுத் தலைவரின் சம்மதத்தைப் பெறுவதற்காக, அப்படிப் பட்ட மசோதாவைக் கவர்னர் நிறுத்தி வைக்கலாம்.

## (உ) ராஜ்யங்கள் (அ, இ, ஈ வகை)

25. 'அ' பிரிவு ராஜ்யத்திற்குக் கவர்னர் தலைவராகவும், 'ஆ' பிரிவு ராஜ்யத்திற்கு ராஜப் பிரமுகர் தலைவராகவும் இருப்பதுதான் இவற்றுக்கிடையே இருக்கும் மிக முக்கிய வித்தியாசம்; பொதுவாக, பழைய சமஸ்தானத்தின் அரசர் (அல்லது பல சமஸ்தானங்கள் கூட்டாய் இருந்தால், ஒரு சமஸ்தானத்தின் அரசர்) ராஜ பிரமுகராய் இருப்பார். அப்படி ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் இந்திய அரசாங்கத்திற்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தப்படி, ராஜ பிரமுகர் நியமிக்கப்படுவார். மூன்றாவது நான்காவது வகையைச் சேர்ந்த ராஜ்யங்கள் இந்திய யூனியனின் தலைவர், ஒரு தலைமை ஆணையாளர் மூலமாக ஆட்சி செய்யப்படுகின்றன; அவரைக் குடியரசு தலைவர் நியமிப்பார்; அல்லது அண்டை ராஜ்யங்களின் அரசாங்கம் நியமிக்கும்.

## (ஊ) யூனியன்—ராஜ்யங்களின் உறவு

26. பொதுவாகக் கூறுமிடத்து, இந்தியா முழுவதற்கும் அல்லது எந்த ஒரு பாகத்திற்கும் பாராளுமன்றம் சட்டமியற்றலாம்; ராஜ்ய சட்டசபை, ராஜ்யத்தின் முழுவதற்குமாவது அல்லது ஒரு பாகத்திற்காவது சட்டமியற்றலாம். ஆனால், அரசியல் அமைப்பில் மூன்று விதப் பட்டியல்கள் தரப்பட்டுள்ளன; முதற்பட்டியல் சம்பந்தப்பட்ட வரையில் பாராளுமன்றமும், இரண்டாவது பட்டியல் சம்பந்தப்பட்ட வரையில் ராஜ்ய சட்டசபையும், சட்டமியற்றும் தனி உரிமையைப் பெற்றுள்ளன; மூன்றாவது சம்பந்தப்பட்ட வரையில், சட்டமிற்றும் அதிகாரத்தை இரண்டும் பொதுவாகப் பெற்றுள்ளன.

27. யூனியன் அரசாங்கப் பட்டியலில் (Union List) மற்றவைகளுடன் கீழ்க் காண்பவைகளும் அடங்கியுள்ளன. இந்தியாவின் பாதுகாப்பு, கடல் இராணுவ விமானப்படைகள், போர் ஆயுதங்களும் மருந்துகளும், அரசியல் தூதுவர்களை நியமித்தல் உட்பட அயல் நாட்டு விவகாரங்கள், போரும் சமாதானமும், இரயில்வேக்கள், கடல் வியாபாரமும் கடற் பயணமும், விமானப் பயணம், தபால் தந்திகள், நாணயம்,

வெளிநாட்டு வாணிகம், ராஜ்யங்களுக்கிடையே நடக்கும் உள்நாட்டு வாணிகம், பாங்குத் தொழில், இன்சூரன்ஸ், நிதிக் கார்ப்பொரேஷன்கள், சுரங்கக் கட்டுப்பாடும் தாதுப் பொருள்களின் அபிவிருத்தியும், தொழிலாளர் சட்டம், உப்பு உற்பத்தி, உயர்நீதி மன்றங்கள், அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த சில நிறுவனங்கள், வருமான வரியைப் போன்ற சில வரிகள், சுங்கத்தீர்வைகள், ஆயத் தீர்வைகள்.

28. ராஜ்ய அரசாங்கப் பட்டியல், மற்றவைகளுடன், போலீஸ், நீதி நிருவாகம் (உயர்நீதி மன்றங்களை ஏற்படுத்துவதைத் தவிர), சிறைச்சாலைகள், ஸ்தலஸ்தாபனம், கல்வி, (ராஜ்யத்திற்குள் நடக்கும்) போக்கு வரவு, காடுகள், மீன் பிடிக்கும் தொழில், பல வித வரிகள்.

29. பொதுத்துறைப்பட்டியல், மற்றவைகளுடன், கிரிமினல் சட்டம், சிவில், கிரிமினல் நடப்புச்சட்டம், நாட்டின் பாதுகாப்பிற்காகச் சந்தேகப்பட்டவர்களைச் சிறையிலிடுதல், தொழிற்சங்கங்கள், துறைமுகங்கள், உள்நாட்டுக்கப்பல் வியாபாரமும் கப்பல் பயணமும், வாணிகம், விலைக்கட்டுப்பாடு.

30. ஒவ்வொரு ராஜ்யத்தின் நிருவாக அதிகாரமும், பாராளுமன்றத்தின் சட்டங்களுக்குட்பட்டுதான் செலுத்தப்பட வேண்டும். யூனியனின் நிருவாக அதிகாரம் செலுத்தப்படுவதற்கு அவை தடையாக இருக்கக்கூடாது; அவசியமானவை என இந்திய அரசு நினைப்பவைகளை, ஒரு ராஜ்யம் செய்யும்படி யூனியன் நிருவாகம் கட்டளையிடலாம்.

31. வருவாய்களை (Revenues) யூனியனுக்கும் ராஜ்யங்களுக்கும் இடையில் பங்கீடு செய்வதற்குப் பல விரிவான ஒழுங்கு விதிகள் செய்யப்பட்டுள்ளன; பங்கீட்டு முறையைத் திருத்தி அமைப்பதற்குக் குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு முறை ஒரு நிதிக்கமிஷன் ஏற்படுத்தவும் வழி செய்யப்பட்டிருக்கிறது.

## (ஏ) வாக்குரிமையும் சட்டசபை அங்கத்தினருக்கான தகுதிகளும்

32. இருபத்தொரு வயதுக்குக் குறையாமல் இருக்கும் ஒவ்வோர் இந்தியக் குடிமகனும், மக்கட்சபைத் தேர்தலிலும் அவன் இருக்கும் ராஜ்ய சட்டசபைத் தேர்தலிலும் கலந்து கொண்டு, தன் வாக்கை அளிக்கலாம்.

33. முப்பது வயதுக்குக் கீழ் இருக்கும் எந்தக் குடிமகனும், ராஜ்ய சபையிலோ, மேற்சட்ட சபையிலோ அங்கத்தினனாக முடியாது; மக்கள் சபையிலும், சட்ட சபையிலும் அங்கத்தினராவதற்குக் குறைந்தது இருபத்தைந்து வயதாவது ஆகியிருக்கவேண்டும்.

34. இந்த அரசியல் அமைப்பு ஆரம்பமானது முதல், பத்து ஆண்டுகள் வரையில், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும், மலைச்சாதியினருக்கும், அவர்களுடைய மக்கள் தொகைக்குத் தகுந்த அளவில் ஸ்தானங்கள் மக்கள் சபையில் ஒதுக்கப்பட வேண்டும்; ஆங்கிலோ-இந்திய சமூகத்தைச் சேர்ந்த இருவருக்கு மேற்படாத அங்கத்தினர்களைக் குடியரசு தலைவர் இச்சபைக்கு நியமிக்கலாம்.

## (ஏ) நெருக்கடி விதிகள்

35. குடியரசு தலைவர் அல்லது ஒரு ராஜ்யத்தின் கவர்னர், உடனடியான நடவடிக்கை எடுப்பது அவசியமென நினைத்தால், சட்டசபை உண்டாக்கும் சட்டத்தைப் போன்ற ஆற்றலையுடைய அதிகார பூர்வமான கட்டளையைப் (Ordinance) பிறப்பிக்கலாம். சட்டசபை மறுபடியும் கூடிய ஆறு வாரங்களுக்குப் பிறகோ அல்லது சட்டசபை அதை அங்கீகரிக்க மறுத்தால், அதற்கு முன்போ, அப்படிப்பட்ட அதிகாரக் கட்டளைகள் காலாவதியாகிவிடும்.

36. மிகநெருக்கடியான நிலைமை ஏற்பட்டு, அதனால் இந்தியா அல்லது அதனுடைய ஒரு பாகத்தின் பாதுகாப்பு ஆபத்திலிருப்பதாகக் குடியரசுதலைவர் உணர்ந்தால் அதை அறிவிக்கும் வகையில், அவர் ஒரு பிரகடனம் (Proclamation) வெளியிடலாம். பிரகடனத்தின் மூலம் வெளியிடப்பட்ட நெருக்கடி நிலை நீடிக்கும்போது, ராஜ்யங்களின் நிருவாகம், சட்டஞ்செய்யும் அதிகாரங்களை ஒதுக்கி வைத்து விடும்.

37. அரசியல் அமைப்பு விதிகளின்படி ஒரு ராஜ்ய அரசாங்கம் இயங்க முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது எனக் குடியரசு தலைவர் நினைத்தால், அவர் ஒரு பிரகடனத்தின் மூலம், அந்த ராஜ்ய அரசாங்கத்தின் அதிகாரங்களையும், வேலைகளையும், முழுவதையுமோ அல்லது ஒரு பாகத்தை மட்டுமோ எடுத்துக்கொள்ளலாம்; அல்லது அதைப் பாராளுமன்றத்திற்குக் கொடுத்துவிடலாம்.

38. மேலே உள்ள இரண்டு பாராக்களில் குறிப்பிட்டுள்ள பிரகடனத்தை இரண்டு மாதங்களுக்குமேல் நீடிக்க முடியாது; அப்படி நீடிக்க வேண்டுமானால், குறிப்பிட்ட தேதி முடியு முன்னரே, அதைப் பாராளுமன்றத்தின் சபைகள் அங்கீகரிக்க வேண்டும்; அல்லது அச்சமயத்தில் மக்கள் சபை கலைக்கப் பட்ட பிறகு முப்பது நாளைக்குள் அதை அங்கீகரிக்க வேண்டும்.

## (ஐ) பலவித விதிகள் (Miscellaneous)

39. குடியரசு தலைவர் அரசியலமைப்பை மீறி நடந்தால், அதற்காக அவர்மீது சாட்டப்பட்ட துரோகக் குற்ற விசாரணையை (Impeachment) பாராளுமன்றத்தின் எச்சபையும் நடத்தலாம். ஒரு சபையின் மூன்றில் இரண்டு பங்கினர் அதை ஆதரித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி, தகுந்த விசாரணையின் மூலம் அது உறுதிப்படுத்தப்பட்ட பிறகு மற்றச் சபையின் மூன்றில் இரண்டு பங்கினர் அதை ஆதரித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றினால், குடியரசு தலைவர், பதவியிலிருந்து நீக்கப்படலாம்.

40. சட்டத்தால் விதிக்கப்பட்ட சில பொதுத் தடைகளைத் தவிர, மற்றப்படி நாட்டின் எல்லாப் பாகங்களுக்கிடையிலும், தடையில்லா வாணிகமும் தொடர்பும் கொள்ளலாம்.

41. யூனியனுக்கும் ராஜ்யங்களுக்கும் தனித்தனியான பொதுப்பணிக் குழு (Public Service Commission) இந்தியாவின் அட்டார்னி-ஜெனரல் (Attorney-General), இந்தியாவின் ஆடிட்டர்-ஜெனரல் (Auditor-General), ராஜ்யங்களுக்கு அட்வகேட்டு-ஜெனரல் (Advocate General), உயர்நீதி மன்றங்கள் ஆகியவர்களை ஏற்படுத்துவதற்கு இவ்வரசியலமைப்பு இடமளிக்கிறது.

42. பதினைந்து ஆண்டுகள் வரையிலும், ஆங்கிலமொழி யூனியனின் அரசாங்க மொழியாய் நீடிக்கும். அதற்குப் பிறகு தேவநாகரி லிபியைக் கொண்ட இந்தி மொழிதான் அரசாங்க மொழியாய் இருக்கும்.

43. ஒரு ராஜ்ய சட்டசபை, சட்டத்தின் மூலம், அவ்விடத்தில் வழங்கும் மொழியை, அரசாங்க மொழியாக ஏற்கலாம்; ஆனால், இரண்டு ராஜ்யங்களுக்கிடையில் ஏற்படும்

கடிதப் போக்குவரத்து, யூனியனுடைய அரசாங்க மொழியிலேதான் நடத்தப்பட வேண்டும்.

1951ஆம் ஆண்டிற்குப் பிறகு, இந்திய அரசியலமைப்பில் பல திருத்தங்கள் செய்யப்பட்டு, புதிய விதிகளும் சேர்க்கப்பட்டன. இவற்றில் மிக முக்கியமானவை கீழே தரப்பட்டுள்ளன :

1. அரசியலமைப்பின் 5ஆம் விதி எப்படியிருந்த போதிலும், சமூகத்திலும், கல்வியிலும் பின் தங்கிய வகுப்புகள் அல்லது தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அல்லது மலைச்சாதி வகுப்பினர் ஆகியவர்கள் முன்னேறுவதற்கு வேண்டிய பிரத்தியேக முறைகளைக் கையாள்வதற்கு இது அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கிறது.

2. நாட்டின் பாதுகாப்பு, அயல் நாடுகளுடன் கொண்டுள்ள நட்புறவு, பொது அமைதி, நேர்மை, நல்லொழுக்கம் ஆகியவைகளை முன்னிட்டும், நீதி மன்றத்தை அவமதித்தல், அவதூறு, குற்றத்தைச் செய்யத் தூண்டுதல் ஆகியவைகளைக் கருதியும், 19ஆம் விதியின்படி கொடுக்கப்பட்ட உரிமைக்கு நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதற்கு இது அரசாங்கத்திற்கு அதிகாரமளிக்கிறது.

3: உடைமைகளைக் கட்டாயமாக அடைதல் அல்லது பெறுதல் சம்பந்தமாகவும், அரசாங்க விற்பனைச் சர்வாதீனம் (State monopoly) சம்பந்தமாகவும் உள்ள விதிகளில் முக்கிய மாறுதல்கள் செய்யப்பட்டன.

4. 1956ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், முதல் தேதியிலிருந்து இந்திய யூனியனின் ராஜ்யங்களும் பிரதேசங்களும் திருத்தி அமைக்கப்பட்டன. இதன் பயனாகப் பதினைன்கு ராஜ்யங்களும், ஆறு யூனியன் பிரதேசங்களும் ஏற்பட்டன. யூனியன் பிரதேசங்கள் பின்வருவன : (1) டில்லி, (2) ஹிமாசல பிரதேசம், (3) மணிப்பூர், (4) திரிபுரா, (5) அந்தமான் நிக்கோபார்த்தீவுகள், (6) மினிகாய் அமீன் திவி தீவுகள். பதினைன்கு ராஜ்யங்கள் பின்வருவன: ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், பீஹார், பம்பாய், கேரளா, மத்தியப் பிரதேசம், சென்னை, மைசூர், ஒரிஸ்ஸா, பஞ்சாபு, ராஜஸ்தான், உத்தரபிரதேசம், மேற்கு வங்காளம், ஜம்முவும் காஷ்மீரும். முன்பு 'ஆ' பகுதியில் இருந்த பத்து ராஜ்யங்களில், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, உத்தர பிரதேசம் ஆகியவைகளின் பிரதேசங்கள், ராஜ்யப்

புனரமைப்புக் காரணமாகப் பாதிக்கப்படவில்லை. மேற்கு வங்காளம், பீஹார், சென்னை ஆகிய ராஜ்யங்களின் எல்லைகள் திருத்தி அமைக்கப்பட்டன. சென்னை ராஜ்யத்தின் வடபகுதியைக் கொண்டு, 1953ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட ஆந்திர ராஜ்யம், ஆந்திரப் பிரதேசம் எனப் பெயரிடப்பட்டது; ஹைதராபாதின் ஒரு பாகமான தெலிங்கானாவை அதனுடன் சேர்த்து அது விரிவுபடுத்தப்பட்டது. கட்சு, சௌராஷ்டிரா ஆகிய பிரதேசங்களும், மத்தியப் பிரதேசம், ஹைதராபாது ஆகியவைகளில் மராட்டிய மொழி பேசப்படும் மாவட்டங்




பம்பாய் ராஜ்யத்தின் பிரிவினை, 1960.

களும், பம்பாயுடன் சேர்க்கப்பட்டதால், பரப்பளவு சம்பந்தப்பட்ட வரையில், அது மிகப் பெரிய ராஜ்யமாய் விளங்கிற்று. விதர்ப்பம் அல்லது மராட்டிய மொழி பேசப்படும் எட்டு மாவட்டங்களை மத்தியப் பிரதேசம் இழந்தாலும், மத்திய பாரதம், போபால், விந்தியப் பிரதேசம் ஆகியவை அதனுடன் சேர்க்கப்பட்டதால், அது இரண்டாவது மிகப் பெரிய ராஜ்யமாய்த் திகழ்ந்தது. பாட்டியாலா, கிழக்குப் பஞ்சாபு சமஸ்தானங்களின் யூனியன் ஆகியவை பஞ்சாபுடன் இணைக்கப்பட்டன. ஹைதராபாதில் இருந்த கன்னட மொழி வழங்கும்

மாவட்டங்கள் மைசூருடன் சேர்க்கப்பட்டன. திருவாங்கூர்–கொச்சி, சில பிரதேச மாறுதல்களுக்குப் பிறகு கேரளா எனும் புதிய பெயரைப் பெற்றது. ராஜ்யப் புனரமைப்பின் முக்கிய கூறுகள் பின் வருவன: (1) ராஜப்பிரமுகர்கள் பதவி ஒழிக்கப்பட்டது. (2) ராஜ்யங்களுக்கிடையே ஏற்படும் பிரச்சினைகளையும் எல்லைத் தகராறுகளையும் தீர்ப்பதற்கு ஆலோசனை கூறுவதற்காக மண்டலச் சபைகள் (Zonal Councils) ஏற்படுத்தப்பட்டன. (3) மொழிகளைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பம்பாய் புனரமைப்புச் சட்டப்படி, பம்பாய் ராஜ்யம் மாற்றி அமைக்கப்பட்டது; 1960ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 25ஆம் தேதி, அது இந்தியக் குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைப் பெற்றது; அதன்படி, அந்த ராஜ்யம், குஜராத்து ராஜ்யம், மகாராஷ்டிர ராஜ்யங்களாய்ப் பிரிந்தது.

# மரபு வரிசை பற்றிய அட்டவணைகள்
# GENEALOGICAL TABLES

## அயோத்தியின் நவாபுகள்

மீர் முகம்மது நாசிர்

- மீர் முகம்மது அமீன்
  சாதத் கான்
  புர்ஹான்-உல்-முல்கு
  (1722—1739)
- மகள் = ஜாபர் பெக்கான்
  - மீர்ஜா முகம்மது முக்கிம்.
    அபுல் மன்சூர் கான்.
    சப்தர்ஜங்
    (1739—1754)

சாதத்-இ-ஜஹான் அல்லது சாதர்-உன்-நிஸா பீகம் = சப்தர்ஜங்

ஜலால்-உத்-தீன் ஹைதர்.
சுஜா-உத்-தௌலா
(1754—1775)

ஆசப்-உத்-தௌலா
(1775—1797)

வாசீர் ஆலி (1797—1798)
சாதத் ஆலி (1798—1814)
பதவியிலிருந்து நீக்கப்பட்டவர்.

- காஸி-உத்-தீன் ஹைதர்
  (1814—1827)
  - நாசிர்-உத்-தீன்-ஹைதர்
    (1827—1837)
    - முனஜான்.
- ஆலி ஷா
  (1837—1842)
  - அம்ஜத் ஆலி ஷா
    (1842—1847)
    - முஸ்தாபா ஆலிகான் ஹைதர்.
    - வாஸித் ஆலி ஷா
      (1847—1856)
      - பிரிஜிஸ் காதர்
        1857
    - சுலைமான் காதர்

## கெயிக்வார் குடும்பம்


தாமாஜி-I
ஜிங்கோஜி
பிலாஜி (1721–1732)
இரண்டாம் தாமாஜி (1732–1768)
கோவிந்த ராவ் (1768–1771 ; 1793–1800)
சாயாஜி ராவ்-I (1771-1778)
பட்டேசிங் (1771-1789)
மானுஜி (1789-1793)
மற்றவர்கள்
ஆனந்த ராவ் (1800-1819)
சாயாஜி ராவ்-II (1818-1847)
கணபத் ராவ் (1847-1856)
கண்டே ராவ் (1856-1870)
மூன்றும் சாயாஜி ராவைத் தத்து எடுத்துக்கொண்டார்.
மல்ஹார் ராவ் (1870-1875)

# ஹோல்கார் குடும்பம்



'குண்டாஜி'
மல்ஹார் ராவ் ஹோல்கார் (1728–1764)
கண்டேராவ் = அஹல்யாபாய் (1765–1795) (1754-ல் கொல்லப்பட்டார்)
மல்லே ராவ் (1764–1766)
முக்தா பாய்
துக்கோஜி ஹோல்கார் (1795–1797) 1767-ல், அஹல்யாபாயால் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டவர்.
காசி ராவ்
மல்ஹார் ராவ்
ஜஸ்வந்த் ராவ்-I (1798–1811)
வித்தோஜி
மல்ஹர் ராவ் ஹோல்கார்-II (1811–1833)
ஹரி ராவ் ஹோல்கார் (1834–1843)
துக்கோஜி ராவ் ஹோல்கார்-II (1843–1886)
சிவாஜி ராவ் ஹோல்கார் (1886–1903)
துக்கோஜிராவ் ஹோல்கார்-III (1903–1926)
ஜஸ்வந்த் ராவ்-II (1926—)



பான்ஸ்லேக்கள் (நாகப்பூர்)
முதோஜி
பாபுஜி
பர்சோஜி
பிம்பாஜி
கன்ஹோஜி
ரகூஜி-I (1738-1755)
முதோஜி
ஜனோஜி
மற்றவர்கள்
ரகூஜி-II
(1788–1816)
ஜனோஜியால் தத்து
எடுக்கப்பட்டவர்
வியங்கோஜி
முதோஜி
(அப்பாசாகிப்)
பர்சோதி
ரகூஜி–III (1818–1853)


சிந்தியாவின் குடும்பம்
மீனுபாய்=ரணோஜி சிந்தியா = மாளவ இராஜபுத்திரப் பெண்
(1726-1750)
ஜய்பாட் (ஜயப்பா)
1759-ல் இறந்தார்.
தத்தாஜி
ஜோதிபா
ஜாங்கோஜி (பதவிக்கு
வந்த உடனே, பானிப்
பட்டில் கொல்லப்பட்டார்.)
மாதவ ராவ் (மாகாதாஜி)
சிந்தியா
1794-ல் இறந்தார்.
துக்கோஜி
(பானிப்பட்டுப்
போரில் இறந்தார்.)
கேதார்ஜி
ஜியோதபா
ஆனந்த ராவ்
தௌலத் ராவ் சிந்தியா
(1794-1827)
ஜங்கோஜி ராவ்
(1827-1843)
ஜயஜிராவ்
(1843-1886)
மாதவ ராவ்-II
(1886-1925)
ஜீவாஜி ராவ்
(1925— )


மகாராஜா ரஞ்சித் சிங்கின் குடும்பம்
புத்சிங்
(சுகர்சக்கியா கூட்டாட்சியை உண்டாக்கியவர்)
(1716-ல் இறந்தார்)
சந்திர சிங்
(அக்குடும்பத்தின் சிந்தியன்வாலா பிரிவின் முன்னோர்)
நோத் சிங்
(1752-ல் இறந்தார்)
சரத் சிங்
(1774-ல் இறந்தார்)
ஜிண்டு நாட்டின் ராஜா கபத் சிங்
மகன்
= மஹன் (மஹா) சிங் (மூத்த குமாரர்)
இரஞ்சித சிங்
(பிறந்தது 1780, இறந்தது 1839)
= (1) மஹ்தாப் கௌர்
(2) ராஜ்கௌர் (மாய் நகாயின்)
(3) தியா கௌர்
(4) இரத்தன் கௌர்
(5) ஜிண்டான்
(6) மற்றவர்கள்
சந்த் கௌர் = காரக் சிங்
(1840-1841) (1839-1840)
ஷேர் சிங்
(1841-1843)
தாரா சிங்
காஷ்மிரா சிங்
பிஷோரா சிங்
மூல்தானு சிங்
தலீப்சிங்
(1843-1849)
நவோநெகல் சிங்
(1840)
பாக் சிங்
பர்தாப் சிங்
திவா சிங்
ஷாதேவ் சிங்
நாராயண் சிங்
தாகூர் சிங்
கரம் சிங்
ஹர்நாம் சிங்
அவோதார் சிங்

## ஹைதராபாது நைஜாம்கள்

குவாஜா அபித் கபிஜ் கான் (ஆஜ்மீர் கவர்னர்)

|

மீர் சிஹாப்-உத்-தீன், காஜி-உத்-தீன்கான் பிரூஸ் ஜங் (குஜராத்துக் கவர்னர்)

|

1. மீர் காமர்-உத்-தீன், நைஜாம்-உல்-முல்கு ஆசப்ஜா
1713-ல் பருக்ஷயர் என்கிற முகலாயப் பேரரசரால், தக்காணச் சுபேதாராக நியமிக்கப்பட்டவர் 1724-ல் சுதந்தர அரசராஞர் (1713-1748)

|

- காஜி-உத்-தீன் கான்
  - | காஜி-உத்-தீன் இமாத்-உல் முல்கு.
- 2. மீர் முகமது நாசிர்ஜங் (1748-1750)
- 3. மீர் ஆசப்-உத்-தௌலா சலாபத் ஜங் (1751-1761)
- 4. நைஜாம்ஆலி (1762-1803)
  - |
  - 5. மீர் அக்பர் ஆலிகான் சிக்கந்தர் ஜா (1802-1829)
  - |
  - 6. நாசிர்-உத்-தௌலா பர்குண்டா ஆலி கான் (1829-1857)
  - |
  - 7. அப்சுல்-உத்-தௌலா (1857-1869)
  - |
  - 8. மீர் மஹ்பூப் ஆலி கான் (1869-1911)
  - |
  - மேன்மை பொருந்திய நவாபு மீர் உஸ்மான் ஆலிகான் பஹதூர் பட்டே ஜங் (1911—
- மீர் ஷுஜா-உல் முல்கு பசாலத் ஜங்
- மகள்
  - | முசபர் ஜங் (1750-1751)

## ஆர்க்காட்டு நவாபுகள்

1. ஜுல்பிகர் ஆலி கான்
(ஔரங்கசீபு பேரரசரால் கருநாடக நவாபாக நியமிக்கப்பட்டார்)
(கி. பி. 1690-1703)

2. தாவூத் கான்
(கி. பி. 1703-1710)

அஜிபட்டி முகம்மது கான்
- 3. முகம்மது சய்யித் சாதத்-உல்லா கான்-I (1710-1732)
- குலாம் ஆலி கான்
  - 4. தோஸ்து ஆலி கான் (1732-1740)
    - ஹுசேன்
    - 5. சப்தர் ஆலி கான் (1740-1742)
      - 6. சாதத் உல்லா கான்-II முகம்மது சய்யிது (1742-1744)
    - தா. மு. குலாம் முர்தாஜா ஆலி
      - சாஹீப் ஜட்டா (ஜடா)
    - தா. மு. சிஹந்தா சாகிப் என்கிற ஹுசேன் தோஸ்து கான் (1749)
      - இராஜா சாகிப் (1759)


7. அன்வார்-உத்-தீன்-முகம்மது
நைஜாம் உல்-முல்கு என்பவரால் நவாபாக நியமிக்கப்பட்டவர்
சந்தா சாகிபின் எதிரி (1744—1749)
மஹ்புஸ் கான்
8. வாலா ஜா
முகமது அலி
(1749-1795)
அப்துல் ரஹீம்
அப்துல் வஹாப்
நாஜிப்-உல்லா
9. ஓம்தத்-உல்-உமாரா
(1795-1801)
அமிர்-உல்-உமாரா
10. ஆலி ஹுசேன்
அஜீம்-உத்-தௌலா
(1801-1819)
11. அஜம் ஜா
(1819-1825)
12. அஜிம்-ஜா-பஹதூர்
ஆர்க்காட்டின் இளவரசர்
(1867-1874)

## வங்காள சுபாவின் நவாபுகள்

முர்ஷித் குலி ஜாபர் கான்
(1703-1727)
|
மகள் = ஷுஜா-உத்-தீன்.
(1727-1739)
|
சர்பராஸ் கான்
(1739-1740)

(துருக்கிஸ்தானத்தின் வீரரான மீர்ஜா முகம்மது)
- அலிவர்தி கான் (1740-1756)
  - மகள் (அமீனு பீகம்)
- ஹாஜி அஹமது
  - ஜயின்-உத்-தீன்

மகள் (அமீனு பீகம்) = ஜயின்-உத்-தீன்
|
சிராஜ்-உத்-தௌலா
(1756-1757)

... ... ... ... ... ...

மீர் ஜாபர்
(முதல் முறை 1757-1760)
(இரண்டாம் முறை 1763-1765)
- மகள் (பதிமா பீகம்) = மீர் காசிம் (1760-1763)
- நாஜம்-உத்-தௌலா (1765-1766)
- சயீப்-உத்-தௌலா (1766-1770)

**பரக்ஜாய் வாசீர்களும் அமீர்களும்**



# கவானா-ஜெனரலகள

## (Governors - General)

## I. வங்காள வில்லியம் கோட்டையில் இருந்த கவர்னர்-ஜெனரல்கள்

(1773ஆம் ஆண்டு ஒழுங்குமுறைச் சட்டப்படி)

*(தடித்த எழுத்திலுள்ள பெயரினர் தாற்காலிகமாகவும் சிறிது காலத்திற்கும் உள்ளவர்.)*

| | |
|---|---|
| 1774 (அக்டோபர்) | வாரன் ஹேஸ்டிங்ஸ்<br>Warren Hastings |
| 1785 (பிப்பிரவரி) | **சர் ஜான் மெக்பர்சன்**<br>**Sir John Macpherson** |
| 1786 (செப்டெம்பர்) | (மார்க்குவிஸ்) காரன்வாலிஸ் பிரபு<br>Earl (Marquess) Cornwallis |
| 1793 | சர் ஜான்ஷோர் (டெயின் மவுத் பிரபு)<br>Sir John Shore (Lord Teignmouth) |
| 1798 (மார்ச்சு) | **சர். எ. கிளார்க்கு**<br>**Sir. A. Clarke** |
| 1798 (மே) | மார்னிங்டன் பிரபு (மார்குலிஸ் வெல்லெஸ்லி)<br>Earl of Mornington (Marquess Wellesley) |
| 1805 (ஜூலை, 30) | மார்க்குவிஸ் காரன்வாலிஸ் (இரண்டாம் முறை)<br>Marquess Cornwallis (for the Second time) |
| 1805 (அக்டோபர்) | **சர் ஜார்ஜ் பார்லோ**<br>**Sir George Barlow** |
| 1807 (ஜூலை) | முதலாம் பாரன் மின்டோ பிரபு<br>Baron (Earl of) Minto–I |

| | |
|---|---|
| 1813 (அக்டோபர் 4.) | மோயிராப்பிரபு (மார்க்குவிஸ் ஹேஸ்டிங்ஸ்)<br>Earl of Moira (Marquess of Hastings) |
| 1823 (ஜனவரி) | ஜான் ஆடம்<br>John Adam |
| 1823 (ஆகஸ்டு, 1.) | பாரன் அம்ஹெர்ஸ்ட் பிரபு<br>Baron (Earl) Amherst |
| 1828 (மார்ச்சு) | வில்லியம் பட்டர்வொர்த் பெய்லி<br>William Butterworth Bayley |
| 1828 (ஜூலை, 4.) | வில்லியம் கேவெண்டிஷ் பிரபு-பென்டிங்<br>Lord William Cavendish-Bentinck |

## II. இந்தியாவின் கவர்னர்-ஜெனரல்கள்

(1833ஆம் ஆண்டு பட்டயச் சட்டப்படி)

| | |
|---|---|
| 1833 | வில்லியம் கேவெண்டிஷ்பிரபு-பென்டிங் |
| 1835 (மார்ச்சு, 20.) | சர் சார்லஸ் (பிரபு) மெட்காப்<br>Sir Charles (Lord) Metcalfe |
| 1836 (மார்ச்சு) | பாரன் ஆக்லண்டு (பிரபு)<br>Baron (Earl of) Auckland |
| 1842 (பிப்பிரவரி) | பாரன் எல்லன்பரோ (பிரபு)<br>Baron (Earl of) Ellenbarough |
| 1844 (ஜூன்) | வில்லியம் வில்பர்போர்ஸ் பர்டு<br>William Wilberforce Bird |
| 1844 (ஜூலை) | சர் ஹென்றி (வைக்கவுன்ட்) ஹார்டிஞ்சு<br>Sir Henry (Viscount) Hardinge |
| 1848 (ஜனவரி) | (மார்க்குவிஸ்) டல்ஹௌசி (பிரபு)<br>Earl (Marquess) of Dalhousie |
| 1856 (பிப்பிரவரி) | வைக்கவுன்ட் கானிங் (பிரபு)<br>Viscount (Earl) Canning |

## III. கவர்னர்-ஜெனரல்களும், வைசிராய்களும்

| | |
|---|---|
| 1858 (நவம்பர், 1.) | வைக்கவுன்ட் கானிங்(பிரபு)<br>Viscount (Earl) Canning |
| 1862 (மார்ச்சு) | எல்ஜின், முதலாம் கின்கார்டின் பிரபு<br>Earl of Elgin and Kincardine-I |

| | |
|---|---|
| 1863 | **சர் ராபர்ட் நேப்பியர் (மாக்தலாவின் நேப்பியர் பாரன்)**<br>Sir Robert Napier (Baron Napier of Magdala) |
| 1863 | **சர் வில்லியம் டி. டெனிசன்**<br>Sir William T. Denison |
| 1864 (ஜனவரி) | சர் ஜான் (பிரபு) லாரன்ஸ்<br>Sir John (Lord) Lawrence |
| 1869 (ஜனவரி) | மேயோ பிரபு<br>Earl of Mayo |
| 1872 | **சர் ஜான் ஸ்ட்ராச்சி**<br>Sir John Strachey |
| 1872 | **மெர்ச்சிஸ்டவுன் நேப்பியர் பிரபு**<br>Lord Napier of Merchistown |
| 1872 (மே) | பாரன் நார்த் புரூக்கு (பிரபு)<br>Baron (Earl of) Northbrook |
| 1876 (ஏப்பிரல்) | பாரன் லிட்டன் (பிரபு)-I<br>Baron (Earl of) Lytton-I |
| 1880 (ஜுன்) | ரிப்பன் மார்க்குவிஸ்<br>Marquess of Ripon |
| 1884 (டிசம்பர்) | டப்ரின் பிரபு (டப்ரின், ஆவாவின் மார்க்குவிஸ்)<br>Earl of Dufferin (Marquess of Dufferin and Ava) |
| 1888 (டிசம்பர்) | மார்க்குவிஸ் லேன்ஸ்டவுன்<br>Marquess of Lansdowne |
| 1894 (ஜனவரி) | எல்ஜின், கின்கார்டின் பிரபு<br>Earl of Elgin and Kincardine-II |
| 1899 (ஜனவரி, 6.) | பாரன் (மார்க்குவிஸ்) கெட்லஸ்டனின் கர்ஜான்<br>Baron (Marquess) Curzon of Kedleston |
| 1904 (ஏப்பிரல்) | **அம்த்ஹில் பிரபு**<br>Lord Ampthill |
| 1904 (டிசம்பர்) | பாரன் (மார்க்குவிஸ்) கெட்லஸ்டனின் கர்ஜான் (இரண்டாம்முறை நியமித்தல்)<br>Baron (Marquess) Curzon of Kedleston (re-appointed) |
| 1905 (நவம்பர்) | மின்டோ பிரபு–II<br>Earl of Minto-II |

| | |
|---|---|
| 1910 (நவம்பர்) | பென்ஸ்ஹர்ஸ்டின், ஹார்டிஞ் பாரன்<br>Baron Hardinge of Penshurst |
| 1916 (ஏப்பிரல்) | செம்ஸ்போர்டு பாரன்<br>Baron Chelmsford |
| 1921 (ஏப்பிரல்) | ரீடிங் பிரபு<br>Earl of Reading |
| 1925 | லிட்டன் பிரபு-II<br>Lord Lytton-II |
| 1926 (ஏப்பிரல்) | இர்வின் பிரபு<br>Lord Irwin |
| 1929 | கோஷன் பிரபு (இர்வின் பிரபு விடுமுறைக்காகச் சென்றபோது)<br>Lord Goschen (during the absence of Lord Irwin on Leave) |
| 1931 (ஏப்பிரல்) | வில்லிங்டன் பிரபு<br>Earl of Willington |
| 1934 (மே-ஆகஸ்டு) | சர் ஜார்ஜ் ஸ்டேன்லி (தாற்)<br>Sir George Stanley (offg.) |
| 1936 (ஏப்பிரல், 18.) | லின்லித்கோ மார்க்குவிஸ்<br>Marquess of Linlithgow |

## IV. கவர்னர்-ஜெனரல்களும் அரசப் பிரதிநிதிகளும்

(Governors–General and Crown Representatives)

(1935ஆம் ஆண்டு சட்டத்தின்படி)

| | |
|---|---|
| 1937 (மார்ச்சு, 31) | லின்லித்கோ மார்க்குவிஸ்<br>Marquess of Linlithgow |
| 1988 (ஜூன், அக்டோபர் | பிராபோர்ன் பாரன் (தாற்)<br>Baron of Brabourne (offg.) |
| 1938 | லின்லித்கோ மார்க்குவிஸ்<br>Marquess of Linlithgow |
| 1943 | வைக்கவுன்ட் வேவல் (பிரபு)<br>Viscount (Earl) Wavell |
| 1945 | சர் ஜான் கால்வில் (தாற்காலிகப் பொறுப்பேற்ற)<br>Sir John Colville (Offg.) |
| 1947 (மார்ச்சு-ஆகஸ்டு) | வைக்கவுன்ட் மவுன்ட்பேட்டன் (பிரபு) (ஐக்கிய இந்தியாவின் இறுதி வைசிராய்; இந்திய டொமினியனின், 1947–48, முதல் கவர்னர்-ஜெனரல்) |

Viscount (Earl) Mountbatten (Last Viceroy of United India and First Governar–General of the Indian Dominion, 1947-48.)

## V. கவர்னர்-ஜெனரல்கள்

இந்தியச் சுதந்தரச் சட்டம் (Indian Independence Act.)

இந்திய யூனியன் (Indian Union)

1947 — மவுன்ட்பேட்டன் பிரபு
Earl Mountbatten

1947 (நவம்பர்) — ஸ்ரீ. சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரி
Sri Chakravarthi Rajagopalachari (Offg.)

1948 (ஜூன்) — ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரி
Sri Chakravarthi Rajagopalachari

பாக்கிஸ்தான் (Pakistan)

1947 — காயிதே-ஆஜம், எம். எ. ஜின்னு
Qaid-i-Azam, M. A. Jinnah

1948 (செப்டெம்பர்) — குவாஜெ நாஜிமுத்தீன்
Khwajeh Nazimuddin

பிரதம மந்திரிகள் (Prime Ministers)

இந்திய யூனியன் (Indian Union)

1947 — பண்டித ஜவஹர்லால் நேரு
Pandit Jawaharlal Nehru

பாக்கிஸ்தான் (Pakistan)

1947 — லியாகத் அலி கான்
Liaquat Ali Khan

## இந்தியக் குடியரசின் தலைவர்

(President of the Republic of India)

1950 — திரு. இராஜேந்திர பிரசாது
Sri Rajendra Prasad

# காலவரிசைப் பட்டி
# CHRONOLOGY

கி. மு.

3102. வானசாஸ்திர நிபுணர்களின் கருத்துப்படி, கலியுக சகாத்தக் கொள்கைப்படி, காலமும் பாரதப் போரும்.

சி. 2700. கிஷ் (Kish) என்னுமிடத்தில் கிடைத்த சிந்து வெளி முத்திரைகளின் காலம்.

2449. வானசாஸ்திர நிபுணர்கள் காலவரிசை நிபுணர்கள் ஆகியவர்களின் கருத்துப்படி, பாதரப்போர் வீரர்களின் காலம்.

சி. 1435. மேற்கு ஆசியாவில் ஆரிய அரசர்கள்.

1414. புராணங்களின் கூற்றுப்படி பாரதப்போரின் ஆண்டு.

சி. 1375. மித்தானி (Mithani) தேசத்தில் ஆரிய : தெய்வ வணக்கம்.

817. சமயக்கொள்கைப்படி பார்ஸ்வநாதர் பிறந்த ஆண்டு.

558. காபிசி (Kapisi)யை வென்ற மகா சைரஸ் அரியணை ஏறுதல்.

544. புத்தர் நிருவாணம் அடைந்ததைப் பற்றி இலங்கையில் தொன்மையாய் வழங்கி வரும் காலப்பகுதி.

527. மஹாவீரர் நிருவாணம் அடைந்த ஆண்டு.

522. முதலாம் டெரயஸ் ஆட்சிப்பீடமேறுதல் (பாரசீகப் பேரரசின் இந்திய மாகாணத்தை வென்றவர்.)

சி. 518-517. ஸ்கைலேக்ஸின் நாவாய்ப் படையெடுப்பும் இந்திய மாகாணத்தைக் கைப்பற்றுதலும்

486. புத்தர் நிருவாணம் அடைந்ததைப் பற்றிக் கான்டன் நகர மக்களின் நம்பிக்கை.

327–326. அலெக்ஸாண்டரின் இந்தியப் படையெடுப்பு.
325. அலெக்ஸாண்டர் இந்தியாவை விட்டு நீங்குதல்
சி. 324. மௌரிய குலத்தின் எழுச்சி
313. ஜைனர்கள் நம்பிக்கைப்படி, அவந்தியின் அரசராகச் சந்திரகுப்தர் பதவி ஏற்றல்.
சி. 305. ஸெலுக்கஸ் நிகேட்டரின் இந்தியப் படையெடுப்பு.
சி. 273–232. அசோகரின் ஆட்சி.
சி. 206. சிரியா நாட்டு அரசரான மூன்றும் ஆன்டியோகஸ் இந்தியாவின்மேல் படையெடுத்தல்.
சி. 187. புஷ்யமித்திரரது குலத்தின் எழுச்சி
சி. 165. பிளேட்டோ, பாக்டிரியா அரசர்
162. இந்திய எல்லைப் பிரதேசம், பாக்டிரியா ஆகிய நாடுகளின் அரசரான யூக்ரேட்டைட்ஸ், 'மகா' என்னும் பட்டம் பெறுதல்.
சி. 145-101. எலார சோழன், இலங்கையின் அரசன்
138-88. கிழக்குப் பாரசீகத்தில் பார்த்திய அரசர்களுக்கும், சாக அரசர்களுக்கும் இடையில் ஏற்பட்ட போர்.
சி. 126. சங்-கியான் என்கிற சீனத் தூதுவர், யுச்-சியை ஆக்ஸஸ் பகுதியில் சந்தித்தல்.
58. கிரித-மாளவ-விக்கிரம சகாத்தத்தின் காலம்.
57-38. பார்த்திய நாணயங்களில் சதுர எழுத்துக்கள்.
சி. 44-29. இலங்கையில் தமிழ் அரசர்கள்.
சி. 30. கிழக்கு மாளவத்தில், சுங்க கண்ணுவர்கள் ஆட்சியின் முடிவு. தக்காணத்தில் சாதவாகனர்களின் மேலாட்சி.
சி. 26-20. அகஸ்டஸிடம் இந்தியத் தூதுக் குழுக்கள்.
2. ஒரு சீன அதிகாரிக்கு, யுச்சி அரசர், புத்த மதத்தைப் போதித்தல்.

கி. பி.

சி. 1. சாரக்ஸின் இசிடோர்.
சி. 47. கொண்டோபெர்னஸ் ஏன்பவரைக் குறிக்கும் தாக்த்-இ-பாகி என்ற ஏடு.
சி. 64. புத்த ஏடுகளைப் பெறுவதற்காக, மிங்-டி என்கிற சீனப் பேரரசர், தம் ஆள்களை அனுப்புதல்.
77. பிளினியின் இயற்கை வரலாறு.

